உ



கணபதி துணை.

கடைச்சங்கப்புலவர்களுள் ஒருவராகிய

மதுரைக்

**கூலவாணிகன்சாத்தனார்**

அருளிச்செய்த

# மணிமேகலை மூலமும்,

கும்பகோணம் கவர்ன்மெண்ட் காலேஜ

தமிழ்ப்பண்டிதராகிய

உத்தமதானபுரம்

**வே. சாமிநாதையரெழுதிய**

அரும்பதவுரையும்.

---

இவை

பாலவனத்தம் ஜமீந்தாரவர்களாகிய

இராமநாதபுரம்

ம-ா-ா-ஸ்ரீ

**பாண்டித்துரைத்தேவரவர்கள்**

உதவியைக்கொண்டு,

ஷை சாமிநாதையரால்

சென்னை:

வெ. நா. ஜூபிலி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன

1898.

விலை ரூபா ரு.

# இப்புத்தகத்திலடங்கியவை.



கணபதிதுணை.

# முகவுரை.

"நன்றே னுன்கி றென்று நைம்மிகூஉங்
கனிறுவார் பெருங்கா டாயினு
மொளிபெரிது சிறந்தன் றளியவென் னெஞ்சே."

உலகமா பன்னூற் றிலகமா யிலகி
நவையறு மொன்பான் சுவைபுணர்ந் தினிமைத
திரட்டுறு *மைந்து பொருட்டொடர் நிலைகளு
ளமிழ்திற் சிறந்த தமிழெனு மடந்தை
யணிமே கலையா மணிமே கலைதான்,
நச்சும் பெருமை முச்சங் கத்துட்
கறைமிடற் றிறைவ னிறையனு ரெனப்பெயர்
வாய்ந்தே †புலம்பல வாய்ந்த சங்கத்
தொல்லிசை பலவுறு நல்லிசைப் புலவருட்
சீலமார் மதுரைக் கூலவாணிகன் சாத்தனுரென்னும்

புலவர்பெருமானுல் அருளிச்செய்யப்பட்டது; இளம்பூரணர், நச்சினார்க்கினியர், பரிமேலழகர், அடியார்க்குநல்லார், ‡சமயதிவாகரவாமனமுனிவர், இலக்கணவிளக்கவுரையாசிரியர், §திருவொற்றியூர் ஞானப்பிரகாசர், சங்கரநமச்சிவாயர் முதலிய ||உரையாசிரியர்களால் எடுத்துக்காட்டப்பட்டுள்ள பிரமாண நூல்களுள் ஒன்று. தன்மைநவிற்சியணியும் பாவிகவணியும் இன்னோரன்ன பிறவணிகளுமே ஆங்காங்கு அமைந்திருத்தலால், தன்னுட் கூறப்பட்டுள்ள மலை கடல் தீவு வனம் நாடு நகர் ஆறுமுதலியவற்றையும் பிறவற்றையும் நேரில் அறிந்துகொண்டாற்போலப் படிப்பவர்களுடைய மனத்திற்கு நன்றாகப் புலப்படச்செய்யும் நலப்பாடுற்றது; இக்கா

---

* ஐந்து பொருட்டொடர் நிலைகளாவன.—சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, குண்டலகேசி, வளையாபதியென்பன

† புலம் - நூல், இதனை, "புலந்தொகுத்தோனே" என்னுந்தொல்காப்பியப் பாயிரத்தாலுணர்க.

‡ சமயதிவாகரவாமனமுனிவர் - நீலகேசித்திரட்டினுரையாசிரியர்.

§ திருவொற்றியூர் ஞானப்பிரகாசர் - சிவஞானசித்தியார், பரபக்கவுரையாசிரியர்களுள் ஒருவர்

|| இவ்வுரையாசிரியர்கள் இந்நூலை இன்ன இன்ன இடத்தில் எடுத்தாண்டனரென்பதை, இப்புத்தகத்தின் பின்புள்ள பிரயோகவிளக்கத்தாலுணர்க (பக்கம்-௪௬௨.)

லத்தில் வேறொருவாற்றானும் விளங்காதனவாகிய சிலதெய்வங்களுடைய பெயர்களையும், அத்தெய்வங்களை வழிபடுமுறைமையையும், சிலசாதியாரையும், அவர்களுடைய நடைமுதலியவற்றையும், சில நகரங்கள் தீவுகள் மலைகள் வனங்கள் கோட்டங்கள் அறச்சாலைகள் மன்றங்கள் முதலியவற்றையும், அவைகள் இன்ன இன்ன வண்ணமாக இருந்தனவென்பதையும், இன்ன இன்ன சமயங்கள் இன்ன இன்ன இடத்திற் பரவியிருந்தனவென்பதையும், அவற்றின் இலக்கணங்களையும், சில அரசர் சில முனிவர் முதலியோருடைய சரித்திரங்களையும், பிறவற்றையும் இந்நூலில் விளங்க அறிந்துகொள்ளலாம்; இதில் சொல்நுட்பம் பொருள்நுட்பங்கள் நூலளவேயாகிய நுண்ணறிவிற்கேற்ப எவ்விடத்துங்காணப்படுமென்று கூறுவர். இதனை,

“மந்தா கினியணி வேணிப்பி ரான்வெங்கை மன்னவநீ
கொந்தார் குழன்மணி மேகலை நூலும் பங் கொள்வதெங்ஙன
சிந்தா மணியுந் திருக்கோ வையுமெழு திககொளினு
நந்தா வுரையை யெழுதலெவ் வாறு நவின்றருளே.”

என்று கவிஞர்பெருமானாகிய துறைமங்கலம் ஸ்ரீ சிவப்பிரகாசமுனிவர் அருளிச்செய்த வெங்கைக்கோவைச் செய்யுளாலுணர்க.

சிலப்பதிகாரக் கதைத்தலைவனான கோவலனுடையமகளாகிய மணிமேகலையென்பவளுடைய சரித்திரமாதலின், இந்நூல், சிலப்பதிகாரத்தோடு கதைத்தொடர்புடையது.

இதில், சோழவளநாட்டுள்ள காவிரிப்பூம்பட்டினத்தில் பெருங்குடி வாணிகர்மரபில் உதித்த கோவலனுக்கு மாதவியென்னும் நாடகக்கணிகையிடந்தோன்றிய மணிமேகலையென்பவள், தன்னுடைய தாய் கோவலன் மதுரையில் வெட்டுண்டிறந்ததுகேட்டுப் பரத்தைமைத்தொழிலை வெறுத்துப் பௌத்தமுனிவராகிய அறவணவடிகளைச் சரணடைந்து வாய்மைநான்கும் சீலமைந்தும் உபதேசிக்கப்பெற்றுப் பௌத்தசங்கத்திருத்தலையறிந்து, அவளோடுபழகி, சிறுபிராயத்திலேதானே பௌத்ததருமங்களை அறிதற்கேற்ற உணர்ச்சியுற்று, ஒருநாள், தாயின் கட்டளைப்படி சுதமதியுடன் பூக்கொய்தற்கு மலர்வனஞ்சென்று, தன்னை விரும்பிவந்த உதயகுமரனுக்கு அஞ்சி அங்குள்ள பளிக்கறையில் ஒளித்திருந்து, அவன் போனபின்பு வெளியேவந்து, தன் குலதேவதையாகிய மணிமேகலாதெய்வத்தால் மணிபல்லவத்தீவிற் கொண்டுபோகப்பட்டு, அத்தீவிலுள்ள புத்தபீடிகைக்காட்சியால் தன்னுடைய பழம்பிறப்பில் நிகழ்ந்த செய்திகளையறிந்து, அப்பால் அத்தெய்வம் அறிவுறுத்திய மூன்றுமந்திரங்களையுணர்ந்து, முற்பிறப்பிற் கணவனாயிருந்த இராகுலனென்பவனே இப்பிறப்பில் உதயகுமரனாகவந்தானென்று அத்தெய்

# முகவுரை.

வங்கூறக்கேட்டு, அப்பீடிகையின் காவற்றெய்வமாகிய தீவதிலகையினுதவியாற் கோமுகியென்னும் பொய்கையை யடைந்து, அதிலிருந்த அமுதசுரபியென்னும் அக்ஷயபாத்திரம் தன்கையில் வரப்பெற்று, பின்பு காவிரிப்பூம்பட்டினத்தைச்சார்ந்து, அறவணவடிகளை யடைந்து, ஆபுத்திரன் வரலாற்றையும் அவனுக்கு மதுரையிற் சிந்தாதேவி அமுதசுரபியைக் கொடுத்ததையும் பசித்தவுயிர்களுக்கு உணவளித்தலே எல்லாவற்றினும் மேலான தருமமென்பதையும் அவர்கூறக்கேட்டு, அவர்கூறியவாறே உணவளித்தற்பொருட்டு அமுதசுரபியைக் கையிலேந்திக்கொண்டு வீதியிற்சென்று, சிறந்தபத்தினியாகிய ஆதிரையென்பவள்வந்து முதலிற் பிச்சையிடப்பெற்று, காயசண்டிகையென்னும் வித்தியாதரமங்கையின் தீராப்பசியை அப்பாத்திரத்திலிருந்தெடுத்துதவிய ஒருபிடியமுதாற் போக்கி, அப்பாத்திரத்தில் மேன்மேலும் அமுது வளரப்பெற்று, அந்நகரத்துள்ள உலகவறவியென்னுமம்பலத்தை யடைந்து, அங்கேவந்த எல்லாவுயிர்களின் பசியையும்போக்கி, அவ்வறஞ்செய்தலையே நித்தநியமமாகப்பூண்டு, தன்னை விரும்பிவந்த உதயகுமரன் அறிந்துகொள்ளாவண்ணம் மேற்கூறிய காயசண்டிகையின் வடிவங்கொண்டு அந்நகரத்துள்ள சிறைச்சாலையையடைந்து, அங்கே பசித்திருப்பவர்களுக்கெல்லாம் உணவளித்து அதனை அறச்சாலையாக்கி, தன்னை மீட்டும் விடாது தொடர்ந்த உதயகுமரன் காயசண்டிகையின் கணவனால் வெட்டுண்டு வீழ்ந்ததுகண்டு மனங்கலங்கிப் பின்பு கந்திற்பாவைத்தெய்வத்தின் மொழிகளால் தேறுதலுற்று, உதயகுமரனுடைய தந்தையாகிய மாவண்கிள்ளியாற் சிறையில்வைக்கப்பட்டு, இராசமாதேவியின் முயற்சியால் அச்சிறையினின்று நீங்கி, நாகபுரத்தையடைந்து அதன்றலைவனான புண்ணியராசனோடு மணிபல்லவஞ்சார்ந்து புத்தபீடிகையைக்காட்டி அதனால் அவனது பழம்பிறப்பை அவனுக்குணர்வித்து, காவிரிப்பூம்பட்டினம் கடல்கொள்ளப்பட்டசெய்தியைத் தீவதிலகையாலறிந்துகொண்டு, அப்பாற்சென்று வஞ்சிநகர்ப்புறத்தேயுள்ள பத்தினிக்கடவுளாகிய கண்ணகியின் கோயிலையடைந்து தரிசித்து, தன்னுடைய எதிர்காலச்செய்திகளைக் கண்ணகி கூற அறிந்துசென்று, ஆங்கிருந்த சமயவாதிகள் பலரையுஞ்சார்ந்து அவரவர்களுடைய கொள்கைகளைத் தனித்தனியேவினவியுணர்ந்து, அந்நகரில் தவம்புரிந்துகொண்டிருந்த மாசாத்துவானைக்கண்டு அவன் மொழிந்தசெய்திகள் பலவற்றையுங் கேட்டு, அவன்கூறியவாறு காஞ்சிநகரம் போய், அந்நகரிற் பசியால்வருந்திவாடிய எல்லாவுயிர்களுக்கும் உணவளித்து, அங்கேவந்த அறவணவடிகளைத் தரிசித்து, அவர் உபதேசித்த அறமொழிகளைக்கேட்டு, பின் முத்திபெறுதற்பொருட்டு அந்நகரிலேயே தவஞ்செய்துகொண்டிருந்தாளென்னுங்கதை விரித்துக் கூறப்படும்.

இந்நூல், பௌத்தசமயச்சார்பினளாகிய மணிமேகலையின் சரித்திரமாதலின், இதில் அச்சமயக்கொள்கைகளைப் பரக்கக் காணலாம்.

பற்பல தருமங்கள் இதிற் சொல்லப்பட்டுள்ளன; அவற்றுள் மிகுதியாகக்காணப்படுவது ஒருவன் மனமொழிமெய்கள் தூயனாகி எல்லாவுயிர்களிடத்தும் எப்பொழுதும் அருளுடையனாதல்வேண்டுமென்பதே.

மணிமேகலையென்பவளுடைய சரித்திரத்தை விரித்துக்கூறுதலின், இஃது இப்பெயர் பெற்றதெனபர். நீலகேசித்திரட்டில், புத்தவாதசசருக்கத்தில், "குயலாகுயலம்" என்னுஞ்செய்யுளுரையில, *"'தீவினை யென்பதி ..................பிரமரு மாகி' என்பது மணிமேகலைதுறவாதலின், இதனால், ஸம்ஸ்காரமறிந்துகொள்க" எனச சமயதிவாகரவாமனமுனிவரும், சிவஞானசித்தியார் பரபக்கத்திற் சௌதத்திராந்திகனமதத்துள்ள "ஓங்கிய வுருவம்" என்னுந் திருவிருத்தத்துரையில், *"'தீவினையென்பதி...... ..............பிரமருமாகி' என்பது மணிமேகலை துறவாதலின், இதனால ஸமஸ்காரமறிந்துகொள்க" எனத் திருவொற்றியூர் ஞானப்பிரகாசரும் எழுதியிருத்தலால, இந்நூல, மணிமேகலைதுறவென்றும அக்காலத்தில் வழங்கப்பட்டுவந்ததென்று தெரிகின்றது; "மணிமே கலைதுற, வாறைம பாட்டினு ளறியவைத்தனன்" என்று பதிகத்திறுதியிற் கூறபபட்டிருத்தலும் இதற்கு இபபெயருண்டென்பதை நனகுபுலபபடுத்தும.

இநநூல், அமமைமுதலாகிய எனபபெட்டினுள் இயைபின்பாறபடும்; தொல்காப்பியச் செய்யுளியலினகண்ணே, 'அமமைமுதலியவனப்பெட்டும தொடர்நிலைச்செய்யுட்கிலக்கணம' என்று கூறுகின்றாழி, †"ஞகாரை முதலா னகாரை யீற்றுப், புள்ளி யிறுதி யியைபெனப படுமே" என்னுஞ் சூத்திரவுரையில், 'ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள வென்னும் பதினொரு புள்ளியுள் ஒன்றனை ஈறாகவமைத்துசசெய்யுளைப் பொருட்டொடராகவும சொற்றொடராகவுஞ்செய்வது இயைபெனபபடும', ‡'னகாரவீற்றானிற்றுப் பொருளுமியைநது சொல்லுமியைநதுவநதன, சீத்தலைச்சாத்தனாரால் செய்யப்பட்ட மணிமேகலையும், கோங்குவேளால் செயயபபட்ட உதயணன்கதையும் போலவன' என்று ஆசிரியா நச்சினார்க்கினியர் எழுதியிருத்தலகாண்க. இதனால, மணிமேகலைசசெய்யுள் ஒவ்வொன்றும் 'என்' என னகரவொற்றீறாகவே படிக்கப்படவேண்டுமென்பது அறியப்படுமாயினும், இக்காலத்தில வழஙகுதற்கேறப அசசெய்யுட்கள் னகர அகர

* மணிமேகலை, உச-ம் காதை, கஉ௯ - க௩௧, ௩௦ - ம் காதை, ௬௪ - அ௦.

† தொல்காப்பியம். செய்யுளியல், உசக.

‡ ஈண்டெழுதியவாறு, தொல்காப்பியப பொருளதிகாரவுரைக் கையெழுத்துப பிரதிகளிற காணப்பட்டது

வீருகவேகொள்ளப்பட்டன; வேண்டுமேல் அவற்றை ஒற்றீருக்கிப் படித்துக்கொள்க. இந்நூலிற் சொல்லியையும் பொருளியையும் அமைந்திருத்தல்காண்க.

இதிற்கூறப்பட்டுள்ள சரித்திரம்நிகழ்ந்தகாலமும் இந்நூலாசிரியர் காலமும் ஒன்றென்றும், இஃது அவரால் தமிழிலேதான் முதலிற் பாடப்பட்டதென்றும், சிலப்பதிகாரத்தாலும் அதன்பதிகத்தொடக்கத்தில் அடியார்க்குநல்லாரெழுதிய உரைநடையாலும் இந்நூற்பதிகத்தாலும் நன்கு விளங்குகின்றமையின், இது வேறுமொழியிலிருந்துவந்ததென்று சொலலுவதற்கிடமில்லை.

இது, கதையைத் தொகுத்துக்கூறுவதும பதிகமென்று வழங்கப்படுவதுமாகிய கதைபொதிபாட்டை முதலிற்பெற்று, விழாவறைகாதை முதற் பவத்திறமறுகெனப் பாவைநோற்றகாதையிறுதியாகவுள்ள முப்பதுபகுதிகளாகப் பகுக்கப்பட்டுள்ளது; காதை - பாட்டு; நீலகேசித்திரட்டு, குண்டலகேசிவாதசருக்கம், உஎ - ம செய்யுளுரையில், "'முன்றுன் பெருமைக்கணின்றான்' என்னுங்காதையை அனுவதித்தவாறு" எனவும், உஅ - ம் செய்யுளுரையில, "'பிடகம' என்னுங்காதை சொன்னவாறு" எனவும், மொககலவாதசருக்கம, உகூ-ம் செய்யுளுரையில, "'தன்புறத்த' என்னுங்காதைசொலலப்பட்டது" எனவும, சO-ம செய்யுளுரையில, "'எழுமமைத்தி' என்னுங்காதை" எனவும், சக - ம் செய்யுளுரையில், "'காவினூற்சுமந்துய்ப்பான்' என்னுங்காதை" எனவும, சஉ-ம செய்யுளுரையில், "'மக்கட்பண்பழியாது' என்னுங்காதை" எனவும், அந்நூலுரையாசிரியர் எழுதியிருத்தலால், காதையென்பதற்குப் பாட்டென்று பொருள்கொள்ளுதல துணியப்படும; "ஆறைம பாட்டினு ளறியவைத்தனன்" எனப பதிகத்திறுதியிற் கூறப்பட்டிருததலும், மிதிலைப்பட்டித் திருச்சிற்றம்பலக்கவிராயரவர்கள் வீட்டிற்கிடைத்த பிரதியில் இநநூற்பகுதிகளின் பெயர்கள்யாவும பாட்டென்றே காணப்பட்டிருத்தலும் இதனைவற்புறுத்தும்; காதையென்பதை இசையோடு பாடப்படுவதாகியசெய்யுளென்று பொருள்படுகிற 'காதா' (गाथा) என்னும் வடசொற்சிதைவென்றுகொண்டால் யாதோரிழுக்குமின்றென்று வடமொழியாளர்கூறுவர்; இது நிற்க.

சிலவருடங்களுக்குமுன் பழைய தமிழ்ப்புத்தகங்களைத் தேடும்வண்ணம் இத்தமிழ்நாட்டினுள்ளே செல்லுதற்குரிய பல ஊர்களுக்குச் சென்று அங்கங்குள்ள பரமபரைத் தமிழ்ப்பண்டிதர்களுடையவீடுகள் தோறும உள்ளனவாகிய கையெழுத்துபபிரதிகளைப் பரிசோதித்துப பார்த்தகாலங்களிலெல்லாம எனககு மணிமேகலைமூலப்பிரதிகள் கிடைத்தனவேயன்றி உரைப்பிரதி யாண்டும கிடைத்திலது. சென்னை தஞ்சை

முதலிய நகரங்களிலுள்ள பழைய கையெழுத்துப்புத்தகசாலைகளும் பார்க்கப்பட்டன; அங்கும் கிடைக்கவில்லை. வெளிநாட்டிலுள்ள நண்பர்கள் பலரைப் பத்திரிகைவாயிலாக இதைப்பற்றி வினவினேன்; அங்ஙனம் வினவப் பட்டவர்களுள், இப்பொழுது கொழும்பிலிருக்கும் யாழ்ப்பாணத்துநல்லூர் ம-ா-ா-ஸ்ரீ சிற். கைலாசபிள்ளையவர்கள் தமதுகையாலெழுதிய மூலப்பிரதியொன்றை அன்புடன் அனுப்பினார்கள்; பின்பு பாரிஸ்நகரத்துள்ள (Julien Vinson, Professor of Oriental Languages) ஜூலியன்வின்ஸன் என்பவர், 'இந்நகரத்துக் கையெழுத்துப்புத்தகசாலையில மணிமேகலைமூலப்பிரதி ஒன்றேயுள்ளது' என்றுதெரிவித்து மாதிரிகைக்காக அதிலிருநது பதிகமட்டும் எழுதியனுப்பினா. மற்றவாகள் 'யாதொன்றுங் கிடைக்கவில்லை' என்று விடையளித்துவிட்டாாகள். கிடைத்தபிரதிகளை வைத்துக்கொண்டு ஒப்புநோக்கி ஆராய்ந்துவநதபொழுது பிரதிகளில எழுதுவோாகள் இயலபாகவேசெய்வித்திருநத வேறுபாடுகளாலும, இது பௌத்தசமயகாப்பியமாதலால அசசமயக்கொள்கைகளைக் கூறுமபாகங்களையெல்லாம எளிதிறறெரிநதுகொள்ளல கூடாமையாலும, அவற்றை ஒழுஙகாகப புலப்படுத்தும பழைய *தமிழ்ப் பௌத்தநூலகள் பண்டைககாலததில இருநதும பாதுகாபபோரின்மையால இக்காலத்தில இறநதொழிநதமையாலும, அக்கொள்கைகளை விளங்கசசொல்லுவோா அகப்படாமையாலும, பிழைகளைப் பிழைகளென்று நிசசயித்துக்களைநது திருத்தமானபாடங்களைத் தெரிநதுகொள்ளுதறகு எடுத்துக்கொண்டமுயறசியும கழித்தகாலமும அடைநதவருத்தமும அளவுபடுவனவலல.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்முதலிய சைவசமயாசாரியர்கள் அருளிச்செய்த தேவாரங்களிலுள்ள பௌத்தசமயமறுபபுக்களும, பெரியபுராணமுதலியவற்றுட் கூறபட்டுள்ள அசசமயகொள்கைகளும மறுப்பும, சிவஞானசித்தியார் பரபக்கத்துள்ள சௌத்திராநதிகன் மதமுதலியனவும், அவற்றிற்குத் திருவொற்றியூர் ஞானப்பிரகாசர் எழுதியவுரையும், அவ்வுரையிலுள்ள சில உதாரணசசெய்யுட்களும, மறுப்புக்களும், நீலகேசித்திரட்டும் அதனுரையும், அவ்வுரையில மேற்கோள்களாக எடுத்துக்காட்டப்பட்டுள்ள சிலகவிகளும, வீரசோழியம் யாப்புப்படலவுரையிலுள்ள சிலவுதாரணப்பாடல்களும, இன்னுஞ்சிலவும் பௌததசமயமரபுகளிற் சிலவற்றையும் அசசமயத்தோர் பேசிவநத சில தமிழ்ப்பரிபா

* அடியிலுள்ளவை பண்டைக்காலத்துப் பௌத்தநூல்களென்று சிலநாளைக்குமுன்னேதான் தெரிந்தது. அவை குண்டலகேசி, சித்தாந்தத்தொகை, திருப்பதிகம், விம்பசாரகதையென்பன, அவற்றிலிருந்து இரண்டொருபாடல்களே நீலகேசித்திரட்டுரை முதலியவற்றில் நூற்பெயர்களோடு எழுதப்பட்டிருந்தன.

வைகளையும் பிறவற்றையும் ஒருவாறு விளங்கச்செய்தன; செய்தும் முன்பிருந்த ஐயங்கள் முற்றுந் தீராமையாற் பின்னும் அறிந்தோர்பாற் சென்றும் தூரதேசத்தார்க்குக் கடிதமெழுதியும் விசாரித்தலையே மேற் கொண்டிருந்தேன்.

ஆராய்ச்சிசெய்யத் தொடங்கிப் பலவருடங்களாகியும் இந்நூலை முன்னமே வெளிப்படுத்தாமைக்குக் காரணம் இதுவே

இப்படி இருக்கையில், ஹிந்துதேசத்துவித்தைகளிலும் ஆங்கிலேய வித்தைகளிலும் மிகப்பயிற்சியடைந்துவிளங்கும் மஹா, ஸ்ரீமத் உ. வே. அரங்காசாரியரவர்கள், M. A. பௌத்தசமயநூல்களிலும் பாண்டித்தியமு ள்ளவர்களென்பதை அறிந்துகொண்டு உரியகாலங்களில் அவர்களிடத் துச்சென்று வினாவிவந்தேன்; வருகையில், ஒவ்வோரமயத்தும் தடை யின்றி உடனுடன் அவர்கள்கூறியவிடைகளால் அதற்குமுன்பு எனக் கிருந்த ஐயங்களிற் பெரும்பாலன நீங்கின. நீங்கவே இந்நூலைப்பரி சோதித்தலில் என்மனம் ஊக்கம்பெற்றது. அவர்களுடையபேருதவி இல்லையாயின், மணிமேகலையில்வந்துள்ள துடிதலோகம், பாரமிதை, அரூபப்பிரமர், உரூபப்பிரமர் முதலியசொற்களுக்குங்கூட உள்ளவாறே பொருள்கொள்ளுதல் எனக்கு மிகவரிதாகும்; தமக்குரிய அரியவேலை கள் அநேகமிருந்தும் பழைய இத்தமிழ்நூல் வெளியேவந்து உலாவு தலையே பயனாகக்கருதி, யான் சென்றுங்காலங்கடோறும் சிறிதும் சலிப் பின்றி அவர்கள் செய்துவந்தபேருதவி ஒருபொழுதும் மறக்கற்பால தன்று; அம்மஹோபகாரிவிஷயத்தில் இத்தமிழ்நாட்டினேமாகிய நா மெல்லாம் நன்றிபாராட்டுதற்கு உரியவர்களாக இருக்கிறோம்.

எவ்விடத்தும் இந்நூலுக்கு உரையகப்படாமையாலும், உரை முன் னபு உண்டென்று ஒருவாற்றானும் விளங்காமையாலும் இனி மூலத் தைமட்டுமாவது வெளிப்படுத்தவேண்டுமென்று நிச்சயித்துப் பதிப்பிக் கத் தொடங்கியபொழுது, தமிழ்ப்பாஷாபிமானிகளாகிய அன்பர்களிற் சிலர், 'உரையெழுதியே இதனை வெளிப்படுத்தவேண்டும்' என்று வற்பு றுத்திக்கூறினமையின், அவர்கள்சொல்லை மறுத்தற்கஞ்சி, இது புலவர் திலகர்கள் செய்தற்குரிய அரிய காரியமென்றுகருதாமல், "ஆங்கவன் புகழ்ந்த நாட்டை யன்பெனு நறவமாந்தி, மூங்கையான் பேச லுற்றா னென்னயான் மொழிய லுற்றேன்" என்று பெரியோர் கூறியதற்கு இலக் கியமாக, தக்கநூலாராய்ச்சியும் எண்ணியவற்றைச் சுவைபயக்கும்படி நல்லநடையில் விளங்கவெழுதும்வன்மையுமில்லாத யான், "மணிமேகலை நூனுட்பங்கோள்வதெங்ஙன்" என்று ஆன்றோரால் நன்குபாராட்டப்பட் டுள்ள இந்நூற்கு அரும்பதவுரையென்ற ஏதோவொன்றை எழுதத்தொ டங்கினேன்:

மொழிகளுட் பெரும்பாலனவற்றிற்குப் பொருள் விளங்கிக்கிடக்கின்றமையின், அரியவற்றிற்குமட்டுமே பொருள்செய்தும், ஆங்காங்குள்ள வாக்கியங்களை ஒத்தவைகளாக இந்நூலிலும் வேறுநூலிலும் காணப்பட்டவாக்கியங்களை அவ்வவ்விடத்தில்தந்துகாட்டி அவற்றினிடங்களை உடனுடன் விளங்கச்செய்தும், பொருள்விளங்காத இடங்களில் (?) இக்கேள்விக்குறியை அமைத்தும், கையெழுத்துப் பிரதிகளிற்கண்ட பாடபேதங்களை எடுத்துக்காட்டி அவற்றுள் இன்றியமையாத சிலவற்றிற்குமட்டுமே பொருளைப்புலப்படுத்தியும், எல்லாருக்கும் எளிதிற் பொருள்விளங்குதற்பொருட்டு வடசொற்களைப் பெரும்பாலும் விரவுவித்தும், சிலவற்றிற்குச் சங்கமருவிய நூல்களிலிருந்து மேற்கோள்கள் இப்பொழுது அகப்படாமையால் அவற்றைவிளக்குதற்குப் பிற்காலத்துநூல்களிலிருந்து பிரயோகங்களை எடுத்துக்காட்டியும் ஒருவாறு எழுதிமுடித்தேன்.

*"சவியுறத் தெளிந்து தண்ணென் றொழுக்கமும் பயின்று" என்று கம்பநாடரும், † "செல்லாறு தோறும் பொருளாழ்ந்து தெளிந்து" எனப் பரஞ்சோதிமுனிவரும் அருளிச்செய்த திருவாக்குகளுக்கு இலக்காகவிளங்குங் கவிகளினுடையவரிசையிலேநிற்குந் தகுதியுள்ள பாட்டுக்களையுடைய இந்நூலுக்கு யானா அரும்பதவுரையெழுதுபவன்? இதுசெய்தற்குத்துணிந்துவந்த எனது தறுகண்மையைப் பொறுத்தருளும்படி இத்தமிழுலகத்தை மிகவும் வேண்டுகிறேன்

பழைய செந்தமிழ்நூற்பரிபாலகரும் இவ்வாராய்ச்சியால் எனக்கு மனச்சோர்வுண்டாகாதவண்ணம் அடிக்கடி ஊக்கமளித்துவருபவரும் கொழும்புநகரத்துப் பிரபுசிகாமணியுமாகிய Hon. பொ. குமாரசாமிமுதலியாரவர்கள், இந்நூலிற் சிற்சிலவிடங்களில் முன்னம் நிகழ்ந்த ஐயங்களை நீக்கிக்கொள்ளுதற்பொருட்டு யான் கேட்டவினாக்களுக்கு இலங்கையிலுள்ள பௌத்தவித்தியோதய பாடசாலைத்தலைவராகிய ஸ்ரீஸுமங்களரவர்களைக்கொண்டு விடைகளெழுதுவித்து அனுப்பிப் பேருதவிசெய்துவந்தார்கள்.

மணிமேகலையைக் கவலையின்றி ஆராய்ந்து பதிப்பித்து வெளிப்படுத்துதற்குப் பொருளுதவிசெய்த பாலவனத்தம் ஜமீந்தாரவர்களாகிய இராமநாதபுரம் ம-௱-௱-ஸ்ரீ பொ. பாண்டித்துரைத்தேவரவர்களுடைய தண்ணளியும் பெருந்தகைமையும் ஒருபொழுதும் மறக்கற்பாலனவல்ல; மிகவும் பாராட்டற்பாலன. இதைப்போன்ற எத்தனையோ பெரியகாரியங்களைத் திருத்தமாகச் செய்துநிறைவேற்றியவர்களின் வழித்தோன்ற

* கம்பராமாயணம், ஆரணியகாண்டம், சூர்ப்பணகைப்படலம், க.

† திருவிளையாடற்புராணம், அன்னக்குழியும் வையையுமழைத்தபடலம், உஉ.

லாய் மிக்க பாண்டித்தியமடைந்து நூலாராய்ச்சியே இன்பத்துள்ளின்பமெனக்கொண்டுவாழும் அப்பிரபு அவர்களுக்குப் பழைய நூல்களையும் அவற்றினுரைகளையும் பதிப்பித்து வெளிப்படச்செய்து அமிழ்தினுமினிய தமிழைப் பரிபாலித்தல் இயல்பாயினும் படிப்பாருங் கேட்பாருமின்றி மூலையிலே மறைந்துகிடக்கும் அரியபெரிய நூல்களைத் தேடித்தொகுத்துப் படித்துக்கொண்டு அநாதரவுற்றிருப்போர்க்கு அஃது அரியதினும் அரியதாகத்தோற்றுமென்பது திண்ணம்.

எனக்குண்டாகும் ஐயங்களை உடனுடன்போக்கிப் பேருதவிசெய்தருளிய மஹாமஹோபாத்தியாயரவர்களாகிய பெருகவாழ்ந்தான் **ஸ்ரீமத்,** உ. வே. அரங்காசாரியரவர்களுக்கும், கும்பகோணம் கவர்ன்மெண்ட்காலெஜ் ஸம்ஸ்கிருதபண்டிதரவர்களாகிய திருமலை எச்சம்பாடி **ஸ்ரீமத்,** உ. வே. ஸ்ரீநிவாஸாசாரியரவர்களுக்கும் என்னுடைய வந்தனத்தை நன்றியறிவுடன் ஸமர்ப்பிக்கின்றேன்.

சென்னைக்குச் செல்லுந்தோறும் யாதொருகவலையுமின்றியிருந்து நூலாராய்ச்சிசெய்யும்படி எனக்குத் தமது அழகியமாளிகையில் இடந்தந்து ஊக்கமளித்து அன்புடன் ஆதரித்துவருகின்றவர்களாகிய ஹைகோர்ட்டு வக்கீல், எழும்பூர், ஸ்ரீமத், உ. வே. K. இராஜகோபாலாசாரியரவர்களுடையபெருந்தகைமை மிகப் பாராட்டற்பாலது.

சிவகங்கையைச்சார்ந்த சிறுவயல் ஜமீந்தாரவர்களாகிய ம-ா-ா-ஸ்ரீ முத்துராமலிங்கத்தேவரவர்கள், எனது அன்பரும் பழைய தமிழ்நூலாராய்ச்சியிற் கூர்த்த அறிவினரும் தமது வித்துவானுமாகிய திருமானூர் ம-ா-ா-ஸ்ரீ கிருஷ்ணையரவர்களுக்கு மாதவேதனமளித்து வேண்டியகாலங்களிலெல்லாம் அனுப்பிப் பேருதவிசெய்துவந்தார்கள்; இவ்வகையான உதவிசெய்தல் மிகச்சிறந்ததென்பது யாவருக்குந் தெரிந்ததே.

இந்நூலை ஒப்புநோக்கிவந்தபொழுது ஏட்டுப்பிரதிகளைவைத்துக்கொண்டு பலமுறைபடித்து முதலில் அன்புடன் உதவிசெய்தவர்கள்:—

கும்பகோணம், பேட்டைத்தெரு, ம-ா-ா-ஸ்ரீ தியாகராஜபண்டாரம்.
திருப்பெருந்துறை, ,, பொன்னுசாமிப்பிள்ளை.

தங்களுக்கு அவகாசமுள்ளகாலங்களிலெல்லாமவந்து உடனிருந்து இப்புத்தகவிஷயத்தில் எல்லாவுதவியும் அன்புடன் செய்தவர்கள்:—

| | | | |
|---|---|---|---|
| | திருமானூர் | ம-ா-ா-ஸ்ரீ | கிருஷ்ணையர். |
| கும்பகோணம் நேட்டிவ்ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதராகிய | மணலூர் | ,, | இராமானுஜாசாரியர். |
| | பின்னத்தூர் | ,, | நாராயணஸாமிஐயர். |
| | மணலூர் | ,, | சந்தானமையங்கார். |

இழுக்கலுடையுழி ஊன்றுகோல்போன்ற இவர்கள் யாதொன்றையும் எதிர்பாராமற்செய்துவந்த பேருதவியை நினைக்குந்தோறும், "பயன்

றாக்கார் செய்த வுதவி நயன்றூக்கி, னன்மை கடலிற் பெரிது” என்னும் அருமைத்திருக்குறள் ஞாபகத்திற்கு வந்து மனத்தைக் குளிர்விக்கின்றது.

மணிமேகலை பௌத்தசமயக்காப்பியமாதலின், படிப்பவர்களுக்கு விளங்கும்வண்ணம், அச்சமயக்கொள்கைகளை விரிவாக எழுதிச் சேர்க்க வேண்டுமென்று சில கனவான்கள் வற்புறுத்திக்கூறினமையால், பௌத்தர்களால் மும்மணிகளென்று பாராட்டப்படும் புத்ததர்மசங்கங்களின் விவரணங்களாகப் புத்தசரித்திரமும் பௌத்ததருமமும் பௌத்தசங்கமும் ஆகிய இவை, மேற்கூறிய மஹா, ஸ்ரீமத், உ. வே. அரங்காசாரியரவர்களுடையபேருதவியாலியற்றி, இப்புத்தகத்திற்கு அங்கமாகப் பதிப்பிக்கப்பட்டன.

புத்தசரித்திரத்தை ‘இங்கிலிஷ்’ புஸ்தகங்களிலிருந்து தமிழிற்பெயர்த்து உதவியஅன்பர்கள்:—

ம-ா-ஸ்ரீ V. P. சுப்பிரமணியமுதலியார், G.B ,V.C.
„ S. கிருஷ்ணசாமி ஐயர், B.A., B L.
„ K. P. சோமசுந்தர ஐயர்.
„ V. சுப்பிரமணிய ஐயர், B A.
„ M. S. நடேச ஐயர், B A.

நான்போய் எழுதக்கூடாதகாலங்களில் ஷை மஹா அரங்காசாரியரவர்களிடஞ்சென்றுசென்று பௌத்ததருமத்தையும் பௌத்தசங்கத்தையும் எழுதியளித்த அன்பர்கள்:—

ம-ா-ா-ஸ்ரீ ஸ. கோபாலசாமிஐயர், B.A. முதலியவர்கள்.

பௌத்ததருமத்தையும் பௌத்தசங்கத்தையும் மஹா, அரங்காசாரியரவர்களிடஞ்சென்று படித்துக்காட்டிச் செப்பஞ்செய்துகொள்ளுதற்கு எனக்குக்காலம்வாயாமையால், அவர்கள் முதன்முறை சொல்லியெழுதுவித்தபடியே அவைகள் பதிப்பிக்கப்பட்டன.

தமக்குப் பற்பல அரியகாரியங்களிருக்கவும் யான்விரும்பியபொழுதெல்லாம் ஒப்புநோக்குதல்முதலிய பற்பலவுதவிகளை ஊக்கத்துடன் செய்துவந்த (Ch. of Scot. Mission College, Madras) தமிழ்ப்பண்டிதராகிய திருவல்லிக்கேணி, ஸ்ரீமத் உ. வே. வை மு சடகோபராமானுஜாசாரியரவர்களுடைய அன்புடைமை ஒருபொழுதும் மறக்கற்பாலதன்று.

எனக்கு இயல்பாகவுள்ள அறிவின்மையாலும், மறதியாலும், வேலைமிகுதியாலுண்டாகும் அயர்ச்சியாலும், பிறகாரணங்களாலும் இப்புத்தகத்தில் பல பிழைகள் இருத்தல்கூடும்; அவற்றைத் திருத்திப்படித்துக்கொள்ளும்படி எல்லோரையும் வேண்டுகிறேன்.

தொடங்கியகாரியத்தை நிறைவேறும்படி செய்தருளிய எல்லாம்வல்ல முழுமுதற்கடவுளின் இணையடிகளைச் சிந்தித்து வந்திக்கின்றேன்.

இங்ஙனம்
உத்தமதானபுரம், வே. சாமிநாதன்.

# கிடைத்த மணிமேகலைக் கையெழுத்துப் பிரதிகள்.

திருக்கைலாயபரம்பரைத்
திருவாவடுதுறையாதீனத்துப்... ... ... பிரதி க.

எட்டையபுரம் பெரிய அரண்மனை ... .. ,, க.
இது, திருவாவடுதுறையாதீனத்து
ஸ்ரீலஸ்ரீ அம்பலவாணதேசிகரவர்கள் வருவித்துத்
தந்தது.

சிவகங்கையைச்சார்ந்த மிதிலைப்பட்டி
ஸ்ரீ அழகியசிற்றம்பலக்கவிராயரவர்கள் .. ,, க.

திருமயிலையிலிருந்த திருநெல்வேலித
,, திருவம்பலத்தின்னமுதம்பிள்ளையவர்கள் ,, க.
இந்தப் பிரதிகொடுத்தவர், திருமயிலைப் பார்த்தசாரதிக
கிராமணியென்பவர்.

சேலம்,
,, இராமசாமிமுதலியாரவர்கள் ... ... ,, க.
முதலிற்கிடைத்த பிரதி இதுவே.

யாழ்ப்பாணத்துநல்லூர்,
,, சிற். கைலாசபிள்ளையவர்கள் ... ... ,, க.

ஆறுமுகமங்கலம்,
,, ஏ. சுந்தரமூர்த்திப்பிள்ளையவர்கள் ... ,, க.

S P.G. High School, Vepery, தமிழ்ப்பண்டிதர், திருமயிலை,
,, சண்முகம்பிள்ளையவர்கள் . ,, க.

சென்னை,
,, தி. முத்துக்குமாரசாமிமுதலியாரவர்கள்... ,, க.

சென்னையிலுள்ள,
இராசாங்கத்துக் கையெழுத்துப்புத்தகசாலை .. ,, க.
அப்பொழுதைக்கப்பொழுது ஒப்புநோக்கி உடனுடன்
கொடுத்துவிடப்பட்ட பிரதிகள் சில

இவற்றுள், மிகப்பழமையானதும் பரிசோதனைக்கு இன்றியமையாததாக இருந்ததும் மற்றைப்பிரதிகளிற் குறைந்தும் பிறழ்ந்தும் திரிந்தும்போகிய பாகங்களையெல்லாம் ஒழுங்குபடச்செய்ததும் கோப்புச்சிதைந்து அழகுகெட்டு மாசுபொதிந்து கிடந்த, செந்தமிழ்ச்செல்வியின் மணிமேகலையை அவளணிந்துகொள்ளும்வண்ணம் செப்பஞ்செய்துகொடுத்ததும் மிதிலைப்பட்டிப்பிரதியே.

இந்நூலாசிரியராகிய

## மதுரைக்கூலவாணிகன்சாத்தனார்†

# வரலாறு.

இவர், கடைச்சங்கப்புலவர்களுள் ஒருவர்; கூல*வியாபாரஞ்செய்துகொண்டிருந்தமையின் இப்பெயர்பெற்றாரென்பர்; பத்தினிக்கடவுளாகிய கண்ணகியின் வரலாற்றையும் அவள்மேம்பாட்டையும் சேரன்செங்குட்டுவனுக்கு அறிவுறுத்தி அவனைக்கொண்டு அவளுக்குக் கோயில்கட்டுவித்து நித்தியபூசை முதலியன நடக்கும்படி செய்தவர். அவ்வரசனுக்குக் கண்ணகியின்வரலாற்றைக் கூறியபொழுது அவனோடு கேட்டுக்கொண்டிருந்தவரும் அவன்சகோதரரும் துறவுபூண்டவருமாகிய இளங்கோவடிகள் அவளுடையசரித்திரத்தைப் பொருட்டொடர்நிலைச்செய்யுளாகச்செய்தற்கு வேட்கையடையும்வண்ணஞ் செய்தவர் இவரே; இதனை, சிலப்பதிகாரத்தின் பதிகத்தாலும், அந்நூலிலுள்ள ௨௫-வது காட்சிக்காதையாலுமுணர்க. எட்டுத்தொகையில் நற்றிணை முதலிய நூல்களில் இவரால் செய்யப்பட்டுள்ள பாக்களுமுண்டு. இவர்பெயர், கூலவாணிகன்சாத்தனாரெனவும், மதுரைச்சீத்தலைச்சாத்தனாரெனவும், சீத்தலைச்சாத்தனாரெனவும், சாத்தனாரெனவும் வழங்கும். "தண்டமிழ்ச்சாத்தன்" (பதிகம், ௧0) என்றும், "தண்டமிழாசான்சாத்தன்" (காட்சிக்காதை, ௬௬) என்றும், "நன்னூற்புலவன்" (காட்சிக்காதை, ௧0௬) என்றும் சிலப்பதிகாரத்து இவர் சிறப்பிக்கப்பட்டிருக்கின்றனர். சங்கத்தில் அரங்கேற்றுவித்தற்பொருட்டுவரும் நூல்களிற் பிழைகள் காணப்படுந்தோறும் ஆக்கியோர்களைக் குற்றங்கூறுதற்குத் துணியாராய் 'இந்தப்பிழைகளைக் கேட்கும்படி நேரிட்டதே' என்று இவர் மனம்வருந்தித் தமதுதலையைக்குத்திக்கொள்வாரென்றும், அதனால் தலை புண்பட்டுச் சீயோடிருந்தமையின், சீத்தலைச்சாத்தனாரென்பது இவர்க்குப்பெயராயிற்றென்றுங்கூறுவர்; இதனை, "வள்ளுவர் முப்பாலாற், றலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு" என்று மருத்துவன் றாமோதரனார் திருக்குறளைச் சிறப்பித்துக்கூறிய செய்யுளிற் குறிப்பித்திருத்தல்காண்க.

---

* கூலங்களாவன:—நெல்லு, புல்லு, வரகு, தினை, சாமை, இறுங்கு, தோரை, இராகியெனபன; கூலம் பதினெண்வகைத்தென்பர் கூத்தநூலார்.

† அவகாசக்குறைவால் இவரைப்பற்றி இன்னும் எழுதவேண்டியவற்றை இப்பொழுது எழுதக்கூடவில்லை.

கணபதி துணை.

# புத்தசரித்திரம்.

இந்தப் பரதகண்டத்தில், *உத்தரகோசலதேசத்தில், †உரோகிணி நதிக் கரையிலுள்ள ‡கபிலவாஸ்து என்னும் நகரத்தில், இக்ஷ்வாகு பரம்பரையிலுதித்துச் சுத்தோதனனென்று பெயர்பெற்ற ஓரரசன் இருந்தான். அவனுடையகாலம், இற்றைக்குச் சற்றேறக்குறைய இரண்டாயிரத்தைந்நூறு வருடங்களுக்கு முந்தியதென்பர். அவனுக்குச் சுக்கிலோதனன், அமிருதோதனன், தௌதோதனன், கனிதோதனனென்னும் நான்குசகோதரர்களும், பிரமிதை, அமிருதையென்னும் இரண்டுசகோதரிகளும் இருந்தார்கள். அவனுடையமுன்னோர், §சாகவிருக்ஷங்கள் அடர்ந்துள்ள இடத்தில் முன்னம் இருந்ததுபற்றிச் சாக்கியரென்றும், கோதமரென்பவரது மரபிலுதித்தமைபற்றிக் கௌதமரென்றுஞ்சொல்லப்படுவர். சுத்தோதனன், கோலியதேசாதிபதியாகிய அஞ்சனனென்னும் அரசனுடையமகளிரான மாயாதேவியையும் கௌதமியையும் மணஞ்செய்துகொண்டான்.

மாயாதேவி மூத்தவள்; ||கௌதமி இளையவள்.

கௌதமி, பிரஜாவதியென்றும் மஹாப்பிரஜாவதிகௌதமியென்றும் பிரஜாவதிகௌதமியென்றுங் கூறப்படுவாள். இவ்விருவருள்ளே குண

---

* கிழக்கே லிச்சவிகளின்தேயமும் மகததேயமும், தெற்கே கோலியதேயமும், மேற்கே ஸ்ராவஸ்திதேயமும, வடக்கே மலையில்வாழ்பவர்களாகிய மங்கோலியருடையதேயமும், உத்தரகோசலத்திற்கு எல்லைகளாகக் கூறப்பட்டுள்ளன. லிச்சவிகளென்பது ஒருவகைக்குழூஉவின்பெயர். உத்தரகோசலம் சாக்கியதேசமென்றுங் கூறப்படும்.

† உரோகிணிநதி, இக்காலத்தில் 'கொகானு' என்று வழங்குகின்றது; இது கங்கையின் கிளைநதிகளுள் ஒன்று.

‡ 'கபிலவாஸ்து' என்பதற்குக் கபிலரென்றுபெயருள்ள முனிவரொருவர்தங்கித் தவஞ்செய்த இடமென்று பொருள்கூறுவர். [வாஸ்து - இடம்.] பழையதமிழ்நூல்களில் இந்நகரப்பெயர் கபிலபுரமென்றும் கபிலையென்றும், இந்நகரையுடையநாடு மகதநாடென்றும் வழங்கப்படுகின்றன; "கண்டார் விரும்புங் கபில புரமென்ப, துண்டு" என்பது நீலகேசித்திரட்டு, மொக்கலவாதச்சருக்கம், ககூரு - ம் பாட்டு; 'மறந்து மழைமறா மகதநன் னாட்டுக், கொருபெருந் திலகமென் றுரவோ ருரைக்குங், கரவரும் பெருமைக் கபிலையம் பதி" என்பது மணிமேகலை, உகூ - ம் காதை, ருஉ - சச.

§ சாகவிருக்ஷம் - தேக்கமரம்.

|| கௌதமி மூத்தவளென்றும், மாயாதேவி இளையவளென்றும் சிலபுஸ்தகங்களிற் சொல்லப்படுகிறார்கள்.

வதியாகிய மாயாதேவி பேரழகுடையளாயிருந்ததுபற்றி, அரசன் அவளிடத்து மிக்க வேட்கையுடையனாகியிருந்தான். கௌதமி அதுதெரிந்து மாயாதேவிபால் அழுக்காறுற்று மனங்கொதித்துக்கொண்டே காலங் கழித்துவந்தாள். இவ்விருவரும நெடுங்காலம்வரையிற் புத்திரப்பேறின்றி இருந்தார்கள்.

இப்படி இருக்கையில், துஷித*லோகவாசியாகிய பிரபாபாலரென்னும் †போதிசத்துவர், உயிர்களைத் தீயவழியினின்றும்நீக்கி நல்லவழியிற்செலுத்துதற்கு இவ்வுலகில் அவதரிக்கவிருப்புற்று, ஒருநாள் பொன்மயமான ‡தெய்வவிமானமூர்ந்துவந்து, மாயாதேவி சுத்தோதனன் என்னுமிருவர்கனவிலுந்தோன்றி, தாம் அவர்களுக்குப்புத்திரராக அவதரிக்கப்போதலைத் தனித்தனியேயுணர்த்திப் பின்பு மாயாதேவியினுடைய §வயிற்றிற் புகுந்தனர். எங்கும் நிறைந்துள்ளதெய்வம இங்ஙனஞ்செய்ததென்றும், மாயை ஒரு ஷட்கோணநக்ஷத்திரம தன்வயிற்றிற்புகுந்ததாகக் கனவுகண்டு பின்பு கருவுற்றாளென்றுஞ் சொல்லுவதுமுண்டு. மாயாதேவி கருவுற்றனளென்பதை அவளுடைய தோள்மெலிவுமுதலியவற்றாலறிந்த அரசன்முதலியோர் அகமகிழ்ந்தனர்.

அப்பொழுது அவளுக்குப் பிராயம் நாற்பத்தைந்து. மாயாதேவி மட்டும கருப்பிணியாயினளென்று நறுமொறுப்புற்றகௌதமி அவளுடைய உயிரைப்போக்குதற்குப் பலவாறுமுயன்றனள்; முயன்றும அது சிறிதும் பலிக்கவில்லை. அதன்பின்பு கௌதமி தானசெய்த குற்றத்தை நினைந்துநினைந்து மனம்நொந்து, மாயாதேவிபால அன்புகூர்ந்து ஒழுகுவாளாயினள். மற்றொருநாள், மாயாதேவியின்கனவிற் பிரபாபாலர் ஓராண்குழந்தைவடிவாகத்தோன்றி அவளுக்குச் சில நல்வழிகளை உபதேசித்து மீட்டும அவள்வயிற்றிற்புகுந்தனர். அவள் அவர் உபதேசித்தவாறே நியமவழியில் ஒழுகுவாளாயினள். உலகத்திற் கருவுற்றமங்கை

---

* துஷிதலோகம் - தெய்வலோகங்களாறினுள் நான்காவது.

† போதிசத்துவர் - புத்தராக வருதற்குரியோர், "புத்த ராகு மாண்பினோர் போதி சத்து வர்கடாம்" என்பது நீலகேசித்திரட்டு, மொக்கலவாதச்சருக்கம், ௩௨-வது செய்யுள். கௌதமபுத்தருடைய பழையபிறப்புக்களையுணர்ததும் வடநூலைப் போதிசத்துவாவதான கல்பலதையென்று கூறுதல்காண்க.

‡ 'துடிதவிமானத்தினின்றும்போந்து குயிலாலபுரத்துத்தோன்றி உலும்பினி வனத்துப்பிறந்து கபிலபுரத்துப் புத்தத்துவமபெற்றுத தர்மோபதேசம பண்ணி மஹாபோதிப்பிரதேசத்துப் பொன்றக்கெடுதல புத்தனுக்குரியதி' (மொக்கலவாதச் சருக்கம, ௧௩௦ - ம் பாட்டுரை) என்று சிலவற்றை வேறுபடுததிக்கூறுவர் நீலகேசித்திரட்டுரையாசிரியர்.

§ ஈசானசகாப்தம் ௩௭ - ம்வருஷத்தில் மாயாதேவி கருப்பமுற்றாளென்று பர்மா தேசத்துப் பௌத்தநூல்கள் தெரிவிக்கின்றன. அவள் கருப்பமுற்றநக்ஷத்திரம் உத்தரட்டாதியென்பர்.

யாகளுக்கு உளவாகும் *வயாவும் வருத்தமும் அவளுக்கு இலவாயின. கருவுயிர்க்குங்காலமணுகிற்று; அணுகவே அவள் இனிய பலவகைக்காட்சிகளுமமைந்த உலும்பினியென்னும் பூஞ்சோலையையடைதற்கு விரும்பித் தன்கருத்தை அரசனுக்குத்தெரிவித்தாள். அவன் அகப்பரிசாரங்களும் புறப்பரிசாரங்களுஞ்சூழ அவளுடன் அச்சோலையையடைந்து, அதிலுள்ள மாளிகையொன்றிலதங்கி, அவளுள்ளத்தைக்கவரும் நறுமலர்களைக்கொணருமபடி தன்பரிவாரங்களுக்குக் கட்டளையிட்டான். அதைக்கேட்ட பலரும பலவகைமலருங்கொணர்நது காட்டி அவளை மகிழ்வித்தார்கள். பின்பு அரசன் மாயாதேவியுடன் அச்சோலையிடையே மலர்ந்துவிளங்கும் அசோகமரமொன்றைச்சார்நது, அதனிழலில் மயில் கலாபத்தைவிரித்தாடுதலையும கலவிங்கமென்னுமபறவை அதற்கேறபப் பாடுதலையும் கண்டும் கேட்டும விழிகளுக்கும செவிகளுக்கும விருநதூட்டிக் களிக்கும் அவளை நோக்கி, "இம்மரப்பூவொன்றைப பறித்துத்தா" என்று வேண்டினன். பூப்பறிக்க அவள் அம்மரத்தின் கிளையொன்றைப்பற்றுதற்கு வலக்கையை உயர்த்தினள். முன்னம், ஔரவரென்னுமுனிவர் தமதுதாயினது துடையிலிருநதும, பிருது எனனும சக்கரவாததி வேனராஜாவினுடைய கையிலிருநதும, மாநதாதா †உபோஷிகனுடைய நெற்றியிலிருந்தும், ‡கக்ஷீவானென்னுமுனிவா சுதேக்ஷ்ணைதேவியின் கைம்மூலத்திலிருநதும் வெளிப்பட்டதுபோலப பிரபாபாலா அப்பொழுது மாயாதேவியின் கருப்பத்திலிருநது சிறிதும அவளுக்கு வருத்தத்தை உண்டுபண்ணாமல் மெல்ல மெல்ல அவளுடைய வலப்பக்கததின்வழியே ஆண்குழந்தைவடிவாக வெளியேவநது அவள்காலருகே அச்சமயத்தில் தேருருளையைப்போல பெரிதாக முளைததுத ோன்றிய நீலத்தாமரைமலரொன்றிற் சென்றிருநதார. அவர §பிறநததினம, வைசாகசுத்தபூர்ணிமை. அக்கணமே தெய்வஅரசாகள் நாலவரும நநதன் உபநந்தனென்ற நாகஅரசர்கள் இருவரும அங்கேவந்து, முன்பு அவதரித்துள்ள புத்தர்களுக்குத் தாம செயததுபோலச செய்யவேண்டிய பல உபசாரங்களையும செய்துவிட்டுத் தத்தம உறைவிடஞ்சென்றாகள. அப்பால், அவர், அந்நீலத்தாம

* வயா - வேட்கைநோய்.

† உபோஷிகன் - யுவனாசுவன்.

‡ கக்ஷீவானென்பவர், 'தீர்க்கதமஸ்' என்கிறமுனிவருடைய அனுக்கிரகத்தால் பலியென்னுமரசன்மனைவி சுதேக்ஷ்ணையின் கக்ஷததிலிருந்து பிறந்தாரென்று ஸ்ரீ மஹாபாரதங் கூறுகின்றது. கக்ஷம - கைம்மூலம்.

§ கௌதமபுத்தர் பிறந்ததினம், ஈசானசகாப்தம், ௬௨-ம்வரு வைகாசிமாதத்திற் பூர்ணிமையும விசாகநக்ஷத்திரமுங்கூடிய வெள்ளிக்கிழமையென்று சொல்லுவா; "இருதிள வேனிலி லெரிகதி ரிடபத், தொருபதின மேலு மொருமூன்று சென்றபின், மீனத் திடைநிலை மீனத் தகவயிற், போதித் தலைவனொடு பொருந்திய போழ்தத்து" என்று மணிமேகலையிலும கூறப்பட்டிருத்தல்காண்க. கஙு-ம் காதை, உ௯ - உ௪.

ரைமலரினின்றும் சிங்கக்குருளைபோல் எழுந்து நடந்துபோந்து தாம் புத்தாவதாரமென்பதை ஆங்குள்ளவருக்குக் கூறினர். கூறியவுடன் வெப்பமும் தட்பமுமுள்ள *நீரோடைகளிரண்டு தனித்தனியே ஆகாயவழியே வந்து அவரை மஞ்சனஞ்செய்வித்தன. தேவர்கள் மலர்மழைபொழிந்தார்கள்; ஆகாயம மேகத்தால்மூடப்படுதலின்றித் தூய்மையுற்றுவிளங்கிற்று; விலங்குகளும் பறவைகளும் தம்முட் பகைமையின்றி அன்புற்றுப் பயின்றன; இன்னும் பற்பல †நன்னிமித்தங்கள் நிகழ்ந்தன. தீயவழிகளுக்குத் தலைவனான மாரனென்னுந்தேவன் ஒருவனுமே துன்புற்றான். மாயாதேவி பொறையுயிர்த்தலாலுண்டாகுந்தளர்ச்சி சிறிதுமின்றி மேற்கூறிய அசோகமரத்தின்கீழேயிருந்தாள். கௌதமி அன்புகூர்ந்து அக்குழந்தையையெடுத்துச் சீராட்டிப் பாராட்டி வருவாளாயினள். குழந்தையும் அவள்பால் அன்புமிக்கது. அப்படியிருக்கையில், சிறந்தநிமித்திகனாகிய அந்தணனொருவன்வந்து, அக்குழந்தையை உற்றுநோக்கி, "ஆசிரியராக வருவோர்க்குரிய இலக்கணங்களெல்லாம் இவன்பால் உள்ளன; ஆதலால், இவன் துறந்து பலவிடத்துஞ்சென்று தருமோபதேசம புரிதலை மேற்கொள்வான்; இவனால் மனிதர்கள் அடையும் ஊதியம மிகப்பல" என்று அரசனுக்குக்கூறி நன்கொடைபெற்றுசசென்றான். மாயாதேவி, கருவுயிர்த்த ‡ஏழாநாளில் ஆனந்தாதிசயத்தால் இறந்தாள்.

"உலும்பினி வனத்து ளொண்குழைத் தேவி
வலம்படு மருஙகுல வடுநோ யுறாம
லான்றோ னவ்வழித் தோன்றின னாதலி
னீன்றோ ளேழாநா ளின்னுயிர வைத்தாள்."
(விம்பசாரகதையென்னுங்காப்பியம்.)

---

* நீரூற்று ஒன்று, மாயாதேவியின் அருகே பூமியில் தோன்றி மஞ்சனஞ்செய்வித்ததெனறுங் கூறுவதுண்டு.

† "மைத்திருள் கூர்ந்த மனமாசு தீரப், புத்த ஞாயிறு தோன்றுங் காலைத், திங்களு ஞாயிறுந் தீங்குறா விளஙகத், தஙகா நாண்மீன் றகைமையி னடக்கும், வானம் பொய்யாது மாநிலம வளம்படு, மூனுடை யுயிர்க ளூறுதுயர் காணா, வளிவலங் கொட்கு மாதிரம் வளம்படு, நளியிரு முந்நீர் நலம்பல தரூஉங், கறவைகன் றார்த்திக் கலநிறை பொழியும், பறவை பயனறுய்த்த துறைபதி நீங்கா, விலங்கு மக்களும் வெரூஉப்பகை நீஙகுங், கலங்கஞர் நரகரும் பேயுங் கைவிடுங், கூனுங் குறளு மூமுஞ் செவிடு, மாவு மருளு மன்னுயிர் பெறா" என்று புத்தரவதரிக்குங்காலத்தில உலகததுண்டாகும் நிமித்தவிசேடஙகளை மணிமேகலையில் விளங்கக் கூறியிருத்தலை காண்க; கஉ - ம காதை, அரு - கூஅ.

‡ "புத்தன்றாய் நண்டிப்பி வாழை புனமூங்கில், கத்தும் விரியன் கடுஞ்சிலந்தி - இத்தனையும், வேலாலும் வாளாலு மன்றியே தாஙகொண்ட, சூலாலே தம்முயிர்க்குச் சோர்வு" என்பது உலோகவசன மென்னுநூல்; இச்செய்யுள், நீலகேசித்திரட்டுரையிற் கண்டது. 'இவன் பிறக்கின்ற காலதது மாதாவினது வலமருஙகுலாற் பிறந்தான்; அவளும் ஆறுநாட் குற்றுயிரோடு கிடந்து எழாநாள் இறந்தாள். இது புத்தமாதாக்கள் யாவர்க்கும் ஒக்கும்' என்பது நீலகேசித்திரட்டு, குண்டலகேசிவாதச் சருக்கம், சக - ம் பாட்டுரை.

அவளுடம்பைத்தகித்து அவளுடைய என்பையும் சாம்பரையும் ஒரு குடத்தில் நிறைத்து, அவளிருந்துவந்த மாளிகையை *அஸ்தமயகிரியிற் பெயர்த்துக்கட்டி அதில் அக்குடத்தை அடக்கஞ்செய்தார்கள். அவளுடைய பெருமையைப் புலப்படுத்தற்பொருட்டு நூற்றறுபது அடி உயரமுள்ள ஆலயமொன்று அம்மாளிகையினருகே எடுப்பிக்கப்பட்டதன்றி மேற்கூறிய அசோகமரமும் அவ்வாலயத்தின் எதிரிலே பெயர்த்து நடப்பட்டது.

*கௌதமி குழந்தையை எடுத்து வளர்த்துவந்தாள்.*

ஒருநாள், சுத்தோதனன் குழந்தையையெடுத்துக்கொண்டு கோயில் சென்று பண்டனதேவரைத் தரிசித்தபொழுது, அத்தேவர் தமதுபடிமத்திலிருந்து வெளிப்பட்டு, அக்குழந்தையின்பெருமைகளை அவனுக்கு விரித்துக்கூறினர். பின்பு அக்குழந்தைக்கு †ஸித்தார்த்தனென்று நாமகரணஞ்செய்தார்கள்; செய்தும் எல்லாரும் கௌதமனென்னும் குடிப்பெயராலேயே அழைத்துவந்தார்கள்.

கௌதமர், உரிய காலத்தில் வித்தியாரம்பஞ் செய்விக்கப்பெற்று ‡மித்திரரென்றுபெயருள்ள ஒரு பிராஹ்மணரிடம் பலகலைகளையும் முறையாகக் கற்றுவந்தார். 'விளையும் பயிர் முளையிலே தெரியும்' என்பதற்கேற்ப, ஜீவகாருண்ணியமுதலிய நற்குணங்கள் பலவும் அவர்பால் இளமைப்பருவந்தொடங்கியே நாடோறும் வளர்ச்சியுற்று விளங்கின. கற்கவேண்டிய கலைகளெல்லாவற்றையும் அவர் யாதொருவருத்தமுமின்றிக் கற்றுவந்தார். அது தெரிந்த சுத்தோதனன் பெருமகிழ்ச்சியடைந்தான். அவரோடு கற்றுவந்த பார்ப்பனபாலகன் உதாயியென்பவன்.

அவ்வளவில் அஸிதரென்னு முனிவர்வந்து கௌதமரைக்கண்டு பரிபூர்ண புத்தர்களுக்குரிய §ஸஹஸ்ரார சக்கரரேகை முதலிய ஸாமுத்திரிகலக்ஷணங்கள் பலவும் அவர்பால் உளவாதலையறிந்து வியந்து, "மானிடராகிய மரத்தில் பல நூற்றாண்டுகளுக்கு ஒருமுறையே மலரு மலர் இக்குழந்தை; உமது குலப்பெருமையை என்னவென்று சொல்லுவேன்; ன் துறவுபூண்டு உலோக ரக்ஷகனாக இருப்பான்" என்று அரசனுக்

---

* அஸ்தமயகிரியென்பது அங்கேயுள்ள ஒரு மலையின் பெயர்.

† ஸித்தார்த்தன் (தந்தையின்) விருப்பத்தை நிறைவேற்றியவன். ஸர்வார்த்தஸித்தியென்று நாமகரணஞ்செய்ததாகச் சொல்லுவதுமுண்டு. அவருக்கு இன்னும் உள்ளனவாகிய பெயர்கள் பல.

‡ இப்பெயர், விசுவாமித்திரரென்றும் சில புத்தகங்களிற் காணப்படுகின்றது.

§ ஸஹஸ்ராரசக்கரரேகை புத்தருடைய பாதத்திலிருந்த கீற்று விசேடமென்பர், இதுபற்றியே அவரை, "ஆயிரவாரத்தாழியன்" என்றார் மணிமேகலையிலும்; ௫-ம் காதை, ௧௦௪.

குக் கூறினர். அரசன், "துறப்பது எப்பொழுதோ?" என்றான். அவர் "அஃது இப்பொழுது அறிவிக்கற்பாலதன்று" என்று சொல்லித் தம மிடஞ்சென்றனர். செல்லவே அரசன் கௌதமர் துறப்பாரென்பதை முன்பு ஒரு நிமித்திகனாலும் அறிந்தோனாதலால், அவருடைய உள்ளத்தை உலகவழியிற் புகுத்தற்பொருட்டுப் பலவாறு முயன்றுவநததோடு உலக வாழ்வில் அவருக்கு ஒருபொழுதும் யாதொரு வெறுப்புந் தோற்றாம லிருக்கும்வண்ணஞ்செய்வித்தும வநதான்.

அந்நாட்களிலே ஒருநாள் தோழர்களுள் ஒருவனாகிய தேவதத்த னென்பவன் தான் ஓரிடத்தில் எய்துவீழ்த்திய *அன்னப்பறவையைக் கௌதமர் அளிசுரநதெடுத்து அதன்மேலே தைத்திருநத அமபைப் பிடு ங்கி யெறிநது அப்பறவையைத் தைவந்து பாதுகாத்துவிடுத்தமைபற் றிக் கோபமுற்றுப் பகைமைகொண்டு அவரை நீங்கித் தனக்கமைநத நண்பர்சிலருடன் வேற்றிடஞ்சென்றான்.

சிலநாளைக்குப்பின் கௌதமரைச சுத்தோதனன் தன்னுடைய இள வரசாக நியமித்து அதற்குரிய சிறபபோடிருககுமபடி செய்வித்தான். அப்பொழுது அவருக்குப்பிராயம் பதினாநது. இளவரசாக இருநதே சிலவருடங்களைப்போக்கினர்.

பின்பு, அரசன், தன் மைத்துனனாகிய சுப்பிரபுத்தனுடையமகள் யசோதரையை அவருக்கு †மணம்புரிவித்தான்; அபபொழுது அவருக் குப்பிராயம் பத்தொன்பது.

அப்பால் கௌதமர் யசோதரைபாற்காதல்கூர்ந்து வேறொன்றையும அறியாது அவள்போகத்திலேயே சிலகாலம அழுநதிககிடந்தார. அது தெரிந்த உறவினர் கவலையுற்று, "மேன்மேலும அறிந்துகொள்ளவேண் டிய படைக்கலப்பயிற்சி முதலியவை கௌதமனுக்கு இல்லையாயினவே. எப்பொழுதேனும் யுத்தம் நேருமாயின் அக்காலத்து இவன் யாதுசெய் வான்?" என்று அரசனுக்குசசொன்னாகள். அதைத்தெரிந்துகொண்ட கௌதமர், அவ்வுறவினர் பலரையும வருவித்து, தாம் அவற்றிலவல்லரா தலை அரசன்முன்பு வெளிப்படுத்தி, அவ்வுறவினரால் நன்கு மதிககப்பட் டார். இச்செய்தி விவாகத்திற்குமுன்னே நடந்ததென்றும் இதைக் கண்டுவியந்த சுப்பிரபுத்தன் தன்மகளைக் கௌதமருக்கு மணமபுரிவிததா னென்றுங்கூறுவதுண்டு. 'நிமித்திகனும் அஸிதருஷியும் முன்புகூறிய வாறு கௌதமன் துறவுபூண்பானோ' என்று கவலையுற்ற அரசன், ஒரு

* பருந்தென்று கூறுவதுமுண்டு.

† காட்டப்பட்ட மங்கையர் பலருள்ளே யசோதரை கௌதமரால் தெரிந்தெ டுத்து விவாகஞ்செய்துகொள்ளப்பட்டாளென்றுஞ் சொல்லுவர்.

தோட்டத்தில் வேனிற்காலம், மழைக்காலம், பனிக்காலம் ஆகிய இம் மூன்றினும முறையேதங்கிப் போகம்நுகர்தற்குத் தகுதியாக மூன்றுமாளிகைகள் கட்டுவித்து, அவற்றின் நாற்புறவழிகளினும் வலிய நிலைகளும் கதவுகளும் அமைப்பித்து, அத்தோட்டத்தைச்சூழ உயர்ந்தமதிலையெழுப்பி, இரவும பகலும அம்மதிலைச்சூழ்ந்து போர்வீரர் காக்கவும், அருவருக்கத்தக்கபொருள்களுள் யாதொன்றும கண்ணுக்குப் புலப்படாமலிருக்கவும புரிவித்து, கௌதமரை அங்கேதங்கி இன்பநுகரும்வண்ணஞ் செய்வித்தான். அரசன் இவ்வாறு மேன்மேலுஞ் செய்துவந்த பெருமுயற்சிகளாற பிணிமூப்புச சாக்காடென்பவைகள் மனிதர்களுக்கு உண்டென்ற ஞாபகம அநகாலமவரையிற் கௌதமருக்குச் சிறிதும உண்டாகவேயில்லை.

அப்படியிருக்கையில், ஒருநாள் உலும்பினிவனத்திலுள்ள அரண்மனையில வநது தன்னைக்காணுமபடி அரசன் அவருக்குத் திருமுகமனுப்பினன். அதனைப்பெற்று உடனே தநதையைக்காணுதற்கு நினைநது தாமிருக்குந தோட்டத்தின் கீழைவாயில்வழியே சிவிகையூர்ந்துசெல்லுங்கௌதமா, தமமெதிரேவநத மிக்க பிணியாளனொருவனைககண்டு எல்லாரும இப்படியே பிணிவாய்ப்பட்டுத் துன்புறுவாரென்பதையும, மற்றொருநாள அங்ஙனஞ் செல்லுகையில மிகத்தளர்நது வருநதிக்கொண்டேவநத முதியோன்ஒருவனை வழியிடையே கண்ணுற்று எல்லாரும இங்ஙனம் மூப்புற்றுவருநதுவாரென்பதையும, வேறொருநாள் குதிரையேறி மேலைவாயில்வழியே செலலுகையில அங்கே அழுகிக்கிடந்த பிணமொன்றைக்கண்டு எல்லாரும் இறத்தற்குரியாரென்பதையும் உடன்வந்த குதிரைக்காரனாகிய *சந்தகனால் அறிநதறிநது, "அநித்தியமாகிய உலக வாழ்வில அருவருப்புறறு இப்பிணிமூப்புச சாக்காட்டிற்குக் காரணமாகிய பிறப்பிற்கு இடங்கொடாத நல்வழியையறிநது நாமுமுய்ந்து உலகத்தையுமஉய்விததல எப்பொழுதுகூடுமோவென்று கவலையடைந்து அதைக் குறித்து ஆலோசிததுக்கொண்டே மீண்டுமீண்டு வருவாராயினா.

† சுத்தாவாஸதேவர்களுளொருவர் கௌதமருக்கு நிலையாமையை அறிவுறுத்தற்பொருட்டு முதியோன்வடிவமுதலிய மூன்றுவடிவங்களாகத் தோற்றினரெனறு கூறுவர்.

இக்காட்சிகளால் கௌதமருடைய மனம் வேறுபட்டிருத்தலைக் கேள்வியுற்ற அரசனுடைய கட்டளையால் உதாயியுடன் அழகிய மங்கையர் பலர்வநது தம்வயமாக்க முயன்றும், ஒத்த தோழர்களாகிய மநதிரி

* அறிந்தது பாங்கனாகிய உதாயியென்பவனுமென்றுங் கூறுவதுண்டு.

† சுத்தாவாஸதேவரென்பார் பிரமகணங்களுள் ஒருவகையார்.

குமாரர்கள் பலர்வந்து சிற்றின்பத்தைப்பற்றிப் பலவகையாகப் போதித்தும் கௌதமருடைய உள்ளம் சிறிதும் வேறுபடவில்லை; வேறுபடுத்தத் துணிந்துவந்தவர்கள், கௌதமருடைய அழகிய மேனியையும், கம்பீரமான தோற்றத்தையும், சாந்தமான பார்வையையும், மற்றுமுள்ள விசேடங்களையுங்கண்டு அஞ்சிச் சென்றார்கள்.

பின்பு ஒருநாள் கௌதமர் தேரேறித் தோட்டம்பார்க்கப்போன பொழுது வழியின் இருபுறத்துமுள்ள நன்செய்களிலும் புன்செய்களிலும் உழவர்முதலியோரும் எருதுமுதலியவைகளும் உழைத்தலையும், அதனால் அவ்வுயிர்களடையும் வருத்தங்களையுங்கண்டு மனம்வருந்தி ஒரு நாவன்மரத்தின்கீழ்த்தங்கிக் கண்ணைமூடிக்கொண்டு, துக்கமாகிய பிறப்புப் பிணிமூப்பிறப்புக்களையும், அவற்றிற்குரிய காரணங்களையும், அவற்றைமாற்றும் வழிகளையும் மெல்ல ஆராய்ந்துகொண்டிருந்தார்; அங்ஙனமிருக்கும்பொழுது, முன்பு தாம பிணியாளன்வடிவங்கொண்டு தோன்றி யாவரும் பிணிவாய்ப்படுதற்குரியரெனபதையும், முதியவன்வடிவங்கொண்டுதோன்றி யாவரும் மூத்தற்குரியரென்பதையும், பிணவடிவங்கொண்டுதோன்றி யாவரும் இறத்தற்குரியரென்பதையும் புலப்படுத்திய சுத்தாவாஸதேவர், துறவறநெறியையும் கௌதமருக்கு அறிவுறுத்த நினைந்து துவராடையணிந்த ஒரு *துறவியாகிவந்து "சித்தார்த்த" என்று அழைக்க, அவர் விழித்துப்பார்த்து, "நீர் யார்" என்றார். அவர் "நான் ஒரு †ஶ்ரமணன்; துக்கத்தை நினைந்து நினைந்து என்மனம் இடைவிடாது வருந்தாநின்றது. இத்துக்கத்தினின்றும் நீங்கி என்றுமழியாததும், ஆதியந்தமில்லாததும், நட்புப்பகைமையற்றதும், ஏகாந்தமானதும், ஆநந்தமயமாகவுள்ளதுமான ஒருநிலையையடைதற்கு அவாவுகின்றது. ஆதலால், ஊரப்புறத்தேதங்கி ஐம்புலன்களையுமடக்கிச் சமாதியிலிருந்துகொண்டு உயிரைப்பாதுகாத்தற்கு வேண்டியவளவே உணவை இரந்து உண்டு வாழும் பிக்ஷுக்களினிலைமையை விழைந்தேன்" என்று கூறி அவர்கள்பெருமையையும் எடுத்துச் சொல்லிவிட்டுச் சென்றனர்; அதுகேட்டவுடனே துறத்தற்குத்துணிந்த கௌதமர் அவ்விடத்திலிருந்தும் எழுந்து அரண்மனைசென்று, தாம் துறவுபூண இசைந்திருத்தலைத் தந்தைக்குத் தெரிவித்தார்; அதனைக்கேட்டசுத்தோதனன், மனங்கலங்கிக் கண்ணீர்பெருக, "ஐய, அதற்குக்காலம் இஃதன்று; எம்மைப்பாதுகாத்து நெடுங்காலம் அரசாண்டபின்னரே அதுவிரும்பத்தக்கது" என்ன,

---

* பிணியாளன்றோற்றமுதல் இத்துறவியின் தோற்றமிறுதியாகிய நான்கையும் ஒரேநாளில் கௌதமர் கண்டனரென்று கூறுவதுமுண்டு.

† ஶ்ரமணனென்பதற்குத் துன்புற்றுத் தவஞ்செய்பவனென்றுபொருள்; இச்சொல் ஸ்ரீவால்மீகிராமாயணத்திலும் வந்துள்ளது.

கௌதமர், "பிறப்புப்பிணிமூப்புச்சாக்காடாகிய இத்துன்பங்களை ஒழித்தற்குரியவழியை அறிந்துகொண்டாலன்றி இங்கு நில்லேன்" என்று உறுதியாகக் கூறிவிட்டுத் தமது உறைவிடமடைந்தார்; அரசன் அவருடைய மனத்தை வேறுபடுத்தும்படி ஆடல்பாடல்களில் வல்ல மகளிரைப் பின்னும் அவர்பால் அனுப்பினன்; அவர்கள்வந்து இயன்றவளவில் முயன்றும் அம்முயற்சி சிறிதும் பயன்படவில்லை. அவர்களுடைய அழகிய உருவங்கள் வைராக்கியமிகுந்த கௌதமருக்கு அருவருக்கத்தக்கனவாகத் தோற்றின; இப்படியிருக்கையில், *ஒருநாள் ஆறுசென்று நீராடிய கௌதமர் அரண்மனைசெல்லுதற்குத் தேரேறுகையில், ஒருவன் வந்து, †"உமக்கு மகன்பிறந்தான்" என்றனன். அதுகேட்ட கௌதமர் "பந்தத்தின்மேற் பந்தமுண்டாயிற்றே; இத்துன்பக்கட்டைக்கடப்பது எப்படி?" என்று கவலையுற்றுக்கொண்டே தேரூர்ந்து அரண்மனைக்குச் செல்வாராயினர்; அங்ஙனஞ்செல்லுகையில் அவருடைய தேருக்கு முன்னும் பின்னும் பல்வாத்தியங்கள் முழங்கின; நகரத்தார்பலரும் 'நம்மரசனுக்குப் பௌத்திரன்பிறந்தான்' என்று மகிழ்ந்து புகழ்ந்துகொண்டே வந்தார்கள்; ஆடல்பாடல்கள் நிகழ்ந்தன; அவற்றுள் யாதொன்றும் அவர்மனத்திற்கு இன்பந்தரவில்லை; அவருடைய உறவினளாகிய மங்கையொருத்தி, "இக்குழந்தையின்தந்தை பாக்கியவான்; தாயும் பாக்கியவதி; மனைவியும் பாக்கியவதி" என்றுபாடிய பாட்டொன்றும் துக்கநிவாரணத்திற்குரியவுபாயம் யாதென்று இடைவிடாமற் சிந்தித்துக்கொண்டே செல்லுகிற அவருக்கு அப்பொழுது நன்னிமித்தமாகவிருந்து இன்பந்தந்தது; அவர் அந்த ‡உபஸ்ருதிக்காக அவள்பால் நன்றிபாராட்டுவாராய்த் தமது கழுத்திலிருந்த விலையுயர்ந்ததான முத்தமாலையை அவளுக்கு நன்கொடையாகக் கொடுத்தார்; அதைப் பெற்றுக்கொண்டவுடன், அம்மங்கை, கௌதமர் தன்னிடத்திலுள்ள விருப்பத்தாலளித்தாரென்றும் பிற்காலத்தில் தான் அவருடைய முதன்மையுள்ளமனைவியாக ஆதல்கூடுமென்றும் மனோராசியஞ் செய்வாளாயினள்.

அப்பால் அவர் அரண்மனைசென்று அங்கேநிகழ்ந்த நாடகமுதலிய காட்சிகளுள் ஒன்றையும் பாராட்டாமலே அன்றிரவின்முற்பாகத்தில் அயர்ந்து நித்திரைசெய்து நள்ளிரவில் திடீரென்றுவிழித்துக்கொண்டு, தான் உள்ளேயிருக்கும்பொழுது தன்வீடு தீப்பற்றிக்கொண்டதென்

---

* இக்காலம், கௌதமர் நான்காவது தோற்றங்கண்ட தினத்தின் பிற்பகலென்று சொல்லுவதுமுண்டு.

† "உமக்குமகன்பிறந்தான்" என்பதைக்கேட்ட கௌதமர், அம்மகன் தமது முத்தியாகிய திங்களை விழுங்கவந்த இராகுவென்று சொன்னாரென்றும், அதனால் அப்புதல்வனுக்கு இராகுலனென்று பின்பு பெயரிடப்பட்டதென்றுஞ் சொல்லுவர்.

‡ உபஸ்ருதி - உதவியானசொல்.

றதை அறிந்தவொருவன் அவ்வாபத்தினின்று நீங்குவதற்கு எவ்வளவு பரபரப்புடனெழுவானோ அவ்வாறேயெழுந்து, எல்லாவற்றையுந் துறந்து வேற்றிடஞ்செல்லுதற்குத் துணிந்தார்; துணிந்தபொழுது, மேற்கூறிய சுத்தாவாஸதேவரால் கதவுகள் திறந்துவைக்கப்பட்டன; கௌதமர், தம்மைச்சூழ்ந்து தாறுமாறாகச் சயனித்துக்கொண்டிருந்த மங்கையர்களின்கூட்டத்தினின்றும்நீங்கிப் புறத்தேபோந்து அங்கே விழித்துக்கொண்டிருந்த சந்தகனையழைத்துத் தம்முடைய கண்டகமென்னும் பெயருள்ளகுதிரையை விரைவிற்கொண்டுவரும்படி அவனுக்குக் கட்டளையிட்டார்; சந்தகன், மஹாராஜாவின் அனுமதியின்றி இளவரசன்கட்டளையை இவ்விரவில் நிறைவேற்றலாமோவென்று சிறிதுபொழுது சிந்தித்துக்கொண்டேநின்று பின்பு மேற்கூறிய தேவருடைய அருளால் துணிவுண்டாகப்பெற்றுக் குதிரைகொணரச் சென்றான்; அவன் சென்றவுடன், எல்லாவற்றையுந் துறத்தற்குத்துணிந்த கௌதமர், இல்வாழ்க்கையிலுள்ள வலியபற்றை அப்பொழுதே முற்றுந்துறக்கலாற்றாமல், தமது குழந்தையைக் கையிலெடுத்துப்பார்த்தற்கு நினைந்து சென்று, அந்தப்புரத்திற் குழந்தையுடன் யசோதரை சயனித்திருக்கும் அறையின்கதவை மெல்லத்திறந்து, அங்கே மலரணைமேலே யசோதரையால் அணைப்புண்டு அவளோடுதுயிலுங் குழந்தையைத் தீபவொளியாற் கண்டு, "இக்குழந்தையையெடுத்தால் இவள் விழித்துக்கொள்வாள்; விழிப்பின் அது நம்முடைய செலவிற்குப் பெருந்தடையாகுமே" என்று நினைந்து, இன்னது செய்கிறதென்று தெரியாமல் மயங்கி அவ்விருவரையும் காதலோடு பார்த்துக்கொண்டே வாயிற்படியிற் சிறிதுபொழுது நின்றார்; நின்றவர், தடுமாறிக்கொண்டிருந்தமனம் பின்பு தெளியப்பெற்று, "நாம் இவளுக்கும் இவனுக்கும் பிற்காலத்தில் ஞானாசிரியனாகவும் ஆதல்கூடும்" என்று எண்ணித் துணிந்து புறப்பட்டார். அவர் அங்ஙனம் வெளிப்பட்ட தினம் பூர்ணிமையென்பர். இங்ஙனம் அவர் வெளிப்பட்டளவிற் சந்தகன் குதிரையைக் கொணர்ந்து நிறுத்தினான். அவர் அதில் ஏறிச் செலுத்தியபொழுது நான்கு தேவர்கள், அதன் குளம்புகளின் ஓசைகளை ஒருவருடைய செவிக்கும் புலப்படாவண்ணம் அடக்கிக்கொண்டு உடன் சென்றனர். இளவரசராகிய கௌதமர், "உலகத்திற் பிறப்புப் பிணிமூப்பு முதலாகக்காட்டிய துன்பங்களையெல்லாம் முற்றும் போக்குதற்குரிய வழியை அறிந்தாலன்றி மீளேன்" என்று உள்ளத்தில் உறுதிகொண்டு *செல்வாராயினர்.

அப்பொழுது அவருக்குப் பிராயம் இருபத்தொன்பது.

---

* கௌதமர் இங்ஙனஞ் சென்றகாலம், ஈசான சகாப்தத்தில் ௬௭-ம் வருடமென்றும், வாரம் வெள்ளிக்கிழமையென்றுஞ் சொல்லுவர்.

கௌதமர், அகத்துறவுபூண்டு எல்லாவற்றிலும் அருவருப்புற்று, தந்தை முதலியோரையும், அரண்மனையையும், பெருஞ்செல்வத்தையும், மனைவியையும், பிள்ளையையும் *பிரிந்துசென்றதை மஹாபிநிஷ்கிரமணமென்று கூறுவர்.

பாவத்திற்குக்காரணமான இச்சைகளை உண்டாக்குந்தெய்வமாகிய மாரனென்பவன், இப்படி அரண்மனையைவிட்டுப் புறப்பட்ட கௌதமரைத் தொடர்ந்துவந்து, "நீர் துறவன்மின்; துறவாதொழியின், இன்றுமுதல் ஏழுநாளைக்குள் நான்கு மஹாத்துவீபங்களுக்கும் உம்மை அரசனாக்குவேன்" என்றுசொல்லித் தடுத்தான். அவர் அத்தடையைமதியாமற் சென்றார்; செல்லவே மாரன் வெல்லுதற்குரிய சமயம் தனக்கு எப்பொழுதுவாய்க்குமோவென்று நினைந்து நிழல்போலவே அவரைத்தொடர்ந்து செல்வானாயினன்.

சென்ற கௌதமர், அவ்விரவில் நாகர்களுந் தேவர்களும் தமக்கு இயல்பாகவுள்ள ஒளியால் வழிகாட்டிக்கொண்டுசெல்ல, ஒருநிமிஷமேனும் இடையே தங்காமல், நல்லாசிரியர் எங்கே கிடைப்பாரென்ற கவலையோடுஞ்சென்று கோலியதேசத்துக்கு அப்பாலுள்ள அநோமநதிக்கரையைச் சூரியோதயத்திற்குமுன்னமே அடைந்தார். அடைதலும் கண்டகனெனுங்குதிரை அங்கு நின்றுவிட்டது. அப்போது அங்கேயுள்ள பார்க்கவரெனும் தாபதருடைய தவப்பள்ளியையும் அதில் வைக்கப்பட்டுள்ள பிக்ஷாபாத்திரங்கள் பல்வேறுறையுங்கண்டு, கபிலவாஸ்துவிலிருந்து சலிப்பின்றி மூன்றுயோசனையளவு விரைந்துவந்ததான குதிரை அத்தவப்பள்ளியை அணுகியவுடன் தானாகவே நின்றுவிட்டதைத் துறவைவிரும்பிவந்த தமக்கு நன்னிமித்தமாகக்கொண்டு களிப்புற்றார். பின்பு அவர் தம்முடன்வந்த சந்தகனைநோக்கி, "அடையவேண்டுமென்று பலநாளாக நினைந்துக்கொண்டேயிருந்தவிடத்தை இப்பொழுது அடைந்தேன்; நமதுறவு இன்றோடு முடிவுபெற்றது" என்றுகூறித் தமதுகழுத்திலிருந்த விலையுயர்ந்த கண்டசரத்தைக் கழற்றி அவனுக்குநன்கொடையாக இன்சொல்லோடு கொடுத்தார். கொடுத்தவர் பின்பு தமது முடிமணியையெடுத்து அவன்கையில்வைத்து, "இதனை நான் அன்புடன் கொடுத்ததாகச்சொல்லி அரசனுக்குக்கொடு; என்னிடத்திலுள்ள காதலை நான் முற்றும் மறக்கச்சொன்னதாகத் தெரிவி; இல்வாழ்க்கையின் வழியாகத் துக்கக்கடலை நீந்துதற்குரியதெப்பம் எனக்குக் கிடையாமையினாலேயே நான் பிரிந்தேனென்று சொன்னதாகவும் விண்ணப்பஞ்செய்" என்றுகூறினார்; அதனைக்கேட்டு மனம்வருந்திய சந்தகன், "இப்பொழுது துறத்

* திரிபிடகத்தில் இச்செய்தியைக்கூறும் பாகத்திற்கு மஹாபிநிஷ்கிரமணஸூத்திரமென்றுபெயர். மஹாபிநிஷ்கிரமணம் - பெருந்துறவு.

தல் தக்கதன்று" என்று பலவகையாக மறுத்து, அதற்கு அவரிணங்காததுபற்றிப் பின்பு "நானும் உடன்வருவேன்" என்றான். கௌதமர் அதற்கு இணங்காமற் குதிரையின் முதுகைத் தடவித் தட்டிக்கொடுத்து அதற்கு இனியவார்த்தைகளைச் சொல்லிவிட்டு அதைக்கொண்டு செல்லும்படி வற்புறுத்திக்கூறி அவனுக்கு விடைகொடுத்தார்.

அது நிகழ்ந்தபின் கௌதமர் அநோமநதியின் மணலிற்றங்கி உடைவாளால் தமது மயிர்முடியை அறுத்தெறிந்துவிட்டு அங்குச் சிறிதுபொழுது உண்மையை *ஆராய்ந்துகொண்டேயிருந்தார். இது சந்தகனுக்கு விடையளித்தற்குமுன்பு நிகழ்ந்ததாகக் கூறுவதுமுண்டு.

அங்ஙனம் ஆராய்ந்துகொண்டிருக்கையில், மேற்கூறிய சுத்தாவாஸ தேவர் துவராடையுடுத்து வில்லும் அம்பும் தாங்கிய ஒரு †வேடனாகத் தோன்ற, கௌதமர் தமமுடைய பட்டாடையை அவ்வேடனுக்குக்கொடுத்துவிட்டு அவனுடைய துவராடையைத் தாம் வாங்கியுடுத்திக்கொண்டு உண்மையை அறிவுறுத்தும் பெரியோரைத் தேடிச்சென்றார்.

கௌதமரிடத்தில் விடைபெற்று, அவர் கேசத்தை அறுத்தெறிந்ததைப்பார்த்துக்கொண்டேநின்று, அவர் கட்டளையை மறுத்தற்கஞ்சி வருந்திச்சென்ற சந்தகன் கண்ணீர்பெருகக் கவலையார்ந்து மனமழுங்கிக் குதிரையுடன் நகர்க்கு மீண்டான்.

பெரியோரைத் தேடிச்சென்ற கௌதமர், காற்று சுத்தநீர் மலர்கள் இளங்குருத்துக்கள் காய்கள் கனிகள் கிழங்குகள் ஆகிய இவைகளுள் ஏதாவதொன்றையேனும் எடுத்த பிச்சையையேனும் உண்டு நீரிலேநின்றும் நெருப்பிலேநின்றும் இன்னும் பலவாறாகவொழுகியும் அருந்தவம் புரிந்துவாழும் முனிவர்கள்பலரை வழியிடையிற்கண்டு அவர்களோடு அளவளாவி, "துக்கநீக்கத்திற்குரியவழி யாது?" என்று அவர்களைக்கேட்டு, அவர்கள்கூறியவைகள் தம்மனத்திற்குப் பொருந்தாமையால் அவற்றை மறுத்துரைத்து, அவ்விடத்தைநீங்கி அவர்களுடைய சொற்படி, சூரியாஸ்தமயத்திற்குப்பின், மகததேசத்துள்ள ‡பாண்டரமலையைச் சார்ந்து, அம்மலைக்குகையில் தவஞ்செய்துகொண்டிருக்கும் §ஆராளராம

---

* இவர்தங்கி ஆராய்ந்துகொண்டிருந்ததற்கு அறிகுறியாக அங்கே பிற்காலத்தாரால் மேல்வளைவுள்ள மண்டபமொன்று கட்டப்பட்டதென்றுகூறுவர்.

† வேடனைக்கூறிய இவ்விடத்தில் ஏழையாகிய வழிப்போக்கனொருவனைச் சொல்லுவதுமுண்டு.

‡ வெண்ணிறமுடைமையால், இம்மலை இப்பெயர்பெற்றது, இக்காரணம்பற்றிச் சுவேதகிரியென்றுங் கூறப்படும்.

§ இப்பெயர் ஆராடருத்திரராமர், ஆராடராமர், ஆராளகாலராமனெனப் பலவாறாகக் காணப்படுகின்றது.

முனிவரைக்கண்டு வணங்கி "பிறப்புமுதலிய துக்கங்களையொழித்தற்குரிய உபாயத்தை அடியேனுக்கு உரைத்தருள்க." என்று விண்ணப்பித்தார். ஆராளராமர் யோகமார்க்கத்தை உபதேசிக்க, கௌதமர் அந்நெறியைக் கடைப்பிடித்து ஒழுகுவாராயினர்.

கபிலவாஸ்துவில் முன்பு தெய்விகமாகத் திறக்கப்பட்டுக் கௌதமருக்கு வழியைக்கொடுத்த அரண்மனைக்கதவுகளெல்லாம் மீட்டும் மூடினபடியேயிருந்தன; அவைகள் அவ்வாறிருக்கவும், எல்லோரும், கௌதமரும் குதிரையும் குதிரைக்காரனுமே இல்லாமையையறிந்து, திகைத்து ருந்தி எங்கும் தேடுவாராயினர்.

அப்பொழுது, குதிரையுடன் அழுதுகொண்டேசென்ற சந்தகன் நிகழ்ந்தவற்றை அவர்களுக்குத் தெரிவித்தான். அவற்றைக்கேட்ட எல்லோரும் துக்ககடலில் ஆழ்ந்தார்கள்.

தன்மகன் துறந்தானென்பதை அறிந்த மஹாப்பிரஜாவதிகௌதமி, பெருங்காற்றால் தாக்குண்ட இளவாழைபோலக் கைகால்முதலிய அவயவங்கள் சோர்ந்து மூர்ச்சித்துச் சிறிதுபொழுது கீழேவிழுந்துகிடந்து பின்பு ஒருவாறு உணர்ச்சியுற்று எழுந்து மிகவும் பெருமூச்செறிந்து கொண்டு, "அந்தோ! இக்ஷ்வாகுகுலசிகாமணியே! இருண்டு வளைப்புறத் தேசிந்து தூய்மையையுடையதாய் அழகிதாகவிளங்கிக் கட்டுண்ணாத போது பூமியைத்தொட்டும் முடித்தபொழுது கிரீடம்போன்று திரண்டும் பளபளப்பாகவிருந்த அந்தக்குடுமி குறைக்கப்பட்டுப் புல்லிற்கிடக்கின்றதே! ஆ! அந்தத் திரண்டதோள்களை, அந்தச் சிங்கநடை, விடையேற்றின் நடைபோன்ற அந்தக்கண்கள், பளபளப்பான பொன்போல் ஒளியைவீசி விளங்கும் அந்தத் தேகம், அந்தச் சதுரமார்பு முதலியவற்றையுடையாய், நீ துன்பத்திற்கிடமாகிய காட்டிற் சென்றனையே! தூய்மையிலும், நிறத்திலும் மென்மையிலும் அல்லிமலர்போன்ற அப்பாதங்கள் கற்களாலும் முட்களாலும் கிழிக்கப்படுகின்றனவே! ஆ! அப்பாதங்கள் அத்துன்பத்தை எவ்வாறு பொறுக்கும்? காவலுள்ள இராசமாளிகையிற் பிறந்து இனிது வளர்க்கப்பெற்று மிகவு மெல்லிய ஆடையை யுடுத்துச் சிறந்த நறுநீரில் ஸ்நானமாடி இனிய அறுசுவையையுடைய நால்வகை யடிசிலுமுண்டு விளங்கிய நீ இப்பொழுது தாக்கி விறைக்கச்செய்யும் குளிர்காற்றில் அடிபட்டுப் பட்டினியுற்றுப் பனிக்குள்ளாகி வருந்துகின்றனையே! மிக்க வெப்பக்காலத்திலும் மிக்க தட்பக்காலத்திலும் இளைப்பாறுமிடம் உனக்கு அங்கே எவ்வாறு கிடைக்கும்?" என்று தன்பிள்ளையை நினைந்து நினைந்து பிரலாபித்து விம்மிவிம்மி ஆற்றொணாதவளாய் மீண்டும் நிலத்திலேவிழுந்து கிடந்தாள். ஏவல்மகளிர் அவளையெடுத்துத் தாங்கிக் கண்ணீர் துடைத்துத் தேற்றுவாராயினர்.

ஜநஞ்செய்தற்குரிய காலமானபின்பு அவர்கள் அந்நத்தைப் பிக்ஷையெடுத்துப்பெற்றுக்கொள்ளவேண்டும். அவர்களுக்கு இன்சுவையுணவில ஆசையிருத்தல்கூடாது; வாயின்றொழிலையுங் கண்ணின்றொழிலையும அடக்கவேண்டும்; நக்நதையில்லாமலிருப்பதற்காகவே வஸ்திரந்தரித்தல வேண்டும்; ஒருகிராமத்தில் ஓரிரவிற்குமேற்படத் தங்குதல்கூடாது; தமக்கு நன்மைசெய்தாலும் தீமைசெய்தாலும எல்லாப்பிராணிகள்விஷயத்திலும் அவர்கள் உபேக்ஷையோடு கூடியிருக்கவேண்டும; அவர்கள் குடுமிவைத்துக்கொண்டாலும கொள்ளலாம்; மழித்துக்கொண்டாலுங் கொள்ளலாம்; ஸ்வப்ரயோஜநத்துக்காக (அந்தப்பயன்கள் இம்மையனவாயிருந்தாலுஞ் சரி மறுமையனவாயிருந்தாலுஞ் சரி) ஒன்றுஞ்செய்தலாகாது; தண்டம் கமண்டலம் பிக்ஷாபாத்ரம நீர்வடிக்கட்டுந்துணியொன்று கிணற்றிலிருந்து நீரெடுக்குங் கயிறொன்று இவைகளே சந்நியாசிகள் தங்களிடத்தில் வைத்திருக்கவேண்டிய பொருள்கள். இப்படிப்பட்ட நியமங்களெல்லாம் ஜைநர்களுக்கும பௌத்தர்களுக்குமுள்ளன; ஆனால் துறவுக்கு முதன்மையான இலக்கணம மனத்திலுள்ள அடக்கமும அவாவின்மையுமேயென்பது எல்லாமதத்தாருடைய துணிபு. தர்மபதமென்கிற புத்தநூலில் உத்தமபிக்ஷுவின் இலக்கணமானது, அவனுடைய வேஷத்திலும உடையிலும இல்லையென்றும வைராக்கியத்திலும சாந்தியிலும் சுத்தியிலும உள்ளதென்றும அநேகவிதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது;—"தன்னுடைய வாக்கை நியமத்துக்குள்ளடக்கிச் செருக்கில்லாமல் விவேகத்தோடே பேசி இம்மைமறுமைகளை விளக்கிக்கொண்டு எவன்வருகிறானோ அவனுடைய உபதேசம் மதுரமாயிருக்கும; அன்பையே உயிராகவும புத்ததருமத்தையே ஆநந்தமாகவுமுடைய பிக்ஷுவானவன் சாந்திநிலையையடைந்து ஸம்ஸ்காரங்களுக்கெல்லாம முடிவைத்தரும் நிர்வாணாநந்தத்தைப் பெறுவான; ஸ்கந்தங்களுடைய உதயத்தியையும முடிவையும அறிந்துகொண்டவுடனே ஞானிகளுக்கு அமிர்தரூபமாயிருக்கிற நிர்வாணமென்கிற சந்தோஷத்தின் ஆநந்தத்தை அவன பெறுவன். தயையே அவனுக்கு ஜீவனோபாயமாக விருக்கக்கடவது; நேரான விசுத்திமார்க்கமே அவனுக்கு ஒழுக்கமாக விருக்கக்கடவது, இப்படியிருந்தால பரிபூர்ணாநந்தத்தைப் பெற்று அவன் துன்பத்தை நாசமடையச் செய்வான். வார்ஷிகையென்கிற செடியானது வாடிப்போன மலர்களைக் கீழேயுதிர்ப்பதுபோல, பிக்ஷுக்களே! நீங்கள் காமத்தையும தீய எண்ணங்களையும முற்றுந்துறந்துவிடுமின் ; முற்றுமுணர்ந்தவனான புத்தனால் உபதேசிக்கப்பட்ட தருமத்தை அறிந்துகொண்டவன், வேள்வித்தீயை எப்பொழுதும் அந்தணர் ஆராதித்துவருவதுபோல, அதை ஆராதித்துக்கொண்டுவரக்கடவன் ; பிராமணனுக்கு நலிவுசெய்யாதே; அவனும தன்னை நலிவுசெய்பவனை அடித்துத்துரத்தப்போகக் கூடாது; பிராமணனை யடிக்கிறவனுக்குக் கேடு உண்டாகும; தன்னை

யடித்தவனை எதிராக அடிக்கிறவனுக்கு இன்னும் அதிகமானகேடு உண்டாகும். பேதையே! மயிரைச் சடையாகத் தரித்து வைத்துக்கொள்வதனால் என்னபயன்? தோலுடையால் என்னபயன்? உன்னுடைய துராசைகளெல்லாம் உன் உள்ளத்தில் இருக்கின்றன. நீ வெளியைமாத்திரம் சுத்தம்பண்ணிக்கொள்ளுகிறாய்.” இவ்விதமாக அநேகவகையாய்த் துறவிகளுக்கு மனத்தூய்மையே முக்கியமென்று பின்னும் அந்நூல் தெரிவிக்கின்றது; இப்படியிருந்தும் பிக்ஷுக்களுக்குரிய சிலநியமங்கள், தார்மிக சூத்திரமென்ற பௌத்தநூலில் பின்வருமாறு புத்தர் சொன்னாரென்று சொல்லப்பட்டிருக்கின்றன:—“பிக்ஷுக்களே! கேளுங்கள்; பாவத்தை யொழிக்கும் தருமத்தை நான் உங்களுக்கு உபதேசஞ்செய்கிறேன்; அதை உள்ளத்தில் உறுதியாகவைத்துக்கொண்டிருங்கள்; நன்மையை யடையத்தேடுகிற ஞானியானவன் சங்கத்தாருக்கு உரிய அடக்கநெறியை [ஈரியாபதம்] கைக்கொண்டு ஒழுகவேண்டும். பகலில் அகாலத்தில் கிராமங்களுக்கு அன்னபிக்ஷைக்காகப் போகக்கூடாது; இராத்திரியிலும் போகக்கூடாது. அகாலத்தில் பிக்ஷையெடுக்கச் செல்வதனால் தீங்கு நேரிடுமென்றறிந்து விவேகிகள் அவ்வாறு செய்வதில்லை. ஐம்புலன்களும் பிராணிகளுக்கெல்லாம் மயக்கத்தையுண்டாக்குகின்றன. அப்புலன்களைப் பற்றிவரும் ஆசையை நீக்கிவிடுங்கள். பிக்ஷுவானவன் தன்னுடைய மத்தியானபோசனத்தை உரியகாலத்தில் பண்ணவேண்டும்; அவன் தக்ககாலத்தில் தன்னுடைய உணவைப்பெற்றுத் தமியனாக மீண்டுவந்து ஏகாந்தமாகவிருந்து தியானஞ்செய்துகொண்டிருக்கவேண்டும். அவன் தன்னுடைய சித்தத்தைப் பரவவிடக்கூடாது. மனத்தை நன்றாக அடக்கிக்கொண்டிருக்கவேண்டும். அவன் உபாஸகர்களோடாவது பௌத்த பிக்ஷுக்களோடாவது பேசும்போது பௌத்ததருமத்தினுடைய பெருமையைப்பற்றிப் பேசவேண்டும்: பிறரைப்பற்றிப் பழிமொழியாவது புறங்கூறலாகவாவது பேசலாகாது. பிக்ஷுக்களில் சிலர் வாதஞ்செய்தற்குவேண்டிய வல்லமையைப் பெறுதற்கு முயலுகிறார்கள். அவர்களுடைய மனம் சிறுமையுள்ளது. அவர்களை நான் பாராட்டுகிறதில்லை. இப்படிச் செய்பவர்களுக்கு அநேகவழியாகத் தீங்கிற் பற்று உண்டாகும். அவர்களுக்கு வாதத்தில் முயற்சியிருக்கும்பொழுது, அவர்கள் உண்மையாகத் தங்கள் மனத்தை நெடுந்தூரஞ் செலுத்திவிடுகிறார்கள். பௌத்தபிக்ஷுவானவன் உணவு படுக்கை ஆஸநம் உடைகளின் தூய்மைக்கு வேண்டியநீர் இவைகளையெல்லாம் பெற்றுக்கொள்வதில் புத்தரால் இடப்பட்ட கட்டளையொன்றையும் கடக்கலாகாது. அவன் இவைகளைப்பற்றிப் பரபரப்புள்ளவனாகவிருக்கக்கூடாது. தாமரையிலையிலுள்ள தண்ணீர்போலப் பற்றில்லாதவனாகவிருக்கவேண்டும்.”

புத்தர் உயிர்வாழ்ந்திருக்குங்காலத்தில் அவரையாசிரயித்த சிஷ்யர்களே ஸங்கத்தின் உற்பத்திக்குக் காரணமென்பது முன்னமே சொல

லப்பட்டிருக்கிறது. புத்தருக்கும் அவருடைய சிஷ்யர்களுக்குமிருந்த சம்பந்தம், இந்தத்தேசத்தில் தொன்றுதொட்டுப் பிரசித்தமாக ஆரியர்களில் நடைபெற்றுவந்த குருசிஷ்யசம்பந்தத்தையொத்ததுதான். முதலில் சிஷ்யர்களையடையும்பொழுது, 'பிக்ஷுவே! இங்குவா; தருமத்தை உபதேசஞ்செய்கிறேன். பிரமசரியானுஷ்டானஞ்செய்துகொண்டு துன்பத்தை முடித்துவிடு' என்று அவர்களுக்குச் சொன்னதாகச் சொல்லியிருக்கிறது. இதனால் ஹிந்துமதத்தாருடைய தாமசாஸ்திரங்களிலுள்ளவாறு பௌத்தர்களும் நான்கு ஆச்சிரமங்களைப் பாராட்டிக்கொண்டு வந்ததாக நினைக்கக்கூடவில்லை; பிரமசரியாச்சிரமத்திலிருந்து கிருஹஸ்தாச்சிரமத்துக்கும் கிருஹஸ்தாச்சிரமத்திலிருந்து வானப்பிரஸ்தாச்சிரமத்துக்கும் அதிலிருந்து சந்யாசத்துக்கும் படிப்படியாகச் செல்லுகிற சம்பிரதாயம் பௌத்தர்களாலேயே பங்கப்படுத்தப்பட்டதென்பது சிலருடைய கொள்கை. அதனாலும், எல்லாச்சாதியாருக்கும் சந்யாசத்தைப் பெற யோக்கியதையுண்டென்று ஒத்துக்கொண்டு அவ்வாறு நடத்தி வந்ததனாலும், ஸ்மிருதிசம்பிரதாயத்தை யனுஷ்டிக்கிற வைதிகமார்க்கத்தாருக்கும் பௌத்தர்களுக்கும் அநுகூலம் குறைந்துவந்ததென்று சொல்லுகிறார்கள். மேற்கூறிய வாக்கியத்தில் பிரமசரியபதத்துக்கு காமமின்றி ஆஹாரநியமங்களுக்கு உட்பட்டிருத்தலே பொருளென்று அறிந்துகொள்ளவேண்டியது. ஆரம்பகாலத்தில் இஷ்டமுள்ளவர்களெல்லாரும் சங்கத்தைச் சேரலாமென்ற விதியிருந்தது. வரவரச் சிலநியமங்கள் விதிக்கப்பட்டன. சங்கத்தைச்சேர்தற்கு விருப்பமுள்ளவன் ஒட்டுவியாதியொன்றும் தனக்கில்லையென்றும், க்ஷயரோகம் தனக்கில்லையென்றும், மூர்ச்சாரோகம் தனக்கில்லையென்றும், தான் ஒருவருக்கும் அடிமையல்லனென்றும், தனக்குக் கடனில்லையென்றும், தான் போர்ப்படைச் சேவகனல்லனென்றும், தான் சந்யாஸிபாவதில் தனது தாய் தந்தையர்களுக்கு உடன்பாடுண்டென்றும் தெரிவித்தல்வேண்டும். இவைகளெல்லாம் பின்புதான் உண்டான விதிகளாம். ஆரம்பகாலத்தில் ஒருவன் தலையை மொட்டையடித்துக்கொண்டு துவராடையையுடுத்துத் தனியேயிருப்பானாயின், அவனுக்குப் பிக்ஷுத்தன்மை கிடைத்ததாக நினைத்துவந்தார்கள். பின்பு சங்கப்பிரவேசத்துக்குவேண்டிய நியமங்கள் உண்டாக்கப்பட்டன. சங்கப்பிரவேசத்துக்கு இரண்டுவழி:—ஒன்று, இருபது பிராயத்துக்குக் குறைவில்லாதவர்கள் நேராகவே சந்யாசத்தையடைந்து சங்கத்தைச் சேரலாமென்பது. மற்றொன்று, எட்டுமுதல் இருபது இறுதியான பிராயமுள்ளவர்கள், பிற்காலத்தில் சந்யாசத்தை யடைவதற்குவேண்டிய சாதனங்களைப் பெறமுயன்றுகொண்டு சங்கத்தை ஒட்டினவர்களாகவிருக்கலாமென்பது. சந்யாசங்கொடுக்கிற முறையில் இரண்டுபடிகளுண்டு; அவற்றில் தாழ்ந்த (முதல்) படிக்கு ப்ரவ்ரஜ்யையென்றும், உயர்ந்ததான (இரண்டாம்) படிக்கு உபஸம்பதையென்றும் பெயர்.

ப்ரவ்ரஜ்யையாவது பழையநிலையிலிருந்து நீங்குதல். உபஸம்பதையாவது பிக்ஷுக்களின் நிஷ்டையைப்பெற்றுக்கொண்டு சங்கத்தாரில் தானும் ஒருவனாகி அச்சங்கத்தையடைதல். ப்ரவ்ரஜ்யையைப்பெற்று உபஸம்பதையைப் பெறாத சந்யாஸி வெளியாருக்குச் சங்கத்தைச் சேர்ந்தவனாகக் காணப்பட்டாலும் சங்கத்தில் அவனுக்கு உள்ளபதவி தாழ்ந்ததே. சிலருக்கு ப்ரவ்ரஜ்யாஸம்ஸ்காரமும், உபஸம்பதாஸம்ஸ்காரமும் ஒரேகாலத்தில் நடத்தப்படும். ஆனால், சாதாரணமாக, ப்ரவ்ரஜ்யாஸம்ஸ்காரத்தைப்பெற்றுக்கொண்ட சிலகாலத்துக்குப்பின்புதான் உபஸம்பதாஸம்ஸ்காரத்தைக் கொடுப்பதுவழக்கம். ப்ரவ்ரஜ்யையைப் பெற்றுக்கொள்ளவேண்டியவன், சங்கத்தாரெதிரில் செல்லுவது முதியவனை ஒரு பௌத்தசந்யாசியினிடமாவது அந்தஸம்ஸ்காரத்தைப் பெற்றுக்கொள்ளலாம்; அந்தஸம்ஸ்காரத்துக்கு அதிகமாகச் செய்யவேண்டியது ஒன்றுமில்லை; அந்தஸம்ஸ்காரத்தைப் பெற்றுக்கொள்ளவேண்டியவன், துவராடையை யுடுத்துக்கொண்டு தலைமுழுவதையும் முகமுழுவதையும் சிரைத்துக்கொண்டு தனக்கு ப்ரவ்ரஜ்யையைக்கொடுக்கிற சந்யாசியினிடத்தில், மூன்றுதரம் வணக்கத்துடனும் பக்தியுடனும் *"புத்தம்சரணம்கச்சாமி", "தர்மம்சரணம்கச்சாமி" "ஸங்கம்சரணம்கச்சாமி" என்று சொல்லவேண்டும். இதைச்சொன்னபின்பு பௌத்தசந்யாசிகளுக்குரிய தசசீலங்களையும் தான் அனுஷ்டித்து வருவதாகவும் அவன் விரதஞ்செய்துகொள்ளவேண்டும்; பின்பு உபஸம்பதையைப் பெற்றுக்கொள்ளும்பொழுது, அவன் சங்கத்தாருக்குமுன் சென்று பணிந்து தலைமேற்கூப்பிய கையனாய்ச் சங்கத்தைப்பார்த்துப் பின்வருமாறு சொல்லுதல்வேண்டும்:—"பூஜ்யர்களே! எனக்கு ஸந்யாஸங் கொடுக்கவேண்டுமென்று சங்கத்தாரை வேண்டிக்கொள்ளுகிறேன். சங்கத்தார் என்னையும் தங்களிலொருவனாகச் செய்துகொள்ளவேண்டுகிறேன்; என்மேல் சங்கத்தார் கருணையுள்ளவர்களாகவிருக்கும்படி வேண்டுகிறேன். பூஜ்யர்களே! எனக்கு நீங்கள் சந்யாசந் தந்தருளவேண்டுமென்று இப்படியே இரண்டுதரம் மூன்றுதரம் கேட்டுக்கொள்ளுகிறேன். சங்கத்தார் என்னை உயர்ந்தவர்களில் ஒருவனாகச் செய்துகொள்ளவேண்டும்; என்னிடத்தில் கருணையுள்ளவர்களாயிருக்கவேண்டும்." இப்படி அவன் சொன்னபின்பு சில கேள்விகள்கேட்டு அவனைப் பரிசோதித்து அவனுக்குச் சங்கத்தைச் சேர்தற்குத் தகுதியுண்டென்று சங்கத்தார் தெரிந்துகொள்ளுவார்கள்; அக்கேள்விகளாவன:–(வந்தவனைப் பெயர்கூறியழைத்து) "நான் சொல்வதைச் செவிகொடுத்துக் கேட்கின்றனையா? சத்தியமாகவும் வஞ்சனையில்லாமலும் நீ பேசுவதற்கு இதுதான் சமயம். உன்னைப்பற்றிய நிலைமைகள்

---

* "மூத்திற மணியை மும்மையின் வணங்கிச்
சரணா கதியாய்ச் சரண்சென் றடைந்தபின்"
(மணிமேகலை, ௩௦-ம் காதை, ௪-௫.)

எப்படியிருக்கின்றனவோ, அவற்றைப்பற்றிக் கேட்கப்போகிறேன்; நீ உள்ளதை உள்ளதென்றே சொல்லவேண்டும். இல்லாததை இல்லையென்றே சொல்லவேண்டும். உனக்குப் பெருவியாதி, கண்டமாலை, வெள்ளைக்குஷ்டம், க்ஷயம், மூர்ச்சாரோகம் இவைகளுள் ஒன்றுமில்லையா? நீ வருசனவேடம் பூண்டிராத உண்மையான மனிதன்தானா? நீ ஆண்மகனா? நீ யார்க்கேனும் அடிமையாக விருக்கின்றனையா? நீ கொடுக்கவேண்டிய கடன்களொன்றுமில்லையா? நீ இராஜசேவை செய்பவனா? சந்நியாசத்தை யடைவதற்குத் தாய்தந்தையர்களின் கட்டளை பெற்றிருக்கின்றனையா? உனக்குப் பூர்ணமாக இருபதுபிராயமாயிற்றா? உனக்கு வேண்டிய பிக்ஷாபாத்திரமும், காஷாய வஸ்திரங்களும் இருக்கின்றனவா? உன்பெயர் என்ன? உன் ஆசிரியன்பெயர் என்ன?" (என்று சங்கத்தாரில் ஒருவன் பரிசோதகனாக முன்னின்று கேட்பான்.) இக்கேள்விகளுள் இறுதிக் கேள்வியால், ப்ரவ்ரஜையை யடைந்தவன் உபஸம்பதையை யடையுமுன் சங்கத்தாருள் ஒருபிக்ஷுவைக் குருவாக அடைந்து அவனிடம் பௌத்த தருமங்களையும் ஆசாரங்களையும் அறியவேண்டுமென்று தெரிகிறது. இந்தக்கேள்விகளைக் கேட்டபரிசோதகன், அந்தக்கேள்விகளுக்கெல்லாம் நேரானவிடை வந்தவுடனே சங்கத்தாரைப் பார்த்துப் பின்வருமாறு சொல்லுவான்:—'பூஜ்யர்களே! சங்கத்தார் நானசொல்வதைக் கேட்கவேண்டுகிறேன்; (குருசிஷ்யர்களுடைய பெயர்களைச்சொல்லி) இன்னாருடைய சிஷ்யனை இங்குள்ள இன்னான் சந்நியாசம்பெற்றுக் கொண்டு சங்கத்தைச் சேரவிரும்புகிறான்; இவன் சங்கத்தைச் சேருவதற்கு விரோதமான தடையொன்றுமில்லை; இவனுக்குப் பிக்ஷாபாத்திரமும் துவராடைகளும் இருக்கின்றன. இவன் இன்னாருடைய சிஷ்யனாயிருந்துகொண்டு தானும் சங்கத்தைச்சேரவேண்டுமென்று வேண்டிக் கொள்ளுகிறான்; இவன் இன்னாருடைய சிஷ்யனாயிருந்துகொண்டு பிக்ஷுவாய்ச் சங்கத்தைச் சேரலாமென்று சங்கத்தார் கட்டளையிடக் கருதுகிறார்கள். இச்சங்கத்திலுள்ள பெரியோர்களில், இன்னாருடைய சிஷ்யனை இவனிருந்துகொண்டு சங்கத்தைச் சேரலாமென்று எண்ணங் கொண்டவர்கள் மௌனமாக விருக்கவேண்டும்; அவ்வாறு எண்ணங் கொள்ளாதவர்கள் தங்கள் கருத்தை வெளியிடவேண்டும்" இவ்வாறு மூன்றுதரம் சொன்னபின்பு ஒருவரும் பேசாமலிருந்தால், அந்தப்பரிசோதகன், சபைக்குத் தலைவனை ஸ்தவிர [முதியோ]னைப்பார்த்து வணங்கி (குருசிஷ்யர்களுடைய இயற்பெயர்சொல்லி) "இவன் இன்னாருடைய சிஷ்யனாகவிருந்துகொண்டு சங்கத்தைச் சேர்தற்கு நியமனம் பெற்றுக் கொண்டான். சங்கத்தாரெல்லாரும் இதற்கு உடன்பட்டவர்கள். அதனாலேதான் எல்லாரும் மௌனமாயிருக்கிறார்களென்று நான் எண்ணுகிறேன்" என்று சொன்னபின்பு அந்தச் சிஷ்யன் சங்கத்தில் ஒருவனாய் விடுகிறான். பின்பு பிசைபெடுத்துப் பெற்றுக்கொண்ட அன்னந்தான்

அவனுக்குத் தகுதியான அன்னமென்றும், பிறர்விட்டெறிந்த கந்தைகளைச் சோதித்துத் தைத்துக்கொண்ட ஆடை*தான் அவனுக்குத்தக்க உடையென்றும், காட்டிலுள்ள மரங்களின் அடிதான் அவனுக்கு இருப்பிடமென்றும், கோமூத்திரந்தான் அவனுக்குத் தக்கமருந்தென்றும், உபாஸகர்கள் நல்ல ஆடை உணவு இருப்பிடம் மருந்து ஆகிய இவற்றைக் கொடுப்பார்களாயின் அங்கீகரிக்கலாமாயினும் அவைகளையெல்லாம் மேற்கூறிய விதமாகவே அவன் பெற்றுக்கொள்வது உத்தமமென்றுங் கூறுவர். பின்பு, காமமின்மை கள்ளாமை கொல்லாமை யென்னும் விரதங்களிலிருந்து தவிர்ந்தாலும், யோகத்தாற்கிடைக்கும் இருத்திசக்திகள் தனக்கிருப்பனவாகப் பெருமைபாராட்டினாலும் சங்கத்திலிருந்து விலக்கிவிடுவதற்கு இடமுண்டாகுமென்றும் சொல்லுவார்கள். இவ்வாறு சங்கத்தைச் சேர்ந்த ஒருவன் தன்னுடைய ஆசிரியனோடுகூடவேயிருந்து தருமத்தையும் சீலத்தையும் அவன்பால் அறிந்துகொண்டு தந்தையிடத்தில் மைந்தனிருக்குமவண்ணம் நடந்துகொள்ளவேண்டும். இங்ஙனந் துறவியானவனுக்கு அந்த நிலைக்குரிய நியமங்களை நடத்த முடியாவிட்டால் அவன் அதிலிருந்து இல்லறநிலைக்கு வந்துவிடலாம்.

பிக்ஷுக்களுக்குரிய ஆஹாரநியமங்கள்: — சூரியோதயமானபின்பு மத்தியான்னத்துக்குள்ளாகவே அநுரூபமான ஆஹாரத்தை உட்கொள்ளலாம். இந்த ஆஹாரத்தை வீடுவீடாகப்போய்ப் பிச்சையெடுத்துத் தொகுக்கவேண்டும். வீட்டுவாயிலிற்போய் மௌனமாய்ப் பிக்ஷாபாத்திரத்தோடு †சும்மா நிற்கவேண்டும். கொடுத்தாற் பெற்றுக்கொள்ளவேண்டும்; கொடாவிட்டால் அப்பாற் போய்விடவேண்டும். இன்னார் வீட்டுக்குப் போகவேண்டுமென்று தெரிந்தெடுத்து உத்தேசத்தோடு போகக்கூடாது. தனக்கு ஒருவேளைக்கு வேண்டியவளவான உணவு கிடைத்தபின்பு பிச்சைவாங்கக் கூடாது. பிச்சையெடுத்த ஆஹாரத்தை ‡உண்பதற்குமுன் அசுபபாவனை செய்துகொண்டிருந்து, பின்பு தான் இறவாமலிருப்பதற்கு வேண்டுமளவே உண்ணவேண்டும். செல்வவான்களான உபாஸகர்கள் தாமாகவே பிக்ஷைக்கு அழைத்தால் போய் உண்

* "ஒண்டுவ ரார்துகி லாடை மெய்போர்த்து துச்சிகொ ளாமையுண் டேயுரைக் குங், குண்டர்க ளோடரைக் கூறை யில்லார்கூறுவ தாங்குண மல்ல கண்டீர்" என்பது திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தேவாரம்; கீழைத்திருக்காட்டுப்பள்ளி.

† "மனையகம் புகுந்து மணிமே கலைதான், புனையா வோவியம் போல நிற்றலும்" என்றதனால், பிக்ஷையிரத்தற்குச்சென்ற பிக்ஷுணிகளும் மௌனமாய்ச் சும்மா நிற்கவேண்டுமென்று தெரிகிறது, மணிமேகலை, ௧௬-ம் காதை, ௧௩௦-௩௧.

‡ நீலகேசித்திரட்டு, மொக்கலவாதச்சருக்கம், ௫௨-ம் பாட்டுரை:—'தலைசிரைத்தலே, புருவஞ்சிரைத்தலே, அத்யுஷ்ணமும் அதிபாரமும் அதிதுர்கந்தியுமாகிய சீவரம்போர்த்தலே, ஸர்வமும் அசுசியென்றுபாவித்துண்டலே, காமஸந்தாபமே, பொழுதுசெகுத்துண்டலே என்றிவைமுதலாயின' என்பதனாலும் பௌத்தபிக்ஷுக்கள் உண்பதற்குமுன்பு அசுபபாவனை பண்ணவேண்டுமென்று தெரிகின்றது.

ணலாம். உண்ணலாகாதென்கிற நிர்ப்பந்தமில்லை; அப்பொழுதுங்கூடப் பகலில் ஒருவேளையுணவுக்கே போகலாம். உபாஸகர்கள் பெரும்பாலும் பூர்ணிமையில் அழைப்பது வழக்கம். தாமிருக்கிறவிடத்துக்கு உபாஸகர் யாரேனும் தாமாகவந்து உணவளித்தால் அதை உண்ணுகிறவழக்கமும் உண்டு. சில பிக்ஷுக்கள் ஆஹாரவிஷயத்தில் சில கடுமையான நியமங்களைக்கூட அனுஷ்டிப்பதுண்டு. மாமஸாஹாரத்தை யுண்பதில்லையென்றும், பிசசையெடுத்துப் பெற்றுக்கொண்டதையன்றி வேறொன்றையும் உண்பதில்லையென்றும், *பிக்ஷாபாத்திரத்திற்கிடைத்ததை ஏற்கிறதில்லையென்றும் இப்படிச் சில நியமங்களிருந்தனவென்று தெரிகிறது. பிக்ஷைக்குப் போகும்பொழுது ஊரிலுள்ளவர்கள் உண்டுவிட்ட செய்தியை இயன்றவரையில் தெரிந்துகொண்டு பின்பே போகவேண்டும்; தமக்கு உணவைக் கொடுத்துவிட்டு உபாஸகர் பட்டினியிருக்கும்படி முன்பு செல்லலாகாது.

தனதென்று அபிமானிப்பதற்கேற்ற பொருளொன்றும் பிக்ஷுவுக்கு இருத்தல்கூடாது; ஆனாலும் பிக்ஷாபாத்திரம், †மூன்றுவஸ்திரம், இடையிற் கட்டுங்கச்சை, கந்தைகளைத் தைத்தற்குவேண்டிய ஊசி, க்ஷௌரகத்தி, நீரவடிக்கட்டுகிறதுணி என்னும் ‡எட்டுமே இருக்கவேண்டும். இவற்றையன்றித் தனதென்று வேறொன்றையும் வைத்திருத்தல் கூடாது. அப்படி ஏதாவதொருபொருளை வைத்துக்கொண்டிருந்தால், அது நிருவாணமடைதற்குப் பெருந்தடையாகுமென்பது அவர்கள் கருத்து. பக்ஷிகள் தாம் பறந்துசெல்லுமிடங்களுக்குச் சிறைகளையன்றி

* "கொள்ளு மாறுந்தங் கோரகை யுட்கஞ்சி, மொள்ளு மாறு முதுகு நெளித்துண்டு" (நீலகேசித்திரட்டு, அருக்கசந்திரவாதச்சருக்கம், கூ - ம் பாட்டு:) எனவும், "வழிக்கு மாறுந்த மண்டையி னுண்டு" (நீலகேசித்திரட்டு, அருக்கசந்திரவாதச்சருக்கம், எ - ம் பாட்டு:) எனவும் வருவனவற்றால், பௌத்தபிக்ஷுக்களுடைய பிசசைப் பாத்திரம், கோரகையென்றும் மண்டையென்றும் கூறப்படுமென்றுணர்க

† மூன்றுவஸ்திரங்கள்—அந்தரவாஸகம், ஸங்காடி, உத்தராஸங்கமென்பன, "மருதின் வாழ்பகை யானவிம் மாந்தர்" (நீலகேசித்திரட்டு, குண்டலகேசிவாதச் சருக்கம், கூச - ம் பாட்டு:) எனவும், 'புடைவைகொண்டுகிழித்து மகததாட்டுச் சதிரவனைக் கண்ணுறுபோலத் துன்னஞ்செய்து மருதந்துவர்தோய்த்துக் கொட்டி இவ்வாறு பருக்லேசத்தாற்போக்கின்றது மோக்ஷார்த்தம்' (நீலகேசித்திரட்டு, மொக்கலவாதச்சருக்கம், கூ - ம் பாட்டுரை:) எனவும், "துவ்ராடைகண்மூடியசேடன்" (நீலகேசித்திரட்டு, புத்தவாதச்சருக்கம், உக - ம் பாட்டு:) எனவும், "நிலம்பொய் நீர்பொய் நெடுநகர் தாமும்பொய், கலமபொய் காற்றொடு தீயும்பொய் காடும்பொய், குலம்பொய் யேயெனக் கூறுஞ்செங்கூறையாய" (நீலகேசித்திரட்டு, புத்தவாதச்சருக்கம், எகூ - ம் பாட்டு:) எனவும் வருவனவற்றால், பௌத்தபிக்ஷுக்களின் ஆடைகளிலக்கணமும், அவை 'துவராடை' 'செங்கூறை' என்று கூறப்படுதலுமறிக.

‡ கிழிக்கத்தி, கத்திரிகை, சுண்ணம்புச்செப்பு, வெற்றிலைப்பெட்டி, பாக்குப்பை, பல்லுத்துடைக்கப் பாளைமுதலியனவும், தலைவழிக்கத்தி, தீட்டுகல், குடை, செருப்பு, மண்டை, கெண்டி முதலியனவும் பிக்ஷுக்கள் கைக்கொள்ளுதற்குரியனவென்பர், நீலகேசித்திரட்டுரையாசிரியர்; அருக்கசந்திரவாதச்சருக்கம் ௬

வேறொன்றையும் எப்படி உடன்கொண்டு செல்லுவதில்லையோ, அப்படியே பிக்ஷுக்கள் காஷாயத்தையன்றி வேறொன்றையுங் கொண்டுசெல்லலாகாதென்று பௌத்த நூல்கள் தெரிவிக்கின்றன. பணத்தை அவர்கள் தொடவுங்கூடாதென்பது விதி.

உபாஸகர்களில் யாராவது பிக்ஷுக்களுக்குப் பணங்கொடுக்க விரும்பினால் பணமாகக் கொடுக்காமல், அவர்களுக்கு உரிய வஸ்திரமுதலிய பொருள்களை வாங்கிக்கொடுத்தல்முகமாகவே சேர்ப்பிக்கக்கடவர். ஒரு பிக்ஷு பணம் வாங்கினானென்று தெரிந்தால், அவனைச் சங்கத்தார் விசாரித்துக் *குற்றத்தை ஒப்புக்கொள்ளுவித்து அவனைக்கொண்டு அந்தப் பணத்தை அருகிலுள்ள உபாஸகனுக்குக் கொடுத்துவிடச்செய்வதும், அங்ஙனம் பெற்றுக்கொள்ள அந்த உபாஸகன் உடன்படாவிட்டால், அவனைக்கொண்டாவது வேறு உபாஸகரைக்கொண்டாவது அதனை எடுத்தெறிந்துவிடச்செய்வதும், எந்த உபாஸகரும் எறிதற்கு உடன்படாவிட்டால் சங்கத்தார் ஒரு பிக்ஷுவை அதற்கென்று நியமித்து அவனைக்கொண்டு அந்தப்பணத்தை எடுத்தெறிந்துவிடச்செய்வதும், அந்தப்பிக்ஷு தான் பணத்தையெறிந்தவிடத்தைக் கருத்திலவைத்து வெளியிடலாகாதென்பதும் அவர்களுடைய நியமங்கள்.

வஸ்திரம்.—பௌத்த பிக்ஷுக்கள் எப்பொழுதும் வஸ்திரமில்லாமலிருக்கக்கூடாதென்றும், திகம்பரர்களாகவிருந்தால் அவர்களுக்கு விரதபங்கம் நேரிடுமென்றும் சொல்வார்கள். சாதாரணசனங்கள் உடம்பு முழுவதையும் வஸ்திரத்தால் மூடிக்கொள்ளாத தேசங்களிற்கூடப் பிக்ஷுக்கள் உடம்புமுழுவதையும் வஸ்திரத்தால் மூடிக்கொள்ளவேண்டுமென்பது நியமம். இந்தக்கொள்கை ஜைனர்களுடைய திகம்பரவாதத்துக்கு முழுவதும் எதிராகவுண்டாயிற்றென்று தோன்றுகிறது. ஒவ்வொரு பிக்ஷுவுக்கும் அந்தரவாஸகமென்றும், ஸங்காடியென்றும், உத்தராஸங்கமென்றும் மூன்று காஷாய வஸ்திரமிருக்கவேண்டும். அந்தரவாஸகம் - உள்ளாடை. ஸங்காடி - அரையிற்கட்டும் ஆடை. உத்தராஸங்கம் - மேற்போர்வை. இந்த மூன்றையுந் தோய்த்து உலர்த்தி உபயோகிந்துக்கொள்வதற்கு உபகாரமாக வேறு மூன்றுவஸ்திரங்களை இருக்கலாம். உள்ளவஸ்திரங்கள் மலினமாகவும் சிதிலமாகவும் போய்விட்டால் வேறுவஸ்திரம் பெற்றுக்கொள்வதற்குத் தாமாகவே முயலலாகாது. இல்லாமலிருப்பதைப் பார்த்து யாராவது தாமாகக் கொடுத்தால் பெற்றுக்கொள்ளலாம்.

* பிக்ஷுக்களுக்கு ஏதேனுங் குற்றமநேரிடுமாயின், அதற்குப்பரிகாரம் நந்தவனத்துக்கு நீரிறைக்கையென்று தெரிகிறது. இதனை, 'பிக்ஷுணிகளுக்குப்பிழைபுகுந்தாற் பிராயச்சித்தம் புத்தர்கோயில் முற்றத்துக்கு மணற்சுமக்கை, பிக்ஷுக்களுக்குப் பிராயச்சித்தம் நந்தவனத்துக்கு இறைக்கை' (நீலகேசித்திரட்டு, அருக்கசந்திரவாதச்சருக்கம், ௨௫ - ம் பாட்டுரை:) என்பதனாலுணர்க

**இருப்பிடம்:**—காட்டில் மரத்தினடியில் தனித்து வாசஞ்செய்வது இந்திரிய நிக்கிரகத்துக்குச் சிறந்தவழியென்பது பௌத்தர்கள்கருத்து; ஆனால், கௌதமபுத்தர் தாம் தருமோபதேசஞ்செய்யத் தொடங்கின நாள்முதல் கிராமங்களுக்கும் பட்டணங்களுக்கும் அருகில் வாசஞ்செய்துகொண்டுவந்தார்; அநேகபிக்ஷுக்கள் தனியே காட்டிற்குச்சென்று மரத்தினடியில் வாசஞ்செய்துகொண்டிருந்தார்கள்; சில பிக்ஷுக்கள் தமக்கு இருப்பிடமாகப் பிறரால் கட்டிக்கொடுக்கப்பட்ட விஹாரங்களில் கூட்டங்கூட்டமாக இருந்தார்களென்றும் தெரிகிறது. *விஹாரங்கள்.- ஊருக்கு அருகிலுள்ள பெரிய தோட்டங்களில் பிக்ஷுக்கள் தங்குவதற்காக உபாஸகர் கட்டியமைத்தவை. கௌதமபுத்தர்காலத்திலேயே சில விஹாரங்கள் அமைக்கப்பட்டிருந்தனவென்றும், அவர் காலத்துக்குப்பின் அங்கங்கே பற்பல விஹாரங்கள் அமைக்கப்பட்டனவென்றுஞ் சொல்லுவர். மலைக்குகைகளிலும், மலைகளில் சிறிதாகவும் பெரிதாகவும் சிற்பிகளாற் குடைந்தமைக்கப்பட்ட செயற்கைமுழைகளிலும் பிக்ஷுக்கள் தனித்தனியாகவாவது கூட்டங்கூட்டமாகவாவது தங்குவதுமுண்டு. அத்தன்மையனவாகிய குகைகள் பல நம்முடைய தேசத்தில் இப்பொழுதும் ஆங்காங்குக் காணப்படுகின்றன. இப்படிப்பட்ட விஹாரங்களிலாவது குகைகளிலாவது பிக்ஷுக்கள் வருஷமுழுவதும் வசிக்கிறவழக்கமில்லை. அவர்கள் சாதாரணமா் வருஷாகாலமொழிந்த மற்றைக்காலங்களில் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்குப்பெயர்ந்து சஞ்சரித்துக்கொண்டேயிருத்தல்வேண்டும். வருஷாகாலத்தில்மாத்திரம் ஓரிடத்திலேயேயிருத்தல்வேண்டும். வருஷாகாலத்தில் வெளியில மரத்தினடியில் வாசஞ்செய்யக்கூடாது; ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்குச்

பிக்ஷுக்களின் தினசரியை:—புதியபிக்ஷுவாய்க் குருவினிடத்தில் பணிவிடை செய்துகொண்டு வருபவன், சூரியோதயத்துக்கு முன்னமே எழுந்து ஸ்நாநஞ்செய்து, தானும் தன் ஆசிரியனும் இருக்கும் விஹாரத்தைச் சுத்திசெய்து †தாம் தொழும் அசுவத்தவிருக்ஷத்தின் அடியையும்

---

(நீலகேசித்திரட்டு, புத்தவாதச்சருக்கம், ௬௬ - ம் பாட்டுரை:) 'பள்ளியுட் சங்கத்தாரோடுகிடந்த உபாஸகன் நித்ராவசத்தாற் சங்கத்தார்மேற் காலேறட்டுவிழித்தால் அதற்குப் பச்சாத்தாபப்படுவது பாவமுண்டென்று அஞ்சியன்றோ', (௭௰-ம் பாட்டுரை:) 'ஒருபள்ளியுளிருந்த சங்கத்தார்பலருட் சிலரைத் தோஷவான்களென்றும ஸஹபோஜனஸஹவாஸங்களுக்கு யோக்கியரல்லரென்றுங்கழித்தால் ஒழிந்தாரெல்லாரும் யோக்கியரென்றவாறுபோலக் குற்றமென்று உன்னாற்கழிக்கப்பட்ட நான்கு சொலலுமொழித்து ஒழிந்தன புண்ணியகாரணமாம'என்பனவற்றால், சங்கத்தாருறைதற்குரிய விஹாரமென்பது தமிழிற் பள்ளியென்று சொல்லப்படுமென்றுதெரிகிறது.

† பௌத்தர்களால் அரசமரம் தொழப்படுதலை, (நீலகேசித்திரட்டு, மொக்கலவாதச்சருக்கம், ௬௨ - ம் பாட்டு:) "புத்தர்கட் பத்தியிற் போதி மரந்தொழின்" என்பதனாலும், 'அருள் அறிவு துறவில்லாத போதிமரத்தை நீதொழுதல என்னை? புத்த பத்தியால், அவனிருந்த போதிமரம்போலும் போதிமரந்தொழுகின்றனையாயின்,

சுத்திசெய்து ஒருநாள்முழுதும் தாம் பருகவேண்டிய நீரையெடுத்து வடிக்கட்டிவைத்தல் வேண்டும். பின்பு ஏகாந்தமாகவிருந்து புத்தகரு மத்தைத் தியானஞ்செய்யவேண்டும். பின்பு *தாதுகோபத்தையாவது போதிவிருக்ஷத்தையாவது மலரால்அருச்சித்துத்தொழுது ஒருபிக்ஷாபாத்திரத்தை யெடுத்துக்கொண்டு ஆசிரியனுடன் பிக்ஷையெடுக்கச் செல்லவேண்டும். பிசைையெடுத்துக்கொண்டுவந்தபின்பு ஆசிரியன் காலைக்கழுவிக்கொள்வதற்கு நீர்கொடுத்துப் பிக்ஷாபாத்திரத்தை அவன்முன்வைத்து அவனுந்தானுமுண்டபின்பு பிக்ஷாபாத்திரத்தைச் சுத்திசெய்யவேண்டும். மறுபடியும் புத்தரைத்தொழுது தியானஞ்செய்யவேண்டும். பின்பு பௌத்தசமயநூல்களைப் படிக்கிறதும் எழுதுகிறதும் தனக்குத் தெரியாதவற்றை ஆசிரியனிடம் கேட்டு அறிகிறதும் சாயங்காலம் வரையில் அவன்செய்யவேண்டிய தொழில்கள்; சாயங்காலமானவுடனே விஹாரத்தைத் தூத்துச் சுத்திசெய்து விளக்கேற்றி அன்று தான் பௌத்தநூல்களிலிருந்து நெட்டுருப்பண்ணிய பகுதிகளைக் குருமுன்பே ஒப்பித்து, தான் ஏதாவது குற்றஞ்செய்திருந்தால் அதை ஆசிரியனுக்கு அறிவித்து க்ஷமிக்கும்படி கேட்டுக்கொள்ளவேண்டும்; நிரம்பிய மனமுடையவனாய் இந்திரியங்களை வெல்லமுயன்றுகொண்டு திரிகரணங்களாலுஞ் சுத்தனாய்ச் சாந்தியுடன் வளர்ச்சியடைந்து வரவேண்டும். †ஸ்தவிரர்களான பிக்ஷுக்கள், இவ்வாறுசிஷ்யர்களால் உபசரிக்கப்பட்டு, தங்களுக்குள்ள காலத்தை, சீலாநுஷ்டானத்திலும் ஐந்துவிதமான பாவனைகளிலும் தியானத்திலும் சமாதியைப்பெறுவதிலும் செலுத்திக்கொண்டு வருவார்கள். ஆசையைவென்று பற்றையறுத்து முற்பிறப்புக்களிலும் இப்பிறப்பிலும் செய்துவந்த கருமங்களின் ஸம்ஸ்காரங்களையெல்லாம் நாசஞ்செய்துவிட்டு நிருவாணத்தைப்பெறுவதுதான், இவர்களுடைய முயற்சிகளுக்கெல்லாம் பயன். இவ்வாறு சீலபாவனாத்தியானஸமாதிகளால், முறையே ஸ்ரோதாபந்நரென்றும் ஸக்ருதாகாமியென்றும் அநாகாமியென்றும் அர்ஹத்தென்றும் படிப்படியாக உயர்ந்திருக்

அவனிரந்த மண்டைபோலுமண்டையையும் அவன்தொட்ட செருப்புப்போலுஞ் செருப்பினையும் அவன் குடைபோலுங்குடையினையுந்தொழுக" என்னும் அதனுரையாலுமுணர்க.

* தாதுகோபம் - (புத்தருடைய) தாதுக்களைப் பாதுகாத்தற்குக்கட்டிய கட்டடம்; தாது - என்புமுதலியன, (நீலகேசித்திரட்டு, அருக்கசந்திரவாதச்சருக்கம், ௨௦ - ம் பாட்டுரை.) 'புத்தனுடைய என்பாகிய தாதுஆழ்வார்' எனவும், (நீலகேசித்திரட்டு, மொக்கலவாதச்சருக்கம், ௮௨ - ம் பாட்டுரை:) 'நீதாதுவினைத்தொழுவது புத்ததாது வென்றன்றே' எனவும் வருவனவற்றால், புத்ததாது பூசிக்கப்பட்டுவந்ததை யறிந்துகொள்க.

† ஸ்தவிரர் - முதியபிக்ஷுக்கள்; இப்பெயர், (நீலகேசித்திரட்டு, அருக்கசந்திரவாதச்சருக்கம், ௧௪ - ம் பாட்டுரை:) 'சிங்கதத்தரென்பாரொருஸ்தவிரர் ஸங்கவாஸத்துப்போதியின்கணின்ற பிக்ஷுணியையதரயாசெய்யப்புக' என்பதில் வந்திருத்தல்காண்க.

குமவகை நான்கு உண்டு; அநிசேஷரென்கிற ஐந்தாம்வகையொன்றும் இருப்பதாகச் சொல்வார்கள்.

“சங்கத்திலுறைபவன் வேறுசெய்தியைப்பற்றியும் அற்பவிஷயங்களைப்பற்றியும் பேசமாட்டான். தன்னுடைய சமயநூலையே விவரித்து வெளியிட்டுவருவான்; அல்லது வேறொருவரை அவ்வாறு செய்யத்தூண்டுவான்; அல்லது தூய்மையான மௌனத்தை அதிககௌரவத்துடன் பாராட்டிவருவான்” என்று திரிபிடகத்தில் ஓரிடத்தில் சொல்லியிருக்

மாதத்தில் இருமுறை பருவகாலங்களில் சமீபித்த இடங்களிலுள்ள பிக்ஷுக்களெல்லாரும் ஒருங்குசேர்ந்து உபவஸதவிரதாநுஷ்டானஞ் செய்துவருவது வழக்கம். உபவஸதமாவது உபவாஸம் [பட்டினியிருத்தல்]. கூடியிருக்கிற பிக்ஷுக்களுள் ஒவ்வொருவருந் தங்களுடைய கடமைகளையும் ஆசாரத்தையும் முறைப்படி நடத்திக்கொண்டுவந்தார்களாவென்று விசாரித்தறிந்து கொள்ளுதலும், குற்றஞ்செய்தவர்களெல்லாம் தத்தமகுற்றத்தை அநுதாபத்துடன் வெளியிட்டுச் சங்கத்தாருடைய க்ஷமையைப் பெற்றுக்கொள்வதுமே உபவஸதாநுஷ்டானத்தின் முக்கியமான நோக்கம். ஓரெல்லைக்குட்பட்ட இடத்திலுள்ள பிக்ஷுக்களில் மூத்தவனுக்கு இந்த உபவஸத பிக்ஷு ஸங்கத்தைச் சேர்க்க அதிகாரமுண்டு. அச்சபைக்கு வரவேண்டிய பிக்ஷுக்களெல்லாரும், அந்த மூத்தவன் நியமித்தபடி சமீபத்திலுள்ள விஹாரத்திலாவது மலையிலுள்ள குகையிலாவது வந்துசேரவேண்டும். ஒருபிக்ஷுவாவது வாராமலிருத்தல் கூடாது. பைத்தியம்பிடித்திருந்தாலமட்டுமே வாராதிருக்கலாம். வரக்கூடாதபடி நோயை அநுபவித்துக்கொண்டிருப்பவர்கள், தாங்கள் விதியைக் கடந்து குற்றமொன்றுஞ் செய்யவில்லையென்று வேறொரு பிக்ஷுவைக்கொண்டு சங்கத்துக்குத் தெரிவிக்கக்கூடுமானால் வாராமல் நின்றுவிடலாம்; இப்படிச்செய்யமுடியாவிடில் நோயாளியைச் சபைக்குத் தூக்கிக்கொண்டு வரவேண்டும்; அதுவும் முடியாவிட்டால் சபையே அவனிருக்குமிடஞ் செல்லவேண்டும்; இவ்வாறு வரவேண்டியவர்களெல்லாருமவந்தாலொழிய அந்தச்சபையை நடத்த ஒருவருக்கும்அதிகாரமில்லை.

சூரியாஸ்தமயமான பின்பு தீபவெளிச்சத்தில் பிக்ஷுக்களெல்லாரும் உரிய இடங்களில் இருப்பார்கள். உபாஸகர்கள் ஒருவரும் அச்சபை கூடுங்காலத்தில் அங்கேயிருத்தலாகாது. பின்பு, சபையில், எல்லாருக்குங்கேட்கும்படி ஸ்தவிரன் பிராதிமோக்ஷவாக்கியத்தைச் சொல்லுவான். பிராதிமோக்ஷமென்பது குற்றங்களை அநுதாபத்துடன் ஒத்துக்கொண்டு அவைகளின் பந்தத்திலிருந்து விடுதிபெறுதல். “பூஜ்யர்களே! நான் சொல்வதைச் சங்கத்தார் அன்புடன் கேட்கவேண்டும்; இன்று, பக்ஷத்தின் பதினைந்தாவதாகிய உபவஸத தினமாயிருக்கிறது; சங்கத்

தா ஸித்தராயிருந்தால் உபவஸதானுஷ்டானஞ்செய்து பிராதிமோக்ஷத்தைக் கேட்கலாம். பூஜ்யர்களே! உங்களுடைய பரிசுத்தியைப்பற்றிச் சங்கத்தாருக்குத் தெரிவியுங்கள்; நீங்கள் குற்றஞ்செய்திருந்தால் அதை ஒப்புக்கொள்வதற்குவேண்டிய வாக்கியங்களை நான் சொல்லுகிறேன்; கேளுங்கள்" என்று ஸ்தவிரன் சொன்னவுடன், சபையிலுள்ள பிக்ஷுக்கள் யாவரும் "நாங்களெல்லாம் நீர் சொல்வதைக் கேட்டு அதற்கு ஏற்றவாறு நடந்துகொள்வோம்" என்று சொல்வார்கள்; பின்பு ஸ்தவிரன் பின்வருமாறு கூறுவான்:—"எவன் குற்றஞ்செய்திருந்தாலும் அதை அவன் ஒத்துக்கொள்ளவேண்டும்; குற்றஞ்செய்யாதவன் மௌனமாயிருக்கலாம். பூஜ்யர்களே! உங்களுடைய மௌனத்திலிருந்து நீங்கள் குற்றஞ்செய்யவில்லையென்று நான் அறிந்துகொள்வேன். தனியே ஒருவனை வினவினால் அவன் எப்படி விடைபகர்வானோ, அப்படியே, இச்சபையை நோக்கி மூன்றுமுறை நான் கேட்கும் கேள்விக்கு இங்குள்ள ஒவ்வொருவரும் தக்க வண்ணம் விடையளிக்க உரிமையுள்ளவர்களாய் விடுகின்றனர்." இப்படி ஸ்தவிரன் மூன்றுதரம் கேள்வி கேட்டபின் தான் செய்த குற்றம் தன்ஞாபகத்திலுள்ளபொழுது அதை வெளிப்படையாகச் சொல்லி ஒத்துக்கொள்ளாத பிக்ஷு அநிருதவாததோஷத்தை [பொய்சொன்ன குற்றத்தை] அடைவான். மனப்பூர்வமாகச் செய்யும் அநிருதவாதம் நாசத்தைத் தருமென்று ததாகதர் சொல்லியிருக்கிறார். ஆகையால், செய்த குற்றத்தை மறவாதிருந்து அதன் தோஷத்தினின்றும் நீங்குதலைத் தேடும் ஒவ்வொரு பிக்ஷுவும் தன் குற்றத்தை வெளிப்படையாகச் சொல்லி ஒத்துக்கொள்ளவேண்டும். இவ்வாறு வெளிப்படையாகச் சொல்லி ஒத்துக்கொண்ட தோஷத்தின்பாரம் மிகவுங் குறைந்துவிடும். பிரமசரிய விரதபங்கம், அஸ்தேய விரதபங்கம், அஹிம்ஸா விரதபங்கம், இருத்திசக்தியைப் பாராட்டாமையாகிய விரதத்தினின்று வழுவுதல் ஆகிய இவற்றைப்பற்றியும் வேறுள்ள விரதபங்கங்களைப்பற்றியும் ஸ்தவிரன் மூன்றுமுறை கேட்டபின்பு, சபையில் எல்லோரும் மௌனமாயிருந்தால், அப்பொழுது அவன், "பூஜ்யர்களெல்லோரும் தோஷமில்லாமல் சுத்தராயிருக்கிறார்கள்; ஆகையாலேதான் அவர்கள் மௌனமாயிருக்கிறார்களென்று நினைக்கிறேன்" என்று சொல்லிப் பின்பு அந்த ஸ்தவிரன் சபையோரை நோக்கி, "நீங்கள் என்னிடத்தில் ஏதாவது ஒரு குற்றத்தைக் கண்டாவது கேட்டாவது அறிந்திருந்தாலும் என்னைப்பற்றி ஏதாவது உங்களுக்குச் சந்தேகமிருந்தாலும் அவற்றைத் தயைசெய்து வெளிப்படையாக எனக்குத் தெரிவிக்கவேண்டும். நான் என் குற்றங்களையறிந்துகொண்டு அவைகளுக்குரிய பரிகாரத்தைத் தேடுகிறேன்" என்று சொல்லிச் சபையாருடைய அநுமதியைப் பெற்றுக்கொண்டு சபையை முடித்துவிடுவான். உபவஸதினத்தில் சாயங்காலத்துக்குமுன்பு பிக்ஷுக்கள் சேர்ந்திருக்குமிடத்திற்கு

உபாஸகர்களும் பிக்ஷுணிகளுமாகிய எல்லோருமவந்து திரிபிடகத்திலொருபாகமாகிய விநயபிடகத்தைப் பிக்ஷுக்கள் படிக்கப் பக்தியுடன கேட்பது வழக்கம். உபவஸததினங்கள் ஆதிகாலத்தில் மாதத்துக்கு இரண்டாயிருந்தன. பின்பு அஷ்டமீதிதிகளையுஞ் சேர்த்து நான்காக்கினர்கள். இந்த உபவஸதாநுஷ்டாநமும வருஷாகால நியமமும் ஆகிய இவ்விரண்டுமே பிக்ஷுக்களெல்லோரும் ஒன்றாயிருநது செய்யவேண்டியவை. முன்பு கூறிய சீலம் தியானம் பாவனை முதலாகிய, தமமை நலவழிப்படுத்துதற்கு வேண்டியமுயற்சிகளை ஒவ்வொருவரும் தத்தம ஆற்றலுக்கு ஏற்றபடி நடத்திக்கொண்டு வரவேண்டும். புததாபிறநத கபிலவாஸ்துவுக்கும் அவருக்கு ஞானோதயமான புத்தகயைக்கும் அவா தருமசக்கரப் பிரவர்த்தநஞ் செய்யத்தொடங்கிய இடமான காசிக்கும அவர் பரிநிர்வாணத்தை யடைநத இடமான குசிநகரததுககும பௌத்த பிக்ஷுக்களும பிக்ஷுணிகளும உபாஸகர்களும உபாஸிகைகளும ஆகிய எல்லோரும யாத்திரையாகச செலலுகிற வழக்கமுண்டு. ஸ்தூபங்கள, தாதுகோபங்கள், *சைத்தியாலயங்கள முதலியவற்றில் வழிபடுதலும நித்தியநைமித்திகங்களை நடத்துதலும உபாஸகாகளுககுரியவழியென று புத்தா தமமுடைய பரிநிர்வாணத்துககு முன்பு ஆநநதனெனகிற சிஷ்யனுக்குச சொன்னாரென்று தெரியவருகிறது.

பெண்பாலார்க்கு ஸந்யாஸயோக்கியதை உண்டென்பதும அவர்களுக்கு ஸநயாஸத்தைக கொடுப்பதும பௌத்தசமயததிலேதான் விசேஷமாகவுள்ளனவென்று சொல்லுவதறகிடமுண்டு. இநததேசத்திலுள்ள பிறமதங்களில பெண்பாலாரும வைராககியத்தைப் பாராட்டலாம; அதனால அவர்களுக்கு மேன்மையுண்டென்கிற அபிப்பிராயம இருபபதாகத்தெரியவருகிறது. ஒருவிதமான நியமத்துக்கும உட்படாமல தமமுடைய அந்தக்கரணத்தையே தமக்கு அதிகாரியாக வைத்துககொண்டு ஆசையொன்றுமில்லாமல் தோஷங்களையெல்லாம விட்டுச சாந்திபெற்று ஸர்வஸ்வதந்திரமான நிலையாகிய ஸந்யாஸவழியில இருபபதறகு இயற்கையானதகுதி பெண்பாலார்க்கு இல்லையென்றும, அநத ஸநயாஸநிலைமைக்குரிய ஸ்வாதநதிரியத்தைக் குற்றமில்லாமற் பாதுகாத்துவருதறகு அவர்களால் இயலாதென்றும, இததேயத்தில தொன்றுதொட்டுப பெரியோர்கள் அபிப்பிராயங் கொண்டிருநதார்கள். அப்படியிருநதும.புத்தா

* சைத்தியாலயங்கள்—புத்தப்படிமையுள்ள கோயில்கள்; இதனை, "சைததியங்காணிற் றலையினை முட்டும், பைத்தியங் கொண்டவர்" (நீலகேசித்திரட்டு, அருக்கசந்திரவாதச்சருக்கம், ௨௯ - ம் பாட்டு:) என்பதனாலும், 'புததப்பிரதிமையது ஆலயந்தொழுப' என்னும் அதனுரையாலும், புத்தப்படிமைபூசிக்கப்படுதலை, "ஏததினரோத்தக வென்றிறை போல்வன, பாத்தில பைம்பொற் படிமைசெய் தாலவை, யேத்துநர் பெய்தவ ரெய்துவர்" (மொக்கலவாதச்சருக்கம், ௯௫) என்னுஞ்செய்யுளாலும், 'புத்தப்ரதிமைசெய்தார்க்கும் அதுகண்டு உபேக்ஷியாது ஸத்கரிததுப் பூசனை செய்தொழுதார்க்கும் புண்ணியமுண்டு' என்னும் அதனுரையாலுமுணர்க.

தமது செவிலித்தாயின் சொல்லைமறுத்தற்கு மனமில்லாதவராய்ப் பெண்பாலார்க்கும் ஸந்யாஸாதிகாரத்தைக்கொடுத்தார். ஸந்யாஸிநிகளின் ஸமுதாயத்துக்குப் பிக்ஷுணீஸங்கமென்றும், ஸந்யாஸிகளின் சமுதாயத்துக்குப் பிக்ஷுஸங்கமென்றும், இவ்விரண்டன் ஸமுதாயத்துக்கு உபயதாஸங்கமென்றும் பெயர்.

புத்தர் பிக்ஷுணிகளுக்கு நியமித்த கட்டளைகளெட்டுண்டு:—

க.—பிக்ஷுணியானவள், தான் நூறுவருஷத்துக்குமுன் ஸந்யாஸம் பெற்றவளாக விருந்தாலும், அன்று ஸந்யாஸம் பெற்றுக்கொண்ட பிக்ஷுவைக்கண்டால் கௌரவித்து அவனைவணங்கி எழுந்து நின்று கொண்டு கைகூப்பித் தொழுது பாராட்டவேண்டும். இந்தநியமத்தை ஒவ்வொருவருபிக்ஷுணியும் பரிசுத்தமானதாகவெண்ணிக் காப்பாற்றிக் கௌரவித்து வாழ்நாளிலே எப்பொழுதும் கடவாமற்கைக்கொண்டொழுகவேண்டும்.

உ.—பிக்ஷுணியானவள் பிக்ஷுக்களொருவருமில்லாத விடத்தில் மழைக்காலத்தைக் கழிக்கக்கூடாது. இந்தநியமத்...........வேண்டும்.

ங.—பிக்ஷுணிகள் பக்ஷத்திற்கொருமுறை பிராதிமோக்ஷாநுஷ்டாநமும், தருமோபதேசம்பெறுதலும் ஆகிய இரண்டுகாரியத்துக்காகப் பிக்ஷுக்களினிடம் செல்லவேண்டும். இந்தநியமத்...........வேண்டும்.

ச.—வருஷாகாலம் முடிந்தவுடனே, பிக்ஷுணிகள், ஸங்கத்தின் *உபயபாகத்தாரையும் அழைத்து, தம்மிடத்தில் யாரேனு மேதாவதும் குற்றத்தைக் கண்டிருந்தாலும் கேட்டிருந்தாலும் தம்மிடத்தில் யாருக்காவது ஏதாவதொருவிதமான ஸந்தேகமிருந்தாலும் அவற்றையெல்லாம் தெரிவிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளவேண்டும். இந்தநியமத்...........வேண்டும்.

ரு.—பெருங்குற்றம் ஏதாவது செய்திருக்கிற பிக்ஷுணி பக்ஷத்துக்கு ஒருமுறை ஸங்கத்தின் உபயபாகத்தாருடையமுன்னிலையில் அவர்கள்விதித்த பிராயச்சித்தத்துக்கு உட்படவேண்டும். இந்தநியமத்............வேண்டும்.

சு.—பெண்பாலார் இரண்டுவருஷகாலம் பஞ்சசீலம், அகாலபோஜநத்தியாகம் ஆகிய ஆறு தருமங்களையுங் கைக்கொண்டொழுகியபின்பு தான் தமக்கு ஸந்யாஸத்தைத் தரும்படி ஸங்கத்தின் உபயபாகத்தாரையும் வேண்டிக்கொள்ளலாம். இந்தநியமத்.........வேண்டும்.

எ—எப்பொழுதும் எவ்விதமான நிலைமையிலும் பிக்ஷுணியானவள் பிக்ஷுவை வைதலும் கடுமொழிகூறலும் ஆகா. இந்தநியமத்............வேண்டும்.

* உபயபாகங்களாவன:—ப்ரவ்ரஜ்யை, உபஸம்பதையென்பன.

அ.—(ஸந்யாஸம்பெற்றுக்கொண்ட) அன்றுமுதல் பிக்ஷுக்பிட
க்கு விரோதமாகப் பிக்ஷுணிகள் யாதொன்றும் பேசலாகாது. பிரத்தி
ணிகளுக்கு எதிராகப் பிக்ஷுக்களின்சொற்கள் அவ்வாறு தடுதத்
படா. இந்நியமத்...........வேண்டும்.

இந்த எட்டுநியமங்களையும் ஆராய்ந்துபார்த்தால், பௌத்தம
ஸந்யாஸத்தால் பெண்பாலார்க்கு ஸ்வாதந்திரியம் அதிகமாகக்கிடை
தென்று நினைக்க இடமில்லை. பிக்ஷுணிகளுக்கு உபவஸதாநுஷ்ட
இன்றியமையாதது; பிக்ஷுணிகளுக்கு உபதேசம் பண்ணவேண்டுக்
பிக்ஷுக்களின் கடமை. சாதாரணமாகப் பிக்ஷுக்களும் பிக்ஷு
ளும் தனித்தனியே யிருக்கவேண்டுமென்ற நிர்பந்தம் உண்டு. பிக்ஷு
ணிகளின் இருப்பிடத்துக்கு, அவர்களுக்குத் தருமோபதேசஞ்செய்
குரிய பிக்ஷுவுங்கூட, எந்தப்பிக்ஷுணிக்( கனும் தேக அசௌக்கி
யிருந்தாலொழியப் போகலாகாது. பிக்ஷுணிகளோடுகூட வழிக்கொள்
ளுதலும் ஓரிடத்திற்குச் செல்லுதலும் ஒருவருமில்லாமலிருக்கும்பொ
ழுது அவர்களோடு ஏகாந்தமாகவிருத்தலும் பிக்ஷுக்களுக்குத் தகா
தனவாம். பிக்ஷுக்களின் தினசரியைக்கும் பிக்ஷுணிகளின் தினசரியைக்
கும் மிக்கவேறுபாடில்லை. எந்தக்காலத்திலும் பிக்ஷுக்களைக்காட்டி
லும் பிக்ஷுணிகள் கணக்கிற் குறைவாகவிருந்தார்களென்று தெரிகிறது.

புத்தருடைய காலத்துக்குப் பின்பு பௌத்தமதத்துக்கு மூலாதாரம் ஸங்கந்தான். இப்பொழுதும், பௌத்தமதம் விளங்கிவருந் தேசங்களில் பிக்ஷுக்களே அந்தமதத்தைப் பாதுகாத்து எல்லோர்க்கும் தருமங்களை உபதேசித்துப் பரவச்செய்து வருகிறார்கள். உபாஸகர்களுக்கும் உபாஸிகைகளுக்கும் சாதாரணமாக எல்லா மதத்தாரும் மதித்துக் கைக்கொண்டிருக்கிற பஞ்சசீலாநுஷ்டாநம் அல்லது அஷ்டசீலாநுஷ்டாநத்தை யன்றி இவர்கள் பௌத்தர்களென்று எடுத்துக்காட்டக்கூடிய விசேஷநியமம் ஒன்றும் எப்பொழுதுமேயில்லை. இதனாலேதான், பௌத்தசமயம் அதிகமாகச் சங்கத்தைப் பின்பற்றி வளரவேண்டியதாயிற்று. ஒருதேசத்தில் பௌத்தசங்கத்தைச் சேர்ந்த பிக்ஷுக்களும் பிக்ஷுணிகளும் வேறுமதத்தை யடைநதால், அத்தேசத்தாரெல்லாரும் பௌத்தமதத்தை விட்டுவிடும்படிநேரும்.

இதனாலே, பௌத்தர்களுடைய திரிமணியாகிய புத்ததருமசங்கங்களில் சங்கத்துக்கு உள்ள பெருமையையும் முதன்மையையும் அறிந்துகொள்க.

---

# மணிமேகலைக்கதைச்சுருக்கம்.

## க.—விழாவறைகாதை.

பண்டைக்காலத்திற் காவிரிப்பூம்பட்டினத்தை வளப்படுத்த நினைந்த அகத்தியமுனிவருடைய கட்டளையின்படி, தூங்கெயிலெறிந்த தொடித்தோட்செம்பியனென்னுஞ்சோழன், இந்திரனைவணங்கிக் குறையிரந்து அவனனுமதிபெற்று இருபத்தெட்டுநாள் அந்நகரில் நடத்தியதும், அச்சோழன்காலத்திற்போலவே பிற்காலங்களில் அவன்பரம்பரையோராலும் வருடங்கள்தோறும் நடத்தப்பட்டுவந்ததுமாகிய இந்திரவிழாவை நடத்தக்கருதிய அந்நகரத்துள்ள பலசமயவாதிகளும் பிறரும் ஒருங்குகூடி, "இந்திரவிழாவை நாம் மறந்தால் முசுகுந்தனது துயரைப் போக்கியதான நாளங்காடிப்பூதம் துன்பஞ்செய்யும்; பாவிகளைப் புடைத்துண்பதாகிய சதுக்கப்பூதம் இந்நகரை விட்டுநீங்கும்; ஆதலால், இவ்விழாவை நடத்துவேமாக" என்று தம்முள் நிச்சயித்துக்கொண்டு, அவ்விழா நடக்கப்போதலை நகரத்தாருக்கு அறிவிக்கும்படி முரசறைவோனுக்குச்சொல்ல, அவன், *வச்சிரக்கோட்டத்துள்ளமுரசை யானையின் பிடரிலேற்றி, முதலில் ஊரைவாழ்த்தி, "மேகம் மாதந்தோறும் மும்மழைபொழிக; அரசன் செங்கோலினனுருக. அறிஞர்களே, இந்திரவிழா நடக்குங்காலத்திற் சுவர்க்கலோகம் வறிதாகும்படி எல்லாத்தேவரும் அதனைநீங்கி இங்கே எழுந்தருளுவாரென்பது பெரியோர்களுடைய துணிபாதலால், வீதிமுதலியவற்றிற் பூரணகும்பங்களும்பொற்பாலிகைகளும் பாவைவிளக்குக்களும் ஆகிய இவற்றைப் பரப்புமின்; குலைக்கமுகும் குலைவாழையும் கரும்பும் வஞ்சிக்கொடியும் பூங்கொடியும் ஆகிய இவற்றைக் கட்டவேண்டிய இடங்களிற் கட்டுமின்; தூணங்களில் முத்துமாலைகளை நாற்றுமின்; வீதிகளிலும் மன்றங்களிலும் பழமணலைமாற்றிப் புதுமணலைப் பரப்புமின்; துகிற்கொடிவகைகளை மாடங்களிலும் வாயில்களிலும் கட்டுமின்; சிவபெருமான்முதல் சதுக்கப்பூதமிறுதியாகிய தெய்வங்களுறையுங் கோயில்களிற் செய்யவேண்டிய காரியங்களை ஏற்பச்செய்யுமின்; தருமோபதேசஞ்செய்ய அறிந்தவர்களே, பந்தரிலும் அம்பலங்களிலுஞ்சென்று பிரசங்கம்புரிமின்; சமயவாதிகளே, வித்தியாமண்டபத்தையடைந்து இருத்தற்குரிய இடத்திலிருந்து வாதம்புரிமின்; யாரிடத்தும் பகைமையும் கோபமும் கொள்ளன்மின்" என்று கூறி முரசறைந்து இந்திரவிழாவைத் தெரிவித்தான்.

---

* வச்சிரக்கோட்டம் - வச்சிராயுதநிற்குங்கோயில்.

## உ.—ஊரலருரைத்தகாதை.

காவிரிப்பூம்பட்டினத்தில் இந்திரவிழா நடைபெற்றது; அவ்விழாக் காலத்திற் பண்டைவழக்கப்படியே ஆடுதற்பொருட்டு மணிமேகலையும் *மாதவியும் வாராமையால் மனம்புழுங்கிய †சித்திராபதி, ‡வயந்தமாலையையழைத்து, "நீ மாதவிபாற்சென்று விழாவிற்கு வாராதிருத்தல பற்றி இவ்வூரார்கூறும் பழிமொழியை அவளுக்குச்சொல்லிவா" என்று அனுப்ப, வயந்தமாலைசென்று மணிமேகலையோடு மாதவியிருந்த மலர் மண்டபத்தையடைந்து, அங்கே தவத்தால்வாடிய மாதவியினுடம்பைக் கண்டு வருத்தமுற்று அவளைநோக்கி, "நீ உன்மகளுடன் இந்திரவிழாவிற்குவாராமலும், உன்மரபிற்கு ஒவ்வாத தவவொழுக்கம்பூண்டிருத்தல்பற்றி ஊரார்கூறும் பழிமொழிகள் இன்னவை" என்றுகூற, மாதவி, "கணவன் கொலையுண்டதற்குப்பொருளாய் மிகசினந்து மதுரையையெரித்த பத்தினிக்கடவுளாகிய கண்ணகியினுடைய மகள் மணிமேகலை, தவ்வழியிற்செல்லுதற்கு உரியளேயன்றி, மிகவுமிழிந்த பரத்தைமைத தொழிலுக்கு உரியளல்லளாதலின், அவள் அங்கேவாராள்; நான் இங்கேவந்து பௌத்தாசாரியராகிய அறவணவடிகளைவணங்கி, என்காதலன் மதுரையிற் கொலையுண்டதுமுதலிய பெருந்துன்பத்தை வருந்திச்சொல்லி முறையிட்டேன்; முறையிட்டஎனக்கு அவர்,

> §"பிறந்தோ ருறுவது பெருகிய துன்பம்
> பிறவா ருறுவது பெரும்பே ரின்பம்
> பற்றின் வருவது முன்னது பின்ன
> தற்றோ ருறுவ தறிக" என்றருளி, (௬௪ - ௬௭)

‖பஞ்சசீலத்தையும் உபதேசித்து, "இவற்றைக்கடைப்பிடி" என்றும அருள்புரிந்து, என்னைத் தவவழியிற்புகுத்தினராகலின், நானும் அங்கே வருதற்கு உரியேனல்லேன்; இச்செய்தியை என்தோழிமார்களுக்கும என்னற்றாய் சித்திராபதிக்குஞ்சொல்" என்றுகூற, அதுகேட்ட வயந்தமாலை, பெறுதற்கரியமாணிக்கத்தைக் கடலில்வீழ்த்தியவர்போலச் செயலற்றுமீண்டு சித்திராபதியிடஞ்சென்றாள்.

---

* மாதவி - மணிமேகலையின்தாய்.

† சித்திராபதி - மாதவியின்தாய்.

‡ வயந்தமாலை - மாதவியின்தோழி.

§ இதில் நால்வகைவாய்மைகளும் கூறப்பட்டுள்ளன; அவை துக்கம், துக்கநிவாரணம், துக்கோற்பத்தி, துக்கநிவாரணமார்க்கமென்பன; இம்முறையாலன்றி வேறு முறையாற்சொல்லுவதுமுண்டு.

‖ பஞ்சசீலங்களாவன:—கொல்லாமை, கள்ளுண்ணாமை, பொய்யாமை, காமமின்மை, கள்ளாமையென்பன.

## ௩.—மலர்வனம்புக்ககாதை

இங்கே மாதவி வயந்தமாலைக்குச்சொல்லிய வருத்தச்சொல்லைக் கேட்ட மணிமேகலைக்கு அக்கேள்விவழியாகப் பற்றறுதற்குரிய நற்காலம் (ஏதுநிகழ்ச்சி) வந்துற்றமையால், அவள், தன்னுடைய தாய்தந்தைகளான கண்ணகிக்கும் கோவலனுக்கும் மதுரையில்நேர்ந்த துயரச்செய்தி தன்காதுகளைசசுட மனங்கலங்கி அழுது சிந்துகின்றகண்ணீரால் தான் தொடுக்கின்றமாலையை நனைத்துக்கொண்டிருப்ப, மாதவி, அதனைக்கண்டு கண்ணீரைத்துடைத்து அவளுடையதுக்கத்தை ஒருவகையாக மாற்ற நினைந்து, "இம்மாலை உன்கண்ணீர்க்கலப்பால் தூய்மையொழிந்ததாதலின், வேறுமாலைதொடுத்தற்கு நீ சோலைசென்று புதுமலர்பறித்துவா" என்றாள்.

அதனைக்கேட்ட சுதமதி, மாதவியைநோக்கி, "தாய்தந்தையர்க்குச சம்பவித்த பெருந்துன்பத்தைக்கேட்டு மிக்க துக்கத்தையடைந்த மணிமேகலையின் கண்ணீரைக்காணிற் காமன் தனது படைக்கலங்களை எறிந்துவிட்டு நடுங்குவான்; இப்பாவையை ஆடவர் புறத்தே காண்பாராயின், விட்டுநீங்குவாரோ? நீங்கார்; இயற்கைத்தன்மைகுன்றுவர்; குன்றாமல் நிற்பாராயின், அவர்கள் பேடியரன்றோ? அத்தன்மையளாதலால், இவளை இப்பொழுது வெளியில் பூப்பறித்தற்குத் தனியே அனுப்பலாகாது; இந்நகரத்தில் நான்வந்ததற்குரிய காரணங்கூறுவேன்; கேட்பாயாக: சண்பைநகரத்துள்ளானை கௌசிகனென்னும் அந்தணனுடையமகளாகிய யான், தனியேசெல்லுதற்கு அஞ்சாமல் ஆராய்ச்சியின்றி ஒரு சோலையிற்சென்று பூப்பறித்தேன்; அப்பொழுது இந்திரவிழாவைக்காண்டற்கு இந்நகரைநோக்கி ஆகாயவழியேவரும் மாருதவேகனென்னும் வித்தியாதரனொருவன் என்னைக்கண்டு எடுத்துக்கொண்டு மேலேசென்று, தன்வயமாக்கிச சிலநாள்கழித்தபின் இந்நகரத்தே என்னைவிட்டுவிட்டு நீங்கித் தன்னகரம்போயினன்; மகளிர் தனியேசெல்லுதலாலுண்டாகுந்தீங்கு இத்தன்மையது; ஆதலால், மணிமேகலை தனியே போய்ச்சோலையிற் பூப்பறிக்குந்தன்மையையுடையாளல்லள்; இவளுடன் யாரேனுஞ்செல்லவேண்டும்; *இலவந்திகைச்சோலைக்குச்சென்றால் அரசனுடைய பக்கத்திலுள்ளார் அங்கிருப்பர்; †உய்யானத்திற்குச் செல்லலாமோவெனின், அதில் தேவர்களாலன்றி மனிதர்களால் விரும்பப்படாதனவும் வண்டுகள் மொய்க்கப்பெறாதனவுமான மலர்களையுடைய மரங்களெல்லாம் வாடாத பூமாலைகளைத்தூக்குதலால், "இவ்வனம் பாசக்கையை

* இலவந்திகைச்சோலை - யந்திரவாவியையுடைய வயந்தச்சோலை.

† உய்யானம் - அரசர் விளையாடுங்காவற்சோலை.

யுடைய பூதங்களாற் காக்கப்படும்" என்று நினைந்து அவ்வனத்தை அறிவுடையோர் அடையார்; சூரியகிரணத்தாற் சிறையிழந்த சம்பாதியிருந்த சம்பாதிவனமும், காவிரியின் தந்தையாகிய கவேரனிருந்த கவேரவனமும் மிக்கமுதுமையையுடையனவும் தீண்டிவருத்துவனவுமாகிய தெய்வங்களாற் காக்கப்படுதலின், அவற்றினிடத்தும் அறிவுடையோர் செல்லார்;

> அருளு மன்பு மாருயி ரோம்பு
> மொருபெரும் பூட்கையு மொழியா நோன்பிற்
> பகர — [illegible] ன்மரம் பூக்கும் (௫௧ - ௬௧).

உவவனமென்று ஒரு வனமுண்டு; அவ்வனத்தில் தன்னகத்துள்ளோருடைய ஓசையை வெளிப்படுத்தாமல் அவர்களுருவங்களைமட்டும் வெளிப்படுத்துவதாகிய *பளிக்குமண்டபம் ஒன்றுண்டு; அம்மண்டபத்தினுள்ளே மாணிக்கச்சோதிபரந்த †பதுமபீடம் ஒன்றுண்டு; அப்பீடத்திலிட்டால் அரும்புகள் மலரும்; வருடஞ்சென்றாலும் அதில் இட்ட மலர்கள் வாடா; அம்மலர்களில் வண்டுகள் மொய்யா; இதுகாறும அதன் பெருமையை உனக்குச்சொல்ல மறந்தேன்; கேட்பாயாக: ஒரு தெய்வத்தை நினைந்தோர் அத்தெய்வத்தின் அடிகளைத்தியானித்து மலர்களை அப்பீடத்திற்சேர்த்தால் அம்மலர்கள் அப்பீடத்தை நீங்கி அத தெய்வத்தின் அடிகளிடத்தே செல்லாநிற்கும்; யாதொரு நினைப்புமின்றி அவற்றை அப்பீடத்தே சேர்ப்பின், அவைகள் அதனைவிட்டு நீங்கா; இதற்குக்காரணம் யாதென்று வினவுவாயாயின், சொல்லுவேன்: "மனத்தோடு கூடாதவிடத்தும் கருமங்கள் பலிக்கும" என்னும் விரதிகள் துன்பமடையவும், "மனத்தோடு கூடாதவழிக் கருமங்கள் பலியா" என்போர்க்குத் திருஷ்டாந்தமாகவும் மலரை இட்டுக் காட்டுதற்கு ‡மயனென்னும் தெய்வத்தச்சனால் அப்பீடம் நிருமிக்கப்பட்டதாகும்; அவ்வனத்திலன்றி உன்மகள் வேறுவனங்களிற் செல்லுதற்கு உரியளல்லள். அவளோடு பூப்பறித்தற்கு நானும் துணையாகச செல்வேன்" என்று சொல்லிவிட்டு மணிமேகலையோடு சேர்ந்து சுதமதி போகும்பொழுது, உண்ணா நோன்பியொருவனைத் தொடர்ந்து நின்று கள்ளையுண்ணும்படி வற்புறுத்திக்கூறும் களிமகன்பின்னே நிற்கும் சனங்களும், ஒரு பித்தனுடைய விகாரசெயலைக்கண்டு வருந்தி நிற்கும் சனங்களும், பேடெண்ணுங் கூத்தைக்கண்டுநிற்கும் சனங்களும், தெருவின் இருபுறத்துமுள்ள

---

* இங்கே பளிக்குமண்டபத்தினுடைய தன்மையைச் சொல்லியிருக்குமழகு மிகப் பாராட்டற்பாலது.

† பதுமபீடமென்றது புத்தருடைய பாதபீடிகையை; இப்படியே 'பங்கயப் பீடிகை' என்பர் பின்னும்; ௨௮ - ம் காதை, ௨௧௧.

‡ மயனை அசுரத்தச்சனைக் கூறுவதுமுண்டு.

மாளிகைகளில் எழுதப்பட்டுள்ள சித்திரங்களைக்கண்டு வியந்துநிற்கும் சனங்களும், சிறுதேரின்மீது செய்து வைக்கப்பட்டுள்ள யானையின்மேற் சிறுவர்களையேற்றி மகளிர் பாராட்டுதலைக் கண்டுநிற்கும் சனங்களும் ஆகிய எல்லோரும், முன்னம் விராடநகரத்திற் பேடிவடிவங்கொண்டு சென்ற அருச்சுனனைக்கண்டு வியந்து சூழ்ந்துகொண்டவர்களைப்போல மணிமேகலையைச் சூழ்ந்துகொண்டு, "மிக்க அழகையுடைய இவளைத் தவவழியிற்புகுத்திய தாய் மிகக்கொடியவள்; இவள் பூப்பறித்தற்குச் சோலையிற் புகுவாளாயின், ஆங்குள்ள அன்னப்பறவைகள் முதலியன இவள் நடைமுதலியவற்றைக்கண்டு என்னபாடுபடா" என்று இவை போல்வனவற்றைச் சொல்லி அவளுடைய அழகைப் பாராட்டிக்கொண்டு மிகவும் வருந்தி நின்றனர்; மணிமேகலை, சுதமதியோடு மெல்லச் சென்று உவவனத்தில் மலர்கொய்தற்குப் புகுந்தாள்.

## ரு.—பளிக்கறைபுக்ககாதை.

புகுந்தவள், அச்சோலையின்வளங்களையும் ஆங்குள்ள பொய்கையினழகையும் சுதமதிகாட்டக் காண்பாளாயினள்.

அவள் அங்கே அப்படியிருக்க, மதவெறிகொண்டு தெருத்தோறும் சனங்களை வருத்தித் திரிந்ததான காலவேகமென்னும் யானையின் மதத்தையடக்கித் தேரேறிச் சேனையுடன்வரும் உதயகுமரன், நாடகக்கணிகையர் வீதியில் ஒரு மாடத்தே மலரணைமேற் காதற்பரத்தையொருத்தியோடு, யாழின்கோட்டைத்தழுவிக்கொண்டு மயங்கிப் பாவைபோலிருந்த எட்டிகுமரனைத் தெருப்பக்கத்துள்ள சாளரவழியாற் கண்டு, "நீ அடைந்த துன்பம் யாது" என்றான். உடனே அவன் துணுக்கென்றெழுந்து விரைந்து அருகேசென்று உதயகுமரனைவணங்கித் துதித்து, "இயற்கையழகுகெட்டு மலர்வனத்திற்கு இவ்வீதிவழியே நடந்துசெல்லும் மணிமேகலையைக் கண்டேன்; கண்டவுடன் அவளது தந்தையாகிய கோவலன் மதுரையிலடைந்த கொடுந்துன்பம் நினைவிற்கு வந்து என்மனத்திண்மையைமாற்றி இந்த யாழிலுள்ள பகைநரம்பில் என்கையைச்செலுத்தியது; இதுவே நான் அடைந்தவருத்தம்" என்று சொல்ல, பலநாளாக மணிமேகலையை விரும்பிக்கொண்டேயிருந்த உதயகுமரன், அவன்சொல்லால், அவள் சோலைசென்றுளென்பது தெரிந்து மகிழ்ந்து, "அங்கேபோய் மணிமேகலையை என் தேரிலேற்றிக்கொண்டு வருவேன்" என்று அவனுக்குச் சொல்லிவிட்டுத் தேரைச் செலுத்திக்கொண்டு சென்று உவவனத்தின் மதில்வாயிலையடைந்தான்.

மணிமேகலை அத்தேரொலியைக்கேட்டுச் சுதமதியை நோக்கி, "உதயகுமரன் என்மேல் மிக்கவிருப்பமுடையவனென்று மாதவிக்கு

வயந்தமாலை சொல்லியதை முன்னங்கேட்டுளேன்; இஃது அவனுடைய தேரொலிபோலும்; இத்துன்பத்திற்கு யாதுசெய்வேன்" என்றாள்; அதைக்கேட்ட சுதமதி, அவளை ஆங்குள்ள *பளிக்கறையிற் புகுத்தித் தாழக்கோலிட்டுக்கொண்டு உள்ளேயிருக்கச்செய்துவிட்டு, தான் அப்பளிக்கறைக்கு ஐந்துவிற்கிடைத்தூரத்தே நின்றாள்; அங்ஙனநின்ற சுதமதியைச சோலையினுள்ளேவந்த உதயகுமரன் கண்டு, "யாருமில்லாத இவ்விடத்தே நின்றாய்; நீ மணிமேகலையுடன் வந்தாயென்று அறிந்து கொண்டேன்; அவள் †முதுக்குறைவுற்றனளோ? அவளுடைய செவ்வாய் நகைத்தலைப்பெற்றதோ? கண்கள் பிறழ்ந்து உலாவி வேட்கையைப் புலப்படுத்துமோ? அவள் பௌத்தசங்கத்தாரிருப்பிடத்தை நீங்கி இவ்விடம்வந்ததற்குக் காரணம யாது? சொலவாய்" என்று தனது வேட்கைதோன்ற வினவினன்.

அப்பொழுது சுதமதி, வாயிலில்லாத அறையில அகப்பட்டோா போல மனம்வருந்தி, "இளமைப்பருவததிலேயே முதுமைவேடம் பூண்டு வழக்கைக்கேட்டு உண்மையை வெளிப்படுத்திய சோழன்கரிகாற்பெருவளத்தானுடைய வழித்தோன்றலே, நீ ஆண்டில் இளையையாயினும் அறிவில் முதியாயன்றோ? உனக்கு மகளிா தெரிவித்தற்குரியனவும் உளவோ? இல்லை; ஆயினும் ஒன்று தெரிவிப்பேன்; கேட்டருளுக:—

> வினையின் வந்தது வினைக்குவிளை வாயது
> புனைவன நீங்கிற் புலால்புறத் திடுவது
> மூத்துவிளி வுடையது தீப்பிணி யிருக்கை
> பற்றின் பற்றிடங் குற்றக் கொள்கலம்
> புற்றடங் கரவிற் செற்றச் சேக்கை
> யவலக் கவலை கையா றழுங்க
> றவலா வுள்ளந் தன்பா லுடையது
> மக்கள் யாக்கை யிதுவென வுணர்ந்து
> மிக்கோ யிதனைப் புறமறிப் பாராய் (௧௧௩ - ௧௨௧).

என்று உடம்பினியல்பைக்கூறினள்; அவள் இங்ஙனங்கூறிய இனிய வார்த்தை உதயகுமரனதுகாதை அடையுமுன்னே பளிக்கறையுள்ளேயிருந்த மணிமேகலையினுருவம் அவன் கண்ணுக்குத் தோற்றியது.

## ௫.—மணிமேகலாதெய்வம் வந்துதோன்றியகாதை.

**தோ**ற்றியவுடன் அவ்வடிவத்தை மணிமேகலையின் வடிவமென்று நிச்சயித்து அப்பளிக்கறையினுள்ளே சென்றடைதற்கு நினைந்த உதயகுமரன், அதன்வாயில் காணப்படாமையால் அஃது இன்னவிடத்திலுள்ளதென்பதை அறிந்துகொள்ளுதற்குப் பளிக்குச்சுவரைக் கையால் த—

* பளிக்கறை - படிகத்தாலாகிய அறை.
† முதுக்குறைவு - பேரறிவு.

விக்கொண்டு சூழ்ந்துவந்தான்; வந்தவன் சுதமதியைப்பார்த்து, "மணிமேகலை எத்திறத்தினள்? சொல்" என்றான்; என்றவனுக்குச் சுதமதி, "அவள் தவவொழுக்கமுடையள்; குற்றஞ்செய்தாரைச் சபிக்கும்வன்மையையுமுடையள்; சிறிதும் காமவிகாரமில்லாதவள்; ஆதலின், நீ அவளை விரும்புதல் தக்கதன்று" என்று கூறினள்; கூறவே "அவள் எத்தன்மையளாயினும் ஆகுக; எப்படியும் எனக்கு உரியளாகக்கடவள்" என்று சொல்லிக்கொண்டுசெல்பவன், மீட்டும் சுதமதியைப்பார்த்து, "துறவொழுக்கம்பூண்ட சமணமாதர்களின்நடுவே ஒரு வித்தியாதரனால் இடப்பட்டாய்" என்று எல்லாராலுங்கூறப்படும் நீ அவளைநீங்கிப் பௌத்தசங்கத்தைச்சார்ந்த மாதவியின் மகளுடன் வந்ததற்குக் காரணம் யாது? சொல்லுவாய்" என்றான்.

அதுகேட்ட சுதமதி, "அரச, யான் சண்பைநகரத்துள்ள கௌசிகனென்னும் அந்தணனுடையமகள்; என் இளமைப்பருவத்தில் அன்னையிறந்தாள்; அவளிறந்தபின்பு தந்தையால் ஆதரிக்கப்பட்டுவந்த நான் ஒருசோலையிற்சென்று தனியேநின்று பூக்கொய்கையில் என்னை விரும்பி ஆகாயத்தே எடுத்துச்சென்று தன்வயமாக்கிக்கொண்ட வித்தியாதரனொருவனால் இடப்பட்டு இந்நகரத்திருந்தேன்; இதையறியாத என் தந்தை என்னைக்காணாமல் வருந்தித் தேடிக்கொண்டே கன்னியாகுமரியாற்றிற்கு நீராடச்செல்பவர்களோடு சென்றான்; செல்லுகையில் இடையிலுள்ளதான இந்நகரச் *சங்கமுகத்துறையில் நீராடுதற்கு அந்தணர்களோடு வந்து என்னை இந்நகரிற்கண்டு, "நீ இங்கே எப்படிவந்தனை" என்று சொல்லி வருந்தி அந்தணர்களோடிருத்தற்கு நான் தகுதியில்லேனாயினும் என்னிடத்து மிக்க அன்புடையவனாதலின், அவன் என்னைக் கைவிடாதவனாகி மனைகடோறும் பிச்சையெடுத்துண்பித்துத் தானுமுண்டு பொழுதுகழிப்பானாயினன்; அப்படியிருக்கையில், ஒருநாள், அவன் பிச்சையெடுத்தற்குச்செல்லும்பொழுது இளங்கன்றையுடைய ஒருபசு அவனைமுட்டி வயிற்றைக்கிழித்துவிட்டது; அதனால் சரிந்தகுடரைக் கையிலேந்திக்கொண்டு, நானிருந்தவிடமென்று முன்பு அறிந்தவனாதலால் †சமணப்பள்ளியிற்புகுந்து, "முனிவர்களே, யான் உங்களடைக்கலம்; என்னைப் பாதுகாக்கவேண்டும்" என்று முறையிட்டான்; அதைக்கேட்ட அவர்கள் சினந்து அவனை என்னோடும் புறத்தே ‡தள்ளிவிட்டனர்; நாங்களிருவரும் மிக்கதுக்கமுடையவர்களாய்ப் புறவீதியிற்சென்று, "கதியற்ற எம்மைப் பாதுகாக்கும் அறவோர் யாரேனுமுண்டோ?" என்று புலம்பி

* சங்கமுகத்துறை - காவிரி கடலொடுகலக்குந்துறை.
† சமணப்பள்ளி - சமணமுனிவர்கள் தங்குவதற்காக அமைந்த இடம்.
‡ தள்ளிவிட்டனரென்றதனால், சைனமுனிவருடைய இரக்கமின்மை கூறினாள்.

முறையிட்டே[illegible]; அப்பொழுது, மனைகடோறுஞ்சென்று ஐயமேற்க் பாத்திரத்தையேந்திய கையையுடையவனும் முழுமதிபோன்ற முக னும் பொன்னிறமுள்ள *சீவரவாடையனுமாகிய சங்கதருமனென் முனிவன் விரைந்துவந்து, "என்னதுன்பமடைந்தீர்கள்?" என்று எம்மை அருளுடன்பார்த்து இனியமொழிகளைக் காதுகளில்நிறைத்து எம்மனத் தைக்குளிர்வித்து உடனே தன்கையிலுள்ள பிச்சைப்பாத்திரத்தை என் கையிற்கொடுத்துவிட்டு என்தந்தையின் துன்பம் முற்றும்நீங்கும்படி அவ னைத்தழுவியெடுத்துக்கொண்டு சென்று பௌத்தசங்கத்தாரிருப்பிடத் தைக்காட்டி என்றந்தையின் †மரணத்துன்பத்தையும் நீக்கினன்; அம் முனிவன் எனக்குச் செவியறிவுறுத்திய (பாதம்)

எங்கோ னியல்குண னேதமில் குணப்பொரு
ளுலக நோன்பிற் பலகதி யுணர்ந்து
தனக்கென வாழாப் பிறர்க்குரி யாள
னின்பச் செவ்வி மன்பதை யெய்த
வருளறம் பூண்ட வொருபெரும் பூட்கையி
னறக்கதி ராழி திறப்பட வுருட்டிக்
காமற் கடந்த வாமன் (எக - எஎ.)

பாதங்களையே என்னுடைய நாவானது இடைவிடாமற் பாராட்டுமேயல் லாமல் வேறொன்றையும் சொல்லவறியாது; அதுமுதல், பௌத்தசங்கத் தைச்சார்ந்திருந்த மாதவியிடத்தில் உறைவேனானேன்; அதனால் இவளு டன்வந்தேன்" என்று கூறினள்; அதுகேட்ட உதயகுமரன், "உனதியல் பை அறிந்துகொண்டேன்; மணிமேகலையைச் சித்திராபதியால் இனிச் சேர்தலுங்கூடும்" என்று சொல்லிவிட்டுக் காமபரவசனாய் அச்சோலையி னின்றும் போயினன்; போனவுடன் மணிமேகலை பளிக்கறையினின்றும் வெளியேவந்து சுதமதியைநோக்கி, "அன்பிலனென்றும் தவவுணர்ச்சியில் லாதவனென்றும் வருணக்காப்பிலனென்றும் விலைமாதென்றும் என்னை இகழ்ந்தானென்று நினையாமல், உதயகுமரன்பின்னே என்னுடைய நெஞ்சமானது செல்லுதலுற்றது; இதற்குக் காரணம் யாது? காமத்தி னியல்பு இதுவோ" என்று சொல்லிக்கொண்டுநின்றாள்; நின்றபொழுது, வந்து இந்திரவிழாவைக் காணுதலுற்ற மணிமேகலாதெய்வம், அவர்க ளுக்குத்தெரிந்தவளும் மாயவித்தைசெய்பவளுமாகிய ஒரு மடந்தைவே டம்பூண்டு அச்சோலையையடைந்து பளிக்கறையிலுள்ள ஸ்ரீபாதபீடிகை யை வலங்கொண்டு உயர எழும்பிநின்று,

"புலவன் றீர்த்தன் புண்ணியன் புராண
னுலக நோன்பி னுயர்ந்தோ யென்கோ

---

* சீவரவாடை - மருதந்துவர்நீரில்தோய்த்த பௌத்தபிக்ஷுக்களின் வஸ்திரம்.

† மரணத்துன்பத்தையும் நீக்கினனென்றதனாற் பௌத்தமுனிவனுடைய அரு ந்த [illegible]

குற்றங் கெடுத்தோய் செற்றஞ் செறுத்தோய்
முற்ற வுணர்ந்த முதல்வா வென்கோ
காமற் கடந்தோ யேம மாயோய்
தீநெறிக் கடும்பகை கடிந்தோ யென்கோ
வாயிர வாரத் தாழியன் றிருந்தடி
நாவா யிரமிலே னேத்துவ தெவன்" (கூஅ - சoரு)

என்று துதிக்கத்தொடங்கியது. இங்ஙனந்துதித்துக்கொண்டிருக்கையிற் பகற்காலநீங்க அந்திமாலை வந்தது.

## சு.—சக்கரவாளக்கோட்டமுரைத்தகாதை.

வந்த அந்திமாலைப்பொழுது நீங்க, சந்திரன் உதயமாயினன்; மணிமேகலாதெய்வம், மீட்டும,

ஆதி முதல்வ னறவாழி யாள்வோன்
பாத பீடிகை பணிந்தன ளேத்தி, (கக - கஉ)

அங்கே வாடிநின்ற சுதமதியைப்பார்த்து, "நீங்கள் இங்கேநின்றதற்குக் காரணம யாது? என்னதுன்பமடைந்தீர்கள்?" என்றுகேட்க, சுதமதி உதயகுமரன் மணிமேகலையைவிரும்பிச சொல்லிய சொல்லையும், பின்பு சித்திராபதியால் அவளைப் பெறலாமென்று அவன் எண்ணிசசென்றதையும கூறினள்; கூறலும், அதெய்வம, அவளைப்பார்த்து, "உதயகுமரனுக்கு மணிமேகலைபாலுள்ள ஆசை சிறிதும் தணிவுற்றிலது; 'இது முனிவர்களுடைய தவவனம்; இதில யாம தீங்குசெய்யலாகாது' என்றெண்ணியே அவன் இசசோலையைநீங்கினன்; இவள் இதனைக்கடந்துசெல்வாளாயின், புறவீதியில் அவன் இவளை அகப்படுத்திக்கொள்ளுதல் சரதமே; நீங்கள் இசசோலையைசசூழ்ந்த மதிலின் மேற்றிசைக்கண்ணதாகிய சிறியவாயில்வழியேபோய் முனிவர்களுககிருப்பிடமாகிய சக்கரவாளக் கோட்டத்திறசெல்லுக; சென்றால, ஒருபொழுதும் யாதொருதுன்பமும் அணுகாது" என்றுசொல்லியது; சொல்லலும, சுதமதி, "மாருதவேகனும நீயுமே அதனைச சக்கரவாளக்கோட்டமென்று சொல்லுவீர்; மற்றையோர்யாவரும் சுடுகாட்டுக்கோட்டமென்றே சொல்லாநிற்பர்; சக்கரவாளக்கோட்டமென்றதற்குக் காரணம்யாது? அதனைச் சொல்லுக" என்றாள்.

என்றலும், அத்தெய்வம், "காவிரிப்பூம்பட்டினம்தோன்றியகாலத்தே உடன்றோன்றியதான சுடுகாடு இசசோலையின் பக்கத்தேயுள்ளது. அது, நாற்புறததும வாயில்களையுடைய மதிலாற்சூழப்பட்டது; காளிகோட்டத்தையும, அருந்தவர் அரசா கணவனிறகக உடனேயிறந்தமடவார் ஆகிய இவர்களுள் இன்னாரின்னார் இன்ன இன்னவிடத்தே புதைக்கப்பட்டாரென்பதற்கு அறிகுறியாக அவரவர்களுடைய வருணம் ஆச

சிரமமுதலியவற்றிற்கும் அவரவர்களுடைய தகுதிக்குமேற்பச் சிறிதும் பெரிதுமாகக் கட்டப்பட்டுள்ள பற்பலகோட்டங்களையும், மயானதெய் வங்களுக்குப் பலியிடுதற்குரிய தூண்களையும், கற்களைநிறுத்திசெய்யப் பட்டுள்ள திண்ணைகளையும், காவற்காரர்உண்பதற்கும் உறங்குவதற்கும் அமைந்துள்ள குடிசைகளையும், தோரணங்களையும், பந்தர்களையுமுடை யது ; பிணங்களைச் சுடுதற்கும் சும்மாபோடுதற்கும் குழியிற்புதைத்தற் கும் உள்ளேவைத்து வாயிலையடைத்தற்கும் தாழியாற்கவித்தற்குமாக இரவும்பகலும் வருபவர்களுடையவோசையும், அங்ஙனம் வந்துசெல்ப வர்களுடைய ஓசையும், சாப்பறைகளினோசையும், இறந்ததுறவிகளைத் தொழுபவரோசையும், மற்றையோர்பொருட்டு அழுபவரோசையும், நரி யின் கூக்குரலோசையும், செத்தோரையழைக்கும் பேராந்தைகளினோ சையும், கோட்டானுடையகுரலும், ஆண்டலைப்பறவைகளின் குரலும் அம்மயானத்தில் மிகுதியாகவுண்டு ; தான்றி ஒடுவை உழிஞ்சில் கான்றை சூரை கள்ளிமுதலிய பற்பல மரவிசேடங்களும் அங்கே அடர்ந்துள்ளன; பேய்கள்நெருங்கியுள்ள வாகைமரம்நிற்கும் மன்றங்களையும் நிணத்தோடு இறைச்சிகளைத்தின்று மகிழ்ந்து பறவைகள் தங்கியுள்ள விளாமரம்நிற் கும் மன்றங்களையும், காபாலிகசமயத்தோர் வாழும வன்னிமரம்நிற்கு மன்றங்களையும், விரததாலிளைத்த உடம்பையுடையசிலர் உடைந்ததலை களை மாலையாகக்கட்டும இலந்தைமரம்நிற்கும் மன்றங்களையும், பிணங் களைத்தின்போர் களித்துவாழும் வெளியான இடங்களையுடைய மன்றங் களையும் அம்மயானம் உடையது; நெருப்பிருந்தபாண்டங்களும் *மண் டைகளும் பாடைகளும் அறுத்தெறிந்த மாலைகளும் உடைந்த குடங் களும் நெற்களும் பொரிகளும் சிறுபலியாக இடப்பட்ட அரிசிகளும எங்கும் பரவப்பெற்றது ;

> *தவத்துறை மாக்கண் மிகப்பெருஞ் செல்வ*
> *ரீற்றிளம் பெண்டி ராற்றாப் பாலகர்*
> *முதியோ ரென்னு னிளையோ ரென்னுன்*
> *கொடுந்தொழி லாளன் கொன்றனன் குவிப்பவிவ்*
> *வழல்வாய்ச் சுடலை தின்னக் கண்டுங்*
> *கழிபெருஞ் செல்வக் கள்ளாட் டயர்ந்து*
> *மிக்க நல்லறம் விரும்பாது வாழு*
> *மக்களிற் †சிறந்த மடவோ ருண்டோ?* (கள - கoச).

இத்தன்மையதான அச்சுடுகாட்டைப் பார்ப்பனச்சிறுவனாகிய சார்ங்கல னென்னும் ஒருவன் ஒருநகரமாக நினைந்து அதில் தனியேசென்று அங்கே களித்தாடிய பேயொன்றைக் கண்டு அஞ்சி அதனால் தாக்கப்

---

* மண்டை - நவபாண்டவிசேடம்.

† சிறந்த - மிகுந்த.

பட்டுக் கதறிக்கொண்டு ஓடித் தனது தாயாகிய கோதமையையடைந்து, "சுடலையிலுள்ளபேய்க்கு என்னுயிரைக்கொடுத்தேன்" என்று சொல்லி அவள்முன் வீழ்ந்து இறந்தான்; உடனே கோதமை, "முதுமைப்பருவமடைந்துதளர்ந்த பார்ப்பானும் யானும் கண்ணிழந்துள்ளோமென்பதையும் வேறுபுகலிலலேமென்பதையும் நினையாமல் எங்கள் மைந்தனுடைய உயிரையுண்டது அணங்கோ! பேயோ! அறிகிலேனே" என்று புலம்பிக்கொண்டு தன் அருமைப்புதல்வனுடைய உடம்பையெடுத்து மார்போடு தழுவிச்சென்று சுடுகாட்டைச் சூழ்ந்த மதில்வாயிலை யடைந்துநின்று, "*சமபாபதீ, நீர்த்துறைகளிலும மன்றங்களிலும் பழைய மரவடிகளிலும் கோட்டங்களிலும வேற்றிடங்களிலுமிருந்து யாருக்கும் எந்தச் சமயத்தும் யாதொருதீங்கும் அணுகாவண்ணம் பாதுகாத்தருளும் நீ என்மகனைக் காவாதொழிநததற்குக் காரணம யாது? நின்பால நடுவுநிலைமையில்லையோ; இனி யான் என்செய்வேன்" என்று வருந்தி முறையிட்டாள்.

முறையிடவே சம்பாபதிவந்து, "இவ்விரவில் இம்மயானத்திற் பேய்கள் போக்குவரவுசெய்யும் வாயிலில் நின்று மிக்க வருத்தமடைந்து நீ என்னை அழைத்ததற்குக் காரணம யாது? சொல்வாய்" என்ன, கோதமை நிகழ்நததைக் கூறினள்; சம்பாபதி, "உன் மகனுயிரை அணங்கும் பேயும கவர்நதில; அவனுடைய அறியாமையையே பற்றுக்கோடாகக் கொண்டு இழவூழே அவனுயிரைக் கவர்ந்து சென்றது" என்று கூறினள்; கூறலும், கோதமை, "என்னுயிரை வாங்கிக்கொண்டு இவனுயிரை நீ தநதருள்வாயாயின், இவன் கண்ணற்ற தந்தையைக் காத்தளிப்பான்; ஆதலால், அங்ஙனம் செய்தருள்வாயாக" என்று வேண்டினள்; சம்பாபதி மனமிரங்கி, "உயிர உடமபைவிட்டுநீங்கின் அது வினைவழியேசென்று வேறுபிறப்பை யடையாநிற்கும; இதில் ஏதேனும் ஐயமுண்டோ? போனவுயிரை மீட்டளித்தல் என்றால் இயலுங்காரியமன்று; ஆதலால், மகன் இறந்ததுபற்றி நீ இரங்காதே;

உலக மன்னவர்க் குயிர்க்குயி ரீவோ
ரிலரோ விந்த வீமப் புறங்காட்
டரசர்க் கமைந்தன வாயிரங் கோட்டம்
நிரயக் கொடுமொழி நீயொழி" என்றலும், (கஅ௬ - கஅஎ).

கோதமை, "கேட்ட வரங்களையெல்லாம் தேவர் தருவாரென்று நூல்கள் கூறுநிற்கும்; ஆதலால், யான் கேட்ட இவ்வரத்தை நீ தந்தருள்க; தாராயாயின், இவ்விடத்தில் இப்பொழுதே என்னுயிரைத் துறப்பேன்" என்று சொன்னாள்; சொல்லவே சமபாபதி, "நீ சொல்லியபடியே இச்

சம்பாபதியென்பது காவிரிப்பூம்பட்டினத்து அதிதேவதையின்பெயர்.

*சக்கரவாளத்துள்ள தேவர்களில் யாரோனும் நீ கேட்ட வரத்தைக் கொடுப்பாருளராயின் யானும் அதனைக் கொடுக்கும் உரிமையுடையேனுவேன்; என் ஆற்றலைக் காண்பாயாக" என்று சொல்லிவிட்டு, †நான்குவகை அருவப்பிரமகணங்களையும் பதினறுவகை உருவப்பிரமகணங்களையும் இருசுடர்களையும் ‡அறுவகைத் தெய்வகணங்களையும் பலவகை அசுர கணங்களையும் §எண்வகை நரகர்களையும் பல விண்மீன்கூட்டங்களையும் அச்சுவினிமுதலிய இருபத்தேழு நாட்களையும் கோட்களையும் தனக்குள்ளே அடக்கிக்கொண்டிருக்கும இச்சக்கரவாளத்தில் வரங்கொடுக்கும் வன்மையையுடைய தேவாகளையெல்லாம வருவித்துக் கோதமைக்குமுன்னே நிறுத்தி, "இவளுடையவருத்தத்தைக் கெடுத்திடுவீராக; இவளடைந்த வருத்தம் இதுவாகும" என்று நிகழ்ந்தவற்றைச்சொல்ல, அத்தேவர்கள் சம்பாபதி கூறியவாறே கூறிமுடித்தார்கள்; அதனைக்கேட்டு உண்மையறிந்து ஒருவாறு வருத்தமொழிநதகோதமை தன்மகனைச சுடுகாட்டிற் சேர்த்துவிட்டு இறந்துபோயினள்.

அப்பால், சம்பாபதியின் வன்மையை யாவருக்கும் புலப்படுத்த வேண்டி, எல்லாத்தேவர்களும் கூடியவிடத்து அவாகள் கூடியதற்கு அறிகுறியாக, இவ்வுலகின் நடுவேயுள்ள மேருமலையும அதனைச் சூழ்ந்த எழுமலைகளும் நான்கு பெருந்தீவுகளும் இரண்டாயிரஞ் சிறுதீவுகளும் மற்ற இடவிசேடங்களுமாகிய இவற்றைப்புலப்படுத்தி ஆங்காங்கு வாழ்பவர்களுடைய உருவங்களையும்வகுத்து மயனுல் நிருமிககப்பட்டதாதலின், இது சக்கரவாளக்கோட்டமெனப் பெயர்பெற்றது; இது சுடுகாட்டைச் சூழ்ந்த மதிலின்புறத்தேயுள்ளதாதலாற் சுடுகாட்டுக்கோட்டமென்று எல்லாராலுங் கூறப்படும; இதன் வரலாறு இதுவாகும்" என்றுசொல்லக் கேட்டுக்கொண்டிருநத மணிமேகலை, "மனிதர் வாழ்க்கை இத்தன்மைத்து" என்றுசொன்னுள். அவள் அங்கே அப்படியிருக்கையில், சுதமதி தூங்குதலுற்றனள்; அப்பொழுது அத்தெய்வம் தன்வித்தையால் மயக்கி மணிமேகலையைத் தழுவியெடுத்துக்கொண்டு ஆகாயவழியே முப்பதுயோசனையளவு தெற்கேசென்று கடல்சூழ்நத மணிபல்லவமென்னும் சிறு தீவையடைந்து அதில் அவளைவைத்துவிட்டுச்

* எல்லாவுலகங்களையும் தன்னுள அடக்கிக்கொண்ட கோளத்தைச் சக்கரவாளமென்றல் பௌத்தநூல்வழக்கு.

† பிரமகணங்களை இங்ஙனம் வகுத்துக்கூறுதல் பௌத்தநூல் வழக்கு; மணிமேகலைப் புத்தகத்தின் ௬ - ம் பக்கம் பார்க்க.

‡ அறுவகைத் தெய்வகணங்கள் தங்கும் உலகங்களின்பெயரை மணிமேகலைப் புத்தகத்தின் உ - ம் பக்கத்திற் பார்க்க.

§ எண்வகை நரகருடைய இருப்பிடங்களின் பெயரை மணிமேகலைப் புத்தகத்தின் ௬௩ - ம் பக்கத்திற் பார்க்க.

## எ.—துயிலெழுப்பியகாதை.

சென்ற மணிமேகலாதெய்வம், "விடிந்தால் மணிமேகலையை எப்படியும் நான் அகப்படுத்திக்கொள்வேன்" என்று எண்ணிக்கொண்டு காமபரவசனாய்த் துன்பமுற்றுத் தூங்காமலேயிருந்த உதயகுமரன் முன்னே சென்று, அவன்காண நின்று,

> " ........ ...... .... மன்னவன் மகனே
> கோனிலை திரிந்திடிற் கோணிலை திரியும்
> கோணிலை திரிந்திடின் மாரிவறங் கூரும்
> மாரிவறங் கூரின் மன்னுயி ரில்லை
> மன்னுயி ரெல்லா மண்ணாள் வேந்தன்
> றன்னுயி ரென்னுந் தகுதியின் றாகும்
> தவத்திறம் பூண்டோ டன்மேல் வைத்த
> வவத்திற மொழிக." (எ - கச).

என்று அவனுக்குச சொல்லிவிட்டுப் பின்பு உவவனஞ்சென்று அங்கே தூங்குகின்ற சுதமதியையெழுப்பி, "யான் மணிமேகலாதெய்வம்; இந்நகரில் நடக்கும் இந்திரவிழாவைக்காணுதற்கு வந்தேன்; நீ அஞ்சாதே; பௌத்தசமயவழியே செல்லுதற்குரிய நற்காலம மணிமேகலைக்கு உண்டாயிற்று; ஆதலால், அவளை எடுத்துக்கொண்டுசென்று மணிபல்லவத்தில் வைத்தேன்; தன்னுடைய முற்பிறப்பிலேநிகழ்ந்த செய்தியையும் அறிந்துகொண்டு அவள் இற்றைக்கு ஏழாவதுநாளில் இங்கே வந்துசேருவாள். இந்நகரில் வேறுவடிவங்கொள்வாளாயினும் அவள் உனக்கு ஒளிப்பாளல்லள்; அவள் இங்கே புகும்நாளில் இந்நகரின்கண்ணே பலஅற்புதங்கள் நிகழும்; நான்வந்ததையும மணிமேகலை நல்லவழியிற்சென்றதையும மாதவிக்குச் சொல்வாயாக; அவள் முன்னமே என்னையறிவாள்; கோவலன், 'நமது குலதெய்வத்தின்பெயரை இக்குழந்தைக்கு இடுக' என்றுசொல்லி, என்பெயரை இவளுக்கு (மணிமேகலைக்கு) வைத்தநாளின்இரவில் மாதவியின் கனவிற்சென்று, "காமன் செயலற்று ஏங்கும்வண்ணம் ஆசையை முற்றக்கெடுக்கும் தவமாதைப்பெற்றாய்" என்று நனவிற்கூறுவதுபோல யான் கூறியதுண்டு. இதனையும் அவளுக்கு நினைப்பூட்டுவாயாக" என்று கூறிபபோயிற்று.

அப்பாற் சுதமதியெழுந்து மணிமேகலையின்பிரிவால்வருந்தி அச்சோலையைச்சூழ்ந்த மதிலின்மேற்கேயுள்ள சிறிய வாயிலவழியேசென்று சக்கரவாளக்கோட்டத்தையடைந்து ஆங்குள்ள உலகவறவியின் ஒரு பக்கத்தேயிருந்தாள்; அவள் அப்படியிருக்கும்பொழுது அவ்விடத்தே தூணிலுள்ளபாவையொன்றை அதிஷ்டித்திருக்குந் தெய்வமொன்று, சுதமதி மயங்கிஅஞ்சும்படி,

"இரவி வன்ம னொருபெரு மகளே
துரகத் தானைத் துச்சயன் றேவி
தயங்கிணர்க் கோதைத் தாரை சாவுற
மயங்கி யானைமுன் மன்னுயிர் நீத்தோய்
காரா ளர் சண்பையிற் கௌசிகன் மகளே
மாருத வேகனோ டிங்ஙகர் புகுந்து
தாரை தவ்வை தன்னொடு கூடிய
வீரை யாகிய சுதமதி கேளாய், (கஅ - க0ரு).

தங்கையாகியஇலக்குமி தன்னுடையமுற்பிறப்பையும் உன்னுடைய முற்பிறப்பையும் அறிந்துகொண்டு இற்றைக்கு ஏழாநாளிரவில் இந்நகரத்தேவருவள்; அவள் பிரிந்ததுபற்றி நீ அஞ்சற்க" என்று தனது தெய்வவாக்காற் கூறிற்று; அதனைக்கேட்டு மனநடுங்கிய சுதமதி, பொழுதுபுலருமளவும் அவ்விடத்தேயிருந்து சூரியனுதித்தவுடன் எழுந்து புறப்பட்டு வீதிவழியேசென்று மாதவியையடைந்து முதனாளில் நிகழ்ந்தவற்றைச் சொன்னவுடனே அவள் மாணிக்கத்தையிழந்த நாகம்போன்று மிக்கதுயரத்தோடிருந்தாள்; சுதமதி, மணிமேகலையின்பிரிவாற்றாமையால் உயிரிழந்த உடம்புபோலச் செயலற்றிருந்தாள்.

## அ.—மணிபல்லவத்துத்துயருற்றகாதை.

சுதமதி இங்கே இப்படியிருக்க, மணிபல்லவத்திற் கடலருகே மணலிற்றுயின்ற மணிமேகலை, துயிலுணர்ந்து தனக்குத்தெரிந்த யாதொன்றும் அங்கே காணப்படாமையால், தான் முன்பிருந்த இடத்தைத்துறந்து வேற்றிடத்துச்சென்றுபிறந்த உயிரேபோன்றவளாகித் திகைத்துக் கொண்டிருக்கையில் சூரியனுதித்தான்; உதித்தவுடன் அவள், "இவ்விடம், உவவனத்தில் முன்னங் கண்டறியப்படாத ஒரு பகுதியோ!

சுதமதி யொளித்தாய் துயரஞ் செய்தனை
நனவோ கனவோ வென்பதை யறியேன்
மனநடுக் குறூஉ மாற்றந் தாராய்
வல்லிருள் கழிந்தது மாதவி மயங்கும்
மெல்வினை வாராய் விட்டகன் றனையோ? (உ0 - உச).

இது, மாயவித்தையோடுதோன்றிய அம்மடந்தைசெய்தவஞ்சமோ! ஒன்றுந்தெரியவில்லையே! தனியேயிருத்தற்கு மிகவும் அஞ்சுகின்றேன்; நீ விரைந்துவருவாயாக" என்று சொல்லிக்கொண்டு, பல நீர்த்துறைகளிலும் பல மணற்குன்றங்களிலும் சென்று தேடித் தனக்குத்தெரிந்த ஒருவரையுங்காணாதவளாகிக் கூக்குரலிட்டு அழுதுவருந்துபவள், தன்றந்தையைநினைந்து,

"கோற்றொடி மாதரொடு வேற்றுநா டடைந்து
வைவா ளுழந்த மணிப்பூ ணகலத்
தையா வோ" என் றழுவோண் முன்னர், (சக - சங)

## ௯.—பீடிகைகண்டு பிறப்புணர்ந்தகாதை.

*இந்திரனாலிடப்பட்டதும் தரிசித்தோர்க்குப் பழம்பிறப்பைத் தெரிவிப்பதுமாகிய புத்தபீடிகை தோன்றியது.*

௯.—பீடிகைகண்டு பிறப்புணர்ந்தகாதை.

தோன்றலும், அதனைக்கண்ட மணிமேகலை, விம்மிதத்தால் தன்னை அறியாளாயினள்; அவளுடையகைகள் தலைமேற்குவிந்தன; பின்பு ஆனந்தக்கண்ணீரைஉகுத்து அப்பீடத்தை மூன்றுமுறை வலம்வந்து பணிந்து எழுபவள், அப்பீடிகைக்காட்சியால் தன பழம்பிறப்பில்நிகழ்ந்த செய்திகளையறிந்து, "மாதவ, உறுதிப்பொருளைபுணர்ந்தோய், காயங்கரையென்னும் நதிக்கரையில நீ சொல்லியவெல்லாம உண்மையாதலை விளங்கவறிந்தேன்:—காந்தாரமென்னும் பெரியதொருநாட்டிலுள்ள பூருவதேசத்தில் இடவயமென்னும் நகரை இராசதானியாகக்கொண்டு அரசுபுரிந்துவாழும அத்திபதியென்னும் அரசனுடைய மைத்துனனாகிய பிரமதரும, நீ அவ்வரசனிடத்திற்சென்று தருமோபதேசம்புரிகையில், "இச்சம்புத்தீவில இற்றைக்கு ஏழாவதுநாளில் பூகம்பமுண்டாகும்; உண்டானபொழுது இந்நகருமநாகநாட்டில் நானூறுயோசனைப்பரப்பும்பாதாலத்தில்வீழ்ந்து கெட்டொழியும; ஆதலால், நீ இந்நகரத்தைவிட்டு விரைவில வேறுநகரம் புகுவாய்" என்றுசொல்ல, அவன் நகரத்தார்யாவருக்கும் அச்செய்தியைப பறையறைவித்துசசாற்றி எல்லாருடனும் அந்நகரைநீங்கி அதற்கு வடக்கேயுள்ள அவந்திநகரம செல்லுதற்குப் புறப்பட்டு வழிக்கொண்டு இடையேயுள்ள காயங்கரையென்னும் நதிக்கரையையடைந்து அங்கே பாடிவீடு செய்துகொண்டிருந்தபொழுது ஐய ! நீ உரைத்தபடியே குறித்தநாளிற் பூகம்பமுண்டாக இடவயநகரம் அழிந்து போயிற்று; அதுதெரிந்த அரசனும் மற்றையோரும் உன்பால் அன்பு மிக்கு உன்னைச சரணமடைந்து சூழ்ந்துநின்றகாலத்தில், அவர்களுக்கு முத்திவழியை உபதேசித்துக்கொண்டிருந்தாய்; இருந்தபொழுது, அசோதரநகரத்தரசனாகிய இரவிவன்மனென்பவனுடைய தேவியான அமுதபதியென்பவள்வயிற்றிற்பிறந்து இலக்குமியென்று பெயர்பெற்று, அத்திபதியென்னுமரசனுக்கு நீலபதியென்பவள்பாற்பிறந்த இராகுலனுக்கு மனைவியாய்ப்புக்கயான்என்கணவனோடுவந்து தருமங்கேட்டற்பொருட்டு வணங்கியவுடன், நீ என்னைநோக்கி, 'இவ்விராகுலன் இற்றைக்குப் பதினாறாவதுநாளில் திட்டிவிடமென்னும் பாம்பாலிறப்பான்; நீ இவனோடு தீயிற் புகுவாய்; புகுந்து, பின்பு காவிரிப்பூம்படடினத்திற்சென்றுபிறப்பாய்; அவ்விடத்தில் உனக்கு ஒரு துன்பம்வரும்; அப்பொழுது மணிமேகலா தெய்வம் வந்துதோன்றி நள்ளிரவில் உன்னையெடுத்துக்கொண்டுசென்று காவிரிப்பூம்பட்டினத்திற்குத்தெற்கே கடலிலுள்ளசிறுதீவொன்றில்வை

த்துவிட்டுச்செல்லும்; சென்றபின் ஆங்குள்ள புத்தபீடிகையைத் தரிசித்துத் தொழுவாய்; தொழுதவுடன் உனது முற்பிறப்பில் நிகழ்ந்தசெய்திகளையறிந்து இன்று நான்சொன்ன மொழிகளையும் தெரிந்துகொள்வாய்' என்று நீ சொல்ல, 'என்கேள்வன் இன்னவாறு பிறப்பானென்பதையும் தெரிவிக்கவேண்டும்' என்று கேட்டேன்; கேட்டவெனக்கு 'உன்னைக் கொண்டுசென்ற தெய்வம் மீட்டுநீ தோன்றி உனக்கு அதனைப் புலப்படுத்தும்' என்று அருளிச்செய்தாய்; அத்தெய்வம வரவில்லையே" என்று ஏங்கி அழுதுகொண்டிருந்தாள்.

## கல.—மந்திரங்கொடுத்தகாதை.

மணிமேகலை இப்படியிருக்கையில், — புத்தபீடிகைக்காட்சியால இவள் பழம்பிறப்பையறிந்தாள்; இவளுடைய இயற்கையும் அழகிது— என்றெண்ணிக்கொண்டு ஆகாயத்தினின்றுமிறங்கிவந்த மணிமேகலா தெய்வம், அவள்கேட்கும்படி,

"உயிர்க ளெல்லா முணர்வுபா ழாகிப்
பொருள்வழங்கு செவித்துளை தூர்ந்தறி விழந்த
வறந்தலை யுலகத் தறம்பாடு சிறக்கச்
சுடர்வழக் கற்றுத் தடுமாறு காலையோ
ரிளவள ஞாயிறு தோன்றிய தென்ன
நீயோ தோன்றினை நின்னடி பணிந்தே
னீயே யாகிநிற் கமைந்தவிவ் வாசனம்
நாமிசை வைத்தேன் றலைமிசைக் கொண்டேன்
பூமிசை யேற்றினேன் புலம்பறுக" (எ - கஉ)

என்று புத்ததேவனுடைய பீடிகையை அவனாகவேமதித்துத் துதித்து வலம்வந்து பூசித்து வணங்கியது; வணங்கியதெய்வத்தை மணிமேகலை வணங்கி, "உன் திருவருளால என்னுடைய முற்பிறப்பையறிந்தேன்; அப்பிறப்பிற் கணவனாயிருந்த இராகுலன் எங்கே பிறந்துளன்?" என்று கேட்டாள்.

கேட்டவளுக்கு அத்தெய்வம், "இலக்குமி! கேட்பாயாக; நீ ஒருநாள் சோலையொன்றில் இராகுலனோடு ஊடியிருந்தாய்; இருந்தபொழுது அவன் ஊடலைத்தீர்த்தற்கு உனதடியைவணங்கினான்; வணங்குகையில், இரத்தினத்தீவஞ்சென்று அங்கே தருமசக்கரத்தைப் பிரவிருத்திக்கச் செய்துவிட்டு வருபவனாகிய சாதுசக்கரனென்னும் பௌத்தசாரணமுனிவனொருவன் உச்சிப்பொழுதில் ஆகாயத்தினின்றும் இறங்கிவர, நீ அவனைக்கண்டு மெய்நடுங்கி மயங்கிக் கலங்கி ஒல்கிப் பணிந்தாய்; அது கண்ட இராகுலன், "இங்கே வந்தவன் யார்?" என்று கோபித்துச்சொல்லும், நீ அஞ்சி நடுநடுங்கி அவன்வாயைப் பொத்தி, "ஆகாயத்தினின்றுமிறங்கிய இப்பெரியோனுடைய மலரடியைவணங்காமலும் இவனைத்

துதியாமலும் இருந்தது எவ்வளவுபெரும்பிழை?" என்று அவனுக்குச் சொல்லி அவனோடுகூட அம்முனிவருடைய பாதங்களைவணங்கி, "யாங்கள் தேவரீருடைய அடியேமல்லேமாயினும்,

அந்தீங் தண்ணீ ரமுதொடு கொணர்கேம் (கள)

அமுதுசெய்தருள்க; தேவரீருடைய திருவுளப்பாங்கின்படியே நடத்தற்கு உரிமையுடையேம" என்று தெரிவித்தலும், அம்முனிவன், "தாயே! உண்பேன்; இங்கே கொண்டுவருக" என்றுசொல்ல, நீ உடனே அவற்றைக்கொணர்ந்து அவனையுண்பித்தாய்;

அந்நா ளவனுண் டருளிய வவ்வறம்
நின்றுங் கொழியாது நின்பிறப் பறுத்திடும்; (சo-சக).

அவ்விராகுலனே உவவனத்தில் உன்பால்வந்த உதயகுமரன்; அதனாலேதான் அவனுடையமனம் உன்னை விரும்பியதன்றி உன்மனமும் அவனை மிகப்பற்றியது. அநதப்பற்றைமாற்றி நல்வழிப்படுத்தற்கு நினைந்து உன்னை இத்தீவிற்கொணர்நதுவைத்து இப்பீடிகையைக் காட்டினேன்; இலக்குமீ! இன்னுங்கேட்பாயாக; முற்பிறப்பில் உன்னுடைய தமக்கைமாராயிருந்த தாரையையும் வீரையையும் அங்கநாட்டுள்ள கச்சயநகரத்தரசனாகிய துசசயனென்பவன் மணஞ்செய்துகொண்டு ஒருநாள் அவர்களோடுசென்று மலைவளங்களைக்கண்டுவந்து கங்கைக்கரையை அடைந்திருந்தபொழுது, அறவணவடிகள் அஙகேவரக்கண்டு உடனே எழுந்து வணங்கிய அவன், "தேவரீர யாவிர்? எங்கே எழுந்தருளியது?" என்று கேட்க, அவர, "பாதபங்கயமலையைத் தரிசித்தற்குவநதேன்; ஆதிகாலத்தே புத்ததேவன் எல்லாவுயிர்களுமதுக்கத்தினின்றுமநீங்கி இன்புற்றிருக்கவேண்டுமென்று நினைந்து அவைகள்யாவும் கேட்டு மகிழும்படி அம்மலையின் உச்சியில் நின்றுகொண்டு தருமோபதேசஞ் செய்தபொழுது அவருடைய பாதசசுவடுகள் தங்கப்பெற்றமையால் அஃது அப்பெயரையுடைத்தாயிற்று; குற்றமற்ற அறிவுடையீர்! நீங்களும் அதைத் தரிசித்து வழிபடுமின்" என்று கூறினர். அவர்கூறியவாறு உடனே சென்று அமமலையையடைந்து தரிசித்த புண்ணியவிசேடத்தால் தாரையுமவீரையும் முறையே மாதவியாகியும் சுதமதியாகியும்வந்து உன்னோடு கூடினர்; மணிமேகலை! நீ பழம்பிறப்பையறிந்தாய்; தருமத்தின் தோற்றத்தையும் தெரிநதுகொண்டாய்; மற்றைசசமயவாதிகளுடைய கொள்கைகளையும் இனி ஒருகாலத்திற்கேட்பாய்; அங்ஙனங்கேட்கும்பொழுது, உன்னை, "இளமைப்பருவத்தினள்" என்றுநினைந்து அவர்கள் தத்தம் சமயவுண்மைகளைச் சொல்லார்கள்; ஆதலால், அக்காலத்து நீ வேற்றுவடிவங்கொள்ளவேண்டுவது இன்றியமையாதது" என்றுகூறி வேற்

* நின்றுங்கொழியாது - நின்னிடத்தைநீங்காது.

றுவடிவைக்கொடுப்பதும் ஆகாயவழியே சஞ்சரிக்கச்செய்வதுமாகிய மந்திரங்களிரண்டை அவளுக்கு உபதேசித்து, "நீ புத்ததேவனருளிச்செய்த நல்லறவழியை நணுகுதல் ஒருதலையென்று உணர்வாயாக; இப்பீடிகையை வணங்கித்துதித்து ஊர்செல்வாயாக" என்று சொல்லிவிட்டு மேலேசெல்லுதற்கு எழுந்து, "இன்னும் ஒன்றைச்சொல்ல மறந்துவிட்டேனே" என்று அத்தெய்வம மீட்டும் இறங்கிவந்து, "சிறந்த விரதவொழுக்கமுடையாய், கேட்பாயாக; மக்கள்யாக்கை உணவாலாகியதொகுதி; இம்மந்திரமோ பசியைத்தொலைக்கும்; இதனைக்கொள்வாயாக" என்று சொல்லி அம்மந்திரத்தை அவளுககு உபதேசித்துவிட்டு எழுந்து ஆகாயவழியே சென்றது.

## கக.—பாத்திரம்பெற்றகாதை.

அப்பால், மணிமேகலை, அத்தீவிலுள்ள மணற்குன்றுகளையும் பூஞ்சோலைகளையும் குளிர்ந்த பொய்கைகளையும் பார்த்துக்கொண்டு மெல்ல உலாவிவருகையில், ஒருத்திவந்துநின்று, 'கப்பல்கவிழப்பெற்ற மகளிர்போல இங்குத் தனியேவந்தநீ யார்?" என்றுகேட்டாள்.

மணிமேகலை, "பொற்கொடிபோல்வாய்! 'நீ யார்' என்றது, என்னுடைய எந்தப் பிறப்பின் செய்தியைத் தெரிநதுகொள்ளுதற்கு? கேட்பாயாக; சென்றபிறப்பில் இலக்குமியென்னும் பெயரையுடையேன்; இராகுலனென்னும் அரசிளங்குமரனுக்கு மனைவியாகவிருநதேன்; இப்பிறப்பில் நாடகக்கணிகையாகிய மாதவியின்வயிற்றிற்பிறநதேன்; என்பெயர் மணிமேகலையென்பது; மணிமேகலாதெய்வம காவிரிப்பூமபட்டினத்துள்ள உவவனத்திலிருந்து இத்தீவிற்கொண்டுவந்து வைத்தமையால், இந்தப் பீடிகையைத் தரிசித்து முற்பிறப்பை யறிநதுகொண்டேன்; இங்கே வந்தமையால் நான் அடைநதபயன் இது; என்னுடைய வரலாறு இதுவாகும்; பூங்கொடிபோல்வாய்! உன் வரலாறுயாது?" என்று கேட்டவுடன், தீவதிலகை "இத்தீவிற்கு அயலிலுள்ளதான இரத்தினத்தீவத்திலே மிகவுயர்நதுவிளங்காநின்ற சமநதகூடமலையின் உச்சியிலேயுள்ள புத்ததேவனது அடியிணைப்படிமைகளைத் தரிசித்துவிட்டு இத்தீவிற்கு முன்னொருகாலத்தில் வந்தேன்; வந்ததுமுதல் இநதிரன் கட்டளையால் இந்தத்தருமபீடிகையைக் காத்துக்கொண்டு இவ்விடத்திலேயேயிருக்கிறேன்; என்பெயர் தீவதிலகையென்பது. புத்ததேவனருளிச்செய்த நல்லறவழியேநடப்போர் யாரேனும் இதனைத் தரிசிப்பாராயின், அவர்கள் அந்தத்தரிசனவிசேடத்தால் உடனே தம்முடைய பழம்பிறப்புணர்ச்சியை அடைவது திண்ணம்; அத்தன்மையினையுடையோர் உலகத்தில் மிக அரியர்; அவர்களுக்கே தருமபதம் உரித்து; இஃது உண்

மை; பழம்பிறப்புணர்ச்சியை யடைந்தமையால், நீ மிகவும் பெரியை; இந்தப்பீடிகைக்குமுன்னே மாமலர்க்குவளையும் நெய்தலும் மயங்கிய கோமுகியென்னும் கொழுநீரிலஞ்சியொன்று உள்ளது; அப்பொய்கையி னுள்ளேயிருந்து அமுதசுரபியென்னும் அக்ஷயபாத்திரமானது, ஒவ்வொருவருடத்தும், புத்ததேவன் அவதரித்த காலமாகிய வைசாகசுத்தபூர்ணிமைதோறும் மேலேவந்து தோன்றுநிற்கும்; இத்தினம் அப்பூர்ணிமையே; அது தோன்றும்வேளையும் இதுவே; இப்பொழுது அந்தப்பாத்திரம உன்கையில வருமென்று எண்ணுகிறேன்; அதிலிடப்பட்ட அன்னம் எடுக்கஎடுக்க மேன்மேலும வளர்ந்துகொண்டேயிருக்கும்; அதன்வரலாற்றை உன்னூரிலுள்ள அறவணவடிகளிடத்தே இனிக்கேட்பாய்" என்று சொல்லலும், மணிமேகலை அதைப்பெறுதற்குவிரும்பிப் புத்தபீடிகையைவந்தித்து அவளோடுகூடிச்சென்று கோமுகிப்பொய்கையை வலஞ்செய்துவந்து நின்றவுடன், அப்பாத்திரம் அப்பொய்கையினுள்ளிருந்து மணிமேகலையின்கையை அடைந்தது; உடனே அவள் அளவுகடந்தமகிழ்ச்சியுற்று நின்று,

"மாரனை வெல்லும் வீர நின்னடி
தீநெறிக் கடும்பகை கடிந்தோய் நின்னடி
பிறர்க்கற முயலும் பெரியோய் நின்னடி
துறக்கம் வேண்டாத் தொல்லோய் நின்னடி
யெண்பிறக் கொழிய விறந்தோய் நின்னடி
கண்பிறர்க் களிக்குங் கண்ணோய் நின்னடி
தீமொழிக் கடைத்த செவியோய் நின்னடி
வாய்மொழி சிறந்த நாவோய் நின்னடி
நரகர் துயர்கெட நடப்போய் நின்னடி
யுரகர் துயர மொழிப்போய் நின்னடி
வணங்குத லல்லது வாழ்த்தலென் னாவிற்
கடங்காது" (கக - எஉ)

என்று புத்ததேவனைத்துதித்தாள்; இங்ஙனந்துதித்தமணிமேகலைக்கு உயிர்களுடைய பசித்துன்பத்தையும் அதனைத் தீர்ப்போருடைய பெருமையையும் தீவதிலகைசொல்லப்புகுந்து,

"குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும்
பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉ
நாணணி களையு மாணெழில் சிதைக்கும்
பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்
பசிப்பிணி யென்னும் பாவியது தீர்த்தோ
ரிசைச்சொ லளவைக் கென்னா நிமிராது; (எசு - அக)

முன்னொருகாலத்தில், கௌசிகமுனிவர் மழையே இல்லாதுபோனமையால், பசியால் வருந்தி அதனைத்தீர்த்துக்கொள்ளுதற்கு எங்குந்திரிந்து சிறிதும் உணவுகிடையாததுபற்றி மெலிந்து பின் நாயிறைச்சியைப்பெற்றுத் தின்னப்புகுந்து, முதலில் அவ்விறைச்சியின் ஒருபகுதியைத் தெய்வங்கட்குப் பலியிடுவாராயினர்; அதுதெரிந்த இந்திரன் உடனே

எங்கும் மழைபெய்யச்செய்தமையால், உயிர்கள் களித்துவாழும்படி விளைவுபெருகியதென்பர்; அதை நீ கேட்டிருப்பையே.

ஆற்றுநர்க் களிப்போ ரறவிலை பகர்வோ
ராற்று மாக்க ளரும்பசி களைவோர்
மேற்றே யுலகின் மெய்ந்நெறி வாழ்க்கை
மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லா
முண்டி கொடுத்தோ ருயிர்கொடுத் தோரே; (கஉ - கக)

ஆதலால், பசியைப்போக்கி உயிரைக்கொடுத்தலாகிய தருமத்தைச்செய்வாய்" என்று கூறினள்; அதுகேட்டமணிமேகலை, "போனபிறப்பில் என்கணவனாகிய இராகுலன் திட்டிவிடமென்னும் பாம்பாலிறந்தது பொறாமல் யான் தீப்பாய்ந்து உயிரொடுவேவாநிற்கையில முன்னம சாதுசக்கரமுனிவனை உண்பித்த நினைவையுடையேனானேன்; இறக்குங்காலத்தில எனக்கு அந்நினைப்பிருந்த புண்ணியவிசேடத்தாலேயே இநதப்பாத்திரம என்கையிற்புகுந்ததென்று எண்ணுகிறேன்; இதுநிற்க. பசியால்வாடிய குழந்தையின்முகத்தைக் கண்டு மனமிரங்கிப் பால்சுரக்கும் தாய்முலை போலவே வயிறுகாய்பெருமபசி அலைத்தற்கு இரஙகி வெயிலென்றும் மழையென்றும் பாராமல் எங்கும வாடியலைநதுதிரியும் ஏழைகளுடைய முகத்தைக்கண்டு இரங்கி இப்பாத்திரம் மேன்மேலும் அவாகளுக்கு அமுது சுரந்தளித்தலைக் காணும் விருப்பமுடையேன்" என்று சொல்லக் கேட்டு மகிழ்ந்த தீவதிலகை, அவளோடு பின்னுஞ் சிலநேரம் அளவளாவிக்கொண்டிருந்து, "இனி இப்பாத்திரத்தோடு உன் ஊருக்குச்செல்வாயாக" என்றுசொல்ல, மணிமேகலை, அவள்பாதத்தைவணங்கிப் புத்த பீடிகையைத்தொழுது வலஞ்செய்து ஆகாயகமனமநதிரத்தை ஜபித்து மேலேயெழுந்து ஆகாயவழியேசென்று, தன்னைக் காணாதுவருநதித் திகைத்து மயங்கி வழியைநோக்கிக்கொண்டேநிற்கும் சுதமதியையும மாதவியையும் பார்த்து, வியப்படையும்வண்ணம அவர்களுடைய முற்பிறப்பை அவர்களுக்கு அறிவித்து, "மானிடயாக்கையாற் பெறுதற்குரிய தவவழியை அறவணவடிகளிடத்தே இனிப் பெறக்கடவீர்; இஃது ஆபுத்திரனுடையகையிலிருநத அமுதசுரபியென்னும் அக்ஷயபாத்திரமாகும்; இதனைத் தொழுமின்" என்றுசொல்லி, அதனை அன்புடன் தொழுத அவர்களை அழைத்துக்கொண்டு அறவணவடிகளைத தரிசித்தற்குச் சென்றாள்.

## கஉ.—அறவணர்த்தொழுதகாதை.

சென்றவள், "அறவணவடிகள் எங்கேயுள்ளார்" என்று விசாரித்துக்கொண்டுபோய்,

நரைமுதிர் யாக்கை நடுங்கா நாவி
னுரைமூ தாள னுறைவிடங் குறுகி, (க - ச)

அவரைத்தரிசித்து மும்முறைபணிந்து துதித்துத் தான் உவவனஞ்சென்றதும், உதயகுமரன் அங்கேவந்து சொல்லிப்போனதும், பின்பு மணிமேகலாதெய்வம் தன்னையெடுத்துச்சென்று மணிபல்லவத்தில்வைத்ததும், அத்தீவிலுள்ள புத்தபீடிகைக்காட்சியால் தன் பழம்பிறப்பைத் தானறிந்துகொண்டதும், "முற்பிறப்பிற்கணவனாகவிருந்த இராகுலனே உதயகுமரனாக வந்துபிறந்தான்; அப்பிறப்பில் உனக்குத் தமக்கைமார்களாகவிருந்த தாரையும் வீரையுமே மாதவியும் சுதமதியுமாக வந்தனர்; அவர்கள் வரலாற்றை அறவணவடிகள்பால் நீ தெரிந்துகொள்" என்று மணிமேகலாதெய்வஞ்சொல்லி மூன்றுமந்திரங்களை யுபதேசித்துச்சென்றதும், அப்பால் தீவதிலகைவந்ததும், அவளுடன்சென்று கோமுகிப் பொய்கையிலிருந்த அமுதசுரபியைப்பெற்றதும், "ஊருக்குச்சென்று அறவணவடிகள்பால் ஆபுத்திரன்வரலாற்றை நீ கேள்" என்று அத்தீவதிலகைசொல்லத் தான்வந்ததும ஆகிய இவற்றையெல்லாந்தெரிவிக்க, அம்முனிவர்கேட்டு மகிழ்ந்து, "முன்பு ஒருமுறை நான் பாதபங்கயமலையைவழிபட்டு மீண்டுவருகையில துச்சயராசனை ஒரு சோலையிற்கண்டேன்; "அரச, நீயும உன்மனைவியரும சுகமோ?" என்று யான்வினவ, அவன் மனங்கலங்கி அரற்றிக்கொண்டு, வீரை மதுவின்மயக்கத்தால் ஓரியானைமுன்சென்று இறந்ததும், அச்செய்தியைக்கேட்டுவருந்திய தாரை ஒருமாடத்தின்மீதேறி விழ்ந்து மரித்ததுமாகிய பெருந்துன்பத்தைக்கூறி வருந்தினன்; நான் "இது பழவினைப்பயனாகும; ஆதலால், நீ வருந்தாதே" என்று சொல்லிப்போந்தேன்; அங்ஙனமிறந்த நீவிர் இப்போது கூத்தரைப்போல வேறுவேடம பூண்டுவந்தீர்கள்" என்று மாதவியையும் சுதமதியையும்பார்த்துச் சொல்லிவிட்டு, பின்னும் மணிமேகலையைப்பார்த்து, "இவ்வுலகிற் பௌத்ததருமங்கள்குறையப் பாவங்கள்மிகுத்தன; ஆனாலும், சிறிதுசிறிது தருமமுண்டாதலுங்கூடுமென்று எண்ணி நான் தருமத்தை உபதேசித்துவருதலுமுண்டு; அத்தருமத்தை இவ்வுலகத்திலுள்ள மாந்தரறியார்; இவ்வுண்மையையறிந்த இச்சக்கரவாளத்துள்ள தேவர்களுடைய வேண்டுகோளால், *ஆயிரத்தறுநூற்றுப் பதினாறுமாண்டில் துஷிதலோகத்திலுள்ள தேவன் இவ்வுலகத்தில் அவதரிப்பான்; அதற்குப்பிற்பாடு யாவருக்கும் அருளறத்தில் மனஞ்செல்லும்;

புத்த ஞாயிறு தோன்றுங் காலைத்
திங்களு ஞாயிறுந் தீங்குறா விளங்கத்
தங்கா நாண்மீன் றகைமையி னடக்கும்
வானம் பொய்யாது மாநிலம் வளம்படும்

---

* இங்கே கூறப்பட்டுள்ள ஆண்டு இன்னசகாப்தத்தைச்சார்ந்ததென்று புலப்படவில்லை; ஆண்டு - வருடம்.

ஊனுடை யுயிர்க ளுறுதுயர் காணா
வளிவலங் கொட்கு மாதிரம் வளம்படும்
நளியிரு முந்நீர் நலம்பல தரூஉம்
கறவைகன் றார்த்திக் கலநிறை பொழியும்
பறவை பயன்றுய்த் துறைபதி நீங்கா
விலங்கு மக்களும் வெரூஉப்பகை நீங்கும்
கலங்களுர் நரகரும் பேயுங் கைவிடும்
கூனுங் குறளு மூமுஞ் செவிடு
மாவு மருளு மன்னுயிர் பெறாஅ
அந்நாட் பிறந்தவ னருளறங் கேட்டோ
ரின்னாப் பிறவி யிகந்தோ ராதலிற்
போதி மூலம் பொருந்திய சிறப்பி
ணாதன் பாத நவைகெட வேத்துதல்
பிறவி தோறு மறவேன் மடக்கொடி" (அசு - கOரு)

இதுநிற்க; மணிமேகலை! இந்நகரத்தில் உன்னாலே சிலவிசேடங்கள் உள்ளனவாம்; அவை நிகழ்ந்தபின்பன்றி யான்கூறுநதருமமொழி உன் மனத்திற்பொருந்தாது; இவ்விருவரும் முற்பிறப்பிற் பாதபங்கயமலை யை வழிபட்ட புண்ணியவிசேடத்தால் பிற்காலத்தில் உன்னோடுகூடிப் புத்ததேவனது திருவடியைத்தொழுது வணங்கி வினைகளினின்றும் நீங்கி நிருவாணமடைவார்கள்; உயிர்மருநதாகிய மிகசசிறந்த அமுதசுர பியை நீபெற்றனை; எல்லாவுயிர்களுடைய பசியையும தீர்ப்பாயாக;

மக்க டேவ ரெனவிரு சார்க்கு
மொத்த முடிவி னோரற முரைக்கேன்
பசிப்பிணி தீர்த்தல்" என்றே யவருந்
தவப்பெரு நல்லறஞ் சாற்றினர். (கககூ - ககக)

மணிமேகலையும் அங்ஙனமே செய்வேனென்றாள்.

## கரு.—ஆபுத்திரன் றிறமறிவித்தகாதை.

பின்பு அறவணவடிகள் மணிமேகலையைநோக்கி, "ஆபுத்திரன் வரலாற்றைக்கூறுவேன்; கேட்பாயாக; வாரணாசியென்னுமூரில் வேத மோதுவிப்பவனாகிய அபஞ்சிகனென்னும் அநதணன்மனைவி, சாலியென் பாள்; அவள் நியமந்தப்பியொழுகினமையால் உண்டாகிய பாவத்தைத் தீர்த்துக்கொள்ளும்பொருட்டு, தான் கருப்பிணியாகவிருநதும் அதைப் பாராமல் கன்னியாகுமரிக்கு நீராடச்சென்றாள்; சென்றவள் சூலால்வரு நதி வழியிடையேபெற்ற குழந்தையிடத்தில் சிறிதும் இரக்கம்வையா மல் அக்குழந்தையை ஒருதோட்டத்தில் இட்டு நீங்கினள்; நீங்கவே அக் குழந்தை உணவுபெறாது பசியால் வருந்தியழுதது; அவ்வழுகையோ சையைக்கேட்டு ஒருபசுவானதுவந்து அதன் வருத்தந்தீரும்படி நாவால் நக்கிப் பாலூட்டி ஏழுநாள்வரையும் அப்புறஞ்செல்லாது பாதுகாத்துக்

கொண்டிருந்தது; அப்படியிருக்கையில், வயனங்கோடென்னும் ஊரி லுள்ளவனாகிய பூதியென்னும் அந்தணனொருவன் தன் மனைவியோடும் அவ்வழியேவருபவன், அக்குழந்தையழுத கூக்குரலைக்கேட்டுச் சென்று தனியேகிடக்கும் அதைக்கண்டு மிக்க துன்பத்தோடு கண்ணீர்பெருக்கி, 'இவன் பசுமகனல்லன்; என்மகனே' என்றுகூறி அக்குழந்தையை யெடுத்து ஊர்சென்று வீடடைந்து மகிழ்ச்சியுடன்வளர்த்து உரியகாலத் துத் தன்குலத்துக்குரிய கல்விகளை நன்குபயிற்றிவருகிறான்; வருகையில், அச்சிறுவன், ஒருநாள் அவ்வூரில் ஓரந்தணன்வீட்டிற்புகுந்து, யாகசாலை யில் ஒருபசு மாலையைச்சுற்றிய கொம்புகளையுடையதாய்ப் பின்பு தனக் குண்டாகும் துன்பத்திற்கு அஞ்சி வெய்துயிர்த்துப்புலம்பி வேடர்களு டைய வலையிற்பட்ட மான்போல அஞ்சிக் கதறுவதைக்கண்டு மனநடுங் கிக் கண்ணீருகுத்து, 'இவர்களறியாதவண்ணம் இப்பசுவைக் கவர்ந்து கொண்டு இரவிற்போய்விடுவேன்' என்று தன்னுள் எண்ணிக்கொண்டே ஒருபக்கத்தில் ஒதுங்கியிருந்து அன்றிரவில் அப்பசுவைக் கையிற்பற்றி ஊருக்குவெளியே போய்விட்டான்; பசுவைக்காணாத அந்தணர்கள் பலர் அதனைத்தேடிச்சென்று, வழியில் பசுவையும் அதனைக் கவர்ந்துசென்ற அச்சிறுவனையுங்கண்டு அகப்படுத்திக்கொண்டு, அவன் கருத்தையறியா ராய், "புலையா, இப்பசுவை இரவில் ஏன் கவர்ந்துசென்றாய்?" என்றுகேட்டு அவனைக் கோலாலடித்து ஒறுக்கத்தொடங்கினர். அப்பொழுது பசு, வருத்துகின்ற உபாத்தியாயனைமுட்டி வயிற்றைக்கிழித்துக் குடரைப் புறப்படச்செய்துவிட்டுக் காட்டில் விரைந்தோடிவிட்டது. ஆபுத்திரன் அவர்களைநோக்கி, "வருத்தன்மின்; யான் சொல்வனவற்றைக்கேண்மின்; நீங்கள் வருத்தும்படி இப்பசு என்னகுற்றஞ்செய்தது

> விடுநில மருங்கிற் படுபுல் லார்ந்து
> நெடுநில மருங்கின் மக்கட் கெல்லாம்
> பிறந்தநாட் டொட்டுஞ் சிறந்ததன் றீம்பா
> லறந்தரு நெஞ்சோ டருள்சுரந் தூட்டு
> மிதனொடு வந்த செற்ற மென்னை?" (ருக - ருரு).

என்றுசொல்ல, அவர்கள், "நீ வேதவிதியையறியாமல் வேள்வியை இகழுகின்றாய்; ஆதலால், பசுமகனென்பதற்குப் பொருத்தமுடையை" என்று இகழ்ந்துகூறலும், ஆபுத்திரன்,

> "ஆன்மக னசலன் மான்மகன் சிருங்கி
> புலிமகன் விரிஞ்சி புரையோர் போற்று
> நரிமக னல்லனோ கேச கம்பள
> னீங்கிவர் நுங்குலத் திருடி கணங்களென்
> றோங்குயர் பெருஞ்சிறப் புரைத்தலு முண்டா
> லாவொடு வந்த வழிகுல முண்டோ" (சுரு - சுஅ)

என்று சொல்ல, அவர்களுள்ளே ஓரந்தணன், "இவனுடைய பிறப்பின்

வரலாற்றை யான் அறிவேன்; முன்னொருநாள், கன்னியாகுமரியில் விதிப்படி நீராடிவிட்டு வருத்தத்தோடு வந்த சாலியென்னும் ஒரு பார்ப்பனியைக் கண்டு, "உன் ஊர் யாது? நீ எதற்காக இங்கே வந்தனை?" என்று நான் கேட்டதற்கு அவள், "யான், வாரணாசியென்னுமூரிலுள்ள ஆரணஉவாத்தியாகிய ஓரந்தணன் மனைவி; யானொழுகிய தீயவொழுக்கத்தாற் கணவனைப்பிரிந்து கன்னியாகுமரிக்கு நீராடச்செல்லுகையில், கொற்கை நகரத்துக்கு அப்பாற் காதவழித்தூரத்துள்ள இடையர்சேரியில் ஆண்குழந்தையொன்றைப் பெற்று இரக்கமின்றி அதனை அங்குள்ள ஒரு தோட்டத்தில் இட்டுப்போனேன்; இப்படிப்பட்ட தீவினையேனாகிய எனக்கு நற்கதியுண்டோ" என்று மிகத் துன்புற்று அழுதாள்; அங்ஙனமழுதவள்பெற்ற அந்தமகனே இவன்; இதைச் சொலலுதலால் யாதுபயனென்று இதுகாறும் உங்களுக்குத் தெரிவியாதிருந்தேன்; அசுத்தனாதலால் இவனைத் தொடாதொழிமின்" என்று சொலல, ஆபுத்திரன், "திலோத்தமையின் புத்திரர்கள் பெரியமுனிவர்களாக இருததல் கேட்டிலிரோ; நீங்கள் *சாலிக்குத் தவறுகூறத் துணிநதீர்களே" என்றுசொல்லி அவர்களைப்பார்த்து நகைத்தான். வளர்த்த பூதியும் அசுத்தனென்று எண்ணி உடனே அவனை நீக்கிவிட்டான். பசுவைத்திருடின கள்வனென்று இகழ்ந்து அந்தணர்களுடைய கிராமங்களிலெல்லாம அவனுடைய பிசசைப் பாத்திரத்திற் கல்லிடத்தொடங்கினார்கள்; அதனால், வேறு புகலின்றித் தென்மதுரையையடைநது சிநதாதேவியின்கோயிலாகிய கலைநியமத்தின் முன்னேயுள்ள அமபலத்தையே யிருப்பிடமாகக்கொண்டு கையிற் பிசசைப்பாத்திரத்தையேநதி வீடுகள்தோறும செனறுசென்று வாங்கிவநத

> காணார் கேளார் கான்முடப் பட்டோர்
> பேணுந ரில்லோர் பிணிநடுக் குற்றோர்
> யாவரும் வருகவென் றிசைத்துட னூட்டி, (கககக - ககரு).

அவர்களுண்டொழித்த மிசசத்தையே தானுண்டு பிசசையோட்டைத் தலையணையாகவைத்துக்கொண்டு அவ்வமபலத்தின்கண்ணே நாள்தோறும் இரவிற் கண்படைபுரிந்து காலங்கழித்துவந்தான்.

## கச.—பாத்திரமரபுகூறியகாதை.

அப்படி நிகழுங்காலத்தில், அவனுக்கு ஒருநாள் அங்கே நிகழ்ந்த செய்தியைச்சொல்லுவேன்; கேட்பாயாக; அவன் அவ்வம்பலத்தில் ஓரிரவில் தூங்கும்பொழுது, சிலர்வந்து, "பெரும்பசி எங்களை வருத்தாநின்றது" என்றார்கள்; அதைக்கேட்ட அவன் அத்துன்பத்தைத்தீர்த்தற்கு

* சாலியென்பதற்கு அருந்ததியென்றும் ஒருபொருள்தோன்றிற்று.

ஆற்றலில்லாதவனும் மிக்க வருத்தமடைந்தான்; அச்சமயத்திற் சிந்தா தேவி எழுந்தருளிவந்து, "இதனைக்கொள்வாயாக; நாடெல்லாம் வறுமையுற்றாலும் இவ்வோடு வறுமையையடையாது; கொடுக்கக்கொடுக்க இதில் உணவு வளர்ந்துகொண்டேயிருக்கும்" என்றுசொல்லித் தன் கையிலுள்ள அக்ஷயபாத்திரமொன்றை அவன்கையிற்கொடுத்தாள்; உடனே அவன், அளவுகடந்தமகிழ்ச்சியடைந்து,

"சிந்தா தேவி செழுங்கலை நியமத்து
நந்தா விளக்கே நாமிசைப் பாவாய்
வானோர் தலைவி மண்ணோர் முதல்வி
யேனோ ருற்ற விடர்களைவாய்" (கஎ - உ0).

என்று துதித்து அவளைப்பணிந்து, முன்பு பசித்துவந்திரந்தவர்களை ஊட்டி மகிழ்வித்து, அன்றுமுதல் எல்லாவுயிர்களுக்கும் உணவளிப்பானாயினன்; உண்பதற்காக முனிதர்கள்பலர் அவனைச் சூழ்ந்துகொண்டார்கள்; விலங்குகளும் பறவைகளும் அவனைப் பிரியாவாய் அன்புடன் சுற்றிக்கொண்டன; அப்படியிருக்கையில், ஒருநாள் அவனதுபுண்ணியமிகுதியைத் தனது *பாண்டுகம்பளநடுக்கத்தால் அறிந்த இந்திரன், அவனுக்கு வரங்கொடுக்கநினைந்து ஒரு முதியவேதியனது வடிவுகொண்டுவந்து நின்று, "நான் இந்திரன்; வரங்கொடுத்தற்கு வந்தேன்; நீ விரும்பியது யாது? உன்னுடைய பெரிய தானத்தின்பயனைப் பெற்றுக்கொள்வாயாக" என்றுசொல்ல, ஆபுத்திரன் விலாவெலும்பு ஒடியும்வண்ணஞ் சிரித்து,

"அறஞ்செய் மாக்கள் புறங்காத் தோம்புநர்
நற்றவஞ் செய்வோர் பற்றற முயல்வோர்
யாவரு மில்லாத் தேவர்நன னாட்டுக்
கிறைவ னாகிய பெருவிறல் வேந்தே! (சஎ - சரு).

வருந்திவந்தவர்களுடைய தீர்த்தற்கரியபசியினைத்தீர்த்து அவர்களுடைய இனியமுகத்தை யான் காணும்படிசெய்கின்ற எனது தெய்வப்பாத்திரம் ஒன்றே போதும்; வேறொன்றும் வேண்டற்பாலதன்று" என்று அவனை மதியாதுசொன்னான்; சொல்லவே இந்திரன் கோபித்துப் பசித்துன்பத்தால் வருந்துவோரில்லாமலிருக்கும்படி செய்வேனென்றுநினைந்து எங்கும் மழைபெய்வித்து மிக்க செல்வத்தையுண்டாக்கினன்; அதனால், பசித்துவருவோர் இலராயினர்; அதுகண்டு ஆபுத்திரன் முன்னிருந்த அம்பலத்தைநீங்கி ஊர்கள்தோறும்போய், "உண்போர்யாரேனுமுண்டோ?" என்று வினவத்தொடங்கினான்; அதுகேட்டுச் செல்வக்களிப்பால் யாவரும் அவனை யிகழ்ந்தார்கள்; உண்போரைப் பெறாமையால், அவன்

* பாண்டுகம்பளம் - வெள்ளைக்கம்பளம்: தனது பாண்டுகம்பள நடுக்கத்தைக் கொண்டு உலகிலுள்ள சில நிகழ்ச்சிகளை இந்திரன் அறிந்துகொள்வானென்றுகூறுதல் பௌத்தர்களுடைய வழக்கமென்று தெரிகின்றது.

பெருஞ்செல்வத்தையிழந்தோனைப்போல வருந்தித் தனியேசெல்லுகையின், கப்பலில்வந்த சிலர், அவனைக்கண்டு, சாவகநாடு மழையில்லாமையால் மிகுந்த வறுமையுற்றதென்றும் அதிலுள்ளவுயிர்கள் பெரும்பாலும் பசியால் இறந்தனவென்றும் கூறினர்; அதுகேட்டு அவன் அந்நாட்டிற்குச்செல்வேனென்றுநினைந்து கப்பலேறினன்; அக்கப்பல்சென்று மணிபல்லவத்தினருகே ஒருநாள் தங்கிற்று; அவன் அத்தீவில் இறங்கினன்; மீகாமன், இறங்கிய ஆபுத்திரன் ஏறிவிட்டானென்று எண்ணி இருளில் அக்கப்பலைச் செலுத்திக்கொண்டுபோயினன். போனதுதெரிந்து அவன் மிகுந்தவருத்தமடைந்து, பலர்க்கு உணவளிக்கும் இப்பாத்திரத்தை வைத்துக்கொண்டு யாருமில்லாத இத்தீவில் யான்மட்டும் இரேன்" என்று எண்ணி அப்பாத்திரத்தைத் தொழுது, "வருடத்திற்கு ஒருநாள் நீ தோன்றுவாயாக" என்றுகூறிக் கோமுகிப்பொய்கையில் அதைவிடுபவன், "மிக்ககருணையோடுகூடித் தருமஞ்செய்தலையே மேற்கொண்டு எல்லாவுயிர்களையும் பாதுகாப்போர் யாரேனும்வரின் அவர்கையிற் புகுவாயாக" என்றுசொல்லி அப்பொய்கையில்விட்டுவிட்டுத் தான் பட்டினியிருந்து உயிர்துறப்பானாயினன். அப்பொழுது அத்தீவிற்குச்சென்ற யான் அவனைக்கண்டு, "நீ யாதுதுன்பமடைந்தாய்" என்றுகேட்க, நிகழ்ந்தவற்றைச்சொல்லி மணிபல்லவத்தில் உடம்பைப்போகட்டுவிட்டு எல்லாவுயிர்களையும் பாதுகாக்குமெண்ணத்தோடுசென்று சாவகநாட்டரசனுடைய பசுவயிற்றிலுதித்தான்.

## கரு.—பாத்திரங்கொண்டுபிச்சைபுக்ககாதை.

மணிமேகலை! இன்னும் கேட்பாயாக; முன்பு ஆபுத்திரனுக்கு ஏழுநாள்வரையும் பாலூட்டிய பசுவானது, அப்புண்ணியவிசேடத்தால் சாவகநாட்டில் தவளமலையில் தவஞ்செய்துகொண்டிருக்கும் மண்முகமுனிவனிடத்தே, பொன்மயமாகிய கொம்புகளையும குளம்புகளையும் உடையதாய்ச்சென்று, ஈனுமுன்னமே பால்சுரந்து எல்லாவுயிர்களையும் உண்ணச்செய்துகொண்டிருந்தது; அதனைக்கண்டு, முக்காலவுணர்ச்சியையுமுடைய அம்முனிவன், "இப்பசுவயிற்றில் எல்லாவுயிர்களையும் பாதுகாக்கும் ஒரு விசேடபுருடன் பொன்மயமான முட்டையினிடம் தோன்றுவன்" என்று கூறினன். தருமஞ்செய்தற்காகவே மணிபல்லவத்தில் இறந்த ஆபுத்திரன் தன்னைக் குழவிப்பருவத்தே காத்தளித்தபசுவை எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருந்தவனாதலின், மண்முகமுனிவன்கூறியவாறே அப்பசுவயிற்றில் தோன்றினன்; அவன் தோன்றியகாலம் வைசாகசுத்தபூர்ணிமை; அப்பொழுது சில நன்னிமித்தங்கள் நிகழ்ந்தன. அதுதெரிந்த சக்கரவாளக்கோட்டத்துள்ள முனிவர்கள், "புத்தன் அவதரிக்கும்

காலத்தல மதானறும நிமித்தங்கள் இப்பொழுது நிகழ்வதற்குக் காரணம் என்ன?" என்று வியப்புற்று, அதனுண்மையைத் தெரிந்துகொள்ளுதற்குக் கந்திற்பாவையையடைந்து வினவினர்கள்; அது, "மணிபல்லவத்தில் இறந்த ஒரு விசேடபுருடன் உயிர்களைப் பாதுகாத்தற்காகச் சாவகநாட்டிலுதித்தான்; அதனாலேதான் நன்னிமித்தங்கள் நிகழ்ந்தன. அவன் வரலாற்றை அறவணன்பாற் கேண்மின்" என்றுசொல்லி என்பாலனுப்பி எனது நாவைவருத்தியது; மகப்பேறில்லாமல் வருந்துபவனாகிய அந்நகரத்தரசன்பூமிசந்திரனென்பவன் மண்முகமுனிவனைவணங்கி மேற்கூறிய பசுப்பெற்ற குழந்தையை வாங்கிக்கொண்டுசென்று வளர்த்துவந்தான்; அச்சிறுவன் இப்பொழுது அரசுரிமைபெற்று வாழ்கின்றான்; இதுநிற்க; காவிரிமாநதி மாறாது நீர்பெருகி இந்நாட்டைவளமுறச் செய்தும் யாதுகாரணத்தினாலோ உயிர்கள் வறுமையால்வருந்துகின்றன; ஆதலால்,

> வெண்டிரை தந்த வமுதை வானோ
> ருண்டொழி மிச்சிலை யொழித்துவைத் தாங்கு, (கூ௧ - கூ௨).

மிகப் பயன்படுகின்ற இவ்வமுதசுரபியை நீ சும்மாவைத்திருத்தல் தகுதியன்று" என்றுகூறினர். அதைக்கேட்ட மணிமேகலை, உடனே அவரை வணங்கித் துதித்துப் பிக்குணிக்கோலம்பூண்டு, அப்பாத்திரத்தைக் கையிலேந்தி வீதியையடைந்தாள்; அடையவே, உச்சயினிநகரத்தரசனாகிய பிரச்சோதனனென்பவன் உதயணனை வஞ்சித்துச் சிறைப்படுத்தியபொழுது, அவனைச் சிறைமீட்டற்கு அவன்மந்திரியாகிய யௌகந்தராயணனென்பவன் வேற்றுவடிவங்கொண்டு வீதியையடைந்தகாலத்தில், அவனைக்கண்டு துன்புற்று அந்நகர் சூழ்ந்தாற்போலப் பிக்குணிக்கோலத்தையுடைய மணிமேகலையைக்கண்ட பலரும், "உதயகுமரனுடைய உள்ளத்தில் ஒளித்திருக்குமிவள் எல்லாருங்காணும்படி பிச்சைப்பாத்திரத்தையேந்தி வீதியையடைந்தது என்ன வியப்பு!" என்றுகூறித் துன்புற்று அவளைச் சுற்றிக்கொண்டனர். அப்பொழுது மணிமேகலை, "கற்புடைமாதர் இடும் ஐயத்தையே முதலில் ஏற்றுக்கொள்ளுதல் தகுதி" என்றுசொல்ல, காயசண்டிகை "மழையைத்தரும் கற்புடைமாதர்களுள் மிகமேம்பட்டவளாகிய ஆதிரையென்பவளுடைய வீடு இது; நீ இதிற் புகவேண்டும்" என்று அவளுக்குக் கூறினள்.

## கச.—ஆதிரைபிச்சையிட்டகாதை.

அங்ஙனங்கூறிய காயசண்டிகை, மீட்டும் மணிமேகலையைநோக்கி, "இந்த ஆதிரையின் கற்புவிசேடத்தைக் கேட்பாயாக; இவள்கணவன் சாதுவனென்பான்; அவன் ஒருபரத்தையின் இணக்கத்தாற் கைப்பொருளிழந்து வறுமையுற்று வேறுதேயம்போய்ப் பொருள்தேடவெண்ணிச்

இலவணிகரோடு கப்பலேறிச்சென்றான்; செல்லுகையில் கடுங்காற்றால் அக்கப்பல்கவிழ்ந்தது; கவிழவே சாதுவன் அதிலிருந்து ஒடிந்துவிழுந்த பாய்மரத்துண்டமொன்றைத் தெப்பமாகப்பற்றிக்கொண்டு நீந்திச்சென்று, உடையில்லாது சஞ்சரிப்பவர்களாகிய நாகருடையமலைப்பக்கத்தை அடைந்தான்; அஃதங்ஙனமாக; அக்கப்பலினின்றும் நழுவியமரத்தைப் ப ற்றிக் கடலில்நீந்திப் பிழைத்துக் காவிரிப்பூம்பட்டினம் வந்தோர், ''த ப்பலுடைய இறந்தவர்களோடு சாதுவனுமிறந்தான்'' என்று ஆதிரைக் குக் கூறினர்; அதுகேட்ட அவள், மிக்க வருத்தமடைந்து இறக்கத் துணி ந்து மயானத்திற் குழிதோண்டி அதில் விறகுகளை அடுக்குவித்துத் தீயைமூ ட்டி, "வினைப்பயனால் என்கணவனடைந்த இடத்தை நானுமடையக்கட வன்" என்று சொல்லி அதிற்புகுந்தாள்; புகுந்தவளை அத்தீயானது சுட தொழிந்தது; ஒழியவே அவள், "தீயுஞ்சுடாதபாவியேன் இனி யாதுசெய் வேன்" என்று ஏங்குகையில், ஆகாயவாணியானது, "ஆதிரை! உன் கணவ ன் இறக்கவில்லை; அவன் பிழைத்துச்சென்று இப்பொழுது நாகர்மலையிலிருக்கிறான்; அங்கே பலவருடந்தங்கான்; சந்திரதத்தனென்னும் வாணிகனுடைய கப்பல்வழியேவந்து உன்னையடைவான்; நீ வருந் தாதே" என்று கூறிற்று; அதைக்கேட்ட ஆதிரை வருத்தமொழிந்து வீடடையடைந்து கணவன் விரைந்துவருதலைக்குறித்து அதற்கேற்ற புண்ணியங்களை இடைவிடாது செய்துகொண்டிருந்தாள்; அங்கே நாகர் மலையையடைந்த சாதுவன், ஒருமரநிழலைச்சார்ந்து அயர்ச்சியால் துயில் கொள்ள, அம்மலையிலுள்ளநாகர்கள்வந்து இவ்வுடம்பு நமக்கு நல்லவுணவாகுமென்றெண்ணி அவனை எழுப்பினர்; அவன் அவர்கள்பாஷையை விளங்கக்கற்றவனாதலால், அவர்களோடுபேச, அவர்கள் அவனைவருத்துதலைத் தவிர்ந்து, "எங்களாசிரியன் ஒருவனிருக்கின்றான்; அவனிடம் நீ வரவேண்டும்" என்று அழைத்துச்சென்றார்; சாதுவன், அவர்களோடும் போய்,

> கள்ளடு குழிசியுங் கழிமுடை நாற்றமும்
> வெள்ளென் புணங்கும் விரவிய விருக்கையி
> லெண்குதன் பிணவோ டிருந்தது போலப்
> பெண்டுட னிருந்த, (௬௩ - ௬௬)

அவர்களுடைய குருமகனைக்கண்டு அவனோடுஅளவளாவி அவனைவயமாக்கிக்கொண்டான்; கொள்ளவே அக்குருமகன், "நீ இங்குவந்தது எதன் பொருட்டு?" என்ன, சாதுவன் நிகழ்ந்ததைக்கூறினன். அவன், "பசியால் வருந்தியவிவனுக்கு வேண்டியவளவு கள்ளையுமூனையுங்கொடுத்துப் பின் இளையளாகிய நங்கை ஒருத்தியையுங்கொடுமின்" என்றுசொன்னான். சாதுவன் அதுகேட்டு அவனுடைய அறியாமைக்குவருந்தி, "எனக்கு

அவைவேண்டா" என்றான்; அவன், "பெண்டிரையும் உண்டியையுமன்றி மாந்தர்க்கு இன்பந்தருவது வேறே யாதுளது? இருந்தாற்சொல்வாய்" என்று கோபித்துச்சொல்ல, சாதுவன்,

"மயக்குங் கள்ளு மன்னுயிர் கோறலுங்
கயக்கறு மாக்கள் கடிந்தனர் கேளாய்
பிறந்தவர் சாதலு மிறந்தவர் பிறத்தலு
முறங்கலும் விழித்தலும் போன்ற துண்மையின்
நல்லறஞ் செய்வோர் நல்லுல கடைதலும்
அல்லறஞ் செய்வோ ரருநர கடைதலும்
உண்டென வுணர்தலி னுரவோர் களைந்தனர்" (௮௪ - ௯௦).

என்றுகூறினன்; பின்பு அவன்கேட்ட வினாக்களுக்கெல்லாம் தக்கவாறு விடைகூறி மறுபிறப்பும் புண்ணியபாவங்களும் அவற்றால்வரும் இன்ப துன்பங்களுமுண்டென்பதை அறிவுறுத்தி இறக்கும்வரையும் நடக்க வேண்டியமுறைமையையும் அவனுக்கு இயையத்தெரிவித்து விடைபெற்று, அவன்கொடுத்த சந்தனம் அகில் துகில் முதலியவற்றைக் கைக்கொண்டு, அங்குவந்த சந்திரதத்தனென்னும் வாணிகனுடைய கப்பலிலேறி இந் நகரையடைந்து இவளோடு வாழ்வானாகிப் பல தானங்களுஞ்செய்தான். அப்படிப்பட்ட மேம்பாட்டையுடையளாகிய இந்த ஆதிரையின்கையால் முதலிற் பிச்சைபெறுக" என்றுசொல்ல, மணிமேகலை, அவளுடைய மனையிற்புகுந்து வாய்பேசாமற் சித்திரம்போல நின்றாள்; நின்றவுடன்,

தொழுது வலங்கொண்டு துயரறு கிளவியோ
டமுத சுரபியி னகன்சுரை நிறைதர,
"பாரக மடங்கலும் பசிப்பிணி யறுக"என
ஆதிரை யிட்டன *ளாருயிர் மருந்து. (௧௬௨ - ௧௬௫).

## கஎ.—உலகவறவிபுக்ககாதை.

ஆதிரையளித்த பிச்சையை முதலில் ஏற்றபின்பு அமுதசுரபியி லுள்ள சோற்றுத்திரளை,

அறத்தி னீட்டிய வொண்பொரு ளறவோன்
றிறத்து வழிப்படூஉஞ் செய்கை போல, (௩ - ௪).

எடுக்க எடுக்கக் குறையாமல் மேன்மேலும் வளர்ச்சியையடைந்து, வந் தோருடைய பசியைப் போக்கி விளங்கிற்று. அதுகண்ட காயசண்டிகை வியந்து மணிமேகலையை வணங்கி, "அன்னாய்! என்னுடைய தீராப்பசியை யும் தீர்த்தருளவேண்டும்" என்று வேண்டினள்; உடனே மணிமேகலை, அமுதசுரபியிலிருந்து ஒருபிடியமுதையெடுத்து அவளதுகையிலிட்டாள். அதனையுண்டு அப்பசிநோய்தீர்ந்து மகிழ்ந்த காயசண்டிகை, "வடதிசை யில் வித்தியாதரருலகிலுள்ள காஞ்சனபுரமென்பது என்னுடைய ஊர்;

---

* ஆருயிர்மருந்து - அன்னம்.

தென்றிசைச்சென்னதாவிப் பொதியின்மலையின்வளங்களைக் காண்பதற்குக் கணவனும் யானும் புறப்பட்டுப்போந்து இடையேயுள்ள காட்டாறொன்றின் கரையிலிருந்தேம். இருக்கையில், விருச்சிகனென்னு முனிவனொருவன் பாரணஞ்செய்தற்குப் பனங்கனிபோன்ற பருமையையுடைய நாவற்கனியொன்றைத் தேக்கிலையில்வைத்துவிட்டு நீராடச்சென்றான். அக்கனி அம்முனிக்கு உணவாகுமென்பதனை அறியாதநான் முற்பிறப்பிற் செய்த தீவினையின்முதிர்ச்சியாற்சென்று அக்கனியைக் காலாற் சிதைத்துக்கெடுத்தேன்; நீராடி மீண்டுவந்த விருச்சிகன் அக்கனி என்னாற் சிதைந்திருத்தலையறிந்து கோபித்துத் தெய்வத்தன்மையுள்ளதும் பன்னிரண்டுவருடத்துக்கு ஒருமுறை ஒருகனியைத்தருவதுமாகிய நாவன்மரத்தினுண்டானது இது; இதையுண்டோர் பன்னிரண்டுவருடம் பசியொழிந்திருப்பார்; நானோ பன்னிரண்டுவருடம் பட்டினியிருந்து ஒருநாளுண்ணும் விரதமுடையேன்; உண்ணுந்தினமும் இன்றுதான்; யான் உண்ணக்கருதிய கனியும் இதுவேகாண்; இதனை நீ அழித்துவிட்டாய்; ஆதலால் ஆகாயவழியேசெல்லுமந்திரத்தை மறந்து யானைத்தீயென்னும் நோயாற் பன்னிரண்டுவருடம் தீராப்பசிகொண்டுவருந்திப் பின்பு இங்கு இக்கனியை நான் உண்ணுந்தினத்தில் நீ பசியொழிவாயாக" என்றுகூறிப் பசியால்வருந்திப்போயினன்; உடனே எனக்குப் பெரும்பசியுண்டாயிற்று; அதனால் மிக்கவருத்தமடைந்தேன்; அதுகண்ட என்கணவன் சிறந்த கனிகள் கிழங்குகள் காய்கள்முதலியவற்றை நிரம்பக்கொணர்ந்து என்னையுண்பிக்கவும் அப்பசி தீரவில்லை; அந்தரஞ்செல்லும் மந்திரமும் என்னினைவுக்கு வரவில்லை; அப்பொழுது அதுகண்டுவருந்திய என்கணவன், "நீ நடந்துசென்று இத்தமிழ்நாட்டில் ஆற்றுமாக்கட்கு அருந்துணைவர்களாகிய பெருஞ்செல்வர்கள் வாழ்ந்திருக்கும் காவிரிப்பூம்பட்டினத்தையடைந்து அங்கேயிருப்பாயாக" என்றுசொல்ல, நான் அவ்வண்ணமேவந்து இங்கிருக்கின்றேன்; இங்கு இந்திரவிழாநடக்குங்காலத்தில் ஒவ்வொருவருடத்தும் என்கணவன்வந்து என்வருத்தத்தைப் பார்த்துவிட்டுத் தானும்வருந்திச் செல்வான்.

தணிவில் வெம்பசி தவிர்த்தனை வணங்கினேன்
மணிமே கலையென் வான்பதிப் படர்கேன்; (எங - எச)

இந்நகரில் முனிவர்கள் பலரிருக்கும் சக்கரவாளக்கோட்டமென்று ஒன்றுண்டு; அதில் பலரும்வந்துபுகுதற்காகவே எப்பொழுதும் கதவுதிறந்துள்ள உலகவறவியென்னும்பெயரையுடைய அம்பலமொன்றுண்டு. அதில்,

வருநராக்க வுறுபசி யுழந்தோ
ராரு மின்மையி னரும்பிணி யுற்றோ
ரிடுவோர்த் தேர்ந்தாங் கிருப்போர் பலர்; (எக - அ

ஆதலால் அவ்விடத்திற்கு செல்வாயாக" என்றுசொல்லிவிட்டு, அவள் தன்னூருக்குப்போயினள்; போகவே மணிமேகலை, வீதியின் ஒரு பக்கத்தே ஒதுங்கிச்சென்று உலகவறவியையடைந்து மூன்றுமுறை வலம்வந்து பணிந்து அதிலேறிச் சம்பாபதியையும் கந்திற்பாவையையும் வணங்கி,

> வெயில்சுட வெம்பிய வேய்கரி கானத்துக்
> கருவி மாமழை தோன்றிய தென்னப்
> பசிதின வருந்திய பைதன் மாக்கட்
> கமுத சுரபியோ டாயிழை தோன்றி, (௯௧ - ௯௪)

"இப்பாத்திரம் ஆபுத்திரன்கையிலிருந்ததாகிய அமுதசுரபி; உண்ணுதற்கு விருப்பமுள்ள யாவரும் வருக" என்றுசொல்ல, பலரும்வந்து உண்பாராயினர்; ஆகவே அவ்வம்பலத்தில் உண்ணுமொலிமிகுந்தது.

## ௧௮.—உதயகுமரன் அம்பலம்புக்ககாதை.

மணிமேகலை பிக்குணிக்கோலங்கொண்டு பாத்திரமேந்தி ஐயமேற்று உலகவறவியிற் சென்றுளென்பதைக் கேட்ட சித்திராபதி, மனங்கொதித்து வெய்துயிர்த்துக் கலங்கி, "மணிமேகலையை இச்செயலினின்றும் நீக்குவேன்" என்றெண்ணிக்கொண்டு நாடகக்கணிகையரெல்லாரையும் பார்த்து, "கோவலன் இறந்ததுகேட்டு மாதவி எல்லாவற்றையுந் துறந்து முனிவர்களுடைய தவச்சாலையையடைந்து தாபதக்கோலம்பூண்டிருத்தல் நகைக்கத்தக்கதாக இருக்கின்றது; யாம கணவனுடன் இறக்கும் பத்தினிப்பெண்டிரல்லேம்; பாணன் இறந்தபொழுது அவனுடன் இறவாத யாழைப்போல்வேம்; பின்னும்,

> நறுந்தா துண்டு நயனில் காலை
> வறும்பூத் துறக்கும் வண்டு போல்குவம், (௧௧ - ௨௦)

தாபதக்கோலந்தாங்குவது நம்முடையகுலவொழுக்கத்திற்கு ஒத்ததன்று; மாதவிமகள் மணிமேகலையின் பிக்குணிக்கோலத்தைமாற்றி அவள் கையிலேந்திய பிச்சைப்பாத்திரத்தை,

> பிச்சை மாக்கள் பிறர்கைக் காட்டி, (௫௦)

பலநாளாக விரும்பிக்கொண்டிருக்கும் உதயகுமரனால் அவளை அவனது தேரிலேற்றுவித்தே வருவேன். அங்ஙனஞ்செய்து வாரேனாயின் குடிக்குற்றப்பட்டு ஏழுசெங்கலைத் தலைமேலேற்றிக்கொண்டு நாடகவரங்கைச் சுற்றிவந்து பழியோடிருக்கும் நாடகமடந்தையாபோல இனி நான் நாடகக்கணிகையர்வீட்டிற்குச் செல்லேனாகக் கடவேன்" என்று சபதஞ்செய்துவிட்டுத் தன்னைச சிலர் சூழ்ந்துவரச்சென்று உதயகுமரனுடைய அரண்மனையையடைந்து அவனைக்கண்டு துதித்து, மணிமேகலை உலகவற

வினை அடைந்திருக்கின்றாளென்பதை அவனுக்குக்குறிப்பிக்க, அவன் உவவனத்தில் மணிமேகலையைக் கண்டதுமுதல நிகழ்ந்தவற்றைக்கூறி அவளிடத்துள்ள விசேடத்தன்மையைப் பாராட்டினன்; சித்திராபதி, அவனுடைய மனத்தை வேறுபடுத்தும்வார்த்தைகள் பலவற்றைச்சொல்லியல, அவன் உள்ளம்பிறழ்ந்து தேரேறி உலகவறவியையடைந்து, பலர்க்கும் உணவளித்துக்கொண்டிருக்கும் மணிமேகலையைக்கண்டு அவளிற்சென்று, "நீ தவக்கோலம்பூண்டது யாதுகருதி" என்று வினவினன்; மணிமேகலை, "பழம்பிறப்பிற் கணவனாக இருந்த இவனைவணங்குதல் முறையாகும்" என்று எண்ணி வணங்கி,

"பிறத்தலு மூத்தலும் பிணிப்பட் டிரங்கலு
மிறத்தலு முடைய திடும்பைக் கொள்கல
மக்கள் யாக்கை யிதுவென வுணர்ந்து
மிக்க நல்லறம் விரும்புதல் புரிந்தேன்" (௧௯ - ௪௨)

நாள்ள நினைந்து அவனைநீங்கிக் கோயிலினுள்ளேசென்று சம்பாபதியை வணங்கி, முன்பு மணிமேகலாதெய்வமுபதேசித்த மந்திரத்தை ஜபித்துக் காயசண்டிகைவடிவமுற்று அமுதசுரபியையேந்தி வெளிவந்துநின்றாள்; அவள் அவ்வாறுவந்ததையறியாத உதயகுமரன்—சென்றமணிமேகலை சம்பாபதிகோயிலுள்ளே ஒளித்துக்கொண்டாள்—என்று நினைந்துசென்று சம்பாபதியைவணங்கி, "பிச்சைப்பாத்திரத்தைக் காயசண்டிகையின் கையிற்கொடுத்துவிட்டு ஒளித்துச்சென்ற மணிமேகலையை இங்கேயுள்ள இவ்வளவுபாவைக்கூட்டங்களுள்ளே நான் எவ்வாறு தெரிந்துகொள்ளுவேன்; நீ எனக்கு அவளைக் காட்டாயாயின், இவ்விடத்திலேயே *பாடுகிடப்பேன் பலநாள்சென்றாலுஞ் செல்லுக. மணிமேகலையை இங்கேவிட்டுவிட்டு நான்மட்டும் போகேன்; உன்னுடைய திருவடியைத்தொட்டேன்" என்று சபதங்கூறினன்.

## ௧௯.—சிறைக்கோட்டமறக்கோட்டமாக்கியகாதை.

உதயகுமரன், சம்பாபதியைவணங்கி இங்ஙனஞ் சபதங்கூறுகையில், அவன்கேட்கும்படி, "நீ எம்பெருமாட்டியின்முன்னே ஆராய்ந்துபாராமல் வஞ்சினங்கூறினை; இங்ஙனங்கூறியதில் யாதொருபயனுமில்லை" என்று ஆங்குள்ள சித்திரங்களுள் ஒன்றை அதிட்டித்துநிற்கும் தெய்வங்கூறியது; அவ்வார்த்தையைக்கேட்டு அவன் மனங்கலங்கி வருந்தி "மணிமேகலையை மறப்பாய்" என்று முன்னங்கூறிய தெய்வத்தின் வார்த்தையும் வியப்பைத்தருகின்றது; தெய்வத்தன்மையுள்ளதாக இருத்தலின், அவள் ஏந்திய பாத்திரமும் வியப்பைத்தருகின்றது; இச்சித்திரம்

---

* பாடுகிடத்தல் - வரம்பெறுதற்குக் கிடத்தல்.

பேசியதும் வியப்பை உண்டுபண்ணுகின்றது; இவற்றையெல்லாம் மணிமேகலையின் செய்தியை அறிந்துகொண்டபின்பு அறிவோம்" என்று நிச்சயித்துக்கொண்டு காமபரவசனாய் வெய்துயிர்த்து மீண்டு தன் இருப்பிடத்தை யடைந்தான். மணிமேகலை, "இவ்வடிவத்தோடு திரிந்தால் உதயகுமரன் விட்டுநீங்கான்; கைப்பற்றிக்கொள்ள முயலுவன்; ஆதலால், நாம் காயசண்டிகைவடிவங்கொள்ளுதல் நன்று" என்றெண்ணி அவ்வடிவுகொண்டு சம்பாபதியின் கோயிலிலிருந்த அமுதசுரபியைக் கையிலேந்திக்கொண்டு எங்கும்போய், பசித்துவந்த யாவருக்கும் உணவளித்துச் செல்லுபவள், ஒருநாள், அந்நகரத்துள்ள சிறைசசாலையிற் புகுந்து அங்கே தண்டிக்கப்பட்டிருந்து பசியால்வருந்துவோரை அருளுடன்பார்த்து மனமுருகி இனியமொழிகளைக்கூறி உண்பிப்பாளாயினள்; அதனைக்கண்ட காவலாளர் அவள் ஒரு பாத்திரத்திலிருந்தே பலருக்கு உணவளித்தலைத் தெரிந்து வியப்புற்று, "இப் பாத்திரத்தின் விசேடத்தையும் இவள் செய்தியையும் அரசனுக்குத் தெரிவிப்போம்" என்றுநினைந்து சென்று, ஒருமண்டபத்தில் மிக்கசிறப்புடன் சீர்த்தியென்னும் இராசமாதேவியோடு வீற்றிருக்கும் அரசனுடைய செவ்வியைப்பார்த்துச் சேய்மையில் வணங்கிநின்று,

"வலிகெழு தடக்கை மாவண் கிள்ளி
யொளியொடு வாழி யூழிதோ றூழி
வாழி யெங்கோ மன்னவர் பெருந்தகை
கேளிது மன்னோ கெடுகநின் பகைஞர்" (௧௨௭ - ௧௩௦).

என்றுவாழ்த்தி, "யானைத்தீயென்னும்நோயால் வருந்தி உடல்மெலிந்து இந்நகரில் திரியுமங்கையொருத்தி, சிறைக்கோட்டத்துள்ளேவந்து தேவரீரைவாழ்த்திக் கையின்கண் பிசைசைப்பாத்திரம் ஒன்றையேவைத்துக்கொண்டு அதிலிருந்துண்டாகி வளரும் சோற்றால் அங்கேயுள்ள எல்லாருடைய பசியையுந்தீர்த்து விளங்குகின்றாள். இவ்வற்புதத்தைத் தெரிவிப்பதற்கே வந்தோம்" என்றார். அதைக்கேட்ட அரசன், "அம்மங்கையை இங்கே அழைத்துவருக" என்றான். உடனே காவலாளர்கள்வந்து அதனைச்சொல்ல, அவள்சென்று அரசனைக்கண்டு, "அரச! உனது அருள் வாழ்க" என்றாள். அரசன், "மிக்க தவமுடையாய்! நீயார்? கையிலேந்திய பாத்திரம் எங்கேகிடைத்தது?" என்றான். அவள் "அரசே! நெடுங்காலம் வாழ்வாயாக; யான் விஞ்சைமகள்; இந்நகரில் வேற்றுவடிவங்கொண்டுதிரிந்தேன். இது பிசைசைப்பாத்திரம்; இதனை அம்பலத்தேயுள்ள தெய்வமொன்று எனக்கு அருளியது; தெய்வத்தன்மையோடு கூடியது; யானைத்தீயென்னுந் தீராப்பசியைத் தீர்த்தொழித்தது; பசியால் மெலிந்தவர்களுக்கு மிருதசஞ்சீவினியாகவுள்ளது" என்று சொல்ல, அரசன் "யான் செய்யவேண்டுவது யாது?" என்றுகேட்ப, அவள் "சிறைச்

சாலையை அறச்சாலையாகச் செய்யவேண்டும்" என்றாள்; அரசன், அவள் விரும்பியவண்ணமே சிறைச்சாலையையழித்துத் தூய்மைசெய்து அவ்விடத்தைப் பலவகையான புண்ணியங்களும் நடத்தற்குரிய இடமாகச் செய்வித்தான்.

## உ0.—உதயகுமரனை வாளாலெறிந்தகாதை.

அரசனுடைய கட்டளையால், சிறைச்சாலை, பலவகைப்புண்ணியங்களும் நிகழ்தற்குரிய அறச்சாலையாய் விளங்கிற்று; உதயகுமரன் இச்செய்திகளையெல்லாம் கேட்டு, "மணிமேகலை உலகவறவியை நீங்கி வெளியே வந்தபொழுது அவளைக் கைப்பற்றிக்கொணர்ந்து தேரிலேற்றி அவள் கற்ற வித்தைகளையும் அவள்கூறும் இனிய முதுமொழிகளையும் கேட்பேன்" என்று தன்னுள்ளே எண்ணிக்கொண்டுசென்று அவளிருக்கும் உலகவறவியில் ஏறினன். காஞ்சனனென்னும் வித்தியாதரன், "பெரும்பசியால் வருந்தும்படி காயசண்டிகைக்குப் பொதியின்மலையைச்சார்ந்த காட்டாற்றின்கரையில் விருச்சிகமுனிவன் இட்ட சாபத்தை அவள் அநுபவித்தற்குரிய பன்னிரண்டுவருடங்களும சென்றன; சென்றும் அவள் வாராமைக்குக்காரணம் யாதோ" என்று மிக்க கவலையுற்று, தனது நகரை நீங்கி ஆகாயவழியேவந்து காவிரிப்பூம்பட்டினத்திலிறங்கிப் பூதசதுக்கமும் பல பூஞ்சோலைகளும் முனிவர்களுடைய தவச்சாலைகளும் மன்றங்களும் அம்பலங்களும் ஆகிய இடங்களிலெல்லாம சென்றுசென்று தேடித்தேடித்திரிந்து, காயசண்டிகைவேடம பூண்டு உணவளித்து மாந்தர்கள் பலருடைய பசிகளையும் மாற்றிக்கொண்டிருக்கும மணிமேகலையை மணிமேகலையென்று அறியானாகிக் காயசண்டிகையென்றே நிசசயித்துக்கொண்டு அருகிற்சென்று அவளைநோக்கி, "நீ ஏந்திய இப்பாத்திரம் ஒன்றாயிருந்தும் இதனால் அளிக்கப்படும் உணவை அருநதுவோர் பலராய் உள்ளாரெனைக்கு இது மிக்கவியப்பைத் தருகின்றது. உன்னைவருத்திய யானைத்தீயாகியநோயை ஒழித்தற்குத் தேவர்கள் இதனைககொடுத்தார்களோ' என்று சொல்லிப் பின்பு பழையநட்பினைப் புலப்படுத்துமொழிகள் பலவற்றைக்கூறிப் பாராட்டவும அவள் அவற்றைச சிறிதும் மதியாமல் அவனை நீங்கி உதயகுமரனையடைந்து அவனருகேநின்று இளமையின் நிலையில்லாமையை அவனுக்கு அறிவுறுத்தநினைந்து, அங்கே இயல்பாக வந்த முதுமைப்பருவத்தாளொருத்தியைக் காட்டி, முன்பு அழகையுடையனவாயிருந்த அவளுடையஉறுப்புக்கள் வலிமைகுறைந்து அழகுகெட்டு வெறுக்கத்தக்கனவாக இருத்தலைப் பலவாற்றானும் அவனுக்குப் புலப்படுத்துவாளாகி,

"தண்ணறல் வண்ணம்..........................
.......... .......... .......... ..... ......
.......... .......... .......... ..........

.......................................................
பூவினுஞ் சாந்தினும் புலான்மறைத் தியாத்துத்
தூசினு மணியினுந் தொல்லோர் வகுத்த
வஞ்சந் தெரியாய் மன்னவன் மகனே" (சக - கூகூ.)

என்றுகூறினள். அவள் அவ்வாறுகூறுதலைக்கேட்ட காஞ்சனன், "யான் பாராட்டிக்கூறுகின்ற சொற்களின்பொருளை இவள் கொள்ளுகின்றிலள்; என்னை மதிக்கின்றிலள்; அயலான் பின்னே செல்லுகின்றாள்; என்னை அயலானாகக்கருதுகின்றாள்; காதற்குறிப்பைப் புலப்படுத்திக்கொண்டே நீதிமொழிகளை இவனுக்குக்கூறுகின்றாள்; இவன் ஆசாநாயகனுதலினாலேயே இவள் இவ்விடத்திற்றங்கிவிட்டாள்போலும்" என்று நினைந்து மிக்ககோபங்கொண்டு புற்றிலடங்கும் பாம்பைப்போல அவ்வுலகவறவியினுள்ளேபுகுந்து தீதுகருதி ஒளித்து அடங்கினன். அவன் அங்ஙனம் அடங்கியதை அறியாத உதயகுமரன், மிக்க வேட்கையையுடையவனாகி, "மணிமேகலைதான் காயசண்டிகைவேடம்பூண்டு கையிற் பிசைப் பாத்திரத்தை ஏந்திக்கொண்டுவந்துநின்று நம்மை மயக்கினள்; அறிந்தவன்போன்று பழமைகூறிப் பாராட்டிய அயலானொருவன் இங்கே இருத்தலால், இவள் இன்றிரவில் இவ்விடத்தைவிட்டு நீங்குவாளல்லள்; இவள் செய்தியை இன்றிரவின் நடுயாமத்தேவந்து தெரிந்துகொள்வோம்" என்று தன்னுள் எண்ணிக்கொண்டேசென்று தன்னிருப்பிடமடைந்தான்; மணிமேகலையும் காயசண்டிகையுருவத்தோடே சம்பாபதிகோயிலை அடைந்து வதிந்தாள். அப்பால், எல்லாருந் தூங்கியபின்பு உதயகுமரன் முன்பு எண்ணியவாறே செல்லத்துணிந்து தனியேயெழுந்து அரண்மனையைநீங்கி உலகவறவியையடைந்து,

வேக வெந்தீ நாகங் கிடந்த
போகுயர் புற்றளை புகுவான் போல (கூஅ - கக)

அதனுள்ளேபுகுந்தான். உடனே, அங்கே முன்னம்புகுந்து இவன்வரவை நோக்கிக்கொண்டே கோபத்துடனிருந்த காஞ்சனன், "இவன் இவளிடத்திலேயே வந்தான்" என்று நிச்சயித்து அதிவேகத்தோடெழுந்து, விரைந்துபோய், அவன் தோளைவெட்டிவீழ்த்திவிட்டு, காயசண்டிகையைக் கைப்பற்றிக்கொண்டு ஆகாயவழியேசெல்லுவோமென்று நினைந்து அவளருகேசென்றான்; அப்பொழுது அங்கேயுள்ள கந்திற்பாவையானது, "காஞ்சன! செல்லாதே, செல்லாதே; இவள் உன்மனைவியாகிய காயசண்டிகையல்லள்; இவ்வடிவம் மணிமேகலைகொண்ட வேற்றுவடிவம்; காயசண்டிகை கடும்பசியொழிந்து ஆகாயவழியேசெல்லுகையில் அவளுக்குநேர்ந்த துன்பத்தைக்கேட்பாயாக; ஆகாயசாரிகள் துர்க்கையெழுந்தருளியிருக்கும் விந்தமலைக்குநேராக ஆகாயவழியிற் செல்லார். யாரேனுஞ் செல்வாராயின், அம்மலையைக்காக்கும் விந்தாகடிகையென்

பவன் அவர்களைச் சாயையினாலேயிழுத்துத் தன்வயிற்றில் அடக்கிக்கொள்வான். இதனையறியாத காயசண்டிகை அம்மலைக்குநேராக மேற்சென்று அவள்வயிற்றில் அடங்கிவிட்டாள். காஞ்சன! இதனையுங்கேட்பாயாக: உதயகுமரன் ஊழ்வினையினால் இறந்தானாயினும் நீ சிறிதும் ஆராயாதுவெட்டினமையால், அறிவில்லாதவனேயாவாய்; மிக்க தீவினையைச் செய்துவிட்டாய்; அவ்வினை விடாதுதொடர்ந்து உன்னைவருத்தும்" என்று சொல்லியது. அதுகேட்டு மனம்வருந்திக் காஞ்சனன் தன்னகரத்திற்குச்சென்றான்.

## உக.—கந்திற்பாவை வருவதுரைத்தகாதை.

அப்பால், சம்பாபதியின் கோயிலிலிருந்த மணிமேகலை, காஞ்சனன் செய்தியையும் உதயகுமரன் வெட்டுண்டுவீழ்ந்து இறந்ததையும் காஞ்சனனுக்குக் கந்திற்பாவைகூறிய அற்புதமொழியையுமறிந்து, உடனேயெழுந்து, தான்கொண்ட வேற்றுவடிவத்தைத்துறந்து, "முற்பிறப்பில் திட்டிவிடத்தால் உன்னுயிர்போனகாலத்தில நின்பிரிவாற்றாது தீயிற்பாய்ந்து நானும் உயிர்துறந்தேன்; உவவனத்திறகண்டபொழுது உன் பாற்கருத்தைச செலுத்தியதுபற்றி மணிமேகலாதெய்வம என்னையெடுத்துச்சென்று மணிபல்லவத்திலவைத்துப் புத்தபீடிகைக் காட்சியால் என் பழம்பிறப்பை எனக்குத் தெரிவித்து, உன் முற்பிறப்பையும் கூறிற்று. அதனால், நீ முன்பு கணவனாகவிருந்ததையறிந்து யான் உன்பால் அன்புற்று,

> பிறந்தோ ரிறத்தலு மிறந்தோர் பிறத்தலும்
> அறந்தரு சால்பு மறந்தரு துன்பமும்
> யானினக் குரைத்துநின் னிடர்வினை யொழிக்கக்,
> காயசண் டிகைவடி வானேன் காதல, (கக - உஉ)

வித்தியாதரனுடைய வாட்படையால் வெட்டுண்டு வீழ்ந்தனையே; அந்தோ!" என்று புலம்பி வெய்துயிர்த்து வருந்தி அவனருகிற் செலவாளாயினள்; அப்பொழுது, அங்குள்ள கநதிற்பாவைத்தெய்வம், "நீ இவனிடத்திற் செல்லாதே; செல்லாதே; உனக்கு இவன் கணவனாகவிருந்ததும் இவனுக்கு நீ மனைவியாகவிருநததும் சென்ற பிறவியிலேமட்டும் நிகழ்ந்தனவல்ல; அதற்கு முன்னும் எத்தனையோபிறவிகளில் நிகழ்நதன:

> இனக்கிவன் மகனாத் தோன்றிய தூஉம்
> மனக்கினி யாற்குநீ மகளாய தூஉம்
> பண்டும் பண்டும் பல்பிறப் புளவாற்
> கண்ட பிறவியே யல்ல காரிகை. (உக - கூஉ)

இங்ஙனம் தடுமாறும் பிறவித்துன்பத்தை ஒழித்துக்கொள்ளுதற்குமுயலும் அறிவினையுடையாய்! இவனிறந்ததுபற்றி நீ துன்பமடையாதே" என்று தனது தெய்வவாக்காற்சொல்லிற்று; அதுகேட்ட மணிமேகலை

சென்று, "இவ்வம்பலத்தில் யாவருக்கும் மெய்ம்மையைச் சொல்லிக் கொண்டு எழுந்தருளியிருக்குந்தெய்வம் ஒன்றுண்டென்பர்; அத்தெய்வம் நீதானோ? உன் திருவடியை வணங்குகின்றேன்; சென்ற பிறவியில், திட்டிவிடத்தாலும் இப்பிறவியில் வித்தியாதரனுடைய வாளாலும் இவன் இறந்ததற்குள்ள காரணத்தை நீ அறிவையோ; அறிந்திருப்பாயாயின், அதனை அடிச்சிக்கு உரைத்தருளல்வேண்டும்" என்றாள்; என்றலும், அத்தெய்வம், "புத்ததேவன் அவதரித்து வருதலைக்கூறி, காயங்கரை யென்னும் ஆற்றங்கரையிலிருந்துகொண்டு மனிதருடைய அறிவின்மையைப்போக்கும் பிரமதருமமுனிவரை இராகுலனும் நீயும் வழிபட்டு அவருக்கமுதுசெய்விக்கநினைந்து அங்கருத்தை அவருக்கு அறிவித்து அவர் உடன்பாடுபெற்று, "விடியற்காலத்திலேயே அடிசில்முதலியவற்றை விரைந்து ஆக்குவாய்" என்று மடையனுக்குக்கூறினீர்; அவன் யாதுகாரணத்தாலோ அக்காலத்தில்வாராமல் சிறிதுபொழுது பாணித்துவந்து, அங்ஙனம் வந்த அரசத்தால் வழுக்குற்றுக் கால்தளர்ந்து மடைக்கலஞ் சிதையும்படி வீழ்ந்தான்; வீழ்ந்ததனைக்கண்டும் இரங்காமல், "இவன் முனிவர்க்குச் செய்யவேண்டிய காரியத்தை விரைந்துவந்து செய்யாது தாழ்த்தான்" என்று சினந்து தோளும் தலையும் துண்டுபட்டு வேறாகும்படி இராகுலன் அவனை வெட்டினான்; வெட்டிய அவ்வல்வினையே அப்பிறப்பில் அவனைத் திட்டிவிடததால் இறக்கச்செய்ததன்றி இப்பிறப்பிலும் இங்கு வெட்டுண்டுவீழச்செய்தது. உதயகுமரன் இங்ஙனமிறந்ததற்குக் காரணம் இதுவே; வினை தன்பயனை ஊட்டாமலொழியாதென்பது திண்ணம்; இன்னுங் கேட்பாயாக; உதயகுமரனிறந்ததற்கு மிகவும் வருத்தமுற்ற சக்கரவாளக்கோட்டத்து முனிவரால் அச்செய்தியையறிந்தவரசன் உன்னைச் சிறையில்வைப்பான்; அது தெரிந்த இராசமாதேவி உன்னைச்சிறைமீட்டுத் தன்காவலில் வைத்துக்கொள்வாள்; மாதவியின் வேண்டுகோளால்வந்த அறவணவடிகளுடையசொல்லால் அக்காவலினின்றும் நீங்குவை. அப்பால நீ சாவகநாடுபோய் ஆபுத்திரனிடஞ்சென்று அவனோடு மணிபல்லவத்தை அடைவை; தன் வரலாற்றைப் புத்தபீடிகைக்காட்சியாலும் தீவதிலகையாலுமறிந்து அவ்வரசன் தன்னாட்டையடைந்தபின் நீ ஒரு முனிவன்வேடம் பூண்டு வஞ்சிநகரம் புகுவாய்; புகுந்து அந்நகரத்துள்ள சமயவாதிகள் பலருடைய கொள்கைகளையுங் கேட்பை;

தீவினை யுறுதலுஞ் செத்தோர் பிறத்தலும்
வாயே யென்று மயக்கொழி மடவாய்! (கக௩ - ககச)

இதுநிற்க; என்வரலாற்றையுங் கேட்பாயாக; யான் தெய்வகணங்களைச் சார்ந்த ஒருவன்; என்பெயர் துவதிகனென்பது; இந்தப் பழையதூணில் எனக்குஒப்பாக மயனாற்செய்யப்பட்ட இந்தப் படிமத்தைவிட்டு ஒருபொ

மூழும் நீங்கேன்" என்று தனது தெய்வவாக்காற் சொல்லியது. சொன்னவுடன், மணிமேகலை, "அப்பால் என்னுடைய மரணமிறுதியாக நிகழுஞ் செய்திகளையெல்லாம் உரைத்தருளவேண்டும்" என்று பிரார்த்தித்தாள்; பிரார்த்திக்கவே, "மழையில்லாததுபற்றிக் காஞ்சிநகரத்தில் உயிர்கள் பசியால் வருந்துதலையும், மாதவி சுதமதியென்னும் இருவருடன் அறவணவடிகள் அந்நகரஞ்சென்று உன்னுடையவரவைப்பார்த்துக்கொண்டு தங்கியிருத்தலையும் வஞ்சிநகரத்தில் நீ அறிந்து உடனே அக்காஞ்சிநகரஞ் சென்று உணவளித்து எல்லாவுயிர்களையும் பாதுகாப்பாய்; அந்நகரத்தே உன்னாலே பற்பல அற்புதங்கள்நிகழும். அப்பால் வஞ்சிநகரிற் கேட்ட சமயவாதிகளுடைய கொள்கைகளையெல்லாம் அறவணவடிகளுக்கு நீ தெரிவிப்பாய்; அப்பொழுது, அவர்,

தவமுந் தருமமுஞ் சார்பிற் றோற்றமும்
பவமறு மார்க்கமும் பான்மையி னுரைத்து,
"மறவிரு ளிரிய மன்னுயி ரேமுற
வறவெயில் விரித்தாங் களப்பி லிருத்தியொடு
புத்த ஞாயிறு தோன்றுங் காறும் (கசுகூ - ககூஎ)

இந்தத் தலத்திலேயே இறந்தும் பிறந்தும் தருமோபதேசஞ் செய்துகொண்டு தங்காநிற்பேன்" என்று சொல்லுவர்; அவர் செய்த உபதேசமொழிகள் பிழையாமல் நல்லறங்கள் பலவற்றையும் செய்து இறந்து மேலேவரும் பிறப்புக்களை *உத்தரமகத நாட்டிலேயேபெறுவாய்; அவைகள்யாவும் உனக்கு ஆண்பிறப்பாகவே நிகழும்; அப்பிறப்புக்களுள் ஒவ்வொன்றிலும் அருளறத்தினின்றும ஒழியாயாகிநின்று முடிவிற் புத்ததேவனுக்கு முதல் மாணாக்கனாகும் பெரும்பேறுற்றுப் பற்றற்று நிருவாணமடைவாய்; இன்னுங்கேள்; உன்குலத்து முன்னோர்களுள் தானந்தாங்கிச் சீலத்தில் மேம்பட்ட ஒருவனைக் கடலினின்றும முன்னம் எடுத்தளித்த மணிமேகலாதெய்வம் நீ முற்பிறப்பில் சாதுசக்கரமுனிவனுக்கு உணவளித்த புண்ணியவிசேடமுடையாயென்பதையறிந்து உவவனத்தினின்றும் உன்னையெடுத்து மணிபல்லவத்திற்கொண்டுசென்று புத்தபீடிகையைக் காணச்செய்தது" என்று தனது தெய்வவாக்கால் அத்தெய்வம் சொல்லிற்று; கேட்ட மணிமேகலை கவலையொழிந்து மயக்கம் நீங்கியிருந்தாள்; அவ்வளவிலே சூரியனுதித்தான்.

## ௨௨.—சிறைசெய்காதை.

சூரியனுதித்தவுடன், கந்திற்பாவையையும் சம்பாபதியையும் வழிபட்டவர்கள், அங்கே உதயகுமரன் வெட்டுண்டுகிடத்தலைக்கண்டு, அதனைச் சக்கரவாளக்கோட்டத்திலுள்ள முனிவர்களுக்குக் கூறினர். அம்

* புத்ததேவரவதரித்ததும், அவருக்கு ஞானோதயமானதும் மகதநாடாதலால், அது சிறந்த புண்ணியபூமியாகப் பௌத்தரால் மிகப் பாராட்டப்படும்.

முனிவர்கள், "இவன் வெட்டுண்டதற்குக்காரணம் நீ அறிகுவையோ?" என்று மணிமேகலையைக்கேட்ப, அவள் நிகழ்ந்தவற்றைச்சொல்ல, அவர்கள் உதயகுமரனுடைய உடம்பையும் மணிமேகலையையும் வேறிடத்தில் ஒளித்துவைத்துவிட்டு அரண்மனைசென்று தம்முடையவரவை வாயில்காப்போரால் அரசனுக்குத் தெரிவித்து உள்ளேபோய் அரசனை யடைந்து அவனைவாழ்த்தியபின்பு, அவர்களுள் ஒருமுனிவர், "அரசே! இன்றுமட்டுமன்று; இந்நகரில் காமவிகாரத்தால் மயங்கிப் பத்தினிப் பெண்டிரை யடுத்து வன்மைசெய்தும் தவமகளிரைவிரும்பியொழுகியும் ஒறுக்கப்பட்டு இறந்தோர் முற்காலத்தும் பலருண்டு; கேட்பாயாக: அரசர்களுடைய பரம்பரையை வேரறுத்த பரசுராமன் போர்செய்தற்குவந்தபொழுது, துர்க்கை, அந்நாளில் இந்நகரையாண்ட காந்தனென்னும் அரசனைப்பார்த்து, "நீ இப்பொழுது பரசுராமனோடு போர்செய்தற்குச்செல்லுதல் தகுதியன்று" என்றுகூறுதலால், வேறிடஞ்செல்லுதற்குநினைந்த அவ்வரசன் இந்நகரைப்பாதுகாத்தற்குரியோர் யாரென்று ஆராய்ந்து காவற்கணிகையின்புதல்வனும் வீரருள்வீரனுமாகிய ககந்தனென்பவனே இதற்குத் தகுதியுள்ளானென்று நிச்சயித்து, அவனை வருவித்து, "அரசாளுங்குலவுரிமை உனக்கின்மையால், அரசபரம்பரையோரைக் கொல்லுதலையே விரதமாகக்கொண்ட பரசுராமன் உன்னோடு போர்செய்தற்குவாரான்; அகத்தியமுனிவருடைய கட்டளைபெற்று யான் மீண்டுவருமளவும் இந்நகரை நீ பாதுகாக்கக்கடவை; உன்னாற் காக்கப்படுதலின், இந்நகர்க்குக் காகந்தியென்று பெயருண்டாகக்கடவது" என்றுசொல்லிவிட்டு வேற்றுவடிவங்கொண்டு தான் கருதியவிடஞ்சென்றான்.

அவன் சென்றபின்பு ககந்தனென்பவனால் இந்நகரம் பாதுகாக்கப்பட்டுவந்தது; அப்பொழுது ஒருநாள், ககந்தனுடைய பிள்ளைகளுள் இளையவன், காவிரியில் நீராடிவிட்டுத் தனித்து வருபவளாகிய மருதியென்னும் பார்ப்பனியை *காவிரிவாயிலிற்கண்டு காமபரவசனாய், "நீ வா" என்றழைத்தான்; அவள் மனங்கலங்கி, "இவ்வுலகில் மழைவளந்தைத்தரும் பத்தினிப்பெண்டிராயுள்ளார் பிறருடைய நெஞ்சிற்புகார்; நானோ இவனுடைய உள்ளத்திற் புகுந்தேன்; ஆதலால், இனி †அந்தணனுடைய முத்தீயைப்பேணுந்தகுதி எனக்கு இல்லையே! இதற்குக் காரணம் யாது?" என்று துன்பமுற்றுத் தன்னுடைய வீட்டிற்செல்லாமற் பூத‡சதுக்கம்புகுந்து மயங்கி, "தெய்வமே! கொண்டவனுக்கு யா

---

* காவிரிவாயில் - காவிரிக்கரையில் திருமுகத்துறைகழிகின்றவழி.

† அந்தணனென்றது கணவனை.

‡ சதுக்கம் - நாற்றெருக்கூடுமிடம்.

தொருகுற்றமுஞ் செய்திலேன்; அப்படியிருந்தும் பிறனுடைய நெஞ்சில் எளிதாகப் புகுந்தேன்; யான்செய்ததவறு இன்னதென்று எனக்கே புலப்படவில்லை; 'தவமறைந்தொழுகுவோர்முதலிய தீயவர்களைப் பாசங்கட்டிவர நீ இங்கே அறைந்துண்பை' என்று ஆன்றோர்கூறக்கேட்டுளேன்; இப்பொழுது என்னை அங்ஙனஞ்செய்யாமையின், நீ ஈண்டிருத்தல் பொய்யாமோ" என்று அவலித்து அரற்றினாள்; *அரற்றும்பொழுது சதுக்கப்பூதந்தோன்றி, "மடக்கொடி! கேட்பாயாக;

†தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றவப்
‡பொய்யில் புலவன் பொருளுரை தேராய்; (நிக - கூக.)

பொய்க்கதைகளையும் நகையைவிளைவிக்குமொழிகளையும் பிறர்வாய்க் கேட்டு திருத்தகிதவாத்தியங்களையுடைய விழாக்களைவிரும்பித் தெய்வங்களை வழிபடுநியமத்தை மேற்கொண்டிருந்தனை; ஆதலின், உன் ஏவலால் மேகம் மழையைப்பெய்யாது; உத்தமபத்தினிப்பெண்டிரைப்போலப் பிறருடைய மனத்தைச்சுடுந்தன்மையும உனக்கு இல்லாதுபோயிற்று. மேற்கூறிய வெற்றுச்செய்கைகளை விடுவாயாயின், மேகம் உனதுமொழிவழிப்பட்டு ஒழுகாநிற்கும்; மனமபோனவாறேயொழுகும் பெண்டிரைக் கட்டுவதுபோல உன்னை என்பாசம் கட்டுதல்செய்யாது; குற்றஞ்செய்தோரை ஏழுநாளவரையில் தண்டித்தல் அரசனுடைய முறைமை; அவன் அக்காலவரையறையுள் அதனைசசெய்யாதொழியின், அப்பால் தண்டிப்பது என்னுடைய முறைமையாகும்; இவ்வேழுதினத்திற்குள்ளேதானே இச்செய்தியைக் கேட்டுக் ககந்தன் உன்னைவிரும்பிய சிறுதொழிலாளனை வெட்டிவிடுவான்" என்று எடுத்துரைத்தது; அப்பூதமஉரைத்த ஏழுநாளைக்குள்ளே அச்சிறுதொழிலாளன் தாதையின்வாளால் தடியப்பட்டனன்; மன்னவரேறே! இன்னுங்கேட்பாயாக:—

இந்நகரில் முன்பிருந்த பேரழகையுடைய தருமதத்தனென்னும் வாணிகனும் அவன் மாமன்மகளாகிய விசாகையென்பவளும் ஒருவர்பால் ஒருவர் மிக்க அன்புபாராட்டி உரையாடிக்கொண்டிருநதமை பற்றி, "இவர் காந்தருவமணத்திற்கு உரியவராயினா" என்று ஊரிலுள்ளாரெல்லாரும் பழிகூறுவாராயினர். அதுபொறுத விசாகையானவள்சென்று உலகவறவியிலேறி, "கந்திற்பாவாய்! இப்பழியை ஒழிப்பாய்" என்று முறையிட்டாள். உடனே அத்தெய்வம் "நகருள்ளீர்! இவள் யாதொரு குற்றமும் இல்லாதவள்" என்று தனது தெய்வவாக்கால் அவளை உயர்த்

---

* மருதி தன்குற்றத்தையேநினைந்துவருந்தியதாக ஆசிரியர்கூறியது மிகப்பாராட்டற்பாலது.

† திருக்குறள், ருரு.

‡ பொய்யில் புலவன் - திருவள்ளுவநாயனர்.

திக்கூறியது. அதுகேட்டு ஊரார் அவளை வியந்து புகழ்ந்தார்கள்; விசாகை, "இத்தெய்வம் தெளிவியாதாயின் இவ்வூராருக்கு என்பாலுண்டாகிய ஐயம் நீங்காது; மறுபிறப்பிலேதான் மைத்துனனுக்கு மனைவியாவேன்; இப்பிறப்பில் இவனை மணத்தல்செய்யேன்" என்று தன்னுடைய நற்றாய்க்குச்சொல்லிவிட்டுக் கன்னிமாடம்புகுந்து தவஞ்செய்துகொண்டிருந்தாள். அப்பால், தருமதத்தன் தன்பழியைப்போக்கிய கந்திற்பாவையைத்துதித்துக் காவிரிப்பூம்பட்டினத்தைக்கடந்து தென்மதுரையை யடைந்து, "விசாகையையன்றி வேறுமகளிரையான்விரும்பேன்; இப்பிறப்பு இங்ஙனம் ஒழிவதாக" என்று தன்னுட்கூறி விரதம்பூண்டவனாகி வாணிகஞ்செய்து அறவழியே பொருளீட்டிப் பெருஞ்செல்வமுற்று அரசனால் *எட்டிப்பூப்பெற்று மிக்க சிறப்படைந்து அறுபதுபிராயம் வரையும் அந்நகரிற்றங்குவானாயினன். அப்பொழுது அவனிடத்தில் ஒரந்தணன்சென்று, "நீ விவாகமின்றி இந்நகரத்தே இருந்து என்னகாரியஞ்செய்தனை? மனைவியில்லாதவர்கள் எவ்வளவு தருமஞ்செய்வாராயினும் தெய்வலோக மடையாரென்பதை நீ கேட்டறிந்திலையோ? இனித் தாழ்த்தலின்றி உன்னகரஞ்செல்வாயாக" என்றுகூறலும், தருமதத்தன் அந்நகரைவிட்டு நீங்கிவந்து இந்நகரத்திற் புகுந்தான். அவன்வந்தது கேட்டவிசாகை சிறிதும் நாணமின்றிக் கன்னிமாடத்திலிருந்து புறத்தே வந்து அவனையடைந்து, "இப்பொழுது நம்முள் ஒருவரையொருவர் நாம் அறிந்திலேம்; முன்பு நம்மைமயக்கிய அழகுகள் எங்கே ஒளித்துச் சென்றன? உனக்கு அறுபதுபிராயம் ஆயின; எனக்குங் கூந்தல் நரைத்தது. முன்பிருந்த இளமையும் காமமும் எங்கே ஒளித்துப்போயின? உரைப்பாயாக. இப்பிறப்பில் யான் நின்னடியை யடையேன். மறுமையில் நின்னை மணப்பது திண்ணம்.

> 'இளமையு நில்லா யாக்கையு நில்லா
> வளவிய வான்பெருஞ் செல்வமு நில்லா
> புத்தே ளுலகம் புதல்வருந் தாரார்
> மிக்க வறமே விழுத்துணை யாவது' (௧௩௫ - ௧௩௮).

ஆதலால், தானஞ்செய்க" என்றுசொல்ல, அவன் தான் ஈட்டியபொருள்களையெல்லாம் விசாகைக்குக்காட்டி அப்பொருள்களைக்கொண்டு அவளோடுசெய்த நல்லறங்கள் மிகப்பல; இது நிற்க; முன் இந்தவிசாகை கந்திற்பாவைத்தெய்வத்தால் பழிநீங்கிப் பலர்நடுவே வீதியில்வருகையில், முன்பு மருதிபால்மடிந்தவனுடையமூத்தோன், அவ்விசாகையைக் கண்டு அதிமோகங்கொண்டு, தான் தலையிலணிந்தமாலையைவாங்கி அவள்

* எட்டிப்பூ - அரசனால் வணிகர்களுக்குக் கொடுக்கப்படும் எட்டிப்பட்டத்திற்கு உரிய பொற்பூ.

கழுத்தில் இடுதற்குத்துணிந்து அம்மாலையையெடுத்தற்காக நினைந்து தன்கையைக் குடுமியிற்செலுத்த அக்கை அதைவிட்டு நீங்காததாயிற்று. ஆகவே "விசாகையின் ஒழுக்கவிசேடத்தால் அவன்கை கீழே இறங்கிலது" என்று பலர்கூறக்கேட்ட ககந்தன் மிகுந்த கோபங்கொண்டு தன் மகனென்றுபாராமல் உடனே அவனை வெட்டிவீழ்த்தினான்" என்று கூறலும், அரசன், 'இன்றுமட்டுமன்று' என்று தொடங்கிப் பலவற்றை யுங்கூறினீர். முன்புநிகழ்ந்ததாகக்கூறிய அத்தீயவொழுக்கம் இந்நாளிலும உளதோ? இயம்புமின்" என்றுகேட்ப, ஒருமுனிவர,

"முடிபொரு ளுணர்ந்தோர் முதுநீ ருலகிற்
கடியப் பட்டன வைந்துள வவற்றிற்
கள்ளும் பொய்யுங் களவுங் கொலையுந்
தள்ளா தாகுங் காமந் தம்பா
லாங்கது கடிந்தோ ரல்லவை கடிந்தோரென
நீங்கின ரன்றே நிறைதவ மாக்க
ணீங்கா ரன்றே நீணில வேந்தே
தாங்கா நரகந் தன்னிடை யுழப்போர், (௧௫௯ - ௧௭௫)

தன் கணவனாகிய கோவலன் கொலையுண்டதுபொறாமல் மாதவி உலக வாழ்வைவெறுத்து முனிவர்களுடைய தவச்சாலையை யடைந்தாள். அவள் பெற்ற மணிமேகலையென்பவள் இளமைபருவத்திலேதானே தவஞ் செய்யத்துணிந்து சிற்றிலும் பேரிலுஞ்சென்று ஐயமேற்று அருந்தி உலகஅறவியென்னும் அம்பலமடைந்தாள்; அவள் அவ்வியல்பினளாகவும், அவளை விழைந்து நிழல்போல்விட்டுநீங்காமற் காமபரவசனாய் நள்ளிருளில் உதயகுமரன் அவ்வம்பலத்தை யடைந்தான். அதுதெரிந்த மணிமேகலை, அவன் தன்னை நலியாதிருக்கவேண்டிக் காயசண்டிகைவடிவமேற்பூண்டாள். அங்கே முன்னமிருந்தகாயசண்டிகையை அழைத்துச்செல்லுதற்குவந்த அவள் கணவனாகிய வித்தியாதரன்கண்டு, அவள் மணிமேகலையென்பதை யறியாமல், அவளைத் தன்மனைவியாகிய காயசண்டிகையென்றும் அங்கே வந்த உதயகுமரனைத் தன்மனைவியைச் சேர்தற்கு வந்தவனென்றுந் தானே நிச்சயித்துக்கொண்டு முறுகியகோபமுற்று உடனே அவனை வாளால் வெட்டி வீழ்த்தினன்" என்று சொன்னார். அதுகேட்ட அரசன் தன் மகனிறந்ததற்குச் சிறிதும் வருந்தாமல், *சோழிகவேனாதியைப் பார்த்து, "உதயகுமரனுக்கு யான் செய்யவேண்டிய தண்டனையைத் தான் செய்தமையால் வித்தியாதரன் தகவிலனல்லன்;

மாதவர் நோன்பு மடவார் கற்புங்
காவலன் காவ லின்றெனி னின்றால்; (௨௦௮ - ௨௦௯).

தன்மகனைப் பூமியிலே கிடத்தி அவன்மீது தேர்க்காலைச் செலுத்தி முறை செய்த அரசர்பிரானுடைய பரம்பரையில் ஒருதீவினையாளன் பிறந்தா

* சோழிகவேனாதி - மந்திரிகளுளொருவன்.

ென்பதை மற்றை அரசர்கள் கேட்குமுன்னம் அவனைப் புறங்காட்டைவித்துக் கணிகைமகளாகிய மணிமேகலையையும் சிறைப்படுத்துக" என்றனன். அவன் அவ்வாறுசெய்தான்.

## உ௩.—சிறைவிடுகாதை.

பிற்பாடு, அரசன் கட்டளையால், வாசந்தவையென்னு முதியவளொருத்தி, புத்திரசோகத்தாற் கலங்கி வருந்தும் இராசமாதேவியை விரைந்தடைந்து தொழுது முன்னின்று வாழ்த்தி அவளுடையவருத்தம்நீங்கும்வண்ணம் பலகட்டுரைகள்கூறி ஒருவாறு ஆற்றுவித்துப்போயினள். அவள் போனபின்பு இராசமாதேவி தன்னுடையவருத்தம் புறத்தேதோன்றுதலெண்ணம் அடக்கிக்கொண்டவளாய், "மணிமேகலையை வஞ்சித்து வருத்துவேன்" என்று எண்ணி அரசனைச்சார்ந்து, "செங்கோல்வேந்தே! மணிமேகலையின் பிக்குணிக்கோலத்தைக்கண்டு தன்னறிவுவேறுபட்ட உதயகுமரன் அரசாட்சிக்கு உரியனல்லன்; அவன் அக்கொடுந்தொழிலால் இறந்தது தக்கதே; தனது இளமையைப் பயனற்றதாகச் செய்த பேரறிவுடையளாகிய மணிமேகலைக்குச் சிறை தகுதியன்று" என்றாள். அரசன், "உன்கருத்து அப்படியாயின் அவளைச் சிறையினின்றும் விடுவி" என்று கூறினன். கேட்ட இராசமாதேவி சிறையினின்றும் விடுவித்து அவளை அழைத்துக்கொண்டு அரண்மனையுட்சென்று, "இவ்வூரிலுள்ளாரெல்லாரும் அடித்துவருத்தும்படி இவளைப் *பித்தியாகச்செய்வேன்" என்றெண்ணி மயக்குமருந்தை அவளுக்கு ஊட்டினள். அவள் மறுபிறப்புணர்ந்தவளாதலால் சிறிதும் அறிவுவேறுபடாதிருந்தாள். அப்பால் இராசமாதேவி அறிவிலியாகிய ஓரிளைஞனை அழைத்து, "இவளுடம்பை எப்படியேனும் வேறுபடுத்தி 'மணிமேகலை என்னைவிரும்பினள்' என்று பலர்க்கும் சொல்வாயாக" என்று சொல்லிப் பொற்காசுகள் பலவற்றைக் கைநிறைய அவனுக்குக்கொடுப்ப, அவன் அத்தீச்செயற்குடம்பட்டு மணிமேகலையிருந்த இடத்தை அடைந்தான். அடைதலும் அவள் 'இவன்வந்தது இராசமாதேவியின வஞ்சத்தால்' என்றுநிச்சயித்து வேற்றுருவெய்துவிக்கு மந்திரத்தைஜபித்து ஆண்வேடம்பூண்டு அங்கேயிருந்தாள். அங்ஙனமிருந்ததனைக்கண்ட அறிவிலி நடுநடுங்கி, "அரசருடைய அந்தப்புரத்தில் ஆடவர் அணுகார்; இக்கொடியவளின் தீய நினைப்பையானறிந்திலேன்" என்றுபயந்து அவ்விடத்தைவிட்டு விரைந்து புறத்தே ஓடிப்போயினன். அதன்பின் இராசமாதேவி நமது அருமைப் புதல்வனை மயக்கி மாளச்செய்த இவளை இனி உயிரோடுவையேனென்று "நோய்மிகுதியால் இவளுக்கு உணவுசெல்லவில்லை" என்று

* பித்தி - பைத்தியங்கொண்டவள்.

அவள்பாற் பொய்ந்நோயொன்றைக்காட்டி அவளைப் *புழுக்கறையில் அடைப்ப, அவள் ஊண்ஒழிமந்திரமுடையவளாதலின் அம்மந்திரத்தை ஜபித்துச் சிறிதும் வாட்டமின்றி அவ்வறையிலேயே இருந்தாள். அதனைக்கண்ட இராசமாதேவி ஆச்சரியமுற்று நடுநடுங்கி அவளைவணங்கி, "மகனையிழந்த பெருந்துன்பம்பொறுக்கலாற்றாது இத்தீங்குகளைச்செய்தேன்; நீ இவற்றைப் பொறுத்தருளவேண்டும்" என்று பலவாறுவேண்டினள். வேண்டவே மணிமேகலை, "சென்றபிறப்பில் நீபதியின் வயிற்றிற்றோன்றிய இராகுலனைத் திட்டிவிடமென்னும்பாம்பு உயிருண்டபொழுது, அதனைப்பொறேனாகித் தீயிற்பாய்ந்து என்னுடைய உயிரைச்சுட்ட நாளில்,

யாங்கிருந் தழுதனை யிளங்கோன் றனக்குப்
பூங்கொடி நல்லாய் பொருந்தாது செய்தனை
யுடற்கழு தனையோ வுயிர்க்கழு தனையோ
வுடற்கழு தனையே லுன்மகன் றன்னை
யெடுத்துப் புறங்காட் டிட்டனர் யாரே
யுயிர்க்கழு தனையே லுயிர்புகும் புக்கில்
செயப்பாட்டு வினையாற் றெரிந்துணர் வரிய
தவ்வுயிர்க் கன்பினை யாயி னாய்தொடி
யெவ்வுயிர்க் காயினு மிரங்கல் வேண்டும் : (எக - எகூ)

உன்மகனை வித்தியாதரனொருவன் வெட்டிவீழ்த்தியதற்குக் காரணமான தீவினையை இன்னதென்றுகூறுவேன்; கேட்பாயாக; அது முற்பிறப்பில் மடைக்கலஞ்சிதையவீழ்ந்த மடைத்தொழிலாளனை வெட்டிவீழ்த்தியதாலுண்டாகியதீவினையே; அத்தீவினை அப்பிறப்பிலேயே நஞ்சுவிழியரவால் அவனுடைய நல்லுயிரைவாங்கி இப்பிறப்பிலும் விஞ்சையன்வாளால் வெட்டுண்ணச்செய்தது; 'இச்செய்திகளையெல்லாம் நீ எப்படி அறிந்தாயோ?' என்பையாயின், நடந்தது இவ்வாறாகும்" என்று தான் உவவனஞ்சென்றதுமுதலிய எல்லாவற்றையும் அவளுக்கு விளங்கக்கூறிப் பின்னுங்கூறுவாளாயினள்: "நீ மருந்தால் எனக்குப்பித்தேற்றினை; யான் மறுபிறப்புணர்ந்தேனாதலின், சிறிதும் அறிவுபிறழாதிருந்தேன்; உன் ஏவலால் கல்லாக்கயவன் என்பாலவரவேற்றுருவெய்துவிக்கும் மந்திரவலியால் ஆணுருக்கொண்டிருந்தேன். யாதொருநோயுமில்லாத என்னைப் பொய்ந்நோய்காட்டி புழுக்கறையில் அடைத்தாய்; ஊணொழி மந்திரமுடைமையினாலேயே அத்துன்பத்தினின்றும் தப்பினேன். நீ சென்றபிறப்பில் எனக்குக் கணவனாயிருந்த இராகுலனை ஈன்றதாயாதலின், உனது துக்கத்தைக்களைந்து தீவினையைப்போக்கி உன்னை நல்வழிப்படுத்தற்பொருட்டே ஆகாயவழியேசெல்லுதலையும் வேற்றுருக்கொள்ளுதலையும் யான் நினைந்திலேன்; இதுநிற்க; இவ்வுலகத்துள்ளோர்க்குத்

* புழுக்கறை - வாயிலில்லாத அறை.

பம் தருவனயாவையெனின், காமம், கொலை, கள், பொய், களவென்னும் ஐந்துமாம். இவற்றைத்துறந்தோரே சீலமுடையோராவார்.

செற்றஞ் செறுத்தோர் முற்ற வுணர்ந்தோர்
மல்லன்மா ஞாலத்து வாழ்வோ ரென்போ
ரல்லன் மாக்கட் கில்லது நிரப்புநர்
திருந்தே ரெல்வளை செல்லுல கறிந்தோர்
வருந்தி வந்தோ ரரும்பசி களைந்தோர்
துன்ப மறுக்குந் துணிபொரு ளுணர்ந்தோர்
மண்பதைக் கெல்லா மன்பொழி யார்"என
ஞான நன்னீர் நன்கனந் தெளித்துத்
தேனு ரோதி செவிமுதல் வார்த்து
மகன்றுயர் நெருப்பா மனம்விற காக
வகஞ்சுடு வெந்தீ யாயிழை யவிப்ப, (௧௩௧ - ௧௪௧)

இராசமாதேவி, மனந்தெளிந்து மணிமேகலையைவணங்கினள்; மணிமேகலை அதனைப்பொருளாகி, "நீ என்கணவனைப்பெற்றதாயாக இருத்தலன்றி அரசனுடையமாபெருந்தேவியாக இருந்தும் என்னைவணங்குதல் தகுதியன்று" என்றுதுதித்து அவளைத்தானும் அன்புடன்வணங்கினள்.

## ௨௪.—ஆபுத்திரனடைந்தகாதை.

மணிமேகலையை விரும்பிச்சென்ற உதயகுமரன் விஞ்சையனுடைய வாட்படையால் உலகவறவியில வெட்டுண்டு இறந்ததையும் மணிமேகலை சிறையில் வைக்கப்பட்டிருத்தலையுங்கேட்டு வருந்தி நடுங்கி அவளைச் சிறையினின்றும நீக்கநினைந்த சித்திராபதி, இராசமாதேவிபாற்சென்று வணங்கி, "மாபெருந்தேவி! கோவலனிறந்தானென்று மாதவி தனது பரத்தைத்தொழிலைநீத்துத் தவச்சாலையையடைந்ததும், அவள்மகளாகிய *அரங்கக்கூத்தி பாத்திரமேந்தி வீடுகள்தோறுஞ் சென்றுசென்று பிச்சையேற்றதும் யாவரும் அவமதித்துச்சிரித்தற்கு இடமாயினவேயன்றி வேறல்ல; இதுநிற்க; உதயகுமரனிறந்ததன்றி, மணிமேகலையால் இனி இந்நகரத்திற்குஉண்டாகும் பெருந்துன்பமுமொன்றுண்டு; கேட்பாயாக:

முன்னொருநாள், அரசன், இந்நகரிற் கடற்கரையைச்சார்ந்த புன்னைமரச்சோலையில் பேரழகினளாகிய ஒரு மங்கையைக்கண்டு விரும்பி அவளோடும் இன்புற்று ஒருமாதம் அச்சோலையில் உறைவானாயினன்; அம்மங்கை அவனிடஞ்சொல்லாது தன்னிடஞ்சென்றாள்; செல்லவே, அரசன், இளங்கொடி யாங்கொளித்தனளென்று பலவிடத்துந்தேடிக்கொண்டிருக்கும்பொழுது, அற்புதசக்தியையுடைய ஒரு சாரணன்வர, அரசன் கண்டு அவனைவணங்கி முன்னின்று, "என்உயிர்போல்பவளாகிய ஒருத்தி

* அரங்கக்கூத்தியென்றது மணிமேகலையை.

இங்கே ஒளித்தனள்; அவளை அடிகள்கண்டதுண்டோ? உண்டாயின் சொல்லுக" என்றுகேட்ப, அந்தச்சாரணன், "அரச! அம்மடந்தையை யான் இப்பொழுது கண்டிலேனாயினும் முன்பு அறிந்துளேன்; கேட்பாயாக; அவள் நாகநாட்டரசனாகிய வளைவணனென்பவனுடைய தேவியான வாசமயிலையென்பவளின் வயிற்றிற்றோன்றிய பீலிவளையென்பாள்; அவள் பிறந்தநாளிற் சோதிடங்கூறவந்த கணி, "இவள் சூரியகுலத்தரசனொருவனைச்சேர்ந்து கருவுற்றுவருவாள்" என்று அரசனுக்குக்கூறினன்; இது முன்புநடந்தது; அவளே நீகூறியமடந்தை; இனி, அவள்வயிற்றிற்றோன்றுமகனே வருவான்; அவள் வாராள்; நீ கவலாதிருக்கக்கடவை; இன்னும் ஒன்றுகேட்பாயாக; இந்திரவிழாச்செய்யாதநாளில் மணிமேகலாதெய்வத்தின் சொல்லால் உன்னகரத்தைக் கடல்கொள்ளும்; இந்திரசாபமுமிருத்தலால், அதுதப்பாது; ஆதலால், யான்கூறியதை உண்மையென்றெண்ணி நீ, இந்நகரைக் கடல்கொள்ளாதபடி இந்திரவிழாவை வருடந்தோறும் மறவாது செய்துவருக" என்றுசொல்லிவிட்டுப் போயினன். அவன்போன அந்நாள்தொடங்கி, நகரத்திற்கு எப்பொழுதுகேடு வந்துவிடுமோவென்று இந்நகரத்தாரெல்லாரும் நடுங்கிக்கொண்டேயிருக்கின்றனர். தன்னுடையபெயரைப்பெறறமடந்தை துன்பமுறுவாளாயின், அதனைப் பரிகரித்தற்கு மணிமேகலாதெய்வம வருதலுங்கூடுமோவென்று யானும் அஞ்சாநின்றேன்" என்றுசொல்லித் துதித்து, "நல்லமனமுண்டாகப்பெற்ற நாடகக்கணிகையை என்மனைக்குப்போதரும்படி கட்டளையிடுவாய்" என்றுகேட்ப, இராசமாதேவி,

> "கள்ளும் பொய்யுங் காமமுங் கொலையும்
> உள்ளக் களவுமென் றுரவோர் துறந்தவை (௭௭ - ௭௮)

மேலானசெய்கையென்றுகொண்ட உனதுபரத்தைமைத்தொழிலை அசுத்தவழியென்றெண்ணிவந்த இவள் உன்னுடன்வந்து உன்மனையிற் புகுதாள்; என்னோடுதானே இருத்தற்குரியள்" என்று சொல்லிக்கொண்டிருக்கையில், மணிமேகலையின் நிலைமையைக்கேட்ட மாதவி, சுதமதிக்குக் கூறி வருந்திச்சென்று அறவணவடிகளைவணங்கி அறிவித்து அவரை முன்னிட்டுக்கொண்டு அவளைச் சிறைமீட்டற்பொருட்டு இராசமாதேவியிடம்வர, இராசமாதேவி, அவரைக்கண்டவுடன் மற்றை இருவரோடுமெழுந்து எதிர்சென்று அவரடியைவணங்கினாள்; அவர் "அறிவுண்டாக" என்று ஆசிகூறினர். அப்பால் அவள் அவரைச் சிறந்த ஆசனத்திலிருத்தி அடிவிளக்கிச் சிறப்புச்செய்து, "எமதுநல்வினையே மிகப்பெரியோராகிய உம்மை இங்கே எழுந்தருளச்செய்தது;

> நாத்தொலை வில்லா யாயினுந் தளர்ந்து
> மூத்தவிவ் யாக்கை வாழ்கபல் லாண்டு" (௯௯ - ௧௦௦)

என்றுகூற, அவர், "யான் இத்தவவுடம்பிற் பொருந்தியிருந்தும் அத்தமிக்குஞ் சூரியன்போன்றேன்;

பிறந்தார் மூத்தார் பிணிநோ யுற்றோ
ரிறந்தா ரென்கை யியல்பே யிதுகேள்" (௧௦௩ ௧௦௪)

என்று பன்னிரு *நிதானங்களையும் அவளுக்கு விளங்கவுபதேசித்து, "எப்பொழுதும் நல்லறத்தையே பேணிக் கேட்டு அவ்வாறேயொழுகுக' என்றுசொல்லிப் பின்பு மணிமேகலையைநோக்கி, "மற்றைச்சமயதருமங்களையெல்லாம் நீகேட்டபின்பு இவற்றையும் இவற்றின்பகுதிகளையும் உனக்குவிளங்க உணர்த்துவேன்" என்றுகூறித் தம்மிடஞ்செல்லுதற்கு எழுதலும், மணிமேகலை எழுந்து அவரைவணங்கிப் பின்பு இராசமாதேவிமுதலியோரைநோக்கி, "அறவணவடிகள்கூறிய உபதேசமொழிகளை மறவன்மின்; அவர்கூறியவாறே ஒழுகுமின்; யான் இந்நகரிலிருப்பேனாயின், 'உதயகுமரனுக்கு இவள் கூற்றாயிருந்தாள்' என்று யாவருங்கூறுவர்; ஆதலால் இங்கிரேன்; இனி, ஆபுத்திரனுடனடைந்து பின்பு மணிபல்லவஞ்சார்ந்து புத்தபீடிகையைத் தரிசித்துவிட்டு, அப்பால் வஞ்சிநகரஞ்சென்று, †பத்தினிக்கடவுளைத்தரிசித்தபின் எங்கும்போய் நல்லறஞ்செய்துகொண்டு ஒழுகாநிற்பேன்; எனக்கு இடருளதாகுமோவென்று நீர் சிறிதும் கவலற்க" என்றுசொல்லி அவர்களையும்வணங்கி, சூரியாஸ்தமயத்திற்குப்பின் அந்திமாலைப்பொழுதிலேசென்று, உலகவறவியையும் சம்பாபதியையும் கந்திற்பாவையையும் வலங்கொண்டுதுதித்து ஆகாயவழியே பறந்துசென்று, இந்திரனுடையவழித்தோன்றலாகிய புண்ணியராசனது நகர்ப்புறத்தேயுள்ள சோலைக்குள்ளேயிறங்கி அயர்வுயிர்த்து, ஆங்குள்ள ஒருமுனிவனைவணங்கி, "இந்நகரின்பெயர் யாது? இதனையாளும் அரசன்யார்?" என்றுகேட்டாள்; அம்முனிவன், "இதன்பெயர் நாகபுரமென்பது; இதனையாள்பவன் பூமிசந்திரன்மகனாகிய புண்ணியராசனென்பான்; இவன் பிறந்தகாலந்தொடங்கி இந்நாட்டில் மழை பிழைத்ததில்லை; பூமியும் மரங்களும் பிறவும் பலவளங்களையும் மிகத் தாராநிற்கும்; உயிர்களுக்கு ஒருவகையான நோயுமில்லை" என்று அரசனுடைய பெருமையை அவளுக்கு விளங்கக் கூறினன்.

## உரு.—ஆபுத்திரனோடு மணிபல்லவமடைந்தகாதை.

அப்பொழுது, புண்ணியராசன், தன்பெருந்தேவியோடு அச்சோலையிற்புகுந்து ஆங்குள்ள தருமசாவகனென்னும் முனிவனைவணங்கி,

---

* நிதானம் - ஆதிகாரணம்; என்றது பேதைமைமுதலியனவற்றை.

† பத்தினிக்கடவுள் - கண்ணகி.

அறனு மறனு மநித்தமு நித்தத்
திறனுந் துக்கமுஞ் செல்லுயிர்ப் புக்கிலுஞ்
சார்பிற் றோற்றமுஞ் சார்பறுத் துய்தியு
மாரிய னமைதியு மமைவுறக் கேட்டு, (௩-௬)

பின்பு, "இவள் ஒப்பற்றபேரழகினள்; கையிற்பிச்சைப்பாத்திரமொன்றையுடையவளாய்த் தருமங்கேட்கின்றாள்; யார்?" என்று வினவுக்கையில், அருகேநின்ற சட்டையிட்டபிரதானி அரசனைவணங்கி, "இவளையொப்பவர் யாருமில்லை; முன்னொருகாலத்தில் கிள்ளிவளவனோடு நட்புக்கொள்ளுதலைவிரும்பிக் காவிரிப்பூம்பட்டினத்திற்சென்றபொழுது, அங்கேயுள்ள அறவணவடிகள் இவள்வரலாறுகளையெல்லாம் விளங்கக்கூறினாரென்று முன்னமே நான் உரைத்ததுண்டு; அம்மடந்தையே இவள்" என்றுகூறினன்; கூறலும், மணிமேகலை அரசனைப்பார்த்து, "உன்கையிலிருந்தபாத்திரமே என்கையையடைந்தது; செல்வத்தால் மயங்கினையேனும்; என்செய்தனை? மணிபல்லவஞ்சென்று புத்தபீடிகையைத் தரிசித்தாலன்றி உனதுபழம்பிறப்பின்செய்தியையறியாய்; ஆதலால், அரச! அங்கேவருவாயாக" என்றுசொல்லிவிட்டு, எழுந்து ஆகாயவழியே சென்று சூரியாஸ்தமயத்திற்குமுன்னமே மணிபல்லவத்திலிறங்கி வலங்கொண்டு புத்தபீடிகையைத் தரிசித்தாள். அது பழம்பிறப்பை அவளுக்குத்தெரிவித்தது. அதனையறிந்து வியந்து அவள் அங்கே இருக்க, புண்ணியராசன், அச்சோலையைநீங்கி நகரிற்புகுந்து, தன்னை வளர்த்ததாயாகிய அமரசுந்தரியைக் கண்டு வினவித் தன்வரலாறுமுழுவதையும் அவள்கூறக்கேட்டு வருந்தி அரசாட்சியில்வெறுப்புற்றுத் துறத்தற்குத் துணிந்து தன்கருத்தைவெளியிட்டான்; அதனைக்கேட்ட சனமித்திரனென்னுமந்திரி அவனைவணங்கி,

"எங்கோ வாழி யென்சொற் கேண்மதி; (௧௧)

உன்னை அரசன்பெறுவதன்முன் இந்நாட்டில் பன்னிரண்டுவருடம் மழையில்லாமற்போயிற்று; வறுமைமிக்கது; அதனால் எல்லாவுயிர்களும் வருந்தின; அக்காலத்தில நீ தோன்றினை; தோன்றியபின் இந்நாட்டில் எல்லாவளங்களும் நிரம்பின; உயிர்கள் துயரமநீங்கி வாழ்வனவாயின; நீ நீங்குவாயாயின், எல்லாவுயிர்களும தாயைப்பிரிந்த குழந்தைகள்போலக் கூவாநிற்கும்; இந்தநிலையையுடைய உலகத்தைக் காவாமல உனதுபயனையேவிரும்பிச செல்லுதல் தகுதியன்று;

தன்னுயிர்க் கிரங்கான் பிறவுயி ரோம்பு
மன்னுயிர் முதல்வ னறமுமி தன்றால்." (௧௫-௧௭)

என்றுகூற, அரசன்கேட்டு, 'மணிபல்லவத்தை வலங்கொள்ளவேண்டுமென்று எனக்குண்டாகிய வரம்புகடந்த ஆசை தணித்தற்கு அரியது;

ஆதலால், அங்கே போய்வருவேன்; ஒருமாதகாலம் இந்நகரைப்பாது காத்தல் உனதுகடன்" என்றுகூறிப் புறப்பட்டு வழிக்கொண்டு கடற்கரையைச்சார்ந்து நாவாயேறி மணிபல்லவத்தையடைந்தான்; உடனே மணிமேகலைவந்து அழைத்துச்சென்று அவனோடு அத்தீவைவலம்வந்து, "பழம்பிறப்பையுணர்விக்கும் தருமபீடிகை இது" என்றுகாட்ட, அரசன், அதைத்தரிசித்து வலங்கொண்டு துதித்தான்; துதிக்கவே அப்பீடிகை பழம்பிறப்பின்செய்தியை அவனுக்கு விளங்கத் தெரிவித்தது. அதனையறிந்து வியப்புற்று, தனக்குப் பழம்பிறப்பில் அமுதசுரபியென்னும் அக்ஷயபாத்திரத்தையளித்த சிந்தாதேவியைத்துதித்து மணிமேகலையோடுமெழுந்து தென்மேற்கிற்சென்று கோமுகிக்கரையில் புன்னைமரத்தின் நிழலிலேயிருந்தான்; இருக்கையில், ஆபுத்திரனோடு மணிமேகலைவந்திருந்ததைத் தீவதிலகையறிந்துவந்து, "அமுதசுரபியைக் கையிலேந்தி உயிர்களின்பெருந்துயரத்தைத்தீர்த்த பெரியோனே! அக்காலத்தில், மறந்து உன்னை இத்தீவில் தனியேவிட்டுவிட்டுக் கப்பலேறிச்சென்று பின்பு உன்னைநினைந்து மீண்டுவந்து இங்கே நீ இறந்திருத்தலையறிந்து உடனே தம்முயிர்நீத்த ஒன்பதுசெட்டிகளின் உடலென்புகள் இவை. காண்பாயாக. அச்செட்டிகள் உண்பிக்கவுண்டு உடன்வந்தோர்கள், அவர்கள் இறந்ததுதெரிந்து தாமும் இறந்தார்; அவர்களுடைய என்புகள் இவைகள்காண்; அலைகள்தொகுத்த மணலால்மூடப்பட்டுப் புன்னை நிழலின்கீழே உனது பண்டையுடம்பு இருந்ததைப் பார்ப்பாயாக.

நின்னுயிர் கொன்றாய் நின்னுயிர்க் கிரங்கிப்
பின்னாள் வந்த பிறருயிர் கொன்றாய்
கொலைவ னல்லையோ கொற்றவ னாயினை" (௧௭௨-௧௭௪.)

என்று அரசனைநோக்கிக்கூறிப் பின்பு மணிமேகலையைப்பார்த்து, "காவிரிப்பூம்பட்டினத்தைக் கடல்கொண்டது; அதற்குக்காரணங் கேட்பாயாக: நாகநாட்டரசன்மகளாகிய பீலிவளையென்பவள் தான்பெற்ற குழந்தையுடன்வந்து இத்தீவையும் புத்தபீடிகையையும் வலம்வந்துதுதிக்கும்பொழுது, கம்பளச்செட்டியின்கப்பல் வந்துதங்க, பீலிவளை அவனிடஞ்சென்று, "இவன் அரசன்புதல்வன்; இவனை அவனிடஞ்சேர்ப்பாயாக" என்றுசொல்லி, குழந்தையை அவன்கையிற்கொடுக்க, அவன் பெருமகிழ்ச்சியடைந்து வாங்கிக் கப்பலேறிச்செல்லுகையில் அஃது உடைந்து போயிற்று. போகவே கப்பலிலிருந்தோரிற்சிலர் மெல்லப் பிழைத்துச்சென்று காவிரிப்பூம்பட்டினத்தையடைந்து புதல்வனைக்கெடுத்தசெய்தியை அரசனுக்குத்தெரிவித்தார். அதுகேட்டு அவன்பொறாமல் செயலற்றுக் கடற்கரையையடைந்து மகனைத்தேடிக்கொண்டு அலைந்தமையால், நகரம் இந்திரனுக்குவிழாச்செய்தலை விட்டொழிந்தது; ஒழியவே அதனை

ப்பொறுக்காமல் மணிமேகலாதெய்வம், "இந்நகரைக் கடல்கொள்ளுக" என்று சபிக்கக் கடல் நகரை மூடியது; மூடவே அரசன் வேறிடஞ்சென்றான். அறவணவடிகளோடு மாதவியும் சுதமதியும் யாதொருவருத்தமுமின்றிப் போய் வஞ்சிநகரம் புகுந்தார்" என்று சொல்லிப்போயினள்; அவள்போனபின்பு புண்ணியராசன் அவ்விடத்தே மணலைத்தோண்டி, அங்கேதோன்றிய தன்னுடைய பழைய உடம்பின் என்பைக்கண்டு மயக்கமுற்றான். மணிமேகலை தேற்றித் தருமோபதேசஞ்செய்து அவனை நகரத்திற்கு அனுப்பிவிட்டுத் தான் வஞ்சிநகரஞ்செல்லநினைந்து ஆகாயத்திலெழுந்தாள்.

## உசு.—வஞ்சிமாநகர்புக்ககாதை.

எழுந்தவள் ஆகாயவழியேசென்று வஞ்சிநகர்ப்புறத்தேயிறங்கி, தாய்கண்ணகியையும் தந்தைகோவலனையும் தரிசிக்கவேண்டுமென்கிற ஆசை தூண்டுதலாற் கோயிலிற்புகுந்து கண்ணகியைவணங்கித் துதித்து "கணவனிறந்ததுதெரிந்து உடனிறவாமலும் கைம்மைநோன்பை நோலாமலும் சினங்கொண்டு மதுரையைஅழித்ததற்குக் காரணங்கூறியருளவேண்டும்" என்று பிரார்த்திக்க, பத்தினிக்கடவுளாகிய கண்ணகி, "எனது தலைவனுக்குநேர்ந்த மரணத்துன்பத்தைப் பொறுக்கமுடியாமையால் மதுரையை எரித்தழிக்கத்தொடங்கினேன்; அப்பொழுது மதுராபதியென்கிற அந்நகர்த்தெய்வம் எனக்குமுன்னேதோன்றி, "இத்துன்பத்தை நீங்களனுபவித்தல் முற்பிறப்பிற்செய்த தீவினையினாலேயே. அதனைக்கூறுவேன்:

முன்பு கலிங்கநாட்டிலுள்ள சிங்கபுரத்தரசனாகிய வசுவென்பவனும் கபிலபுரத்தரசனாகிய குமரனென்பவனும் தம்முட் பகைமைகொண்டு போர்செய்வாராயினர்; அப்பொழுது மனைவியுடன் சிங்கபுரத்துக் கடைவீதியிற்சென்று பண்டம்விற்றுக்கொண்டிருந்த சங்கமனென்னும்வணிகன்பாற் பொறாமையுற்று, அந்நகரத்தரசனிடம் தொழில்செய்துகொண்டிருக்கும் பரதனென்பவன், "இவன் பகைவனுடையஒற்றன்" என்று அரசனுக்குச்சொல்லி, யாதொரு குற்றமுமில்லாத அச்சங்கமனை அவ்வரசனைக்கொண்டு கொலைசெய்வித்தான். சங்கமன்மனைவி நீலியென்பவள், அதனைத்தெரிந்து, ஏங்கி அழுது பெரியமலைமீதேறி வீழ்ந்து உடம்பைத்துறக்கநிச்சயித்து, "எமக்குத்துன்பஞ்செய்தோர் மறுபிறப்பில் இத்துன்பத்தையே அடைவார்களாக" என்று சபித்துவிட்டு இறந்தாள். அப்பரதனே கோவலனாகப் பிறந்தான்; அவ்வினையால் இத்துன்பமடைந்தீர்கள்; பழம்பிறப்பிற்செய்த வினையின்பயனை யாரும் நுகர்ந்தே ஒழித்தல்வேண்டும்" என்கிற உண்மைமொழியைக் கூறியது; அதைதெய்வம

கூறியபின்னும் என்கோபம் அடங்காமையால், நகரத்தை எரித்தழித்தேன்; முன்புசெய்த நல்வினையாலே நானும் என்கணவனும் தேவர்களாகிச்சென்றோம். இந்நல்வினையினிறுதியிற் கோவத்தாலுண்டாகிய பாவப்பயனை நுகர்தல்கூடும்; இப்படிப் பிறந்துமிறந்தும் புண்ணியத்தினிறுதியிற் பாவப்பயனையும் பாவத்தினிறுதியிற் புண்ணியப்பயனையும் நுகர்ந்து நுகர்ந்து உழலாநிற்பேம். அப்பால் மகதநாட்டிற் கபிலையம்பதியிற் புத்தஞாயிறு உதித்துப் போதிமரத்தினடியில் எழுந்தருளியிருந்து நால்வகைச்சத்தியங்களையுமறிந்து பன்னிரண்டுசார்புகளின் தோற்றங்களையும் அவற்றின்அழிவையும் விளங்கக்கூறி இசக்கரவாளமுழுவதும் தருமவொளியை வீசுங்காலத்தில், யாம் அவ்வுபதேசமொழிகளைக்கேட்டுத் துறந்து நிருவாணமடைவேம்; இப்பயனை யாம் அடைதற்குக்காரணம், முன்பு காவிரிப்பூம்பட்டினத்திற் புத்தசைத்தியத்திலுள்ள இந்திரவிகாரமேழினையும் உன்தந்தையுடன் வந்தித்தபுண்ணியமே; யாம் நிருவாணத்தையடைவது பலநாளைக்குப் பின்பேயாயினும், அதுகாறும் பலவகையாகிய சித்திகளையும்செய்துகொண்டிருப்பேம். இதுநிற்க. நீ இந்நகரிலுள்ள பலசமயவாதிகள்கூறும் கொள்கைகளையெல்லாங்கேட்டு அவற்றுள் ஒன்றும் உனக்கு உண்மையென்றுதோன்றாமையால் பின்பு பௌத்தசமயத்தைப் பற்றியொழுகுவை" என்று சொன்னவுடன், மணிமேகலை வணங்கி வேற்றுருவெய்துவிக்கு மந்திரத்தைஜபித்து ஒரு முனிவன்வேடங்கொண்டு,

> தேவ குலமுந் தெற்றியும் பள்ளியும்
> பூமலர்ப் பொழிலும் பொய்கையு மிடைந்து
> நற்றவ முனிவருங் கற்றடங் கினரும்
> நன்னெறி *காணிய தொன்னூற் புலவரும் (எஉ-எரு.)

எங்கணும் விளங்கிய வஞ்சியம்பதியில், செங்குட்டுவனென்னும் சேரர்பெருமானது புகழ் விளங்கும்படி சென்றுபுகுந்தாள்.

## உஎ.—சமயக்கணக்கர் தந்திறங்கேட்டகாதை.

புகுந்தமணிமேகலை, சமயவாதிகள்பலருடைய கொள்கைகளையும் அறியவிரும்பி, அவருள்ளே வைதிகவழியைச்சார்ந்த அளவைவாதியை முதலிலடைந்து, 'உன்கொள்கையை உரை' என்றுவினவி, அவன் தன் கோட்பாட்டைக் கூறக்கேட்டும், அப்பால் சைவவாதியையும், அப்பால் பிரமவாதியையும், அப்பால் வைணவவாதியையும், அப்பால் வேதவாதியையும், அப்பால் ஆசீவகவாதியையும், அப்பால் நிகண்டவாதியையும், அப்பாற் சாங்கியவாதியையும், அப்பால் வைசேடிகவாதியையும், அப்பால் பூதவாதியையுஞ் சார்ந்துசார்ந்து வினவிவினவி, அவர் தங்கொள்கைகளைக் கூறக்கேட்டும் அவற்றை அறிந்துகொண்டாள்.

---

* காணிய - கண்ட.

## உஅ.—கச்சிமாநகர்புக்ககாதை.

அதன்பின், மாதவியையும் சுதமதியையும் அறவணவடிகளையும் காணவிரும்பிப் புறநகரத்தைக் கடந்துசென்று வஞ்சிநகரத்தினுள்ளே போய்ப் பலவகைச் சாதியாருமிருத்தற்குரிய வீதிகளையும் வேறுள்ள பலஇடங்களையும் முறையேகண்டு மகிழ்ச்சியுற்றுச்செல்பவள், பௌத்ததருமங்களைச் சொல்லுமுனிவர்கள் தங்கியிருக்குந் தவச்சாலையிற் புகுந்து, அங்கே தவஞ்செய்துகொண்டிருந்த *மாசாத்துவானைப் பணிந்து, எடுக்கவெடுக்க உணவுவளரும் அமுதசுரபியின் விசேடத்தையும் அப்பாத்திரத்தைக்கொண்டு செய்த தானவிசேடத்தால் ஆபுத்திரன் புண்ணியராசனாகப் பிறந்து சாவகநாட்டை ஆண்டுவரும் பெருமையையும் தான் அவனை மணிபல்லவத்திற்கு அழைத்துவந்து புத்தபீடிகையைக் காட்டப் பழம்பிறப்புணர்ச்சியை அவன் பெற்றதையும் தீவதிலகை வெளிப்பட்டதையும் காவிரிப்பூம்பட்டினத்தைக் கடல்கொண்டமையால் மாதவியும் சுதமதியும் அறவணவடிகளும் சாதனின்றி இந்நகரில்வந்து புகுந்தார்களென்று தான் தீவதிலகைபாற் கேட்டதையும் புண்ணியராசன் நாகபுரஞ்செல்லத் தான் மணிபல்லவத்தைவிட்டுவந்ததையும் தாயாகியகண்ணகியைத் தரிசித்ததுமுதலியவற்றையும் பின் வேற்றுருக்கொண்டு பலசமயவாதிகளைச்சார்ந்து அவர்களுடையகொள்கைகளைக் கேட்டதையும் அக்கோட்பாடுகளெல்லாம் பொருத்தமில்லாமையால் தான் அவற்றை மனங்கொள்ளாததையும் பௌத்ததருமத்தைக் கேட்கவிரும்பி அறவணவடிகளைத் தேடிக்கொண்டுவந்ததையுஞ்சொன்னாள். இவற்றையெல்லாங் கேட்ட மாசாத்துவான், "உன்னைநான்கண்டது எனதுநல்வினையினாலேயே; உன்தந்தைகோவலனும் தாய் கண்ணகியுமடைந்த வருத்தங்களும் மதுரையம்பதி அழிவுற்றதும் ஆகிய இவற்றைக்கேள்வியுற்று எல்லாவற்றையுந்துறந்து பௌத்தமதத்தைச்சார்ந்து தவஞ்செய்தலை மேற்கொண்டேன்; கொண்ட யான் இங்கேவந்ததற்குக் காரணங்கேட்பாயாக:—

முற்காலத்தில் இந்நகரையாண்ட இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனென்னுமரசன் தன்தேவிமாரோடும் இச்சோலையைச் சார்ந்து இருந்தபொழுது, இலங்காதீவத்துள்ள சமனொளியென்னு மலையையடைந்து தரிசித்து வலங்கொண்டு ஆகாயவழியேமீள்வோராகிய சாரணர் இச்சோலையிலிறங்கி ஒரு சிலாதலத்திலிருந்தார்; அங்ஙனமிருக்கக்கண்ட அரசன் அவர்களைவணங்கி உபசரித்து அமுதுசெய்வித்துத் துதிக்க, அவர்கள்,

> பிறப்பிற் றுன்பமும் பிறவா வின்பமு
> மறத்தகை முதல்வ னருளிய வாய்மை

* மாசாத்துவான் - கோவலனுடைய தந்தை.

## உஅ.—கச்சிமாநகர்புக்ககாதை.

யின்ப வாமு திறைவன் செவிமுதற்
றுன்ப நீங்கச் சொரியு மந்நாள், (ககக - கஉஉ)

நின்தந்தைக்கு ஒன்பதுதலைமுறை முன்னேனாகிய கோவலனென்பவன் அவ்வரசனுக்குக் காதற்பாங்கனாதலால், இங்கேவந்திருந்து, அச்சாரணர் அரசனுக்குக்கூறிய அறமொழிகளைக் கேட்டு, தானீட்டிய பலகோடிதனங்களையும் முன்னோர்கள் தருமவழியே தேடிய பொருள்கள் பலவற்றையும் ஏழுதினத்துள் இரவலர்க்குககொடுத்துவிட்டுப் பின்பு தவஞ்செய்வானாயினன்; அவன் அக்காலத்திற் புத்ததேவனுக்குக் கட்டுவித்த சைத்தியத்தைத்தரிசித்தற்காகவே வந்தேன்; காவிரிப்பூம்பட்டினத்தைக கடல்விழுங்கிவிடுமென்ற செய்தியை ஈண்டுள்ள முனிவாகள துணிந்துகூறக்கேட்டு அந்நகரஞ்செல்லாமல் இவ்விடத்திலேயே இருநதுவிட்டேன்; தீவினையுடைமையாற் கொலையுண்டிறநத உன்றநதை, நலவினையால் தெய்வயாக்கையைப் பெற்றுப் பின்னுந் தீவினைப்பயனை அனுபவிதது, அப்பால், புத்ததேவன் அவதரித்துசசெய்யுந தருமோபதேசத்தைக் கேடடு விடைவானென்று அறிநதோர்கூறக் கேட்டேன்; நானும அக்காலத்தில அவ்வறமொழிகளைக் கேட்பேன்; உனது பிற்காலசசெய்திகளை நீ கந்திற்பாவையாலறிநதாயென்று அறவணவடிகளாலறிநதேன்; அம்முனிவர், உனக்குத் தருமோபதேசஞ்செய்தற்கு அமைநதவிடம் காஞ்சிநகரமென்றெண்ணி இங்கிருநது அங்கேசென்றார்; மாதவியும சுதமதியும் அவருடன் அநநகரம போயினா; இன்னுங்கேட்பாயாக; மழையிலலாமையாற் காஞ்சிநகரத்தில் மிக்க வறுமையுணடாயிற்று; பலவுயிர்கள் இறந்தன; அந்நகரில ஐயமிடுவோா இலலாமறபோனமைபால், அங்கேயிருநதமுனிவர்கள் இவ்விடம் வந்துவிட்டாாகள்; ஆதலால், அந்நகரமடைநது எல்லாவுயிாகளையும பாதுகாத்தல் உனககுக கடனாகும்" என்று சொல்ல, மணிமேகலை அவனைவணங்கி, அமுதசுரபியைக கையிலேலநதிக்கொண்டு, வஞ்சிநகரத்தின் மேற்றிசையினினறு மேலேயெழுநது ஆகாயவழியே வடதிசைக்கட்சென்று, மிக்கசெல்வங்குன்றி வறுமையுற்று அழகுகெட்டுப்போயிருககுங் காஞ்சிநகரத்தைககண்டு மனமிரங்கி விலமவநது அநநகரினடுவேயிறங்கி, அங்கே தொடுகழற்கிள்ளியின் துணையிளங்கிள்ளியாற் கட்டுவிககப்படடுள்ள புத்தாலயத்தை வணங்கி அதறகுத் தென்மேற்கிற்சென்று ஒரு சோலையில்தங்கினள; அதனையறிநத ஒருவன், விரைந்துசென்று அரசனைவணங்கி, 'அரச! கோவலன்புதல்வி; சிறநத தவஞ்செய்தொழுகுபவள்; இசசம்புத்தீவில் எலலாருள்ளுஞ்சிறந்தவள்; அவள் கையிலேலநதிய அமுதசுரபியெனனும பாததிரத்தோடு இநநகரிலவநது தருமதவனத்தே உறைகின்றாள்' என்றான். அதுகேட்ட அரசன் கந்திற்பாவை முன்பு நமக்குக்கூறியது உண்மையேயென்று மகி

த்து அத்தெய்வத்தைவந்தித்து மந்திரிகளுடன் விரைந்துசென்று மணிமேகலையையடைந்து அவளைநோக்கி,

"செங்கோல் கோடியோ செய்தவம் பிழைத்தோ
கொங்கவிழ் குழலார் கற்புக் குறைபட்டோ
நலத்தகை நல்லாய் நன்னா டெல்லா
மலத்தற் காலை யாகிய தறியேன்; (௧அ௮ - ௧௯௧)

இனிச்செய்வது யாது?" என்று மயங்கிக்கொண்டிருந்தேன்; இருந்தபொழுது, ஒரு பெரியதெய்வம் எனக்கு முன்னேவந்து, "நீ வருந்தற்க; உனது நல்வினையால் ஒருமடந்தை இங்கே தோன்றுவள்; அவளுடைய கையிலுள்ள தெய்வப்பாத்திரத்திலிருந்து எடுக்க எடுக்கக் குறையாமல் மேன்மேலுமுண்டாகிற உணவால் இவ்வுலகமெல்லாமுய்யும்; அவளுடைய கருணையால் மேகமும் மிகமழைபொழியும்; அவள் இந்நகரத்திற்குவந்தபின்பு உண்டாகும் விசேடங்கள் பலவாம; கார்வறங் கூரினும் நீர்வறங் கூராது; அவள் வந்திருத்தற்காகக் கோமுகியென்னும் பொய்கையும் அதனையுடைய மணிபல்லவமென்னுந்தீவும இங்குவந்தனவென்று சொல்லும்படி, இந்நகரவீதியில ஒருபொய்கையையும் அதனைச்சூழ ஒரு சோலையையும் உண்டுபண்ணுக" என்று சொல்லிவிட்டுப் போயிற்று; அத்தெய்வம் போனபின்பு அது கட்டளையிட்டபடியே செய்துவைத்த இடம் இஃது" என்று சொல்லி அவ்விடத்தைக் காட்ட, மணிபல்லவம்போன்ற அச்சோலையையடைந்து அதையும் பொய்கையையுங் கண்டு மகிழ்ச்சியுற்ற மணிமேகலை, தனது பழம்பிறப்பை அறிவுறுத்திய புத்தபீடிகையை அச்சோலையில் இயற்றுவித்துத் தீவதிலகையையும மணிமேகலாதெய்வத்தையுமவழிபடுதற்குரிய கோயிலையும் அங்கே உண்டாக்கி நித்தியபூசையையும் திருவிழாவையும் அரசனைக்கொண்டு செய்வித்துத் தான் வந்தித்துத்துதித்து மேற்கூறியபுத்தபீடிகையில் ஆருயிர்மருந்தெனும அமுதசுரபியை வைத்து, உண்ணுதற்கு எல்லாவுயிர்களும வருகவென்று அழைத்தனள்; அழைக்கவே,

மொய்த்த மூவறு பாடை மாக்களிற்
காணார் கேளார் கான்முட மானோர்
பேணா மாக்கள் பேசார் பிணித்தோர்
படிவ நோன்பியர் பசிநோ யுற்றோர்
மடிநல் கூர்ந்த மாக்கள் யாவரும்
பன்னா றாயிரம் விலங்கின் றொகுதியு
மன்னுயி ரடங்கலும் வந்தொருங் கீண்டி, (௨௨௧ - ௨௨௭)

உண்ணவுண்ண அவ்வுணவு மேன்மேலும் பெருகிப் பசித்துன்பத்தை அகற்றி விளங்கியது; அப்புண்ணிய விசேடத்தால், எங்கும் மழைபெய்தது; வளங்கள் மிகுந்தன. அப்படி நிகழுங்காலத்தில், அறவணவடிகள்,

## ௬0.—பவத்திறமறுகெனப் பாவைநோற்றகாதை.

அந்நிகழ்ச்சிகளைக் கேட்டு மாதவியோடும் சுதமதியோடும் அறச்சாலையை யடைந்தனர்; கண்ட மணிமேகலை விரைந்துசென்று அன்புடன் வணங்கி அவரடிகளைவிளக்கி ஆதனத்திலிருத்தி அறுசுவைப்போனகம் அமுதுசெய்வித்து, "யான் செய்த புண்ணியம் தப்பாது பலித்திடுக" என்றுசொல்லி மீட்டும் வணங்கினள்.

## உ௯.—தவத்திறம்பூண்டு தருமங்கேட்டகாதை.

வணங்கிய மணிமேகலையை வாழ்த்திச்சொல்லும் அறவணவடிகள், "பீலிவளைபெற்ற குழந்தையைக் கம்பளச்செட்டி கடலிற் கெடுத்ததுதெரிந்த அரசன் வருத்தமுற்று அக்குழந்தையைத் தேடியலைந்தமையாற் காவிரிப்பூம்பட்டினத்தில் இந்திரவிழாச் செய்யப்படாது போயிற்று; மணிமேகலாதெய்வம் அதுதெரிந்து 'நகரைக் கடல்கொள்ளுக' என்று சபித்தது; இந்திரனும் சபித்தான். அதனால், அந்நகரம் கடலால் விழுங்கப்பட்டது. அப்பால் உன் தாயரும் யானுமாக உன்பொருட்டு இந்நகரம் அடைந்தேம்" என்று கூறினர்; கூறவே மணிமேகலை அவருடைய அடியிணையை வணங்கி, "மணிபல்லவத்தில் புத்தபீடிகையைக் காத்துக்கொண்டிருக்கும் தீவதிலகையென்பவளும் இச் செய்தியைச் செப்பினள். நான் வேற்றுருக்கொண்டுசென்று வஞ்சிநகரமடைந்து ஆங்குள்ள பலசமயவாதிகள்கூறிய கொள்கைகள்யாவும் மனத்திற்குப் பொருந்தாமையால் அவற்றையும் முன்புகொண்டிருந்த வேற்றுவடிவத்தையுந் துறந்து இந்நகரமடைந்து நும்மைச் சரண்புகவேன்; தேவரீர் அடிச்சிக்கு உண்மைப்பொருளை யுணர்த்தியருளவேண்டும்" என்று பிரார்த்திக்க, அவர் பிரத்தியக்கம், அநுமானமென்னும் இரண்டு அளவைகளின் இலக்கணங்களையும் அவற்றின்போலிவகைகளையும் உண்மையறிவுண்டாதற்குக்கருவியாக அவளுக்கு விளங்கக்கூறினர்.

## ௬0.—பவத்திறமறுகெனப் பாவைநோற்றகாதை.

தானஞ்செய்தலை மேற்கொண்டு சீலத்தில் முதன்மையாக நின்று பழம்பிறப்பின் உணர்ச்சியையடைந்த மணிமேகலை, அப்பால், 'புத்தம் சரணங்கச்சாமி', 'தர்மசரணங்கச்சாமி', 'ஸங்கசரணங்கச்சாமி' என்பவற்றை மூன்றுமுறைசொல்லி, மும்மணிகளையும் மூன்றுமுறைவணங்கி அறவணவடிகளைச் சரணாகதியாக அடைந்தாள்; அடையவே பௌத்த தருமத்தை உபதேசிக்கத்தொடங்கிய அவர், "இதனைக்கேட்பாயாக:— உயிர்களெல்லாம் அறிவில்லாமல் இருந்தகாலத்தில் தேவர்கள் பிரார்த்திக்கத் துடிதலோகத்தினின்றும் இவ்வுலகிலவதரித்து அரசமரத்தினடியிலேயிருந்து தத்துவத்தை ஆராய்ந்தறிந்து மாரனைவென்று முக்குற்

றங்களையும் அறுத்து விளங்கிய புத்ததேவன் அருளிச்செய்த இன்பம மாகிய கட்டுரையாகும் இது; பண்டைக்காலத்தில் அவதரித்த அளவற் புத்தர்கள் கருணைமிகுந்து திருவாய்மலர்ந்தருளியதும் இதுவே" என் சொல்லி, பேதைமைமுதலிய பன்னிருநிதானங்களின் தோற்றவொடு கங்களையும் பிறவற்றையும் முறையே விளங்க உபதேசித்து உன்மன திருள் நீங்கு" என்றுகூறி ஞானதீபத்தை நன்குகாட்டினர்; மணிமேக அவற்றைக்கேட்டு ஐயந்திரிபறவுணர்ந்து, "பிறவித்துன்பம் ஒழிவதாக என்று அந்நகரிலேயே நோற்றுக்கொண்டிருந்தாள்.

# அபிதான விளக்கம்.

## பதி - பதிசம்.

அகத்தியன்:—ஒரு தெய்வமுனிவர்; தமது கமண்டலத்திலிருந்த காவிரியைக் காந்தனென்னுமரசனுடைய வேண்டுகோளாற் பூமியிற் பெருகச்செய்தோர் அவ்வரசன் பரசுராமருக்கு அஞ்சித் தம்பாலடைக்கலமபுகுந்தபொழுது அவனைப் பாதுகாத்தவர், தூங்கெயிலெறிந்ததொடித்தோட்செம்பியனைக்கொண்டு காவிரிப்பூம்பட்டினத்தில் இந்திரவிழாவை எடுப்பித்தோர். (பதி) கக, கக், *(க) ரு, (உஉ) கரு.

அங்கநாடு:—துச்சயனென்னும் அரசனுடையது, இந்நாட்டின் இராசதானி கச்சயநகரம். (கO) ருஉ.

அங்காடிப்பூதம்.—(க) உO.

அசலன்:—பசுவயிற்றிற்பிறந்த ஒருமுனிவர். (கரு) சுரு.

அசோதரம்:—இரவிவன்மனென்னும் அரசனுடைய நகரம். (கூ) ருஅ.

அத்திபதி:—காந்தாரநாட்டுள்ள பூருவதேசத்தரசன்; நீலபதிகணவன்; இராகுலனுடைய தந்தை, இவனது இராசதானி இடவயமென்பது, தனதுமைத்துனனும் துறவுபூண்டோனுமாகிய பிரமதருமனென்பவனது கட்டளையால் அந்நகரைநீங்கிப் பின்பு அதனவடகசேயுள்ள அவந்தி நகரை இராசதானியாகக் கொண்டான். (கூ) கச, சஉ.

அந்தரி:—துர்க்கை; இவளுக்கு விந்தமலையில் ஒராலயமுண்டு, இவளுடைய ஏவல்செய்பவள் விந்தாகடிகையென்பவள். (உO) ககரு.

அபஞ்சிகன்:—காசியிலுள்ள ஓரந்தணன்; இவன் வேதமோதுவிக்குந் தொழிலை உடையோன், சாலியென்பவளுடைய கணவன். (கரு) ச.

அமரசுந்தரி:—பூமிசந்திரனென்னுமரசனுடையமனைவி; புண்ணியராசனை வளர்த்ததாய். (உரு) எக.

அமுதசுரபி:—தென்மதுரையிற் கலாநியமதத்துள்ள சிந்தாதேவியால் ஆபுத்திர

யுள்ள ஒருபாத்திரம், இது, தன்னுட்பெய்த அன்னத்தை எடுக்கஎடுக்கக் குறையாது மேன்மேலும் வளரச்செய்யுந் தன்மையையுடையது, சிலகாலம் ஆபுத்திரன் கையிலிருந்து பலவுயிர்களுக்குப் பசித்துயரத்தைப்போக்கி, மணிபல்லவத்துள்ள கோமுகியென்னும் பொய்கையில் அவனுலிடப்பட்டு அதிற்சிலநாட்கிடந்து அப்பால் மணிமேகலைகையிற்சென்று தங்கிப் பலவுயிர்களுடைய பசித்துயர்களைப்போக்கியதன்றிக் காயசண்டிகையென்னும் ஒரு வித்தியாதரமங்கையினது தீராப்பசியாகிய பஸ்மகவியாதியையும் போக்கிற்று; இஃது அறனேடு, ஆருயிர் மருந்து, உயிர்மருந்து, ஐயககடிஞை, ஓடு, கடவுட்கடிஞை, கடிஞை, தெய்வப்பாத்திரம், பசிப்பிணிமருந்து, பலர்தொழுபாத்திரம், பாத்திரம், மாபெரும்பாத்திரம், வணங்குறுபாத்திரம், விஞ்சைப்பாத்திரமெனவும் இந்நூலுள்ளே வழங்கப்படும். (பதி) சச, (கக) சுச, ககசு, கஉரு, (கசஉ; (கஉ) உசு, ககச; (கரு) க; (கச) என; (கரு) ருச, ருஎ, சுகூ; (கசு) கருரு (கஎ) உ, கூச, கூரு, (கஅ) உக, கருகூ (ககூ) கஉ, சO, கருக, கருச; (உO) ரு (உக) கசகூ, கருக, கருஅ, (உரு) கசச, கசசு, கஎரு, (உஎ) கஅக, உகஅ.

அமுதபதி:—இரவிவன்மனென்னும் அரசன்மனைவி, தாரை, வீரை, இலக்குமியென்னும் மூவரையும் பெற்றவள். (கூ) சO (கக) கருரு.

அமுதப்பிரமர்:—உலகம் முப்பத்தொன்றனுள் இருபத்தெட்டாவதாகிய ஆகாசாநந்தியாயதனலோகமுதலிய நானகு உலகங்களிலும் முறையேதங்கும் நான்குவகைப் பிரஹ்மகணங்கள்; இவர்களைத்

---

* ( ) இவ்விருதலைப்பிறைகளுக்குட்பட்ட எண்கள் காதைகளையும் மற்றை எண்கள் அடிகளையுந் தெரிவிப்பன.

யானம் ஐந்தனுள் ஐந்தாவதிற்றேதி ப ர்களென்பர் ; இந்நூற்பதிகத்தின் உ - ௨௯-ம் அடிக்குறிப்பைப் பார்க்க. (௪) ௩௭௯.

அறம் :—புண்ணியம் ; இஃது அரு றம், அன்புகொளறம், தாங்காநல்லற, நல்லறம், பெருமைசால்நல்லறம், மி யாவறம், மிக்கவறம், முன்னவன்போ யினல்லறமென்று இந்நூலுள்ளே வழ கப்படும். (௫) ௭௫ ; (௯) ௯௬ ; (௧ ௧௨௦ ; (௧௨) ௫௮, ௬௯, ௯௧ ; (௧௪) ௯ ; (௨௧) ௧௭௬ ; (௨௨) ௧௩௮ ; (௨௪) ௧௫ (௨௫) ௨௨௬, ௨௨௮ ; (௨௮) ௯௬, ௩௦ ௧௨௬, ௧௪௧, ௧௯௯.

அறவணவடிகள் :—காவிரிப்பூம்ப டினத்திலிருந்த புத்தசங்கத்துள்ள ஒ முனிவர்; கோவலன் கொலையுண்ட கேட்டு வருந்தியடைந்த மாதவிக்குத் த மோபதேசஞ்செய்து துன்பகற்றித் துற பூணச்செய்தோர் ; பாதபங்கயமலையை தாம் தரிசித்ததன்றித் துச்சயனெ ஒனும் அரசனையும் மனைவியரோடுசென் அதனைத் தரிசிக்கும்படிக்குஞ்செய்தவர் மணிமேகலைக்கு ஆபுத்திரன்வரலாற்றை யும், அமுதசுரபியின் பெருமையையு உணவளித்தலின் விசேடத்தையும் எடு துக்கூறிப் பலருடைய பசித்துன்பங் களையும் போக்கும்படிசெய்ததன்றித் த மோபதேசஞ்செய்து அவளைநல்வழிப்ப த்திய ஆசிரியரும் இவரே. தீவதிலகை யாலும் கந்திற்பாவைத்தெய்வத்தாலும் நி ம்பப்புகழப்பட்டவர்; காவிரிப்பூம்பட்டி னத்தைக் கடல்கொண்டபின்பு வஞ்சி நகரத்தைடைந்து அவ்விடத்தே துறவு பூண்டிருந்த கோவலன்றந்தையோடு அ ளவளாவி அப்பாற் காஞ்சிநகரஞ்சென்று அங்கே தவம்புரிந்திருந்தார். தம்மை வணங்குவோர்க்கு " அறிவுண்டாக" என் றும் " வாய்வதாக நின்மனப்பாட்டறம்' என்றும் இவர் ஆசிகூறியவாற்றால், எல் லோரும் எப்பொழுதும் ஞானமுடையவ ராகவும் தருமமுடையவராகவும் இருத் தல்வேண்டுமென்று எண்ணியிருந்தாரெ ன்றும், "நரைமுதிர் யாக்கை நடுங்கா நாவி, னுரைமூ தாளன்" என்றும் " காத தொலைவில்லா யாயினுந் தளர்ந்து. மூத்த விவ்யாக்கை வாழ்கபல் லாண்டு" என் றும் கூறப்பட்டிருத்தலால், இவர் மிக்க மூப்புற்றும் சிறிதும் சொல்வன்மை குன் றாதிருந்தாரென்று தெரிகின்றது. இவ ரும் "பழுதறு மாதவன்" என்றும், "தவ பொருண் மாதவன்" என்றும், "நன்ற மாதவன்" என்றும், "மறவணை நீத்த மாசறு கேள்வி, யறவண வடிகள்" என்றும், "அ ல்லவை கடிந்த வறவண வடிகள்" என்று ம், "அறந்திகழ் நாவி னறவணன்" என் றும் இந்நூலில் ஆங்காங்குச் சிறப்பித்துக் கூறப்பட்டிருத்தலால், இவரது தூய்மை முதலியன இனிதுவிளங்கும். (பதி) ௫௭ (௨) ௬௧ ; (௧௦) ௫௮, (௧௧) ௫௨, ௧௪௦, ௧௪௫ ; (௧௨) ௧, ௧௯, ௨௭, ௩௦, ௫௯ (௧௫ ௩௪, ௫௫. (௨௧) ௭௮, ௮௦, ௧௫௩, ௧௫௫, ௧௭௨ ; (௨௪) ௪௭, ௯௦, ௯௨, ௧௪௮, ௧௫௦, (௨௫) ௧௭, ௨௦௫ (௨௮) ௧, ௮௧, ௧௫௦, ௨௩௬; (௨௯) ௨ ௩௭.

ஆதிரை :—சாதுவன்மனைவி ; ஒப்புயர் வில்லாக் கற்பினள். இவள் தன்கணவ னிறந்தானென்பதுகேட்டு உயிரைவிடுத் தற்குத் தீயிற்பாய்ந்து அதுசுடாமையால் வருத்தமுற்றிருந்து, 'உன்கணவன்விரை வில்வருவான்' எனக்கூறிய அசரீரியைக் கேட்டுப் பின்பு அவ்வண்ணமே கணவன் வரப்பெற்று, அவனோடுகூடி வாழ்ந்திருந் தாள்; மணிமேகலை இரந்தபொழுது " பா ரக மடங்கலும் பசிப்பிணி யறுக" என்று சொல்லி அமுதசுரபியில் முதலிற் பிச்சை யிட்டவள் இவளே; பத்தினிப்பெண்டி ரென்றும், வான்றரு கற்பினளென்றும் இந்நூலிற் சிறப்பிக்கப்பட்டவள். (௧௫) ௭௯ (௧௬) ௩, ௨௨, ௩௭, ௧௨௮, ௧௩௫.

ஆபுத்திரன் :—சாலியின்புதல்வன் ; பிற ந்தநாள்தொடங்கி எழுநாளளவும் ஒருபசு பாலூட்டிவளர்க்க வளர்ந்தமையால், இவ ன் இப்பெயர்பெற்றான் ; அன்பும் அருளு முடையோன், தென்மதுரையிற் கலாநிய மதத்துள்ள சிந்தாதேவியால் அமுதசுரபி யென்னும் பாத்திரம்பெற்றுப் பலவுயிர் களுக்கும் உணவளித்துப்பாதுகாத்து மணிபல்லவத்தில் இறந்து பின்பு சாவக நாட்டுள்ள நாகபுரத்திற் (Nagpore) பசு வயிற்றிற் பொன்முட்டையிற்றங்கிப்பிற ந்து புண்ணியராசனென்று பெயர்பெற் றவன். (பதி) ௫௭, ௫௯, ௪௨ ; (௧௧) ௬௪, ௧௪௨ ; (௧௨) ௨௫, ௨௭; (௧௩) ௨, ௯௨ ; (௧௪) ௩௩, ௬௫, ௯௪ ; (௧௭) ௯௫; (௨௧) ௮௨, ௪௯; (௨௪) ௧௫௯; (௨௮) ௭௫.

இடையறம் :— சக்கிபதியென்னு மாச

னுடைய நகரம்; இது காந்தாரநாட்டிற் பூருவதேசத்திலுள்ளது; இஃது இடவய மெனவும் வழங்கும். (௯) ௨௭.

இந்திரவிகாரம் ஏழு:— காவிரிப்பூம் பட்டினத்துள்ள புத்தாலயத்தில் இந்திர னால் நிருமிக்கப்பட்டுள்ள ஏழரங்குகள் விகாரம் - கையாற் கருவியாற் பண்ணப் படாது மனத்தால் நிருமிக்கப்பட்டதென பர், இவை, சிலப்பதிகாரத்துள்ளுங் கூற ப்பட்டுள்ளன (நாடுகாண்காதை, ௧௪; நீர்ப்படைக்காதை, ௯௨); புத்தசங்கத்தா இருத்தற்கு இடமாக இருந்தவை; சார ணர்கள் இவற்றிலிருந்து பௌத்தாகமங் களை உபதேசித்தார்களென்று தெரிகி றது. (௨௬) ௫௫, (௨௮) ௭.

இந்திரவிழா:— அகத்தியமுனிவர்கட் டளையின்படி தூங்கெயிலெறிந்ததொடித் தோட்செம்பியனென்னும் அரசனால் தொடங்கப்பட்டு வருடந்தோறும காவி ரிப்பூம்பட்டினத்திற சோழபரமபரை யோரால் இந்திரனுக்கு நடத்தப்பட்டுவ ந்த உத்ஸவம்; இதனை நெடுமுடிக்கிள்ளி யென்னு மரசன் செய்யாதொழிந்தமையா லேதான் காவிரிப்பூம்பட்டினம் கடலாற் கொள்ளப்பட்டது. இஃது, ஆயிரங்கண் ணோன்விழாவெனவும, இந்திரகோடணை யெனவும, இந்திரகோடணைவிழாவென வும், தீவகச்சாந்தியெனவும இந்நூலில் வழங்கும். இந்திரனுக்கு விழாச்செய்தற் குக் காரணம, தொல்காப்பியர், அகத்தி ணையியலிலுள்ள "மாயோன்மேய" என் னும் சூத்திரத்தின் விசேடவுரையில் ஆசி ரியர் நச்சினார்க்கினியரெழுதியிருக்கின்ற னர். (௧) ௨௯, ௩௰; (௨) ௩ (௩) ௩௪, ௩௫, ௪௭; (௫) ௯௪ (௭) ௧௭ (௧௭) ௯௯; (௨௪) ௬௨ ௯௯ (௨௫) ௧௧௭.

இந்திரன்:—தேவராசன்; இவன் தூங் கெயிலெறிந்ததொடித்தோட்செம்பிய னால் விழாக்கொள்ளும்படி வேண்டப்பட் டான்; மணிபல்லவத்தில் புத்தபீடிகை யை நிருமித்து, தரிசித்தோருடைய பழம பிறப்பைப் புலப்படுத்தும் பெருமையை அதற்குண்டாக்கி, அதனைப்பாதுகாக்கும் படி தீவதிலகையென்னும் தெய்வப்பெ ண்ணையும் நியமித்தான். உயிர்களைப் பா துகாக்கும் ஆபுத்திரனுக்கு வரமளித்தற்கு வந்து தன்வார்த்தையை அவனமதியாத து தெரிந்து, இரப்போரைக் காணாது அவன் வருந்தும்வண்ணம் மழைபெய் வித்து எவ்விடத்தும் வளமுண்டாக. ய்தான். தனது ஆசனமாகிய பாண்டுகம் பளத்தினது நடுக்கத்தால் உலகிலுள்ள அறவியல்புடையார்க்குச் செய்யவேண்டி யவற்றை யறிந்து விரைந்து செய்பவன்; சாவகநாட்டுள்ள நாகபுரத்தரசர், இவன் பரம்பரையோர். (பதி) ௬௬; (௧) ௫, ௯; (௧௧) ௨௮, ௮௯; (௧௪) ௨௮, ௫௬, ௭௯; (௧௮) ௯௧, (௧௯) ௯௨; (௨௪) ௧௬௪; (௨௫) ௫௫.

இமயம்:—ஒருமலை செங்குட்டுவ னென்னுஞ்சேரன் பத்தினிக்கடவுளாகிய கண்ணகியுருவத்தைச் சமைப்பித்தற்கு வருவித்த கல் இம்மலையினதே. (௨௬) ௮௮.

இரத்தினதீவம்:—இது மணிபல்லவத் திற்கு அயலிலேயுள்ளதாகிய ஒருசிறுதீ வு. இலங்காதீவமென்றுங்கூறப்படும்; இ தில் புத்தருடையபாதப்படிமை யமைக் கப்பெற்ற உச்சியையுடைய மலையொன் றுண்டு. (௧௦) ௨௫, (௧௧) ௨௧.

இரவிவன்மன்:—அசோதரநகரத் தர சன் இவன் அமுதபதியின் கணவன்; இல க்குமியின்தந்தை. (௭) ௯௮; (௯) ௫௯; (௧௧) ௧௫௫.

இராகுலன்:—அத்திபதியென்னு மர சனுக்கு நீலபதிவயிற்றிற் பிறந்தவன்; இலக்குமியின்கணவன், திட்டிவிடமென் னும் பாம்பால் இறந்து பின்பு உதயகுமர னாகப் பிறந்தோன் இவனே. (௯) ௪௯, ௪௮, (௧௦) ௯௧, ௪௫; (௧௧) ௧௨; (௧௮) ௧௨௮ (௨௧) ௯௨, (௨௫) ௯௮.

இராசமாதேவி:— நெடுமுடிக்கிள்ளி யின்மனைவி, உதயகுமரனுடையதாய்; மணிமேகலைகூறிய அறமொழிகேட்டுப் புத்திரசோகநீங்கினவள். இவளது இயற் பெயர் சீர்த்தியென்பது, இவள் மாவலி பரம்பரையிற் பிறந்தவள். (௨௧) ௭௯; (௨௩) ௭, ௮௦. (௨௪) ௭௪.

இராமர்.—(௨௭) ௫௩.

இராவணன்.—(௨௭) ௫௪.

இலக்குமி:—இரவிவன்மனுக்கு அமுத பதிவயிற்றிற் பிறந்தவள்; தாரை வீரை யெனபவர்களின் தங்கை; இராகுலனு டையமனைவி; திட்டிவிடத்தாற் கணவனி றந்தவுடன் தீப்பாய்ந்து உயிரை நீத்த வள், சாதுசக்க னென்னு முனிவனுக்கு உணவளித்தபுண்ணியத்தால் இவளே மணிமேகலையாகவந்து பிறந்து பௌத்த

தருமன்கேட்டனனென்று தெரிகின்றது. (எ) க0அ; (கூ) சக; (க0) உ0, ரு0.

இலங்காதீபம்:—இஃது இரத்தினதீவமென்றும் பெயர்பெறும், இதிற் புத்தபாதப்படிமையுள்ளஉச்சியையுடையதும் சமந்தம், சமனொளியென்றுபெயர்பெற்றதுமாகிய மலையொன்றுண்டு. (உஅ) க0எ.

இளங்கோவேந்தன்:—இவர் மலைநாட்டில் வஞ்சிநகரத்திருந்து அரசுசெய்த சேரலாதனென்னும் அரசனுடைய புத்திரர், சேரன்செங்குட்டுவனுடையதம்பி, இதனால், இவர் முதலில் இளங்கோவேந்தனென்றும் இளங்கோவென்றும், துறவுபூண்டமையாற் பின்னர் இளங்கோவடிகளென்றும் பெயர்பெற்றார்; சிலப்பதிகாரநூலாசிரியர் இவரே; மதுரைக்கூலவாணிகன்சாத்தனார் மணிமேகலையை இயற்றி இவரைக்கேட்பித்தாரென்று இந்நூற்பதிகத்தாற் றெரிகின்றது; இவரைச் சேரமுனியென்றுங் கூறுவர். (பதி) கூ ௭.

உஞ்ஞை:—உச்சைனி-இஃது அவந்திநாட்டின் தலைநகரம், பிரச்சோதனனென்னும்அரசனுடைய இராசதானி.(கரு)கூச.

உத்தரமகதநாடு.—(உக) களரு.

உதயகுமரன்:—காவிரிப்பூம்பட்டினத்தரசனாகிய நெடுமுடிக்கிள்ளியின்புதல்வன்; மணிமேகலைபால்விருப்புற்றுப் பலமுறை அவளிடஞ்சென்று இரந்துபின்னின்றோன்; முடிவில் அவள் காயசண்டிகையென்னும் வித்தியாதரமங்கையின் வடிவங்கொண்டுநிற்ப அவ்விடத்துச்சென்று அவ்வித்தியாதரமங்கையின் கணவனாகிய காஞ்சனனென்னும் வித்தியாதரனுடையவாளால் வெட்டுண்டான். இவன்பெயர் இளங்கோனெனவும் வழங்கப்படும். (பதி.) கூக, கூக; (ச) உஅ; (எ) ச; (க0) சங; (கஉ) அ; (கரு) கூஎ, (கஅ) உஎ, சஉ, கூ0, ககஉ, கருக, களஉ; (கக) எ, ககூ, உஅ; (உ0) கக, கூக, எகூ, அஉ; (உக) கூ, உஅ, எ0, எங; (உஉ) ச, க0, ககரு; (உச) க, உரு.

உருபப்பிரமர்:—உலகம்முப்பத்தொன்றனுள் பன்னிரண்டாவதாகிய பிரஹ்மகாயிகலோகமுதலிய பதினாறிலுமிருக்கும் உருபப்பிரஹ்மகணங்கள்; இவர் பதினாறுவகையினர்; இதனை இந்நூற்பதிகத்தின் உஅ-உகூ-ம் அடிகளின்குறிப்பானும், கூ-ம் காதை களஎ-ம் அடிக்குறிப்பானுமுணர்க.

உலகவறவி:—ஊரம்பலம்; இது காவிரிப்பூம்பட்டினத்திற் சக்கரவாளக்கோட்டத்துள்ள சம்பாபதிகோயிலின் முன்புள்ளது; பலரும்வந்துதங்குதற்குரிய தருமசாலை; இதுபோன்றதை 'உலோகோபகாரிகா' என்பர் வடநூலார், "பலர்புகத்திறந்த பகுவாய் வாயி, லுலக வறவி" என்று இந்நூலிற் சிறப்பித்துக்கூறப்பட்டுள்ளது; அம்பலப்பீடிகையென்றும், பொதியிலென்றும், மன்றமென்றும், மன்றப்பொதியிலென்றுங் கூறப்படும் கந்திறபாவையுள்ள இடமுமிதுவே, செல்லுந்தோறும் மணிமேகலை இதனைவலஞ்செய்துதொழுதே இதிலேறினளென்று தெரிகின்றது. (பதி) கூகூ, (எ) கூங, (கங) க0எ; (கச) க, ருகூ; (கஎ) எஅ, அகூ, கூஅ; (கஅ) கூஉ, ககச, (ககூ) கருக (உ0) கரு, உக, எகூ, அஎ, கூஎ (உக) கூ, (உஉ) கூ0, கஅகூ, ககூகூ (உச கூக

உவவனம்:—காவிரிப்பூம்பட்டினத்தைச்சார்ந்த ஒருபூஞ்சோலை புத்தபாதபீடிகையுள்ள ஒருபளிக்கறையையுடையது, மணிமேகலை பூப்பறித்தற்குச் சென்றாளென்பதுகேட்டு, உதயகுமரன் அவளைக்கண்டு கைக்கொண்டுசெல்லுதற்கு முதலில்வந்துமுயன்றவிடமும் இதுவே; மணிமேகலாதெய்வம் அவளுக்குக் காட்சிகொடுத்து அவளை மணிபல்லவத்திற்குக் கொண்டுபோனவிடமும் இதுவே. (பதி) சரு; (கூ) கூஉ, ககூகூ, (எ) கரு; (அ) கக, (க0) சஉ; (உக) கங, கஅரு. (உங) அஅ.

எட்டிகுமரன்:—காவிரிப்பூம்பட்டினத்துள்ள ஒருவணிகன்; அரசனாற்கொடுக்கப்படும்எட்டிப்பட்டமபெற்றோன்; மணிமேகலை உவவனஞ்சென்றதை உதயகுமரனுக்கறிவித்தவன் இவனே. (ச) ருஅ, கூச.

ஒவியச்சேனன்:—சித்திரசேனனென்னுங் கந்தருவன்; கந்திற்பாவையில் அதிட்டித்திருக்கும் துவதிகனென்னுந் தெய்வத்தின் நண்பன். (உக) ககூரு.

ககந்தன்:—காந்தனென்னுமரசனுடைய காவற்கணிகையின்புதல்வன்; அவ்வரசன் போர்செய்யவந்த பரசுராமருக்கு முன்னே தோன்றாதொளித்தபொழுது அவர்கட்டளையாற் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து செங்கோல்செலுத்தியவன்; தன்புதல்வரிருவருள் இளையோன் பார்ப்பனிமருதியையும், மூத்தோன் வணிகமா

தாகிய விசாகையையும் விரும்பித் தீங்கு செய்யமுயன்றானென்பதைக்கேள்வியுற்று அவனை வாளாற்றடிந்தவன்; இவனாற் பாதுகாக்கப்பட்டமையின் காவிரிப்பூம் பட்டினம் காகந்தியென்று பெயர்பெற்றது. பரசுராமர்காலமும் இவன்காலமும் ஒன்றென்றுதெரிகின்றது. (௨௨) ௩௨, ௩௭, ௪௬, ௭௬, ௧௫௬.

கங்கை:—ஒருநதி; இதன்கரையில் மனைவியரோடு துச்சயராசன் தங்கியிருந்தபொழுதுதான் பாதபங்கயமலையைத்தரிசிக்கவந்த அறவணவடிகள்கண்டு அம்மலையைத்தரிசிக்குமபடி அவனுக்குக்கூறினர். கண்ணகிவடிவஞ்சமைத்தற்காகக் கற்கொணர்தற்கு இமயஞ்சென்ற சேரன் செங்குட்டுவன நால்வகைச்சேனைகளோடும் இதன்கரையில் தங்கியிருந்தான். (௯) ௫௬, (௨௬) ௭௪.

கச்சயம்:—துச்சயராசனது இராசதானி, இஃது அங்கநாட்டுள்ளது. (௯) ௫௩ (௧௨) ௩௧

கண்ணகி:—கோவலன்மனைவி, இவளது கற்புமுதலியவற்றை வெளிப்படுத்தற்பொருட்டே சிலப்பதிகாரஞ் செய்யப்பட்டது. இவளை மறக்கற்புடையாளென்பர்; திருமாபத்தினி, பத்தினிக்கடவுள், மங்கலமடந்தை, மாபெரும்பத்தினி, வீரபத்தினியென்பன இவளுடைய பரியாய நாமங்கள். வஞ்சிநகர்ப்புறத்துள்ளதாகிய தன்கோயிலைச்சார்ந்து தரிசித்துத் தன்னை வினவிய மணிமேகலைக்குத் தான்மதுரையை அழித்ததுமுதலியவற்றையும், தனது பிற்காலச்செய்தியையும், அவளுடைய பிற்காலச்செய்தியையுங்கூறினள். இவள் புத்தசமயச்சார்புடையாளென்று இந்நூலாலும், சைனமதச்சார்புடையாளென்று சிலப்பதிகாரத்தாலுந் தெரிகின்றது. (௨; ௪௧, ௫௫; (௮) ௪௧, (௨௪) ௧௫; (௨௬; ௨, ௧௦; (௨௮) ௯௩.

கந்திற்பாவை:—சக்கரவாளக்கோட்டத்திற் சம்பாபதிகோயிலின் கிழக்கேயுள்ள தூணில் மயனால் நிருமிக்கப்பட்ட ஒரு பிரதிமை; துவதிகனென்னுந் தேவனுடைய வடிவமாகவுள்ளது இஃது எல்லாராலும் பூசித்து வழிபாடு செய்யப்படுதலின், இதை அதிட்டித்துநின்ற துவதிகன், கேட்போர்க்கு இதன்வாயிலாக முக்காலச்செய்தியையுங் கூறுவன்; இதனால், இது நாவுடைப்பாவையென்றுங் கூறப்படும். தூணிலிருத்தல்பற்றி, இதனைக் கந்தென்றும் கந்தமென்றுங் கூறுவர். இந்நூல் ௭-ம் காதை, ௩௪-௩௫-ம் அடிகளின்குறிப்பைப்பார்க்க. (௧௫) ௩௪; (௧௭) ௯௦; (௧௧) ௬, ௧௪; (௨௦) ௧௧௧, ௧௨௭; (௨௧) ௧, ௭, ௩௫, ௯௮, ௪௬, ௧௩௨; (௨௨) ௨, ௯௧, ௯௪, ௧௦௪, (௨௪) ௧௬௨; (௨௮) ௧௮௫.

கபிலை:—இப்பெயருள்ளனவாய் இந்நூலில்வந்துள்ளநகரங்கள் இரண்டு. அவற்றுள்:—

௧-ம் கபிலை.—இது, கலிங்கநாட்டுள்ளது குமரனென்னும் அரசனுடைய இராசதானி. (௨௬) ௧௭.

௨-ம் கபிலை.—இது, மகதநாட்டுள்ளது; கபிலனெனப்பெரிய ஒருமுனிவர் தன்பாற்றவஞ்செய்யப்பெற்றமையின், இஃது இப்பெயர்பெற்றதென்பர்; கபிலவாஸ்துவென்று கூறப்படுவது இதுவே; இந்நகரிலேதான் கௌதமபுத்தர் அவதரித்தனர். (௨௬) ௪௪; (௨௮) ௧௪௩.

கம்பளச்செட்டி:—ஒருவணிகன் கப்பல்யாத்திரைசெய்பவன். பீலிவளையென்பவள், நெடுமுடிக்கிள்ளிக்குத் தான்பெற்றகுழந்தையை அவனிடம்சேர்ப்பிக்கும்படி இவனிடத்தேதான் ஒப்பித்தனள். இவன் இயற்பெயர் இன்னதென்று தெரியவில்லை. (௨௫) ௧௮௪, (௨௯) ௬.

கரிகால்வளவன்:—காவிரிப்பூம்பட்டினத்தையாண்ட ஒருசோழன்; நெருப்பாற்கரிந்த காலையுடையனாதலின், இவன் இப்பெயர்பெற்றான். இதனை "முச்சக் காமு மளப்பதற்கு நீட்டியகா, லிச்சக் கரமே யளந்ததாற்-செய்ச்செ, யரிகான்மேற் றேன்றொடுக்கு மாய் புனனீர் நாடன், கரிகாலன் கானெருப் புற்று" என்னும் (பொருநராற்றுப்படையிறுதியிலுள்ளது) வெண்பாவாலும், "சுடப்பட் டுயிருய்ந்த சோழன் மகனும், பிடர்த்தலைப் பேரானைப் பெற்ற-கடைக்காற், செயிரறு செங் கால் செலீஇயினு னில்லை, யுயிருடையா ரெய்தா வினை" எனனும் (பழமொழி, ௧௦௫) வெண்பாவாலுமுணர்க; வடநாட்டரசர்களைவென்றுசென்று இமயமலையில் தன்புலிப்பொறியை வரைந்தான்; இவன், உருவப்பஃறேரிளஞ்சேட்சென்னியின் புதல்வனென்றும், சோழநாட்டுள்ள வெண்ணியென்னுமூரிற் சேரபாண்டியர்களை ஒருகாலத்துப் பொருதுவென்றானென்

றும் பெயர்நாராற்றுப்படையால் தெரிகின்றது; சோழன் கரிகாற்பெருவளத்தானென்றுங் கூறப்படுவன், இன்னும், இவன்வரலாற்றினை இந்நூல் ஏ-ம் காதை, கஅ-கஎ-ம் அடிகளின்குறிப்பாலும், புறநானூறு அச்சுப்புத்தகத்தில், பாடப்பட்டோர்வரலாற்றிலுள்ள சோழன்கரிகாற்பெருவளத்தானென்னும் பெயர்க்குறிப்பாலு முணர்ந்துகொள்க (க) கூக, (எ) கஅ.

கலிங்கநாடு:—தாயமன்னவராகிய வசு, குமரனென்னும இருவர்க்குரியது இதிற் சிங்கபுரமென்றும் கபிலையென்றும் பெயர்பெற்ற இரண்டு நகரங்களிருந்தன. (உசு) கூ.

கலைநியமம்:—தென்மதுரையிலுள்ள சிந்தாதேவியின்கோயில்; எல்லாசசமயத்தாராலும் புகழப்படுவது, கலாரூபியாகிய சிந்தாதேவிக்கு இடமாயிருததலாற்றி, இஃது இப்பெயர்பெற்றது. கலை-வித்தை. நியமம்-கோயில். பலரும்வந்து தங்குதற்குரிய அம்பலமொன்று இக்கோயிலின் முன்னேயிருந்தது. இவ்வம்பலம் அம்பலப்பீடிகையென்றுங் கூறப்படும். இதிலிருக்கும்பொழுதுதான் ஆபுத்திரன் அமுதசுரபியைப்பெற்றான். (கந) க0சு, (கச) க0, கஎ.

கவேரகன்னி—காவேரி இந்நூல் கூ-ம் காதை, ருஉ-ம் அடிக்குறிப்பைப்பார்க்க.

கவேரவனம்:—இராசருஷியும் யோகிகளிற்சிறந்தவரும் காவேரியின்தந்தையுமாகிய கவேரனென்பவர் தவஞ்செய்துகொண்டிருந்த வனம் இது காவிரிப்பூம்பட்டினத்தினருகேயுள்ளது; இந்நூல் கூ-ம் காதை, ருஉ-ம் அடிக்குறிப்பைப்பார்க்க. (கூ) ருசு.

கவேரன்:—ஓரிராசருஷி; இந்நூல் கூ-ம் காதை, ருஉ-ம அடிக்குறிப்பைப்பார்க்க. (கூ) ருசு.

கன்னி:—துர்க்கை, சம்பாபதியுமாம். இவள் போர்செய்தற்குவந்த பரசுராமன் முன்னே நீசெல்லாதேயென்று காந்தனென்னும்அரசனுக்குக் கூறினள். (உஉ) உஎ.

கனகவிசயர்:—கனகனும் விசயனும்; இவர்கள் ஆரியநாட்டரசருள் ஒருசாரார்; இவ்விருவரும் பாலகுமரனென்னுமரசன் புதல்வர்; கண்ணகிவடிவஞ்சமைத்தற்பொருட்டுச் சிலைகொணர்தற்காக இமயஞ்சென்ற சேரன்செங்குட்டுவனால் வெல்லப்பட்டு அவன்கட்டளைப்படி இமயச்சிலையைத் தலையிற்சுமந்தோர். (உசு) ஙசு.

காகந்தி:—காவிரிப்பூம்பட்டினம் முன்னொருகாலத்திற் ககந்தனென்னுந்தலைவனால் பாதுகாக்கப்பட்டமையின், இந்நகர் இப்பெயர்பெற்றது; நீலகேசியில் வேதவாதச்சருக்கத்தில், "காதம் பலவுங் கடந்தபின் காகந்திக் கடிநகருள்" என இப்பெயருள்ள நகரமொன்று கூறப்பட்டிருக்கிறது. (உஉ) ஙஎ.

காஞ்சனபுரம்:- வித்தியாதரநகரங்களுளொன்று; காஞ்சனனும், காயசண்டிகையும் இந்நகரத்தோரே இது, விஞ்சைமாநகரெனவும் வழங்கப்படும். (கரு) அக, (கஎ) உஉ.

காஞ்சனன்.- ஒருவித்தியாதரன்; காயசண்டிகையின்கணவன்; இவனதுநகரம் காஞ்சனபுரம்; உலகவறவியில் உதயகுமரனுக்கஞ்சிக் காயசண்டிகையின்வடிவமெய்திய மணிமேகலையை அவ்வுதயகுமரன் தொடர்ந்ததுகண்டு, காயசண்டிகையின் சோர நாயகனென்றெண்ணி, அவனை வாளால் வெட்டிவீழ்த்தினான். (பதி) எரு, (உ0) உஎ, ஏக, கஉ, ககஉ, கஉரு, கஉகூ, (உக) ரு, சஉ, (உஉ) ககூக, ககூகூ, உ0க, (உச) ங.

காஞ்சி:—ஒருநகரம்; இதில் முக்காலச்செய்திகளையும நனகுமதரிவிக்குங் கந்திற்பாவைதெய்வமும, துணையிளங்கிள்ளியென்பவனாற் கட்டப்பட்டுள்ள புத்தாலயமொன்றும், தென்மேற்குமூலையில் தருமதவனமென்றுபெயருள்ள ஒருசோலையுமிருந்தன, மணிமேகலை பலநாட்டங்கியிருந்து அன்னமளித்துப் பலவுயிர்களையும பாதுகாததுத் தவத்திறம்பூண்டு அறவணவடிகள்பால் தருமங்கேட்டு மரிததவிடமும் இந்நகரமே. இது கச்சியெனவும் வழங்கப்படும். (பதி.) கூ0; (உக) கஅ, கருச, கஎச; (உஅ) கருசு.

காந்தன்:—ஒருசோழன்; அகத்தியமுனிவர்பால் மிக்கபத்திமையுடையோன, இவன் வேண்டுகோளுக்கிரங்கியே அவர் தமது கமண்டலத்திருந்தகாவிரியை நதிவடிவாக நிலத்திற்பெருகச்செய்து சோழநாட்டை நீர்வளமுள்ளதாக்கினார். பரசுராமர் போர்செய்தற்குவந்தபொழுது, கன்னி (துர்க்கை யின் கட்டளையால் அவருக்குமுன்னேசெல்லாது வேற்றொருக்கொ

ண்டு சிலநாள் வேறிடத்திருந்தான்; இத ஞல்; இவன் பரசுராமருடையகாலத்தவ னென்று தெரிகின்றது; இவ்வரசன் காந் தமனெனவும், காந்தமன்னவனெனவும் இந்நூலுட் கூறப்படுவன். (பதி.) க0, (உஉ) உஎ.

காந்தாரம்:—சிலதேசங்களைத் தன்னு ட்கொண்ட மிகப்பெரியதொரு நாடு, இதிலுள்ளதேசங்களுள் பூருவதேசமெ னபது ஒன்று. (கூ) கஉ.

காயங்கரை:—ஒரு நதி, பிரமதரும னெனப்பெரிய ஒரு பௌத்தமுனிவன் இதன் கரையில் வதிந்து தவஞ்செய்த னன், அத்திபதியெனனு மாசன இடவய மெனனு நகரததினின்று நீஙகி அவந்திக் குச் செல்லும்பொழுது நால்வகைச்சேனை யோடு இதன்பக்கத்துள்ள சோலையிற றஙகியிருநதான. (கூ, க0, உக; (உக) சஎ, உரு) ௯எ

காயசண்டிகை:—ஒருவித்தியாதரமங் கை, காஞ்சனன் மனைவி இவள் அவ னேடு பொதியினமலையின் வளங்காணச் சென்று, உண்டவர்களுக்குப் பன்னிர ண்டு வருடமளவும் பசியையொழிக்கும் ஒரு நாவறகனியைக காலாற் சிதைதது, அககனியை யுண்ணுதற் கெண்ணிவந்த பட்டினி நோனபியாகிய விருசசிகரென் னும ஒருமுனிவருடைய சாபததாற் பன் னிரண்டு வருடமளவும யானைததீயென் னும் பெருமபசிநோயால் வருந்தி மணி மேகலை கொடுத்தவுணவால் அப்பசி முற் றவொழியப்பெற்றுத் தனது நகரஞ்செல லுகையில் இடையேயுள்ள விநதமலை யைப் பாதுகாக்கும் விந்தாகடிகையென் பவள் சாயையாலிழுக்க அவள் வயிற்றிற் சென்று அடஙகினள. (பதி) ௬ரு, எ௯, (கரு) ௮௬, (க௬) உ; (௯எ) அ; (க௮) க௪௧, கரு௪, (க௯) ௯௯, க௯உ, (உ0) உ௬, ௮ரு, க0௮, கக௪; (உஉ) க௮௮, க௮௯, க௯0, க௯௮.

காராளர்:—சண்பை நகரத்துள்ளார் இந்நூல் ௯ - ம் காதை, உ௮ - உ௯ - ம் அடிகளின் குறிப்பையும், எ - ம் காதை க0உ - ம் அடிக்குறிப்பையும் பார்க்க.

கார்யாறு:—ஒருநதி, இந்நூல் க௯-ம் காதை, கஉ௬-ம் அடிக்குறிப்பைப்பார்க்க.

காலவேகம்:—ஒரு யானை; இந்நூல் ௪ - ம் காதை, ௩௪-ம் அடிக்குறிப்பைப் பார்க்க.

காவிரி:—ஒருநதி; இச்சொல், காவே ரியென்னும் வடமொழிச்சிதைவு; இது, கவேரகன்னி, காவிரிப்பாவை, சோழர் குலக்கொடி, தமிழ்ப்பாவை, நீர்ப்பாவை யெனவும் வழங்கப்படும். இந்நதி கடலொ டுகலக்கும் சங்கமத்துறையானது சிறந்த புண்ணிய தீர்த்தமென்று பல நூல்களா லுங் கொண்டாடப்படும்; இந்நூல் ௯ - ம் காதை, ருஉ - ம அடிக்குறிப்பைப்பார்க்க. (பதி) கஉ, க௬, உ௯, உரு; (௯) ருரு; (ரு) ௯௯ (கரு) ௪௮ (உஉ) ௪0.

காவிரிப்பூம்பட்டினம்:—சோழர்களு டைய பழைய இராசதானி: இதில் இந் திரனுனிருமிக்கப் பட்டுள்ள எழுரங்குக ளையுடைய ஒரு புத்தாலயமுண்டு: இந் நகரத்தின் பழையபெயர் சம்பாபதியெ னபது இது காகந்தியென்றும்புகாரென் றுங் கூறப்படும். (௯) ரு௯; (கஎ, ௬ரு; (உரு) க௯ (உ௮) க௯ரு.

காவிரிவாயில்:—காவிரிக் கரையில் திருமுகத்துறைகழிகின்ற வாயில்: இது காவிரிப்பூம்பட்டினத்துள்ளது. (உஉ) ௪௯

கிருதகோடி:—ஒருமுனிவர்; பிரமாண வாதநூலாசிரியர்களுளொருவர்; பிரத்தி யக்ஷமுதலிய பிரமாணம் பத்தினுள் இவ ராற் கொள்ளப்பட்ட பிரமாணஙகள் எட் டே. (உஎ) ௭.

கிள்ளிவளவன்:—ஒருசோழன். (உரு) க௪, க௮0.

குச்சரக்குடிகை:—சம்பாபதியின்கோ யில். க௮) க௪௮, கருஉ

குமரன்:—கலிங்கநாட்டுள்ள கபிலைநக ரத்தாசன். (உ௬) க௬.

குமரி:—ஒருநதி இது கன்னியாகுமரி யெனவுங் கன்னியெனவுங் கூறப்படும்: பலரும் தத்தம்பாவங்களைப் போக்குதற் குச்சென்று ஆடிவருவதோர் புண்ணிய தீர்த்தம்; தன்னருகே புஷ்பஹாவியென் றுபெயர்பெற்ற குமரித தெய்வமெழுந் தருளியிருக்கும ஆலயமொனறையுடை யது. (ரு) ௯எ, (க௯) எ, எ௪, ௮௯.

கூலவாணிகன்சாத்தன்:—இவர் மணி மேகலைநூலாசிரியர், சிலப்பதிகாரநூலா சிரியராகிய இளஙகோவடிகட்கும் அவர் தமையன் சேரன்செங்குட்டுவனுக்கும் மிக்கநட்பினர். இவர் மதுரைக்கூலவாணி கன்சாத்தனெனவும் சீத்தலைச்சாத்தனெ னெனவுங கூறப்படுவர், "தண்டமிழாசா

சாத்தன்" என்று சிலப்பதிகாரம், கா...
இக்காதையில் இவர் சிறப்பிக்கப்பட்...
ருக்கின்றனர். (பதி) கூசு.

கேசகம்பளன்:—சரிவயிற்றிற்பிற...
ஒருமுனிவர். அசிதகேசகம்பளரென்...
ஒருபெயர் பௌத்தநூல்களிற் காண...
டுகின்றது. (கூ) சுரு.

கொற்கை:—பாண்டியர்களின் பழை...
இராசதானி; இதற்கு ஒருகாததூரத்திற...
அப்பாலுள்ள இடைச்சேரியிலேதா...
சாலியென்பவள் ஆபுத்திரனைப்பெற்று...
(கங) அச.

கோசம்பி:—கௌசாம்பிநகரம் இந்...
வில் கரு-ம் காதை, சுக-ம் அடிக்குறி...
யைப்பார்க்க.

கோதமை:—ஒருபார்ப்பனி, சார்ங்க...
னென்பவனுடைய தாய் (சு) கசக, கஅ...

கோமுகி:—மணிபல்லவத்துள்ள தோ...
பொய்கை. (கக) கூக, ருசு; கச) கூக,
(உரு: கருசு (உஅ) உ0உ.

கோவலன்:—இந்நூலில் இப்பெயரை
யுடையவர் இருவருளர் அவர்களுள்:—

க-ம் கோவலன்-மணிமேகலையின் த...
தை; கண்ணகியின்கணவன்; சிலப்பதிகா...
ரத்தநாயகன். வஞ்சிநகர்ப்புறத்தேயுள்...
கோயிலிற் கண்ணகிவடிவத்தோடு இவ...
வடிவமும் பூசிக்கப்பட்டுவந்தது. (உ
ரு0, சுகூ; (கூ) ரு; (ச) சுஅ; (எ) கூச
(கஅ) எ: (உக) கூ; (உஅ) கூகூ.

உ-ம் கோவலன் - மேற்கூறியகோவல
னுக்கு ஒன்பதுதலைமுறை முன்னோன்
இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்குக்
காதற்பாங்கன்; அவ்வேந்தனுக்குச் சா...
ணர்கூறிய உபதேசமொழியைத் தானுங்
கேட்டுத் தான் தேடியவையுந் தன்முன்
னோர்தேடியவையுமாகிய பொருள்களை
யெல்லாம் எழுநாளிற் றானஞ்செய்துவிட்
டுப் பின்னர்த் தவம்புரிந்தோன்; வஞ்சி
நகரத்தே புத்தருக்குச் சைத்தியாலயமொ
ன்று கட்டுவித்தோன். (உஅ) கஉச.

கௌசிகன்:—சண்பைநகரத்துள்ள ஒர
ந்தணன்; சுதமதியின்தந்தை. (கூ) உகூ;
(எ) க0உ.

கௌதமமுனிவன்:—இவர் அகலிகை
யின் கணவர்; அவளுடைய கற்பையழித்
ததுபற்றி இந்திரனுக்கு ஆயிரங்கண்களு
ண்டாகும்படி சாபங்கொடுத்தனர். (கஅ)
கூ0.

சக்கரவாளக்கோட்டம்:—புத்திரசோக
த்தால் வருந்திய கோதமையின் துன்ப...
தைப் போக்குதற்காக இவ்வுலகத்துள்ள
எல்லாத்தேவர்களையும் சம்பாபதி வருவி...
த்துக்காட்டியவிடத்து அக்காட்சியை எ...
காலத்தும் யாவருங்காணும்வண்ணம் ம...
னால் நிருமிக்கப்பட்டதுபற்றி இஃது இ...
ப்பெயர்பெற்றது. (சக்கரவாளம - உல...
முப்பத்தொன்றையும் தன்னுள்ளே அட...
க்கிய கோளம். கோட்டம்-அறை) காவி...
ரிப்பூம்பட்டினத்தின் புறத்தேயுள்ள மயா...
னத்தின் பக்கத்துள்ளது இதனால் இது
சுடுகாட்டுக்கோட்டமெனவுங்கூறப்படும்...
இதில் முனிவர்பலரிருந்து தவஞ்செய்...
தார்; சம்பாபதிகோயில், கந்திற்பாவை
உலகவறவி என்னுமிம்மூன்றும் இதைச்
சார்ந்துள்ளவையே. (சு) உச, கூ0, கூக
உ0உ; (எ) கூக; (கரு) கூக, (கஎ) எசு
(உஉ) ரு.

சக்கரவாளம்:—சு-ம் காதை க-அ கூ-...
அடிக்குறிப்பைப் பார்க்க (க...) ...
ருஉ.

சங்கதருமன்.—ஒருபௌத்தமுனிவர்
இவர்சுதமதிக்கும் அவளுடையதந்தைக்கு
ம் தருமோபதேசஞ்செய்தவர்; ரு - ம் கா
தை, எ0-ம் அடிக்குறிப்பைப்பார்க்க.

சங்கமன்:—ஒருவணிகன், நீலியின்
கணவன் முற்பிறப்பிற் காரணமின்றி
இவனைக் கொல்வித்த பாவத்தாலேயே
கோவலன் கொலையுண்டிறந்தான. (உசு)
உகூ.

சண்பை:—ஒருநகரம், கடலோரத்துள்
ளது; கூ-ம் காதை, உஅ-உகூ-ம் அடிகளி
ன் குறிப்பையும், எ-ம் காதை, க0உ-ம்
அடிக்குறிப்பையும் பார்க்க.

சதுக்கப்பூதம்:—(க) உச, உரு, (உஉ)
எஎ.

சந்திரதத்தன்:—கப்பலிற்சென்று வா
ணிகஞ்செய்யும் ஒருவணிகன்; சாதுவனை
நாகர்மலையிலிருந்து காவிரிப்பூம்பட்டின
த்திற்குக் கப்பலிலேற்றி அழைத்துவந்த
வன் இவனே. (கசு) சக, கஉச.

சம்பாதி:—ஒருபறவை. (கூ) ருச.

சம்பாதிவனம்:—காவிரிப்பூம்பட்டின
த்தைச்சார்ந்துள்ள ஒருசோலை; மேலே
பறந்துசென்றபொழுது சூரியகிரணத
தாற் சிறையிழந்துவிழுந்த சம்பாதியென
னும்பறவை இருத்தற்கிடமானதுபற்றி,
இஃது இப்பெயர் பெற்றது. (கூ) ருச.
சம்பாபதி ...

ன்பவனுடைய வேலைக்காரருள் ஒருவன்; இவன் காரணமின்றிச் சங்கமனென்னும் வணிகனைக்கொல்லுவித்தமைபற்றி அவனுடையமனைவியாகிய நீலியென்பவளாற் சபிக்கப்பட்டோன், கோவலனாகப் பிறந்தவன்இவனே. (உசு) உரு.

**பலதேவன்**:—கண்ணனுக்கு முன்னவன். (கசு) சுரு, எஎ.

**பளிக்கறைமண்டபம்**:—காவிரிப்பூம்பட்டினத்தைச்சார்ந்த உவவனத்திலுள்ளது, இதிற் புத்தபாதபீடிகை யொன்றுண்டு; மணிமேகலை, தன்னை உதயகுமரன்கவாவந்தபொழுது முதலில் இம்மண்டபத்திலேதான் ஒளித்துக்கொண்டாள். (ந) சுச.

**பாண்டிநாடு**.—(கச) ருரு.

**பாண்டியன்**.—(கஅ) அச.

**பாண்டுகம்பளம்**:—இந்திரனுடைய ஆசனம், இதன்சலனத்தால் இந்திரன் சிலவற்றையறிந்துகொள்வான்; இந்நூல் கச-ம் காதை, உஅ-உகூ-ம் அடிகளின் குறிப்பைப் பார்க்க (உக) உக

**பாதபங்கயமலை**:—புத்ததேவன் எல்லாவுயிர்களுக்கும் தருமசிந்தையையுண்டாக்கநினைந்து, அவைகளெல்லாங் கண்டு கேட்கும்படி இதனமேலே நின்று தருமோபதேசஞ்செய்தபொழுது அவன்பாதச்சுவடு தங்கப்பெற்றமையின், இஃது இப்பெயர்பெற்றது, இதனை, "ஆதிமுதல்வனறவாழி யாள்வோன், மாதுயரெவ்வமக்களை நீக்கி, விலங்குந் தமமுள் வெருஉம்பகை நீக்கி, யுடங்குயிர் வாழ்கவென் றுள்ளங் கசிந்துகத், தொன்றுகாலத்து நின்றற முரைத்த, குன்ற மருங்கிற் குற்றங் கெடுக்கும், பாத பங்கயங் கிடத்தலி னீங்கிது, பாதபங் கயமலை யெனும்பெயர்த் தாயது" (கO-ம் காதை, சுக-சுஎ) என்பதனாலுணர்க; இது பாதபங்கயமென்றும் வழங்கப்படும். இம்மலையைக் கிருத்திரகூடமென இக்காலத்திற கூறுகின்றனர்; இது, மகததேசத்தின் இராசதானியாயிருந்த இராசக்ருககரத்தின் சமீபத்திலுள்ளது. (கO) சுஎ; (கஉ) ருஅ, கUக.

**பாதபீடிகை**:—புத்தனுடையபாதப்படிமங்க ளுள்ள பீடம். இஃது இலங்கைத்தீவு, காவிரிப்பூம்பட்டினம், மணிபல்லவத்தீவ முதலிய இடங்களிலிருந்ததென்றும் பண்டைக்காலத்துப் பௌத்தரால் வழிபாடுசெய்யப்பட்டுவந்ததென்றுந் தெரிகின்றது; இப்பீடிகை, தருமபீடிகையென்றும், தாமரைப்பீடிகையென்றும், புத்தபீடிகையென்றும், மாமணிப்பீடிகையென்றும் இந்நூலில் வழங்கப்படும். (பதி) சகூ, (ரு) சுசு; (ரு) கூஎ; (சு) கஉ. (அ) ருO, ருரு, சுரு (சு) சுஉ; (கO) க, கசு, அசு; (கக) கசு, உரு, உஎ, ருஎ, ருச, கஉசு; (கஉ) கக, (உக) கசு; (உரு) ருச, சுரு, கஅரு (உஅ) எஎ, உகஎ, (உகூ) ருஅ.

**பிஞ்ஞை**:—நப்பின்னைப்பிராட்டியார். (ககூ) சுா.

**பிடகம்**:—பௌத்தாகமம்; இது வினயபிடகம், சூத்திரபிடகம், அபிதர்மபிடகமென மூன்றுவகைப்படும், இந்நூல் உசு-ம் காதை, சுசு-ம் அடிக்குறிப்பைப் பார்க்க.

**பிரமதருமன்**.—ஒருபௌத்தமுனிவன்; அத்திபதியின்மைத்துனன், காயங்கரையெனனும் நதிக்கரையிலிருந்து நோற்றோன, முக்காலவுணர்ச்சியு முள்ளவன, பின்னிகழுந்தீங்குகளை மேற்கூறிய அத்திபதிக்கு எடுத்துக்கூறினவன். இலக்குமிக்கு மறுபிறப்பினிகழுஞ்செய்திகளைத் தெரிவித்தவன் புத்தபீடிகையால் தனது பழம்பிறப்புணர்ந்த மணிமேகலை இம்முனிவனகூறியதையும அப்பீடிகையாலறிந்து இவனை மிகத்துதித்துப் பாராட்டினள் (சு) கரு (உக) ருO.

**பிரமன்**:—ப்ரஹ்மா (பதி) உகூ; (கரு) ருஅ, கூச.

**பீலிவளை**:—வளைவணனென்னும் அரசன்மகள் காவிரிப்பூம்பட்டினத்துள்ள கழிக்கானற்சோலையை அடைந்து நெடுமுடிக்கிள்ளியோடு ஒருமாதமிருந்து கருவுற்றுப் பின்பு தன்னூரையடைந்தவள (உச) ருஎ (உந) கஎசு, (உகூ) சு

**புண்ணியராசன்**:—நாகபுரத்தரசன, பசுவயிற்றிற் பொனமுட்டையிற்றங்கிப் பிறந்தோன; இவனபிறந்தகாலத்திற் புத்தன்பிறந்தபொழுது நிகழ்ந்த நற்குறிகளெல்லாம நிகழ்ந்தமையின, அவனபெயராகிய தருமராசனென்பது பெயர்த்து இவனுக்கு இடப்பட்டதென்று தெரிகின்றது; தருமசாவகனெனனும் முனிவனிடத்து அறங்கேட்டோன், மணிமேகலையோடு மணிபல்லவமடைந்து புத்தபீடிகைகாட்சியால தன்பழம் பிறப்புணர்ந்தவன இவன், ஆபுத்திரனெனவும், சாவக

மன்னனெனவும் வழங்கப்படுவன், இவ னுடைய பூர்வசன்மநாமதேயம் ஆபுத்திர னென்பது. (உக) அஉ; (உ௪) கஎ0, (உரு) க, கக, ௬அ, ககக, க௲0, க௲உ, கருச; (உ௭) ௭௲.

புத்தன்:—புத்ததேவன்; இவனுடைய பெருமை இந்நூலுட்பலவிடத்துங்கூறப் பட்டுள்ளது, இவன்பெயர், அருளறம பூண்டோன், அறவாழியாள்வோன, அற வியங்கிழவோன், அறவோன, ஆதிமுதல வன, ஆதிமுனிவன, ஆரியன், இயலகு ணன், உரகர்துயரமொழிப்போன், எண் பிறக்கொழிய இறந்தோன், ஏகதேவன், ஒருவன், கண்பிறாகளிக்கும் கண்ணோ ன, காமற்கடந்தோன, சினேந்திரன், சுக தன், தருமதலைவன், தன்னுயிர்க்கிரங்கா ன பிறவுயிரோம்பு மன்னுயிர்முதலவன், தனக்கெனவாழாப்பிறர்க்குரியாளன, தீ நெறிக்கடும்பகைகடந்தோன, தீமொழி க்கடைத்தசெவியோன், துறக்கமவேண டாத்தொல்லோன், நரகர்துயர்கெடநடப் போன், நாதன, பகவன, பிணிப்பறுமாத வன, பிறர்க்கறமருளும பெரியோன, பிறர்க்கறமுயலும்பெரியோன, பிறர்க்கு ரியாளன, பிறவிப்பிணிமருத்துவன, புத்தஞாயிறு, புலவன, பெரியவன், பெ ருந்தவமுனிவன், பெருமகன, பேரறிவா ளன, பொதுவறிவிகழ்ந்து புலமுறுமாத வன், போதித்தலைவன, போதிநாதன, போதிப்பகவன், போதிமாதவன், போதி மூலத்துநாதன், போதியுரவோன, மன னுயிர்முதல்வன், மாரனைவென்றவீரன, மிக்கோன, முழுதுமுணர்ந்தோன, முற்ற வுணர்ந்தமுதலவன. முன்னவன, வாமன, வாய்மொழிசிறந்தநாவோன என இந்நூ லுளளே வழங்கப்படும. (௬) ௬க, (எ) கக, (௮) ௪க, ௬க, (௯) ௬க, (க0) க, ௬க, அ௪ (கக) உ௬, ௬0, ச௬, ௬க, எச, (கஉ) ௬எ, ருஎ. எ௪, எஅ, அ௬, க0உ, க0௭, கக௧ (கரு) உ௬, உ௬ (௧க) க௬எ, கஎ௭; (உரு) ௬, ௬௪, ௬ரு, ருச, ரு௭, ௬உ, கக௬; (உ௬) ௬௬, (௨௨) க௲0, க௪க, கசஅ, கஎச; (௨௯) உ௰, சஎ, (௬0) க௬.

பூதசதுக்கம்:—தவவேடத்தில் மறை ந்து தீமைபுரிந்தொழுகுவோர் முதலிய அறுவகையாரைப்புடைத்துண்ணும்பூதம் நிறறலையுடைய நாற்சந்தி. இந்நூல்முதற் காதை, உ௬-உ௯-ம் அடிகளினகுறிப்பை ப்பார்க்க. (எ) எஅ; (உ0) உக. (உஉ) ரு0, ருரு.

பூதம்:—அங்காடிப்பூதமெனவும் சதுக் கப்பூதமெனவும இரண்டுள்ளன. இவற் றுள அங்காடிப்பூதத்தின் வரலாற்றை, இந்நூல்முதற்காதை கக-உ0-ம அடிக ளின் குறிப்பாலும, சதுக்கப்பூதத்தின் வரலாற்றை முதற்காதை உ௬-உ௯-ம் அடிகளின் குறிப்பாலு முணர்க. இந்நூ லில் வேறுபூதமும் கூறப்பட்டுள்ளது. (௬) ரிக

பூதி.—ஓரந்தணன்; வயனங்கோட்டன் னூரிலுள்ளவன் ஆபுத்திரனைவளர்த் தோன், இளம்பூதியெனவுங் கூறப்படு வன (க௬) க௬, க0க.

பூமிசந்திரன்:—நாகபுரத்தரசன், அமர சுந்தரியின் கணவன், புண்ணியராசனை வளர்த்தவன. உச) கஎ0; உரு) எ௭

பூருவதேசம்:—காந்தாரநாட்டின ஒரு பகுதியாகவுள்ளது, இதற்கரசன அத்தி பதியெனபவன. ௬) க௬.

பொதியில்.—பாண்டிநாட்டுள்ள ஒரு மலை, இதன்வளத்தைக் காணவந்தபொ ழுதுதான காயசண்டிகை விருச்சிகனசா பத்தால யானைத்தீயென்னுந் தீராப்பசி யை யடைந்தாள, இதில எழுந்தருளியி ருக்குதலினாலேயே அகத்தியமுனிவர் மல யத்துருந்தவன என்றுகூறப்படுவர். (க) ௬. (கரு) அஉ, (கஎ) உ௪, ரு0; (உ0) உஉ.

போதி:—அரசமரம என்றது பல்குனி நதிக்கரையிலுள்ளதையெனக்கொள்க. இதனிழலிலிருந்து ஆராய்ந்தபொழுது நான்குவகைப்பட்ட சத்தியங்களை அறித றகுரிய ஞானமுண்டானமை பற்றிப புத் தன போதிமாதவன' எனறுசொல்லப படுவன, அவனிருந்ததுபற்றி இது மகா போதியெனறு வழங்கப்படும. கக-ம காதை, ௬௬-ம அடிக்குறிப்பைப்பார்க்க. (கக) எ௬ (கஉ) க0க, ககக. (உஅ) கஎச.

மகதம்:—ஒருநாடு, இது தக்கிணமக தம உத்தரமகதமென இரண்டுவகைப்ப டும். (உ௬) ௪உ.

மகாதீவம்.—பெருந்தீவு. (௬) க௬ரு.

மங்கலத்திருநாள:—புத்தன் வைசாக சுத்தபூரணிமையில் ஞானம்பெற்ற மையின, அந்தது இப்பெயர்பெறறுப் பௌத்தரால் நிரம்பக்கொண்டாடப்ப டும். (க0) அ௬.

**மண்முகனார்:**—ஒருமுனிவன் தவளமலையிலிருந்து தவஞ்செய்தோன் இம்முனிவனிடத்திருந்த பசுவயிற்றிலேதான் புண்ணியராசன் பிறந்தான. (க) ச, கo, சo.

**மணிபல்லவம்:**—ஒருசிறுதீவு; இதுகாவிரிப்பூம்பட்டினத்திற்குத் தெற்கே முப்பது யோசனையளவிலுள்ளது. தன்னைத் தரிசித்தோர்களுக்குப் பழம்பிறப்பின செய்தியைத் தெரிவிப்பதாகிய புத்தபீடிகையொன்றும் கோமுகியென்னும் பொய்கையொன்றும் இதில் இருந்தன. (பதி) சச, அச, சு) உகரு (எ) க, உஉ; (அ) உ; கூ எ (கக) உ; (கஉ) கூ; (கச) அக, (க ) ருரு, (உக) கரு, அசு, கூo, கஅரு, (உச) ( ) ருரு, கஉo, கஉசு, கருக, கஅஉ; (உஅ) உoரு.

**மணிமேகலாதெய்வம்:**—சில தீவிலுள்ளவரை அரக்கர் வார்த்தைபண்ணுதபடி இந்திரனேவலாற் பாதுகாத்துக்கொண்டிருத்தலையுடைய ஒரு தெய்வம். கோவலன் தன் குலதெய்வமாகிய இத்தெய்வம் கடலிற் பாதுகாத்த நன்றிபாராட்டியே தன் புதல்விக்கு மணிமேகலையென்று பெயரிட்டான், மணிமேகலையை நல்வழிப்படுத்தற்கு எண்ணி அவளை உவவனத்திருந்து மணிபல்லவத்துக்கொண்டுசென்று புத்தபீடிகைக்காட்டியாற் பழம்பிறப்புணர்வித்துப் பூர்வஜன்மநாயகன் இன்னானென்பதைத் தெரிவித்ததன்றி, சிறந்த மூன்று மந்திரங்களைப் பின்பு அவளுக்கு உபதேசித்தது. (பதி) சரு, சரு (ரு) கூரு; (சு) உoரு, உகரு, (எ) உ, கஅ, ருரு, சo, சுo, (அ) உரு, (கூ) ரு, சுஎ, (கo) ரு, கசு. (கக) க, சரு, கஉ, (கஉ) கூ, கச, உரு, உ , ருரு, (கஅ) அக, (கரு) கo, (உக) கச, கoகூ, கஅஉ; (உச) சுச, எரு, (உரு) கககூஅ, உoஎ (உசு) எ , (உஅ) எகூ, உகஉ; (உகூ) ருரு.

**மணிமேகலை:**—கோவலனுக்கு மாதவிபாற் பிறந்தவள்; இக்காப்பியத்தலைவி "காதன் மடந்தையர் கையறு காலையு மெய்யகலா, மேரகு நாணு மெலியமன்றேவிழி போலுநெய்தற், போதவிழ் மென்மலர்ப் புன்னையங் கானல் பொருந்துமிந்த, மாதவி பெற்ற மணிமேகலைநம்மை வாழ்விப்பதே" என மகாகவியாகிய கம்பர்புதல்வர் அம்பிகாபதியென்பவர் தாமியற்றிய கோவைச்செய்யுளில் இவளையும் இவளன்னையையும் சிலேடையிலமைத்துப் பாராட்டியிருத்தல் காணக. (பதி) ருஎ, ருஅ; (உ) ச, கo; (ரு) ரு, கக, உo, சஉ, அஉ, கசஅ, கஎக (ச) உசு, சுஎ, கஉ ( ) அக, கூஉ, (எ) க, ரு, கரு, உo, உரு, ருஎ, (அ) கஉ (கூ) க; (கo) க (கக) உ, கச, கஉஎ, (கஉ) ருக, ரு, (கரு) ( ), எஉ, (கசு) கருo, (கஎ) கரு, எஅ, கூச; (கo) உரு, ருக, ருரு, எகூ, கஉக, கசரு, க o, கருரு, கஎo, (ககூ) ருo, கச , (உo) எo, அச, கக , (உக) கo, ருசு, கஅக, கஅஅ (உஉ) சு, கஅo; (உரு) உகூ, கூக, (உச) உஉ, எஉ, அரு, கசரு, (உரு) எ, உo, கூரு, கருச, உருரு, (உஅ) உருஎ.

**மதுராபதி:**—தென்மதுரையின் அதிதேவதை இந்தத்தெய்வத்தாலேதான் கண்ணகி கோவலனுடையமுற்பிறப்பின் வரலாறுமுதலியவற்றைத் தெரிந்துகொண்டாள். இவள் மதுரைமாதெய்வமென்றுங் கூறப்படுவள் (உசு) கரு.

**மதுரை:**—ஒருநகரம், இதில் சிந்தாதேவியின்கோயிலொன்றிருந்தது, ஆபுத்திரன முதலிற் பலநாளிருந்து அறஞ்செய்தது இந்நகரத்தேதான், இது தக்கிணமதுரையெனவும் வழங்கப்படும் (கஉ) கoரு; (உஉ) கoசு, கஉக (உரு) கருசு, (உசு) கஉ.

**மயன்:**—தெய்வத்தச்சன்; காவிரிப்பூம்பட்டினத்திற பளிக்கறையிலுள்ள புத்தபீடிகையையும், சக்கரவாளக்கோட்டத்தையும், கந்திற்பாவையையும் நிருமித்தவன் இவனே, இவனை அசுரத்தச்சனென்றுங் கூறுவர் (ரு) எக, (சு) உoக, (உக) கருஉ.

**மருதி:**—காவிரிப்பூம்பட்டினத்துள்ள ஒருபார்ப்பனி. (உஉ) சக, கசஎ.

**மறு.**—(உஉ) உகo.

**மாசாத்துவான்:**—கோவலன்றந்தை; இவன் கோவலன் இறந்ததைக்கேள்வியுற்றுத் தன்கையிலுள்ள பொருளனைத்தையுந் தானஞ்செய்துவிட்டுப் பௌத்தமதச்சார்பினனாய்த் துறவுபூண்டு வஞ்சிநகரஞ்சென்று தவஞ்செய்துகொண்டிருந்தான அறவணவடிகளைக் காணுதற்குக் காஞ்சிநகரஞ்செல்லும்படி மணிமேகலையைத் தூண்டினவன் இவனே. (உஅ) ருரு.

மாதவி:—ஒருநாடகக்கணிகை, கோவலனுடைய காதற்பரத்தையாயிருந்து மணிமேகலையைப் பெற்றாள், கோவலன் கொலையுண்டதுகேட்டுத் துறந்து அறவணவடிகள்பால் தருமங்கேட்டு அவருடன் காஞ்சிசென்று நோற்றிருந்தாள் (பதி) நசா (உ) ச, கய, கஎ, சுஎ, ரு) க, கக, சாகூ, (ச) சாஎ, அக (எ) கநய, (அ) உரு, (கய) எரு, (கக) கச, (கஉ) கஎ, (கந) எக, (கஅ) அ, உரு, ருரு, (உக) எஅ, கருஉ, கஎய, (உஉ) கஎகூ, (உச) சா, உய, அரு, கூய.

மாரன்:—தருமவிரோதியான இச்சைகளை மனத்திலுண்டாக்குமொருதேவன். இந்நூல் ரு-ம் காதை, எஎ-ம் அடிக்குறிப்பைப் பார்க்க. (கக) சாக, (ருய) கக.

மாநதவேகன்:—ஒரு வித்தியாதரன், இந்திரவிழாச்சேவித்தற்குக் காவிரிப்பூம்பட்டினத்திற்கு வருகையிற் சண்பைநகரத்தில் சுதமதியென்னும் பார்ப்பனியைக் கவர்ந்துகொண்டவன். (ரு) ருரு, (சா) உஎ; (எ) கயந.

மாவண்கிள்ளி:—ஒருசோழன் (ககூ) கஉஎ, கருஅ, கசச, க சா, (உச) உகூ, ருஅ (உரு) கச, கஅய, (உஅ) கஎஉ; (உசா) ரு.

மாவலி:—ஓரரசன் நெடுமுடிக்கிள்ளியின் மனைவியாகிய சீர்த்தியென்பவள். இவன்குலத்தினன் என்று கூறப்பட்டிருக்கிறாள். (ககூ) ருச.

முசுகுந்தன்.—சூரியகுலத்திற்பிறந்த ஒருசக்கரவர்த்தி, இவன் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து முன்னமரசாண்டவன். (க) கஙு.

முந்தகடவுள்.—(ரு) கசச, (ரு) கரு.

மேரு.—ஒருமலை, இது சக்கரவாளத்தின் நடுவேயுள்ளது, சுமேருவென்றுங்கூறப்படும். (பதி) ந; (சா) கஙுரு (கஅ) கூஉ.

யானைத்தீ:—தணியாப்பசியைவிளைவிப்பதோர் நோய்; இதனால் காயசண்டிகை பன்னிரண்டுவருடம் மிகத்துன்புற்றுப் பின்பு மணிமேகலை அளித்தஉணவால் அத்துன்பமொழிந்தாள். (பதி) சாசா; (கஎ) எ, சச, எரு, (ககூ) கருக, கஙுந; (உய) நரு, கசச.

யூகி:—யௌகந்தராயணனென்று பெயர்பெற்ற ஓரந்தணன்; கரு - ம் காதை, சாச-ம் அடிக்குறிப்பைப் பார்க்க.

வச்சிரக்கோட்டம்:-வச்சிராயுதநிற்குங் கோயில், இஃது அக்காலத்திற் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்தது. (க) உஎ; (ரு) ககரு.

வர்த்தி:—ஒருநகரம். (கூ) உஅ.

வசு:—ஓரரசன், இவன் கலிங்கநாட்டுள்ள சிங்கபுரத்தை ஆண்டவன். (உசா) கசா.

வஞ்சி:—சேரர்களுடைய இராசதானி, இது ஒருகொடியின்பெயரைப் பெற்றமையால் கருவூரெனவுங் கூறப்படும். (பதி) அசா, (க) ...சா (ககூ) கஉய, (உக) கூக, (உச) கருரு (உஅ) உயசா, உருஅ; (உசா) எஅ; (உஅ) உ, கயக.

வடிவேற்கிள்ளி:—ஒருசோழன். (உரு) கஙுரு

வத்தவன்.—வத்ஸராஜனாகிய உதயணன் (கரு) சாஉ.

வயந்தமாலை:— மாதவிதோழி இவளைக் கூனியென்றுங்கூறுவர். (பதி) ருசா, (உ) அ, கய, ருஎ, எச, (ரு) க; (ச) அக

வயனங்கோடு:— பாண்டிநாட்டுள்ளதாகிய ஓரூர். ஆபுத்திரன் இந்தவூரிலுள்ள பூதியென்பவனுடையவீட்டிலேதான் வளர்ந்தான்; இது வயவனங்கோடெனவும் வழங்கப்படும். (கரு) கரு.

வளைவணன்:—நாகநாட்டரசன், வாசமயிலையின்கணவன், பீலிவளையின்றந்தை. (உஎ) ...

வாசந்தவை.—ஒருமுதியவள், இவள் இராசமாதேவி முதலியோர்க்கு மனத்துன்பமுண்டானபொழுது பலநீதிமொழிகளைக்கூறி அதனை ...பாக்குபவள். (உரு) க.

வாசமயிலை —வளைவணன்மனைவி, பீலிவளையின்றாய் (உச) ருசா.

வாணன்:—பாணாசுரன். (ரு) கஉரு

வாரணசி:—காசி; இது வாரணவாசியெனவும் வழங்கும். (கரு) ரு, எஅ.

விசாகை:—ஒருவணிகமாது, இவள் மரணபரியந்தம் விவாகமின்றிக் கன்னிமாடத்திருந்தே காலங்கழித்தவள். (உஉ) அந, அகூ, கயஅ, கஉச, கசந.

விசுவாமித்திரர்:—ஒருமுனிவர். இவர் வறட்காலமொன்றிற் பசித்துன்பைப் பொறுக்கலாற்றாது நாயின்இறைச்சியைத் தின்னுதற்குமுயன்றார், "அரசுதலை நீங்கிய வந்தணன்" என்று கூறப்பட்டிருக்கிறார். (கக) அச.

விடர்ச்சிலைபொறித்தவேந்தன்:—ஒரு சேரன் இவன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் எனவுங்கூறப்படுவன், கோவ

லனுக்கு ஒன்பதுதலைமுறை முன்னோனாகிய கோவலனுக்குக் காதற்பாஙகன் (உஅ) க0ச.

விந்தம்:—ஒருமலை; இச்சொல விந்திய மென்னும் வடமொழிச்சிதைவு, இதில் துர்க்கை யெழுந்தருளியிருககும் ஆலய மொன்றுண்டு; இதனைக்காப்பவள விந்தா கடிகையெனபவள். (உ0) ககஎ, கஉ0.

விந்தாடவிகை:—ஒருதெய்வப்பெண் விந்தமலையினமேல் யாரேனுஞ்செல்லுவாராயின், அவரைச் சாயையாலிழுததுத் தன்வயிற்றிலிடுபவள். (உ0) கஉ0

வியாசர்:—இவர் பிரமாணவாதநூலாசிரியர்களுள் ஒருவர்; இவர்கொண்டபிரமாணம் பத்து. (உஎ) ருக.

விராடன்:—ஓரரசன, இவன ஸ்ரீமகாபாரதத்திற் கூறப்பட்டவன். (௯) கசரு.

விரிஞ்சி:—இவர் புலிவயிற்றிற்பிறந்த ஒருமுனிவர். (க௯) சுச.

விருச்சிகன்:—இவர் பொதியின் மலைச சாரலில் தவஞ்செய்துகொணடிருநத ஒருமுனிவர் பனனிரணடுவருடத்திற்கு ஒருமுறையுண்ணும் பட்டினிவிரதி, தாமபாரணம செய்யக்கருதிவைதத நாவற்பழததைச் சிதைத்ததுபற்றிக் காயசணடிகையைச சபிததவர். (கஎ) உ௯, ௯0.

வீரை:—இலக்குமி, தாரை எனபவரின் சகோதரி, துச்சயன்மனைவி, மதுமயக்கததால் யானையின்முனனேசென்று உயிரை விட்டவள், சுதமதியாகப் பிறநதவள் இவளே. (எ) க0எ; (க0) ருக; (கக) க௯௯ (கஉ) க0, சரு, கக0.

வெள்வேற்கிள்ளி.—ஒரு சோழன். (உ௯) ௯.

# பத்திரம்.

கணபதி துணை.

# மணிமேகலை.

## பதிகம்.

[கதைபொதிபாட்டு.]*

இளங்கதிர் ஞாயி றெள்ளுந் தோற்றத்து
விளங்கொளி மேனி விரிசடை யாட்டி
பொன்றிகழ் நெடுவரை யுச்சித் தோன்றித்
தென்றிசைப் பெயர்ந்தவித் தீவத் தெய்வதஞ்
சாகைச் சம்பு தன்கீழ் நின்று
மாநில மடந்தைக்கு வருந்துயர் கேட்டு
வெந்திற லரக்கர்க்கு வெம்பகை நோற்ற
சம்பு வென்பாள் சம்பா பதியினள்
செங்கதிர்ச் செல்வன் றிருக்குலம் விளக்குங்
கஞ்ச வேட்கையிற் காந்தமன் வேண்ட

---

* இதுவும், இதுபோல் இந்நூலின் ஒவ்வொருபாகத்தின் தலைப்பில் இருதலைப் பகரத்தினுள்ளே பதிப்பிக்கப்பட்டுள்ள வாக்கியங்களும், கிடைத்த கையெழுத்துப் பிரதிகளுள் மிகப் பழமையானதும் இந்நூற்பரிசோதனைக்கு இன்றியமையாததாக இருந்ததுமாகிய **மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக்கவிராயரவர்கள்** வீட்டுப் பிரதியிற் காணப்பட்டன. பதிகத்தினிறுதியில் "ஆறைம் பாட்டினுள் அறிய வைத் தனனென" என்றிருத்தலால், இந்நூற்பகுதிகளின்பெயர் காதையென்றிருத்தலினும் பாட்டென்றிருத்தலே பொருத்தமுடை

---

க. ஞாயிறு - சூரியன். எள்ளும் - இகழும்; உவமவுருபுமாம். 'எள்ளுந் தோறல்' எனவும்பாடம்.

க-உ. "பொன்னிற் பொலிந்த நிறத்தா டோன்ற" என்பர் பின்னும் (௬ - ம் காதை, ௧௪௫ - ம் அடி).

௩. வரை - மேரு. உச்சி - உச்சியில.

௪. இத்தீவம் - சம்புத்தீவு.

௫. சாகை - கிளை. சம்பு - நாவல்.

௭. வெம்பகைநோற்ற - வெவ்வியபகைக்குப் பாகநோற்ற.

௮. சம்பாபதியினள் - சம்பாபதியினிடத்தேயிருந்தாள். சம்பாபதியென்பது காவிரிப்பூம்பட்டினத்தின்பழையபெயர்.

௯. செங்கதிர்ச்செலவன் திருக்குலம் - சூரியகுலம்.

௧௦. கஞ்ச வேட்கையின் - நீருண்டாகும் விருப்பத்தையுடைய; (கம் - நீர்). காந்தமன் - காந்தனாகியமன்; காந்தனென்பது ஒருசோழனபெயர்; "கன்னியேவலிற் காந்தமன்னவன்" (௨௨-ம் காதை-௨௭) என்று பின்வருதல் காண்க.

வமர முனிவ னகத்தியன் றனது
கரகங் கவிழ்த்த காவிரிப் பாவை
செங்குணக் கொழுகிய சம்பா பதியயற்
பொங்குநீர்ப் பரப்பொடு பொருந்தித் தோன்ற
வாங்கினி திருந்த வருந்தவ முதியோ
ளோங்குநீர்ப் பாவையை யுவந்தெதிர் கொண்டாங்
காணு விசும்பி னாகாய கங்கை
வேணவாத் தீர்த்த விளக்கே வாவெனப்
பின்னிலை முனியாப் பெருந்தவன் கேட்டீங்
கன்னை கேளிவ் வருந்தவ முதியோ
ளின்னால் வணங்குந் தகைமையள் வணங்கெனப்
பாடலசால் சிறப்பிற் பரதத் தோங்கிய
கோடாச் செங்கோற் சோழர்தங் குலக்கொடி
கோணிலை திரிந்து கோடை நீடினுந்
தானிலை திரியாத் தண்டமிழ்ப் பாவை
தொழுதன ளிற்பவத் தொன்மூ தாட்டி
கழுமிய வுவகையிற் கவாற்கொண் டிருந்து
தெய்வக் கருவுந் திசைமுகக் கருவுஞ்
செம்மலர் முதியோன் செய்த வந்நா

சக. "அமர முனிவ னகத்தியன் றனது" என இவ்வடியே பின்னும்வரும்; (உஉ - ம்காதை - ருரு).

கஉ. கரகம் - குண்டிகை; "நீரற வறியாக் கரகத்து" என்பது **புறநானூறு**, ச. 'கரகங் கவிழ்ந்த' எனவும் பாடம். காவிரிப்பாவை - காவிரியாகியபாவை; "நீர்ப் பாவை" (பதிகம்-கசு) என்பர் பின்னும்.

கரு. செங்குணக்கு - செவ்விய கிழக்கு; செம்மை - நேர்மை.

கஎ. ஆணு - நேயம்; "ஆணுப் பைங்கிளி யாண்டுப் பறந்ததே" என்பது **சீவக சிந்தாமணி**, குணமாலையாரிலம்பகம், கருஉ. 'ஆணூஉ விசும்பின்' எனவும் பாடம். ஆகாயகங்கை - பெயர்.

கஅ. வேணவா - வேட்கையாலாகிய அவா.

கக. பின்னிலைமுனியா - பின்நிற்றலை வெறாத. பெருந்தவன் - அகத்தியன்.

உ0. அன்னை - விளி. அன்னையென்றது, காவிரியை.

உக. 'தன்மையள்' எனவும் பாடம்.

உஉ. பரதத்து - பரதகண்டத்தில்.

உரு. சோழர்தங்குலக்கொடி - வேற்று வேந்தரனுகாமையால் சோழர்தங் குலக்கொடியாயுள்ளாள். இப்படியே வையை நதியை, "வையை யென்ற பொய்யாக் குலக்கொடி" என்று **இளங்கோவடிகள்** கூறியிருத்தல் காண்க; **சிலப்பதிகாரம்**, புறஞ்சேரியிறுத்தகாதை, சஎ0.

உச. 'கோணிலை திரிந்து' எனவும் பாடம்.

உரு. தண்டமிழ்ப்பாவை - காவிரி.

உசு. தொழுதனளிற்ப - தொழுது நிற்ப.

உஎ. கழுமிய - கலந்த. கவான் - துடை.

உஅ - உக. தெய்வக்கரு - உலகம் முப்பத்தொன்றனுள் மகாராஜிகலோகமுதலிய தெய்வலோகம் ஆறினுமுள்ள அறுவகைத் தெய்வகணபிண்டங்கள்; தெய்வலோகம் ஆறவன:— (க) மகாராஜிகலோகம், (உ) திரயத்திரிம்சலோகம், (ரு) யாமலோகம், (ச) துஷிதலோகம், (ரு) நிருமாணரதிலோகம், (சு) பரநிருமிதவசவர்த்திலோகம் என்பன; இந்நூலுள

# பதிகம்.

ளென்பெயர்ப் படுத்தவிவ் விரும்பெயர் மூதூர்
நின்பெயர்ப் படுத்தே னீவா ழியவென
விருபாற் பெயரிய வுருகெழு மூதூ
ரொருநூறு வேள்வி யுரவோன் றனக்குப்
பெருவிழா வறைந்ததும் பெருகிய தலரெனச்

...யிற், பெருவனப் பெய்திய தெய்வதக் கணங்களும்" என்று பின்வருதல் காண்க; (௬-ம் காதை, ௧௭௮ - ௧௭௯). திசைமுக௧௪௫ - ப்ரஹ்ம காயிகலோக முதலிய ப்ரஹ்மலோகம் இருபதினுமுள்ள இருபதுவகைப்பட்ட ப்ரஹ்மகணபிண்டங்கள். ப்ரஹ்மலோகம் இருபதாவன :— (௧) ப்ராஹ்மகாயிகலோகம், (௨) ப்ரஹ்மபுரோகிதலோகம், (௩) மஹாப்ரஹ்மலோகம், (௪) பரீத்தாபலோகம், (௫) அப்பிரமாணபலோகம், (௬) ஆபாஸ்வரலோகம், (௭) பரீததசுபலோகம், (௮) அப்பிரமாணசுபலோகம், (௯) சுபகிருஸ்நலோகம், (௧௦) பிரகத்பலலோகம், (௧௧) அஸம்ஞ்யாஸத்துவலோகம், (௧௨) அப்பிரகலோகம், (௧௩) அதபலோகம், (௧௪) ஸுதர்சலோகம், (௧௫) ஸுதர்சிலோகம், (௧௬) அகநிஷ்டலோகம், (௧௭) ஆகாசானந்தியாயதனலோகம, (௧௮) விஞ்ஞானனந்தியாயதனலோகம், (௧௯) அகிஞ்சந்யாயதனலோகம், (௨௦) நைவஸம்ஜ்ஞாயதனலோகமென்பன. இவற்றுள், (௧) பிரஹ்மகாயிகலோகமுதலிய பதினாறையும் உரூபப்பிரஹ்மலோகமென்றும், (௧௭) ஆகாசானந்தியாயதனலோகமுதலிய நான்கையும் அரூபப்பிரஹ்மலோகமென்றும் கூறுவர், "நால்வகை மரபி னரூபப் பிரமரு, நாலெண் வகையி னுரூபப் பிரமரும" என்று இந்நூலுள்ளே பின்பு வருதல்காண்க; (௬-ம் காதை, ௧௭௬ - ௧௭௭). மேற்கூறியவற்றுள், தெய்வலோகங்கள் ஆறும ஸகாமலோகங்களென்றும், பிரஹ்மலோகங்கள் இருபதும் நிஷ்காமலோகங்களென்றும கூறப்படும். செம்மலர் முதியோன் - மஹாப்ரஹ்மா. இவை, பௌத்தநூலிற் காணப்பட்டன. அந்நாள் - அந்நாளில.

௩௦. என்பெயர்ப்படுத்த - என்பெயர்ப் படச்செய்த; என்றதனால், சம்பாபதியென்னும் பெயர், சம்புத்தீவகதெய்வத்திற்கு இயல்பாகவே உண்டென்பது பெறப்பட்டது. இதனை, "தவிசிலை கொலோ சம்பாபதி" (௬-ம் காதை, ௧௩௮) என்று பின்வருதலாலுணர்க. **சிலப்பதிகாரத்திலும்** இந்நூலிலும் தென்மதுரையையும் அதன் அதிதேவதையையும் மதுராபதியென்று வழங்கியிருத்தல் காண்க. சோழர்களின் பழைய இராசதானியாதலின், இந்நகாம், மூதூரெனப்பட்டது. இப்படியே இந்நூலிற் பலவிடத்தும் இந்நகரை மூதூரென்றுவழங்குவர்; (௨-ம் காதை ௩௪, ௪௦; ௩-ம் காதை ௩௪; ௪-ம் காதை ௨௮; ௧௮-ம் காதை ௬௧; ௨௦-ம் காதை ௨௮; ௨௧-ம் காதை ௧௧௯). "ஆரங்கண்ணிச் சோழன்மூதூர்" (பதிகம் - ௧௨) எனவும், "வீங்குநீர் வேலி யுலகிற் கவன்குலத்தோ, டோங்கிப் பரந்தொழுக லான்" (மங்கலவாழ்த்துப் பாடல், "பூம்புகார்."—) எனவும் **சிலப்பதிகாரத்தும்** வருதல காண்க.

௩௨. இருபாற் பெயரிய - சம்பாபதி காவிரிப்பூம்பட்டினம் என்னும் இருவகைப்பெயரினையுடைய, உருகெழுமூதூர் - பகைவர்க்கு அச்சத்தைச்செய்தல் பொருந்திய பழைய ஊர். இவ்வடியே, ௪-ம் காதையில் ௩௯-ம் அடியாய் வந்திருத்தல் காண்க.

௧-௩௨. விரிசடையாட்டி தெய்வதம் சம்புவென்பாள், சம்பாபதியினள்; (அக்காலத்துக்) காவிரிப்பாவை ஒழுகி அச்சம்பாபதியயலில் தோன்ற, ஆங்கிருந்த முதியோள் நீர்ப்பாவையை எதிர்கொண்டு விளக்கேஓவென, (அதனைப்) பெருந்தவன் கேட்டு, வணங்கென, குலக்கொடி தண்டமிழ்ப்பாவை அம்முதியாளைத் தொழுதுநிற்ப, அம்மூதாட்டி, அவளைக் கவானிற்கொண்டிருந்து, அந்நாளில், என்பெயர்ப்படுத்த இம்மூதூரை நின்பெயர்ப்படுத்தேன், நீவாழியவென் றலால இருபாற்பெயரிய மூதூரென்க.

௩௩. நூறுவேள்வியுரவோன் - இந்திரன்; சதமகன்.

௩௪. அலர்பெருகியதென்று; அலர் - பலரறியநிகழ்த்துஞ்சொல்.

சிதைந்த நெஞ்சிற் சித்திரா பதிதான்
வயந்த மாலையான் மாதவிக் குரைத்தது
மணிமே கலைதான் மாமலர் கொய்ய
வணிமலர்ப் பூம்பொழி லகவயிற் சென்றது
மாங்கப் பூம்பொழி லரசிளங் குமரனைப்
பாங்கிற் கண்டவள் பளிக்கறை புக்கதும்
பளிக்கறை புக்க பாவையைக் கண்டவன்
றுளக்குறு நெஞ்சிற் றுயரொடும் போயபின்
மணிமே கலாதெய்வம் வந்துதோன் றியது
மணிமே கலையைமணி பல்லவத் துய்த்தது
முவவன மருங்கினவ் வுரைசா றெய்வதஞ்
சுதமதி தன்னைத் துயிலெடுப் பியதூஉ
மாங்கத் தீவகத் தாயிழை நல்லா
டான்றுயி லுணர்ந்து தனித்துய ருழந்தது
முழந்தோ ளாங்கணு றொளிமணிப் பீடிகைப்
பழம்பிறப் பெல்லாமப் பான்மையி னுணர்ந்தது

௩௫. சித்திராபதி - மாதவியின் நற்றாய். இதனை, பின்பு, "எற்பயந்த - சித்திராபதிக்குஞ் செப்புநீ" (௨-ம் காதை, ௭௦-௭௧) என்று மாதவி கூறுதலாலுணர்க.

௩௬. வயந்தமாலை - மாதவியின் தோழி; "தன்மக டோழி, வயந்த மாலையை வருகெனக் கூஉய்" எனப் பின்னர்க்கூறுதல காண்க; (௨-ம் காதை, ௭-௮). இவளைக்கூனியென்றும் வழங்குவர். மாதவி - மணிமேகலையின்றாய்; நாடகக்கணிகை.

௩௮. பொழில் - உவவனம். அகவயின் - உள்ளிடத்தே.

௩௯. பொழில் - பொழிலில். அரசிளங்குமரன் - உதயகுமரன்.

௪௦. பளிக்கறை - பளிங்காலாகிய அறை.

௪௧. பாவை - மணிமேகலை. அவன் - உதயகுமரன்.

௪௨. துளக்குறுநெஞ்சு - நிலைகலங்குதலுற்ற நெஞ்சு; "கடிமரந் துளங்கிய காவும்" என்பது புறநானூறு, ௨௩. 'பெயர்ந்தபின்' என்றும் பாடம்.

௪௩. மணிமேகலாதெய்வம் - இத்தீவினுள்ளவரை அரக்கர்வாதைபண்ணாமல் இந்திரனேவலாலே பாதுகாத்துக்கொண்டிருந்ததலையுடையது; கோவலனுடைய குலதெய்வம்.

௪௪. மணிபல்லவம் - ஒரு சிறுதீவு; இதனை அநதரத்தீவென்றும் வழங்குவர். 'மணிப்பலலவம்' எனவும் பாடம். இந்நூலில் இப்பெயர்வருமிடங்களிலெல்லாம் இப்பாடங்கொள்க.

௪௫. உவவனம - உண்டாக்கப்பட்ட வனம்; உபவனமென்னும் வடமொழிச் சிதைவு; இதனை ஆராமமென்றும் வழங்குவர். உரைசால் - புகழமைந்த.

௪௬. சுதமதி - மாதவியின் தோழியாகிய ஒரு பார்ப்பனி. துயில் எடுப்பியதூஉம் - துயில் எழுப்பியதும்; "உரவுநீர்ப் பரப்பி னூர்துயி லெடுப்பி" என்பது, சிலப்பதிகாரம், அந்திமாலைச்சிறப்புச்செய்காதை, ௭௬. 'துயிலெழுப்பியதூஉம்' எனவும் பாடம்.

௪௭. நல்லாள் - மணிமேகலை.

௪௮. தனித்துயருழந்ததும் - ஒப்பற்ற துயரால் வருந்தியதும்; "அருந்துயருழக்குநின் றிருந்திழை யரிவை" என்பது புறநானூறு, ௧௪௬. 'தான்றுயிலெழுந்து' எனவும் பாடம்.

௪௯. 'உழந்தோண்முன்னர்' எனவும் பாடம். ஒளிமணிப்பீடிகை - செவ்வொளியையுடைய மாணிக்கத்தாலாகிய (புத்தனுடைய) பாதபீடம். பீடிகை - பீடிகையால்.

முணர்ந்தோன் முன்ன ருயர்தெய்வந் தோன்றி
மனங்கவ லொழிகென மந்திரங் கொடுத்ததுந்
தீவ திலகை செவ்வனந் தோன்றி
மாபெரும் பாத்திர மடக்கொடிக் களித்ததும்
பாத்திரம் பெற்ற பைந்தொடி தாயரோ
டியாப்புறு மாதவத் தறவணர்த் தொழுதது
மறவண வடிக ளாபுத் திரன்றிற
நறுமலர்க் கோதைக்கு நன்கன முரைத்தது
மாங்கப் பாத்திர மாபுத் திரன்பாற்
சிந்தா தேவி கொடுத்த வண்ணமு
மற்றப் பாத்திர மடக்கொடி யேந்திப்
பிச்சைக் கவ்வூர்ப் பெருந்தெரு வடைந்ததும்
பிச்சை யேற்ற பெய்வளை கடிஞையிற்

௫௧. உயர்தெய்வம் - 
ய்வம்.

௫௨. கவல் - கவலுதல்; முதனிலைத் தொழிற்பெயர். மந்திரம் - வேற்றுரு அடைவிப்பதும், அந்தரந்திரியச்செய்வதும், பசியையொழிப்பது மாகிய மூன்று மந்திரங்கள். கொடுத்ததும் - உபதேசித்ததும். 'ஒழியென' எனவும் பாடம்.

௫௩. தீவதிலகை - மணிபல்லவத்திலுள்ள புத்தனுடைய பாதபீடிகையை இந்திரனேவலாற்காவல்பூண்டு ஒழுகுபவள்; தீவுக்கு அலங்காரமாக உள்ளவளென்பது பொருள். செவ்வனம் - செவ்விதாக; "தீவ திலகை செவ்வன முரைக்கும்" (௧௧-ம் காதை, ௨0) எனவும், "சிறந்தோர்க கலலது செவ்வனஞ் சுரவாது" (௧௧-ம் காதை, ௧௨௧) எனவும் பின்னர் இம்மொழி இப்பொருளில் வழங்கிவருதல் காண்க.

௫௪. மாபெரும்பாத்திரம் - அமுதசுரபியென்னும்பெயருள்ள பிக்ஷாபாத்திரம்; பாத்திரம - பாத்திரத்தை. மடக்கொடிக்கு - மணிமேகலைககு.

௫௫. தாயரோடு-மாதவி சுதமதியென்னும் இருவரோடு; "ஆங்கத் தாயரோடறவணர்த் தேர்ந்து" (பதிகம், ௮௯) எனவும், "பொற்றொடி தாயரு மப்பதிப் படர்ந்தனர்" (௨௮-ம் காதை, ௧௫௪) எனவும், "நகர்கடல் கொள்ளநின் றாயரும் யானும்" (௨௯-ம் காதை, ௯௫) எனவும் இவ்விருவரையும் மணிமேகலையின் தாயரென இந்நூலுள்ளே யாண்டும் வழங்கிவருதல் காண்க.

௫௬. யாப்பு - கட்டு; அறவணர் - புதத சங்கததாரான ஒரு முதியமுனிவர்.

௫௭. ஆபுத்திரன் - ஓரந்தணன்; தன்னைப்பெறறவுடன் தாய் நீங்கிவிட, எழு நாள் வரையில ஒரு பசுவாற்பாலூட்டிக காக்கப்பட்டமையின், இவன் இப்பெயர் பெற்றான். திறம் - வரலாறு.

௫௮. 'நறுமணககோதைக்கு' எனவும் பாடம்.

௫௯. 'அங்கைப் பாததிரம்' எனவும் பாடம்.

௬0. சிந்தாதேவி - ஸரஸ்வதீதேவி. யாவருககும் சிந்தையிற்றோன்றிச் சொற பொருளுணர்த்துபவளென்பது பொருள்; இந்நூலுள்ளே, "நாமிசைப் பாவாய்" (௧௪-ம் காதை, ௧௮) எனவும், "செழுஙகலைப் பாவாய்" (௨௫-ம காதை, ௧௯௯) எனவும், "உணர்விற் றோன்றி யுரைப்பொருளுணர்த்து, மணிதிக ழவிரொளி மடந்தை" (௨௫-ம் காதை, ௧௪௮-௧௪௯.) எனவும் வழங்குதலால், இஃது உணரப்படும்.

௬௧. மடக்கொடி - மணிமேகலை.

௬௨. பிச்சைககு - பிக்ஷைக்கு. அவ்வூர் - காவிரிப்பூம்பட்டினம்.

௬௩. 'பெருந்தலைககடிஞை' எனவும் பாடம். கடிஞை - பிச்சைப்பாததிரம்; "தோமறு கடிஞையும்" என்பது சிலப்பதிகாரம், நாடுகாணகாதை, ௯௮.

பத்தினிப் பெண்டிர் பாத்தூ ணீத்ததூஉங்
காரிகை நல்லாள் காயசண் டிகைவயிற்
றானைத் தீக்கெடுத் தம்பல மடைந்தது
மம்பல மடைந்தன ளாயிழை யென்றே
கொங்கலர் நறுந்தார்க் கோமகன் சென்றது
மம்பல மடைந்த வரசிளங் குமரன்முன்
வஞ்ச விஞ்சையன் மகள்வடி வாகி
மறஞ்செய் வேலோன் வான்சிறைக் கோட்ட
மறஞ்செய் கோட்ட மாக்கிய வண்ணமுங்
காயசண் டிகையென விஞ்சைக் காஞ்சன
னாயிழை தன்னை யகலா தணுகலும்
வஞ்ச விஞ்சையன் மன்னவன் சிறுவனை
மைந்துடை வாளிற் றப்பிய வண்ணமு
மையரி யுண்க ணவன்றுயர் பொறாஅ
டெய்வக் கிளவியிற் றெளிந்த வண்ணமு
மறைகழல் வேந்த னாயிழை தன்னைச்
சிறைசெய் கென்றதூஉஞ் சிறைவீடு செய்ததூஉ
நறுமலர்க் கோதைக்கு நல்லற முரைத்தாங்

௬௪. பத்தினிப்பெண்டிர் - ஆதிரைமுதலியோர். பாத்தூண் - பகுத்துண்ணுமு

௬௫. காயசண்டிகை - ஒரு வித்தியாதரமகள்.

௬௬. ஆனைத்தீ - எதனாலும தணியாத பெரும்பசியைச் செய்வதோா வியாதி; இதனைப் பஸ்மகவியாதியென்பர் ஸ்ரீபுராணமுடையார். இதனியல்பை சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், ௧௧௧, ௬௭௩, ௬௭௪ - ம் பாடலகளாலுணர்க. அம்பலம் - உலகவறவி.

௬௮. கோமகன - உதயகுமரன்.

௭௦. விஞ்சையன்மகள் வடிவு - காஞ்சனனென்னும்வித்தியாதரனுடைய மனைவியாகிய காயசண்டிகையினது உருவம. மகள் - மனைவி. இந்நூலுள்ளே "நினைக இவன் மகனாத தோன்றிய தூஉ - மனைக இனி யாற்குநீ மகளாய தூஉம்" (௨௧-ம் காதை, ௨௬-௬௦) என்புழி மகளென்பது இப்பொருளதாதலுணர்க. 'மகன் வடிவாயதும்' எனவுமபாடம்.

௭௧. வேலோன் - சோழன். சோழனுடைய சிறைக்கோட்டத்தை. சிறைக்கோட்டம் - சிறைச்சாலை.

௭௩. 'காஞ்சயன்' எனவும் பாடம.

௭௪. அணுகலும் - உதயகுமரன் அணுகலும்.

௭௬. மைந்து - வலி. தப்பிய - வெட்டிய; "வாளிற் றப்பியவல்வினை யன்றே" (௨௧ - ம் காதை, ௬௦) என்றவிடத்துத் 'தப்பிய' என்பது இப்பொருளதாதலை யுணர்க.

௭௭. 'அழுதுயர் பொறாஅள்' எனவும் பாடம். 'நெடுநிலை கந்தினின்ற பாவை, வருவ துரைத்து மயக்கொழி யென்றது, மகன்றுயர் பொறாஅ மன்னவன் மாதரைச், சினங்கொண் டாங்கோர் சிறையிடை யிட்டதுஞ், சிறைவீடு செய்த விராசமா தேவி, பொறைகொண் டிரப்பச் சிலங கொடுத்ததுந், தாழ்கழல் வேந்தன் சாவக மன்னனுக், காயிழை தன்னை யகற்றிய வண்ணமும்' எனவும்பாடம்.

௭௮. தெய்வக்கிளவி - கந்திற்பாவையாகிய தெய்வத்தின் மொழி.

௭௯. அறைகழல்வேந்தன - மாவண்கிள்ளி.

௮௦. வீடு - விடுதல்.

௮௧. நறுமலர்க்கோதைக்கு - இராசமாதேவிக்கு. நல்லறம் - பௌத்த தரு

# பதிகம்.

காய்வளை யாபுத் திரனா டடைந்தது
மாங்கவன் றன்னோ டணியிழை போகி
யோங்கிய மணிபல் லவத்திடை யுற்றது
முற்றவ ளாங்கோ ருயர்தவன் வடிவாய்ப்
பொற்கொடி வஞ்சியிற் பொருந்திய வண்ணமு
நவையறு நன்பொரு ளுரைமி னோவெனச
சமயக் கணக்கர் தந்திறங் கேட்டது
மாங்கத் தாயரோ டறவணர்த் தேர்ந்து
பூங்கொடி கச்சி மாநகர் புக்கதும
புக்கவள் கொண்ட பொய்யுருக் களைந்து
மற்றவர் பாதம வணங்கிய வண்ணமுந்
தவத்திறம பூண்டு தருமங் கேட்டுப
பவத்திற மறுகெனப பாவை நோற்றது
மிளங்கோ வேந்த னருளிக் கேட்ப
வளங்கெழு கூல வாணிகன் சாத்தன்

மம்; இதனை அருளறமென்றுங் கூறுவர். 'நறுமலர்க் கோதை நல்லற முரைத்தாங்கு' எனவும் பாடம்.

அ௨. ஆபுத்திரனாடு - சாவகநாடு.

அ௩. ஆங்கவன் றன்னோடு - ஆபுத்திரனோடு.

அ௪. புத்தனுடைய பாதபீடிகையினையுடைத்தாதலின், 'ஓங்கிய மணிபல்லவம்' என்றார்.

அ௫. உயர்தவன்வடிவாய் - (மணிமேகலை) உயர்ந்த முனிவன்வடிவங்கொண்டு; "மையறு சிறப்பிற் றெய்வதந் தந்த, மந்திர மோதியோர் மாதவன் வடிவாய்" (௨௬ - ம் காதை, எ0 - எக) என்று பின் வருதல் காண்க.

அ௬. வஞ்சி - சேரனிராசதானி; கருவூர். 'பொற்கொடிமூதூர்' எனவும் பாடம்.

அஎ. நவையறு - குற்றமற்ற. நன்பொருள் - நல்லதத்துவங்களை.

அஅ. சமயக்கணக்கர் - சமயவாதியர்; இச்சொல் இப்பொருளதாதலை, "சமயக் கணக்கர் மதிவழி கூறாது" (**கல்லாடம்**-கஎ) எனவும், "மாறுகொண் டறையு மதிநூற் கடலினுள், சமயக் கணக்கர் தந்திறங் கடந்து" (**கல்லாடம்** - சுரு) எனவும் வருவனவற்றாலுணர்க.

அகூ. ஆங்கு - வஞ்சிநகரத்தில்.

கூ0. பூங்கொடி - மணிமேகலை. கச்சி - காஞ்சிநகரம். 'காஞ்சிமாநகர்' எனவும் பாடம்.

கூக. பொய்யுரு - முன்னங்கொண்ட தவவடிவு.

கூ௨. அவர் - அறவணவடிகள்.

கூ௩. தருமம் - பௌத்ததருமம்.

கூ௪. பாவை - மணிமேகலை.

கூரு. இளங்கோவேந்தன் - **சிலப்பதிகார** நூலாசிரியராகிய இளங்கோவடி**கள்**. அருளிக்கேட்ப - அருள்புரிந்து கேட்ப; கேட்டருளவென விகுதிபிரித்துக் கூட்டினும் அமையும்.

கூ௬. கூலவாணிகன் சாத்தன் - கூலவாணிகனான சாத்தன்; கூலம் எண்வகைத்து; அவை நெல்லு, புல்லு, வரகு, தினை, சாமை, இறுங்கு, தோரை, இராகியென; பதினெண் வகைத்தெனபர் கூத்தநூலார், அதனை, "பதினெண் கூலமு முழவர்க்கு மிகுக" என்பதனாலுணர்க, இது **மதிவாணர் நாடகத்தமிழ் நூல்**.

மாவண் டமிழ்த்திற மணிமே கலைதுற
வாறைம பாட்டினு ளறியவைத் தனனென.

பதிகம் முற்றிற்று.

க. அரியேறு ..... ன்னுயர்த்த வாதியான் வண்டின்
புரியேறும போதி நிழற்கிழ்ப் – பெரியோ
னடித்தா மரைமலரை யன்போடுஞ் சென்று
பிடித்தார் பிறவார் பெயர்ந்து.

உ. பூத்தபுனற் பூம்பொய்கைப் பூம்புகார் மாதவிக்கு
வாய்த்த மணிமே கலைதுறவைச் – சாத்தன்
மணிமே கலை...... .......... ........

* இந்த இரண்டுசெய்யுளும், இந்தவண்ணமாக மீதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக்கவிராயரவர்கள்வீட்டுப்பிரதியில்மட்டுமிருந்தன.

கஎ. தமிழ்த்திறம் - தமிழிலக்கணத்தின் பாகுபாடு; திறத்தால். மணிமேகலை துறவு - மணிமேகலைதுறவென்னும் பெயருள்ள இந்நூலை. இந்நூலுக்கு மணிமேகலைதுறவென்னும் பெயருண்மை, நீலகேசியுரைமுதலியவற்றிற் காணப்படும்; ஆயினும் மணிமேகலையென்னும் பெயர் இருவகைவழக்கிலும் மிகுதியாக வழங்குதல்பற்றி, அப்பெயரே, ஈண்டு எடுத்தாளப்பட்டது. இனி, மணிமேகலை துறவென்பதனை நூற்பெயராகக்கொள்ளாது அதற்கு மணிமேகலையென்பவளுடைய துறவென்று பொருள்கொள்ளினும் பொருந்தும். 'வண்டமிழத்தின் மணிமே கலைதிறம்' எனவும் பாடம்.

கஅ. ஆறைம்பாட்டினுள் - முப்பது பாட்டினுள். எனவென்னும் அசைச்சொல் ஆசிரியப்பாவிற்குமுடிபு சிறப்புடைதது.

கஉ - கஅ. மூதூர் விழாவறைந்தது முதல பாவை நோற்றது ஈறுகவுள்ள மணிமேகலைதுறவை இளங்கோவேந்தன் கேட்பக் கூலவாணிகன் சாத்தன் ஆறைம்பாட்டினுள் அறிய வைத்தன

எல்லாவடியும் நேரடியாய் வந்து முடிதலின், இப்பாட்டு, நிலைமண்டில ஆசிரியப்பா.

சிலப்பதிகாரத்தை இந்நூலாசிரியர் கேட்டனரெனச் சிலப்பதிகாரப்பதிகத்திறுதியிலும், இந்நூலைச் சிலப்பதிகார நூலாசிரியர் கேட்டனரென இந்நூற்பதிகத்திறுதியிலும் கூறியிருத்தலால் இந்த இரண்டு நூலாசிரியரும் ஒரு காலத்தினரென்பது பெறப்பட்டது.

# மணிமேகலை.

## முதலாவது

## விழாவறைகாதை.

[முதலாவது விழாவறைந்தபாட்டு.]

உலகந் திரியா வோங்குயர் விழுச்சீர்ப்
பலர்புகழ் மூதூர்ப் பண்புமேம் படீஇய
வோங்குயர் மலயத் தருந்தவ னுரைப்பத்
தூங்கெயி லெறிந்த தொடித்தோட் செம்பியன்
விண்ணவர் தலைவனை வணங்கிமுன் னின்று
மண்ணகத் தென்றன் வான்பதி தன்னுண்

க - ரு. உலகம் - நன்மக்களுடைய ஒழுக்கம். திரியா - வேறுபடாத. ஓங்குயர் விழுச்சீர் - மிகவுமுயர்ந்த சிறிய புகழ். திரியா மூதூர்; சிறப்பினையுடைய மூதூரென்க. "உலகம் புகழ்ந்த வோங்குயர் விழுச்சீ, ரலைவாய்" என்பது **திருமுருகாற்றுப்படை**, ௧௨௪ - ௧௨௫. பலர் புகழ் மூதூர் - பலதேசத்தாரும் கொண்டாடும் பழமையாகிய நகரம், என்றது காவிரிப்பூம்பட்டினத்தை. பலருமபுகழ்தலை, "பூம்புகார் போற்றுதும் பூம்புகார் போற்றுதும்" (**சிலப்பதிகாரம்**, மங்கல வாழ்த்துப்பாடல்) எனவும், "**வாழிய** ரோ .. புகழா லமைந்த புகார்" (**சிலப்பதிகாரம்**, புகார்காண்டத்தினிறுதிச் செய்யுள்) எனவும வருவனவற்றாலும் பிறவற்றாலும் உணர்க. பலர் - பல சமயத்தாருமாம். மூதூர்ப் பண்பு மேம்படீஇய - மூதூரினது தன்மைகள் மிகும் பொருட்டு. 'மேம்படுதல்' எனவும் பாடம். மலயம் - பொதியின்மலை. அருந்தவன் - அகத்தியனை. மேம்படீஇய வுரைப்பவெனக. 'ஆங்குயர் மலயத் தருந்தவ னுரைப்ப' எனவும் பாடம்.

௪. தூங்கு எயில் எறிந்த - (தேவர்கட்குப் பகைவராகிய அசுரர்களுடைய) ஆகாயத்திலே யசைகின்ற மதில்களை அழித்த, தொடிக்தோட் செம்பியன் - வீரவளையையணிந்த தோளையுடைய சோழன்; இவன் சோழருள் ஒருவன்; இவன் தூங்கெயிலழித்த செய்தியைப் பின்வருவனவற்றாலுணர்க; "ஒன்னா ருட்குந் துன்னருங் கடுந்திறற், றூங்கெயி லெறிந்தநின் னூங்கணோர்" என்பது **புறநானூறு**, ௩௯. "தூங்கெயின் மூன்றெறிந்த சோழன்காணம்மானை, சோழன் புகார்நகரம் பாடேலோ ரம்மானை" என்பது **சிலப்பதிகாரம்**, வாழ்த்துக்காதை, "வீங்குநீர்". "வீங்குதோட் செம்பியன் சீற்றம் விறல்விசும்பிற், றூங்கு மெயிலுந் தொலைத்தலால்" என்பது, **பழமொழி**, ௭௯.

ரு. விண்ணவர் தலைவன் - இந்திரன்.

௩ - ரு. அருந்தவன் உரைப்பச் செம்பியன் வணங்கி யெனக; உரைப்ப எறிந்தவெனவுமியையும்.

௬. 'மண்ணகத்து' என்பது முதல சோழன்வார்த்தை. வான்பதிதன்னுள் நன்றாகிய காவிரிப்பூம்பட்டினத்தில.

மேலோர் விழைய விழாக்கோ ளெடுத்த
நாலேழ் நாளினு நன்கினி துறைகென
வமரர் தலைவ னுங்கது நேர்ந்தது
கவராக் கேள்வியோர் கடவா ராகலின்
மெய்த்திறம் வழக்கு நன்பொருள் வீடெனு
மித்திறந் தத்த மியல்பினிற் காட்டுஞ்
சமயக் கணக்கருந் தந்துறை போகிய
வமயக் கணக்கரு மகலா ராகிக்
கரந்துரு வெய்திய கடவு ளாளரும்
பரந்தொருங் கீண்டிய பாடை மாக்களு
மைம்பெருங் குழுவு மெண்பே ராயமும்

எ. விழாக்கோள எடுத்த - விழாவெடுத்தலை மேற்கொண்ட.

அ. நாலேழ்நாளினும் - இருபத்தெட்டு நாளிலும், "நாலேழ் நாளினும்" என்பர் மேலும் (க - காதை, கஅ).

ரு - அ. முன்னினறு உறைகென; உறைகென - உறைகவென்று சோழன் வேண்ட.

கூ. நேர்ந்தது - இந்திரன் உடன்பட்டது, இது பெயர்; விழாவையென்றபடி.

க0. கடவார் - பிழையார்.

கக. மெய்ததிறம - மெயம்மையையுணர்த்துவனவாகிய நூலவகைகள், வழக்கு - உலகியல்; நன்பொருள் - நன்றாகிய தததுவங்கள்; வீடு-முததி; "மெய்த திறம் வழககென விளம்புகின்ற, வெத்திறத்தினும்" (உஎ - ம் காதை, க0கூ - க0எ) என்பர் மேலும். இப்படியே "அருமறை விதியு முலகியல வழக்கும், கருத்துறை பொருளும் விதிப்பட நினைந்து" என்றார் கல்லாடத்தும், சுசு.

கஉ. இத்திறம் - இவ்வகைகளை.

கஙு. சமயக்கணககர் - சமயவாதியர். தந்துறைபோகிய - தம்முடையவழியிற் கைதேர்ந்த.

கச. அமயக் கணக்கரும் - காலங்களை எண்ணிச்சொலவோராகியசோதிடரும். கணக்கரென்பது கணகரென்னும வடமொழிச்சிதைவு. அகலாராகி - இங்ககரைவிட்டு நீஙகாராகி.

கரு. கரந்துருவெய்திய கடவுளாளரும் - மக்கள்கண்கள் காணப்பொறாவென்று தமது மிகக ஒளியையுடைய செய்வயாக்கையைமறைத்து அககண்கள்பொறுக்குமளவினவாகிய உருவங்களை நிருமித்துககொண்ட தேவரும். இதனை, "அந்தரத் துள்ளோ ரறியா மரபின், வந்து காண்குறூஉம் வானவன் விழவும்" (சிலப்பதிகாரம், கடலாடுகாதை, எஉ - எங) எனவும், "அவளுக்குப் - பூவந்த வுண்கண் பொறுகவென்று - மேவித்தன், மூவா விளநலங் காட்டி" (சிலப்பதிகாரம், கனுநதிறமுறைத்தகாதை, ஙங - ஙரு) எனவும் வருவனவற்றாலும், இவற்றின உரையாலும் உணர்க

கசு. ஒருங்கீண்டிய - ஒன்றுபடத்திரண்ட. பாடைமாககள் - மொழிவேறுபட்ட மாக்கள்; இவர்கள், மரககலந்தருஞ் செலவப்பொருட்டாலவந்த பரதேசிகள்; இவரை, "புலம்பெயர்மாககள்" (சிலப்பதிகாரம்,இந்திரவிழவூரெடுத்தகாதை, கக) எனவும், "மொழிபெயர் தேஎத்தோர்" (சிலப்பதிகாரம், கடலாடுகாதை, கசுரு) எனவுங்கூறுவர்.

கஎ. ஐம்பெருங்குழு - அமைச்சர், புரோகிதர், சேனாபதியர், தூதுவர், சாரணரென்னுமிவர்கள். எண்பேராயம - கரணத்தியலவர் முதலியோர். இதனை, "அமைச்சர் புரோகிதர் சேனா பதியர், தவாத்தொழிற் றூதுவர் சாரண ரென்றிவர், பார்த்திபர்க்கைம்பெருங்குழுவெனப் படுமே," "கரணத் தியலவர் கரும விதிகள், கனகச் சுற்றங் கடைகாப் பாளர், நகர மாந்தர் நளிபடைத் தலைவர், யானை வீர ரிவுளி மறவ, ரினைய ரெண்பேராய மென்ப" எனபனவற்றாலுணாக,

## க.—விழாவறைகாதை.

வந்தொருங்கு குழீஇ வான்பதி தன்னுட்
கொடித்தேர்த் தானைக் கொற்றவன் றுயரம்
விடுத்த பூதம் விழாக்கோண் மறப்பின்
மடித்த செவ்வாய் வல்லெயி றிலங்க
இடிக்குரன் முழக்கத் திடும்பை செய்திடுந்
தொடுத்த பாசத்துத் தொல்பதி நகரரைப்
புடைத்துணும் பூதமும் பொருந்தா தாயிடும்
மாயிரு ஞாலத் தரசுதலை யீண்டும்
ஆயிரங் கண்ணோன் விழாக்கால் கொள்கென

இவை திவாகரம்; "ஐம்பெருங் கு
மெண்பே ராயமும்" என்பது, மே
கதையுள் இலாவாண காண்டத்து
மண்ணுநீராட்டலிலும், சிலப்பதி
த்து இந்திரவிழவூரெடுத்தகாதைய்
(கருஎ-ம் அடி) வருதலகாண்க.

கஅ. ஒருங்கு குழீஇ - ஒன்றுப
கூடி. 'குழீஇய' என்றும் பாடம்;
ற்குக் கடவுளாளர் முதலியோர் குழீ
வான்பதியென இயைத்துப் பொரு
ளாக்க. 'வானபதிதனனுள்' என்றது
லியன, சமயக்கணக்கர்முதலியோர்
ததை.

கக. கொற்றவன் - முசுகுந்தன்.
ரம் - அவனுடைய கண்ணுமனமும்
ளும்வண்ணம் அசுரர்விட்ட தாம,
திரத்தால அவனுக்குளதாகிய துனபம.
துயரம - துயரத்தை. 'துயரற' என்றும
'துயரிற' என்றும பாடம்.

உ0. விடுத்தபூதம் - முசுகுந்தற்கு
ஓர்மந்திரமுபதேசித்து அவ்விருளைப்
போக்கிய, பட்டினப்பாக்கம் மருவூர்ப்
பாக்க மிரண்டற்கும இடையேயுள்ள
நாளங்காடியிடத்துப் பூதம். இதனைப்
பினவருவனவறறாலும் அவற்றின் உரை
யாலுமுணர்க; "வெறறிவேன மன்னற்
குற்றதை யொழிக்கென .. .. பீடி
கை" (சிலப்பதிகாரம், இந்திரவிழவூரெ
டுத்தகாதை, சுரு - சுஎ); "கடுவிசை யவு
ணர் .. .யிடனுங் காண்கும" (சிலப்
பதிகாரம், கடலாடுகாதை, எ - கரு).
விழாக்கோள் - விழாவெடுத்தல்.

உக. வலலெயிறு - வலியபல். 'வல்
லெயி றரும்ப' எனவும் பாடம.

உஉ. முழக்கத்து - முழக்கத்தோடு.
இடும்பை - துன்பம்.

உ0 - உஉ. பூதம் மறப்பின் இடும்பை
செய்திடு மெனக.

உரு - உச. தொடுதத-கட்டிய. நரகர்-
தமமைப் பிறர் நம்புவதற்குத் தவவேட
ததில மறைந்து நின்று அததவததிற்
கிழுக்கானவற்றின்கண் ஒழுகும் பொய்
வேடத்தார முதலிய அறுவகையோர்.
புடைதது - அறைந்து. பூதம் - மேற்
கூறிய பொய்வேடததார் முதலிய அறு
வரைத் தன்பாசங கட்டிவர அவரை
யறைநதுண்ணும் சதுக்கப்பூதம்; இத
னை, "மாதுய ரெவ்வமொடு மனையகம்
புகாஅள் . சேயிழை யரற்றலும்"
(உஉ - ம் காதை, சக - ருக) என இந்
நூலுள்ளும, "தவமறைந் தொழுகுந்
தனமை யி லாளர் ரவமறைந் தொழுகு
மலவைப் பெண்டி, ரறைபோ கமைச்சர்
பிறாமனை நயப்போர், பொய்ககரி யாளர்
புறங்கூற் றாளரென, கைககொள் பாசத்
துக கைப்படு வோரெனக், காதநான்
குங் கடுங்குர லெடுப்பிப், பூதம் புடைத்
துணும் பூத சதுக்கமும்" (இந்திரவிழவூ
ரெடுததகாதை, சஉஅ - கஙச); "பததி
னி யொருததி .. .உயிர்முன் புடை
ப்ப" (அடைக்கலககாதை, எசு - அசு)
எனச் சிலப்பதிகாரததுள்ளுங கூறிய
வாற்றாலுணர்க.

உரு. மாயிருஞாலம் - மிகப் பெரிய
பூமி. ஈணடும - கூடும்.

உசு. ஆயிரங்கணணோன் - இந்திரன்.
காலகொள்கென - தொடங்குகவென்று
சொல்ல; "கால்கோள் விழவின் கடை
நிலை சாற்றி" என்பது சிலப்பதிகாரம்,
இந்திரவிழவூரெடுததகாதை, கசச.

வச்சிரக் கோட்டத்து மணங்கெழு முரசங்
கச்சை யானைப் பிடர்த்தலை யேற்றி
யேற்றுரி போர்த்த விடியுரு முழக்கிற்
கூற்றுக்கண் விளிக்குங் குருதி வேட்கை
முரசு கடிப்பிகூஉ முதுக்குடிப் பிறந்தோன்
றிருவிழை மூதூர் வாழ்கென் றேத்தி
வானமும் மாரி பொழிக மன்னவன்
கோணிலை திரியாக் கோலோ னுறுக
தீவகச் சாந்தி செய்தரு நன்னாள்

௨எ. வச்சிரக்கோட்டம் - வச்சிராயுதம் நிற்குங் கோயில், "வச்சிரக்கோட்டம்" என்பர் சிலப்பதிகாரர், கனாத்திறமுரைத்தகாதை, ௧௨. மணங்கெழுமுரசம் - விழாமுரசு. 'மணமுழாவாங்கி' எனவும் பாடம்.

௨அ. கச்சை - கீழ்வயிற்றிற் கட்டும் கச்சை. பிடர்த்தலை - பிடரிடம்.

௨எ - ௨அ. "வச்சிரக் கோட்டத்து மணங்கெழு முரசங், கச்சை யானைப் பிடர்த்தலை யேற்றி" எனச் சிலப்பதிகாரத்தும் இவ்வடிகளே வந்திருத்தல் காண்க; (இந்திரவிழவூரெடுத்தகாதை, ௧௪௧ - ௧௪௨.)

௨௯ - ௩௧. ஏற்றுரிபோர்த்தமுரசு - வென்ற ஏற்றினது உரியைப்போர்த்தினமுரசு. இதன்கருத்தினைப் பின்வருவனவற்றாலுணர்க; "ஏறிரண்டுடன் மடுத்து, வென்றதன் பச்சை சீவாது போர்த்த, ...... முரசம்" என்பது புறநானூறு, ௨௮௮; "சாற்றிடங் கொண்ட வேற்றுரி முரசம்" என்பது பெருங்கதை, உஞ்சைக்காண்டம், விழாவாத்திரை; "ஏற்றுரி முரசி னிறைவன் மூதூர்க்கு" என்பது பெருங்கதை, உஞ்சைக்காண்டம், ஊர் தீயிட்டது. "ஏற்றுரி முரச நாண" என்பது சீவகசிந்தாமணி, மண்மகளிலம்பகம், ௪௧. இடியுருமுழக்கின்முரசு=உருமிடிமுழக்கின்முரசு - உருமேற்றினது இடிப்புப்போலு முழக்கினையுடைய முரசு; "உருமிடி முரசமொடு" என்பது திருமுருகாற்றுப்படை, ௧௨௧. 'இடியுறுமுழக்கின்' எனவும்பாடம்; இதற்கு உறு - உவமவுருபு; "தோளுற்றொர் தெய்வந் துணையாய்த் துயர் தீர்த்தவாறும்" (சீவகசிந்தாமணி, பதிகம், ௯) என்புழிப்போல. கூற்றுக்கண்விளிக்குமுரசு - கூற்றையழைக்குமுரசு; கண் - அசைநிலையுமாம்; "மீன்கண் ணற்றதன் சுனையே" (புறநானூறு, ௧0௯) என்புழிப்போல. குருதிவேட்கைமுரசு - குருதிப்பலிகொள்ளும் விருப்பத்தையுடைய முரசு; "குருதி வேட்கை யுருகெழு முரசம்" என்றார் புறநானூற்றிலும், ௫0. கடிப்பு - முரசடிக்குங்குறுந்தடி.

௩௨. வாழ்கென்று - வாழ்கவென்று.

௩௩. 'வானமும்மாரி' முதலியன முரசறைவோன்கூற்று. வானம் - மேகம். மாரி - மழை. 'வானமும் மாரியும்' எனவும் பாடம்.

௩௪. கோணிலை திரியாக் கோலோனுறுக - கோள்கள் நிற்குமநிலை குலையாமைக்குக் காரணமாகிய செங்கோலையுடையோனுறுக; "கோனிலை திரிந்திடிற் கோணிலை திரியும்" என இந்நூலுள்ளும் (எ - ம் காதை, ௮), "கோணிலை திரிந்து மரசுகோல் கோடினென்றான" எனச் சீவகசிந்தாமணியுள்ளும் (நாமகளிலம்பகம், ௨௨௬) வருதல் காண்க.

௩௫. தீவகச்சாந்தி - தீபசாந்தி; என்றது இந்திரவிழாவை; சம்புத்தீவக்காவற்றெய்வம், முற்காலத்து இத்தீவிலுள்ளார்க்கு அசுரராலவரும் தீங்கைப் பரிகரித்தற்பொருட்டு இந்திரனுக்குச் செய்தமையால், இவ்விழா இப்பெயர்பெற்றது; இதனை, "நாவ லோங்கிய மாபெருந் தீவினுட், காவற் றெய்வதந் தேவர்கோற் கெடுத்த, தீவகச்சாந்தி" என்று பின் வருதலாலுணர்க; (௨ - ம் காதை, ௧ - ௩). 'தீபசாந்தி' எனவும்பாடம். இனி, நகரத்திற்கு உளவாகுந் தீங்குகளைப் பரி

ளாயிரங் கண்ணோன் றன்னோ டாங்குள
நால்வேறு தேவரு நலத்தகு சிறப்பிற்
பால்வேறு தேவரு மிப்பதிப் படர்ந்து
மன்னன் கரிகால் வளவனீங் கியநா
ளிந்நகர் போலவதோ ரியல்பின தாகிப்
பொன்னகர் வறிதாப் போதுவ ரென்பது
தொன்னிலை யுணர்ந்தோர் துணிபொரு ளாதலிற்
றோரண வீதியுந் தோமறு கோட்டியும
பூரண கும்பமும் பொலமபா லிகைகளும்
பாவை விளக்கும் பலவுடன் பரப்புமின்
காய்கககுலைக கமுகும வாழையும வஞ்சியும்
பூககொடி வலலியுங் கரும்பு நடுமின்
பததி வேதிகைப பசுமபொற் றாணதது
முத்துத் தாம முறையொடு நாற்றுமின்

கரிதற்பொருட்டுச் செய்யப்படும் இவ் விழா, நீவிற்துச் செயவுதனொடொககு மென்பதுபற்றித் நீவகச்சாந்தியெனப் பட்டதெனினுமமையும; இவ்வூர்ப்பல ததை "உலகவறவி" என இந்நூலுள் ளும் (எ - ம காதை, கூ; கஎ-ம் காதை, எஅ, அசு), இவ்வூர்வாயிலை, "உலக விடைகழி" எனச் சிலப்பதிகாரத்துள் ளும் (நாடுகாண்காதை உஎ), இவ்வூரா சனை 'உலகமன்னவன" என (கூ - ம் காதை, சசு) இந்நூலுள்ளும் கூறியிருத் தல காணக.

கூஎ. நால்வேறு தேவர் - முப்பத்து மூவர்; அவர் வசுக்களெண்மரும், திவா கரர் பன்னிருவரும், உருத்திரர் பதினொ ருவரும், மருத்துவரிருவருமாவார்.

கூஅ. பாலவேறு தேவர் - பதினெண் கணங்கள்; பால்-பகுதி. படர்ந்து-நினை ந்து. 'இப்பதியடர்ந்து' எனவும்பாடம்.

கூகூ. கரிகால் வளவன் - புகாரையா ண்ட ஓர் சோழன். நீங்கிய நாள் - பகை வரை வெல்ல வடதிசையை நோக்கி அவன் போன நாளில்; "இருநில மருங் கின் .......... புண்ணியத் திசைமுகம் போகிய வந்நாள்" என்று சிலப்பதிகார த்து வருதல் காண்க; இந்திரவிழவூரெடு த்தகாதை, அகூ - கூச.

சக. பொன்னகர் - தேவலோகம். வறிதா - வறுமையையுடையதாக. தே வர் பலரும் விழாக்காண இந்நகர்க்கு வந்துவிடுதல்பற்றி, இவ்வாறு கூறப்பட் டது.

ச0 - சக. ஆகி வறிதாவென்க.

சங. கோட்டி - சபை; கோயிலவாயி லென்பர் சிலப்பதிகார அரும்பதவுரை யாசிரியர்; வரந்தருகாதை, சஉ. 'தோ ட்டி' எனவும் பாடம்.

சச. பொலம் பாலிகை - பொற்பா

சரு. பாவைவிளக்கு - பிரதிமை விள க்கு; "பாவை விளக்குப் பசுமபொற் படாகை" என்பது சிலப்பதிகாரம், இந் திரவிழவூரெடுத்தகாதை கருச. உடன பரப்புமின் - ஒருங்குபரப்புமின்.

சசு. வஞ்சி - மரவிசேடம்; கொடிவி சேடமுமாம்; வஞ்சிநகரத்தை, "பொற் கொடிப் பெயர்ப்படூஉம் பொன்னகர்" எனப் பின்னாககூறுதல் காண்க; உசு - ம் காதை, கஉ.

சஎ. பூக்கொடிவலலி யென்றார், துகி ற்கொடியைமாற்றற்கு; "கதலிகைக் கொடியுங் காழூன்று விலோதமும்," எனப் பின்வருதல காண்க. 'கரும்பொடு நடுமின்' எனவும் பாடம்.

சஅ. பத்தி - வரிசை. வேதிகை - திண்ணை. தோணம் - தூண்.

சகூ. தாமம் - மாலை. 'முகையொடு நாற்றுமின்' எனவும் பாடம்.

விழவுமலி மூதூர் வீதியு மன்றமும்
பழமணன் மாற்றுமின் புதுமணற் பரப்புமின்
கதலிகைக கொடியுங் காழூன்று விலோதமு
மதலை மாடமும் வாயிலுஞ் சேர்த்துமி
னுதல்விழி நாட்டத் திறையோன் முதலாப்
பதிவாழ் சதுக்கத்துத் தெய்வமீ றாக
வேறுவேறு சிறப்பின் வேறுவேறு செய்வினை
யாறறி மரபி னறிந்தோர் செய்யுமின்
றண்மணற் பந்தருந் தாழ்தரு பொதியிலும
புண்ணிய நல்லுரை யறிவீர் பொருந்துமி
னொட்டிய சமயத் துறுபொருள் வாதிகள்
பட்டிமண் டபத்துப் பாங்கறிந் தேறுமின்
பற்று மாக்க டம்முட னாயினுஞ்
செற்றமுங் கலாமுஞ் செய்யா தகலுமின்
வெண்மணற் குன்றமும் விரிபூஞ் சோலையுங்

௫0. மன்றம் - ஊர்க்கு நடுவாய் எலலாருமிருக்கும் மரததடி; "மன்றமும் பொதியிலும்" என்றார் திருமுருகாற்றுப்படையில், உஉசு.

௫க. 'பழமணற் பாற்றுமின்' எனவும் பாடம்.

௫உ. கதலிகைக்கொடியுங் காழூன்று விலோதமும் - துகிற்கொடி விசேடங்கள்; காழ் - காம்பு. 'கதலிக்கொடியும்' எனவும் பாடம்.

௫௩. மதலை - கொடுங்கை; பற்றுக்கோடுமாம்.

௫௪. நுதலவிழி நாட்டத்திறையோன் - இறைவி கண்புதைததபொழுது நெற்றியிற் புறப்பட விட்ட கண்ணையுடைய தலைவன்; என்றது சிவபெருமானை; விழிநாட்டம் - வினைத்தொகை. இனி, நுதலில் இமையாநாட்டமென்றுமாம்; "நுதல்விழி நாட்டத் திறையோன் கோயிலும்" என்பது சிலப்பதிகாரம், ஊர்காண்காதை, எ.

௫௫. சதுக்கத்துத் தெய்வம்-சதுக்கப்பூதம்; என்றது, முனனர்க்கூறிய (அறுவகை நரகரைப் புடைத்துண்ணும்) பூதத்தை. சதுக்கம் - நாற்றெருக்கூடுமிடம்.

௫௬. செய்வினை - செய்வினையை.

௫௭. ஆறறிமரபினறிந்தோர் - நிருத்த முதலிய ஆறங்கங்களையுமுணர்ந்த முறைமையுடைய அந்தணர்; "ஆறறியந்தணர்க்கு" என்பது கலித்தொகை, கடவுள் வாழ்தது. அறிந்தோர் - முன்னிலைப்பெயர்.

௫அ. 'தண்மணப் பந்தர்' எனவும் பாடம். பொதியில - அம்பலம்.

௫௯. புண்ணியநலலுரை - தருமபதம். 'அறிந்தோர்பொருநதுமின்' எனறும் பாடம்.

௬0. ஒட்டிய - சபதஞ்செய்த. 'ஒட்டியதுறுபொரு ளுணாந்தவாதிகள்' எனவும் பாடம்.

௬க. பட்டிமண்டபம் - வித்தியாமண்டபம்; ஓலக்கமண்டபமென்றுங்கூறுவர். "பட்டி மண்டப மேற்றினையேற்றினை" (திருவாசகம், திருச்சதகம், ௪௯) எனவும், "பகைப்புறததுக் கொடுத்த பட்டி மண்டபமும்" (சிலப்பதிகாரம், இந்திரவிழவூரெடுத்தகாதை, க0உ) எனவும வருதல்காண்க. பாங்கு - உரிய இடம.

௬உ. பற்றுமாக்கள் - பகைவர்.

௬௩. செற்றம் - பகைமை நெடுங்காலம் நிகழும்கோபம்; "செற்ற நீச்கிய மனத்தினர்" என்பது திருமுருகாற்றுப்படை, க௩உ. கலாம் - போர்; "புலாற்களஞ்செய்த கலாஅத் தானையன்" என்பது புறநானூறு, ௬௯.

தண்மணற் றுருத்தியுந் தாழ்பூந் துறைகளுந்
தேவரு மக்களு மொத்துடன் றிரிதரு
நாலேழ் நாளினு நன்கறிந் தீரென
வொளிறுவாண் மறவருந் தேரு மாவுங்
களிறுஞ் சூழ்தரக் கண்முர சியம்பிப்
பசியும பிணியும் பகையு நீங்கி
வசியும வளனுஞ் சுரக்கென வாழ்த்தி
யணிவிழா வறைந்தன னகநகர் மருங்கென.

விழாவறைகாதை முற்றிற்று.

தாழ்பூந்துறைகள் - ஆழ்ந்தபொ யுடைய நீர்த்துறைகள்.

சுஅ. ஒளிறுவாள் - விளங்கும்வாள்; "ஒளிறுவாண் மன்னர்" என்பது புறநானூறு, கஎஎ. மறவர் - வீரர். 'வெளிறுவாண் மள்ளரும்' எனவும் பாடம்.

சுகூ. கண்முரசு - முகத்தையுடைய முரசு, "கடிப்பிடு கண்முரசம்" என்பது நாலடியார், ஈகை, க0. முரசின்முகத்தைக் கண்ணென்றல் மரபு.

எ0. பகை - உட்பகை.

எக. வசியும் வளனுஞ் சுரக்கென வாழ்த்தி - மழையும் செல்வமும் சுரக்கவென்று வாழ்த்தி.

எ0 - எக. "பசியும் பிணியும் பகையு நீங்கி, வசியும் வளனுஞ் சுரக்கென வாழ்த்தி" என இவ்வடிகளே சிலப்பதிகாரத்தும் வந்திருத்தல்காண்க; இந்திரவிழவூரெடுத்தகாதை, எஉ - எரு.

எஉ. அகநகர் - உண்ணகர்; என்றது பட்டினப்பாக்கத்தை.

க - எஉ. அருந்தவன் உரைப்பச் செம்பியன் விண்ணவர்தலைவனை நாலேழ் நாளினும் வான்பதிதன்னுள் உறைகென அவனேர்ந்ததைக் கேள்வியோர் கடவாராதலின், சமயக்கணக்கர் முதலியோர் குழீஇ 'மறப்பின் இடும்பைசெய்திடும் பொருந்தாதாயிடும் காலகொள்க' என முதுக்குடிப்பிறந்தோன் முரசத்தை ஏற்றி இயம்பி எதிச் சுரக்கெனவாழ்த்திப் பொழிக ஆருக நன்கறிந்தீர் துணிபொருளாதலின் நாலேழ்நாளினும் பரப்புமின நடுமின் நாற்றுமின மாற்றுமின் பரப்புமின் சேர்தருமின் செய்யுமின பொருந்துமின் ஏறுமின அகலுமின் என அகநகர்மருங்கு விழாவை அறைந்தனனென்க.

எல்லாவடியும் நேரடியாய் வந்து முடிதலின், இப்பாட்டு, நிலைமண்டில ஆசிரியப்பா.

## இரண்டாவது

# ஊரலருரைத்தகாதை.

[இரண்டாவது ஊரலருரைத்தபாட்டு.]

நாவ லோங்கிய மாபெருந் தீவினுட்
காவற் றெய்வதந் தேவர்கோற் கெடுத்த
தீவகச சாந்தி செய்தரு நன்னாண்
மணிமே கலையொடு மாதவி வாராத்
தணியாத் துன்பந் தலைத்தலை மேல்வரச்
சித்திரா பதிதான் செலலனுற் றிரங்கித்
தத்தரி நெடுங்கட் டன்மக டோழி
வயந்த மாலையை வருகெனக் கூஉய்ப
பயங்கெழு மாநக ரலரெடுத் துரையென
வயந்த மாலையு மாதவி துறவிக்
கயர்ந்துமெய் வாடிய வழிவின ளாதலின்
மணிமே கலையொடு மாதவி யிருந்த
வணிமலர் மண்டபத் தகவயிற் செலீஇ
யாடிய சாய லாயிழை மடந்தை
வாடிய மேனி கண்டுளம் வருந்திப்
பொன்னே ரனையாய் புகுந்தது கேளாய்

க. நாவலோங்கிய மாபெருந்தீவு-சம்புத்தீவு; இது, மகாதவீபம் நான்கனுள் ஒன்றாதலின், மாபெருந்தீவெனப்பட்டது; இக்கருத்து, "நால்வகை மரபின் மாபெருந்தீவும்" என்பதனாலு விளங்கும் (கூ - ம் காதை, ககூ).

ங. நாள்-நாளில். "தீவகச் சாந்திசெய் தரு நன்னாள்" என்பது (க - காதை, ஙரு) மூன்னும் வந்துள்ளது 'தீப சாந்திசெய்தரு மந்நாள்' எனவும் பாடம்.

ச. 'மாதவிபாரா' எனவும் பாடம்.

அ. கூஉய் - அழைத்து.

கூ. பயம் - பிரயோசனம். அலர் - பலரறிய நிகழ்த்துஞ்சொல். உரையென - (அலரை) மாதவிக்குச்சொல்லென்று சித்திராபதிசொல்ல. 'அலர்படுத்துரையென' எனவும் பாடம்.

கo. துறவிக்கு - துறவுக்கு.

கக. அயர்ந்து - மனந்தளர்ந்து. அழிவினள் - வருத்தமுடையாள்.

கங. மலர்மண்டபம் - பூத்தொடுக்கு மண்டபம். அகவயிற்செலீஇ - உள்ளிடத்தேசென்று.

கச. சாயல் - மென்மை. மடந்தை - மாதவியினது.

கரு. வாடியமேனி - தவத்தால்வாடிய மேனியை.

கசு. பொன் - திருமகள். 'பொன்னேரனையாய்' என்பது முதலியன வயந்தமாலைகூற்று. புகுந்தது - சம்பவித்ததை.

யுன்னே டிவ்வூ ருற்றதொன் றுண்டுகொல்
வேத்தியல் பொதுவிய லென்றிரு திறத்துக்
கூத்தும் பாட்டுந் தூக்குந் துணிவும்
பண்ணியாழ்க் கரணமும் பாடைப் பாடலுந்
தண்ணுமைக் கருவியுந் தாழ்தீங் குழலுங்
கந்துகக் கருத்து மடைநூற் செய்தியுஞ்
சுந்தரச் சுண்ணமுந் தூநீ ராடலும்
பாயற் பள்ளியும் பருவத் தொழுக்கமுங்
காயக் கரணமுங் கண்ணிய துணர்தலுங்
கட்டுரை வகையுங் கரந்துறை கணக்கும்
வட்டிகைச் செய்தியு மலராய்ந்து தொடுத்தலுங்
கோலங் கோடலுங் கோவையின் கோப்பும்
காலக் க  மங் கலைகளின் றுணிவு

கஎ. உற்றதொன்றுண்டுகொல் - உற்றதாகிய பகைமையொன்றுண்டோ. 'நின்னே டிவ்வூர் நின்றதொன் றுண்டுகொல்' எனவும் பாடம்.

கஅ. வேத்தியல் - அரசர்க்காடுங்கூத்து; பொதுவியல் - எல்லார்க்குமொப்ப ஆடுங்கூத்து; திறம் - வகை; "வேத்தியல் பொதுவிய லென்றிரு திறத்து, மாத்திரை யறிந்து மயங்கா மரபி, னாடலும்" என்பது **சிலப்பதிகாரம்**, ஊர்காண்காதை, கசஅ - கரு௦.

கக. பாட்டு - இசை. தூக்கு - தாளங்களின் வழியேவரும் செந்தூக்குமுதலிய எழுதூக்குக்கள்; "ஒருசீர் செந்தூ கிருசீர் மதலை, முச்சீர் துணிவு நாற்சீர் கோயி, லைஞ்சீர் நிவப்பே யறுசீர் கழாலே, யெழுசீர் நெடுந்தூக்கென்மனார் புலவர்" என்பதனாலுணர்க. துணிவு - தாளங்கள்; துணிந்து நிகழ்த்தப்படுதலின் இப்பெயர் பெற்றதுபோலும்.

உ௦. யாழ்க்கரணம் - யாழுக்குரியசெய்கை. 'யாழ்க்கானமும்' எனவும், 'யாழ்த்தானமும்' எனவும் பாடம். பாடைப்பாடல் - அகநாடகங்களுக்கும் புறநாடகங்களுக்கும் உரிய உருக்கள்.

உக. **கருவி** - வாச்சியம். குழல் - வங்கியம்.

உஉ. **கந்துகம்** - பந்து. மடைநூல் - பாகசாத்திரம்.

உங. சுந்தரச்சுண்ணம் - நிறத்தையுடைய வாசனைப்பொடி; "சுந்தரச்சுண்ணத்து" என்பது **சிலப்பதிகாரம்**, இந்திரவிழவூரெடுத்தகாதை, கருகு.

உச. பாயற்பள்ளி - பாயலிடம். பருவத்தொழுக்கம் - காலங்கட்கேற்ப ஒழுகும் ஒழுக்கம்.

உரு. காயக்கரணம் - காயத்தாற்செய்யப்படும் அறுபத்துநான்குவகைக் கரணம். கண்ணியதுணர்தல் - பிறர் கருதியதை அறிந்துகொள்ளுதல்.

உசு. கட்டுரைவகை - தொடுத்துக்கூறும் சொல்வன்மை. கரந்துறைகணக்கு - மறைந்துறையும்வகை; "அடிசில் வினையும யாழின் ற[illegible]றயுங், கடிமலர்ச் சகிப்பமுங் கரந்துறை கணக்கும், வட்டிகை வரைப்பும் வாக்கின் விகற்பமுங், கற்றவை யெல்லாங் காட்டுமி னமக்கென" என்பது **பெருங்கதை**, உஞ்சைக்காண்டம், யாழ்கைவைத்தது. 'கண்ணியதுணர்தலும்' எனவும் பாடம்.

உஎ. வட்டிகை - எழுதுகோல்; "வட்டிகைச் செய்தியின் வரைந்த பாவை" என்பர் பினனும்; ௬ - ம் காதை, ருசு.

உஅ கோலம் - அவ்வக்காலங்கட்கேற்பக்கொள்ளும் ஒப்பனை; "இரவிற்கோர், கோலங் கொடியிடையார் தாங்கொள்ள" என்பது **சிலப்பதிகாரம்**, கனாத்திறமுரைத்தகாதை, ரு - ௬. கோப்பு - கோத்தல். 'கோவையுங் கோப்பும்' எனவும் பாடம்.

உகூ. காலக்கணிதம் - சோதிடம்; "ஆயுள் வேதமுங் காலக் கணிதமும்" என்

நாடக மகளிர்க்கு நன்கனம வருத்த
வோவியச செந்நூ லுரைநூற் கிடக்கையுங்
கற்றுத் துறைபோகிய பொற்றொடி நங்கை
நற்றவம் புரிந்தது நாணுடைத் தென்றே
யலகின் மூதூ ரான்றவ ரல்லது
பலர்தொகு புரைக்கும் பண்பில வாய்மொழி
நயம்பா டில்லை நாணுடைத் தென்ற
வயந்த மாலைக்கு மாதவி யுரைக்குங்
காதல னுற்ற கடுந்துயர் கேட்டுப
போதல் செய்யா வுயிரொடு நின்றே
பொற்கொடி மூதூர்ப் பொருளுரை யிழந்து
நற்றொடி நங்காய் நாணுத் துறந்தேன்
காதல ரிறப்பிற் கனையெரி பொத்தி

பது சிலப்பதிகாரம், இந்திரவிழவூரெடுத்தகாதை, ௪௪. கலைகள் - பரதத்தையர்க்குரியவென்று நூல்களிற் கூறப்பட்டயாழ்வாசிணைமுதலிய அறுபத்துநான்கினுள் இப்பாட்டில முன்னும்பினனுங்கூறு தொழிந்த கலைகள்; பரதத்தையர்க்குரியகலைகள் அறுபத்துநான் கென்பதைப் பின்வருவனவற்றாலுணர்க; "யாழ்முதலாக வறுபத் தொருநான், கேரிள மகளிர்க் கியற்கையென் றெண்ணிக், கலையுற வகுத்த காமக் கேள்வி" என்பது பெருங்கதை, உஞ்சைக்காண்டம், நருமதைச்சம்பந்தம். "கலைவலார் நெஞ்சிற் காமமே போன்றும்" என்பது சீவகசிந்தாமணி, மண்மகளிலம்பகம், ௬. "பண்ணுங் கிளையும் பழித்த தீஞ்சொ, லெண்ணெண் கலையோ ரிருபெரு வீதியும்" என்பது சிலப்பதிகாரம், ஊர்காண்காதை, ௧௬௬-௧௬௭. "எண்ணான் கிரட்டியிருங்கலை பயின்ற, பண்ணியன் மடநதையர்" என்பது சிலப்பதிகாரம், அழற்படுகாதை, ௧௩௮-௧௩௯.

௩௦. நன்கனம்வருத்த - நன்றாகவருக்கப்பட்ட; "நாணமு முடையு நன்கன நீத்து" (௩-ம் காதை, ௮௮) எனவும், "நாவிடை நன்னூ னன்கன நவிற்றி" (௧௩-ம் காதை ௨௪) எனவும், "நாத்தொலை வின்றி நன்கன மறிந்தபின்" (௧௩-ம் காதை, ௨௬) எனவும் நன்கனமென்பது இப்பொருள்பட்டு இந்நூலுள்ளே பயின்றுவருதல் காண்க.

௩௧. ஓவியச்செந்நூல் - ஓவியநூல். இப்பெயருள்ள நூல் ஒன்றுண்டென்பதைப் பின்வரும வாக்கியத்தாலுணர்க. 'ஓவியநூலுள் நிற்றல இருத்தல கிடத்தல் இயங்குதலென்னும் இவற்றின் விகற்பங்கள் பலவுள' என்பது சிலப்பதிகாரம், வேனிற்காதை, ௨௫-௨௬; அடியார்க்குநல்லாருரை.

௩௨. துறைபோகிய - கற்றவகைகளிற் கைதேர்ந்த.

௩௩ - ௩௫. நற்றவமபுரிந்தது நாணுடைதென்று பலர் கூடி உரைக்கும வாய்மொழியென்க.

௩௬. நயம்பாடில்லை - அழகுண்டாதலில்லை; 'நலம்பாடில்லை' எனவும பாடம.

௩௮. காதலன - கோவலன். கடுந்துயர் - மிக்கதுயர்; என்றது கொலையுண்டதை; "கணவற் குற்ற கடுந்துயர்" (௨-ம்காதை, ௫௦), "காதலனுற்ற கடுந துயர்" (௨-ம் காதை, ௬௩) என்பர் பின்னும். "கண்டா ளவன்றனைக் காணக் கடுந்துயரம்" என்றார் சிலப்பதிகாரத்தும்; ஊர்சூழ்வரி, ௩௮.

௪௦. பொருளுரை - புகழுரை.

௪௧. நங்காயென்றது, வயந்தமாலையை.

௩௮ - ௪௧. கேட்டு நின்று இழந்து துறந்தேனென்க.

௪௨. கனையெரி - மிக்கநெருப்பு; "கனையெரியுரறிய மருங்கும்" என்பது புறநானூறு, ௨௩. பொத்தி - மூட்டி;

ஊதுலைக் குருகி னுயிர்த்தகத் தடங்கா
தின்னுயி ரீவ ரீயா ராயி
னன்னீர்ப் பொய்கையி னளியெரி புகுவர்
நளியெரி புகாஅ ராயி னன்பரோ
டுடனுறை வாழ்க்கைக்கு நோற்றுடம் படுவர்
பத்தினிப் பெண்டிர் பரப்புநீர் ஞாலத்
தத்திறத் தாளு மல்லளெம் மாயிழை
கணவற் குற்ற கடுந்துயர் பொறாஅண்

"கானவர் பொத்திய ஞெலிதீ விளக்கத்து" என்பது **புறநானூறு**, உ௪எ.

௪௩. ஊதுலைக் குருகி னுயிர்த்து-உலையிலூதும் துருத்திமூக்கைப்போலவே அழலெழவுயிர்த்து; "காதலர்ப் பிரிந்த நோயோ டேங்கனென, றூதுலைக் குருகி னுயிர்த்தன ரேங்கி" (அந்திமாலைச் சிறப்புச்செய் காதை, ௫அ - ௫௯) என்றும், "காதலற் கெடுத்த நோயோ டேங்கனன், றூதுலைக் குருகி னுயிர்த்தனள்" (அழற்படுகாதை, ௧௫௧ - ௧௫௨) என்றும் **சிலப்பதிகாரத்து** வருதல்காண்க.

௪௪. இன்னுயிரீவர் - இனியஉயிரைக் கொடுப்பார்; என்றது, காதலரிறந்தமை கேட்டபொழுதே இறப்பரென்றபடி; பாண்டியன் **நெடுஞ்செழியனிறப்ப** அவன்மனைவியாகிய பெருங்கோப்பெண்டும் உடனே இறந்தசரித்திரம் இங்கே அறியத்தக்கது; அதுவருமாறு:— "அரிமா னேந்திய வமளிமிசை யிருந்த, திருவீழ் மார்பிற் றென்னர் கோமான், றயங்கிணர்க் கோதை தன்றுயர் பொறாஅன், மயங்கினன் கொலலெனை மலரடி வருடித், தலைத்தா ணெடுமொழி தன்செவி கேளாள், கலக்கங் கொள்ளாள் கடுந்துயர் பெறாஅண், மன்னவன் செலவுழிச் செல்க யானெனத், தனனுயிர் கொண்டவ னுயிர்தே டினள்போற், பெருங்கோப் பெண்டு மொருங்குடன் மாய்ந்தனள்" என்பது, **சிலப்பதிகாரம்**, காட்சிக்காதை, எஅ - அ௬. இவ்வாறிறத்தலை மூதானந்த மென்பர்; "கயலேர் கண்ணி கணவ னொடு முடிய, வியனெறிச் செலவோர் வியந்துரைத் தன்று".— "ஒருயி ராக வுணர்க வுடன்கலந்தார்க, கிருயி ரென்ப ரிடைதெரியார் - போரில, விடனேந் தும்வேலோற்கும் வெள்வளையி னாட்கு, முடனே யுலந்த துயிர்" என்பது **புறப்பொருள்வெண்பாமாலை**, பொதுவியற் படலம், ௯.

௪உ - ௪௫. நளியெரி - செறிந்தநெருப்பு; "நன்மர னளிய நறுந்தண் சாரல்" என்பது **புறநானூறு**, ௧௫௦. காதலரிறப்பிற் பொய்கையிற்புகுவதுபோலச் செறிந்த நெருப்பிற்புகுவர் பத்தினிப்பெண்டிர்; "பெருங்கோட் கணவன் மாய்ந் தென வரும்பற, வள்ளித ழவிழ்ந்த தாமரை, நள்ளிரும் பொய்கையுந் தீயுமோ ரற்றே" என்பது **புறநானூறு**, உ௪௬. கணவனை யிழந்த பதினிப்பெண்டிர்க்குப் பொய்கையுந் தீயும் ஒருதன்மையின வென்றபடி.

௪௪ - ௪௫. பின்வரும்வாக்கியத்தில் இவ்வடிகளின்கருத்து அமைந்திருத்தல் காண்க; "காதலன் வீயக் கடுந்துய ரெய்திப், போதல் செய்யா வுயிரொடு புலந்து, நளியிரும் பொய்கை யாடுநர் போல, முளியெரி புகூஉ முதுக்குடிப் பிறந்த, பதினிப் பெண்டிர்"; (**மணிமேகலை**, ௧அ - ம் காதை, ௧௧ - ௧௫).

௪எ. நோற்றுடம்படுவர் - கைம்மை நோன்பை நோற்று உடம்பைவருத்துவார். கைம்மைநோன்பு இன்னதென்பதைப் பின்வரும் மேற்கோள்களாலுணர்க. "வெள்ளெட் சாந்தொடு புளிப்பெய் தட்ட, வேளை வெந்தை வல்சி யாகப், பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியு, முயவற் பெண்டிர்" என்பது **புறநானூறு**, உ௪௬. "இன்புறுதங்கணவ ரிடரெரி யகமூழ்கத், துன்புறு வனநோற்றுத் துயருறு மகளிரைப்போல்" என்பது **சிலப்பதிகாரம்**, துன்பமாலை. 'நோற்றுடன்படுவர்' என்றும் பாடம்.

௪அ. பரப்புநீர் - கடல்.

௪௯. ஆயிழை - கண்ணகி.

மணமலி கூந்தல் சிறுபுறம் புதைப்பக்
கண்ணீ ராடிய கதிரிள வனமுலை
திண்ணிதிற் றிருகித் தீயழற் பொத்திக்
காவலன் பேரூர் கனையெரி யூட்டிய
மாபெரும் பத்தினி மகண்மணி மேகலை
யருந்தவப் படுத்த லல்லதி யாவதுந்
திருந்தாச் செய்கைத் தீத்தொழிற் படாஅ
ளாங்கன மன்றியு மாயிழை கேளா
யீங்கிம் மாதவ ருறைவிடம் புகுந்தேன்
மறவணை நீத்த மாசறு கேள்வி
யறவண வடிக ளடிமிசை வீழ்ந்து
மாபெருந் துன்பங் கொண்டுள மயங்கிக்
காதல னுற்ற கடுந்துயர் கூறப்
பிறந்தோ ருறுவது பெருகிய துன்பம்
பிறவா ருறுவது பெரும்பே ரின்பம்

௫௧. சிறுபுறம் - பிடர்; "செயத்தகு கோவையிற் சிறுபுற மறைத்து" என்பது சிலப்பதிகாரம், கடலாடுகாதை, ௧௦௨. புதைப்ப - மறைப்ப; கூந்தல் அவிழ்ந்துகிடப்பவென்றபடி.

௫௨ - ௫௩. முலைதிருகி - இடமுலையை வலக்கையாற்றிருகி; "இடமுலை கையாற் றிருகி" என்பது சிலப்பதிகாரம், வஞ்சினமாலை, ௪௩. அழற்பொத்தி - அழலைமூட்டி.

௫௪. காவலன்பேரூர் - பாண்டியனது பெரிய ஊராகிய மதுரையை.

௫௫. மாபெரும்பத்தினி - கண்ணகி.

௫௬. அருந்தவப்படுத்தலல்லது - செய்தற்கரிய தவவழியிற்சேர்த்தலையன்றி. யாவதும் - சிறிதும். 'அருந்தவம்படுத்தலல்லது' எனவும் பாடம்.

௫௭. திருந்தாச்செய்கைத் தீத்தொழில் - பரத்தைமைத்தொழில்; "கள்ளும் பொய்யுங் காமமுங் கொலையு, முள்ளக் களவுமென் றுரவோர் துறந்தவை, தலைமையாக் கொண்டநின் றன்மையில் வாழ்க்கை" என்று சித்திராபதியைநோக்கி இராசமாதேவி பரத்தைமையையிழித்துச்சொல்லியதாகப் பின்னுங் கூறுவர்; ௨௪-ம் காதை, ௭௭ - ௭௯.

௫௧ - ௫௭. மணிமேகலை தவவழியிற் சேர்க்கப்படுவாளன்றிப் பரத்தைமைத் தொழிலிற் சேர்க்கப்படுவாளல்லள்; இப்படியே, "மணிமேகலையை வான்றுயருறுக்குங், கணிகையர் கோலங் காணாதொழிக" என்று மாதவி கூறியதாகச் சிலப்பதிகாரத்துங் கூறினார்; நீர்ப்படைக்காதை, ௧0௫ - ௧0௬.

௫௯. மாதவர் - சங்கத்தார். 'உறைவிடம் புகுந்து' எனவும் பாடம்.

௬௦. மறவணைநீத்த - பாவத்தன்மைகளைத் துறந்த; பாவங்கள் பத்துவகைப்படும்; காயத்திற்றோன்றுவன மூன்றும், சொல்லிற்றோன்றுவன நான்கும், உள்ளத்திற் றோன்றுவன மூன்றுமென. இதனை, "தீவினை யென்பது யாதெனவினவின், சொலையே களவே காமத் தீவிழைவு, வுலையா வுடம்பிற் றோற்றவை மூன்றும், பொய்யே குறளை கடுஞ்சொற் பயனில், சொல்லெனச் சொல்லிற் றோற்றுவ நான்கும், வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சியென், றுள்ளந் தன்னி லுருப்பன மூன்றுமெனப், பத்துவகையால்" என்பதனாலுணர்க; ௨௪-ம் காதை, ௧௨௪ - ௧௩௨; ௩0 - ம் காதை, ௬௪ - ௭௨.

௬௧. 'அறவண வடிக ளடியிணை வீழ்ந்து' எனவும் பாடம்.

௬௩. கூற - அறவணவடிகட்குக்கூற. இனி, துக்கம், துக்கநிவாரணம், துக்கோற்பத்தி, துக்கநிவாரணமார்க்கமென்னும் வாய்மைகள் நான்கும் முறையே கூறப்படும்.

௬௪. பிறந்தோருறுவது பெருகிய துன்பம் - துக்கம்.

௬௫. பிறவாருறுவது பெரும்பேரின்பம் - துக்கநிவாரணம்.

பற்றின் வருவது முன்னது பின்ன
தற்றே ருறுவ தறிகென் றருளி
யைவகைச் சீலத் தமைதியுங் காட்டி
யுய்வகை யிவைகொளென் றுரவோ னருளினன்
மைத்தடங் கண்ணார் தமக்குமெற் பயந்த
சித்திரா பதிக்குஞ் செப்பு நீயென
வாங்கவ னுரைகேட் டரும்பெறன் மாமணி
யோங்குதிரைப் பெருங்கடல் வீழ்த்தோர் போன்று
மைய னெஞ்சமொடு வயந்த மாலையுங்
கையற்றுப் பெயர்ந்தனள் காரிகை திறத்தென.

ஊரலருரைத்தகாதை முற்றிற்று.

௬௬ பற்றின் வருவது முன்னது - துக்கோற்பத்தி; "பற்றெனப் படுவது பசைஇய வறிவே" (௩௦ - ம் காதை, ௬௨.) என்று பின்னர்க்கூறுவர்.

௬௬ - ௬௭. பின்னது அற்றே றுறுவது - துக்கநிவாரணமார்க்கம்.

௬௭. அறிகென்றருளி - துக்கமுதலிய வாய்மை நான்கினையு மறிந்துகொள்வா யென்றுபதேசித்து, இப்படியே, "துன்பந் தோற்றம் பற்றே காரணம், இன்பம் வீடே பற்றிலி காரணம், மொன்றிய வொழியே வாய்மை நான்காவது" என்பர் பின்னும்; ௩௦ - ம் காதை, ௧௮௬ - ௧௮௮. வாய்மை, சத்திய மென்று வழங்கப்படும்.

௬௮. ஐவகைச்சீலம் - காமம், கொலை, கள், பொய், களவு என்னும் இவைவைந்தையும் முற்றத்துறத்தல்; "கள்ளும் பொய்யுங் காமமுங் கொலையு, முள்ளக் களவுமென் றுரவோர் துறந்தவை" என்பர் பின்னும்; (௨௪ - ம்காதை, ௭௭ - ௭௮) "சீல நீங்காச் செய்தவத்தோர்க்கு" (௨௧-ம் காதை, ௬௭), "சீலந் தாங்கித் தானந் தலைநின்று" (௨௪ - ம் காதை, ௧௩௮), "தானந் தாங்கிச் சீலந் தலைநின்று" (௩௦-ம் காதை, ௧) என இந்நூலுள்ளே சீலமென்பது பயின்றுவருதல் காண்க.

௬௯. உய்வகை இவைகொளென்று - பிறப்பிறப்பினின்றும் தப்பும்வகை நால்வகைவாய்மையும் ஐவகைச் சீலமுமாகும்; இவற்றைக்கொள்வாயாகவென்று. உரவோன் - அறவணவடிகள்.

௬௬ - ௬௯. வாய்மையும் சீலமும் இன்றியமையாதனவென்பதை, "வழுவாச் சீலம் வாய்மையிற் கொண்ட, பான்மையின்" (௨௧ - ம் காதை, ௨௦) என்பதனாலுணர்க.

௭௦. மைத்தடங்கண்ணார் - ஆயத்தார்.

௭௨ - ௭௩. பெறுதற்கரிய மாணிக்கத்தைப் பெரியகடலில் வீழ்த்தியவர்களையொத்து; "ஆங்கது கேட்ட வரசனு நகரமு, மோங்கிய நன்மணி யுறுகடல் வீழ்ந்தோர், தமமிற் றுன்பந் தாமணி யெய்த" என்பது சிலப்பதிகாரம், வரந்தருகாதை, ௨௧ - ௩௦.

௭௫. கையற்று - செயலற்று. காரிகைதிறத்து - மாதவியிடத்தினின்றும்.

௧ - ௭௫. நன்னாளில் மாதவியாராகத் துன்பம் மேலவரச் சித்திராபதி இரங்கி வயந்தமாலையைக்கூவி அவளை மாதவிக்கு உரையென்றுசொல்ல, வயந்தமாலை, மாதவியிருந்த மண்டபத்துச்சென்று கண்டு, வருந்தி, அன்னையாய், கேளாய், உண்டுகொல்! பண்பிலவாய்மொழி நாணுடைத்தென்ற வயந்தமாலைக்கு உரைக்கும் மாதவி, கேட்டு நின்று இழந்துநாணுத்துறந்தேன்; மணிமேகலை தீத்தொழிற்படாஅள்; இன்னுங்கேளாய்; புகுந்து வீழ்ந்து மயங்கித் துயரைக்கூற, உரவோன் அறிகென்றருளிக் காட்டி இவற்றைக் கொள்ளென்றருளினன்; இதனைக் கண்ணார்தமக்கும் சித்திராபதிக்கும் நீ செப்பென்றுசொல்ல, வயந்தமாலையுங்கேட்டு மணியைக் கடலில்வீழ்த்தோர்போன்று கையற்றுப் பெயர்ந்தனளென முடிக்க.

மூன்ருவது

# மலர்வனம்புக்க காதை.

[மூன்ருவது மலர்வனம்புக்கபாட்டு.]

வயந்த மாலைக்கு மாதவி யுரைத்த
வுயங்குநோய் வருத்தத் துரைமுன் றோன்றி
மாமலர் நாற்றம் போன்மணி மேகலைக்
கேது நிகழ்ச்சி யெதிர்ந்துள தாதலிற்
றந்தையுந் தாயுந் தாநனி யுழந்த
வெந்துய ரிடும்பை செவியகம் வெதுப்பக்
காத னெஞ்சங் கலங்கிக் காரிகை
மாதர் செங்கண் வரிவனப் பழித்துப்
புலம்புநீ ருருட்டிப் பொதியவிழ் நறுமல
ரிலங்கிதழ் மாலையை யிட்டுநீ ராட்ட
மாதவி மணிமே கலைமுக நோக்கித்
தாமரை தண்மதி சேர்ந்தது போலக்

க - உ. உரைத்த உரைமுன் றோன்றி - சொல்லிய சொல்லினிடமாக உதித்து.

ச. கன்மங்களாகிய காரணங்கள் தத்தமபயனைக் கொடுத்தற்குத் தோற்றுதலை, 'ஏது நிகழ்ச்சி' என்பது பௌத்த நூல் வழக்கு; இதனை ஹேதுப்ரபவ தர்மமென்பர்; "ஏது நிகழ்ச்சி யீங்கின் றாதலின்" (கூ-ம் காதை - ருக) எனவும், "ஏது நிகழ்ச்சி யாவும பலவுள" (கஉ-ம் காதை - கபரு) எனவும், "ஏது நிகழ்ச்சி யாவும் பலவுள" (உக-ம் காதை - கசு0) எனவும், இந்நூலுள்ளே இப்பெயர் பின்பும்வருதல்காண்க. இஃது 'ஏது' எனவும் வழங்கும். எதிர்ந்துளதாதலின் - தோற்றியதாதலால்; "சுணங்கெதிரிள முலை" என்பது **மதுரைக்காஞ்சி**, சகக.

உ - ச. மணிமேகலைக்கு ஏதுநிகழ்ச்சி மலர் நாற்றம்போல் தோன்றி எதிர்ந்துளதாதலினென இயைக்க.

ரு. தந்தையுந் தாயும் - கோவலனும் கியும. உழந்த - வருந்திய. 'தாழ்துய ருழந்த' என்றும் பாடம.

சு. வெதுப்ப - சுட.

எ. காரிகை - மணிமேகலை.

அ. மாதர்-காதல்; உரிச்சொல்; "மாதர் காதல்" என்பது **தொல்காப்பியம்**, சொல்லதிகாரம், கூஉஅ. வரிவனப் பழித்து - மையெழுதிய அழகைச்சிதைத்து; "வரிவனப் புற்ற" என்பது **புறநானூறு**, கூகூ. 'வரியனப் பழித்து' என்றும் பாடம்.

கூ. புலம்புநீ ருருட்டி-வருத்தத்தாலுண்டாகிய கண்ணீரை உதிர்த்து 'புலம்புநீ ரூட்டி' என்றும் பாடம்.

எ - க0. காரிகை அழித்து மாலையை நீராட்ட. 'இலங்குதண் மாலையை யிட்டுநீ ராட்ட' என்றும பாடம்.

கஉ. தாமரை - முழுவாய். மதி - மதியை. தாமரைமலர் மாதவிகைக்கும், மதி மணிமேகலைமுகத்திற்கும் உவமை.

காமர் செங்கையிற் கண்ணீர் மாற்றித்
தூநீர் மாலை தூத்தகை யிழந்தது
நிகர்மலர் நீயே கொணர்வா யென்றலு
மதுமலர்க் குழலியொடு மாமலர் தொடுக்குஞ்
சுதமதி கேட்டுத் துயரொடுங் கூறுங்
குரவர்க் குற்ற கொடுந்துயர் கேட்டுத்
தணியாத் துன்பந் தலைத்தலை யெய்து
மணிமே கலைதன் மதிமுகந் தன்னு
ளணிதிகழ் நீலத் தாயமல ரோட்டிய
கடைமணி யுகுநீர் கண்டன ளாயிற்
படையிட்டு நடுங்குங் காமன் பாவையை
யாடவர் கண்டா லகறலு
பேடிய ரன்றோ பெற்றியி னின்றிடி
னாங்கன மன்றியு மணியிழை கேளா
யீங்கிந் நகரத் தியான்வருங் காரண
பாரா வாரம் பல்வளம் பழுநிய
காராளர் சண்பையிற் கௌசிக னென்போ
னிருபிறப் பாள னொருமக ளுள்ளே
னொருதனி யஞ்சே னோரா நெஞ்சமோ
டாரா மத்திடை யலர்கொய் வேன்றனை

கரு. காமர் - விருப்பம்.

க௪. தூநீர் மாலை தூத்தகை யிழந்தது - தூய நீர்மையையுடைய மாலையானது கண்ணீரில் நனைந்து தூய தன்மையை யிழந்தது.

கரு. நிகர்மலர் - ஒளியையுடைய மலர்; "நீர்வார் நிகர்மலர் கடுப்ப" என்பது **அகநானூறு**, கக. "அரும்பவிழ் முல்லை, நிகர்மலர் நெல்லொடு தூஉய்" என்பது **சிலப்பதிகாரம்**, கனாத்திறமுரைத்த காதை, க - உ

கசு. மதுமலர்க்குழலி - மணிமேகலை.

கஅ. குரவர்க்கு - தாய் தந்தையர்க்கு.

உஉ. கடைமணி யுகுநீர் - கண்மணிக் கடையினின்றும் உகுகின்ற நீர், "ஆவின் கடைமணி யுகுநீர் நெஞ்சுசுட" என்பது **சிலப்பதிகாரம்**, வழக்குரைகாதை, ருச.

உ௩. படையிட்டுக் காமன் நடுங்கும் - படையை எறிந்துவிட்டுக் காம வான்.

உ௪. உண்டோ, ஓ - எதிர்மறை.

உரு. பெற்றியின் - தங்கள் இயற்கைத்தன்மை திரியாமல்; நின்றிடின் - (இவளை விரும்பாது) நிற்பாராயின்.

உஎ - உகூ. யான்வருங் காரணத்தைக் கேளாய்.

உஅ - ௩க. பாராவாரம் - கடல். பழுநிய - முதிர்ந்த; "பெருவளம் பழுநி" என்பது **புறநானூறு**, ககரு. 'பாராவாரப் பல்வளம் பழுநிய' என்றும் பாடம். காராளர் - பூவைசியர். சண்பை - ஒரு நகரம்; சீகாழியுமாம், அங்கநாட்டிற் கங்கைக் கரையிலுள்ளதாகிய சம்பையென்னு நகரமுமாம; இவ்வுரைக்குக் காராளரென்பதனைக் கராளரென்பதன் விகாரமாகக் கொள்க; கராளர் - ஒரு சாதியார்; "காராளர் சண்பையிற் கௌசிகன் மகளே" என்பா பின்னும்; எ-ம் காதை, க0உ.

௩க. ஒருதனி - ஒப்பில்லாததனி.

௩உ. ஆராமம் - உபவனம்.

மாருத வேகனென் பானோர் விஞ்சையன்
றிருவிழை மூதூர் தேவர்கோற் கெடுத்த
பெருவிழாக் காணும் பெற்றியின் வருவோன்
றாரன் மாலையன் றமனியப் பூணினன்
பாரோர் காணாப் பலர்தொழு படிமைய
னெடுத்தன னெற்கொண் டெழுந்தனன் விசும்பிற்
படுத்தன னாங்கவன் பான்மைய னாயினேன்
ஆங்கவ னீங்கெனை யகன்றுகண் மாறி
நீங்கினன் றன்பதி நெட்டிடை யாயினு
மணிப்பூங் கொம்பர் மணிமே கலைதான்
றனித்தலர் கொய்யுந் தகைமைய ளல்லள்
பன்மல ரடுக்கிய நன்மரப் பந்த
ரிலவந் திகையி னெயிற்புறம் போகி

௩௩. விஞ்சையன் - வித்தியாதரன்.

௩௪. மூதூர் - காவிரிப்பூம்பட்டினம்.

௩௬ - ௩௭. தாரன் - பூமாலையையுடையவன்; மாலையன் - மணிமாலையையுடையவன்; 'தார மாலையன்' எனப் பாடமோதி, மந்தாரமாலையையுடையவனென்னுமமையும். தமனியப் பூணினன் - பொற் பூணினையுடையவன்; பாரோர் காணா - மக்கள் கண்ணிற்குப் புலப்படாத, பலர் தொழுபடிமையன் - தேவர் பலருந் தொழுந் தெய்வவடிவையுடையன்; படிமை - தெய்வவடிவு "தாரன மாலையன் றமனியப் பூணினன், பாரோர் காணாப் பலர்தொழு படிமையன்" என இவ்வடிகளே **சிலப்பதிகாரத்**தும் வருதல காண்க; அடைக்கலக்காதை, ௧௩௭ - ௧௩௮.

௩௭ - ௩௩. படிமையனும் வருவோனுமாகிய விஞ்சையன்.

௩௮. எடுத்தனன் - எடுத்து. விசும்பிலெழுந்தனனென்க.

௩௯. படுத்தனன் - அகப்படுத்திக் கொண்டான். அவன் பான்மையனாயினேன் - அவனுடைய இன்பத்தின் பகுதியையுடையேனாயினேன்; "பனியிரு விசும்பிற் றேவர் பான்மையிற் றென்று சொன்னான்" என்பது **சீவகசிந்தாமணி**, காந்தருவதத்தையாரிலம்பகம், ௬௧.

௪௦ - ௪௧. ஆங்கவன் - மாருதவேகன். ஈங்கு - இந்நகரத்திடத்து. கண்மாறி எனை அகன்று நீங்கினன் - விழித்த கண் இமைக்கும் அளவிலே மறைந்து என்னைவிட்டு நீங்கினன. கண்மாறல் - விழித்த கண் இமைக்குமளவிலே மறைதல்; "கண்மாறாடவ ரொடுக்க மொற்றி" என்பது **மதுரைக்காஞ்சி**, ௬௪௨. தன்பதி நெட்டிடையாயினும் நீங்கினனெனக் கூட்டுக. சுதமதியை மாருதவேகன இந்நகரத்து விட்டு நீங்கினானென்பதை, "அஞ்செஞ் சாயல ராந்தா ணத்துளோர், விஞ்சைய னிட்ட விளங்கிழை யென்றே, கலலென் பேரூர்ப் பலவோ ருரையினை" என்று உதயகுமரன கூறியவாற்றானு முணர்க; ௫ - ம காதை, ௨௩ - ௨௫. 'ஆங்கவனென்னை யகன்று' என்றும பாடம்.

௪௨. மணிப்பூங் கொம்பர் மணிமேகலை - மாணிக்கப் பூங்கொம்பு போலும மணிமேகலை; எழுவாய்.

௪௩. 'தன்மைய ளலலள்' என்றும் பாடம்.

இனிப் பூக்கொய்தற்குரிய இடங்கூறுகின்றாள்.

௪௪ - ௪௫. பலமலர்களை நிரைத்த நல்ல மரநிழலையுடைய இலவந்திகையினது மதிலின் புறத்தே சென்றால; மரப்பந்தர் - சோலையுமாம். இலவந்திகை - யந்திர வாவி; இதனை, "நிறைக்குறி னிறைத்துப் போகுறிற் போகும், பொறிப்படை யமைந்த பொங்கில வந்திகை" என்பதனா லுணர்க; இது

# ௩.—மலர்வனம்புக்ககாதை.

னுலக மன்னவ னுழையோ ராங்குளர்
விண்ணவர் கோமான் விழாக்கொ ணன்னாண்
மண்ணவர் விழையார் வானவ ரல்லது
பாடுவண் டிமிரா பன்மரம் யாவையும்
வாடா மாமலர் மாலைக டூக்கலிற்
கைபெய் பாசத்துப் பூதங் காக்குமென்
றுய்யா னத்திடை யுணர்ந்தோர் செல்லார்
வெங்கதிர் வெம்மையின் விரிசிறை யிழந்த
சம்பாதி யிருந்த சம்பாதி வனமுந்
தவாநீர்க் காவிரிப் பாவைதன் றாதை
கவேர னிருந்த கவேர வனமு
மூப்புடை முதுமைய தாக்கணங் குடைய
யாப்புடைத் தாக வறிந்தோ ரெய்தா

**பெருங்கதை**, உஞ்சைக்காண்டம், உவந்தவை காட்டல். 'இலவந்திகை - நீராவியைச்சூழ்ந்த வயந்தச்சோலை; அஃது அரசனும் உரிமையு மாடும் காவற்சோலை' என்பர் **அடியார்க்குநல்லார்**. "பன மல ரடுக்கிய நன்மரப் பந்த,ரிலவந் திகையி னெயிற்புறம் போகி" என இவ்வடிகளே, **சிலப்பதிகாரத்**தும் வந்திருத்தல் காண்க; நாடுகாண்காதை, ௩0 - ௩௧.

௪௬. உலகமன்னவன் - சோழன். உழையோர் பக்கத்திலுள்ளோர், உழை - பக்கம்.

௪௭. நன்னாள் - நன்னாளில்.

௪௮. வானவரல்லது - தேவர் விரும்புதலையன்றி; அல்லது மண்ணவர் விழையாரென இயைக்க.

௪௯. தேவர்கள் விரும்பினமையால மரங்களில வண்டுகள் இமிராவாயின; "சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தட், பெருந்தண் மிலைந்த சென்னியன்" என்பது **திருமுருகாற்றுப்படை**, ௪௩ - ௪௪.

௪௯-௫0. மரம் யாவையும மாலைகளைத தூக்கலின்; தூக்குதல் - தொங்கவிடல. வாடாத மலர்மாலைகள், தேவர்களால நிருமிக்கப்பட்டன; "வாடா மாலை வார்தளிர்ப் பிண்டி வாம" எனபது சீவக **சிந்தாமணி**, முத்தியிலம்பகம், ௪௨0.

௫௧. கைபெய்பாசம் - கையிலிட்டுக் கொண்ட பாசம். மரங்கள் வாடா மாலைகளைத் தூக்குதலால பூதங்காத்தல உணரப்பட்டது.

௫௨. உய்யானம் - உத்யானம்; அரசர் விளையாடுங் காவற்சோலை; "உய்யானத்தி னுறுதுணை மகிழ்ச்சியும்" என்பது **சிலப்பதிகாரம்**, ஊர்காண்காதை, ௧௨௭.

௫௩. வெங்கதிர் - சூரியன்.

௫௪. சம்பாதி - சடாயுவி னுடன்பிறந்தவன். **புள்ளிருக்குவேளூர்**, சம்பாதிபுரமென்று வழங்கப்படுதலாலும், காவிரிப்பூம்பட்டினத்திற்குச் சமீபமாக இருத்தலாலும், அது முற்காலத்துச் சம்பாதிவனமாக விருத்தல் கூடுமென்பது ஊகிக்கப்படுகின்றது.

௫௫ - ௫௬. தாதையாகிய கவேரன். "கவேர கன்னிப் பெயரொடு விளங்கிய, தவாக்களி மூதூர்" என்பர் பின்னும்; ௯ - ம் காதை, ௫௨ - ௫௩.

௫௭. முதுமைய முதுமையையுடைய. தாக்கணங்கு - தீண்டிவருத்துந் தெய்வம்; "தாக்கணங்கு, தானைக்கொண்டன்ன துடைத்து" என்பது **திருக்குறள்**, ௧0௮௨. "வெம்முது பேய்க்கென னுயிர் கொடுத்தேன்" என்று பின்னும் வருதல் காண்க; ௬ - ம் காதை, ௧௩0.

௫௪ - ௫௭. சம்பாதிவனமும் கவேரவனமும தாக்கணங்குடையன.

௫௮. யாப்புடைத்தாக - உறுதியுடைத்தாக; யாப்பு - உறுதி; "யாப்பறை

சருளு மன்பு மா௫ருயி ரோம்பு
மொருபெரும் பூட்கையு மொழியா நோன்பிற்
பகவன தாணையிற் பன்மரம் பூக்கு
முவவன மென்பதொன் றுண்டத னுள்ளது
விளிப்பறை போகாது மெய்புறத் திடூஉம்
பளிக்கறை மண்டப முண்டத னுள்ளது
தூநிற மாமணிச் சுடரொளி விரிந்த
தாமரைப் பீடிகை தானுண் டாங்கிடி
னரும்பவிழ் செய்யு மலர்ந்தன வாடா
சுரும்பின மூசா தொல்யாண்டு கழியினு
மறந்தே னதன்றிற மாதவி கேளாய்
கடம்பூண்டோர் தெய்வங் கருத்திடை வைத்தோ
ராங்கவ ரடிக்கிடி னவரடி தானுறு
நீங்கா தியாங்கணு நினைப்பில ராயிடி

மாக்க ளியல்பிற் கொள்ளார்" என்பது **சிலப்பதிகாரம்**, ஊர்காண்காதை, ௩0.

௫௯. அருள் - அன்புகாரணததால் தோன்றும்அளி. அன்பு - அருட்கு முதலாகி மனத்தின்கண் நிகழும் நேயம்.

௬0. பூட்கை - மேற்கோள்; "அறத்தாறு நுவலும் பூட்கை" என்பது **புறநானூறு**, ௯.

௬௧. பகவனது ஆணையின் - புததனது கட்டளையினுலே.

௬௨. உள்ளது - உள்ளிடத்தது.

௬௩ - ௬௪. விளிப்பு அறைபோகாது - ஓசை அறைபோகாமல், மெய்புறதது இடூஉம் - தன்னைச்சார்ந்தா ருடம்பைமட்டும் புறததே தோன்றுவிககும், பளிககறைமண்டபம் - பளிக்குமணடபம்; தன்னுட் புகுந்தவர்களுடைய ஓசையை வெளிப்படுததாமல அவர்களுருவத்தை மட்டும் வெளிப்படுத்துவதென்று அப்பளிங்கு மண்டபததின் தன்மைகூறியவாறு. விளிப்பறை - இருபெயரொட்டுமாம்; அறை - ஓசை.

௬௨ - ௬௪. அதன உள்ளதாகிய மண்டபமெனக்கூட்டுக.

௬௪. அதனுள்ளது - அம்மண்டபததின் உள்ளிடத்தது.

௬௫ - ௬௬. மணிச்சுடரொளிவிரிந்த தாமரைப்பீடிகை - மாணிக்கச்சோதி பரந்த பதுமபீடம். என்றது புத்தன் பாதபீடததை; புததன் பாததததை மணிபதமமென்றலும், அதனை வழிபடுவோர் அதுபற்றி, 'ஓம் மணிபதம்மேஹூம்' என்ற மந்திரததை ஜபிததலும் பௌததமத ஸம்பிரதாயம்.

௬௪ - ௬௬. உள்ளதாகிய பீடிகையென்க.

௬௬. ஆங்கு இடின் - அப்பீடத்தே இட்டால.

௬௭. அவிழ்செய்யும் - அவிழ்தலைச்செய்யும்.

௬௭ - ௬௮. தொலயாண்டு கழியினும் வாடா மூசா வென்க. காலம் தொனமைததாதலின், 'தொலயாண்டு' எனறார். 'சுரும்புமூசா' எனறும் பாடம்.

௬௯. 'மறந்தே னிதனறிறம்' எனறும் பாடம.

௭0. கடம்பூண்டு - முறைமையால மேற்கொணடு; "நிழல்வாய் நேமி, கடமபூண்டுருட்டுங் கௌரியர்" எனபது **சிலப்பதிகாரம்**, அடைக்கலசகாதை, ௧ - ௨. ஓா தெய்வம - ஒரு தெய்வததை.

௭௧. அவர் - அததேவருடைய, அடிக்கு ஆஙகு இடின - அடியின்பொருட்டு (மலரை) அபபீடத்தே இட்டால், அவரடிதானுறும் - (அம்மலர்) அததேவருடைய அடியை அடையும்.

௭௨. நினைப்பிலராய் இடின் யாங்கணும நீங்காது.

னீங்கிதன் காரண மென்னை யென்றியேற்
சிந்தை யின்றியுஞ் செய்வினை யுறுமெனும்
வெந்திற னோன்பிகள் விழுமங் கொள்ளவுஞ்
செய்வினை சிந்தை யின்றெனின் யாவது
மெய்தா தென்போர்க் கேது வாகவும்
பயங்கெழு மாமல ரிட்டுக காட்ட
மயன்பண் டிழைத்த மாபின தததா
னவ்வன மல்ல தணியிழை நின்மகள்
செவ்வனஞ் செல்லுஞ் செமமை தானிலண்
மணிமே கலையொடு மாமலர் கொய்ய
வணியிழை நல்லா யானும் போவலென்
றணிப்பூங் கொம்ப ரவளொடுங் கூடி
மணித்தேர் வீதியிற் சுதமதி செல்வுழி இச்
சிமிலிக் கரண்டைய னுழைகோற் பிரம்பினன்
றவலருஞ் சிறப்பின ராந்தா ணத்துளோ
னுணமு முடையு நன்கன நீத்துக்

௭௪ - ௭௫. சிந்தையின்றியுஞ் செய்வினை யுறுமெனும் வெந்திறல் நோன்பிகள் - மனமில்லாதிருக்கவும் அறமும்பாவமு முளவாகுமென்று சொல்லுகின்ற வெவ்விய திறலையுடைய விரதிகள், விழுமங்கொள்ளவும் - வருத்தங்கொள்ளவும்.

௭௬ - ௭௭. சிந்தையின்றெனிற் செய்வினை யாவதும் எய்தாது எனபோர்க்கு ஏதுவாகவும் - மனமில்லையாயின் அறமும்பாவமும் சிறிதும் உளவாகா வென்று கூறுவோராகுக குறியாகவும்.

௭௪ - ௭௭. மனமுள தாயவழி வினையு முளதாமென்பதும மனமில தாயவழி வினையுமிலதாமெனபதுமாகிய இவற்றை, பின் வருந திருக்குறள்களாலும் அவற்றிற்குப் பரிமேலழகரெழுதிய உரையாலு முணர்க. (௩௧௬)—“இன்னா வெனததா னுணாந்தவை துன்னாமை, வேண்டும் பிறன்கட் செயல”, (௩௧௭)—“எனைததானு மெஞ்ஞான்று மியாாககு மனத்தானா, மாணாசெய் யாமை தலை.”

௭௮. பயம் - பயன். ‘இட்டுக்காட்டி’ என்றும் பாடம்.

௭௯. அது - அப்பீடிகை.

௮௧. செவ்வனஞ் செலலும் - வேறாகச்செல்லுமென்றுமாம்; “திருமகளிரு என்பது சிலப்பதிகாரம், கடலாடுகாதை, ௧௨௭.

௮௪. அவளொடும் - மணிமேகலையோடும்.

௮௬. சிமிலிக்கரண்டையன் - உறிலேவைத்த குண்டிகையையுடையன்; “கலபொளிந் தன்ன விட்டுவாய்க் கரண்டைப், பலபுரிச் சிமிலி நாற்றி” என்பது மதுரைக்காஞ்சி, ௪௮௨ - ௪௮௫. நுழைகோற் பிரம்பினன் - நுண்ணிதாகத் திரண்ட பிரம்பையுடையன். ‘உழைத்தோற் பிரம்பினன்’ என்றும் பாடம்.

௮௭. தவலருஞ்சிறப்பின ராந்தாணத்துளோன் - கேடில்லாத மேன்மையாளர்களுடைய இடத்தேயுள்ளான்; ஆந்தாணம் - இடம்; இது ஜைனமுனிவர்களுடையஇடததிற்கேயுரியபெயராக வழங்குகின்றது; இதனை ஆஸ்தானமென்னும் வடமொழிச்சிதைவென்பா; இதற்கு நடுவென்று பொருள்கொண்டு, இதனை அந்தராளமென்னும் வடமொழிச்சிதைவென்றாவது அந்தஸ்தானமென்னும் வடமொழிச்சிதைவென்றாவது கொள்ளினும் அமையும்; இவ்விரண்டுசொற்களும் முறையே அநதராணமென்றும் அந்ததாணமென்றும் கன்னடபாஷையில வழங்குகின்றன. “அஞ்செஞ் சாயல ராந்தாணததுள்” என்பர் பின்னும்; ௫ - ம்

காணு வுயிர்கருங் கையற
யுண்ணு நோன்பொ டுயவ லியானையின்
மண்ணு மேனியன் வருவோன் றன்னை
வந்தீ ரடிகளும் மலரடி தொழுதே
னெந்த மடிக ளெம்முறை கேண்மோ
வழுக்குடை யாக்கையிற் புகுந்த நும்முயிர்
புழுக்கறைப் பட்டோர் போன்றுளம வருந்தா
திம்மையு மறுமையு மிறுதியி லின்பமுந்
தன்வயிற் றரூஉமென் றலைமக னுரைத்தது
கொலையு முண்டோ கொழுமடற் றெங்கின்
விளைபூந் தேறலின் மெய்த்தவத் தீரோ
யுண்டு தெளிந்திவ் யோகத் துறுபயன்
கண்டா லெம்மையுங் கையுதிர்க் கொண்மென
வுண்ணு நோன்பி தன்னொடு சூளுற்

காதை, உ௩. 'ஆந்தானம்' எனவும், 'அந்தாணம்' எனவும் பாடம்

அ௯. காணு வுயிர்கருங் கையற்றேங்கி - நண்ணிய உடமபுடைய உயிர்கட்கும் நடத்தல் இருததல் கிடத்தல் நிற்றன் முதலிய தனதொழில்களால துன்பங்கழுமோவென்று செயலற்றேங்கி.

௯0. உயவல் யானை - வருந்துதலையுடைய யானை; "உயவற்பாண" என்பது புறநானூறு, ௬௧.

௯௧. மண்ணுமேனியன் - கழுவாத மேனியையுடையன். வருவோன்றன்

௯௩. கேண்மோ - கேளும்; ஓ - அசைநிலை; "முதுமறை மாக்கண் முன்னிய துரைமோ" (௧௩ - ம் காதை, ௫௬) எனவும், "மாமறை மாக்கள் வருகுலங் கேண்மோ" (௧௩ - ம் காதை, ௯௩) எனவும் இந்நூலுள்ளே பின்பு வருதல்காண்க.

௯௪. அழுக்குடையாக்கையென்றான், மண்ணுமேனியாதலால். 'புகுந்தது நும்முயிர்' என்றும் பாடம்.

௯௫. புழுக்கறைப்பட்டோர் - புழுங்கச்செய்யும் அறையி லகப்பட்டோர். 'போன்று வருந்தாது' என்றும் பாடம்.

௯௪ - ௯௫. நும்முயிர் பட்டோர்போன்று உளம் வருந்தாது. வருநதாது - வருந்தாதவண்ணம்.

௯௬ - ௯௭. இம்மைப்பயன்முதலிய மூன்றையும் தன்வயிற்றரூஉந் (௯௯ - ம் அடி) தேறலெனவும், உரைத்ததாகிய (௯௯ - ம் அடி) தேறலெனவுமியைக்க; தரூஉந்தலைமகனென இயைப்பினு மமையும.

௯௭. 'தன்மையிற்றரூஉம்' என்றும் பாடம்.

௧00. யோகமென்றது, அம்முனிவனது தவநெறியை; மருந்துமாம்; சேர்க்கையுமாம்.

௧0௧. எம்மையும் கையுதிர்க்கொண்மென - தேறலையன்றி எமமையும் அகற்றிவிடுமென்று. சீலமில்லாதவரைக்காணின், அவரோடுபேசாமல, அவரைப் போகும்படி கையசைத்துக்குறிப்பித்தல் சைனமுனிவர்கது இயல்பு; இப்படியே "மையறு படிவதது மாதவர் புறத்தெமைக், கையுதிர்க் கோடலின்" எனப் பின்னும் வருதல்காண்க; ௫ - ம் காதை ௫௫. 'கைவிதிர்க்கொண்மென' என்றும் பாடம்.

௧0௨. உண்ணுநோன்பி - இரண்டு உவாவும் அட்டமியும முட்டுப்பாடும் பட்டினிவிட்டுண்ணும் விரதி; என்றது சைனமுனிவனை; "பட்டினிநோன்பிகள்" என்று **சிலப்பதிகாரத்து** வருதல காண்க; அடைக்கலக்காதை, ௧௬௪. (சூளுறறு - சபதஞ்செய்

றுண்மென விரக்குமோர் களிமகன் பின்னருங்
கணவிரி மாலையிற் கட்டிய திரள்புயன்
குவிமுகி ழெருக்கிற் கோத்த மாலையன்
சிதவற் றுணியொடு சேணோங்கு நெடுஞ்சினைத்
ததர்வீழ் பொடித்துக் கட்டிய வுடையினன்
வெண்பலி சாந்த மெய்ம்முழு துறீஇப
பண்பில் கிளவி பலவொடு முனைத்தாங்
கழூஉம் விழூஉ மாற்றுங் கூஉந்
தொழூஉ மெழூஉஞ் சுழலலுஞ் சுழலு
மோடலு மோடு மொருசிறை யொதுங்கி
நீடலு நீடு நிழலொடு மறலு
மைய லுற்ற மகன்பின் வருந்திக்
கையறு துன்பங் கண்டுநிற் குநருஞ்
சுரியற் றாடி மருள்படு பூங்குழற்
பவளச் செவ்வாய்த் தவள வாணகை
யொள்ளரி நெடுங்கண் வெள்ளிவெண் டோட்டுக்
கருங்கொடிப் புருவத்து மருங்குவளை பிறைநுதற்

---

௧0௩. உண்மென - உண்ணுமென்று. ஓர்களிமகன்பின்னரும் - ஒருகட்குடியன்பின்னே நிற்போரும்.

அசு - ௧0௩. கரண்டையன், பிரம்பினன், உளோன் என்பன-உண்ணோன் பிக்கு அடை; "ஆர்த்த வாய ஹார்ககளி மூர்க்கன், செவ்வழிக் கீதஞ் சிதையப் பாடி, யவ்வழி வருமோ ரந்த ணாளனைச, செல்ல லாணை நிலலிவ ணீயென, வெய்தச் சென்று வைதவண் விலக்கி, வழுத்தினே முண்ணுமிவ் வடிநறுந் தேறலைப், பழிப்புக் கூறுநின் பார்ப்பனக் கணமது, சொல்லா யாயிற் புலலுவேன் யானெனக், கையலைத் தோடு மோர் களிமகன் காண்மின்" என்பது பெருங்கதை, உ௬சைக்காண்டம், உவந்தவைகாட்டல்.

௧0௪. கணவிரிமாலை - அலரிமாலை. "கணவிரி மாலை கைககொண் டென்ன" எனப் பின்னுங்கூறுவர்; ௩ - ம் காதை, ௪அ. 'கணவீர மாலை கட்டிய திரணையன்' எனவும் பாடம்.

௧0௬. சிதவற்றுணி - சிதரினசீரை

௧0௬-௧0௭. சினைத் ததர் வீழ்பு - கிளியுள்ள செறிந்த சுள்ளிகள்; வீழ்பு - சுள்ளிகளுக்கு ஆகுபெயர்; ததர் - கொத்துமாம; "சிதர்நனை முருக்கின் சேணோங்கு நெடுஞ்சினைத், ததர்" என்பது சிறுபாணாற்றுப்படை, உ௫௪ - உ௫௫.

௧0அ. வெணபலி - வெண்ணீறு; சாந்தம் - சந்தனம. 'வெணபலிச் சாந்தம்' என்றும் பாடட

௧௧௧. சுழலலுஞ்சுழலும் - சுழலுதலையுஞ் செய்வன். இவ்வாறு பின்வருவனவற்றிற்கும் இப்படியேபொருள்கொள்க. "இயங்கலு மியங்கு மயங்கலு மயங்கும" என்பது சிலப்பதிகாரம், அழற்படுகாதை, ௧௫௪. 'சுழலினுஞ் சுழலும்' என்றும் பாடம்.

௧௧௪. மையலுற்றமகன - பித்தன்.

௧௧௬. தாடி - மோவாய்.

௧௧அ. வெள்ளிவெணடோடு - சங்கினாற்செய்த காதணி. 'வெள்ளைவண்டோடு' என்றும பாடம்.

௧௧௯. கருங்கொடிப் புருவம் - கரிய ஒழுங்காகிய புருவம்; "கருங் கொடிப் புருவ மேறா" என்பது சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையாரிலம்பகம், ௧௬௬. இதனை, வடமொழியில் ப்ருலதா என்பதனோடு ஒப்பிடுக.

காந்தளஞ் செங்கை யேந்திள வனமு
யகன்ற வல்கு லந்நுண் மருங்கு
லிகந்த வட்டுடை யெழுதுவரிக் கோலத்து
வாணன் பேரூர் மறுகிடைத் தோன்றி
நீணில மளந்தோன் மகன்முன் னாடிய
பேடிக்கோ லத்துப் பேடுகாண் குநரும்
வம்ப மாக்கள் கம்பலை மூதூர்ச்
சுடும ணோங்கிய நெடுநிலை மனைதொறு
மையறு படிவத்து வானவர் முதலா
வெவ்வகை யுயிர்களு முவமங் காட்டி
வெண்சுதை விளக்கத்து வித்தக ரியற்றிய
கண்கவ ரோவியங் கண்டுநிற் குநரும

கஉஉ. வட்டுடை - முழந்தாளளவாக உடுக்கும் உடைவிசேடம்; "வட்டுடைப் பொலிந்த தானை வள்ளலை" என்பது **சீவகசிந்தாமணி**, கோவிந்தையாரிலம்பகம், சு0; "வட்டுடை மருங்குல் சேர்த்தி" என்பது, **சீவகசிந்தாமணி**, காந்தருவதத்தையாரிலம்பகம், உஎரு. எழுதுவரிக்கோலம் - கொங்கை முதலியவற்றில் எழுதிய பத்திக்கீற்று; "எழுதுவரிக் கோல முழுமெயு முறீஇ" என்பது **சிலப்பதிகாரம்**, இந்திரவிழவூரெடுத்தகாதை, உஉசு.

கஉரு - கஉச. வாணன் - பாணாசுரன்; ஊர் - சோநகரம்; நீணிலமளந்தோன் - கண்ணன்; மகன் - காமன் (பிரத்தியும்நன்.) "வாணன் பேரூர் மறுகிடை நடந்து, நீணில மளந்தோ னாடிய" என்பது **சிலப்பதிகாரம்**, கடலாடுகாதை, ருச - ருரு.

கஉரு. பேடு - புறநாடகம் பதினொன்றனுள் ஒன்று; அப்பதினொன்றையும் அவற்றை நிகழ்த்தியவர்களையும் பினவரும்வெண்பாவாலுணர்க; "கடையமயிராணிமரக் கால்விந்தை கந்தன், குடைதுடிமா லல்லியமற் கும்பஞ் - சுடர்விழியாற், பட்டமதன் பேடுதிருப் பாவையரன் பாண்டரங்கங்,கொட்டியிவை காண் பதினோர் கூத்து." இஃது உழைகாரணமாக வாணனாற் சிறைவைக்கப்பட்ட தன்மகன் அநிருத்தனைச் சிறைமீட்டுக் காமன் சோநகரத்தாடிய ஆடல். உழை - வாணன்மகள். 'பேடிகாண் குநரும்' என்றும் பாடம்.

ககசு - கஉரு. "ஆண்மை திரிந்த பேடிக்கோலத்துக், காம னாடிய பேடி யாடலும்" என்பது **சிலப்பதிகாரம்**, கடலாடுகாதை, ருசு - ருஎ. "சுருளிடு தாடி மருள்படு பூங்குழ, லரிபரந் தொழுகிய செழுங்கய னெடுங்கண், விரிவெண் டோட்டு வெண்ணகைத துவர்வாய்ச், சூடக வரிவளை யாடமைப் பணைத்தோள், வளரிள வனமுலைத் தளிரியன் மின்னிடைப், பாடகச் சீறடி யாரியப் பேடி" என்பது **சிலப்பதிகாரம்**, நீர்ப்படைககாதை, கஅக - கஅசு.

கஉசு. வம்பமாக்கள் - புதியோர்; வம்பு - புதுமை; "வம்ப மாக்க டம்பெயர் பொறிதத" என்பது **சிலப்பதிகாரம்**, இந்திரவிழவூரெடுத்தகாதை, ககக. கம்பலை - முழக்கம். மூதூர் - மூதூரில்.

கஉஎ. சுடுமண் ஓங்கிய - செங்கலாற் செய்யப்பட்டு உயர்ந்த; "சுடும ணோங்கிய நெடுநகர் வரைப்பு" என்பது **பெரும்பாணாற்றுப்படை**; ச0ரு. "சுடும ணெடுமதில" என்பது **புறப்பொருள்வெண்பாமாலை**, உழிஞைப்படலம், கக. "சுடும ணேரு .. கடிமனை" என்பது **சிலப்பதிகாரம்**, ஊர்காண்காதை, கசசு-கசஎ.

கஉஅ. படிவம் - தெய்வவடிவம்.

கஉகூ - கஙக. சுதை - சுண்ணச்சாந்து. வித்தகர்-ஈண்டு, சிற்பாசாரிகள்; "வித்தக ரியற்றிய விளங்கிய கைவினைச,

விழவாற்றுப் படுத்த கழிபெரு வீதியிற்
பொன்னுண் கோத்த நன்மணிக் கோவை
யையவி யப்பிய நெய்யணி முச்சி
மயிர்ப்புறஞ் சுற்றிய கயிற்கடை முக்காழ்
பொலம்பிறைச் சென்னி நலம்பெறத் தாழச்
செவ்வாய்க் குதலை மெய்பெறா மழலை
சிந்துபு சின்னீ ரைம்படை நனைப்ப
வற்றங் காவாச் சுற்றுடைப் பூந்துகி
லொருடுத்தமணிக் கோவை யுடுப்பொடு துயல்வரத்

திரச் செய்கைப் படாம்'' என்பர் _ ழும்; ௩ - ம் காதை, கசுஎ - கசுஅ. விளக்கத்தையுடைய சுதையா லியற்றிய ஓவியம்; ஓவியம் - சித்திரம். இவ்வடிக ளோடு பின் வருவனவற்றை ஒப்பிடுக; "எவ்வகைச் செய்தியு முவமங் காட்டி, நுண்ணிதி னுணர்ந்த நுழைந்த நோக்கிற், கண்ணுள் வினைஞரும்'' என்பது **மதுரைக்காஞ்சி**, ருகசு - ருகஅ. "மய னெனக் கொப்பா வகுத்த பாவையி, னீங்கே னியான'' என்பது **மணிமேகலை**, உக - ம் காதை, கசுஉ - கசுசு.

கசுஉ. விழவு ஆற்றுப்படுத்த - விழவை வழிப்படுத்தின; நடத்திய என்றபடி; "முருகாற்றுப் படுத்த வுருகெழு வியனகர்'' என்பது **திருமுருகாற்றுப்படை**, உசச.

கசுச. ஐயவி யப்பிய நெய்யணி முச்சி - வெண்சிறுகடுகையப்பிய நெய்யையணிந்த மயிர்முடி; பேய்தீண்டி வருத்தாவண்ணம் குழந்தைகளின் மயிர்முடியில் நெய்யணிந்து வெண்சிறுகடுகை அப்புதல் மரபு. வெண்சிறுகடுகிற்குக் கடிப்பகையென்னும் பெயர் வந்ததற்குக் காரணமிதுவே; கடி - பேய்; "குறுநடைப் புதல்வர்க்குக், காவற் பெண்டிர் கடிப்பகையெறிந்து, தூபங்காட்டித் தூங்குதுயில் வதியவும்'' (எ - ம் காதை, ருஎ - ருக) எனவும், "அரவாய்க் கடிப்பகை யையவிக் கடிப்பகை'' (எ - ம் காதை, எகு) எனவும் பின்பு வருதல் காண்க; **சந்திராபீடனென்பவனது** தலையில் வெண்சிறுகடுகு அப்பியிருந்ததாக '**காதம்பரி**' என்னும் வடநூலிற் கூறப்பட்டுள்ளது. முச்சி - முச்சியில்.

கசுரு - கசுசு. கயிற்கடை - கொக்குவாய் (கொக்கியென்று வழங்குகின்றது); "கயிற்கடை யொழுகிய காமர் தூமணி, செயததகு கோவை'' என்பது **சிலப்பதிகாரம்**, கடலாடுகாதை, கoக - கoஉ. முககாழ் - மூன்று கோவையாகிய முதது வடம். பிறைச்சென்னி - பிறை வடிவமாகிய ஆபரணத்தின் இரண்டு கோடுகள். சென்னி - சென்னியில். முக்காழ் தாழ வென்க.

கசுஎ. 'மெய்பெறா மழலை' என்று ஈண்டுக்கூறியதுபோல, 'விளையா மழலை' என்று பின்னுங்கூறுவர்; ௪ - ம் காதை, கூக.

கசுஅ. ஐம்படை - ஐம்படைத்தாலி; சாததற் கடவுளான திருமாலின் சங்கம் சக்கரம் கதை கட்கம் சார்ஙகம் என்னும் ஐந்து ஆயுதங்களின் வடிவமாக அமைப்பது; இதனைப் பஞ்சாயுதமென்றும், ஐந்தாவது மாதத்தில் பிள்ளைகளுக்கு இதனைத் தாரணஞ்செய்தல் மரபென்றும் கூறுவர் வடநூலார். இதற்கு விதி, '**கிருகியரத்நம்**' என்னும் வடநூலி லுள்ளது. "அமளித் துஞ்சு மைம்படைத் தாலிக், குதலைச் செவ்வாய்க் குறுநடைப் புதல்வர்'' என்பர் பின்னும்; எ-ம் காதை ருசு — ருஎ. இது தாலியெனவும் தாலியைம்படை யெனவும் வழங்கும்; "தாலி களைந்தன்று மிலனே பால்விட், டயினியு மின்றயின் றனனே'' என்பது **புறநானூறு**, எஎ. "எழிலார் திருமார் பிற் கேற்கு மிவையென், றழகிய வைம்படையுமாரமுங் கொண்டு, வழுவில் கொடையான் வயிச்சி ரவணன், றொழுதுவனுய நின்றான் றாலேலோ தூமணி வண்ணனே தாலேலோ''என்பது **பெரியாழ்வார்திருமொழி**, முதற்பத்து, ௩ - ம் திருமொழி, ௫.

தளர்நடை தாங்காக் கிளர்பூட் புதல்வனைப்
பொலந்தேர் மிமிசைப் புகர்முக வேழத்
திலங்குதொடி நல்லார் சிலர்நின் றேற்றி
யாலமர் செல்வன் மகன்விழாக் கால்கோள்
காண்மி னோவெனக் கண்டுநிற் குநரும
விரடன் பேரூர் விசயனும் பேடியைக்
காணிய சூழ்ந்த கம்பலை மாக்களின்
மணிமே கலைதனை வந்துபுறஞ் சுற்றி
யணியமை தோற்றத் தருந்தவப் படுத்திய
தாயோ கொடிய ளகவில ளிங்கிவண்
மாமலர் கொய்ய மலர்வனந் தான்புகி
னலவிள வன்ன நாணு தாங்குள
வல்லுந கொலலோ மடந்தை தன்னடை
மாமயி லாங்குள வந்துமுன் னிறபன
சாயல்கற் பனகொலோ தைய றன்னுடன்
பைங்கிளி தாமுள பாவைதன் கிளவிக

கசரு - கசரு. பொற்றேரின்மேலுள்ள யானையிற் புதல்வனை யேற்றி; "பொற்சிறு தேர்மிசைப் பைம்பொற போதக, நற்சிறு ரூர்தலின்" என்பது. சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், சுo. 'சிலர் நன்றேற்றி' என்றும் பாடம்.

கசச. ஆலமர் செலவன் - சிவபெருமான்; மகன் - முருககடவுள்; "ஆலமர் செல்வன் புதல்வன வரும" என்பது சிலப்பதிகாரம், குன்றககுரவை. சிறுவனை முருகக்கடவுளாக எண்ணினர். விழாக் கால்கோள் - விழாவின் தொடக்கம்.

கசரு. என - என்றுசொல்ல.

கசூஉ - ௧சரு. வீதியில நலலார் சிலர், கோவையையும் முச்சியையும் குதலையையும் மழலையையும் பூணையுமுடைய புதல்வனை வேழத்து முககாழ்தாழத தூசில் துயல்வர எற்றிக் காண்மினோ வென்றுசொல்ல, அதனைக்கண்டு நிற்பவர்களும் என்க.

கசசு. பேரூர் - பேரூரில். விசயனும் பேடியை - அருச்சுனனாகிய பேடியை.

கசஎ. காணிய - காண. கம்பலைமாக்கள் - வேறுசிலகாட்சிகண்டு முழங்கித் திரியுமவர்; "கம்பலைமாக்கள் கணவனைத் தாஙகாட்ட" என்பது சிலப்பதிகாரம், ஊர்சூழ்வரி, உகூ.

கசஅ. வந்து புறஞ்சுற்றி - பின்னரும் கண்டுநிற்குநரும் காணகுநரும் கணடு நிற்குநரும் கண்டுநிற்குநரும் வந்துபுறததேசூழ்ந்து.

கசகூ - கரு0. அணி யமை தோற்றத்து - ஆபரணங்க ளில்லாத தோற்றத்தையுடைய; "உப்பமை காமத துப்பின்" (நாமகளிலம்பகம், எஅ) எனவும், "நிகரமைந்த முழந்தாளும்" (நாமகளிலமபகம், கசசு). எனவும் சீவகசிந்தாமணியில 'அமை' என்பது இப்பொருளில் வருதலகாணக. யருந்தவப்படுததிய - அரிய தவநெறியிற் சேர்த்த. தாயோ - மாதவியோ. "மணிமேகலை, யருந்தவப் படுத்த லலலதி யாவதூஉந், திருந்தாச் செய்கைத் தீத்தொழிற் படாஅள்" என்று மாதவி முன்பு கூறியிருததல் காண்க; உ - ம் காதை, ருரு - ருஎ.

கரு0. இவள் - மணிமேகலை.

கருஉ - கருரு. ஆங்குள அன்னம் நாணுது மடந்தைதன்னடைவலலுநகொல் லோவென இயைக்க.

கருரு. 'சாயல கொல்லோ' என்றும் பாடம்.

கெஞ்சல கொல்லோ விசையுந வல்ல
வென்றிவை சொலலி யாவரு
செந்தளிர்ச் சேவடி நிலம்வடு வுறுமற
குரவமு மரவமுங் குருந்துங் கொன்றையுந்
திலகமும் வகுளமுஞ் செங்கால் வெட்சியு
நரந்தமு நாகமும் பரந்தலர் புன்னையும்
பிடவமுந் தளவமு முடமுட் டாழையுங்
குடசமும் வெதிரமுங் கொழுங்கா லசோகமுஞ்
செருந்தியும் வேங்கையும் பெருஞ்சண் பகமு
மெரிமல ரிலவமும விரிமலர் பரப்பி
வித்தக ரியற்றிய விளங்கிய கைவினைச்
சித்திரச செய்கைப் படாமபோர்த ததுவே
யொப்பத் தோன்றிய வுவவனந் தன்னைத்
தொழுதனள் காட்டிய சுதமதி தன்னொடு
மலர்கொயயப புகுந்தனண் மணிமே கலையென.

மலர்வனம்புக்ககாதை முற்றிற்று.

கருஎ. இசையுந அலல-ஒப்பனவல்ல.

கருஅ. இனைந்து உக - வருந்திச்சிந்த.

கருகூ. சேவடியும் நிலமும் வடுவுறா மல்; மெல்ல நடந்தாளென்றபடி.

கசுo. குரவம் - குராமரம. மரவம்- வெண்கடப்பமரம். 'குந்தமுங் கொன்றையும்' என்றும் பாடம்.

கசுக. திலகம் - மஞ்சாடிமரம். வகுளம் - மகிழ்.

கசுஉ. நரந்தம்-நாரத்தை. நாகம் - சுரபுன்னை; "நனைசினையன நகுவிரையன நலனுடையன நாகம்" என்பது நீலகேசி.

கசுங. பிடவம் - குட்டிப்பிடவமென்னுங்கொடி. தளவம் - செம்முல்லை; இதனைக் குறிஞ்சிப்பாட்டுரையாலுணர்க. "குருதிக் கூரெயிறு கூத்தியர்கட் கொண்ட கொடித்தளவமே" என்பது சீவகசிந்தாமணி, கனகமாலையாரிலம்பகம், கூ௫. முடம் - வளைவு.

கசுச. குடசம்-வெட்பாலை விசேடம்; வெதிரம் - மூங்கில்; "குடசமும் வெதிரமுங் கொழுங்கொடிப் பகன்றையும்" என்பது சிலப்பதிகாரம், புறஞ்சேரியிறுத்தகாதை, கருஎ.

கசுசு. எரிமலரிலவம் - நெருப்பைப் போலச் சிவந்தபூவையுடைய இலவமரம்.

கசுஅ. சித்திரச்செய்கைப்படாம் - சித்திரத்தொழிலமைந்த துகில.

கஎo. தொழுதனள் காட்டிய - வன தேவதையைத் தொழுது உவவனத்தைக் காட்டிய; புததன்பாதபீடிகையுள்ளவன மாதலால தொழுதனளென்றுமாம்.

க - கஎக. மாதவியுரைத்த உரைமுன்றோன்றி மணிமேகலைக்கு ஏதுநிகழ்ச்சி எதிர்ந்துளதாதலின் அக்காரிகை வெதுப்பக் கலங்கி அழித்து உருட்டி ஆட்ட மாதவி நோக்கி மாற்றிக் கொணர்வாயென்றலும் அதனைக்கேட்டுத் துயரொடுகூறும் சுதமதி 'நீர்ணடனன்னுயிற் காமன் நடுங்கும்; ஆடவர் அகறலுமுண்டோ, நின்றிடிற் பேடியரன்றோ, அன்றியும், யான் இந்நகரத்துவருங்காரணம்கேளாய், கொய்வேனை விஞ்சையன் எடுத்தனன், எழுந்தனன், படுததனன், ஆயினேன், அவன் ஈங்கு என்னையகன்று தன்பதி நீங்கினன், ஆதலால, மணிமேகலை, தன்மையளலலள்; போகின், உழையோராங்குளர்; செல்லார்; எய்தார்; உவவனமென்பதொன்றுண்டு; உண்டு; உண்டு; மரபினது அதுதான்; செம்மை தானிலள்; யானும் போவல்' என்று கூடிச் செலவுழி, பின்னரும் நிற்குநரும் காண்குநரும் நிற்குநரும் நிற்குநரும் மணிமேகலையைச்சுற்றி இனைந்துக, மணிமேகலை சுதமதிதன்னொடு மலர்கொய்யப் புகுந்தளென முடிகக.

# பளிக்கறைபுக்ககாதை.

[நான்காவது மணிமேகலை உதயகுமரனைக்கண்டு
பளிக்கறைபுக்கபாட்டு.]

பரிதியஞ் செல்வன் விரிகதிர்த் தானைக்
கிருள்வளை வுண்ட மருள்படு பூமபொழிற்
குழலிசை தும்பி கொளுத்திக் காட்ட
மழலை வண்டின நல்லியாழ் செய்ய
வெயினுழை பறியாக் குயினுழை பொதுமபர்
மயிலா டரங்கின் மந்திகாண் பனகாண்
மாசறத் தெளிந்த மணிநீ ரிலஞ்சிப்
பாசடைப் பரப்பிற் பன்மல ரிடைநின்
யோங்கிய விரைமலர்த் தாமரை

க. செல்வனுடைய கதிர். கதிர்த்தானைக்கு - கிரணங்களாகிய சேனைக்கு.

உ. பொழில் - சோலை. 'இருள்வளைப்புண்டன' என்றும் பாடம்.

ங. தும்பி குழலிசை கொளுத்திக் காட்ட - தும்பிகள் வேய்ங்குழலின் ஓசையைப் பொருத்திக் காட்ட; தும்பி - வண்டின்கிளைகளுள் ஒருசாதி. 'கொழுதிக் காட்ட' என்றும் பாடம்.

ச. 'மழலைவரி வண்டினம' என்றும் பாடம்.

ங - ச. இவ்வடிகளின் பொருள்கொண்டே, "கொம்பர்த் தும்பி குழலிசை காட்டப், பொங்கர் வண்டின நல்லியாழ் செய்ய" என்று பின்பு வந்திருத்தல காண்க; கக-ம் காதை, ருஎ - ருஅ.

ரு. வெயில் நுழைபு அறியாப் (பொதும்பர்) - ஞாயிற்றின்கதிர் தோன்றிய காலத்தும் படுகின்றகாலத்துமுட்படச் சிறிதும் செல்லுதலறியாத இளமரககா; குயில் நுழை பொதும்பர் - இலைநெருக்கத்தாலே குயில்கள் நுழைந்துசெல்லும் இளமரக்கா; "வெயினுழை பறியாக் குயினுழை பொதும்பர்" என்பது பெரும்பாணாற்றுப்படை, ஙஎச.

க - சு. பொழிலிற் காட்டச் செய்ய மயில் ஆடுகின்ற பொதும்பராகிய அரங்கில இருந்து காண்பனவாகிய மந்திகளைக காண்பாயாக.

எ. மணிநீரிலஞ்சி - பளிங்குபோலும நீரையுடைய பொய்கை; நீலமணிபோலு நீரையுடைய இலஞ்சியென்றுமாம். இலஞ்சி - இலஞ்சியில.

கூ. ஒருதனி - ஒப்பிலாததனி; "ஒப்புடைய தானையு ளொருதனிய னேகி" என்பது **சீவகசிந்தாமணி**, நாமகளிலம்பகம, உருக; "ஒருதனி நின்றாய்" (ச - ம காதை, கூசு) எனவும், "ஒருதனி யோங்கிய திருமலர்" (கரு-ம் காதை, எசு) எனவும், "விரைமலர்த் தாமரை யொருதனி யிருந்த, திரு" (கசு-ம் காதை, ஙங - ஙச) எனவும், "உலக வறவியி னொருதனி யேறி" (கஎ - ம் காதை, அசு) எனவும, "ஒருதனி போயின னுலக மன்னவன்" (உரு - ம் காதை, உ௦ச) எனவும் 'ஒருதனி' என்பது இந்நூலுள்ளே பயின்று வருதல காண்க.

அ - கூ. இவ்வடிகளின்பொருள், பின்பு, "தண்ணணி தாமரைக கொழுமலர் நாப்ப, ணொருதனி யோங்கிய திருமலா

யாச வன்ன மாங்கனி திருப்பக்
கணைநின் றூது மொருமயி றனக்குக்
கம்புட் சேவற் கனைகுரன் முழவாக்
கொம்ப ரிருங்குயில் விளிப்பது காணா
யியங்குதேர் வீதி யெழுதுகள் சேர்ந்து
வயங்கொளி மழுங்கிய மாதர்நின் முகம்போல்
விரைமலர்த் தாமரை கணைநின் றோங்கிய
கோடுடைத் தாழைக் கொழுமட லவிழ்ந்த
வாலவெண் சுண்ண மாடிய திதுகாண்
மாதா நின்கண் போதெனச் சேர்ந்து
தாதுண் வண்டின மீதுகடி செங்கையி
னஞ்சிறை விரிய வலர்ந்த தாமரைச்
செங்கயல் பாய்ந்து பிறழ்வன கண்டாங்
கெறிந்தது பெறாஅ திரையிழந்து வருந்தி
மறிந்து நீங்கு மணிச்சிரல் காணெனப்
பொழிலும் பொய்கையுஞ் சுதமதி காட்ட
மணிமே கலையம் மலர்வனங் காண்புழி
மதிமருள் வெண்குடை மன்னவன்

போன்று" என்ற அடிகளில் வந்திருக்கி ... -ம் காதை, ௭௫ - ௭௬.

௧௧. ஆலும் - ஆடும; ஆரவாரித்தலை கருமெனறுமாம்; "மாலவரைச் சிலம் பின் மகிழ்சிறந் தாலும, பீலி மஞ்ஞை யின்" என்பது பெரும்பாணாற்றுப்படை, ௩௩௦ - ௩௩௧. 'கணைநின்றாடும்' என்றும் பாடம்.

௧௨. கம்புள் - சம்பங்கோழி. சேவ லினது குரல முழவொலியாக.

௧௩. கொம்பர் - கொமபரில. விளிப் பது - பாடுதல; "விளியாதான் கூத்தாட்டுக் காண்டலும்" எனபுழி விளித்தல இப்பொருள்பட்டு வருதல காண்க.

௧௪. எழுகின்ற துகள.

௧௭. கோடு - கிளை, 'கொடுமடலவீழ்ந்த' என்றும் பாடம்.

௧௮. வால்வெண்சுண்ணம் - தூய வெள்ளிய சுண்ணம்; "ஊர்தி வால்வெள் ..." என்பது புறநானூறு, ௧. ... இத்தாமரைமலரினை.

௧௪ - ௧௮. துகள் சேர்ந்து ஒளிமழுங்கிய நினமுகம்போற் சுண்ணமாடியதாகிய இத்தாமரைமலரினைக் காண்பாயாக.

௨௧. 'அஞ்சிறை யிரிய' என்றும் பாடம்.

௨௩. அது - [illegible]தியொருமை. இரை-முன்புகௌவியிருந்த உணவு.

௨௧ - ௨௩. அஞ்சிறைவிரிய எறிந்தென இயைக்க.

௨௪. மணிச்சிரல் - நீலமணிபோன்ற சிச்சிலிப்பறவை; "புலவுக் கயலெறிந்த பொனவாய் மணிச்சிரல்" என்பது சிறுபாணாற்றுப்படை, ௧௮௧.

௧௯ - ௨௪. நின்கண்ணைப் போதென்றெண்ணிச் சேர்ந்து உண்ணுகின்ற வண்டினங்களைக் கடியும் நின்செங்கை போலத் தாமரைமலரிற்பாய்ந்து பிறழ்வனவாகிய செங்கயல்களைக்கண்டு எறிந்து அவற்றைப்பெறாமல் இரையையிழந்து வருந்தி மீண்டுநீங்கும் சிரலைக் காண்பாயாக.

௨௭. மருள் - உவமவுருபு; "மதிமருள் வெண்குடை" என்பது புறநானூறு, ௧௭௪. மன்னவன் - சோழன்.

னுதய குமர னுருகெழு மீதூர்
மீயா னடுங்க நடுவுநின் றோங்கிய
கூம்புமுதன் முறிய வீங்குபிணி யவிழ்ந்து
கயிறுகால் பரிய வயிறுபாழ் பட்டாங்
கிதைசிதைந் தார்ப்பத் திரைபொரு முந்நீ
ரியங்குதிசை யறியா தியாங்கணு மோடி
மயங்குகா லெடுத்த வங்கம் போலக்
காழோர் கையற மேலோ ரின்றிப
பாகின் பிளவையிற் பணைமுகந் துடைத்துக்
கோவியன் வீதியுங் கொடித்தேர் வீதியும்
பீடிகைத் தெருவும் பெருங்கலக் குறுத்தாங்
கிருபாற் பெயரிய வுருகெழு மூதூ
ரொருபாற் படாஅ தொருவழித் தங்காது
பாகும் பறையும் பருந்தின் பந்தரு

௨௮ - ௨௯. உருகெழு மீதூ ஊர் மீயான் - அச்சமபொருந்திய மேலிடததே ஊர்ந்திருக்கின்ற மாலுமி; மீயான் - மேலிடத்துள்ளான்; 'மீதூர் மீயாள' என்று வந்தமையின், மீயாவென்பது இடுகுறிப் பெயர்மாத்திரையாய் நின்றது. மீயானெனபதற்குப் பொருள் மாலுமியென்பதை, "ஆழ்கடற் பௌவத் தருங்கல மியக்கு, மீயான் போல" என்பதனாலுணர்க; இது, பெருங்கதை, உஞ்சைக்காண்டம், முல்லைநிலங்கடந்தது. 'உருகெழு மூதூர், நனிதா னடுங்க' என்றும் பாடம்.

௩௦. கூம்புமுதல் முறிய - பாய்மரம் அடியிலே முறியும்படி. 'முதன்முரிய' என்றும் பாடம்.

௩௦ - ௩௧. வீங்கு பிணி அவிழ்ந்து கயிறு கால்பரிய - இறுகின பிணிப்பவிழ்ந்து பாய்கட்டினகயிறு அறபட.

௩௧ - ௩௨. வயிறு பாழ்பட்டு இதை சிதைந்து ஆர்ப்ப - நடுவிடம்பாழாகிப் பாய் கீறுண்டு ஒலிப்ப.

௩௪. கால் எடுத்த வங்கம் - கடுங்காற்றினால் அலைக்கப்பட்ட மரக்கலம்.

௩௫. காழோர் - குத்துக்கோற்காரர்; "காழோர், கடுங்களிறு கவளங் கைப்ப" என்பது மதுரைக்காஞ்சி, ௫௮ - ௫௯.

மற - செயலற. மேலோரின்றி - பாகரின்றி; என்பது பாகரை வீசியென்றபடி.

௩௬. பாகின் பிளவையிற் பணைமுகம் துடைத்து - பாகனாலுண்டாகிய பிளவையினையுடைய பரியமுகத்தைக் கையாற்றுடைத்து; பிளவை - அங்குசத்தாற் பிளக்கப்பட்ட புண்.

௩௭. கோவியன்வீதி - இராசப்பெருந்தெரு கொடித்தேர்வீதி - கொடியணிந்த தேரோடும் வீதி.

௩௮. பீடிகைத்தெரு - கடைத்தெரு. பெருங்கலக்குறுத்து - பெரிய கலக்கத்தையுண்டாக்கி.

௩௭ - ௩௮. இவ்வடிகள்போன்ற அடிகள், சிலப்பதிகாரம், இந்திரவிழவூரெடுத்தகாதையில் வந்திருத்தல் காண்க; (௪௦ - ௪௧.)

௩௯. இவ்வடியே, பதிகத்தில், ௧௨-ம் அடியாக வந்துள்ளது.

௪௧. பாகு - பாகன். பறை - பறையடிப்போர்; யானைக்குமுன்பு பறை அடிக்கப்படுதல் மரபு; இதனை, "நிறையழி கொல் யானை, நீர்க்கு விட்டாங்குப் பறையறைந் தல்லது போகற்க வென்னு, மிறையே தவறுடை யான்" என்பதனாலுணர்க; இது கலித்தொகை, குறிஞ்சி, ௨௦.

மா துல மாக்களு மலவுற்று விளிப்ப
நீல மால்வரை நிலெஞெடு படர்ந்தெனக்
கால வேகங் களிமயக் குற்றென
விடுபரிக் குதிரையின் விரைந்துசென் றெய்திக்
கடுங்கண் யானையின் கடாத்திற மடக்கி
யணித்தேர்த் தானையொ டரசிளங் குமரன்
மணித்தேர்க் கொடிஞ்சி கையாற் பற்றிக்
காரலர் கடம்ப னலல னென்ப
தாரங் கண்ணியிற் சாற்றினன் வருவோ

௪௨. ஆதுல மாக்கள் - மிக்க வறுமை யையுடையோர்; 'வாதுவ மாககளும்' என்றும் பாடம். அலவுற்று - சுழன்று; "நறையும் விரையு மோச்சியு மலவுற்று" என்பது குறிஞ்சிப்பாட்டு, ௭. விளிப்ப - கூப்பிட.

௪௩. இலபொருளுவமை

௪௪. காலவேகமென்பது அவ்யானையின்பெயர்; கட்டியங்காரனுடைய பட்டத்துயானையை அசனிவேகமென்றும், தடமித்தன் பட்டத்துயானையை வளையசுந்தரமென்றும் சீவகசிந்தாமணியிற் கூறியிருத்தல்காண்க. களிமயக்குற்றென-மதமயக்குற்றுத் திரிந்ததாக; களி - மதத்திற்கு ஆகுபெயர். 'கால மேகங் களிமயக் குற்றென' என்றும் பாடம்.

௨௧ - ௪௪. மீயான் நடுங்கக் கூம்பு முதல்முறியக் கயிறுகால்பரிய இதைசிதைந்தார்ப்ப மூங்நீரில யாங்கணும் ஓடி மயங்குகின்ற வங்கம்போலக் காழோர் கையறப் பாகன்முதலியோர் அலவுறறு விளிப்ப மூதூரில் மேலோரின்றித் துடைத்துப் பெருங்கலக்குறுத்து ஒருபாற் படாது ஒருவழித்தங்காது நீலமால்வரைபடர்ந்தெனக் காலவேகம் களிமயக் குற்றதாகவென முடிக்க.

வங்கம் யானைக்கும், காற்று மதத்திற்குமுவமை. வங்கம்போலக் காலவேகம் களிமயக்குற்றென வெனவியையும். இப்படியே, "வீங்குபிணி நோன்கயிறரீஇ யிதைபுடையூஉக், கூம்புமுதன் முருங்க வெற்றிக் காய்ந்துடன், கடுங்காற் றெடுப்பக் கல்பொரு துரைஇ, நெடுஞ்சுழிப் பட்ட நாவாய் போல, விருதலைப் பணில மார்ப்பச் சினஞ்சிறந்து, கோலோர்க் கொன்று மேலோர் வீசி, மென்பிணி வன்றொடர் பேணாது காழ் சாய்த்துக், கந்துநீத் துழிதரும் கடாஅ யானையும்" என மதுரைக்காஞ்சியில் வந்திருத்தல காண்க; ௩௭௬ - ௩௮௩.

௪௫. பரிக்குதிரை, பரி - செலவு; "பகைப்புலங் கவாநத பாய்பரிப் புரவி" என்பது மதுரைக்காஞ்சி, ௬௮௯.

௪௬. கடுங்கண - தறுகண்மை; அது கடுககொலலுதல்; "நெடுஞ்சுழிப் பட்ட சடுங்கண் வேழத், திரவுச்சினந் தணித்து" என்பது மலைபடுகடாம், ௩௨௫ - ௩௨௬. கடாத்திறம் - மதத்தின்கூறுபாடுகள்.

௪௮. கொடிஞ்சி - 'தாமரைப்பூவடிவமாகப்பண்ணிததேர்த்தட்டின்முனனே நடுவது' என்பர் ஆசிரியர் நச்சினார்க்கினியர்; "கொடிஞ்சி நெடுந்தேர்க டும் வீசி" என்பது மதுரைக்கா ௭௫௨; "நெடுந்தேர்க் கொடிஞ்சி பொலிய நின்றோனை" என்பது புறநானூறு, ௭௭.

௪௯. காரலர் கடம்பன் அல்ல னென்பதை - கார்காலததது அலர்கின்ற கடம்பின் அலராற்றொடுக்கப்பட்ட மாலையையுடைய முருககடவுளல்லனென்பதை; "கார்நறுங் கடம்பின்" (புறநானூறு, ௨௩) என்பதனாற் கடம்பு கார்காலத்திற்கு உரியதெனபதும், "பராஅரை மராஅத், துருள்பூந் தணடார் புரளு மார்பினன்" (திருமுருகாற்றுப்படை, ௧௦ - ௧௧) என்பதனால் முருகக்கடவுள் கடப்பமாலையையுடையரென்பதும் அறியப்படும்.

௫௦. ஆரங்கண்ணி-ஆத்திமாலை; இது சோழர்களுக்குரிய அடையாளமாலை; "ஆரங் கண்ணிச் சோழன்" என்பது சிலப்பதிகாரப்பதிகம், ௧௨.

னாடக மடந்தையர் நலங்கெழு
யாடகச் செய்வினை மாடத் தாங்கட்
சாளர மெரளித்த கால்போகு பெருவழி
வீதிமருங் கியன்ற பூவணைப் பள்ளித்
தகரக் குழலா டன்னொடு மயங்கி
மகர யாழின் வான்கோடு தழீஇ
வட்டிகைச் செய்தியின் வரைந்த பாவையி
னெட்டி குமர னிருந்தோன் றன்னை
மாதா தன்னொடு மயங்கினை யிருந்தோ
௬0 யாதுநீ யுற்ற

சக - ௫0. அழகாலும் ஆண்மையாலும் உதயகுமரனை முருகக்கடவுளென்றெண்ணிக் கடப்பமாலையின்மையாலும் ஆத்திமாலையுண்மையாலும் அவனைச் சோழன்மகனென்று கண்டோர் துணிந்தமையின், இவ்வாறு கூறப்பட்டது.

உஎ - ௫0. மன்னவன்சிறுவன், உதயகுமரன், அரசிளங்குமரன் சென்றெய்தி அடக்கிப் பற்றி அலவனென்பதைச் சாற்றித்தானையொடு வருவோனென்க.

௫க. நாடகமடந்தையர் - நாடககணிகையர்; இவரைப் பதியிலாரென்பர், அடியார்க்குநல்லார். வீதி - வீதியில்.

௫உ. ஆடகம் - நாலவகைப்பொன்னுள் ஒன்று. செய்வினை - செய்தொழில். மாடத்தாங்கண் - மாடத்திடத்தே.

௫௩. கால்போகுபெருவழி - காற்றுச் செல்லும் பெரியவழி; கால்போகு பெருவழியாகிய பொளித்தசாளரம். 'சாளர மொழித்த' என்றும் பாடம்.

௫௪. வீதி மருங்கு இயன்ற - வீதியின் பக்கத்தே இயற்றிய. பூவணைப்பள்ளி - மலரணையாகிய சேக்கையில்.

௫௫. தகரம் - மயிர்ச்சாந்து. தகரக் குழலாளென்றது, ஒரு கணிகையை; 'தாதவிழ் குழலாள்' என்றும் பாடம்.

௫௬. மகரயாழ் - நால்வகையாழுள் ஒன்று; அது பதினேழு நரம்புடையது. கோடு யாழ்த்தண்டு; "அங்கோட்டுச் செறிந்த வவிழ்ந்து வீங்கு திவவு" என்பது சிறுபாணாற்றுப்படை, உஉஉ; "கருங்கோட்டுச் சீறியாழ்" என்பது நெடுநல்வாடை, எ0. தழீஉ - தழுவி 'மாதர் வீணையின்வான்கோடு' என்றும் பாடம்.

௫எ வட்டிகை - எழுதுகோல்; "வட்டிகைச் செய்தியும்" என்றார் முன்னும், உ - ம் காதை, உஎ.

௫அ. எட்டி - வைசியர் பெறும் பட்டப்பெயர்; "எட்டிப் பூப்பெற் றிருமுப் பதிற்றியாண், டொட்டிய செலவத் துயர்ந்தோ னாயினன்" என்பர் பின்னும்; உஉ - ம் காதை, ககரு. "எட்டி குமரனினி தினியக்கு, மின்னொலி வீணைப் பண்ணொலி வெரீஇ" என்பது பெருங்கதை, அவந்திககாண்டம், உவந்தவை காட்டல்; "எட்டி காவிதிப் பட்டந் தாங்கி" என்பது பெருங்கதை, அவந்திக காண்டம், கட்டிலேற்றியது. "எட்டி சாயல னிருந்தோன் றனது" என்பது சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை, கசுரு. 'எட்டி காவிதி யென்பன தேய வழக்காகிய சிறப்புப்பெயர்' என்பர் ஆசிரியர் நச்சினார்க்கினியர்; இதனைத் தொல்காப்பியம், எழுத்ததிகாரம், தொகைமரபு, கஉ - ம் சூத்திரவுரையிற் காண்க.

௫௯. மயங்கினை யிருந்தோய் - மயங்கியிருந்தோய்.

௬0. இடுக்கண் - துன்பம்.

௫0 - ௬0. அங்ஙனம் வருவோன் வீதியில் மாடத்துப் பள்ளியிற் குழலாடனொடுமயங்கித் தழீஇப் பாவையினிருந்தோன்றன்னை, இருந்தோய், நீயுற்ற இடுக்கண் யாதென்றலுமென்க.

எட்டிகுமரன் வீதிமருங்கியன்ற சாளரச்சேக்கையிலிருந்தமையின, உதயகுமரன் அவனைக்கண்டான்.

மாங்கது கேட்டு வீங்கிள முலையொடு
பாங்கிற் சென்று தான்றொழு தேத்தி
மட்டவி ழலங்கன் மன்ன குமாற்
கெட்டி குமா னெய்திய துரைப்போன்
வகைவரிச் செப்பினுள் வைகிய மலர்போற்
றகைநலம வாடி மலாவனம புகூஉ
மாதவி பயந்த மணிமே கலையொடு
கோவல னுற்ற கொடுந்துயர் தோன்ற
நெஞ்சிறை கொண்ட நீர்மையை நீக்கி
வெம்பகை நரமபி னென்கைச் செலுததிய
திதுயா னுற்ற விடும்பை யென்றலு
மதுமலர்த தாரோன் மனமகிழ் வெய்தி
யாங்கவ டன்னையென் னணித்தே சேற்றி
யீங்கியான் வருவே னென்றவற் குரைத்தாங்
கோடுமழை கிழியு மதியம் போல

சூஉ. பாங்கு - பககம். தொழுது -

சுரு. மட்டு - தேன்.

சுச. எய்தியது - நேர்ந்ததை.

சு0 - சுச. என்றலும் அதுகேட்டு எட்டிகுமரன் கணிகையொடுஞ்சென்று தொழுது எதி மன்னகுமரறகு உரைப்போன்.

சுரு. செப்பினுள்வைகியமலர் புழுக்கத்தால் வாடும்.

சுசு. தகைநலம் - மிக்கவழகு.

சுஎ - சுஅ. பயந்த - பெற்ற. மணிமேகலையைக் கண்டவுடன எட்டிகுமரனுக்குக் கோவலனடைந்ததுன்பம் நினைவிற்கு வந்தமையின, 'மணிமேகலையொடு, கோவல னுற்ற கொடுந்துயர் தோன்ற' என்றான்; இப்படியே "இளங்கோன்கண்ட விளம்பொற் பூங்கொடி, . . . உருவி லாளனொ டுருவம் பெயர்ப்ப" என்பர் பின்னும், ரு - ம் காதை, க - சு.

சுகூ. நெஞ்சு இறைகொண்ட நீர்மையை - மனம் தங்குதல்கொண்டதன்மையை; "வண்டிறை கொண்ட கமழ்பூம் பொய்கை" என்பது மதுரைக்காஞ்சி, உருகூ.

௭0. பகைநரம்பு - நின்றநரம்பிற்கு ஆறவதும் மூன்றவதுமாகிய நரம்புகள்; "நின்ற நரம்பிற் காறு மூன்றுஞ், சென்றுபெற நிறபது கூட மாகும்" என்றார். கூடம - பகை.

சுச - எக. உரைப்போன் மலர்போல் நலமவாடி வனம்புகூஉம் மணிமேகலையொடு கோவலனுற்ற துயர்தோன்ற அததுயரம் நீாமையைநீக்கி என் கையைப் பகைநரம்பிற் செலுத்தியது; யானுற்ற இடுமபை இது வென்றலுமெனக.

எஉ. தாரோன் - உதயகுமரன். முனிவருடைய உறைவிடத்தைநீங்கி மலர்வனததிற்குச் சென்ற மணிமேகலையை இனி எளிதிற்பெறலாமென்று மகிழ்ந்தான்.

எங. அவள்தன்னை - மணிமேகலையை.

எச. அவற்கு - எட்டிகுமரற்கு.

எரு. கிழியுமதியம - கிழிதற்குக் காரணமாகிய மதியம். மதியமபோல - சந்திரன்போல, கலைநிரம்பினமையின், உதயகுமாறனுககு மதி உவமையாயிற்று; "நாள்வாய் நிறைந்த நகைவெண்மதி செல்வ தொத்தான" என்பது சீவகசிந்தாமணி, கோவிந்தையாரிலம்பகம், சசு. மாடஙகட்கு மழையையும், தெருக்கு மதியததையு முவமையாக்கினும் பொருந்தும்.

மாட வீதியின் மணித்தேர் கடைஇக்
காரலர் பூம்பொழிற் கடைமுகங் குறுகவத்
தேரொலி மாதர் செவிமுத லிசைத்தலுஞ்
சித்திரா பதியோ டுதய குமரனுற்
றென்மேல வைத்த வுள்ளத் தானென
வயந்த மாலை மாதவிக் கொருநாட்
கிளந்த மாற்றங் கேட்டே னாதலி
னங்கவன் றேரொலி போலு மாயிழை
யீங்கென் செவிமுத லிசைத்ததென் செய்கென
வமுதுறு தீஞ்சொ லாயிழை யுரைத்தலுஞ்
சுதமதி கேட்டுத் துளக்குறு மயில்போற்
பளிக்கறை மண்டபம் பாவையைப் புகுகென்
றொளித்தறை தாழ்கோத் துள்ளகத் திரீஇ
யாங்கது தனக்கோ ரைவிலின் கிடக்கை
நீங்காது நின்ற நேரிழை தன்னைக்
கல்லென் றானையொடு கடுந்தேர் நிறுத்திப்
பன்மலர்ப் பூம்பொழிற் பகன்முளைத் ததுபோற்

௭௬. கடைஇ - செலுத்தி; "காலி பக்கன்ன கதழ்பரி கடைஇ" என்பது **மதுரைக்காஞ்சி**, ௪௪௦.

௭௭. கடைமுகம்-வாயிலிடம். குறுக-அடைய.

௭௮. மாதர் - மணிமேகலை. செவிமுதல் - செவியிடம்.

௭௧ - ௭௮. என்றலும் மகிழ்வெய்தி, 'யுவனை என்தேரேற்றி இங்குவருவேன்' என்று அவனுக்குரைத்து மதியம் போலத்தேரைக் கடைஇப் பொழிலின் கடைமுகங்குறுக, அத்தேரொலி செவிமுதலிசைத்தலுமென்க.

௮௨. கிளந்த - சொல்லிய.

௮௩. ஆயிழை - விளி.

௮௪. என்செய்கு - யாதுசெய்வேன்.

௮௫. அமுதுறு தீஞ்சொ லாயிழை - மணிமேகலை. 'அமுதூறு தீஞ்சொல்' என்றும் பாடம்.

௭௧ - ௮௫. உதயகுமரன் என்மேல் வைத்த உள்ளத்தானென்று வயந்தமாலை சித்திராபதியோடுற்று முன்னொருநாள் மாதவிக்குக் கிளந்தமாற்றத்தை நான் கேட்டேன்; ஆதலின், ஆயிழாய், என் செவிமுதலிசைத்த ஒலி, அவன் தேரொலிபோலும்; இதற்கு யான் யாதுசெய்வேனென்று மணிமேகலையுரைத்தலுமென்க.

௮௬. துளக்குறுமயில் - தளர்ச்சியுற்ற மயில்.

௮௭. மண்டபத்தில். பாவையை - மணிமேகலையை. புகுக என்று.

௮௮. 'தாட்கோத்து' என்றும் பாடம். இரீஇ - இருக்கச்செய்து.

௮௯. ஐந்துவிற்கிடை நீளத்தே நிற்றல் மரபு; "ஐவிலி னகல நின்றாங் கடிதொழு திறைஞ்சி னாற்கு" என்பது **சீவகசிந்தாமணி**, கனகமாலையாரிலம்பகம், ௧௪௮. "இருந்த மன்னவற் கெழுகோலெல்லையுட், பொருந்தல்செல் லாது புக்கவ ணிறைஞ்ச" என்று எழுகோலெல்லைகூறுவர் **பெருங்கதை** நூலாசிரியர்; உஞ்சைக்காண்டம், உரிமைவிலாவனை.

௮௬ - ௯௦. கேட்டு மண்டபத்திற்புகுகவென்று பாவையையொளித்துத் தாழ்கோத்து இருத்தி அது தனக்கு ஐந்துவிற்கிடக்கையில் மயில்போல் நின்ற நேரிழையாகிய சுதமதிதன்னை.

௯௧. கடுந்தேர், கடுமை - விரைவு.

௯௨. பகல் - சூரியன்.

பூமரச் சோலையும் புடையும பொங்கருந்
தாமரைச் செங்கண் பரப்பினன் வருஉ
மாசிளங் குமர னருமி லொருசிறை
யொருதனி நின்று யுன்றிற மறிந்தேன்
வளரிள வனமுலை மடந்தை மெல்லிய
றளரிடை யறியுந் தன்மையள் கொல்லோ
விளையா மழலை விளைந்து மெல்லியன்
முளையெயி றரும்பி முத்துநிரைத் தனகொல
செஙகய னெடுங்கண் செவிமருங் கோடி
வெங்கணை நெடுவேள் வியப்புரைக் குங்கொல்
மாதவ ருறைவிட மொரீஇமணி மேகலை
தானே தமியளிங் கெய்திய துணையெனப்
பொதியறைப் பட்டோர் போன்றுளம வருந்தி
மதுமலர்க் கூந்தற் சுதமதி யுரைக்கு
மிளமை நாணி முதுமை யெய்தி
யுரைமுடிவு காட்டிய வுரவோன் மருகற்

---

௯௩. பொங்கர் - ஈண்டுக் கட்டுமலே; மரக்கிளையென்றுமாம்.

௯௪. பரப்பினன் - பரப்பி.

௯௫. ஒருசிறை - ஒருபக்கம்; 'வானவ ருறையும் பூநா றொருசிறை' என்பது சிலப்பதிகாரம், நாடுகாண்காதை, ௧௫௮.

௯௬. திறம் - இயல்பு.

௯௭. மெல்லியல - மணிமேகலை.

௯௮. தளரிடை - ஆடவர் காமததாற் றளர்ந்த சமயததை; இடை - காலம; "உடையோர் போல விடையின்று குறுகி" என்பது புறநானூறு, ௫௪. 'தளர்நடை யறியுந் தன்மையை கொல்லோ' என்றும் பாடம்.

௯௯. "விளையா மழலையின் விரித்துரை யெழுதி" என்பது சிலப்பதிகாரம், வேனிற்காதை, ௬௭.

௧௦௦. "முளைவள ரிளநகையே முழுமதி புரைமுகமே" என்பது சிலப்பதிகாரம், கானல்வரி, ௧௬, "முளையிள வெண்பன் முதுக்குறை நங்கை" என்பது சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை, ௨௦௨.

௧௦௨. வெங்கணை - விருப்பத்தைச் செய்யுமம்பு.

௧௦௩. மாதவர் - சங்கத்தார்; அறவணவடிகளென்றுமாம். ஒரீஇ - நீங்கி.

௧௦௪. தமியள் - தனித்தவளாய்.

௯௦ - ௧௦௪. தானையொடு தேரைப் புறத்தே நிறுத்திப் பொழிலில் பகன் முளைத்ததுபோல் வருங்குமரன், சுதமதியைககண்டு, ஒருசிறை தனிநின்றாய், உன்றிறமறிந்தேன்; மணிமேகலை அறியுநதன்மையள் கொல்லோ; அவள் முளையெயிறு முத்துநிரைத்தனகொல்; அவள் கண்கள வேள்வியப்புரைக்குங்கொல்; அவள் மாதவருறைவிடததையொரீஇத் தமியளாய் இங்கு எய்தியதற்குக் காரண முறையென்று கேட்பவென்க.

௧௦௫. பொதியறைப்பட்டோர் - துவாரமில்லாத கீழறையில அகப்பட்டோர்; "போதார் பிறவிப் பொதியறை யோரென" என்பது சிலப்பதிகாரம், நாடுகாண்காதை, ௧௧௧. 'போன்றுமெய்வருந்தி' என்றும் பாடம்.

௧௦௭ - ௧௦௮. இளமைநாணி முதுமை யெய்தி உரைமுடிவுகாட்டியவுரவோன் - இளமைப்பருவததைநாணி முதுமைப் பருவத்தையடைந்து, தம்முட் பகைமை கொண்டுவந்தா ரிருவருடைய சொல்லை ஆராய்ந்து அவற்றின்முடிவை அவர்களுக்கு விளக்கிய அறிவுடையோனாகிய கரிகாற்பெருவளத்தா னென்னும்

கறிவுஞ் சால்பு மரசியல் வழக்குஞ்
செறிவனை மகளிர் செப்பலு முண்டோ
வனைய தாயினும் யானொன்று கிளப்பல்
வினைவிளங்கு தடக்கை விறலோய் கேட்டி
வினையின் வந்தது வினைக்குவிளை வாயது
புனைவன நீங்கிற் புலால்புறத் திடுவது
மூத்துவிளி வுடையது தீப்பிணி யிருக்கை
பற்றின் பற்றிடங் குற்றக் கொள்கலம்
புற்றடங் கரவிற் செற்றச் சேக்கை
யவலக் கவலை கையா றழுங்க
றவலா வுள்ளந் தன்பா லுடையது
மக்கள் யாக்கை யிதுவென வுணர்ந்து

சோழன். இவ்வரலாற்றை அடியில்வரும் பழமொழிவெண்பாவாலும், அதன் உரையாலுமுணர்க; உக —"உரைமுடிவு காணா னிளமையோ னென்ற, நரைமுது மக்க ளுவப்ப - நரைமுடித்துச், சொல்லான் முறைசெய்தான் சோழன் குலவிச்சை, கல்லாமற் பாகம் படும்." என்பது - தம்முள் மறுதலையாயினா ரிருவர் தமக்கு முறைமைசெய்யவேண்டி வந்து சில சொன்னால் அச் சொனமுடிவுகண்டே ஆராய்ந்து முறைசெய்ய அறிவுநிரம்பாத இளமைப்பருவத்தானென் றிகழ்ந்த நரைமுதுமக்களுவக்கும்வகை நரைமுடித்துவந்து முறைவேண்டிவந்த இருதிறத்தாரும் சொல்லிய சொற்கொண்டே ஆராய்ந்தறிந்து முறைசெய்தான் கரிகாற்பெருவளத்தானென்னுஞ் சோழன்; ஆதலால், தத்தம் குலததுக்குத்தக்கவிச்சைகள் கற்பதற்குமுன்னே செம்பாகமுளவா மென்றவாறு. இது பற்றியே, "முதியோர், ரவைபுகு பொழுதிற்றம் பகைமுரண் செலவும்" என்று பொருநராற்றுப்படையிற் கூறியிருத்தல் காண்க; கஅஎ-கஅஅ. உரவோன்மருகற்கு - கரிகாற்பெருவளததான் வழித்தோன்றலாகிய உனக்கு; மருகன் - வழித்தோன்றல்; "உலக மாண்ட வுயர்ந்தோர் மருக" என்பது மதுரைக்காஞ்சி, உரு.

க0கூ. சால்பு - அமைதி. அரசியலவழக்கு - அரசநீதி.

க0ரு - கக0. அதுகேட்டு உளம்வருந்தியுரைக்குஞ்சுதமதி மருகற்கு அறிவு முதலியவற்றை மகளிர்செப்புதலும் உளதாகுமோவென்றாளென்க. கிளப்பல - சொல்லுவேன்.

ககஉ. வினை - போர். 'கேணீ' என றும் பாடம்.

இனி, மணிமேகலையை அவன் விரும்பாமலிருத்தற்கு உடம்பின் தூய்தனமையைச் சொல்லுவாள் :—

ககங. வினையின்வந்தது - கன்மத்தால் வந்தது. வினைக்குவிளைவாயது - கன்மததிற்கு விளைநிலமாகவுள்ளது.

ககச. புனைவன - சந்தனம் மலர்முதலியவைகள்.

ககரு. மூத்துவிளிவுடையது - முதுமையுற்றுச் சாதலையுடையது. தீப்பிணியிருக்கை - கொடியநோய்களுக்கு இருப்பிடமாகவுள்ளது.

ககஎ. அரவு அடங்கு புற்றினை இயைகக. செற்றம - பகைமை நெடுங காலநிகழ்வது. சேக்கை - தங்குமிடம்.

ககஅ. அவலம் - வருததந்தோனறி நிற்றல்; கவலை - யாதுசெய்வலெனறல்; கையாறு-மூர்ச்சித்தல் ; அழுங்கல்-வாய்விட்டழுதல்; இஃது அரற்றெனப்படும். 'கையாற்றழுங்கல்' என்றும் பாடம்.

ககஅ - ககக. அவல முதலியவைகள் நீங்காததாகிய உள்ளத்தினைத் தன்னிடத்தே உடையது.

கஉ0. யாக்கை இதுவென - யாக்கை னறது, 'வினையின்வந்தது' என்றது முதலியவற்றை.

மிக்கோ யிதனைப் புறமறிப் பாரா
யென்றவ ளுரைத்த விசைபடு தீஞ்சொல்
சென்றவ னுள்ளஞ் சேரா முன்னர்ப்
பளிங்குபுறத் தெறிந்த பவளப் பாவையி
னிளங்கொடி தோன்றுமா லிளங்கோ முன்னென.

பளிக்கறைபுக்ககாதை முற்றிற்று.

௧௨௧. இதனை - இவ்வுடமபை.புறமறிப்பாராய் - புறமறியாகப் பார்ப்பாயாக; பார்ப்பின், இதன் தூய்தன்மை விளங்குமென்றபடி; "மற்றதனைப் பைம்மறியாப் பார்க்கப் படும்" என்பது நாலடியார், தூய்தன்மை, ௨. 'பைம்மறியா நோக்கப் பருந்தார்கதுங் சகைமைத்து' என்பது, இறையனாரகப்பொருளின் முதற் சூத்திர உரையிற் காணப்பட்டது.

௧௨௨. அவள் - சுதமதி.

௧௨௪. "பளிங்குபுறத தெறிந்த பவளப் பாவை" என்பா பின்னும்; ௧௮ - ம் காதை, ௭௮; "பளிக்கறைப் பவளப் பாவை பரிசெனத் திகழுஞ் சாயல்" என்பது சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், ௧௬௬.

௧௨௫. தோன்றும் - தோன்றுநின்றாள்.

௧௨௨ - ௧௨௫. என்று அவள் உரைத்தசொல் அவனுள்ளம் சென்று சேரா முன்னர், இளங்கொடி பாவைபோல இளங்கோமுன் தோன்றுமென்க.

௧-௧௨௫. காண்பனகாண் காணுய் காண் காண் காணெனச் சுதமதிகாட்ட மணிமேகலை வனங்காண்புழி, மன்னவன்சிறுவன் உதயகுமரன் அரசிளங்குமரன் வருவோன், இருந்தோன் றன்னை, இருந்தோய், யாதென்றலும், உரைப்போன், என்றலும், மகிழ்வெய்தி உரைத்துக் கடைஇக் குறகத தேரொலி இசைததலும என்செய்கெனவுரைததலும் கேட்டு இரீஇ நின்ற நேரிழைதனனை, நின்றாய், அறிந்தேன்; தன்மையள்கொல்லோ, நினைத்தனகொல், உரைகருங்கொல, உரையென, சுதமதி, செப்பலுமுண்டோ; கிளப்பின்; கேட்டி என்று உரைத்தசொல் சேராமுன்னர் இளங்கொடி தோன்றுமெனமுடிக்க.

ஐந்தாவது

# மணிமேகலாதெய்வம் வந்துதோன்றியகாதை.

[ ஐந்தாவது மணிமேகலை உதயகுமரன்பால் உள்ளத்தானென மணிமேகலைதனக்கு மணிமேகலாதெய்வம் வந்துதோன்றியபாட்டு ]

இளங்கோன் கண்ட விளம்பொற் பூங்கொடி
விளங்கொளி மேனி விண்ணவர் வியப்பப்
பொருமுகப் பளிங்கி னெழினி வீழ்த்துத்
திருவின் செய்யோ ளாடிய பாவையின்
விரைமல ரைங்கணை மீன விலோதனத்
துருவி லாளனொ டுருவம் பெயர்ப்ப
வோவிய னுள்ளத் துள்ளியது வியப்போன்

க. இளங்கோன் - உதயகுமரன். பொற்பூங்கொடி - காமவல்லிபோன்ற மணிமேகலை.

உ. விளங்கொளி மேனி விண்ணவர் - தேவர்; கூ - ம் காதை, கூ - கo.

௩. பொருமுகப் பளிங்கின் எழினி - பளிங்காகிய பொருமுகவெழினியை; எழினி - திரைச்சீலை; பொருமுகவெழினி - மூவகைத் திரைச்சீலைகளுள் ஒன்று; "ஒருமுக வெழினியும் பொருமுக வெழினியுங், கரந்துவர லெழினியும் புரிந்துடன் வகுத்து" என்பது சிலப்பதிகாரம், அரங்கேற்றுகாதை, ௧0௯ - ௧௧0.

௪. திருவின் செய்யோள் - இலக்குமி; இன் - சாரியை; "செம்மலர்த் திருவின் பாவாய்" என்புழிப்போல. இது சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், உ௪௬. பாவை - பதினோராடலுள் ஒன்று; அஃது, போர்செய்தற்குச் சமைந்தகோலத்தோடு அசுரர் மோகித்துவீழ்ப்படி கொல்லிப்பாவைவடிவாய்த் திருமகள் ஆடியது; இதனை, "செருவெங் கோலமவுணர் நீங்கத், திருவின் செய்யோளாடிய பாவையும்" என்பதனாலுணர்க; இது சிலப்பதிகாரம், கடலாடுகாதை, ௬0 - ௬௧; "பாவை திருமக ளாடும் றதற்குறப், போவாமலொன்றடனே யொன்ற." பாவையின் - பாவைபோல; பாவையாடிய திருமகள்போல வெனினும் பொருந்தும்.

ரு. மலரைங்கணை - மலராகிய ஐந்து பாணம். விலோதனம் - கொடி.

௬. உருவிலாளன் - அநங்கன். 'உருவிலாளனொ டுருவம் பெயர்ப்ப' என்றதனும், இவளுருவத்தைக் காண்பவர்களுக்கு உடனே மன்மதபாதை உண்டாகின்றதென்பது கருத்தாகக்கொள்க. ௪ - ம் காதை, ௬௭ - ௬௮.

க - ௬. பூங்கொடி, பாவையின் உருவிலாளனொடு உருவம் பெயர்ப்பவென்க.

எ. ஓவியன் - சித்திரமெழுதுவோன்; உள்ளியது - சித்திரம் எழுதுவதற்காக நினைந்ததை; மணிமேகலையுருவத்தைச் சித்திரமென்று கருதினனென்றவாறு; இது, "சித்திரக் கைவினை திசை

காவியங் கண்ணி யாகுத றெளிந்து
தாழொளி மண்டபந் தன்கையிற் றடைஇச்
சூழ்வோன் சுதமதி தன்முக நோக்கிச்
சித்திரக் கைவினை திசைதொறுஞ் செறிந்தன
வெத்திறத் தாணின் னிளங்கொடி யுரையெனக்
குருகுபெயர்க் குன்றங் கொன்றோ னன்னநின்
முருகச் செவ்வி முகந்துதன் கண்ணாற்
பருகா ளாயிற் பைந்தொடி நங்கை
யூழ்தரு தவத்தள் சாப சரத்தி
காமற் கடந்த வாய்மைய ளென்றே
தூமலர்க் கூந்தற் சுதமதி யுரைப்பச்
சிறையு முண்டோ செழும்புனல் மிக்குழீஇ
நிறையு முண்டோ காமங் காழ்கொளிற

---

தொறுஞ் செறிந்தன, வெத்திறத்தாணின் னிளஙகொடி யுரையென" (ரு-ம் காதை, ௧௧-௧௨) எனவும், "மேவிய பளிங்கின் விருந்திற் பாவையிஃதோவி யச் செய்தியென் றெழிவேன் முன்னர்" (௧அ-ம் காதை, ௬௬-௬௭) எனவும், "எங்கிம் மண்ணீட்டி யாரென வுணர்சேன்" (௧அ-ம் காதை, ௧௫௬) எனவும் பின் வருவனவற்றால் துணியப் படும். வியப்போன் - ஆச்சரியமடைவோன்; இது பெயர்; இனி, 'ஓவியன்' என்பதற்கு உதயகுமரன் ஆச்சரியத்தால் சித்திரம்போன்றவனாய் நின்றெனறும், 'அது' என்பதற்கு அவ்வடிவத்தை யென்றும் பொருள்கூறினும் பொருந்தும்.

அ. காவியங்கண்ணியாகுதல் - மணிமேகலையாதலை.

எ-அ. வியப்போன் தெளிந்தென்க.

௯ தாழ் ஒளி மண்டபம் - தங்கிய ஒளியையுடைய பளிக்குமண்டபத்தை தடைஇ - தடவிப்பார்த்து; மண்டபத்துள்ளே செல்லக் கருதியவன் வாயில் காணுதற்கு முயலுகின்றான்

௧௨. எத்திறத்தாள் - எவ்விடத்திலுள்ளாள். நின் இளங்கொடி எத்திறத்தாள்.

௧௦-௧௨. சூழ்வோன் நோக்கி உரையென.

௧௩. குருகுபெயர்க்குன்றம் - கிரவுஞ்சகிரி, கொன்றோன் - முருகக்கடவுள்; "குருகு பெயர்க்குன்றங் கொன்ற நெடுவேலே" எனவும், "குருகு பெயர்க்குன்றங் கொன்றான் மடவன்" எனவும் வருதல்காண்க; இவை, சிலப்பதிகாரம், குன்றக்குரவை

௧௪. முருகச்செவ்வி - இளமைப்பருவத்தின அழகை.

௧௫. ஆயின் - ஆராயுமிடத்து.

௧௪-௧௫ நங்கை நின் செவ்வியைப் பருகாளெனவியைக்க.

௧௬. ஊழ் - முறை; பௌத்தர்களுக்கு ஊழ்வினை உடன்பாடாகலின், ஊழ்வினையால் தரப்பட்ட தவத்தையுடையளென்றுமாம். சாபசரத்தி - சாபமாகிய அம்பையுடையாள்; சாபம் - சபித்தல்; வில்லையும் அம்பையு முடையாளென்றும் ஒருபொருள் தோன்றிற்று. தவத்தினனாச் சாபசரரென்பர் வடநூலார். 'ஊழ்தரு தவத்தர் சாபச் சாதகி' எனவும் பாடம்.

௧௯. செழும்புனல் மிக்குழீச் சிறையு முண்டோ - வளவியபுனல் மிக்கவிடத்து அதனைத் தாங்கும் அரணுமுண்டோ; இல்லையென்றபடி; "நீர்மிகிற் சிறையு மில்லை தீமிகின், மன்னுயிர் நிழற்று நிழலு மில்லை" என்பது புறநானூறு, ௫௧

௨௦. காமம் காழ் கொளின் நிறையும் உண்டோ - காமம் அடிப்படின் அதனை நிறுத்துந்தன்மையும் உளதாகுமோ;

செவ்விய ளாயினென் செவ்விய ளாகென
வவ்விய நெஞ்சமொ டகல்வோ னாயிடை
யஞ்செஞ் சாயல ராந்தா ணத்துளோர்
விஞ்சைய னிட்ட விளங்கிழை யென்றே
கல்லென் பேரூர்ப் பல்லோ ருரையினை
யாங்கவ ருரைவிட நீங்கி யாயிழை
யீங்கிவ டன்னோ டெய்திய துரையென
வார்கழல் வேந்தே வாழ்கநின் கண்ணி
தீநெறிப் படரா நெஞ்சினை யாகுமதி
யீங்கிவ டன்னோ டெய்திய காரண
மீங்குநீர் ஞால மாள்வோய் கேட்டருள்
யாப்புடை யுள்ளத் தெம்மனை யிழந்தோன்
பார்ப்பன முதுமகன் படிம வுண்டியன்
மழைவளந் தருஉ மழலோம் பாளன்
பழவினைப் பயத்தாற் பிழைமண மெய்திய
வெற்கெடுத் திரங்கித் தற்றக வுடைமையிற்

காழ் - வயிரம். நிறை - நிறுத்துந் தன்மை; "பிறிது மாறுப காமங் காழ் கொளினே" என்பது குறுந்தொகை.

௨௧. 'செவ்வியளாகவென' என்றும் பாடம்.

௨௨. ஔவியம் - பிறர்க்கு இவள் உரியளாதல் கூடுமோவென்பதால் உளதாகிய பொறாமை. ஆயிடை - அப்பொழுது. 'அகல்வோ ளாயிழை' எனவும் பாடம்.

௨௩. அஞ்செஞ்சாயலர் - மகளிர்; என்றது ஜைனஸந்யாஸினிகளை. ஆந்தாணம் - அவர்களிடம். 'அந்தாணத்திடை' எனவும், 'ஆந்தானத்திடை' எனவும் பாடம்.

௨௪. விஞ்சையன் - வித்தியாதரன்; என்றது மாருதவேகனை.

௨௫. உரையினை - உரையையுடையாய்.

௨௩ - ௨௫. இவர்களிடத்தில் சுதமதி மாருதவேகனால் இடப்பட்டாளென்பதை, "என்மக ளிருந்த விடமென் றெண்ணித், தன்னுறு துன்பந் தாங்காது புகுந்து, சமணீர் காணுஞ் சரணென் றேனை" என்பதனாலுணர்க; ௫-ம் காதை, ௫௦ - ௫௨.

௨௭. உரையென - சொலவென்று உதயகுமரன் சொலல.

௨௮. "வாழ்கநுங் கண்ணி மாதோ" என்பது சீவகசிந்தாமணி, விமலையாரிலம்பகம், ௨.

௨௯. படரா - செல்லாத. நெஞ்சினையாகுமதி - நெஞ்சையுடையாயாக ஆகக்கடவாய்; மதி - முன்னிலையசை.

௩௦ - ௩௧. காரணம் கேட்டருள்.

௩௨. யாப்பு - உறுதி. எம்மனை - எம அன்னை; "எம்மனை காணாய்" (௬-ம காதை, ௧௨௧) என்பர் பின்னும்; "எம மனை தமியை யாகி யிவ்விட ருற்ற தெல்லாம்" என்பது சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், ௨௮௬.

௩௩. படிமவுண்டி - நோற்றுப்பட்டினிவிட்டுண்ணும் உணவு; "படிம வுண்டிப் பார்ப்பன மகனே" என்று வருதல் காண்க.

௩௫. மாருதவேகனுக்குத் தான் சில நாள் உரியளானதுபற்றி, 'பிழைமண மெய்திய' என்றாள்; "ஓதலந்தணர்க கொவ்வே னாயினும்" என்று பின் வருதல் காண்க; ௫-ம் காதை, ௪௩.

௩௬. எற்கெடுத்து இரங்கி - என்னைக் காணப்பெறாது இரங்கி; "அரசுகெடுத

குரங்கு செய்கடற் குமரியம் பெருந்துறைப்
பரந்துசென் மாக்களொடு தேடினன் பெயர்வோன்
கடன்மண்டு பெருந்துறைக் காவிரி யாடிய
வடமொழி யாளரொடு வருவோன் கண்டீங்
கியாங்கனம் வந்தனை யென்மக ளென்றே
தாங்காக் கண்ணீ ரென்றலை யுதிர்த்தாங்
கோத லந்தணர்க் கொவ்வே னாயினுங்
காதல னாதலிற் கைவிட லீயா
னிரந்தூண் டலைக்கொண் டிந்நகர் மருங்கிற்
பரந்துபடு மனைதொறுந் திரிவோ னொருநாட்
புனிற்றாப் பாய்ந்த வயிற்றுப் புண்ணினன்
கணவிரி மாலை கைக்கொண் டென்ன
நிணநீடு பெருங்குடர் கையகத் தேந்தி
யென்மக ளிருந்த விடமென் றெண்ணித்
தன்னுறு துன்பந் தாங்காது புகுந்து
சமணீர் காணுஞ் சரணென் றோனை
யிவணீ ரலலவென் றெண்ணொடும வெகுண்டு
மையறு படிவத்து மாதவர்

---

தலைமரு மல்லற் காலை" எனபது சிலப்பதிகாரம், அந்திமாலைசசிறப்புச்செய் காதை, ௮. தன் தக உடைமையின - தனனைத் தககிருக்குமபடி உடைமையினாலே.

௩௭. 'குரங்குசெய் கடற்றுறை' எனவும், 'குரங்கிகு செய்கடற் குமரி' எனவும் பாடம். குமரி - கன்னியாகுமரி.

௩௭ - ௩௮. குற்றமுற்ற குலமகளிர் அக்குற்றததைப் போககுதற் பொருட்டு குமரியாடச் செலலுதல் மரபாதலால், இவன் கன்னியாகுமரியாற்றிற்குச் செலபவர்களோடு சேர்ந்து சுதமதியைத்தேடிச்சென்றான்; "பார்ப்பனி சாலி காப்புக்கடை கழிந்து, கொண்டோற் பிழைத்த தண்டமஞ்சித், தென்றிசைக் குமரியாடிய வருவோள்" என்று வருதல் காண்க; ௧௩ - ம் காதை, ௫ - ௭.

௩௯. கடன்மண்டு பெருந்துறைக்காவிரி - சங்கமுகத்துறை.

௪0. வடமொழியாளர் - பார்ப்பார்; பார்ப்பனியை, "வடமொழி யாட்டி" என்று பின்னர்க்கூறுவர், ௧௩ - ம காதை, ௭௩.

௪௧. மகள் - விளிப்பெயர்.

௪௨. 'என்றலையுகுத்து' எனவும் பாடம்.

௪௪. கைவிடலீயான் - கைவிடான்; "காவலன மகனோ கைவிட லீயான்" என்பர் பின்னும்; ௧௧ - ம் காதை, ௬௨. "காட்டிய தாதலிற் கைவிட லீயான்" என்பது சிலப்பதிகாரம், புறஞ்சேரியிறுத்தகாதை, ௮௫.

௪௭. புனிற்றா - ஈன்ற அணிமையையுடைய பசு. 'வயிற்றுறு புண்ணினன்' எனவும் பாடம்.

௪௮. கணவிரிமாலை - அலரிமாலை; ௩ - ம் காதை, ௧0௪. 'கணவீரமாலை' எனவும் பாடம்.

௪௯. 'கையகத்தடக்கி' எனவும் பாடம்.

௫௨. சமணீர்காள் - சமணர்களே.

௫௩. இவண் நீர் அலல என்று - இவ்விடத்திற்குரிய தன்மையன்றென்று.

௫௪. படிவம் - தவவேடம். மாதவர் - சைனமுனிவர்.

கையுதிர்க் கோடலிற் கண்ணிறை நீரே
மறவோ ருளீரோ வாருமி லோமெனப்
புறவோர் வீதியிற் புலம்பொடு சாற்ற
மங்குறேய் மாட மனைதொறும் புகூஉ
மங்கையிற் கொண்ட பாத்திர முடையோன்
கதிர்சுடு மமயத்துப் பனிமதி முகத்தோன்
பொன்னிற் றிகழும் பொலம்பூ வாடைய
னென்னுற் றனிரோ வென்றெமை நோக்கி
யன்புட னளைஇய வருண்மொழி யதனு
லஞ்செவி நிறைத்து நெஞ்சகங் குளிர்ப்பித்துத்
தன்கைப் பாத்திர மென்கைத் தந்தாங்
கெங்கைக் குற்ற விடும்பை நீங்க
வெடுத்தனன் றழீஇக் கடுப்பத் தலையேற்றி
மாதவ ருறைவிடங் காட்டிய மறையோன்
சாதுயர் நீக்கிய தலைவன் றவமுனி
சங்க தருமன் றனெமக் கருளிய
வெங்கோ னியல்குண னேதமில் குணப்பொரு
ளுலக நோன்பிற் பலகதி யுணர்ந்து

௫௫. கையுதிர்க்கோடலின் - கையைசைத்துப்போய் விடுகவென்று குறிப்பித்தலால்; "காணமிலியெனக் கையுதிர்க் கோடலும்" என்று பின்னும் வரும்; (௧௬ - ம் காதை, ௪௰); இவ்வழக்கம் மலைநாட்டில் மிகுதியாகவுள்ளது. கண்ணிறை நீரேம - கண்களில் நிறைந்த நீரையுடையேமாய். 'கண்ணுறைநீரென்' எனவும் பாடம்.

௫௬. பாதுகாப்போர் யாரையுமில்லேம்.

௫௭. புறவோர் - மற்றையோர்.

௫௯. பாத்திரம் - பிச்சைப்பாத்திரம். இதனைக் கோரகையென்பர்.

௬௰. இல்லறத்தோர் எல்லோருமுண்டபின்பு, பௌத்த சந்யாசிகள் பகலில் உச்சிப்பொழுதிற் பிச்சைக்குச் செல்ல வேண்டுவது விதியாதலின், "கதிர்சுடு மமயத்து" என்றார். இப்படியே, "தரும சக்கர முருட்டினன் வருவோன், வெங்கதிர மயத்து வியன்பொழி லகவயின், வந்து தோன்றலும்" (௧௰ - ம் காதை, ௨௧ - ௨௮) எனவும், "வெயில்விளங் கமயத்து விளங்கித் தோன்றிய, சாது சக்கரன் றனையா னூட்டிய" (௪௧ - ம் காதை, ௪௰௨ - ௧௰௫) எனவும் பின்னர் வருதல் காண்க.

௬௧. மருதந்துவரில் தோய்க்கப்பட்டு மஞ்சள்நிறமுள்ளதாதலால், 'பொன்னிற் றிகழும் பொலம்பூ வாடை' எனப்பட்டது. இதனைச் சீவரமெனபர்.

௬௩. அளைஇய - கலந்த; "இன்சொலா லீரமளைஇப் படிறிலவாஞ், செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்" என்பது திருக்குறள், ௯௧.

௬௪. 'இடும்பைக ணீங்க' எனவும் பாடம்.

௭௰. சங்கதருமன் - பெயர்; புத்ததர்ம சங்கமென்னு மூன்றனுள் சங்கத்திற்குரிய தருமத்தை அனுசரித்து நடப்பவனென்று பொருள்.

௭௧. எங்கோன் - எம்முடைய சுவாமி; இயல் குணன் - இயல்பாகவே தோன்றின குணங்களையுடையோன்; "இறைவன் குரவ னியல்குண னெங்கோன்" என்பது சிலப்பதிகாரம், நாடுகாண் காதை, ௧௮௪.

௭௨. உலகநோன்பு - உலகசீலம்; பல்

தனக்கென வாழாப் பிறர்க்குரி யாள
னின்பச் செவ்வி மன்பதை யெய்த
வருளறம் பூண்ட வொருபெரும பூட்கையி

கதி உணர்ந்து - பலபிறப்புக்களிலும் பிறந்துபிறந்து உணர்ந்து; கதி - பிறப்பு. 'புத்தன் கைவந்தமுத்தியைவிட்டுக் கன்மவசத்தாலன்றிக் கருணையாற் பரிசுத்த ஞானத்துடன் பலவிலங்கிற் பிறந்தும் இறந்தும் பிணிப்பட்டும் மூத்தும் தர்மோபதேசம்பண்ணி ஒழியாமல் உலகுய்யக்கொண்டான்' எனறும், 'கன்மவசத தாற் பிறந்தானெனில, விலங்காய்ப் பிறநது பேசுதலும், யானையாய் மருப்பீதலும், முயலாய் மாமஸமீதலும் பிறவும் நிகழா' என்றும கூறுவா; இது, **நீலகேசிவிருத்திசமயதிவாகரத்திற்** கண்டது. புததன் கருணையாற் பலவகைப் பிறப்பும் எடுத்தானென்பதைப் **புத்தஜாதககதைகளிற்** பரககககாணலாம்; "எறும்புகடை யயன்முதலா வெண்ணிறந்த வென்றுணைககப், பிறந்திறந்த யோனிதொறும் பிரியாது சூழ்போகி, யெவ்வுடம்பி லெவ்வுயிாக்கும யாதொன்ற் விடரெய்தி, னவ்வுடமபி லுயிர்ககுயிரா யருள்பொழியுந் திருவுள்ளம்" எனவும், "மீனுரு வாகி மெயமமையிற் படிநதனை, மானுரு வாகியே வான்குண மியற்றினை" எனவும்வருவன **வீரசோழியம்**, யாப்புப்படலம, கக - ம் கலிததுறையுதாரணஙகளா. "வானுடும் பரியாயுமரிண மாயும் வனகேழற் களிறாயுமெணகாற் புண்மான, ருனுயும் பனையெருமை யொருதத லாயுந தடககையிளங களிறாயுஞ சடங்க மாயு, மீனுயுமுயலாயு மன்ன மாயு மயிலாயும் பிறவாயும் வெல்லுஞ் சிஙக, மானுயுங கொலைகளவு கட்பொய் காமம வளைந்தவர்தாமுறைநதபதி மாணு வூரே" எனபது, **நீலகேசிவிருத்திஸமயதிவாகரத்திற்** கண்டசெய்யுள்.

௭௩. தான்சீவித்திருததல தனக்கென்றுநினையாமல பிறர்கசே உரிமைபூண்டொழுகுபவன். இதனை, "முன்றுனபெரு மைக்கணின் றுன்முடி வெய்துகாறு, நன்றே நினைந்தான் குணமொழிந்தானற னக்கேன், றென்றுனு மூன்ளான் பிறர்க்கே யுறுதி சூழ்ந்தா, னன்றே றவன வன்றுன்சர ணஙக ளன்றே" (இது **வீரசோழியம்**, யாப்புப்படலம், ௩-ம் கலித்துறையுளாயிலுள்ள உதாரணச்செய்யுள்) எனவும், "இருட்பாரவினைநீக்கி யெவ்வுயிாக்குங் காவலென, வருட்பாரந் தனிசுமந்த வண்றுமுத லின்றளவு, மதுவொன்று மலரடிககீழ் வந்தடைந்தோர் யாவர்ககும, பொதுவன்றி நினக்குரித்தோ புண்ணியநின் றிருமேனி", "தீதியல் புலியது பசிகெடு வகைநின திருவுரு வருளிய திறமலி பெருமையை." (இவை **வீரசோழியம்**, யாப்புப்படலம், கக - ம் கலிததுறையுதாரணஙகள்) எனவும் வருவனவற்றாலுணர்க. "பிறர்ககற முயலும பெரியோய் நின்னடி" (கக - ம காதை சுரு), "தன்னுயிர்க கிரங்கான் பிறவுயி ரோம்பு, மன்னுயிர் முதல்வன்" (உரு - ம் காதை, கக௬ - ககஎ.) என்பர் பின்னும.

௭௪. இன்பச்செவ்வி மனபதைஎய்த - நிருவாணமடைதற்குரிய பருவததை உயிர்ப்பன்மைகள் அடையுமபடி; மனபதை - உயிர்ப்பன்மை; "மன்பதை சாகநின் புரைமை" என்பது **புறநானூறு**, உகO.

௭௫. அருளறம்பூண்ட ஒரு பெரும் பூட்கையின - காருணயததைப்பூணட ஒப்பற்ற பெரிய மேற்கோளினுலே; அருளறம், நல்லறம், காருண்யம, தயா தருமம் எனபன ஒருபொருட்சொற்கள்; இதனை "அஹிம்ஸா பரமோதர்ம:" என பதிற்காண்க. **கீதகோவிந்தத்தில்** திருமாலின் தசாவதாரததை எடுததுச்சொலலிய "வேதா நுததரதே" எனனும் சுலோகத்திற் பௌததாவதாரததின பெருமையைப்பற்றி, "**காருண்ய மாதந்வதே**" என்று **ஸ்ரீஜயதேவர்** பாராட்டியிருக்கின்றனா.

௭௪ - ௭௫. எய்தப் பூண்டவென்க. உயிர்ப்பன்மைகள் இன்பச் செவ்வியை அடையுமபடி புததன அருளறம்பூணடமையை, "உயிாக ளெல்லா முணர்வுபாழாகிப், பொருள்வழங்கு செவித்துளைதூர்ந்தறி விழநத, வறந்தலை யுலகத் தறம்பாடு சிறககச், சுடர்வழக் கற்றுத் தடுமாறு காலையோ, ரிளவள ஞாயிறு தோன்

னறக்கதி ராழி திறப்பட வுருட்டிக்
காமற் கடந்த வாமன் பாதந்
தகைபா ராட்டுத லல்லதி யாவது
மிகைநா வில்லேன் வேந்தே வாழ்கென
வஞ்சொ லாயிழை நின்றிற மறிந்தேன்
வஞ்சி நுண்ணிடை மணிமே கலைதனைச்
சித்திரா பதியாற் சேர்தலு முண்டென்
றப்பொழி லாங்கவ னயர்ந்து போயபின்
பளிக்கறை திறந்து பனிமதி முகத்துக்
களிக்கயல் பிறழாக் காட்சிய ளாகிக்
கற்புத் தானில ளற்றவ வுணர்விலள்
வருணக் காப்பிலள் பொருள்விலை யாட்டியென்

றிய தென்ன, நீயோ தோன்றினை நின்னடி தொழுதேன்" (௧௦-ம் காதை, ௭ - ௧௨) எனவும், "மாதுய ரெவ்வ மக்களை நீக்கி, விலங்குந் தம்முள் வெருஉம்பகை நீக்கி, யுடங்குயிர் வாழ்கவென் றுள்ளங் கசிந்துகத், தொன்று காலத்து நின்றற முரைத்த, குன்றக மருங்கில்" (௧௦-ம் காதை, ௬௨ - ௬௬) எனவும் இந்நூலுள்ளே பின்னர் வருவனவற்றாலுணர்க.

௭௬. அறக்கதிர் ஆழி திறப்பட உருட்டி - தருமசக்கிரத்தை உலகத்திற் பலவகையாக உருளச்செய்து; தருமத்தைச் சக்கிரமாகக் கூறியதற்கேற்ப 'உருட்டி' என்றார். 'திறப்பட' என்றதனால், பலவகையாக அவன் தருமோபதேசஞ்செய்தமை கூறியவாறாயிற்று. இதுபற்றியே புத்தனைத் தருமசக்கிரப் பிரவர்த்தனகாரியனென்பர்; "ஆதி முதல்வ னறவாழி யாள்வோன்" என்பர் பின்னும்; ௧௦ - ம் காதை, ௬௧. "அருளாழி நயந்தோய்நீ, யறவாழி பயந்தோய்நீ, மருளாழி துரந்தோய்நீ, மறையாழி புரந்தோய்நீ" என்பது வீரசோழியம், யாப்புப்படலம், ௧௧ - ம் கலித்துறையின் உதாரணத்திலுள்ளது.

௭௭. காமற்கடந்த - மாரனைவென்ற; மாரன் - தர்மவிரோதிகளான இச்சைகளை மனத்தில் உண்டாக்கும் ஒரு தேவன்; மகாபோதிவிருட்சத்தின்கீழே தவவொழுக்கம்பூண்டு சோற்றிருக்கையில் இவனாற்செய்யப்பட்ட இடையூறுகளனைத்தையும் வென்றுமேம்பட்டு விளங்கினமையால், புத்தனை 'காமற் கடந்த வாமன்' என்றார்; "மாரனை வெல்லும் வீர நின்னடி" (௧௧ - ம் காதை, ௬௧) எனவும், "போதி மூலம் பொருந்தியிருந்து, மாரனை வென்று வீர னாகி' (௩௦ - ம் காதை, ௧௦ - ௧௧) எனவும் பின்னர் வருதல்காண்க. 'மாரன்' என்பதற்குப்பொருள் மன்மதனன்றென்பது பௌத்த ஸம்பிரதாயமாதலால், இந்நூலில், காமனென்று வருமிடமெல்லாம் மாரனென்று பொருள்கொள்க. வாமன் - புத்தன்; அழகுள்ளவனென்றுபொருள். பாதம் - பாதத்தை.

௭௦ - ௭௭. அருளிய பாதம்.

௭௮. தகை பாராட்டுதல் என்பன - ஒரு சொன்னீரவாய்த் துதித்தலென்ற பொருளில்வந்தன. யாவதும் - சிறிதும். 'அல்லதையாவதும்' எனவும் பாடம்.

௭௯. மிகைநா - மிகைக்கின்ற நா; மிகைத்தல் - வேறுபொருள்களைச் சொலலுதல். "காமனை வென்றோ னாயிரத்தெட்டு, நாம மல்லது நவிலா தென்னா" என்பது சிலப்பதிகாரம், நாடுகாண் காதை, ௧௧௬ - ௧௧௭.

௮௦. நின்றிறம் - நின்வரலாறு.

௮௩. அப்பொழிலில். அயர்ந்து - தன்னைமறந்து; விரும்பியென்றுமாம்.

௮௫. களிக்கயல் - கண்கள்.

௮௬. 'கற்றவப்புணர்விலள்' எனவும் பாடம்.

௮௭. வருணக்காப்பு - வருணத்திற்கே

றிகழ்ந்தன னாகி நயந்தோ னென்னாது
புதுவோன் பின்றைப் போனதென் னெஞ்ச
மிதுவோ வன்னாய் காமத் தியற்கை
யிதுவே யாயிற் கெடுகதன் றிறமென
மதுமலர்க் குழலாள் மணிமே கலைதான்
சுதமதி தன்னொடு நின்ற வெல்லையு
ளிந்திர கோடணை விழாவணி விரும்பி
வந்து காண்குறூஉ மணிமேக லாதெய்வம்
பதியகத் துறையுமோர் பைந்தொடி யாகி
மணியறைப் பீடிகை வலங்கொண் டோங்கிப்
புலவன் றீர்த்தன் புண்ணியன் புராண
னுலக நோன்பி னுயர்ந்தோ யென்கோ
குற்றங் கெடுத்தோய் செற்றஞ் செறுத்தோய்
முற்ற வுணர்ந்த முதல்வா வென்கோ
காமற் கடந்தோ யேம மாயோய்
தீநெறிக் கடும்பகை கடிந்தோ யென்கோ
வாயிர வாரத் தாழியன் றிருந்தடி

---

ற்ற காவல்; வருணமாகிய காவலென்றுமாம். பொருள்விலையாட்டி - விலைமாது.

௮௮. நயந்தோன் - விரும்பினேன்.

௮௯. 'புதுவோன் பின்னர்' எனவும் பாடம்.

௯௧. தன்னென்றது, காமத்தை. 'கெடுகவிதன் றிறமென' எனவும் பாடம்.

௯௪. இந்திர கோடணைவிழா (=இந்திரவிழா) இந்திர கோடணையாகிய விழா; பலவகைப்பட்ட முழக்கங்களையுமுடைமையின், விழா, கோடணையெனப்பட்டது; கோடணை - முழக்கம்; அலங்காரமென்றுங் கூறுவர்; "இந்திர கோடணை யிந்நகர்க் காண, வந்தேன்" (௭ - ம் காதை - ௧௭ - ௧௮) எனவும், "இந்திர கோடணை விழவணி வருநாள்" (௧௭ - ம் காதை, ௬௧) எனவும் பின்பு வருதல் காண்க.

௯௬. ௩-ம் காதை, ௬௫. ஓர் பைந்தொடியாகி - ஒரு பெண்வடிவுகொண்டு.

௯௭. மணியறைப் பீடிகை - பளிக்கறையிலுள்ள பாதபீடத்தை.

௯௯. 'உலவா நோன்பின்' எனவும் பாடம்.

௬௦௦. குற்றம் - காமவெகுளி மயக்கங்கள்; "யாமே லுரைத்த பொருள்களெல்லாங், காம வெகுளி மயக்கங் காரணம்" (௩௦ - ம் காதை, ௨௫௨ - ௨௫௩.) என்று பின்னர்க்கூறுவர்; "பூமகனே முதலாகப் புகுந்தமர ரெண்டிசையுந், தாமலரா லடிமலரைத் தொழுதிரந்து வினவியநாட், காமமும் கடுஞ்சினமுங் கழிப்பரிய மயக்கமுமாய்த், தீமையால் கட்டினுக்குத் திறற்கருவி யாய்க்கிடந்து, நாமஞ்சார் நமர்களுக்கு நயப்படுமாறினிதுரைத்துச், சேமஞ்சார் நன்னெறிக்குச் செல்லுமா றருளினையே" என்பது வீரசோழியர், யாப்புப்படலம், ௧௧-ம் கலித்துறையின் உதாரணத்திலுள்ளது. 'குற்றங்கடிந்தோய்' எனவும் பாடம்.

௬௦௧. முற்றவுணர்ந்த முதல்வா - சர்வஜ்ஞா.

௬௦௨. ஏமமாயோய் - பாதுகாவலாகவுள்ளோய்; ஏமம் - இன்பமுமாம்.

௬௦௩. தீநெறியாகிய கடும்பகை; தீநெறி - குமார்க்கம். 'கடிந்தோ யென்கோ' என்றும் பாடம்.

௬௦௪. ஆயிரவாரத் தாழியன் - பாதத்தில் ஸகஸ்ராரசக்கிரரேகையையுடை

நாவா யிரமிலே னேத்துவ தெவனென்
றெரிமணிப் பூங்கொடி யிருநில மருங்குவந்
தொருதனி திரிவதொத் தோதியி னொதுங்கி
நிலவரை யிறந்தோர் முடங்குநா நீட்டும்
புலவரை யிறந்த புகாரெனும் பூங்கொடி
பன்மலர் சிறந்த நன்னீ ரகழிப்
புள்ளொலி சிறந்த தெள்ளரிச் சிலம்படி
ஞாயி லிஞ்சி நகைமணி மேகலை
வாயின்மருங் கியன்ற வான்பணைத் தோளி
தருநிலை வச்சிர மெனவிரு கோட்ட
மெதிரெதி ரோங்கிய கதிரிள வனமுலை
யார்புனை வேந்தற்குப் பேரள வியற்றி
யூழி யெண்ணி நீடுநின் றோங்கிய
வொருபெருங் கோயிற் றிருமுக வாட்டி
குணதிசை மருங்கி னாண்முதிர் மதியமுங்
குடதிசை மருங்கிற் சென்றுவீழ் கதிரும்
வெள்ளிவெண் டோட்டொடு பொற்றோ டாக
வெள்ளறு திருமுகம் பொலியப் பெய்தலு

---

யவன்; 'ஆயிர நாமத் தாழியன்' எனவும் பாடம்.

௧0௫. ஏத்துவது எவன் - துதிப்பது எத்தன்மையது; என்னுவில் அடங்குவதன்று என்றபடி. ௧௧-ம் காதை, ௭௧-௭௨.

௧0௭. ஓதியின் - மெய்ஞ்ஞானத்துடன். 'ஓதியினேறி' எனவும் பாடம்.

௧0௮. நிலவரை இறந்து - நிலவெல்லையைக் கடந்து. ஓ - இடைச்சொல். நீட்டும் - நீட்டுகின்றாள்; சொல்லுகின்றாளென்றபடி. இனி, நிலவெல்லையைக் கடந்தோராகிய தேவர் தலைகுனிவதற்குக் காரணமாகிய தனது நாவை நீட்டுகின்றாளென்றுமாம்.

௧0௯. புலவரையிறந்த - அறிவின் எல்லையைக் கடந்த; "புலவரையிறந்தோய் போகுதல் பொறேனென்" என்பது சிலப்பதிகாரம், நடுகற்காதை, ௧௭௪. புகார் - காவிரிப்பூம்பட்டினம்.

௧௧௧. அரி - பருக்கைக்கல்.

௧௧௨. ஞாயில் - மதிலுறுப்புக்களில் ஒன்று; அஃது, ஏப்புழைக்கு நடுவாய் எய்து மறையுஞ் சூட்டென்பர் ஆசிரியர் நச்சினார்க்கினியர்; குருவித்தலையென்பர் அடியார்க்குநல்லார். இஞ்சி - மதில்.

௧௧௩. பணை - மூங்கில், இது தோரணகம்பமெனப்படும்.

௧௧0 - ௧௧௩. அகழியாகிய அடியினையும், இஞ்சியாகிய மேகலையையும், பணையாகிய தோளினையுமுடையாள்.

௧௧௪. தருநிலை - கற்பகதரு நிற்குங் கோயில்; வச்சிர (நிலை) - வச்சிராயுதம் நிற்குங்கோயில்.

௧௧௬. ஆர்புனை வேந்தன் - சோழன்.

௧௧௪ - ௧௧௮. இருகோட்டமாகிய கொங்கைகளையும், சோழன் கோயிலாகிய திருமுகத்தையுமுடையாள்.

௧௧௯. குணதிசை - கீழ்த்திசை.

௧௨0. தோடு - காதணிவிசேடம்.

௧௨௨. வெள்ளறு - இகழ்ச்சியற்ற. பெய்தலும் - அணிந்துகொள்ளவும்.

௧௧௯ - ௧௨௨. மதியமும் கதிரும் முறையே வெள்ளித்தோடும் பொற்றோடுமாகத் திருமுகத்திற்பெய்தலும்.

௧0௯ - ௧௨௨. பூங்கொடி தோளி மு-

மன்னச் சேவ லயர்ந்துவிளை யாடிய
தன்னுறு பெடையைத் தாமரை யடக்கப்
பூம்பொதி சிதையக் கிழித்துப் பெடைகொண்
டோங்கிருந் தெங்கி னுயர்மட லேற
யன்றிற் பேடை யரிக்குர லழைஇச்
சென்றுவீழ் பொழுது சேவற் கிசைப்பப்
பவளச் செங்காற் பறவைக கானத்துக்
குவளை மேய்ந்த குடக்கட் சேதா
முலைபொழி தீம்பா லெழுதுக ளவிப்பக்
கன்றுநினை குரல மன்றுவழிப் படர
வந்தி யந்தணர் செந்தீப் பேணப்
பைந்தொடி மகளிர் பலர்விளக் கெடுப்ப
யாழோா மருதத் தின்னரம் புளரக்
கோவலர் முல்லைக குழன்மேற் கொள்ள
வமரக மருங்கிற் கணவனை யிழந்து
தமரகம் புகூஉ மொருமகள் போலக்
கதிராற்றுப் படுத்த முதிராத் துன்பமோ
டந்தி யென்னும் பசலைமெய் யாட்டி
வந்திறுத் தனளான் மாநகர் மருங்கென.

மணிமேகலாதேய்வம் வந்துதோன்றியகாதை முற்றிற்று.

வாட்டி அவள், திருமுகம் பொலியப் பெய்தலும்=சூரியன அஸ்தமிககவும்.

கஉ௩. அயர்ந்து -மெய்ம்மறந்து; விரும்பியென்றுமாம்.

கஉ௩ - கஉ௬. அன்னச்சேவல் பெடைகொண்டு தெங்கின் மடலேற.

கஉ௭. அரிககுரல் - மெலலிய குராலால, அழைஇ - அழைதது.

கஉ௭ - கஉ௮. பேடை, அழைஇப் பொழுதைச் சேவற்கு இசைப்ப.

கஉ௯. செங்காற் பறவை - அன்னப்புள். கானமென்றூர், மிகுதிபற்றி.

க௩0. குடக்கண் (?) சேதா - செவ்விய பசு.

க௩௨. குரல - குரலவாய்.

க௩0 - க௩௨. சேதா பால் துகளையவிப்பக் குரலவாய்ப் படர.

க௩௫. (?)

க௩௬. முல்லை - முல்லைப்பண். “குழல்வளர் முல்லையிற கோவலர் தம்மொடு, மழலைத் தும்பி வாய்வைத் தூத” என்பது சிலப்பதிகாரம், அந்திமாலைச் சிறப்புச்செய்காதை, க௫-க௬. ‘முல்லை குழன்மேற் கொள்ள’ எனவும் பாடம்.

க௩௭. அமரகம் - போர்க்களம்.

க௩௮. தமரகம் - தம்மவர்களிடம்.

க௩௯. சூரியனைப்போக்கிய.

கச0. அந்திப்பொழுதாகிய மங்கை; பசலை மெய்யாட்டி யென்றூர், கணவனைப் பிரிந்தாளென்பது புலப்பட.

கசக. இறுத்தனள் - தங்கினுள்.

கச0 - கசக. பசலைமெய்யாட்டி மாநகர்மருஙகு வந்திறுததனள்.

க - கசக. இளம்பொற்பூங்கொடி உருவம் பெயர்ப்ப, சூழ்வோன சுதமதி முகநோககி உரையென, உரைப்ப, அகலவோன் எய்தியது உரையென, கேட்டருள; சங்கதருமனருளிய வாமன் பாதத்தைப் பாராட்டுதலலலது மிகைநாவில்லேனென, அவன் போயபின், மணிமேகலை சுதமதியொடு நின்ற வெலலையுள், மணிமேகலாதெய்வம், பைந்தொடியாகிப் பீடிகையை வலஙகொண்டு ஓங்கி ஒதுங்கி நாநீட்டும்; நீட்டப் புகாரெனும் பூங்கொடி பெய்தலும், பசலைமெய்யாட்டி முதிராத துன்பமோடு நகர்மருங்கு வந்திறுத்தனளென்று முடிகக.

# ஆருவது

# சக்கரவாளக்கோட்டமுரைத்தகாதை.

[ஆருவது மணிமேகலைதனக்கு
மணிமேகலாதெய்வம் சக்கரவாளக்கோட்டமுரைத்து
அவளை மணிபல்லவத்துக்கொண்டுபோனபாட்டு.]

அந்தி மாலை நீங்கிய பின்னர்
வந்து தோன்றிய மலர்கதிர் மண்டிலஞ்
சான்ருேர் தங்க ணெய்திய குற்றந்
தோன்றுவழி விளங்குந் தோற்றம் போல
மாசறு விசும்பின் மறுநிறங் கிளர
வாசற விளங்கிய வந்தீங் தண்கதிர்
வெள்ளிவெண் குடத்துப் பால்சொரி வதுபோற்
கள்ளவிழ் பூம்பொழி லிடையிடை சொரிய
வுருவு கொண்ட மின்னே போலத்
திருவி லிட்டுத் திகழ்தரு மேனிய

உ. மலர்கதிர் மண்டிலம் - சந்திரமண்டிலம்.

௩. சான்ருேர்-உயர்ந்தகுடியிற்பிறந்த மேன்மக்கள். எய்திய - உண்டாகிய.

௪. தோன்றுவழி - தோன்றுமிடத்து. 'தோன்றுவழி விளக்கும்' என்றும் பாடம்.

ரு. மாசு - குற்றம். விசும்பு - ஆகாயம். மறு - களங்கம். நிறம் கிளர - நிறம் விளங்கித்தோன்ற; நிறம் - மார்பிலென்றுமாம்.

௩ - ரு. சந்திரனிடத்துள்ள தூய்மையாலும், தான் அதற்குமாருக இருத்தலாலும், களங்கம், சான்ருேரிடத்துண்டாகிய குற்றம்போல விளங்கித் தோன்றியதென்பதாம்; இது, "குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம்விசும்பின், மதிக்கண் மறுப்போ லுயர்ந்து," என்னுங் குறள் - ம் திருக்குறளின் கருத்தை ஒருவாறு தழுவி, ஆண்டுள்ள பொருளையும் உவமத்தையும் முறையே உவமமாகவும் பொருளாகவும் பெற்றுவந்தமை காண்க. "அங்கண் விசும்பி னகனிலாப் பாரிக்குந், திங்களுஞ் சான்ருேரு மொப்பர்" என்பது நாலடியார்.

௬. ஆசு - குற்றம். தண்கதிர் - நிலாவை.

௭. சந்திரனுக்கு வெள்ளிக்குடமும், நிலாவிற்குப் பாலும் உவமை. 'குடத்திற்பால்' என்றும பாடம்.

உ - அ. மண்டிலம் மறுநிறங்கிளரப் பால்சொரிவதுபோல் தண்கதிரை இடையிடையே சொரியாநிற்க.

௯. இல்பொருளுவமம். 'உருவுகண்ட' என்றும பாடம்.

௧0. இந்திரவில்லைப்போல ஒளிவிட்டு அழகைத்தருகின்ற திருமேனியையுடையளாய்; "திருவி லிட்டுத் திகழ்தரு மேனியன்" என்பது சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை, ௧௫௬. இந்திரவில் இன்னவாறு தோன்றுமெனப் புலப்ப

ளாதி முதல்வ னறவாழி யாள்வோன்
பாத பீடிகை பணிந்தன ளேத்திப்
பதியகத் துறையுமோர் பைந்தொடி யாகிச்
சுதமதி நல்லா டன்முக நோக்கி
யீங்கு நின்றீ ரென்னுற் றீரென
வாங்கவ ளாங்கவன் கூறிய துரைத்தலு
மரசிளங் குமர னாயிழை தன்மேற்
றணியா நோக்கந் தவிர்ந்தில னாகி
யறத்தோர் வனமென் றகன்றன னாயினும்
புறத்தோர் வீதியிற் பொருந்துத லொழியான்
பெருந்தெரு வொழித்துப் பெருவனஞ் சூழ்ந்த
திருந்தெயிற் குடபாற் சிறுபுழை போகி
மிக்க மாதவர் விரும்பின ருறையுஞ்
சக்கர வாளக் கோட்டம் புக்காற்
கங்குல் கழியினுங் கடுநவை யெய்தா
தங்குநீர் போமென் றருந்தெய்வ முரைப்ப
வஞ்ச விஞ்சையன் மாருத வேகனு

---

டாமையினால், அங்ஙனந்தோன்றுகின்ற தெய்வங்கட்கு அஃது உவமமாயிற்று; "மற்றவன் றேவ னாகி வானிடு சிலையிற் றோன்றி" (குணமாலையாரிலம்பகம், ௧0௧) எனச் சீவகசிந்தாமணியிலும், "வானிடு வில்லின் வரவறியா வாய்மையாற், கானிலந்தோயாக் கடவுளை" (கடவுள்வாழ்த்து) என நாலடியாரிலும் கூறியிருத்தல்காண்க.

௧௧. ௧0-ம் காதை, ௬௧. அறவாழி யாள்வோன் - புத்தன்.

௧௨. பாதபீடிகை - உவவனத்திற் பளிக்கறையிலுள்ள பாதபீடம். பணிந்தனளேத்தி - பணிந்தேத்தி.

௧௩. ௫-ம் காதை, ௯௬.

௧௫. நின்றீரென்றது, மணிமேகலையையும் உளப்படுத்தி. என்னுற்றீர்-யாது துன்பமுற்றீர். என - என்று மணிமேகலாதெய்வங்கேட்ப.

௧0-௧௫. மேனியள், ஏத்தி ஆகி நோக்கி என்னுற்றீரெனவென்க.

௧௬. அவள் - சுதமதி. அவன் - உதயகுமரன். கூறியது - 'சித்திராபதியாற் சேர்தலுமுண்டு' என்றது; ௫-ம் காதை, ௮௨.

௧௭. ஆயிழைதன்மேல் - மணிமேகலையிடத்து.

௧௮. 'தவிர்வில னாகி' என்றும், 'தணிந்தில னாகி' என்றும் பாடம்.

௧௯. அறத்தோர் வனமென்று - முனிவர்களுறைகின்ற வனமென்றுநினைந்து.

௨0. புறத்தோர்வீதியில் - புறத்திலுள்ளவர்களுடைய வீதியினிடத்தே.

௧௭ - ௨0. குமரன் தவிர்ந்திலனாகி அகன்றனனாயினும் வீதியிற் பொருந்துதலொழியானென்க.

௧௯ - ௨0. ௫-ம் காதை, ௯௯ - ௯௭.

௨௧. பெருந்தெருவென்றது, முன்புகூறிய புறத்தோர்வீதியை.

௨௨. ௭-ம் காதை, ௮௯. எயில் - மதில். குடபாற் சிறுபுழை - மேற்றிசையினிடத்தேயுள்ள சிறியவாயில்.

௨௩ - ௨௪. ௧௫-ம் காதை, ௯௧, ௯௨; ௧௭-ம் காதை, ௭௫ - ௭௬; ௨௨-ம் காதை, ௫ - ௬.

௨௫. கடுநவை - உதயகுமரனாற் பற்றப்படுகை.

௨௬. அங்கு - சக்கரவாளக்கோட்டத்திடத்தே.

௧௬ - ௨௬. அவள் உரைத்தலும், அருக்

மஞ்செஞ் சாய னீயு மல்லது
நெடுநகர் மருங்கி னுள்ளோ ரெல்லாஞ்
சுடுகாட்டுக் கோட்ட மென்றல துரையார்
சக்கர வாளக் கோட்ட மஃதென
மிக்கோய் கூறிய வுரைப்பொரு ளறியே
னீங்கிதன் காரண மென்னை யோவென
வாங்கதன் காரண மறியக் கூறுவன்
மாதவி மகளொடு வல்லிருள் வரினு
நீகே ளென்றே நேரிழை கூறுமிந்
நாமப் பேரூர் தன்னொடு தோன்றிய
ஈமப் புறங்கா டங்கித னயல
ஊரா நற்றே ரோவியப் படுத்துத்
தேவர் புகுதரூஉஞ் செழுங்கொடி வாயிலு
நெல்லுங் கரும்பு நீருஞ் சோலையு
நல்வழி யெழுதிய நலங்கிளர் வாயிலும்
வெள்ளி வெண்சுதை யிழுகிய மாடத்
துள்ளுரு வெழுதா வெள்ளிடை வாயிலு
மடித்த செவ்வாய்க் கடுத்த நோக்கிற்
றொடுத்த பாசத்துப் பிடித்த சூலத்து
நெடுநிலை மண்ணீடு நின்ற வாயிலு

---

தெய்வம், 'அரசிளங் குமரன் பொருந்துத லொழிபான்; ஆதலாற் போகிப் புக்காற் கடுநவை யெய்தாது; நீர் அங்குப்போம்' என்றுரைப்பவென்க.

௩௧. அஃது சக்கரவாளகோட்டமென்று. 'கோட்டமீதென' என்றும் பாடம்.

௩௩. என்னையோவென - யாதென்று சுதமதிகேட்ப. 'என்கொ லோவென' என்றும் பாடம்.

௩௪. கூறுவல - கூறுவேன்.

௩௫ - ௩௬. மாதவிமகளொடு நீ கேள். நேரிழை - மணிமேகலாதெய்வம்.

௩௮. ஈமப்புறங்காடு-மயானம்; ஈமம்-பிணஞ்சுடுதற்கு அடுக்கும் விறகடுக்கு; "கரிபுற விறகி னீம வொள்ளழல" என்பது, புறநானூறு, ௨௩௧. இதன் - இந்த உவவனத்தின். புறங்காடு இதன் அயலிடத்துள்ளது. 'ஈமப்பெருங்காடு' என்றும் பாடம்.

௩௯. ஊராநற்றேர் - விமானம். ஓவியப்படுத்து - சித்திரம்போல ஆகாயத்தே நிற்கும்படி செய்து. 'ஓவியகப் படுத்து' என்றும் பாடம்.

௪௩. வெள்ளிவெண்சுதை - மிக்க வெண்மையையுடைய சுண்ணச்சாந்து. இழுகிய - பூசிய. 'எழுதிய மாடத்து' என்றும் பாடம்.

௪௪. உரு - வடிவங்கள். வெள்ளிடை - வெளியான இடம்.

௪௫. கடுத்தநோக்கு - கோவித்துப்பார்த்த பார்வை.

௪௬. தொடுத்த பாசம் - பிறரைக் கட்டிய கயிறு; க - காதை, ௨௫.

௪௭. நெடு நிலை மண்ணீடு - நீண்ட தோற்றத்தையுடைய பூதவடிவம்; என்றது மயானத்தைப் பாதுகாப்பதோர் தெய்வவிசேட வடிவமென்பர். மண்ணீடென்பதற்குச் சுதையாற்செய்யப்பட்ட பாவையென்று பொருள், "பாங்குற மண்ணீட்டிற் பண்புற வகுத்து" (௬ - ம் காதை, ௨௦௦), "ஈங்கிம மண்ணீட் டியாரென வுணர்கேன்" (௧௮ - ம்

நாற்பெரு வாயிலும் பாற்பட் டோங்கிய
காப்புடை யிஞ்சிக் கடிவழங் காரிடை
யுலையா வுள்ளமோ டுயிர்க்கட னிறுத்தோர்
தலைதூங்கு நெடுமரந் தாழ்ந்துபுறஞ் சுற்றிப்
பீடிகை யோங்கிய பெரும்பலி முன்றிற்
காடமர் செல்வி கழிபெருங் கோட்டமு
மருந்தவர்க் காயினு மரசர்க் காயினு
மொருங்குடன் மாய்ந்த பெண்டிர்க் காயினு

---

காதை, ௧௫௬) என இந்நூலுள்ளும், "கண்ணுள் வினைஞரு மண்ணீட் டாளரும்" (இந்திரவிழவூரெடுத்தகாதை, ௩0) எனச் **சிலப்பதிகாரத்து**ள்ளும் வருதல் காண்க. மண் - சுண்ணச்சுதை; "மண் மாண புனைபாவை யற்று" (௪0௭), "மண்ணே டியைந்த மரத்தனையர்" (௫௭௬) என்பன **திருக்குறள்.**

௪௮. நாற்பெருவாயிலும் - செழுங் கொடிவாயிலும் நலங்கிளர்வாயிலும் வெள்ளிடைவாயிலும் நினைறவாயிலுமாகிய நான்கு பெரியவாயிலும். பாற்பட்டு - பகுதிப்பட்டு.

௪௯. காப்பு - காவல். இஞ்சி - மதில். கடி வழங்கு ஆரிடை - பேய்கள் சஞ்சரிக்கின்ற அரிய இடம்; என்றது மயானத்தை.

௪௮ - ௪௯. ஓங்கிய ஆரிடையென்க.

௫0. உலையாவுள்ளமோடு - தளராத உள்ளத்தோடு, உயிர்க்கடனிறுத்தோர் - உயிராகிய கடனைக்கொடுத்தோர், உயிர்க்கடனிறுத்தலைச் **சிலப்பதிகாரம்**, இந்திரவிழவூரெடுத்தகாதை, ௮௭ - ௮௮ - ம் அடிகளின் உரையிற் காண்க. இவர்களை, ச்மசானவாஸினியது மந்திரஸாதகரான பைரவவேஷதாரிகளென்றும், காபாலிகமதத்தினரென்றும் கூறுவர்; இஃது அவிப்பலியெனப்படும்; "சிரநெதரிந்தன வரிந்த ரிந்துகுவை செய்த பயிரவர்கள் செந்நிலம், பரிந்தெரிந்துபொடி செய்ய மற்றவை பரிப்ப மற்றவர் சிரிப்பரே" என்பது **தக்கயாகப்பரணி**, காடுபாடியது.

௫௧. தலைதூங்குநெடுமரம் - உயிர்க்கடனிறுத்தோருடைய தலைகள் தொங்கப்பெற்ற நீண்ட மரங்கள். பலிகொடுப்போர் சிகையை மரத்தில் முடிந்துவிட்டுத் தலையையரிந்து துர்க்கைக்குப் பலிகொடுத்தல் மரபாதலால், இங்ஙனங்கூறினர். "வீங்குதலை நெடுங்கழையின் மிசைதோறுந் திசைதோறும் விழித்து நின்று, தூங்குதலை சிரிப்பனகண் டிறங்குதலை மறந்திருக்குஞ் சுடர்க்கட் சூர்ப்பேய்" என்பது **கலிங்கத்துப்பரணி**, கோயில் பாடியது, ௨௧. இதுபோன்ற ஒழுக்கம், வடநூலில் **தசகுமாரசரித்திரத்தில்** உபஹாரவர்மாவின் சைசவவிருத்தாந்தத்தில் சொல்லப்பட்டுள்ளதென்பர். 'தலைதாங்குநெடுமரம்' என்றும் பாடம்.

௫௨. பீடிகை - பீடம். பெரும்பலி பீடிகையோங்கிய முன்றிலென்க.

௫௩. காடமர்செல்வி - துர்க்காதேவி; சண்டிகையென்றுங்கூறுவர்; ௧௮ - ம் காதை, ௧௧௫. கோட்டம் - கோயில். "கோளியாலமுஞ் சோழனை மரங்களுங் குழுமித், தூ[illegible] யார்த்தெழு சுடலையுமுடலமுந் துவன்றி, மீளி யாக்கையதாகியுண் பேய்க்கண மிகைசூழ், கூளி தாய்க்கென வாக்கிய கோட்டமொன் றுளதே" என்னும் நீலகேசிச் செய்யுளாலும் மயானத்தில் துர்க்கையாலயம் இருந்ததாகத் தெரிகின்றது.

௫0 - ௫௩. இறந்தோருடைய தலைகள் தூங்குகின்ற மரங்கள் சுற்றப்பட்டுப் பலிபீடிகை ஓங்கிய முன்றிலையுடைய கோட்டம்.

௫௫. ஒருங்குடன்மாய்ந்த பெண்டிர் - கணவனுட னிறந்தமகளிர்.

௫௪ - ௫௫. ஆயினும் - ஓர் எண்ணிடைச்சொல்; "பொதியி லாயினு மிமயமாயினும், . புகாரே யாயினும்" என்புழிப்போல; இது **சிலப்பதிகாரம்**, மங்கலவாழ்த்துப்பாடல்.

நால்வேறு வருணப் பால்வேறு காட்டி
யிறந்தோர் மருங்கிற் சிறந்தோர் செய்த
குறியவு நெடியவுங் குன்றுகண் டன்ன
சுடும ண்ணோங்கிய நெடுநிலைக் கோட்டமு
மருந்திறற் கடவுட் டிருந்துபலிக் கந்தமு
நிறைக்கற் றெற்றியு மிறைக்களச் சந்தியுந்
தண்டு மண்டையும் பிடித்துக் காவல
ருண்டுகண் படுகரு முறையுட் குடிகையுந்
தூமக் கொடியுஞ் சுடர்த்தோ ரணங்களு
மீமப் பந்தரு மியாங்கணும் பரந்து
சுடுவோ ரிடுவோர் தொடுகுழிப் படுப்போர்
தாழ்வயி னடைப்போர் தாழியிற் கவிப்போ

---

௫௬. நாலவேறவருணம் - பிரஹ்ம க்ஷத்திரிய வைசிய சூத்திரவருணங்கள்.

௫௭. இறந்தோர்மருஙகில் - இறந்தவருடம்பைப் புதைததவிடததே.

௫௮. குறியவும் நெடியவுமாகிய சிறிய மலைகளைக்கண்டாலொத்த; சிலப்பதிகாரம், நீர்ப்படைக்காதை, ௧௫௩.

௫௯. சுடுமண் - செங்கல். கோட்டம் - அறை; "ஈமப் புறங்காட், டரசர்க் கமைந்தன வாயிரங் கோட்டம" என்பர் பின்னும்; ௬-ம் காதை, ௧௬௫-௧௬௬

௫௮ - ௫௯. கண்டன்ன கோட்டம்.

௬௦. அருந்திறல் கடவள் திருந்து பலிக் கந்தம - பெறுதற்கரிய திறலையுடைய தெய்வங்களையுடைய, திருந்திய பலியிடுதற்குரிய தூணகள்; கந்தம் - ஸ்கந்தமெனனும் வடமொழிச்சிதைவு. இப்படியே, இது, "இலகொளிக் கந்தமும்" (௨௪ - ம காதை, ௧௬௩) என இந்நூலுள்ளும், "கலிகெழு கடவுள் கந்தங் கைவிடப், பலி கண் மாறிய பாழ்படு பொதியில்" (௫௨) எனப் புறநானூற்றிலும் வருதல்காணக.

௬௧. நிறைக்கற்றெற்றி - நிறுத்திய கல்லாலாகிய திண்ணை. மிறைக் களச் சந்தி - வளைந்த இடத்தினையுடைய பல வழிகளுங்கூடின சந்து; மிறை - வளைவு. "மிறைக்கொளி திருத்தி னானே" என்பது சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், ௨௫௫. 'நிறைகற் றெற்றியும்' என்றும் பாடம்.

௬௨. மண்டை - உண்ணுதற்குரிய ஒருவகை மண்கலம்; ஏற்கும்பாத்திரமென்றுங்கூறுவர்; "கவிழ்த்த மண்டை மலர்க்குநர் யாரென", "பாணர் மணடை நிறையப் பெய்ம்மார்", "ஏலாது கவிழ்ந்தவெ னிரவன் மண்டை" என்பன புறநானூற்றுச் செய்யுள்; ௧௦௩, ௧௨௫, ௧௨௭. காவலர் - மயானங்காப்போர்.

௬௩. குடிகை - பர்ணசாலை; 'குடிகா' என்னும வடமொழிச்சிதைவென்பர், இஃது இக்காலததுக் குடிசையென வழஙகுகின்றது.

௬௪. தூமககொடி - புகையொழுஙகு, "மீனசுடு புகையிற் புலவுநாறு நெடுங் கொடி" என்பது புறநானூறு, ௫௨.

௬௦ - ௬௫. சுழிபெருஙகோட்டமும், நெடுநிலைககோட்டமும், பலிசுகந்தமும், தெற்றியும், சந்தியும, குடிகையும, கொடியும், தோரணஙகளும், பந்தரும யாஙகணும பரநதெங்க.

௬௬. சுடுவோர்-பிணங்களைச்சுடுவோர், இடுவோர் - கொணர்ந்து அவற்றைச சும்மா போகடுவோர். தொடுகுழி-தோண்டப்பட்டகுழி, ௧௬ - ம் காதை, ௨௫.

௬௭. தாழ்வயின் அடைப்போர் - பள்ளமாகிய இடங்களில் பிணங்களை அடைத்துவைப்போர்; தாழ்வயின் - தாழ்ந்த இடம். 'தாழ்வாயி னடைப்போர்' என்னும் பாடம். தாழியிற்கவிப்போர் - பிணங்களைத் தாழியினாலே கவிப்போர்; இதனை, "தேவ ருலக மெய்தின னாதலின், னன்னோற் கவிக்குங் கண்ணகன் றாழி" (௨௨௮) எனவும், "கலிசெந் தாழிக

ரிரவும பகலு மிளிவுடன் றரியாது
வருவோர் பெயர்வோர் மாறாச் சும்மையு
மெஞ்சியோர் மருங்கி னீமஞ சாற்றி
நெஞ்சு நடுக்குறூஉ நெய்த லோசையுந்
துறவோ ரிறந்த தொழுவிளிப் பூசலும்
பிறவோ ரிறந்த வழுவிளிப் பூசலு
நீண்முக நரியின் றீவிளி கூஉஞ்
சாவோர்ப் பயிருங் கூகையின் குரலும்
புலவூண் பொருந்திய குராலின் குரலு
மூண்டலை துற்றிய வாண்டலைக் குரலு
நன்னீர்ப் புணரி நளிகட லோதையி
னின்னா விசையொலி யென்றுநின் றறாது

குவிபுறத திருந்த" (௨௩௮) எனவும், "ஈமத் தாழி, யகலி தாக வனைமோ" (௨௫௬) எனவும், "தாழிய பெருங்கா டெய்திய ஞான்றே" (௩௬௪) எனவும் வரும் புறநானூற்றுப் பாடல்களாலுணர்க; இது, முதுமக்கட்டாழி யெனவும் வழங்கும்.

௬௮. இளிவுடன் - அருவருப்புடன். 'இரவும பகலும பெயாவீ டினறி' என றும் பாடம.

௬௯. சும்மை - ஒலி.

௭௦. எஞ்சியோர் - சீவித திருப்போர். 'எஞ்சினர் மருங்கின்' என றும பாடம. ஈமஞ் சாற்றி - ஈமமுண்டெனபதைச் சொலலி.

௭௧. நெய்தலோசையும் - சாப்பறையின் ஓசையும்; "ஓரி னெய்தல் கறங்க வோரி, லீர்ந்தண் முழவின் பாணி ததும்ப" என்பது புறநானூறு, ௧௯௪. "பல்லவர்க் கிரங்கும் பாடிமிழ் நெய்தல, கலலென வொலிக்குங காடு" என்பது புறப்பொருள்வெண்பாமாலை, காஞ்சிப்பொதுவியற்பால, ௬.

௭௨. தொழுவிளிப்பூசல் - துதிமுழக்கம்; துறவோராதலால, தொழுவிளிப் பூசல கூறப்பட்டது.

௭௩. பிறவோர் - இல்லறத்தோர்.

௭௪. 'தீவிளிகதரலும்' என்றும்பாடம்.

௭௫. சாவோர்ப் பயிரும் கூகையின் குரலும் - இறப்போரை அழைககும் பேராந்தையின் ஒலியும்; பேராந்தை செத்தோரை அழைக்குமென்றுங கூறுவர்; "போழ்வாய்க் கூகை, சுட்டுக் குவி யெனச் செததோர்ப் பயிருங், கள்ளியம் பறந்தலை" என்பது புறநானூறு, ௨௪௦.

௭௬. குரால் - கோட்டான். 'புலா லூண் பொருந்திய' என்றும் பாடம்.

௭௭. உணவாகத் தலைமூளையைக் கடித் துண்ட ஆண்டலைப்பறவைகளின் குரலும; ஆண்டலைப் பறவை-ஆண்மகனது தலைபோன்ற வடிவமுள்ள ஒருவகைப் பறவை; இதனை, "நீண்டபலி பீடத்தி லரிந்து வைதத நெடுங்குஞ்சித் தலையைத்த னினமென் றெண்ணி யாண்டலைப்பு ளருகணைந்து பார்க்கு மாலோ வணைதலுமச் சிரமச்ச முறுத்து மாலோ" என்பதனாலுணர்க; இத்தாழிசை கலிங்கத்துப்பரணி, கோயில்பாடியது, ௧௬. "அழுகுரற் கூகையோ டாண்டலை விளிப்பவும்" என்பதுபட்டினப்பாலை,௨௫௮. "ஆண்டலை பாட" என்பது காரைக்காலம்மையார் மூத்ததிருப்பதிகம், ௩. "ஈமத் தூமமு மெரிகளு மிருளொடு விளக்கா, வூமைக் கூகையு மோரியு முறழ்முறழ் கதிக்கும், யாமத் தீண்டிவந் தாண்டலை மாண்பில வழைக்குந், தீமைக் கேயிட னுயதோர் செமமலை யுடைத்தே" என்பது நீலகேசி. 'ஊன்றலை துற்றிய' என்றும் பாடம்.

௭௮. புணரி நளி கடல் - அலைகளையுடைய பெரிய கடல். ஓதையின் - ஓசைபோல. 'நளிர்கடல்' என்றும் பாடம்.

௭௯. இன்னா இசை ஒலி - துன்பத்தை இசைக்கின்ற ஒலிகள்.

தான்றியு மொடுவையு முழிஞ்சிலு மோங்கிக்
கான்றையுஞ் சூரையுங் கள்ளியு மடர்ந்து
காய்பசிக் கடும்பேய் கணங்கொண் டீண்டு
மாலமர் பெருஞ்சினை வாகை மன்றமும்
வெண்ணிணந் தடியொடு மாந்தி மகிழ்சிறந்து
புள்ளிறை கூரும் வெள்ளின் மன்றமுஞ்
சுடலை நோன்பிக ளொடியா வுள்ளமொடு
மடைதீ யுறுக்கும் வன்னி மன்றமும்
விரத யாக்கைய ருடைதலை தொகுத்தாங்
கிருந்தொடர்ப் படுக்கு மிரத்தி மன்றமும்
பிணந்தின் மாக்க ணிணம்படு குழிசியில்
விருந்தாட் டயரும் வெள்ளிடை மன்றமு
மழற்பெய் குழிசியும் பிழற்பெய் மண்டையும்
வெள்ளிற் பாடையு முள்ளீட் டறுவையும்

---

கக - எக. மாருச் சும்மையும், நெய்தலோசையும், தொழுவிளிப் பூசலும், அழுவிளிப் பூசலும், கூவும், குரலும், குரலும், குரலும் ஆகிய இன்னாவிசைகள் அறாதிருக்கப்பெற்று.

அக. 'கள்ளியும் படர்ந்து' என்றும் பாடம்.

அ0 - அக. தான்றி முதலிய மரவிசேடங்கள் நெருங்கப்பெற்று. 'கள்ளியும் படர்ந்து' என்றும் பாடம்.

அஉ. காய்பசி - மிக்கபசி; சு - ம் காதை, ககஎ; கக-ம் காதை, ஙரு. கணம்-கூட்டம்.

அங. மால் - மேகம். சினை - கிளை. பலபேய்கள் கூட்டங்கொண்டிருத்தற்கு இடமானதுபற்றி, வாகையடி மன்றமெனப்பட்டது. பின் வருவனவற்றையும், இப்படியே கொள்க. ஊருக்கு நடுவாய் எல்லாருமிருக்கு மரத்தடியை மன்றமென்பர், ஆசிரியர் நச்சினார்க்கினியர், திருமுருகாற்றுப்படை, உஉரு.

அச. தடி - தசை. மாந்தி - உண்டு.

அரு. புள் - பேராந்தை, கோட்டான் கழுகு, பருந்து, காக்கை, ஆண்டலைப்புள் முதலியவைகள். இறைகூரும் - தங்குதல் மிக்க. வெள்ளில் - விளாமரம்.

அசு. சுடலை நோன்பிகள்-காபாலிகர்; "இறைவி கோட்டத்து ளீரிரு திங்கள் தகவை யுறையு ளாகவவ் வுறையருங் காட்டகத் துறைவான், பொறையு மாற்றலும் பூமியு மேருவு மனையான், சிறை செய் சிந்தையா னந்தமில் பொருள் களைத் தெரிந்தான்" எனனும் நீலகேசிச் செய்யுளால் 'முனிசந்திரன்' என்ற ஒரு முனிவன் மயானத்திலிருந்து தவஞ்செய்தானென்று தெரிகிறது. ஒடியாவுள்ளம் - தளராதவுள்ளம்.

அஎ. மடை - சோறு. வன்னி - வன்னிமரம்.

அஅ. உடைதலைகளைச் சேர்த்து.

அகூ. இருந்தொடர்ப்படுக்கும்-பெரிய மாலைகளாகச்செய்யும், இரத்திமன்றம் - இலந்தைமரநிற்கும் மன்றம்; "இரத்தி நீடிய வகன்றலை மன்றத்து" என்பது புறநானூறு, ஙஉ.

கூ0. குழிசி - பானை.

கக. வெள்ளிடைமன்றம்-வெளியான இடத்தையுடைய மன்றம்; "உள்ளுநர்ப் பனிக்கும் வெள்ளிடை மன்றமும்" என்பது சிலப்பதிகாரம், இந்திரவிழவூரெடுத்தகாதை, ககஎ.

கூஉ. பிழல்(') 'பிறழ்பெய் மண்டையும்' என்றும் பாடம்.

கூங. வெள்ளிற் பாடை - இருபெயரொட்டு. உள்ளீட் டறுவை - உள்ளே பண்டங்கள் இடுதலைப்பெற்ற உறி;

பரிந்த மாலையு முடைந்த கும்பமு
நெல்லும் பொரியுஞ் சில்பலி யரிசியும்
யாங்கணும் பரந்த வோங்கிரும் பறந்தலை
தவத்துறை மாக்கள் மிகப்பெருஞ் செல்வ
ரீற்றிளம் பெண்டி ராற்றாப் பாலகர்
முதியோ ரென்னா திளையோ ரென்னான்
கொடுந்தொழி லாளன் கொன்றனன் குவிப்பவிவ்
வழல்வாய்ச் சுடலை தின்னக் கண்டுங்
கழிபெருஞ் செல்வக் கள்ளாட் டயர்ந்து
மிக்க நல்லறம் விரும்பாது வாழு
மக்களிற் சிறந்த மடவோ ருண்டோ
வாங்கது தன்னையோ ரருங்கடி நகரெனச்
சார்ங்கல னென்போன் றனிவழிச் சென்றோ
னென்புந் தடியு முதிரமு மியாக்கையென்
றன்புறு மாக்கட் கறியச் சாற்றி
வழுவொடு கிடந்த புழுவூன் பிண்டத்

"சுவன்மே லறுவையும்" என்பது **சிலப்பதிகாரம்**, நாடுகாண்காதை, ௬௮. அறுவை - சீலையாதலால், உள்ளீட்டையுடைய கிழியுமாம்.

௯௪. பரிந்த மாலை - பாடையிற்கட்டி அறுதெறியப்பட்டமாலை; "வெள்ளின் மாலையும் விரிந்தவெண் டலைகளுங் கரிந்த, கொள்ளி மாலையுங் கொடிபடு கூரையு மகலும், பள்ளி மாறிய பாடையு மெலும்புமே பரந்து, கள்ளி யாரிடைக் கலந்ததோர் தோற்றமுங் கடிதே" என்பது **நீலகேசி**.

௯௫. சில்பலி யரிசி - சிறுபலியாகிய அரிசி; "தூவெள் ளரிசி, சில்பலிச் செய்து" என்பது **திருமுருகாற்றுப்படை**, ௨௩௩ - ௨௩௪.

௯௬. பறந்தலை - பாழிடம்.

அ௩ - ௯௬. வாகைமன்றமும், வெள்ளின்மன்றமும், வன்னிமன்றமும், இரதிமன்றமும், வெள்ளிடை மன்றமும் ஆகிய இம்மன்றங்கள்யாங்கணும் அழற்பெய்குழிசி முதலியவைகள் பரந்த பறந்தலையெனக.

௯௫ - ௯௬. பரந்து அறாது பரந்த பறந்தலையென்க.

௯௮. எ - ம் காதை, அக.

௧௦௦. கொடுந்தொழிலாளன் - காலன்.

௯௯ - ௧௦௧. ஆரிடை பறந்தலை சுடலை தின்னக்கண்டும்.

௧௦௨. மிகப்பெரிய செல்வமாகிய கள்ளையுண்டு விளையாடுதலைச்செய்து.

௧௦௪. மடவோர் - மூடர்.

௧௦௫. அதுதன்னை - அம்மயானத்தை. கடி - காவல்.

௧௦௬. தனிவழிச் சென்றோனாகிய சார்ங்கலன்.

௧௦௮. அன்புறு மாக்கட்கு - உடம்பினிடத்தே அன்புமிகுத்த மனிதர்கட்கு. மாக்களென்றார், ஐம்புலவுணர்ச்சியேயன்றி மனவுணர்ச்சியில்லாதவரென்று; "மாவு மாக்களு மையறி வினவே" என்பது **தொல்காப்பியம்**, மரபியல், ௩௨.

௧௦௭ - ௧௦௮. யாக்கை என்புமுதலியனவாமென்று மாக்கட்குச் சாற்றி.

௧௦௯. வழு - தாதுவிசேடம்; வழுவொடு-வழுவுதலுடனென்றுமாம். பிண்டமென்றது, உடம்பை.

௧௦௮ - ௧௦௯. சாற்றிக் கிடந்தவென்க; இனி, சாற்றி வாய்க்கொண்டு உளைக்கும் நரியோதையுமெனினுமமையும்.

அலத்தக மூட்டிய வடிநரி வாய்க்கொண்
டுலப்பி லின்பமோ டுளைக்கு மோதையுங்
கலைப்புற வல்குல் கழுகுகுடைந் துண்டு
நிலைத்தலை நெடுவிளி யெடுக்கு மோதையுங்
கடகஞ் செறிந்த கையைத் தீநா
யுடையக் கவ்வி யொடுங்கா வோதையுஞ்
சாந்தந் தோய்ந்த வேந்திள வனமுலை
காய்ந்தபசி யெருவை கவர்ந்தூ ணோதையும்
பண்புகொள் யாக்கையின் வெண்பலி யரங்கத்து
மண்கணை முழவ மாக வாங்கோர்
கருந்தலை வாங்கிக் கையகத் தேந்தி
யிரும்பே ருவகையி னெழுந்தோர் பேய்மகள்
புயலோ குழலோ கயலோ கண்ணே
குமிழோ மூக்கோ விதழோ கவிரோ
பல்லோ முத்தோ வென்னா திரங்காது
கண்டொட் டுண்டு கவையடி பெயர்த்துத்
தண்டாக் களிப்பி னாடுங் கூத்துக்
கண்டனன் வெரீஇக் கடுநவை யெய்தி

---

கக0. அலத்தகம் - செம்பஞ்சுக்குழம்பு.

ககக. உலப்பு இல் இன்பமோடு - கேடில்லாத இன்பத்தோடு.

ககங. 'நிலததலை' என்றும் பாடம்.

ககச. தீநாய் - மயானத்திற்றிரியும் ஒருவகைநாய்.

ககஎ. காய்ந்தபசி - மிக்க பசி; கூ - ம் காதை, அஉ; கக-ம் காதை, ருரு. எருவை-தலைவெளுத்து உடல் சிவந்திருக்கும் பருந்து; கழுகுமாம்; "விசும்பாடெருவை பசுந்தடி மடுப்ப" என்பது புறநானூறு, கூச.

ககஅ வெண்பலி யரங்கத்து - சாம்பற்குவையாகிய அரங்கத்திலே.

ககக. மண் கணை முழவமாக - மார்ச்சனையமைந்த திரண்ட தண்ணுமையோசையாக; தண்ணுமை - ஆடற்குரிய ஒருவகைத் தோற்கருவி.

ககக - ககக. உளைக்கு மோதையும், எடுக்கு மோதையும், ஒடுங்கா வோதையும், கவர்ந்தூணோதையும் ஆகிய இவைகள் முழவமாகவென்க.

கஉ0. கருந்தலையென்றது, ஒரு பெண் பிணத்தின் தலையை.

கஉக. பேய்மகள் - பெண்பேய்.

கஉங. குமிழ் - குமிழம்பூ. கவிர் - முள்ளுமுருங்கைப்பூ 'அதரோகவிரோ' என்றும் பாடம்.

கஉச. என்னாது - என்று கருதாமல்.

கஉரு. கண் தொட்டு உண்டு - கண்ணைத் தோண்டி உண்டு. கவையடி பெயர்த்து - கவைத்த அடிகளைப்பெயர்த்து; "கருமறிக் காதிற் கவையடிப் பேய்மகள்" என்பதனாற் பேய்மகளுக்குக் கவையடியுண்டென்பது அறிந்துகொள்க. இது சிறுபாணாற்றுப்படை, கஙஎ. 'கவையடிப்பெயர்த்து' எனவும் பாடம்.

கஉசு. தண்டாக் களிப்பு - தணியாத களிப்பு; "தண்டா வீகைத் தகைமாண் குடுமி" என்பது, புறநானூறு, சு.

ககக - கஉசு. உளைக்குமோதை முதலியன முழவமாக வெண்பலியரங்கத்தில் ஒரு பேய்மகள் கவையடி பெயர்த்து ஆடுங் கூத்தையென்க.

கஉஎ. கண்டனன் - கண்டு. கடுநவை

விண்டோர் திசையின் விளித்தனன் பெயர்ந்தீங்
கெம்மனை காணா யீமச் சுடலையின்
வெம்முது பேய்க்கென் னுயிர்கொடுத் தேனெனத்
தம்மனை தன்முன் வீழ்ந்துமெய் வைத்தலும்
பார்ப்பான் றன்னொடு கண்ணிழந் திருந்தவித்
தீத்தொழி லாட்டியென் சிறுவன் றன்னை
யாருமி றமியே னென்பது நோக்கா
தாருயி ருண்ட தணங்கோ பேயோ
துறையு மன்றமுந் தொல்வலி மரனு
முறையுளுங் கோட்டமுங் காப்பாய் காவாய்
தகவிலை கொல்லோ சம்பா பதியென
மகன்மெய் யாக்கையை மார்புறத் தழீஇ
யீமப் புறங்காட் டெயிற்புற வாயிலிற்
கோதமை யென்பாள் கொடுந்துயர் சாற்றக்
கடிவழங்கு வாயிலிற் கடுந்துய ரெய்தி
யிடையிருள் யாமத் தென்னையீங் கழைத்தனை
யென்னுற் றனையோ வெனக்குரை யென்றே
பொன்னிற் பொலிந்த நிறத்தா டோன்ற

---

யெய்தி - அப்பேயாற் பிடிக்கப்பட்டு; "கழல்கட் கூளிக கடுநவைப் பட்டோர்" என்பது சிலப்பதிகாரம், இந்திரவிழவூ ரெடுத்தகாதை, கஉரு.

கoசு - கஉஎ. சென்றேறுகிய சார்ங்கலனென்போன் கண்டு.

கஉஅ. விண்டு - நீங்கி. விளித்தனன் பெயர்ந்து - கூப்பிட்டுக்கொண்டு பெயர்ந்து. 'விளிந்தனன்' என்றும் பாடம்.

கஉக. எம்மனை - என்தாயே.

கஙக. தம்மனை தன்முன் - தனது தாயின்முன்னே, மெய்வைததலும - இறக்கவும். 'மெய்வைப்ப' எனறும் பாடம்.

கoசு - சஙக. சார்ங்கலனென்போன் வீழ்ந்து மெய்வைத்தலும.

கஙஉ. பாரப்பானென்றது, சார்ங்கலன தந்தையை; 'பார்ப்பான் றன்னொடு கண்ணிழந் திருந்த' என்று இங்கே சொல்லுதலாலும், "கண்ணில் கணவனை" (சு - ம் காதை, கஙரு) என்று பின்பு வருதலாலும், சார்ங்கலனுடைய தந்தைதாயரிருவரும் கணணையிழந்தோ ரென்பது பெறப்பட்டது.

கஙங - கஙரு. சிறுவன்றன்னை ஆருயி ருணடது.

கஙச. சு - ம் காதை, கசசு.

கஙரு. அணங்சோ பேயோ: கசஅ, கருo. அணஙகு - காமநெறியான் உயிர் கொள்ளுந் [illegible]தய்வமகளென்பர், ஆசிரியர் பரிமேலழகர், திருக்குறள், ககஅ.

கஙசு. துறை - நீர்ததுறைகள். மன்றம் - ஊர்க்குநடுவாய் எல்லாருமிருக்கு மரத்தடி. தொலவலி மரன-பழைய வலியையுடைய மரம். 'தொல்பதி மரனும்' என்றும் பாடம்.

கஙஎ. உறையுள் - தங்குமிடம். காவாய் - காவாமலிருந்தாய்.

கஙசு - கஙஎ. திருமுருகாற்றுப்படை, உஉக - உஉசு.

கஙஅ. தகவிலை கொல்லோ - தகவின்மையையுடையாயோ; தகவு நின்னிடமில்லையோவெனறுமாம.

கசக. கோதமை - அவள்பெயர், கொடுந்துயா - தனமகன் இறந்தானென்பது.

கசங. இருளையுடைய இடையாமம்.

கசரு. பொன்னிற் பொலிந்த நிறத்தாள் - சூரியனைப்போல் விளங்கிய நிறத்

வாருமி லாட்டியென் னறியாப் பாலக
னீமப் புறங்காட் டெய்தினேன் றன்னை
யணங்கோ பேயோ வாருயி ருண்ட
துறங்குவான் போலக் கிடந்தனன் காணென
வணங்கும் பேயு மாருயி ருண்ணா
பிணங்குநூன் மார்பன் பேதுகந் தாக
ஊழ்வினை வந்திவ னுயிருண்டு கழிந்தது
மாபெருந் துன்பநீ யொழிவா யென்றலு
மென்னுயிர் கொண்டிவ னுயிர்தந் தருளிலென்
கண்ணில கணவனை யிவன்காத் தோம்பிடு
மிவனுயிர் தந்தென் னுயிர்வாங் கென்றலு
முதுமூ தாட்டி யிரங்கினள் மொழிவோ
ளைய முண்டோ வாருயிர் போனாற்
செய்வினை மருங்கிற் சென்றுபிறப் பெய்துத
லாங்கது கொணர்ந்துநின் னாரிடர் நீக்குத
லீங்கெனக் காவதொன் றன்றுநீ யிரங்கல
கொலையற மாமெனுங் கொடுந்தொழின் மாக்க
ளவலப் படிற்றுரை யாங்கது மடவா
யுலக மன்னவர்க் குயிர்க்குயி ரீவோ
ரிலரோ விந்த வீமப் புறங்காட்
டரசர்க் கமைந்தன வாயிரங் கோட்ட

---

தினையுடைய சம்பாபதி; பொன் - சூரியன்; "இளங்கதிர் ஞாயி றெள்ளுந் தோற்றத்து, விளங்கொளி மேனி விரிசடை யாட்டி" என்று இந்நூற்பதிகத்தின் முதலில வருதல்காண்க; க - உ.

கஅச. சு - ம் காதை, கரு௪.

கஅக. என - என்று கோதமை சொல்ல.

கருக. மார்பன் - சார்ங்கலன். பேதுகந்தாக - அறியாமை காரணமாக.

கருரு. என்றலும் - என்று சம்பாபதி சொல்லலும்.

கருரு. கண்ணில் கணவனை: சு - ம் காதை, கரு௨. ஓம்பிடும்-பாதுகாப்பான்.

கருசு. என்றலும் - என்று கோதமை சொல்லலும்.

கருஎ. முதுமூதாட்டி - சம்பாபதி.

கருகூ - கருஅ. பிறப்பெய்துதலில ஐயமுண்டோ; "செய்வினை வழித்தா யுயிர் செலு மென்பது, பொய்யில் காட்சியோர் பொருளுரை யாதலின" என்பது **சிலப்பதிகாரம்**, நடுகற்காதை, கசுஎ - கசுஅ.

கசு0. அது - அவ்வுயிரை. ஆரிடர்- தீர்த்தற்கரிய துன்பம்.

கசுக. எனக்கு ஆவதொன் றன்று - எனககு இயலுவதான ஒரு காரியமன்று.

கசுரு. அவலப்படிற்றுரை-கேட்டைத் தருகின்ற பொய்யுரை. அது அவலப் படிற்றுரையென்க. 'அலவலைப் படிற்றுரை' என்றும் பாடம்.

கசுரு. இலரோ-உளர். புறங்காட்டில.

கசுசு. ஆயிரம் கோட்டம் அமைந்தன; ஆயிரம் - அநேகம். "இறந்தோர் மருங்கிற் சிறந்தோர் செய்த, குறியவு நெடியவுங் குன்றுகண் டன்ன, சுடுமண் ணோங்கிய நெடுநிலைக் கோட்டமும்" என்றார் முன்னும்; சு - ம் காதை, நுஎ - நுக.

நிரயக் கொடுமொழி நீயொழி யென்றலுந்
தேவர் தருவர் வரமென் றொருமுறை
நான்மறை யந்தணர் நன்னூ லுரைக்கு
மாபெருந் தெய்வ நீயரு ளாவிடின்
யானோ காவே னென்னுயி ரீங்கென
வூழி முதல்வ னுயிர்தரி னல்ல
தாழித் தாழி யகவரைத் திரிவோர்
தாந்தரின் யானுந் தருகுவன் மடவா
யீங்கெ னாற்றலுங் காண்பா யென்றே
நால்வகை மரபி னரூபப் பிரமரு
நானால் வகையி னுரூபப் பிரமரு
மிருவகைச் சுடரு மிருமூ வகையிற்

---

௧௬௭. நிரயக் கொடுமொழி - நரகத்தைத்தரும் கொடிய வார்த்தை; என்றது, 'இவனுயிர் தந்தென் னுயிர்வாங்கு' (௬ - ம் காதை, ௧௫௬) என்றதை. என்றலும் - என்று சம்பாபதி சொல்லலும்.

௧௬௯. நூல் - வேதம்.

௧௭0. தெய்வமாகிய நீ.

௧௭௧. யான் என்னுயிரைத் துறப்பேன். என - என்று கோதமைசொல்ல. 'என்னுயிரென்றபின்' என்றும பாடம்.

௧௭௨. ஊழிமுதலவன் - மஹாபிரஹ்மா. "தெய்வக் கருவுந் திசைமுகக கருவுஞ், செம்மலர் முதியோன் செய்த வந்நாள்" (௨௮ - ௨௯) என்று பதிகத்தில வருதல்காண்க; இகரத்தை அசைநிலையாக்கி ஊழ்வினையாகிய முதலவனெனக் கூறினும் பொருந்தும்.

௧௭௩. சககரவாளமாகிய தாழியினுடைய உள்ளிடத்தே சஞ்சரிப்பவர்கள். 'அகவயிற்றிரிவோர்' என்றும் பாடம்.

௧௭௪. தரினெனவே தரலின்மை பெறப்பட்டது.

௧௭௩ - ௧௭௪. இறந்துபோன உயிரை மீட்டுக்கொடுக்குமாற்றல் இந்தச் சக்கரவாளத்திலுள்ள தேவர்களுக்கு எங்ஙனமிலலையோ அங்ஙனமே எனக்குமில்லையென்றபடி.

௧௭௫. ஆற்றல்-சக்தி. என்று-என்று சம்பாபதிசொல்லி.

௧௭௬. நால்வகை மரபின் அரூபப் பிரமரும் - உலகம் முப்பத்தொன்றனுள் இருபத்தெட்டாவதாகிய 'ஆகாசாநந்தியாயதனலோகம்' முதலிய நான்கு உலகங்களிலுமுள்ள அரூபப்பிரஹ்மசாதியாராகிய நாலவகையினரும; இவர்களைத் தியானம் ஐந்தனுள் ஐந்தாவதில் தேறியவர்களென்பர். 'அரூபப்பிடமரும்' என்றும் பாடம்.

௧௭௭. நாலநால்வகையின் உரூபப் பிரமரும் - மேற்கூறிய உலகங்களுள், பன்னிரண்டாவதாகிய 'பிரஹ்மகாயிகலோகம்' முதலாகிய உலகம் பதினாறிலுமிருககிற உரூபப்பிரஹ்ம சாதியாராகிய பதினாறுவகையினரும்; இவர்களில் ௧௨, ௧௩, ௧௪-ம் உலகங்களிலுள்ளவர்களை 'ஸ்ரோதாபத்தி' என்னும் முதலாவது தியானததில் தேறியவர்களென்றும், ௧௫, ௧௬, ௧௭ - ம் உலகங்களிலுள்ளவர்களை 'ஸகிருதாகாமி' என்னும் இரண்டாவது தியானத்தில தேறியவர்களென்றும், ௧௮, ௧௯, ௨0 - ம் உலகங்களிலுள்ளவர்களை 'அநாகாமி' என்னும் மூன்றாவது தியானததில தேறியவர்களென்றும், ௨௧ - வது முதலிய எழுலகங்களிலுள்ளவர்களை 'அர்ஹத்' என்னும் நான்காவது தியானததில தேறியவர்களென்றுங் கூறுவர். 'உரூபப்பிடமரும்' என்றும் பாடம்.

௧௭௬ - ௧௭௭. இவ்வடிகளிற்கூறிய இருவகைப் பிரஹ்மலோகங்கள் இருபதின்பெயர்களையும் இந்நூற்பதிகத்தின ௨௮ - ம் அடிகளின் உரையிற்காண்க.

௧௭௮. இருவகைச்சுடர் - சந்திர சூரியர்கள்.

பெருவனப் பெய்திய தெய்வத கணங்களும்
பல்வகை யசுரரும் படுதுய ருறூஉ
மெண்வகை நரகரு மிருவிசும் பியங்கும்
பன்மீ னீட்டமு நாளுங் கோளுந்
தன்னகத் தடக்கிய சக்கர வாளத்து
வரந்தரற் குரியோர் தமைமுன் னிறுத்தி
யரந்தை கெடுமிவ ளருந்துய ரிதுவெனச்
சமபா பதிதா னுரைத்தவம் முறையே
யெங்குவாழ் தேவரு முரைப்பக் கேட்டே
கோதமை யுற்ற கொடுந்துயர் நீங்கி
யீமச் சுடலையின் மகனையிட் டிறந்தபின்
சமபா பதிதன் னாற்ற றோன்ற
வெங்குவாழ் தேவருங் கூடிய விடந்தனிற்
சூழ்கடல் வளைஇய வாழியங் குன்றத்து
நடுவு நின்ற மேருக் குன்றமும

---

கஎஅ - கஎகூ. இருமூ வகையிற் பெருவனப் பெய்திய தெய்வதகணங்கள் - மேற்கூறிய உலகம் முப்பத்தொன்றனுள் ஆறுவதாகிய 'மஹாராஜிகலோகம்' முதலிய உலகம் ஆறிலுமுள்ள அறுவகைத்தெய்வகணங்கள். இந்த உலகங்கள் ஆறினுடைய பெயரையும் பதிகத்தின் உஅ - ம் அடியின் உரையிற்காண்க. 'பெருவனப் பெய்திய' என்றார், விளங்கொளிமேனியராதலின்.

கஅ௦. படுதுயர் - மிக்க துன்பம்.

கஅக. எண்வகை நரகர் - மேற்கூறிய உலகம் முப்பத்தொன்றனுள் முதலாவதாகிய நாரகலோகத்தின் பகுதிகளான மஹாநிரயம், ரௌரவம், காலஸூத்ரம், ஸஞ்சீவனம், மஹாவீசி, தபனம், ஸம்ப்ரதாபனம், ஸம்ஹாதம் என்னும் எட்டு நரகங்களிலுமுள்ளவர்கள்.

கஅஉ. ஈட்டம் - கூட்டம். நாள் - இருபத்தேழு நட்சத்திரங்கள்.

கஅ௩. மேற்கூறிய அரூபப்பிரஹ்மகணமுதலியவற்றைத் தன்னுள் அடக்கிய கோளத்தைச் சக்கரவாளமென்பர்; "சக்கரவாளத்துத் தேவரெல்லாம்" (கஉ - ம் காதை, எஉ) எனவும், "எண்ணருஞ் சக்கரவாள மெங்கணும்" (உசு - ம் காதை, [illegible]) எனவும் வருதல் காண்க.

கஅச. வரந்தரற் குரியோர் - தேவர். முன்னிறுத்தி - கோதமைக்கு முன்னே நிறுத்தி.

கஅ௫. அரந்தை - துன்பம், கெடும - கெடுமின். என - என்று சம்பாபதி சொல்ல.

கஅசு - கஅஎ. சம்பாபதி உரைத்தமுறையினை, சு - ம் காதை, கஎ௫ - கஎச - ம் அடிகளிற் காண்க.

கஅஅ. இறக்கத் துணிந்தமையால் கோதமை கொடுந்துயர் நீங்கினாள். இது போன்ற நிகழ்ச்சியைச் சிலப்பதிகாரம், காட்சிக்காதை, அஉ - ம் அடிமுதலியவற்றிற் காண்க.

கஅகூ. ஈமம் - பிணஞ்சுடுதற்கு அடுக்கும் விறகடுக்கு.

கக௦ - ககக. தோன்றக் கூடிய விடமென்க. 'கூட்டியவிடம்' என்றும் பாடம்.

ககஉ. சூழ்கடல் - பெரும்புறக்கடல். ஆழியங்குன்றத்து - சக்கரவாளகிரியின் உட்பட்ட இடத்தில்.

கக௩. நடுவிடத்தே நின்றதாகிய, எண்பத்திராயிரம் யோசனை உயரமும் அவ்வுயரத்திற்குத் தக்க பருமையும் அமைந்துள்ள மேருமலையும்.

புடையி னின்ற வெழுவகைக் குன்றமு
நால்வகை மரபின் மாபெருந் தீவு
மோரீ ராயிரஞ் சிற்றிடைத் தீவும
பிறவு மாங்கத னிடவகை யுரியன
பெறுமுறை மரபி னறிவுவரக் காட்டி
யாங்குவா ழுயிர்களு மவ்வுயி ரிடங்களும்
பாங்குற மண்ணீட்டிற் பண்புற வகுத்து
மிக்க மயனு மிழைக்கப் பட்ட
சக்கர வாளக் கோட்டமீங் கிதுகா
ணிடுபிணக் கோட்டத் தெயிற்புற மாதலிற்
சுடுகாட்டுக் கோட்ட மென்றல துரையா
ரிதன்வர விதுவென் றிருந்தெய்வ முரைக்க
மதனி னெஞ்சமொடு வான்றுய ரெய்திப்
பிறந்தோர் வாழ்க்கை சிறந்தோ ளுரைப்ப
விறந்திருள் கூர்ந்த விடையிருள் யாமத்துத்

---

௧௯௪. அம்மேருவின் பக்கத்தே அதிலிருந்து உயரத்தில் ஒன்றற்கொன்று வரவரப் பாதி பாதியளவு குறைந்து குறைந்து ஒன்றைச்சுற்றி யொன்றாகச் சூழ்ந்துள்ள எழுகுலகிரிகளும.

௧௯௫. மேற்கூறிய மேருவும் அதனைச்சூழ்ந்துள்ள எழுகுலகிரிகளும் அக்குல கிரிகள் ஒவ்வொன்றனையும சூழ்ந்து அவ்வக்கிரியின் உயர அளவுள்ள ஆழமும் அகலமுமமைந்த எழு கடல்களும் ஆகிய இவற்றையெல்லாம சூழ்ந்து கிடக்கும் பெரும்புறக்கடலிலுள்ள சம்புத தீவு முதலிய நான்கு மகாதவீபங்களும். இந்த நான்கினுள் தெற்கேயுள்ளது சம்புத்தீவு. இதனை "நாவ லோங்கிய மா பெருந் தீவு" (௨ - ம் காதை, ௧), "நாவலொடு பெயரிய மாபெருந் தீவத்து" (௧௧ - ம் காதை, ௧௦௭) என்பவற்றாலுணர்க.

௧௯௬. மேற்கூறிய மஹாத்வீபம் நான்கினுள் ஒவ்வொன்றையும் தனிததனியே ஐந்நூறு ஐந்நூறாகச் சூழ்ந்துள்ள இரண்டாயிரம் சிறு தீவுகளும்; இச்சிறு தீவுகள், அந்தரத்தீவுகளென்றுஞ் சொல்லப்படும்.

௧௯௫ - ௧௯௬. "அந்தரத தீவினு மகன் பெருந் தீவினும்" என்று பின்வருதல் காண்க; ௨௫ - ம் காதை, ௨௨௪.

௧௯௩ - ௧௯௬. இவ்வடிகளுக்கு எழுதியவை, **பர்மாதேசத்துப் புத்தநூலிலிருந்து** தெரிந்துகொள்ளப்பட்டன.

௧௯௭-௧௯௮. உரியனவற்றைக்காட்டி.

௧௯௯. உயிர்களென்றது, அவ்வவ்வுயிர்கள் வாழுகின்ற உடம்புகளை.

௨௦௦. பாங்கு - பகுதித்திரள்; "அடியோர் பாங்கு மாயமு நீங்கி" என்றார் **சிலப்பதிகாரத்**தும்; கொலைக்களக் காதை, ௮௫; அழகுமாம். மண்ணீட்டின - சுதையாற் செய்யப்பட்டுள்ள பாவைவடிவமாக.

௨௦௧. மயன் - தெய்வத்தச்சன்; அசுரத்தச்சனென்றுங் கூறுவர்.

௨௦௩. இடுதல் - போகடுதல். பிணக் கோட்டம - மயானம்.

௨௦௪. ௬ - ம் காதை, ௫௦.

௨௦௫. இருந்தெய்வம் - மணிமேகலா தெய்வம்.

௨௦௬. மதனில் நெஞ்சமொடு - செருக்கற்ற மனத்துடனே.

௨௦௭. சிறந்தோள் - மணிமேகலை; வாழ்க்கையென்றது, நிலையாமையை. வாழ்க்கையைச் சிறந்தோள் உரைப்ப.

௨௦௮. இடையிருள் யாமத்து - நடுயாமத்தில், ௬ - ம் காதை, ௧௪௫.

தூங்குதுயி லெய்திய சுதமதி யொழியப்
பூங்கொடி தன்னைப் பொருந்தித் தழீஇ
யந்தர மாறா வாறைந் தியோசனைத்
தென்றிசை மருங்கிற் சென்றுதிரை யுடுத்த
மணிபல் லவத்திடை மணிமே கலாதெய்வ
மணியிழை தன்னைவைத் தகன்றது தானென.

சக்கரவாளக்கோட்டமுரைத்தகாதை முற்றிற்று.

---

௨௧0. பூங்கொடிதன்னை - மணிமேகலையை.

௨௧௧. அந்தரம் ஆறா - ஆகாயமே வழியாக.

௨௧௧ - ௨௧௨. முப்பதுயோசனைதூரம் தென்றிசைக்கண்ணே சென்று.

௨௧0 - ௨௧௪. ௬ - ம் காதை, ௫௫ - ௫௭.

௧ - ௨௧௪. கதிர்மண்டிலம் சொரிய, மேனியள் எத்தி நோக்கி என்னுற்றீரென, அவள் உரைத்தலும், அருந்தெய்வ முரைப்ப, சுதமதி என்னையோவென, நேரிழை கூறும்; அங்ஙனங்கூறுகின்ற தெய்வம், இதன் வரவு இதுவென்றுரைக்க, சிறந்தோளுரைப்ப, தெய்வம் இடையிருள்யாமத்துச் சுதமதியொழியப் பூங்கொடிதன்னைத் தழீஇச் சென்று மணிபல்லவத்தில் வைத்து அகன்றதென முடிக்க.

ஏழாவது

# துயிலெழுப்பியகாதை.

[ஏழாவது மணிமேகலாதேய்வம் உவவனம்புகுந்து சுதமதியைத் துயிலெழுப்பியபாட்டு.]

மணிமே கலைதனை மணிபல் லவத்திடை
மணிமே கலாதெய்வம் வைத்து நீங்கி
மணிமே கலைதனை மலர்ப்பொழிற் கண்ட
வுதய குமர னுறுதுய ரெய்திக்
கங்குல் கழியிலென் கையகத் தாளெனப்
பொங்குமெல் லமளியிற் பொருந்தா திருந்தோன்
முன்னாத் தோன்றி மன்னவன் மகனே
கோனிலை திரிந்திடிற் கோணிலை திரியுங்
கோணிலை திரிந்திடின் மாரிவறங் கூரு
மாரிவறங் கூரின் மன்னுயி ரில்லை
மன்னுயி ரெல்லா மண்ணாள் வேந்தன்
றன்னுயி ரென்னுந் தகுதியின் றாகுந்
தவத்திறம் பூண்டோ டன்மேல் வைத்த
வவத்திற மொழிகென் றவன்வயி னுரைத்தபி

ரு. மலர்ப்பொழிற் கண்ட - உவவனத்திற்கண்ட.

ச. உறுதுயர் - மிக்க துன்பம்.

ரு. கையகத்தாள் - கையினிடத்தேயுள்ளாள்.

சு. பொருந்ாது - துயிலாது.

கூ. வறம் - வறமை.

கஉ. 'தன்னுயி ரென்னுந் தகுவையாயின்' என்றும் பாடம்.

அ - கஉ. 'பதிகம்' உச - ம் அடியைப் பார்க்க. இதுபோலவே, "கோணிலை திரிந்து நாழி குறைபடப் பகலகண் மிஞ்சி, நீணில மாரியின்றி விளைவஃகிப் பசியு நீடிப், பூண்முலை மகளிர் பொற்பிற் கற்பழிந் தறங்கண் மாறி, யானையிவ் வுலகு கேடா மரசுகோல் கோடி னென்றான்" என்று சீவகசிந்தாமணியிலும் வருதல் காண்க; நாமகளிலம்பகம், உஉசு.

கங. தவத்திறம் - தவத்தின்கூறுபாடு.

கச. அவத்திறம் - கேடுசெய்யுங்காரியம்; "தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லா, ரவஞ்செய்வா ராசையுட் பட்டு" என்ற உசுசு - ம் திருக்குறளில் 'அவம்' என்பது இப்பொருள்பட்டு வருதல்காண்க. 'அவ்வயினுரைத்தபின்' என்றும் பாடம்.

சு - கச. கஅ - ம் காதை, அO - அங.

க - கச. மணிமேகலாதெய்வம மணிமேகலையை மணிபல்லவத்திடை வைத்து நீங்கிப் பொருந்தா திருந்தோனாகிய உதயகுமரன் முன்னர்த்தோன்றி அவதிறம் ஒழிகவென்று உரைத்தபினென்க.

னுவவனம் புகுந்தாங் குறுதுயில் கொள்ளுஞ்
சுதமதி தன்னைத் துயிலிடை நீக்கி
யிந்திர கோடணை யிந்நகர்க் காண
வந்தே னஞ்சல் மணிமே கலையா
ளுதிசான் முனிவ னறவழிப் படூஉ
மேது முதிர்ந்த திளங்கொடிக் காதலின்
விஞ்சையிற் பெயர்த்துநின் விளங்கிழை தன்னையோர்
வஞ்சமின் மணிபல் லவத்திடை வைத்தேன்
பண்டைப் பிறப்பும் பண்புற வுணர்ந்தீங்
கின்றேழ் நாளி லிந்நகர் மருங்கே
வந்து தோன்று மடக்கொடி நல்லாள்
களிப்புமாண் செல்வக் காவற் பேரூ
ரொளித்துரு வெய்தினு முன்றிற மொளியா
ளாங்கவ ளிந்நகர் புகுந்த வந்நா
ளீங்கு நிகழ்வன வேதுப் பலவுள
மாதவி தனக்கியான் வந்த வண்ணமு
மேதமி னெறிமக ளெய்திய வண்ணமு
முரையாய் நீயவ ளென்றிற முணருந்
திரையிரும பௌவத்துத் தெய்வமொன் றுண்டெனக்
கோவலன் கூறியிக் கொடியிடை தன்னையென்

கஎ. இந்திரகோடணை - இந்திரவிழா.

கஅ. இதுபோன்ற அடி, சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை, ௩௩ - ம அடியாகவும் வந்திருத்தல்காண்க. அஞ்சல் - அஞ்சாதே.

க௯. ஆதிசால்முனிவன் - புத்தன்.

உ0. ஏது முதிர்ந்தது - ஏதுநிகழ்ச்சி முற்றியது.

உக. விஞ்சையின் - வித்தையினாலே.

உ௪. இன்றேழ்நாளில் - இற்றைக்கு ஏழாவதுநாளில்; கக - ம் காதை, கஉ௯.

உ௫. தோன்றும் - தோன்றுவாள். நல்லாள் - மணிமேகலை. 'வந்து காண்குறும்' என்றும் பாடம்.

உ௬. பேரூர் - காவிரிப்பூம்பட்டினத்தில்.

உஎ. உருவை மறைத்து வருவாளாயினும். 'ஊன்றிற மொழியாள்' எனவும், 'உன்றிற மொழியாள்' எனவும் பாடம்.

உ௯. நிகழ்வனவாகிய ஏதுக்கள்.

௩க. ஏதமில்நெறி - குற்றமில்லாத வழி; அஃதாவது விசுத்திமார்க்கம். 'ஏதமி னின்மகள்' எனவும் பாடம்.

௩உ. அவள் - மாதவி, என்திறம் உணரும் - என்வரலாற்றை உணர்வாள். 'உரைப்பொருளுணரும்' என்றும பாடம்.

௩௩. பௌவத்து - கடலினிடத்து. தெய்வமொன்று உண்டென - எனது குலமுதல்வனை விபதினின்றுநீக்கிப் பாதுகாத்த தெய்வமொன்று உள்ளதென்று.

௩௫. நன்னளிற் செறிந்த இருளிடத்தே. 'நல்லிருள்' என்றும் பாடம்.

௩௩ - ௩௫. இவ்வடிகளின் பொருளோடு சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை, உஅ - ம் அடிமுதலியவற்றின் பொருளை ஒப்பிடுக.

௩௬. கையற - செயலற்றுப்போக; சிலப்பதிகாரம், வரந்தருகாதை, உ௫ - உ௬. 'காமன் கையிற் கடுநவை' என்றும் பாடம்.

ளமஞ் செய்த நன்னா ணள்ளிருட்
காமன் கையறக் கடுநவை யறுக்கு
மாபெருந் தவக்கொடி யீன்றனை யென்றே
நனவே போலக் கனவகத் துரைத்தே
ஈங்கிவ் வண்ண மாங்கவட் குரையென்
றந்தரத் தெழுந்தாங் கருந்தெய்வம் போயபின்
வெந்துய ரெய்திச் சுதமதி யெழுந்தாங்
ககன்மனை யரங்கத் தாசிரியர் தம்மொடு
வகைதெரி மாக்கட்கு வட்டணை காட்டி
யாடல் புணர்க்கு மரங்கியன் மகளிரிற்
கூடிய குயிலுவக் கருவிகண் டுயின்று
பண்ணுக்கிளை பயிரும் பண்ணியாழ்த் தீந்தொடை
கொளைவல் லாயமோ டிசைகூட் டுண்டு
வளைசேர் செங்கை மெல்விர லுதைத்த
வெம்மைவெய் துறுது தன்மையிற் றிரியவும்
பண்பில் காதலன் பரத்தமை நோனு

கரு-சO. மணிமேகலாதெய்வம் புகுந்து நீக்கி, 'இந்நகரில் இந்திரவிழாக்காண வந்தேன்; யான் மணிமேகலாதெய்வம்; இளங்கொடிக்கு எது முதிர்ந்ததாதலால் அவளை மணிபல்லவத்தில வைத்தேன்; அவள் இந்நகரில இற்றைக்கு எழாநாளில் தோன்றுவள்; எதுப்பலவுள; மாதவிக்குரை; அவள் என்றிறமுணரும்; இவ்வண்ணம் அவட்கு உரை' என்று போயபினென்க.

சஉ. அகல் மனை அரங்கத்து - விசாலித்த வீடாகிய நடனசாலையில், ஆசிரியர் தம்மொடு - இயலாசிரியனும், ஆடலாசிரியனும், யாழாசிரியனும், இசையாசிரியனும், குழலோனும், தண்ணுமையோனுமாகிய இவர்களோடு நின்று.

சங. வகைதெரிமாக்கட்கு - அவிநய முதலியகூறுபாடுகளைத்தெரிகின்றமாந்தர்களுக்கு. வட்டணை காட்டி - கமலவர்த்தனையைக்காட்டி; கமலவர்த்தனையாவது கைத்தலஙகாட்டல்; சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையாரிலம்பகம், கஅங.

சச. அரங்கியல் மகளிரின் - நாடகமகளிர்போல; மகளிருடனென்றுமாம்.

சரு. கூடியகுயிலுவககருவி - சேர்ந்த குழல் யாழ் மத்தளம் குடமுழா இடக்கையென்பவைகள்; "கூடிய குயிலுவக் கருவிக ளெலலாங், குழல்வழி நின்றதி யாழே யாழ்வழித், தண்ணுமை நின்றது தகவே தண்ணுமைப், பின்வழி நின்றது முழவே முழவொடு, கூடிநின்றிசைதத தாமந் திரிகை" என்று வருதலகாண்க; இது சிலப்பதிகாரம், அரங்கேற்றுகாதை, கஙௌ - கசஉ. கண்டுயின்று - ஒலியாதடங்கி. 'மகளிரின்' (எ-ம் காதை, சச) என்றதனால் அவர்கள் துயின்றமையும் பெறப்பட்டது.

சசு - சகூ. பண்ணுக்கிளை - பண்ணின் வகைகளை, பயிரும் - இசைக்கும். 'பயிறரும்' என்றும் பாடம். தீந்தொடை - இனியநரம்புகள். கொளை வல் ஆயமோடு -பாட்டில் வல்ல மகளிர்கூட்டத்துடனே; கொளை - ஒற்றறுத்தலுமாம். கூட்டுண்டு - சேர்ந்தனுபவித்து. 'வளையார்செஙகை' என்றும பாடம். உதைத்த - செறித்த. உறுது - உறுமையால். தொடை திரியவுமென்க.

ருO - ருகூ. பரத்தமை - பரத்தன் தன்மை; பரத்தையை நுகர்வான் பரத்தன்; "பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பர், கண்ணேன்

துண்கண் சிவந்தாங் கொல்குகொடி போன்று
தெருட்டவுந் தெருளா தூடலொடு துயில்வோர்
விரைப்பூம் பள்ளி வீழ்துணை தழுவவுந்
தளர்நடை யாயமொடு தங்கா தோடி
விளையாடு சிறுதே ரீர்த்துமெய் வருந்தி
யமளித் துஞ்சு மைம்படைத் தாலிக்
குதலைச் செவ்வாய்க் குறுநடைப் புதல்வர்க்குக்
காவற் பெண்டிர் கடிப்பகை யெறிந்து
தூபங் காட்டித் தூங்குதுயில் வதியவு
மிறையுறை புறவு நிறைநீர்ப் புள்ளுங்
காவுறை பறவையு நாவு ளழுந்தி
விழவுக்களி யடங்கி முழவுக்கண் டுயின்று
பழவிறன் மூதூர் பாயல்கொ ணடுநாட்
கோமகன் கோயிற் குறுநீர்க் கன்னலின்
யாமங் கொள்பவ ரேத்தொலி யரவமு
முறையுளின் றொடுங்கிய வுண்ணு வயக்கத்து
நிறையழி யானை நெடுங்கூ விளியுந்
தேர்வழங்கு தெருவுஞ் சிற்றிடை முடுக்கரு
மூர்காப் பாள ரெறிதுடி யோதையு
முழங்குநீர் முன்றுறைக் கலம்புணர் கம்மியர்
துழந்தடு கள்ளின் றொப்பியுண் டயர்ந்து

பரத்தநின் மார்பு" என்பது **திருக்குறள்**, ௧௩௧௧; "வறுமொழி யாளரொடு வம்பப் பரத்தரொடு" என்பது **சிலப்பதிகாரம்**, கொலைக்களக்காதை, ௯. 'பார்த்தமைநோனாது' என்றும் பாடம். நோனாது - பொறாமல். துயில்வோர் - ஊடியமகளிர். 'துயில்வோள்' என்றும் பாடம். வீழ்துணை - விரும்பியகணவன். துயில்வோர் தழுவவும்.

௫௪ - ௫௯. தளர்நடையாயம் - சிறார் கூட்டம். 'தாங்காதோடி' என்றும் பாடம். ஈர்த்து - இழுத்து. காவற்பெண்டிர் - செவிலித்தாயர். காவற்பெண்டிர் துயில்வதியவும்.

௬௦. இறை - இறப்பு.

௬௧. கா - சோலை.

௬௨. களி - களிப்பு; கூத்துமாம்.

௬௩. நடுநாள் - நடு இரவில்.

௪௧ - ௬௩. தன்மையிற்றிரியவும், வீழ்துணைதழுவவும், துயில்வதியவும், கருவி கண்டுயின்று நா உள்ளழுந்தி முழவுக் கண்டுயின்று ஊர் பாயல்கொள் நடுநாளிலென்க.

௬௪. கன்னலின் - நாழிகைவட்டிலால். 'குறிநீர்க்கன்னலின்' என்றும் பாடம்.

௬௫. யாமங்கொள்பவர் - நாழிகைக் கணக்கர்; **சிலப்பதிகாரம்**, இந்திரவிழவூரெடுத்தகாதை, ௪௯.

௬௬. உண்ணு உயக்கம் - உண்ணாமையாலுண்டாகியவருத்தம்.

௬௭. நெடுங்கூவிளி - நெடியகூப்பிடுதலின் முழக்கம்; ௭-ம் காதை, ௧௧௫.

௬௮. சிற்றிடைமுடுக்கர் - சிறிய இடங்களையுடைய முடுகுத் தெருக்கள்.

௬௯. துடி - ஒருவகைத் தோற்கருவி.

௭௦. கலம்புணர் கம்மியர் - கப்பலிற் சேர்ந்து தொழில் செய்வோர்.

௭௧. துழந்து அடு கள்ளின் தொப்பி உண்டு அயர்ந்து - துழாவிச் சமைத்த

பழஞ்செருக் குற்ற வனந்தர்ப் புரணியு
மரவாய்க் கடிப்பகை யையவிக் கடிப்பகை
விரவிய மகளி ரேந்திய தூமத்துப்
புதல்வரைப் பயந்த புனிறுதீர் கயக்கந்
தீர்வினை மகளிர் குளனு டாடவும்
வலித்த நெஞ்சி னாடவ ரின்றியும்
புலிக்கணத் தன்னோர் பூத சதுக்கத்துக்
கொடித்தேர் வேந்தன் கொற்றங் கொள்கென
விடிக்குரன் முழக்கத் திடும்பலி யோதையு
மீற்றிளம் பெண்டி ராற்றுப் பாலகர்
கடுஞ்சூன் மகளிர் நெடும்பு ணுற்றோர்
தந்துயர் கெடுக்கு மந்திர மாக்கண்
மன்றப் பேய்மகள் வந்துகைக் கொள்கென
நின்றெறி பலியி னெடுங்குர லோதையும்
பல்வே றோதையும் பரந்தொருங் கிசைப்பக்

---

கள்ளுகளில் நெல்லாற் சமைத்த கள்ளை யுண்டு தம்மைமறந்து; "இல்லடு கள்ளின் றொப்பி பருகி" என்பது பெரும் பாணாற்றுப்படை, கசஉ. 'துழந்த கள்ளின்' என்றும் பாடம்.

எஉ. அனந்தர் - கள்ளையுண்டமையாலுண்டாகிய செருக்கு; "அனந்தர் நடுக்க மல்லதி யாவதும்" என்பது பொருநராற்றுப்படை, கூச.

எஙூ. கடிப்பகை - பேய்க்குப் பகையாகவுள்ளதென்று பொருள்; அரவாய்க் கடிப்பகை - அரம்போன்றவாயினையுடைய வேப்பிலை. ஐயவிக்கடிப்பகை - சிறுகடுகு. பேய்முதலியவைகள் அணுகாதிருததற்கு இருவகைக்கடிப்பகையும் கூறப்பட்டன.

எச. 'இரவியன் மகளிர்' என்றும் பாடம். தூமத்து - புகையுடன்.

எங-எச. மகளிரேந்திய அரவாய்க் கடிப்பகை ஐயவிக்கடிப்பகைவிரவிய தூமம் ஆகிய இந்த இரண்டுடன்சென்றென ஒருசொல் வருவிக்க.

எரு - எசு. புனிறுதீர்மகளிர்; கயக்கந்தீர்மகளிரென்க; கயக்கம் - கயங்குதல். 'புனிறுதீ ருயக்கந், தீர்வியன் மகளிர்' என்றும் பாடம்.

எரு - எசு. புதல்வரைப்பெற்றுப் புனிறுதீர்ந்த மகளிர் இரவிற் சென்று குளத்தில் நீராடுதலை, "கணவ ருவப்பப் புதல்வர்ப் பயந்து, பணைத்தேந் திளமுலை யமுத மூறப், புலவுப்புனிறு தீர்ந்து பொலிந்த சுற்றமொடு, வளமனை மகளிர் குளநீ ரயர" என்னும் மதுரைக்காஞ்சியாலுணர்க; சுOO - சுOரு. புதல்வரைப்பெற்றமகளிர் எழுந்துசென்று பத்தாவது இரவில் நீராடவேண்டுமென்று ஆபஸ்தம்பக்ருஹ்யத்தின் கரு - ம் கண்டத்துள்ள அ - ம் ஸூத்திரத்தாலும், அந்நூலை அனுஸரித்துத் தோழப்பரென்று வழங்குகிற வைதிகஸார்வபௌமரியற்றிய க்ருஹ்யரத்நத்தில் சு - ம் கண்டத்தில் நாமகரணப்பிரகரணத்திலுள்ள "தசமேஹநி" என்னும் ஸூத்திரத்தாலும் தெரிகின்றது.

எஎ. வலித்தநெஞ்சின் ஆடவர் இன்றியும் - பகைமையைக்கருதிய நெஞ்சினையுடைய வீரர் இல்லாதிருக்கவும்.

எஅ. புலிக்கணத் தன்னோர் - வீரர். பூத சதுக்கத்து - பூதத்தையுடைய சதுக்கத்திலே; சதுக்கம் - நாற்சந்தி.

அக. சு - ம் காதை, கூஅ.

அஉ. கடுஞ்சூல் மகளிர் - முதற்சூலையுடைய மகளிர்; "கடுஞ்சூன் முண்ட

கேட்டுளங் கலங்கி யூட்டிரு ளழுவத்
துருந்தே ரிளநகை நீங்கிப் பூம்பொழிற்
றிருந்தெயிற் குடபாற் சிறுபுழை போகி
மிக்கமா தெய்வம் வியந்தெடுத் துரைத்த
சக்கர வாளக் கோட்டத் தாங்கட்
பலர்புகத் திறந்த பகுவாய் வாயி
லுலக வறவியி னொருபுடை யிருத்தலுங்
கந்துடை நெடுநிலைக் காரணங் காட்டிய
வந்தி லெழுதிய வற்புதப் பாவை

கங் கதிர்மணி கழ ாஅலவும்" என்பது சிறுபாணாற்றுப்படை, கசஅ.

அஎ. ஊட்டிருளழுவத்து - ஊட்டினாற்போன்ற இருட்பரப்பில். 'யூட்டிருளழுவத்து' என்றும் பாடம்.

அகூ. சு - ம் காதை, உஉ.

கூஉ - கூரு. கஎ - ம்காதை, எஎ - எஅ. உலக அறவி - ஊரம்பலம்; இஃது, எல்லாச்சாதியாரும் வந்து தங்குதற்குரிய தருமசாலை; இதனை 'உலோகோபகாரிகா' என்பர் வடநூலார்.

சக - கூரு. சுதமதி யெழுந்து நடுநாளில் எத்தொலியரவமும், நெடுங்கூவிளியும், துடியோதையும், அனந்தர்ப்பாணியும், குளறுபடரவமும், பலியோதையும், நெடுங்குரலோதையும் ஆகிய பல ஓசைகளையும் கேட்டு உளங்கலங்கி நீங்கிப்போகிச் சக்கரவாளக்கோட்டத்திடத்தே உலக வறவியின் ஒருபுடையிருததலுமென்க.

கூச - கூரு. நெடுநிலை உடைக் கந்து அந்தில் - நெடியதோற்றத்தையுடைய தூணாகிய அவ்விடத்தே, காரணம் காட்டிய - பழவினையாகிய காரணத்தை யாவருக்கும் காட்டுதற்பொருட்டு, எழுதிய - மயனென்னும் தெய்வத்தச்சனால் நிருமிக்கப்பட்ட, அற்புதப் பாவை - யாவருக்கும் ஆச்சரியத்தை உண்டுபண்ணுகின்ற பாவை; இது, மேற்கூறிய உலகவறவியிற் சம்பாபதிகோயிலின் கிழக்கேயுள்ள தூணொன்றில் தெய்வகணத்தோனாகிய துவதிகனென்பவனுடைய வடிவம்போல மயனால் நிருமிக்கப்பட்ட பாவை; இது முக்காலச்செய்தியையும் கேட்போர்க்குச் சொல்லும் இயல்பையுடையது; பேசுதல்பற்றி இது நாவுடைப் பாவையென்றுஞ் சொல்லப்படும். இவற்றை, "கந்துடை நெடுநிலைக் கடவுளெழுதிய, வந்திற் பாவை யருளுமாயிடின்" (கரு - ம் காதை, ௯௯ - ௯௪) எனவும், "கந்துடை நெடுநிலைக் காரணங் காட்டிய, தன்றுணைப் பாவையை" (கஎ - ம் காதை, அகூ - கூ0) எனவும், "நெடுநிலைக் கந்தி னிடவயின் விளங்கக், கடவு ளெழுதிய பாவையாங் குரைக்கும்" (உ0 - காதை, கக0 - ககக) எனவும், "கடவு ளெழுதிய நெடுநிலை கந்தின், குடவயி னமைத்த நெடுநிலை வாயின், முதியாள் கோட்டம்" (உக - ம் காதை, க - ௯) எனவும், "என்றிவை சொல்லி யிருந்தெய்வ முரைத்தலும்" (உக - ம் காதை, ௯ரு) எனவும், "மன் பெருந் தெய்வ கணங்களி னுள்ளேன், றுவதிக னென்பேன் றொன்றுமுதிர் கந்தின், மயனெனக் கொப்பா வகுத்த பாவையி, னீங்கேன்" (உக - ம் காதை, க௯0 - க௯௯) எனவும், "நெடுநிலைக் கந்தி னின்ற பாவை" (உஉ - ம் காதை, உ) எனவும், "இலகொளிக் கந்தி னெழுதிய பாவாய்" (உஉ - ம் காதை, கூக) எனவம், "நாவுடைப் பாவை நங்கையை யேத்தலும்" (உஉ - ம் காதை, கூச) எனவும், "நாவுடைப் பாவையை நலம்பல வேத்தி" (உஉ - ம் காதை, க0ச) எனவும் வருவனவற்றானுணர்க. எழுதிய - பண்ணிய; "கடவு ளெழுதவோர் கற்றாரெனின்" (காட்சிக் காதை, க௯0) எனவும், "கடவ ளெழுதவோர் கற்கே யாதலின்" (காட்சிக்காதை, கசுக) எனவும், "கடவு ளெழுதவோர் கற்கொண் டல்லது" (கால்கோட்காதை, கச) எனவும் சிலப்பதிகாரத்துவருதல்காண்க.

மைத்தடங் கண்ணாண் மயங்கினள் வெருவத்
திப்பிய முரைக்குந் தெய்வக் கிளவியி
னிரவி வன்ம னொருபெரு மகளே
துரகத் தானைத் துச்சயன் றேவி
தயங்கிணர்க் கோதைத் தாரை சாவுற
மயங்கி யானைமுன் மன்னுயிர் நீத்தோய்
காராளர் சண்பையிற் கௌசிகன் மகளே
மாருத வேகனோ டிந்நகர் புகுந்து
தாரை தவ்வை தன்னொடு கூடிய
வீரை யாகிய சுதமதி கேளா
யின்றேழ் நாளி விடையிருள் யாமத்துத்
தன்பிறப் பதனொடு நின்பிறப் புணர்ந்திங்
கிலக்குமி யாகிய நினக்கிளை யாள்வரு
மஞ்சலென் றுரைத்த தவ்வுரை கேட்டு

---

கூசு. மைத்தடங் கண்ணாள் - சுதமதி.

கூஎ. திப்பியம் - இது, திவ்யமென்னும் வடமொழிச்சிதைவு; தேவலோகத்திலிருப்பதென்று பொருள்; இவ்வாறு இறந்தகால எதிர்காலச் செய்திகளைக் கூறுதல் பெரும்பாலும் இவ்வுலகவழக்க மன்மையின், இதனை, ‘திப்பியம்’ என்றார். “செங்கோல் காட்டிய தெய்வமுந் திப்பியம், பையர வல்குல் பலர்பசி களையக், கையி லேந்திய பாத்திரந் திப்பிய, முந்தை முதல்வி யடிபிழைத் தாயெனச், சித்திர முரைத்த விதூஉந் திப்பியம்” என்று இந்நூலுள்ளே ‘திப்பியம்’ என்பது இப்பொருளில் வருதல்காண்க; ககூ - ம் காதை, கO - கச. தெய்வககிளவியினால் திப்பியமுரைக்கும். தெய்வக்கிளவி - தெய்வததன்மையுள்ளசொல; வடசொல்லாலெனினுமமையும்.

கூஅ. இரவிவன்மன் - அசோதரநகரத்தரசன்; இவன் சுதமதியென்பவளுடைய பூர்வஜன்மபிதா.

கூகூ. கக-ம் காதை, கரூச. துச்சயன் = துர்ஜயன் - பகைவர்களால் வருத்தமுற்று வெல்லப்படுபவனென்று பொருள்; இவன் அங்கநாட்டிலுள்ள கச்சயமென்னு நகரத்தரசன்; சுதமதியென்பவளுடைய பூர்வஜன்மநாயகன், கO - ம் காதை, ருO - ருச.

கOO. தாரை - இவள் வீரையின் முன்பிறந்தவள்; வீரை யானையால் இறந்தது கேட்டு இவள் இறந்தமையால, ‘சாவுற’ என்றார்; கஉ - ம் காதை, சரு - சஅ.

கOக. மயங்கி - மதுவைக் குடித்தமையால் மயங்கி. ‘மயங்கியல் யானை’ என்றும் பாடம்.

கOஉ. சண்பையென்பதற்குப்பொருள் அங்கநாட்டிற் கங்கைககரையிலுள்ளதாகிய சம்பாநகரமென்று கொள்ளும்பொழுது காராளரென்பது கராளரென்பதின் விகாரமென்றும், கொடுமையென்று பொருள்படுகின்ற கராளத்வம் அல்லது கராளதையென்பது இச்சொற்குப் பகுதியென்றும், இவர்கள் துர்க்காபூஜைசெய்து நரபலிகொடுப்போரென்றும், இப்பெயர் இக்காலத்து மஹாராஷ்டிரதேசத்திற் கராடிகளென்று வழங்குகின்றதென்றுங் கூறுவர். ரு - ம் காதை, உக.

கOச. தாரை தவ்வை - தாரையாகிய தவ்வை; தவ்வை - முன்பிறந்தவள். தாரை - மாதவியென்பவளுடைய பூர்வஜன்மநாமதேயம்.

கOரு. வீரை - சுதமதியென்பவளுடைய பூர்வஜன்மநாமதேயம்.

கOஅ. இலக்குமி-மணிமேகலையென்பவளின் முற்பிறப்பின் பெயர்; தாரை, வீரை,இலக்குமி இம்மூவரும் சகோதரிகள்.

கOகூ. அஞ்சல் - அஞ்சாதே. தெய்வம் உரைத்தது.

நெஞ்சநடுக்குறூஉ நேரிழை நல்லாள்
காவ லாளர் கண்டுயில் கொள்ளத்
தூமென் சேக்கைத் துயில்கண் விழிப்ப
வலம்புரிச் சங்கம் வறிதெழுந் தார்ப்பப்
புலம்புரிச் சங்கம் பொருளொடு முழங்கப்
புகர்முக வாரண நெடுங்கூ விளிப்பப்
பொறிமயிர் வாரணங் குறுங்கூ விளிப்பப்
பணைநிலைப் புரவி பலவெழுந் தாலப்
பணைநிலைப் புள்ளும் பலவெழுந் தாலப்
பூம்பொழி லார்கைப் புள்ளொலி சிறப்பப்
பூங்கொடி யார்கைப் புள்ளொலி சிறப்பக்
கடவுட் பீடிகைப் பூப்பலி கடைகொளக்
கலம்பகர் பீடிகைப் பூப்பலி கடை கொளக்
குயிலுவர் கடைதொறும் பண்ணியம் பாங்கெழக்
கொடுப்போர் கடைதொறும் பண்ணியம் பாங்கெழ
ஊர்துயி லெடுப்ப வுரவுநீ ரழுவத்துக்

---

கக0. நல்லாள் - சுதமதி.

ககஉ. சேக்கைத் துயில் கண் - படுக்கையில் தூங்குகின்ற ஆடவர் மகளிரென்னும் இருபாலாருடைய கண்கள்.

ககங. 'வலம்புரி சங்கம்' என்றும் பாடம். வறிதெழுந்தார்ப்ப - பொருளின்றி முழங்க.

ககச. புலம் - அறிவு. சங்கம் - புலவர் கூட்டம்; 'புலம்புரிசங்கம்' என்றும் பாடம்.

ககரு. வாரணம் - யானை. நெடுங்கூ விளிப்ப - நெடியகூப்பீட்டைச்செய்ய; எ - ம் காதை, சுஎ. கூ - கூப்பீடு; "வினைபுனை நல்லி வினைகூஉக் கேட்பவும்" என்பது புறநானூறு, சச.

ககசு. வாரணம் - கோழி.

ககஎ. பணை - குதிரைப்பந்தி. ஆல - ஆட.

ககஅ. பணை - கிளை. 'கணைநிலைப்புள்ளும்' என்றும் பாடம். ஆல - முழங்க.

ககஎ - ககஅ. 'பலவெழுந் தார்ப்ப' என்றும் பாடம்.

கககூ. பூம்பொழில் ஆர்கைப் புள் ஒலி சிறப்ப - பொலிவு பொருந்திய சோலையினிடத்தே நிறைதலையுடைய பறவைகளின் முழக்கம் அதிகரிக்க.

கஉ0. பூங்கொடியார் - மகளிர். புள் - கைவளை; "புட்கை போகிய புன்றலை மகாஅர்" என்பது மலைபடுகடாம், உகூ.

கஉக. தெய்வங்களுக்குரிய பீடங்களுக்குக் கொடுக்கப்படும் பொலிவுபெற்ற பலிகளானவை முடிவுகொள்ள.

கஉஉ. அணிகலங்கள் விற்கப்படுகின்ற அங்காடிவீதியில் மலராற் செய்யப்படும் அர்ச்சனைகளைக் கடையிடங்கள் கொள்ள; "பூப்பலி செய்து காப்புக் கடைநிறுத்தி" என்பது சிலப்பதிகாரம், நடுகற் காதை, உகக; வாயில்களில் இல்லுறை தெய்வங்களின் பொருட்டுக் காலையிற் பூவிடுதல் மரபு.

கஉக - கஉஉ. 'கடிகொள' என்றும் பாடம்.

கஉங. தோற்கருவி வாசிப்பாருடைய இடங்களிலெல்லாம் செவ்வை செய்யப்பட்ட வாத்தியங்கள் பரவியெழ; பண் - இசையென்றுமாம்.

கஉச. உபகாரிகளுடைய வாயில்கடோறும் கொடுத்தற்குரிய பல பண்டங்களும் பரவுதலுற்றுமிக.

கஉரு. எடுப்ப - எழுப்ப. 'ஊர்துயி லெழுப்பிய' என்றும், 'ஊர்துயி லெடுப்

காரிருள் சீத்துக் கதிரவன் முளைத்தலு
மேவுறு மஞ்ஞையி னிளைந்தடி வருந்த
மாநகர் வீதி மருங்கிற் போகிப்
போய கங்குலிற் புகுந்ததை யெல்லா
மாதவி தனக்கு வழுவின் றுரைத்தலு
நன்மணி யிழந்த நாகம் போன்றவ
டன்மகள் வாராத் தனித்துய ருழப்ப
வின்னுயி ரிழந்த யாக்கையி னிருந்தன
டென்னிய துரைத்த சுதமதி தானென.

துயிலெழுப்பியகாதை முற்றிற்று.

---

பிய' என்றும் பாடம். உரவுநீரழுவத்து - கடற்பரப்பில்.

கஉசு. சீத்து - அழித்து.

கஉஎ. ஏ - அம்பு; "சுதமதி கேட்டுத் துளக்குறு மயில்போல்" என்றார் முன்னும்; ௬ - ம் காதை, அசு.

கஉகூ. போயகங்குலில் - சென்ற இரவில்.

கஙக. இப்படியே, "மன்னவன் மகனுக் குற்றது பொறாஅ, னன்மணி யிழந்த நாகம் போன்று" என்று இவ்வுவமையே பின்னும்வரும்; உ௫ - ம் காதை, கஅ௬ - கஅ௫; "இருநிதிக் கிழவனும் பெருமனைக் கிழத்தியு, மருமணி யிழந்த நாகம் போன்றதும்" என்பது சிலப்பதிகாரம், புறஞ்சேரியிறுத்தகாதை, ௫எ - ௫அ. அவள் - மாதவி.

கஙங. "இன்னுயி ரிழந்த யாக்கை யென்னத், துன்னிய சுற்றந் துயர்க் கடல் வீழ்ந்தும" என்புழியும் இவ்வுவமை வருதல்காண்க; சிலப்பதிகாரம், புறஞ்சேரியிறுத்தகாதை, ௫க - சு0.

க - கஙச. மணிமேகலாதெய்வம் நீங்கித்தோன்றி உரைத்தபின் புகுந்து நீங்கி உரையென்று போயபின், சுதமதி எழுந்து கேட்டு உளங்கலங்கி நீங்கிப் போகி ஒருபுடையிருத்தலும், பாவை உரைக்கும; அது 'வரும், அஞ்சல்' என்றுரைத்தது; அதனைக்கேட்டு நடுக்குறுநல்லாள், கதிரவன் முளைத்தலும் போகி மாதவிக்குரைத்தலும், அவள் துயருழப்பத் தான் உயிரிழந்த யாக்கைபோல் இருந்தனளென முடிக்க.

## எட்டாவது

# மணிபல்லவத்துத்துயருற்றகாதை.

[எட்டாவது மணிமேகலை
மணிபல்லவத்துத்துயிலெழுந்து துயருற்றபாட்டு.]

ஈங்கிவ ளின்னண மாக விருங்கடல்
வாங்குதிரை யுடுத்த மணிபல் லவத்திடைத்
தத்துநீ ரடைகரைச் சங்குழு தொடுப்பின்
முத்துவிளை கழனி முரிசெம் பவளமொடு
விரைமர முருட்டுந் திரையுலாப் பரப்பின்
ஞாழ லோங்கிய தாழ்கண் ணசும்பி
னாம்பலுங் குவளையுந் தாம்புணர்ந்து மயங்கி
வண்டுண மலர்ந்த குண்டுநீ ரிலஞ்சி
முடக்காற் புன்னையு மடற்பூந் தாழையும்
வெயில்வர வொழித்த பயில்பூம் பந்த
ரறல்விளங்கு நிலாமண னறுமலர்ப் பள்ளித்
துஞ்சு துயிலெழூஉ மஞ்சி லோதி

---

௧. இவள் - சுதமதி. 'ஈங்கிவ ளிங்ஙன மாக' என்றும் பாடம்.

௩. அடைகரையில். தொடுப்பு - விதைப்பு; "தொடுப்பி னாயிரம் வித்தியது விளைய" என்பது மதுரைக்காஞ்சி, ௧௧; "தொடுப்பே ருழவ ரோதைப் பாணியும்" என்பது சிலப்பதிகாரம், நீர்ப்படைக்காதை, ௨௩௦.

௩ - ௪. அடைகரையாகிய கழனியிலென்றுமாம்.

௫. விரைமரம் - சந்தனம் அகில முதலியன; "விரைமர மென்றகில்" என்பர் மேலும்; ௧௬ - ம் காதை, ௧௨௨; "வீங்குதிரை கொணர்ந்த விரைமர விறகின்" என்பது சிறுபாணாற்றுப்படை, ௧௫௫.

௬. ஞாழல் - புலிநகக்கொன்றை; "பொன்னுறு ஞாழற் பூவுடன் கடுக்கும், பேழ்வாய்ப் புலியுகிர்" என்பது கல்லாடம், ௫௨. அசும்பு - சேறு; "வாரசும் பொழுகு முன்றில்" என்பது புறநானூறு, ௧௧௪.

௭. மயங்கி - கலந்து.

௮. குண்டு நீர் இலஞ்சி - ஆழமான நீரையுடைய பொய்கைக்கரை; இலஞ்சி - ஆகு பெயர்.

௯. முடம் - வளைவு.

௧௦. பந்தர் - நிழல்.

௯ - ௧௦. புன்னையும் தாழையும் வெயிலின் வரவை யொழித்த பந்தர்.

௧௧. அறல் - நீர் அரித்து ஒழுகுதலாலுண்டாவது; "மட்டற லலயாற்று" என்பது புறநானூறு, ௧௭௭. நிலாமணல் - நிலாவைப் போன்ற வெள்ளிய மணல். மலர் - உதிர்ந்து கிடப்பன; மலர்ப்பள்ளி - மலராலாகிய படுக்கையில். 'துறல்விளங்கு நிலாமணற் றூமலர்ப் பள்ளி' என்றும் பாடம்.

௧௨. அஞ்சிலோதி - அழகிய சிலவா

காதற் சுற்ற மறந்து கடைகொள
வேறிடத்துப் பிறந்த வுயிரே போன்று
பண்டறி கிளையொடு பதியுங் காணாள்
கண்டறி யாதன கண்ணிற் காணூ
நீலமாக்கட னெட்டிடை யன்றியுங்
காலை ஞாயிறு கதிர்விரித்து முளைப்ப
வுவவன மருங்கினி லோரிடங் கொல்லிது
சுதமதி யொளித்தாய் துயரஞ் செய்தனை
நனவோ கனவோ வென்பதை யறியேன்
மனநடுக் குறூஉ மாற்றந் தாராய்
வல்லிருள் கழிந்தது மாதவி மயங்கு
மெல்வளை வாராய் விட்டகன் றனையோ
விஞ்சையிற் றோன்றிய விளங்கிழை மடவாள்
வஞ்சஞ் செய்தனள் கொல்லோ வறியே
னொருதனி யஞ்சுவென் றிருவே வாவெனத்
திரைதவழ் பறவையும் விரிசிறைப் பறவையு
மெழுந்துவீழ் சில்லையு மொடுங்குசிறை முழுவது
மன்னச் சேவ லரச னாகப்
பன்னிறப் புள்ளினம் பரந்தொருங் கீண்டிப்
பாசறை மன்னர் பாடி போல

---

னமயிரினையுடையாள்; "அஞ்சி லோதி யரசனுக் கொருநாள்" என்பர் மேலும; உரு-ம் காதை, உச; "அஞ்சி லோதி யசையல்" என்பது குறிஞ்சிப்பாட்டு, கஅ0.

க - கஉ. மணிபல்லவத்திற் கரையிற் கழனியிற் பரப்பில் இலஞ்சிக்கரையில் மணலிற் பள்ளியில் துயிலெழுந்த மணிமேகலை யென்க.

கங. கடைகொள - முடிவுகொள்ள.

கரு. காணாள் - காணாளாகி.

கசு. கண்டறியாதனவற்றை. காணூ - கண்டு.

கஎ. நெட்டிடை - நெடிய இடம்.

கஅ. 'கால ஞாயிறு' என்றும் பாடம்.

ககூ. 'உவவனம்' என்பது முதல் மணிமேகலை கூற்று.

உ0. சுதமதி - விளி.

உக. இந்தநிலை நனவோ கனவோ.

உங. மயங்கும் - மயங்குவாள்.

உச. மெல்லிய வளையினையுடையாய்; எல்வளையுமாம்.

உரு. விஞ்சையிற் றோன்றிய - வித்தையினாலே தோன்றிய.

உஎ. ஒருதனி - ஒப்பற்றதனிமையை. வாவென - வாவென்று சொல்லிக்கொண்டு.

உஅ - உக. அலையில் தவழ்ந்துசெல்லும் பறவைமுதலிய நீர்வாழ் பறவைசாதிகள் நான்கும்.

உகூ. 'ஒடுங்கு சிறை முழவதும்' என்றும், 'ஒடுங்குசிறை மூயும்' என்றும் பாடம்.

ஙக. 'பன்னிறப் புள்ளும்' என்றும் பாடம்.

உஅ - ஙக. திரைதவழ் பறவைமுதலியனவாகிய பன்னிறப் புள்ளினம்.

ஙஉ. போர்குறித்துவந்து படைவீடுகளில் விட்ட பகையரசிருவருடைய படைகளிரண்டும் எதிரெதிரிருத்தல் போல. பாடி - படைவீடு.

விசுநீர்ப் பரப்பி னெதிரெதி ரிருக்குந்
துறையுந் துறைசூழ் நெடுமணற் குன்றமும்
யாங்கணுந் திரிவோள் பாங்கினங் காணாள்
குரற்றலைக் கூந்தல் குலைந்துபின் வீழ
வரற்றினள் கூஉ யழுதன ளேங்கி
வீழ்துய ரெய்திய விழுமக் கிளவியிற்
றாழ்துய ருறுவோ டந்தையை யுள்ளி
யெம்மி திற் படுத்தும் வெவ்வினை யுருப்பக்
கோற்றொடி மாதரொடு வேற்றுநா டடைந்து
வைவா ளுழந்த மணிப்பூ ணகலத்
தையா வோவென் றழுவோண் முன்னர்
விரிந்திலங் கவிரொளி சிறந்துகதிர் பரப்பி
யுரைபெறு மும்முழ நிலமிசை யோங்கித்
திசைதொறு மொன்பான் முழநில மகன்று
விதிமா ணடியின் வட்டங் குயின்று
பதும சதுர மீமிசை விளங்கி

---

௩௩. 'எதிரெதிர் நிற்கும்' என்றும் பாடம்.

௨௮ - ௩௪. திரைதவழ்பறவை முதலியன, அன்னச்சேவல் அரசனாக நீர்ப்பரப்பில் எதிரெதிரிருக்குந் துறையென்க. இப்படியே, "கம்புட் கோழியுங் கனைகுர னாரையுஞ், செங்கா லன்னமும் பைங்காற் கொக்குங், கானக் கோழியு நீர்நிறக் காக்கையு, முன்னு மூரலும் புன்னும் புதாவும், வெல்போர் வேந்தர் முனையிடம் போலப், பல்வேறு குழூஉக் குரல் பரந்தவோதையும்" என்றார் சிலப்பதிகாரத்தும்; காடுகாண்காதை, ௧௧௪ - ௧௧௯.

௩௪ - ௩௫. துறையும் குன்றமுமாகிய யாங்கணும். திரிவோள் - மணிமேகலை. பாங்கினம்-பக்கத்திலுள்ள இனங்களை.

௨௭ - ௩௫. திருவே வாவெனத் திரிவோள்.

௩௬. குரற்றலைக் கூந்தல் - பூங்கொத்தை இடத்தேயுடைய கூந்தல்; "குரற்றலைக் கூந்தற் குடசம் பொருந்தி" என்பது சிலப்பதிகாரம், வேட்டுவவரி; "குரற்றலைக் கூந்தல் குலைந்துபின் வீழ" என்பது சிலப்பதிகாரம், ஊர்சூழ்வரி, ௬௮.

௩௭. கூஉய் - கூவி.

௩௮. விழுமக்கிளவியின்-துன்பத்தைப் புலப்படுத்தும் சொற்களால்.

௩௯. தந்தையையுள்ளி - கோவலனை நினைந்து.

௪0. எம்மி திற்படுத்தும் வெவ்வினை - எம்மை இத்துன்பத்தினிடத்தே அகப்படுத்தும் வெவ்விய வினை; "என்னிதிற் படுத்த வெந்தல்" என்பது சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையாரிலம்பகம், ௨௨௧. உருப்ப - முதிர; "ஊழ்வினை யுருத்தெழ" என்பது சிலப்பதிகாரம், கொலைக்களக்காதை, ௨௧௭; கோபிக்க வென்றுமாம். 'எம்மிகற்படுத்தும்' என்றும் 'எம்மிதற் படுத்தும்' என்றும்பாடம்.

௪௧. கோற்றொடிமாதர் - கண்ணகி. வேற்றுநாடு - பாண்டிநாடு.

௪௨. வைவா ளுழந்த - கூரியவாளால் வெட்டுண்டு வருந்திய. அகலம் - மார்பு.

௪௫. நிலமிசை மும்முழமோங்கி.

௪௬. ஒன்பான்முழம் - ஒன்பதுமுழம்.

௪௭. விதிமாண் - விதி மாட்சிமைப் பட்ட, அடியின் வட்டங்குயின்று - பனிங்கினால் வட்டஞ் செய்யப்பட்டு. 'வட்டனை குயின்று' என்றும் பாடம்.

௪௮. பதுமத்தையுடையசதுரம்; பதி

யறவோற் கமைந்த வாசன மென்றே
நறுமல ரல்லது பிறமாஞ் சொரியாது
பறவையு முதிர்சிறை பாங்குசென் றதிராது
தேவர்கோ னிட்ட மாமணிப் பீடிகை
பிறப்புவிளங் கவிரொளி யறத்தகை யாசனங்
கீழ்நில மருங்கி னாகநா டாளு
மிருவர் மன்னவ ரொருவழித் தோன்றி
யெமதீ தென்றே யெடுக்க லாற்றார்
தமபெரும் பற்று நீங்கலு நீங்கார்
செங்கண் சிவந்து நெஞ்சுபுகை யுயிர்த்துத்
தம்பெருஞ் சேனையொடு வெஞ்சினம் புரிநா
ளிருஞ்செரு வொழிமி னெமதீ தென்றே
பெருந்தவ முனிவ னிருந்தற முரைக்கும்

---

மமென்றதற்குப் புத்தனுடைய பாதங்களெனினும் பொருந்தும். மீமிசை - மேற்பட்ட இடம்.

௪௯. அறவோற்கு -புத்தனுக்கு.

௪௮ - ௪௯. சிறந்து பரப்பி ஓங்கி அகன்று குயின்று விளங்கி அமைந்த ஆசனமென்க.

௫௦. பிற - பிறவற்றை. மரங்கள் நறுமலரையே சொரியும்.

௫௧. பறவையும் அப்பீடிகையின் பக்கத்திற்சென்று சிறையொலியைச் செய்யாது. 'பாங்குசென் றதிராது' என்றும் பாடம்.

௫௩. பிறப்பு விளங்கு ஆசனம் - காண்போருடைய பழம்பிறப்புக்கள் அவர்களுக்கு விளங்குதற்குக் காரணமாகிய ஆசனம்.

௫௪. கீழ்நிலம் - கீழ்த்திசையிலுள்ள இடம். நாகரென்னும் ஒருவகை மனிதர் வாழுநாடு நாகநாடென்பர்; இந்நாட்டின் பெயர், "நாகநன் னாட்டு நானூறி யோசனை" (௯ - ம் காதை, ௨௧) எனவும், "நாக நாடு நடுக்கின் றாள்பவன்" (௨௪-ம் காதை, ௫௪) எனவும், "நாக நன்னாடாள்வோன்" (௨௫ - ம் காதை, ௧௭௮) எனவும், "நாகநா டாள்வோன்" (௨௧ - ம் காதை, ௩) எனவும் இந்நூலுள்ளே பின்பு வருதல் காண்க நாக இலச்சினையை (=பாம்பின் அடையாளத்தை) யுடைமையின், இவர்களுக்கு இப்பெயரும் தக்ஷகரென்ற பெயரும் வந்ததென்று உரைக்கின்றனர்.

௫௬. எடுக்கல் ஆற்றார் - எடுக்கும் வன்மை இலராய்.

௫௭. தம பெரும்பற்று - தம்முடைய பெரிய விருப்பம், நீங்கலு நீங்கார் - நீங்குதலையும் செய்யார்; "சுழலலுஞ் சுழலு, மோடலு மோடு மொருசிறை யொதுங்கி, நீடலு நீடும்" என்றார் மூன்றும்; ௩ - ம் காதை, ௧௧௧ - ௧௧௩; "கறையிட றணியலு மணிந்தன் றக்கறை" என்பது புறநானூறு, ௧.

௫௮. நெஞ்சு புகையுயிர்த்து - மனங்கொதித்து; "வஞ்சினஞ் சாற்றி நெஞ்சுபுகை யுயிர்த்து" என்பர் மேலும்; ௧௮ - ம் காதை, ௩௭; "ஊதுலை தோற்க வுயிர்க்குமென் னெஞ்சன்றே" என்றார் சிலப்பதிகாரத்தும்; துன்பமாலை.

௬௧. பெருந்தவ முனிவன் - புத்தன்; பொறிகளை யடக்கி நெடுநாள் மிக்க நியமத்தோடிருந்து அரியதவஞ்செய்தது பற்றி இவனைப் பெருந்தவ முனிவனென்றார்; "ஆதிசான் முனிவ னறவழி" (௭ - ம் காதை, ௧௧) எனவும், "பொதுவறி விகழ்ந்து புலமுறு மாதவன்" (௯-ம் காதை, ௮௪) எனவும், "போதி மாதவன் பூமியிற் றோன்றும்" (௧௫ - ம் காதை, ௨௧) எனவும், "பிணிப்பறு மாதவன் பீடிகை" (௨௫ - ம் காதை, ௯௪) எனவும் இந்நூலுள்ளே வருதல் காண்க; "பொ

பொருவறு சிறப்பிற் புரையோ ரேத்துந்
தரும பீடிகை தோன்றிய தாங்கென.

## மணிபல்லவத்துத்துயருற்றகாதை முற்றிற்று.

ருந்து போதியி, விருந்த மாதவர், திருந் துசேவடி, மருந்து மாகுமே" எனவும், "காமரும்பூம் போதி, யேரார் முனிவரா" எனவும், "பூதலத்து ளெவ்வுயிர்க்கும் பொதுவாய திருமேனி, மாதவனீ" எனவும், "மாதவரின் மாதவனீ வானவருள் வானவனீ" எனவும், "மருளறுத்த பெரும்போதி மாதவனைக் கண்டிலமால்" எனவும் வருவன முறையே வீரசோழியத்தின் யாப்புப்படலத்துள்ள கூ, கக, கரு - ம் கலித்துறை யுதாரணங்கள். 'பெருந்தகை முதல்வன்' என்றும் பாடம்.

சுஉ. புரையோர் - ஈண்டுப் பௌத்தரில் உயர்ந்தோர்; "புரையோர்ப் பேணிப் போகறும் போகுவை" (உக - ம் காதை, அரு) எனவும், "அரசவீற் றிருந்து புரையோர்ப் பேணி" (உரு - ம் காதை, அச) எனவும், "புரையோர் தாமும் பூம்பொழி லிழிந்து" (உஅ - ம் காதை, ககஉ) எனவும் பின்னர் வருதல் காண்க.

ருஉ - சுரு. மாமணிப் பீடிகை, அறத் தகையாசனம், தருமபீடிகை அது தோன்றியது.

சரு - சுரு. அழுவோள்முன்னர்த் தோன்றிய தென்க.

ருச - சுரு. இவ்வடிகளிற்கூறிய வண்ணம் "வேகவெந்திற னாககாட்டரசர், சினமா சொழித்து மனமாசு தீர்த்தாங், கறச்செவி திறந்து மறச்செவி யடைத்துப், பிறவிப்பிணி மருத்துவ னிருந்தற மூரைக்குந், திருந்தொளி யாசனம்" என்று பின்னுங்கூறுவர்; க - ம் காதை, ருஅ - சுஉ.

க - சுரு. இவள் இன்னணமாக, மணி, பல்லவத்திடைத் துயிலெழும் அஞ்சி லோதி, போன்று காணாளாய்க் கண்டு, திருவே வாவென்று அழுவோள்முன்னர்த் தருமபீடிகை ஆங்குத தோன்றிய தென்க.

ஒன்பதாவது

# பீடிகைகண்டுபிறப்புணர்ந்தகாதை.

[ஒன்பதாவது மணிமேகலை மணிபல்லவத்திடைப் பீடிகைகண்டு பிறப்புணர்ந்தபாட்டு.]

ஆங்கது கண்ட வாயிழை யறியாள்
காந்தளஞ் செங்கை தலைமேற் குவிந்தன
தலைமேற் குவிந்த கையள் செங்கண்
முலைமேற் கலுழ்ந்துமுத் தத்திர ளுகுத்ததி
னிடமுறை மும்முறை வலமுறை வாராக்
கொடிமின் முகிலொடு நிலஞ்சேர்ந் தென்ன
விறுநுசுப் பலச வெறுநிலஞ் சேர்ந்தாங்
கெழுவோள் பிறப்பு வழுவின் றுணர்ந்து
தொழுதகை மாதவ துணிபொரு ளுணர்ந்தோய்
காயங் கரையினீ யுரைத்ததை யெல்லாம்
வாயே யாகுதன் மயக்கற வுணர்ந்தேன்
காந்தார மென்னுங் கழிபெரு நாட்டுப்

---

க. அதுகண்ட - புத்தபீடிகையைக் கண்ட, ஆயிழை - மணிமேகலையானவள், அறியாள் - தன்னை அறியாளாயினள்; இது புதுமைபற்றிவந்த மருட்கையென்னுமெய்ப்பாடு.

௩ - ௪. செங்கண் கலுழ்ந்து - சிவந்த கண்கள் கலங்கி, முலைமேல் முத்தத்திரள் உகுத்து - கொங்கைகளின்மேலே நீர்த்துளிகளைச் சொரிந்து, அதின் - அப்பீடிகையின,

௫. (?)

௬. மின்கொடி மணிமேகலையினுடைய உருவத்திற்கும், முகில் அவள் கூந்தலுக்கும் உவமை.

௭. அலச - அலைய. 'இறுநுசுப் பலைய' என்றும் பாடம். நிலஞ்சேர்ந்து - வணங்கி.

௮. எழுவோள் தனது முற்பிறப்பின் செய்தியை நன்குணர்ந்து.

௯. 'தொழுதகை மாதவ' என்பது முதல் 'என்பிறடுத் தோதினை' என்பதிறுதியாகவுள்ளவை, பிரமதருமனென்னு முனிவன் முற்பிறப்பில் தனக்குக் கூறியவற்றைப் புத்தபீடிகைக் காட்சியாலறிந்து, அம்முனிவனை எதிர்பெய்து, மணிமேகலை கொண்டு கூறுகின்றவையெனக்கொள்க.

க0. காயங்கரை - ஒரு நதியின்பெயர். உரைத்ததை, ஐ - சாரியை; பன்மையொருமை மயக்கம்.

கக. வாயேயாகுதல் - உண்மையாதலை; வாய் - உண்மை; "பொய்யறியா வாய்மொழியால்" என்பது மதுரைக்காஞ்சி, கக.

கஉ. பல நாடுகளைத் தன்னுள்ளே பெற்றதென்பார் 'காந்தாரமென்னுங் கழிபெருநாட்டு' என்றார்.

பூருவ தேயம் பொறைகெட வாழு
மத்தி பதியெனு மரசாள் வேந்தன்
மைத்துன னாகிய பிரம தரும
னாங்கவன் றன்பா லணைந்தற னுரைப்போய்
தீங்கனி நாவ லோங்குமித் தீவிடை
யின்றேழ் நாளி லிருநில மாக்க
ணின்றுநடுக் கெய்து நீணில வேந்தே
பூமி நடுக்குறூஉம் போழ்தத் திந்நகர்
நாகநன் னாட்டு நானூறு யோசனை
வியன்பா தலத்து வீழ்ந்துகே டெய்து
மிதன்பா லொழிகென விருநில வேந்தனு
மாபெரும் பேரூர் மக்கட் கெல்லா
மாவு மாவுங் கொண்டுகழி கென்றே
பறையிற் சாற்றி நிறையருந் தானையோ
டிடவய மென்னு மிரும்பதி நீங்கி
வடவயி னவந்தி மாநகர்ச் செல்வோன்
காயங் கரையெனும் பேரியாற் றடைகரைச்
சேயுயர் பூம்பொழிற் பாடிசெய் திருப்ப
எங்கோ னியாங் குரைத்தவந் நாளிடை
தங்கா தந்நகர் வீழ்ந்துகே டெய்தலு
மருளறு புலவநின் மலரடி யதனை
யரசொடு மக்க ளெல்லா மீண்டிச்

---

௧௧. பொறை - பாரம்; என்றது பாவத்தை.

௧௫. பிரமதருமன் - விளி.

௧௬. அவனென்றது, அத்திபதியென்னும் அரசனை.

௧௭. சம்புத்தீவில்.

௧௮. ௭-ம் காதை, ௨௪. (?)

௧௮-௨௦. இன்றேழ்நாளில் பூமி நடுக்குறும்பொழுதில்.

௨௦-௨௨. இந்நகரும் நாகநாட்டில் நானூறுயோசனைப் பரப்பும் பாதலத்தில் விழுந்து கெடுதலுறும்.

௨௩. இதன்பாலொழிகென-இந்நகரின் புறத்தே செல்வாயாகவென்றுசொல்ல.

௨௫. ஆ - பசு: மா - மற்றை விலங்குகள்; சிறிதும் தீங்கு செய்யத் தகாத சாதியாதலின், பசு முற்கூறப்பட்டது; புறநானூறு, ௯.

௨௬. நிறை அருந்தானையோடு - பகைமேற்செல்பொழுது நிறுத்துதலரிய சேனையோடு; "நிறையருந் தானை வேந்தனுநேர்ந்து" என்பது சிலப்பதிகாரம், காட்சிக்காதை, ௧௭௮. 'நிறையிருந் தானை' என்றும் பாடம்.

௨௭. இடவயம் - அத்திபதியின் நகரம். 'இடிவயம்' என்றும் பாடம்.

௨௮. 'வசந்திமாநகர்' என்றும் பாடம்.

௩௦. பொழிலில். 'பாடிசெய் திருந்தோன்' என்றும் பாடம்.

௨௮-௩௦. செல்வோன் இருப்ப.

௩௧. எங்கோனென்றது - பிரமதருமனை.

௩௨. நகர்கேடெய்தியது கூறவே நாகநாட்டில் நானூறு யோசனைப்பரப்பினதுகேடும் கூறியதாயிற்று.

௩௪. 'எல்லாம் வீழ்ந்து' என்றும்பாடம்.

சூழ்ந்தனர் வணங்கித் தாழ்ந்துபல வேத்திய
வருளறம் பூண்ட வொருபே ரின்பத்
துலகுதுயர் கெடுப்ப வருளிய வந்நா
ளரவக் கடலொலி யசோதர மாநக
ரிரவி வன்ம னொருபெருந் தேவி
யலத்தகச் சீறடி யமுத பதிவயிற்
றிலக்குமி யென்னும் பெயர்பெற்றுப் பிறந்தே
னத்தி பதியெனு மரசன்பெருந் தேவி
சித்திபுர மாளுஞ் சீதரன் திருமக
ணீல பதியெனு நேரிழை வயிற்றிற்
காலைஞா யிற்றுக் கதிர்போற் றோன்றிய
விராகுலன் றனக்குப் புக்கே னவனொடு
பாராவரு மரபினின் பாதம் பணிதலு
மெட்டிரு நாளிலவ் விராகுலன் றன்னைத்
திட்டி விடமுணுஞ் செல்லுயிர் போனாற்

---

௩௫. எத்திய - எத்த.

௩௩ - ௩௫. நின்மலரடியதனை எத்த.

௩௭. அருளிய - உபதேசித்த.

௩௬ - ௩௭. இன்பத்தை அருளிய அந்நாளில்.

௩௮. கடலரவம்போன்ற ஒலியையுடைய அசோதர நகரம்; "மலிதேரான் கச்சியு மாகடலுந் தம்முள், ளொலியும் பெருமையு மொக்கும்" என்று வருதல் காண்க.

௩௯. 'ஒருபெரு மகளேன்' என்றும் பாடம்.

௪௦. அலத்தகம் - அலக்தம் - அரக்கு.

௩௯ - ௪௦. தேவியாகிய அமுதபதி.

௪௧. பிறந்து இலக்குமியென்னும் பெயர்பெற்றேனென விகுதிபிரித்துக் கூட்டுக

௪௩. 'சித்திரபுரம்' என்றும் பாடம். 'சீதாருகன் மகள்' என்றும் பாடம்.

௪௨ - ௪௪. பெருந்தேவியும் மகளுமாகிய நீலபதி.

௪௬. இராகுலனென்பது புத்தனுடைய புத்திரன்பெயர்; அது புத்தனிடத்துள்ள பக்தியினால் இவனுக்கு இடப்பட்டதுபோலும்.

௪௫ - ௪௬. மனிதர்களுடைய பிறப்பிறப்புக்களுக்கு முறையே சூரியனுடைய உதயாஸ்தமனங்களை உவமை கூறுதல் பௌத்த ஸம்பிரதாயமாதலால், 'காலைஞா யிற்றுக் கதிர்போற் றோன்றிய விராகுலன்' என்றான்; இதனை, "குணதிசைத் தோன்றிக் காரிருள் சீத்துக், குடதிசைச் சென்ற ஞாயிறு போல, மணிபல் லவத்திடை மன்னுடம் பிட்டுத், தணியா மன்னுயிர் தாங்குங் கருத்தொடு, சாவக மாளுந் தலைத்தாள் வேந்த, னூவயிற் றுதித்தன னாங்கவன் றானென" (௧௪ - ம் காதை, ௧௧ - ௧௦௪) எனவும், "தேவி கேளாய் செய்தவ யாக்கையின், மேவினே னாயினும் வீழ்கதிர் போன்றேன்" (௨௪ - ம் காதை, ௧௦௧ - ௧௦௨) எனவும், "சாக்கா டென்ப தருவுருத் தன்மை, யாக்கை வீழ்கதி ரெனமறைந் திடுதல்" (௩௦ - ம் காதை, ௧௦௨ - ௧௦௩) எனவும் வருவனவற்றாலுணர்க.

௪௭. 'மரபிற் பாதம்' என்றும் பாடம்.

௪௬ - ௪௭. அந்நாளில் யான் இராகுலனோடு நின் பாதம் பணிதலும்.

௪௮. எட்டிருநாளில் - பதினாறாநாளில்.

௪௯. திட்டிவிடம் - கண்ணில் விடமுடையதோர் பாம்பு; இதன் விழிக்கு எதிர்ப்பட்டோர் இறப்பர்; இதனை, "திட்டி விடமுணச் செல்லுயிர் போவுழி"

நீயழ லவளொடு சேயிழை மூழ்குவை
யேது நிகழ்ச்சி யீங்கின் றாதலிற்
கவேர கன்னிப் பெயரொடு விளங்கிய
தவாக்களி மூதூர்ச் சென்றுபிறப் பெய்துதி
யணியிழை நினக்கோ ரருந்துயர் வருநாண்
மணிமே கலாதெய்வம் வந்து தோன்றி
யன்றப் பதியி லாரிரு ளெடுத்துத்
தென்றிசை மருங்கிலோர் தீவிடை வைத்தலும்
வேக வெந்திற னாகநாட் டரசர்
சினமா சொழித்து மனமாசு தீர்த்தாங்
கறச்செவி திறந்து மறச்செவி யடைத்துப்
பிறவிப்பிணி மருத்துவ னிருந்தற முரைக்குந்
திருந்தொளி யாசனஞ் சென்றுகை தொழுதி
யன்றைப் பகலே யுன்பிறப் புணர்ந்தீங்

(௧௧-ம் காதை, ௧00) எனவும், "திட்டி விடமுண நின்னுயிர் போநாள்" (௨௧-ம் காதை, ௧௧) எனவும், "திட்டி விடமுணச் செல்லுயிர் போயதும" (௨௧-ம் காதை, ௪0) எனவும், "அழற்க ணாக மாருயி ருண்ண" (௨௧-ம் காதை, ௬௧) எனவும், "நந்நுவிழியரவி னல்லுயிர்வாங்கி" (௨௧-ம் காதை, அ௪) எனவும் இந்நூலுள்ளே வருவன வற்றாலும், 'புத்தன் திருஷ்டிவிஷமாய்ப்பிறந்த ஜாதகத்து..............கண்விழிப்பிற் பிராணிகள் சாமென்றறிந்து தன் கண்விழியாதேகிடந்தமையின்' எனவும், 'நீ திருஷ்டிவிஷமானகாலத்து நினக்குக் கொலையுள்ளமில்லையெனினும் கண்விழிக்கிற் பிராணிகள் சாமென்றறிந்து அதற்கஞ்சி விழியாது கிடந்தது என்றோ' எனவும்வரும் நீலகேசிவிருத்தியமயதிவாதத்தாலும் உணர்க. 'விடமுண்டு' என்றும் பாடம். "கண்மிழித் தமிழ்விடக் கனலரா வரக" எனத் தாடகைவதைப் படலத்தும், "திட்டியின் விடமன்ன கற்பின் செல்வியை" எனக் கும்பகர்ண படலத்தும் கம்பர் கூறியிருத்தல் காண்க.

௪௨. இராசகுஷியும் யோகிநெறிச்சிறந்தவருமாகிய கவேரரென்பவர் முத்தி பெறுதலைவிரும்பிப் பிரஹ்மதேவரைக்குறித்து அரிய தவம் செய்து அவரருளால விஷ்ணுமாயையைத் தமது புத்திரியாக வடைந்து முக்தி பெற்றனரென்றும், பின்பு அக்கன்னி ப்ரஹ்மதேவர் கட்டளையின்படி நதிவடிவுகொண்டு பிரவகித்தமையால் அந்நதி கவேரகன்னியென்றும் காவேரியென்றும் பெயர் பெற்றதென்றும், ஆக்நேயபுராணத்தின் இரண்டாம்பாகத்துள்ள காவேரிமாகாத்மியத்தின் ௨௩-ம் அத்தியாயத்தால் தெரிகின்றது; ௯-ம் காதை, ௫௫ - ௬௧.

௫௩. மூதூர் - காவிரிப்பூம்பட்டினம். எய்துதி - அடைவாய்.

௫௪. அருந்துயரென்றது, உதயகுமரனால் மணிமேகலைக்கு உண்டாகும் சித்தவேறுபாட்டை.

௫௯. சினமாசு - கோபமாகிய குற்றம். மனமாசு - காமமும் மயக்கமும்.

௫௮ - ௫௯. அ-ம் காதை, ௫௪ - ௬௬.

௬0. அறச்செவி - அறத்தைக் கேட்டற்குரிய காது; திறந்தென்றார், கேட்பினும் கேளாத்தகையவாதலின்; தீக்குறள், ௪௧அ. மறம் - பாவம். 'மறச்செவியடைப்ப' என்றும் பாடம்.

௬௧. பிறவிப்பிணி மருத்துவன் - புத்தன். மருத்துவன் - வைத்தியன்.

௫௭ - ௬௨. வைத்தலும் சென்று ஆசனத்தைக் கைதொழுவாய்.

௬௩. 'யின்பிறப் புணருதி' என்றும் பாடம்.

வுரைதெளி வாயெனச்
சாதுயர் கேட்டுத் தளர்ந்துரு மனத்தேன்
காதலன் பிறப்புங் காட்டா யோவென
வாங்குனைக் கொணர்ந்த வரும்பெருந் தெய்வம்
பாங்கிற் றோன்றிப் பைந்தொடி கணவனை
யீங்கிவ னென்னு மென்றெடுத் தோதினை
யாங்கத் தெய்வதம் வாரா தோவென
வேங்கின ளழூஉ மிளங்கொடி தானென.

பீடிகைகண்டு பிறப்புணர்ந்தகாதை முற்றிற்று.

---

௬௪. என - என்று நீ சொல்ல.

௬௫. சாதுயர் கேட்டு - இராகுலன் இறப்பானென்னும் துன்பமொழியைக் கேட்டு.

௬௬. காதலன் - கணவன். பிறப்பும், உம்மை - இறந்ததுதழீஇய எச்சப்பொருளது.

௬௭. 'ஈங்குனைக் கொணர்ந்த விரும் பெருந் தெய்வம்' என்றும் பாடம்.

௬௯. என்னும் - என்று சொல்லும்.

௭௧. இளங்கொடி - மணிமேகலை. அழூஉம்-அழுவாள், இளங்கொடி அழூஉம்.

௧-௭௧. அதுகண்ட ஆயிழை தனேனை அறியாளாயினள்; அப்பொழுது அவள் கைகள் தலைமேற்குவிந்தன; அங்ஙனங் குவிந்த கையளாய் உகுத்து வந்து சேர்ந்து எழுவோள் பிறப்பையுணர்ந்து, "மாதவ, உணர்ந்தோய், நீ உரைத்ததை யெல்லாம் மயக்கறவுணர்ந்தேன், பிரமதருமன், உரைப்போய், இத்தீவிடை இன்றேழ்நாளில் பூமி நடுக்குறூஉம் போழ்தத்து இந்நகரும் நாகநாட்டு நாலுறு யோசனைப் பரப்பும் வீழ்ந்துகேடெய்தும், இதன்பாலொழிக" என்றுசொல்ல, வேந்தனும் சாற்றி நீங்கிச் செல்வோன் இருப்ப, எங்கோன், நீ உரைத்தநாளில் நகர் கேடெய்தலும், நின்மலரடியை எல்லாம் வத்த அருளிய அந்நாளில், புக்கேன் அவனொடு நின்பாதம் பணிதலும், 'சூழ்குவை, எய்துதி, வருநாளில், வைத்தலும், கைதொழுதி, தெளிவாய்' என்று நீசொல்ல, காட்டாயோவென்று யான்கேட்ப ஓதினை; 'அத்தெய்வம் வாராதோ' என்று இளங்கொடி ஏங்கி அழுமென்க.

பத்தாவது

# மந்திரங்கொடுத்தகாதை.

[பத்தாவது மணிமேகலாதெய்வம் வந்துதோன்றி மந்திரங்கொடுத்தபாட்டு.]

அறவோ னாசனத் தாயிழை யறிந்த
பிறவிய ளாயினள் பெற்றியு மையென
விரைமல ரேந்தி விசும்பூ டிழிந்து
பொருவறு பூங்கொடி பூமியிற் பொலிந்தென
வந்து தோன்றிய மணிமே கலாதெய்வ
முந்தைப் பிறப்பெய்தி நின்றோள் கேட்ப
வுயிர்க ளெல்லா முணர்வுபா ழாகிப்
பொருள்வழங்கு செவித்துளை தூர்ந்தறி விழந்த
வறந்தலை யுலகத் தறம்பாடு சிறக்கச்
சுடர்வழக் கற்றுத் தடுமாறு காலையோ
ரிளவள ஞாயிறு தோன்றிய தென்ன

௧. அறவோன் - புத்தன், ஆசனத்து - ஆசனத்தால்.

௧ - ௨. அறிந்த பிறவியள் ஆயினள் - அறியப்பட்ட பிறவியை உடையாளாயினள்; என்றது முற்பிறப்பை அறிந்தாளென்றபடி. பெற்றியும் ஐது - இவள் பெற்ற பேறும் அழகிது, பெற்றி - பேறு; "பிணிப்பறத் தோர்தம் பெற்றி யெய்தவும்" என்பது சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை, ௧௦௦. என - என்று மணிமேகலாதெய்வம் நினைந்து. 'பெற்றியு மையென' என்றும் பாடம்.

௩ - ௪. பூங்கொடி ஏந்தி இழிந்து பூமியில் விளங்கினாற் போலத் தோன்றிய தெய்வமென்க.

௬. முந்தைப் பிறப்பு - முற்பிறப்பு; நின்றோள் கேட்ப - நின்ற மணிமேகலை கேட்கும்படி. "அறிபிறப் புற்றனை" என்பர் பின்னும்; ௧௦ - ம் காதை, ௭௫.

௭. 'உயிர்க ளெல்லாம்' என்பது முதல் புத்தனுடைய பாதபீடிகையை வணங்கும் மணிமேகலாதெய்வத்தின் வார்த்தை. உணர்வு பாழாகி - அறிவின்றி.

௮. பொருள் - தருமம்; "பொரு ணீங்கிப் பொச்சாந்தார்" என்பதிற் காண்க; இது திருக்குறள், ௨௪௬. தூர்ந்தென்றார், அறத்தைக் கேளாதொழிதலின்; முன்பு "அறச்செவி திறந்து" (௧ - ம் காதை, ௧௦) என்றதும் இது பற்றிப் போலும்.

௯. வறம் தலை உலகத்து - வறுமையைத் தன்னிடத்தேயுடைய உலகத்தில், அறம் பாடு சிறக்க - தர்மோத்பத்தி அதிகரிக்க; பாடுபடுதல் - உண்டாதல்; "அறம்பா டறிந்தனை" என்று பின்னும்வரும்; ௧௦ - ம் காதை, ௭௬; பாடு சிறக்க - பெருமை சிறக்கவென்றுமாம்.

௧௦. சுடர் - சூரியன், வழக்கு - வழங்குதல். காலை - காலத்தில்.

௧௧. இளவள ஞாயிறு - பாலசூரியன்.

# ௧0.—மந்திரங்கொடுத்தகாதை.

நீயோ தோன்றினை நின்னடி பணிந்தே
னீயே யாகிநிற் கமைந்தவிவ் வாசன
நாமிசை வைத்தேன் றலைமிசைக் கொண்டேன்
பூமிசை யேற்றினேன் புலம்பறு கென்றே
வலங்கொண் டாசனம் வணங்குவோள் முன்னர்ப்
பொலங்கொடி நிலமிசைச் சேர்ந்தெனப் பொருந்தி
யுன்றிரு வருளா லென்பிறப் புணர்ந்தே
னென்பெருங் கணவன் யாங்குள னென்றலு
மிலக்குமி கேளா யிராகுலன் றன்னொடு
புலத்தகை யெய்தினை பூம்பொழி லகவையி
னிடங்கழி காமமொ டடங்கா னாயவன்
மடந்தை மெல்லியன் மலரடி வணங்குழிச்
சாது சக்கரன் மீவிசும்பு திரிவோன்

---

௧௨. பீடிகையைப் புத்தனாகவே பாவித்தமையால், 'நீயோ தோன்றினை' என்றார்; "நீயேயாகி" என்று பின்னர்க் கூறுவதும் இக்கருத்துப்பற்றியே, பின் வருவனவற்றிற்கும் இஃது ஒக்கும். 'நீயே தோன்றினை' என்றும் பாடம்.

௧௫. புலம்பு - வருத்தம்: "புலம்புசே ணகலப் புறவி ராகுவிர்" என்பது **மலைபடுகடாம்**; ௪௧௨. என்று - என்று சொல்லி.

௧௬. மானிடமகளாய் நிற்றலின், 'வணங்குவோள்' எனத் தெய்வத்தை உயர்திணையாற் கூறினார்; "யான்செய்த பாவமென்றாள்" என்புழிப்போல. இது **சீவகசிந்தாமணி**, நாமகளிலம்பகம், ௨௮௬.

௧௭. பொலங்கொடி - பொற்கொடி; என்றது காமவல்லியை. பொருந்தி - வணங்கி.

௬ - ௧௭. கேட்பப் புலம்பறுகவென்று ஆசனத்தை வலங்கொண்டு வணங்குவோள்முன்னர்ப் பொருந்தியெனச்.

௧௮. அவளைத் தெய்வமாகவறிந்தே மணிமேகலை 'உன்றிருவருளால்' என்றாள்.

௧௯. என்றலும் - என்று மணிமேகலை கேட்பவும்.

௨0. 'இலக்குமி' என்பதுமுதல் மணிமேகலாதெய்வத்தின் வார்த்தை. முந்தைப் பிறப்பெய்தி நின்றோளாதலின், மணிமேகலையை அத்தெய்வம் இலக்குமியென றழைத்தது.

௨௧. புலத்தகையெய்தினை - ஊடினாய்; புலத்தல்-ஊடுதல். அகவையின் - உள்ளிடத்தே.

௨௨. இடங்கழி காமமொடு - வரம்பு கடந்து எழுதற்குக் காரணமாகிய காமமோடு; இப்படியே, உதயகுமரனைப் பற்றிச் சொல்லும்பொழுது, "இடங்கழி காமமொடடங்கானாய்' என்பர் பின்னும்; ௧௮ - ம் காதை, ௪௧௯. "இடங்கழியான் மாலை" என்பதற்கு 'இராகவேகத்தையுண்டாக்கும் மயக்கமுடைய மாலைக்காலம்' என்று பொருள்கூறுவர், **புறப்பொருள்வெண்பாமாலை யுரையாசிரியர்**; பெருந்திணைப்படலம், ௫. "வம்பப் பரத்தை" என்பதற்கு 'இடங்கழிகாமத்தளாகிய குண்டக்கணிகை' என்று பொருள்கூறுவர் **அடியார்க்குநல்லார்**; **சிலப்பதிகாரம்**, நாடுகாண்காதை, ௨௧௯.

௨௩. நின்னடியை வணங்கும்பொழுது.

௨௪. சாதுசக்கரன் - காரணப்பெயர்; பெரியோர்கூட்டத்திலுள்ளவனென்றவாறு. சக்கரம் - மண்டலம்; இனி, இதற்கு 'ஓம் மணிபத்மே ஹூம்' என்ற மந்திரம் சுற்றுப்பக்கத்தில் எழுதப்பட்டுள்ள உலோகத்தாலாகிய சக்கரமொன்றை வலக்கையில்வைத்து மேற்கூறிய மந்திரத்தை உருவேற ஜபித்துக்கொண

றெருமா லொழித்தாங் கிரத்தின தீவத்துத்
தரும சக்கர முருட்டினன் வருவோன்
வெங்கதி ரமையத்து வியன்பொழி லகவயின்
வந்து தோன்றலு மயங்கினை கலங்கி

---

டேனும் ஜபியாமலேனும் அச்சக்கரத்தைச் சுழற்றிக்கொண்டிருத்தல் பௌத்தர்களிற் சிலருடைய ஸம்பிரதாயமாதலால, இவன் அங்ஙனம் செய்யப்பட்டுள்ள நல்ல சக்கரத்தைச் சுழற்றிக்கொண்டிருத்தலையுடையனென்று பொருள்கூறினும் பொருந்தும். இஃது இக்காலத்து 'திபேத்' தேசத்துப் புத்தர்களுடைய வழக்கமாகக் காணப்படுகின்றதென்றும், இம்மந்திரத்தை இங்ஙனம் ஜபித்தலால் வரும்பயன், நரகலோகமுதலியவற்றில் முறையேபிறவாமல் தாண்டிச்சென்று நிருவாணமடைதலென்றுங் கூறுவர். மீ விசும்பு திரிவோன் - மேலேயுள்ள ஆகாயத்திற் சஞ்சரிப்பவன்; பௌத்தரில் இருத்தி (=ஸித்தி) பெற்றோர் ஆகாயவழியேசென்று அவ்வவ்விடங்களில் இறங்கிப் புத்தனுடைய பாதபீடிகை முதலியவற்றைத் தரிசித்தலும், பக்குவிகளுக்குத் தருமோபதேசஞ்செய்தலும், ஏனையோர்க்கு எண்ணியவற்றையளித்தலும் மரபு; இத்தன்மையையுடையோர் சாரணரென்றும் சொல்லப்படுவர். இதனை, "நிலத்திற் குளித்து நெடுவிசும் பேறிச் சலத்திற் றிரியுமோர் சாரணன் றோன்ற" (௨௪ - ம் காதை, ௬௬ - ௬௭) எனவும், "தரும சாரணர் தங்கிய குணத்தோர், கருமுகிற் படலத்துக் ககனத் தியங்குவோர், ஈரசற் கேற வவ்வழி நிகழ்தலிற், பழையோர் தாமும் பூம்பொழி லிழிந்து" (௨௮ - ம் காதை, ௧௦௧ - ௧௧௨) எனவும் பின்புவருவனவற்றாலுணர்க. இப்படியே சமணரில இருத்திபெற்றோரும் சாரணரென்று சொல்லப்படுவர்; "நீரினிற் பூவில் வானி னிலைத்துழி யொதுங்குகின்ற, சாரணரொண்ம ராவர் சமணரி லிருத்தி பெற்றோர்" என்றுவருதல்காண்க; இது சூடாமணிநிகண்டு, இரண்டாவது மக்கட்பெயர்த்தொகுதி, ௪.

௫௫. தெருமரல் - மனக்கவற்சி, "செய்யார் தேஎந் தெருமரல் கலிப்ப" என்பது பொருநராற்றுப்படை, ௯௪. இரத்தின தீவத்து - இரத்தினதீபத்தில; இது மணிபல்லவமென்னுந் தீவத்திற்கு அயலிலுள்ளதோர் சிறுதீவு; இதிற் புத்தனுடைய பாதக்குறிகள் பொருந்திய உச்சியையுடைய மலையொன்றுண்டு. அதன் பெயர் சமந்தகூடமென்பது; இதனை, "ஈங்கித னயலகத் திரத்தின தீபத், தோங்குயர் சமந்தத் துச்சி மீமிசை, யறவியங் கிழவோ னடியிணை யாகிய, பிறவி யென்னும் பெருங்கடல் விடூஉ, மறவி நாவா யாங்குள தது" என்று மேல்வருதலாலுணர்க; ௧௧ - ம் காதை, ௨௧ - ௨௫.

௫௬. உருட்டினன் - வினையெச்சமுற்று. தருமம் முதலும் முடிவுமில்லாத நித்தியப்பொருளென்பார் தருமசக்கரமென்றும், அதனைத் தடையின்றிச்செலுத்துகின்றானென்பார் உருட்டினன் வருவோனென்றுங்கூறினார், இப்படியே "அறக்கதி ராழி திறப்பட வுருட்டி" எனறார்முன்னும்; ௫ - ம் காதை, ௭௬; தருமத்தை ஸநாதனமென்று வடநூலார் கூறுதல்காண்க. தருமத்தைச் சக்கரமாகவும், அதன் அங்கங்களைச் சக்கரத்திற்குரிய அங்கங்களாகவும் உருவகஞ்செய்து நூல்கள் கூறும்; அதனை, அசுவகோஷபோதிஸத்துவரென்பவரால் வடமொழியிற் செய்யப்பட்டுள்ள புத்தசரித காவ்யமென்னு நூலில் தர்மசக்ரப்ரவர்த்தனோத்யோஷண மென்னும் பதினைந்தாம் வர்க்கத்தினின்றுமறிக. இனி, முன்னர்க்கூறிய உலோகசக்கரத்தைக் கையில்வைத்துச் சுழற்றிவருவோனெனினும் பொருந்தும்; இப்பொருள், சாதுசக்கரனென்னும் பெயருக்குப் பொருத்தமுடைத்தாதலு காண்க.

௫௭. வெங்கதி ரமையத்து - உச்சிப்பொழுதில்; ௫ - ம் காதை, ௬௦, ௧௧ - ம் காதை, ௬௦௨.

௫௪ - ௫௮. சாதுசக்கரன் திரிவோன் வருவோன அவன் வந்து தோன்றலு மெனக.

## ௧௦.—மந்திரங்கொடுத்தகாதை.

மெல்லியல் கண்டனை மெய்ந்நடுக் குற்றனை
நல்கூர் நுசுப்பினை நாணினை யிறைஞ்ச
விராகுலன் வந்தோன் யாரென வெகுளலும்
விராமலர்க் கூந்த லவன்வாய் புதையா
வானூ டிழிந்தோன் மலரடி வணங்காது
நாநல கூர்ந்தனை யென்றவன் றன்னொடு
பகையறு பாத்தியன் பாதம் பணிந்தாங்
கமர கேணின் றமரல மாயினு
மந்தீந் தண்ணீ ரமுதொடு கொணர்கே
முண்டி யாமுன் குறிப்பின மென்றலு
மெம்மனை யுண்கே னீங்குக் கொணர்கென
வந்தா ளவனுண் டருளிய வவ்வற
நின்னுங் கொழியாது நின்பிறப் பறுத்திடு
முவவன மருங்கி லுன்பாற் றோன்றிய
வுதய குமர னவனுன் னிராகுல
னாங்கவ னன்றியு மவன்பா லுள்ள
நீங்காத் தன்மை நினக்குமுண் டாகலிற்

---

௨௯-௩௦. மெய்நடுக்குறுதல் முதலியன இறைபொருளாகப்பிறந்த அச்சமென்னு மெய்ப்பாடு.

௩௧. சாதுசக்கரனைத் தன் மனைவி இறைஞ்சக்கண்டு வெகுண்டமையின், இது குடிகோள்பற்றிவந்த வெகுளி யென்னு மெய்ப்பாடு. 'வந்தோயாரென' என்றும் பாடம்.

௩௪. நாநல் கூர்ந்தனை - நாவறமை யுற்றாய்; என்றது-சாரணனைத் துதியாது வீணேயிருந்தாயென்று இகழ்ந்தபடி, "நாடாது துணிந்துநா நல்கூர்ந் தனே" என்பர் பின்னும்; ௧௧ - ம் காதை, ௪.

௩௫. பாத்தியன் - (புத்தனுடைய) பாதத்திற்கு அன்பன்; "திருவாதவூர்ச் சிவபாத்தியன்" என்பதில 'பாத்தியன்' என்பது இப்பொருளில் வருதல்காண்க. இது நம்பியாண்டார்நம்பிகள் திருவாக்கு. 'பகையறு பார்த்திபன்' என்றும் பாடம்.

௩௬. நின் தமரலம் ஆயினும் - யாம் நினக்குச் சிறந்த அன்பரல்லேமாயினும்.

௩௭. அமுது - அன்னம்; இஃது அமிர்தமென்னும் வடமொழிச்சிதைவு. இதனை ஆருயிர் மருந்தென்று இந்நூலுள்ளே பலவிடத்துங் கூறுவர்.

௩௮. உண்டி - உண்பாய். என்றலும் - என்று நீ சொல்லலும்.

௩௯. எம்மனை - தாயே. கொணர்க என - கொண்டுவருகவென்று சாதுசக்கரன் சொல்லி.

௪௦. அவன் உண்டருளிய அவ்வறம் - சாதுசக்கரன் அமுதுசெய்தமையா லுண்டாகிய அந்தப்புண்ணியம். 'அவனுண் டருளிய வவ்வமுது' என்றும் பாடம்.

௪௧. நின்னுங்கொழியாது - நின்னை விட்டு நீங்காது; நின்னுங்கு :—௪௧ - ம் காதை, ௪௭.

௪௦ - ௪௧. அவ்வறம் நின்பிறப்பை அறுத்திடும்.

௪௩. உதயகுமரனாகிய அவன்.

௪௪. அவனன்றியும்-அவன் உன்பால் நீங்காதவிருப்பத்தைச் செலுத்துவதல லாமலும்.

௪௪ - ௪௫. உதயகுமரனை மணிமேகலை இடைவிடாது நினைத்திருந்தாளென்

கந்த சாலியின் கழிபெரு வித்தோர்
வெந்துகு வெண்களர் வீழ்வது போன்மென
வறத்தின் வித்தாங் காகிய வுன்னையோர்
திறப்படற் கேதுவாக சேயிழை செய்தே
னின்னுங் கேளா யிலக்குமி நீநின்
றவ்வைய ராவோர் தாரையும் வீரையு
மாங்கவர் தம்மை யங்கநாட் டகவையிற்
கச்சய மாளுங் கழற்கால வேந்தன
றுச்சய னென்போ னொருவன் கொண்டன
னவருட னங்கவ னகன்மலை யாடிக்
கங்கைப் பேரியாற் றடைகரை யிருந்துழி
மறவணம் நீத்த மாசறு கேள்வி
யறவண னாங்கவன் பாற்சென் றோனை
யீங்கு வந்தீ ரியாரென் றெழுந்தவன்
பாங்குளி மாதவன் பாதம் பணிதலு

---

பதை, உதயகுமரன் வெட்டுண்டு இறந்த பொழுது, "உவவன மருங்கி னின்பா லுள்ளந், தவிர்விலே னாதலிற் றலைமக டோன்றி, மணிபல லவத்திடைப் பெண்ணனை பாங்குய்த்துப், பிணிப்பறு மாதவன் பீடிகை காட்டி, யென்பிறப் புணர்ந்த" என்று அவள் கூறியவாற்றாலு முணர்க, ௨௧ - ம் காதை, ௧௫ - ௧௭.

௪௬. கந்தசாலி - சிறந்தவாசனையுள்ள ஒருவகை நெல்; இப்பெயரினதாகிய நெல்லொன்று உண்டென்பது, தசகுமாரசரித்திரத்தின் உத்தரார்த்தத்தில் ஆறாவது உச்சுவாசத்திலுள்ள கோமினிகதையால் நன்குபுலப்படும். இக்காலத்து இந்நெல் கன்னடதேசத்துள்ள மங்கலாபுரத்தில் (மங்களூர்) மிகுதியாகவுள்ளது. மணிமேகலையின் உயர்வுபற்றி அவளுக்குக் கந்தசாலி உவமைகூறப்பட்டது. கழிபெருவித்து - மிகச் சிறந்தவிதை.

௪௭. களர் - உப்புநிலம். வீழ்வது போன்ம் - விதைக்கப்படுவதையொக்கும்; என்றது, தருமத்துக்குமூலமாகிய நீ உதயகுமரனை விரும்புவாயாயின் உன் இயல்பு களர்நிலத்தில் விதைக்கப்பட்ட கந்தசாலியின் விதையைப்போன்று பயனற்றுப்போமென்றபடி. என - என்று நினைந்து. 'வெங்களர்' என்றும் பாடம்.

௪௮. தருமத்திற்குமூலமாகியஉன்னை.

௪௯ - ௫0. ஓர்திறப் படற்கு ஏதுவாக செய்தேன் - நின்மனம் ஒருவழிப்படுதற்குக் காரணமாகச்செய்தேன்; ஒருவழி - வைராக்கியமார்க்கம்; "ஒருமன மெய்தி யிருவினைப் பிணிவிட, முப்பகை கடந்து நால்வகைப் பொருளுணர்ந்து" என்று வருதல்காண்க. இது, வீரசோழியம், யாப்புப்படலம், ௧௧ - ம் கலித்துறையின் உதாரணம். செய்தேனென்றது, மணிமேகலையை உவவனத்திலிருந்து மணிபல்லவத்திற்குக் கொண்டுபோய்ப் புத்தனது பாதபீடிகையைக் காட்டி முற்பிறப்பின்செய்தியை அவள் அறிந்து உய்யும்படி செய்ததனை, ௨௧ - ம் காதை, ௧௫ - ௧௭.

௫௧. தவ்வையாராவோர் - முன் பிறந்தோராவோர். 'தவ்வைய ராகிய தாரையும் வீரையும்' என்றும் பாடம்.

௫௨ - ௫௪. அவர்தம்மைத் துச்சயன் மணஞ்செய்துகொண்டான்.

௫௫. அவருடன் - தாரை வீரையென்பவருடன். ஆடி - விளையாடி.

௫௮. அவன் - துச்சயன். சென்றோனை - சென்ற அறவணவடிகளை.

௫௭ - ௫௮. ௨ - ம் காதை, ௬0 - ௬௧.

௫௯ - ௬0. அவனே பாங்கு உளி - அவனுடைய இயல்பை நினைந்து. பணிதலும் - துச்சயன் வணங்குதலும்.

மாதி முதல்வ னறவாழி யாள்வோன்
மாதுய ரெவ்வ மக்களை நீக்கி
விலங்குந் தமமுள் வெரூஉம்பகை நீக்கி
யுடங்குயிர் வாழ்கவென் றுள்ளங் கசிந்துகத்
தொன்றுகா லத்து நின்றற முரைத்த
குன்ற மருங்கிற் குற்றங் கெடுக்கும்
பாத பங்கயங் கிடத்தலி னீங்கிது
பாதபங் கயமலை யெனும்பெயர்த் தாயது
தொழுது வலங்கொள்ள வந்தே னீங்கிப்
பழுதில காட்சியீர் நீயிருந் தொழுமென
வன்றவ னுரைத்த வவ்வுரை பிழையாது
சென்றுகை தொழுது சிறப்புச் செய்தலின்
மாதவி யாகியுஞ் சுதமதி யாகியுங்
கோதையஞ் சாய லின்னொடு கூடின
ரறிபிறப் புற்றனை யறம்பா டறிந்தனை

---

௬௧. ௬ - ம் காதை, ௧௧. ஆதிமுதல்வ னென்பது முதலியவை, அறவணவடிகள் துச்சயனை நோக்கிக் கூறும் வார்த்தை.

௬௨. மாதுயர் எவ்வம் - மிக்க துன்பம்; என்றது பிறப்பிறப்புக்களை; துயரெவ்வம் - ஒருபொருட் பன்மொழி. நீக்கி - நீங்கச்செய்து.

௬௩. வெரூஉம்பகை - அஞ்சுதற்குக் காரணமாகிய பகை 'பகைநீங்கி' என்றும் பாடம்.

௬௪. உயிர் உடங்கு வாழ்க என்று - எல்லாவுயிர்களும் தம்முள் மனவேறுபாடின்றி ஒத்து வாழ்வனவாக வென்று கருதி; எல்லாவுயிர்களும் ஒருபடியாக நிருவாணமடைந்து வாழ்கவென்றுகருதியென்று கூறினும் பொருந்தும். உள்ளம் கசிந்து உக - மனம் கருணைமிகுதியால் இரங்கிக் கரைய.

௬௫ தொன்று காலத்து - பழையகாலத்தில்.

௬௨ - ௬௫. ௧௨ - ம் காதை, ௮௭-௯௮.

௬௫ - ௬௬. நின்று அறம் உரைத்த குன்ற மருங்கில்-எல்லா உயிர்களும் காணும்படி நின்று தருமோபதேசஞ்செய்த மலையினிடத்தே. அம்மலை கிருத்திரகூடம்; அது, மகததேசத்தின் இராஜதானியாகிய இராஜகருகநகரத்தின் ஸமீபத்திலுள்ளது. குற்றம் - காமவெகுளி மயக்கங்கள்.

௬௧ - ௬௬ முதல்வன் ஆள்வோன் உயிர் வாழ்கவென்று நின்று அறம் உரைத்த குன்றம்.

௬௭. பாதபங்கயம் - புத்தனுடைய பாததாமரைக் குறிகள்.

௬௮. பெயர்த்தாயது - பெயரையுடைத்தாயிற்று.

௭௦. பழுது இல காட்சியீர் - குற்றமில்லாத அறிவினையுடையீர். தொழுமென - தொழுமினென்று துச்சயன் முதலியோரை நோக்கி அறவணவடிகள் சொல்ல. 'தொழுமினென்று' என்றும் பாடம்.

௭௧. பிழையாது - தப்பாது.

௭௨. சிறப்பு - விழா; "சிறப்பொடு பூசனை செல்லாது" என்பது திருக்குறள், ௧௮; பூசையென்னினும் பொருந்தும்.

௭௪. கோதையஞ்சாயலென்றது-மணிமேகலையை.

௭௩ - ௭௪. ௧௨ - ம் காதை, ௧௭ - ௧௮.

௭௫. அறிபிறப் புற்றனை - முற்பிறப்பை யறிந்தாய்; 'முந்தைப் பிறப்பெய்தி நின்றேன்' என்று இக்காதையில்

பிறவற முரைப்போர் பெற்றியுங் கேட்குவை
பல்வேறு சமயப் படிற்றுரை யெல்லா
மல்லியங் கோதை கேட்குறு மந்நா
ளிளையள் வளையோ ளென்றுனக் கியாவரும்
விளைபொரு ளுரையார் வேற்றுரு வெய்தவு
மந்தரந் திரியவு மாக்குமிவ் வருந்திறன்
மந்திரங் கொள்கென வாய்மையி னோதி
மதிநாண் முற்றிய மங்கலத் திருநாட்
பொதுவறி விகழ்ந்து புலமுறு மாதவன்
திருவற மெய்துதல் சித்தமென் றுணர்நீ
மன்பெரும் பீடிகை வணங்கினை யேத்தி
நின்பதிப் புகுவா யென்றெழுந் தோங்கி
மறந்தது முண்டென மறித்தாங் கிழிந்து
சிறந்த கொள்கைச் சேயிழை கேளாய
மக்கள் யாக்கை யுணவின் பிண்ட

---

முன்னுங் கூறியிருத்தல் காண்க; ௬. அறம் பாடு அறிந்தனை - தருமோத்பத்தியை யறிந்தாய்; 'அறம்பாடு சிறக்க' என்றார் முன்னும்; ௧0 - ம் காதை, ௬.

௭௬. பிற அறம் உரைப்போர் - மற்றைச் சமயதருமங்களைச்சொல்லுவோர்.

௭௭. படிற்றுரை - பொய்வார்த்தை.

௭௮. அல்லியங்கோதை - முன்னிலைப்பெயர். 'கேட்குறுநாளில' என்றும் பாடம்.

௭௯. இளையள் - இளமையையுடையாள். வளையோள் - வளைகளையுடையாள்.

௮0. விளைபொருள் உரையார் - விளைகின்ற தத்தம் சமயதத்துவங்களைச் சொல்லார்; இயல்பன்றெனபார் விளைபொருளென்றார்; ஆதலாலென ஒருசொல் வருவிக்க. வேற்றுரு - வேறுவடிவம்.

௭௯ - ௮0. ௨௬ - ம் காதை, ௬௮-௬௯.

௮௧. அந்தரம் - ஆகாயம். 'அந்தரஞ் சேறலும்' என்றும் பாடம்.

௮௨. வாய்மையின் ஓதி - நால்வகை வாய்மையுடன் அம்மந்திரங்களை உபதேசித்து; வாய்மையின் - உண்மையுடனென்றுமாம்.

௮௩. மதி நாள் முற்றிய - சந்திரன் நாள்தோறும் ஒவ்வொரு கலையாகவளர்ந்து முற்றப்பெற்ற, மங்கலத்திருநாள் - பௌர்ணிமையில்; புத்தன் ஞானம் பெற்ற தினம் வைசாகசுத்த பௌர்ணிமையாதலால், அதனை விளக்குதற்பொருட்டு 'மதிநாண் முற்றிய மங்கலத் திருநாள்' என்றார். புத்தன்பிறந்த தினமும் அதுவே. இதனால், வைசாகசுத்த பௌர்ணிமையைச் சிறந்த திருநாளாகப் பௌத்தர் இக்காலத்துங் கொண்டாடுவர்.

௮௪. பொதுவறிவு இகழ்ந்து - சாமானிய ஞானத்தைவெறுத்து, புலம் உறும மாதவன் - நான்குவகையாகிய சத்தியங்களை அறிதற்குரிய ஞானத்தையடைந்த புத்தனுடைய; புலம - மெய்ஞ்ஞானம், திருமுருகாற்றுப்படை, ௬௬.

௮௫. சித்தம் (=ஸித்தம்) - நிச்சயம்.

௮௬. வணங்கினை - வணங்கி.

௮௮. மறித்து ஆங்கு இழிந்து - மீட்டும் அவ்விடத்தேயிறங்கி.

௮௯. கொள்கை - விரதம்; "சான்ற கொள்கை" என்பது மதுரைக்காஞ்சி, ௪௮0.

௯0. மனிதருடைய உடம்பு உணவாலாகியதொகுதி; 'உண்டி முதற்றே யுணவின் பிண்டம்' என்பது, புறநானூறு, ௧௮.

# ௧௦.—மந்திரங்கொடுத்தகாதை.

மிப்பெரு மந்திர மிரும்பசி யறுக்குமென்
றாங்கது கொடுத்தாங் கந்தர மெழுந்து
நீங்கிய தாங்கு நெடுந்தெய்வந் தானென.

மந்திரங்கொடுத்தகாதை முற்றிற்று.

---

௧௧. எல்லாமந்திரத்திலும் சிறந்ததென்பார் பசியொழிக்குமந்திரத்தைப் பெருமந்திரமென்றார்.

௧௩. நெடுந்தெய்வம் நீங்கியது. 'நீங்கிய தாங்க நெடுந்தெய்வம்' என்றும் பாடம்.

௧-௧௩. ஆயிழை ஆசனத்தால் அறிந்த பிறவியளாயினள்; இவள்பெற்றியும் ஐதென்று வந்துதோன்றிய தெய்வம், நின்றோள்கேட்ப "நீயோதோன்றினை; நின்னடிபணிந்தேன்; வைத்தேன; கொண்டேன்; எற்றினேன்; புலம்பு அறுக" என்று ஆசனத்தைவலங்கொண்டு வணங்காநிற்ப, அப்பொழுது அத்தெய்வத்தின்முன்னாப் பொருந்தி 'உன்றிருவருளால் என்பிறப்புணர்ந்தேன், என்கணவன் யாங்குளன்' என்று மணிமேகலைகேட்டலும், அத்தெய்வம் "இலக்குமி! கேள், பொழிலில் இராகுலனொடு நீபுலந்தாய்; அப்புலவியை மாற்றவேண்டி அவன் உன்னடியை வணங்கும்பொழுது, சாதுசக்கரன் திரிவோன் வருவோன் அவன் வெங்கதிர மயத்துப் பொழிலினுள்ளே வந்து தோன்றலும், நீ கண்டு மயங்கிக் கலங்கி டுக்குற்று நாணி இறைஞ்ச, இராகுலன் 'வந்தோன்யார்' என்று வெகுளலும், நீ அவன்வாயைப்புதைத்து 'இழிந்தோனுடைய அடியைவணங்காது நாநல்கூர்ந்தனை' என்றுசொல்லி அவனொடு பாதகியன்பாதம்பணிந்து, 'அமர, சேள, கொணர்கேம்; உண்டி; யாம் உன்குறிப்பினம்' என்றலும், அவன் 'கொணர்க' என்று உண்டருளிய அவ்வறம் நின்னை யொழியாது நின்பிறப்பையறுத்திடும்; உவவனத்தில்தோன்றிய உதயகுமரன் முன் இராகுலன்; அவனுக்கன்றி அவன்பால உள்ளநீங்காத்தன்மை நினக்கு முண்டாதலின், நின்னியல்பு வீழ்வது போலுமென்றெண்ணி உன்னை ஓர்திறப்படற்கு ஏதுவாச்செய்தேன்; இலக்குமி! இன்னுங்கேள்; தாரையும்வீரையும் நின்தவ்வையராவோர்; அவர்தம்மைத் துச்சயன்கொண்டனன்; அவன் அவருடன் மலையாடி அடைகரையிலிருந்துழிச் சென்ற அறவணனை அவன 'உந்தீர்யார்' என்று எழுந்து அவனுடைய பாதத்தைப்பணிதலும், அவன 'பாதபங்கயத்தைத் தொழுது வலங்கொள்ளவந்தேன; நீருந்தொழும்' என்ற வுரைபிழையாது சென்று தொழுது சிறப்புச்செய்தலின், தாரையும் வீரையும் நின்னொடு கூடினர்; உற்றனை; அறிந்தனை; பெற்றியும் கேட்குவை; அந்நாள், யாவரும உனக்கு உறையார்; ஆதலால், இம்மந்திரங்கொள்க" என்று அவற்றை உபதேசித்து, "உணர்நீ; நின்பதிப்புகுவாய்" என்று எழுந்தோங்கி அத்தெய்வம், "யான் மறந்ததுமொன்றுண்டு" என்று மறித்தும் இழிந்து, "கேளாய்; யாக்கை உணவின்பிண்டம்; இப்பெருமந்திரம் இரும்பசியறுக்கும்" என்று அம்மந்திரத்தைக்கொடுத்து எழுந்து நீங்கியதென வினைமுடிவுசெய்க.

பதினோன்றாவது

# பாத்திரம்பெற்ற காதை.

[பதினோன்றாவது மணிமேகலைக்குத் தீவதிலகை
கோமுகியென்னும் பொய்கையிலெழுந்த பாத்திரங்கொடுத்தபாட்டு.]

மணிமே கலாதெய்வ நீங்கிய பின்னர்
மணிபல் லவத்திடை மணிமே கலைதான்
வெண்மணற் குன்றமும் விரிபூஞ் சோலையுந்
தண்மலர்ப் பொய்கையுந் தாழ்ந்தன ணோக்கிக்
காவதந் திரியக் கடவுட் கோலத்துத்
தீவ திலகை செவ்வனந் தோன்றிக்
கலங்கவிழ் மகளிரின் வந்திங் கெய்திய
விலங்குதொடி நல்லா யார்நீ யென்றலு
மெய்ப்பிறப் பகத்துள் யார்நீ யென்றது
பொற்கொடி யன்னாய் பொருந்திக் கேளாய்
போய பிறவியிற் பூமியங் கிழவ
னிராகுலன் மனையா னிலக்குமி யென்பே

---

௩. குன்றமுதலியவற்றிற்கு இரண்டனுருபு விரிக்க.

௪. 'தண்புனற் பொய்கையும்' என்னும் பாடம். தாழ்ந்தனள் நோக்கி - தாழ்ந்து நோக்கி=மெல்ல நோக்கி.

௫. காவதம் - காதம்; 'வ' பகுதிப்பொருள் விகுதி யென்பர் அடியார்க்கு நல்லார்; சிலப்பதிகாரம், நாடுகாண் காதை, ௩௬. கடவுட்கோலம் - தெய்வ வேடம்.

௧ - ௫. நீங்கியபின்னர் மணிமேகலை நோக்கித் திரியவென்க.

௬. தீவதிலகை.— பதிகம் - ௫௩; இந்திரனைவலாற் புத்தனுடைய பாதபீடிகையைப் பாதுகாத்துக்கொண்டு மணிபல்லவத்திலிருப்பவள்; ௧௧ - ம் காதை, ௨௭ - ௨௮. செவ்வனம் - செவ்விதாக; வேறாகவெனினும் பொருந்தும்; "திருமக ளிருக்கை செவ்வனஞ் சிதைந்து" என்பதிற்காண்க; இது சிலப்பதிகாரம், கடலாடுகாதை, ௧௨௭.

௭. கலம் - கப்பல். மகளிரின - மகளிர்போல.

௮. தொடி - வளை. என்றலும் - என்று தீவதிலகை கேட்கவும் 'இலங்குதொடி யன்னா யார்நீ யென்ன' என்றும் பாடம்.

௬ - ௮. தீவதிலகை தோன்றி யார்நீ யென்றலும்

௯. 'எப்பிறப் பகத்துள்' என்பதுமுதலியன மணிமேகலையின் வார்த்தை.

௧௦ பொற்கொடி யன்னாய் - காமவல்லியையொப்பாய்.

௧௧. போய பிறவி - சென்ற பிறப்பு. கிழவன் - உரியவன்.

௧௨. மனையாள் - யான் மனைவி. இலக்குமி என்பேர் - இலக்குமியென்பது

ஆய பிறவியி லாடலங் கணிகை
மாதவி யீன்ற மணிமே கலையா
னென்பெயர்த் தெய்வ மீங்கெனைக் கொணரவிம்
மன்பெரும் பீடிகை யென்பிறப் புணர்ந்தே
னீங்கென் வரவிதீங் கெய்திய பயனிது
பூங்கொடி யன்னா யார்நீ யென்றலு
மாயிழை தன்பிறப் பறிந்தமை யறிந்த
தீவ திலகை செவ்வன முரைக்கு
மீங்கித னயலகத் திரத்தின தீவத்
தோங்குயர் சமந்தத் துச்சி மீமிசை

எனது பெயர். 'இலக்குமி யெனபேன்' எனறும் பாடம்.

கங. ஆய பிறவியில் - இப்பிறப்பில்.

கங-கச. பலவகையினராகிய கணிகையர்களுள் மாதவி நாடகக்கணிகையாதலின், அதனை விளக்குதற்பொருட்டு 'ஆடலங் கணிகை மாதவி' என்றாள். கணிகையர்களின்வகையினை, சிலப்பதிகாரம் இந்திரவிழவூரெடுத்தகாதையிலும்,ஊர்காண்காதையிலும் காண்க.

கரு. என்பெயரத தெய்வமென்றது மணிமேகலாதெய்வத்தை.

கசு. பீடிகை - பீடிகையால்.

கஎ. பயனிதுவென்றது, பழம்பிறப்புணர்ந்ததனை.

கஅ. என்றலும் - என்று மணிமேகலை கேட்கவும்.

கக. ஆயிழை - மணிமேகலை. அறிந்தமை - அறிந்த தன்மையை.

உ0. உரைக்கும் - சொல்லுவாள்.

மேல்வருவன தீவதிலகையின்வார்த்தை.

உக. இதன் அயலகத்து - இந்த மணிபல்லவத்தின் அயலிடத்துள்ள, இரத்தினதீவத்து - இரத்தினதீவத்தில்.

உஉ. ஓங்குயர் சமந்தத்து - மிகவுமுயர்ந்த சமந்தமென்னு மலையினது, உச்சி மீமிசை - உச்சியின்மேலே ; மீமிசை - மேல்; "கொல்களிற்று மீமிசைக்கொடி" என்பது புறநானூறு, க. 'ஓங்குயர் சிமயத்து' என்றும் பாடம். இம்மலைக்குச் சமனொளியென்றும் பெயருண்டு ; "இலங்கா தீவத்துச் சமனொளி யென்னுஞ், சிலம்பினை யெய்தி வலங்கொண்டு மீளுந், தரும சாரணர்" (உஅ-ம் காதை, க0எ - க0க) என்று பின்வருதலாலுணர்க.*

* "ஆறைந்து யோசனைத், தென்றிசை மருங்கிற் சென்றுதிரை யுடுத்த, மணிபல் லவத்திடை" (சு-ம் காதை, உகக - உகங) என்றதனால் மணிபல்லவம் காவிரிப்பூம்பட்டினத்திற்குத் தெற்கே முப்பதுயோசனைதூரத்திலுள்ளதென்றும், "ஈங்கித னயலகத் திரத்தின தீவத், தோங்குயர் சமந்தத் துச்சி மீமிசை, யறவியங் கிழவோ னடியிணை யாகிய, பிறவி யெனனும் பெருங்கடல் விடூஉ, மறவி நாவா யாங்குள தாதலின்" (கக - ம் காதை, உக - உரு) என்றதனால் இரத்தினதீவம் மணிபல்லவத்திற்கு அயலிடத்துள்ளதென்றும், அதிற் புத்தனுடைய பாதகுறிகளுள்ள உச்சியையுடைய சமந்தமென்னு மலையொன்றுண்டென்றும் தெரிதலாலும், "இலங்கா தீவத்துச் சமனொளி யென்னுஞ், சிலம்பிணை யெய்தி வலங்கொண்டு மீளுந், தரும சாரணர்" (உஅ - ம் காதை, க0எ - க0க) என்பதனால் இலங்காதீவத்திற் சமனொளியென்று பெயருள்ள புத்தஸ்தலமாகிய மலையொன்றுண்டென்று தெரிதலாலும் முன்னுள்ள சமநதமென்பதும், பின்னுள்ள சமனொளியென்பதும் இலஙகையிலுள்ள 'ஆடம்ஸ்பீக்' என்று 'இங்கிலிஷ்' பாஷையில் வழங்கும் மலையையே குறிக்கின்றன

யறவியங் கிழவோ னடியிணை யாகிய
பிறவி யென்னும் பெருங்கடல் விடூஉ
மறவி நாவா யாங்குள தாதலிற்
றொழுது வலங்கொண்டு வந்தே னீங்குப்
பழுதில் காட்சியிந் நன்மணிப் பீடிகைத்
தேவர்கோ னேவலிற் காவல் பூண்டேன்
றீவ திலகை யென்பெய ரிதுகேள்
டரும தலைவன் றலைமையி னுரைத்த

௨௩. அறவியங் கிழவோன் - அறத்திலே நிற்கின்ற உரிமையையுடையோனாகிய புத்தன்; "அறவியாற் காறுமூன்றும்" (குணமாலையாரிலம்பகம், ௨௭௫) எனவும், "அறவிய மனத்தராகி" (முத்தியிலம்பகம், ௨௭௯) எனவும் வருவன சீவகசிந்தாமணி; "அறவிய மனத்தினை யாகி" எனவும், "அறவியான் மூனு மறவமிர்த மீந்தான்" எனவும் வருவன நீலகேசி. இணை - இரண்டு.

௨௪. பிறவி காரணகாரியத்தொடர்ச்சியாய்க் கரையின்றிவருதலின், 'பிறவியென்னும் பெருங்கடல்' என்றார். விடூஉம் - கடத்தும்.

௨௫. அறவி நாவாய் - அறத்திலே நிற்பதாகிய நாவாய்; நாவாய் - கப்பல்.

௨௨ - ௨௫. உச்சிமிசை அடியிணையாகிய நாவாய் உள்ளது.

௨௩ - ௨௫. பிறவியாகிய பெருங்கடலைக்கடத்தும் அடியிணையாகிய நாவாயென்க; இப்படியே "பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா, ரிறைவ னடிசேராதார்" (திருக்குறள், ௰) என்று வருதல் காண்க.

௨௬. ஈங்கு வந்தேன்.

௨௧-௨௬. இம்மணிபல்லவத்தின் அயலிடத்தேயுள்ளதாகிய இரத்தினதீவத்துள்ள சமந்தமென்னுமலையினது உச்சியிற் புத்தனது பாதமாகிய அறவிநாவாய் உள்ளதாதலால் அதனைத் தொழுது வலங்கொண்டு ஈங்குவந்தேனென்றாளென்க.

௨௭. பழுது இல காட்சி - குற்றமற்ற தோற்றத்தையுடைய. பீடிகை - பீடத்தை.

௨௮. காவல் பூண்டேன் - காத்தலை மேற்கொண்டேன்.

௨௯. என்பெயர் தீவதிலகையென்பது.

௩௦. தருமராசனென்பது புத்தன்பெயர்களுள் ஒன்றாதலின், தருமதலைவனென்றாள்.

---

வென்றெண்ணுவதற் கிடமுண்டு. எங்ஙனமெனின், இலங்கைத்தீவின் மேனமாகாணத்தில் தென்கீழ்ப்பிரிவில் இரதினபுரியென்ற ஓரிடமும், சிலரால் சமந்தகூடமென்றும் சிலரால் சமனொலையென்றும் சொல்லப்பட்டுள்ள மலையொன்றும் உள்ளனவென்று யாழ்ப்பாணம் - வட்டுக்கோட்டை, வே. சதாசிவப்பிள்ளையென்பவரால் கி. பி. 1884-ம் வருடத்திற் பதிப்பிக்கப்பட்டுள்ள இலங்கைப்பூமிசாஸ்திர சங்கிரகமென்னும் புத்தகத்தால் தெரிகின்றன. மணிபல்லவம் காவிரிப்பூம்பட்டினத்திற்குத்தெற்கே ஆறைந்துயோசனைதூரத்துள்ளதென்றும் அதன் அயலிலுள்ளது இரத்தின தீவமென்றும் முன்பு கூறியதற்கு 'ஆடம்ஸ்பீக்' காவிரிப்பூம்பட்டினத்திற்குத்தெற்கே சற்றேறக்குறைய முப்பது காததூரத்திலிருத்தலும், அம்மலை பண்டைக்காலத்துச் சமந்தமென்றும் சமனொளியென்றும் கூறப்பட்டுவந்ததென்பதற்கு இக்காலத்து அது 'சமந்தகூடம்' 'சமனொலை' என்று கூறப்படுதலும், அம்மலை இரத்தினதீவத்துள்ளதென்பதற்கு அதனைச்சார்ந்த ஓரிடம் 'இரத்தினபுரி' என்று பெயர்பெற்றிருத்தலும், சமனொளியென்பது இலங்காதீவத்துள்ளதென்பதற்கு அஃது இலங்கைத்தீவிலிருத்தலும் சான்றாதலறிக.

பெருமைசா னல்லறம் பிறழா நோன்பினர்
கண்டுகை தொழுவோர் கண்டதற் பின்னர்ப்
பண்டைப் பிறவிய ராகுவர் பைந்தொடி
யரிய ருலகத் தாங்கவர்க் கறமொழி
யுரிய துலகத் தொருதலை யாக
வாங்கன மாகிய வணியிழை யிதுகே
ளீங்கிப் பெரும்பெயர்ப் பீடிகை முன்னது
மாமலர்க் குவளையு நெய்தலு மயங்கிய
கோமுகி யென்னுங் கொழுநீ ரிலஞ்சி
யிருதிள வேனிலி லெரிகதி ரிடபத்
தொருபதின் மேலு மொருமூன்று சென்றபின்
மீனத் திடைநிலை மீனத் தகவையிற்

௩௧ - ௩௩. நோன்பினரே இப்பீடிகையைத்தரிசித்துக் கைதொழுதற்கு உரியராவார்; அங்ஙனந்தரிசித்தபின்பு அவர் பழையபிறப்பின்செய்தியையறியும் அறிவையுடையராவார்.

௩௪ - ௩௫. அரியர் உலகத்து - அத்தன்மையையுடையோர் உலகத்திற் பெறதற்கரியர், அவர்க்கு அறமொழி உரியது - அவர்க்குத் தருமபதம் உரிமையையுடையது. ஒருதலையாக - நிச்சயமாக.

௩௬. ஆங்கனமாகிய அணியிழை - அத்தன்மையையுடையாயாகிய அணியிழாய்; என்றது, நீ தருமபதங்கேட்டற்கு உரிமையையுடையாயெனறபடி.

௩௭. பெயர் - புகழ்; பெரும்பெயர் - வீடுமாம்; "மிக்குப் புகழெய்திய பெரும்பெயர் மதுரை" என்பதனாலறிக; இது மதுரைக்காஞ்சி, ௬௯௯.

௩௮. மயங்கிய - கலந்த.

௩௯. கோமுகி - மணிபல்லவத்துள்ள ஒருபொய்கை; காரணப்பெயர்; பசுவின் முகம்போன்ற வடிவமுடையதென்பது பொருள். இலஞ்சி - பொய்கையில். 'என்னுமிக கொழுநீ ரிலஞ்சி' என்றும் பாடம்.

௩௭ - ௩௯. முன்னிடத்ததாகிய இலஞ்சியில்.

ஆபுத்திரன் வேண்டுகோளின்படி கோமுகியென்னும் பொய்கையினுள்ளேயிருந்து அமுதசுரபியென்னும் பாத்திரம் ஒவ்வொருவருடத்தும் மேலேவந்து தோன்றுந்தினம் புத்தனுடைய ஜனன காலமாகிய விசாகநட்சத்திரத்தோடு கூடிய வைசாகசுத்த பௌர்ணிமையாதலின், அத்தினத்தை மேலேவரும் நான் கடிகளாற் சிறப்பித்துக் கூறுவார்.

௪௰. இருது இளவேனிலில் - இளவேனிற்பருவத்தில்; பன்னிரண்டுமாதங்களுள் ஆவணிமுதலிய இரண்டிரண்டுமாதங்கள் இருதுவெனவும் பெரும்பொழுதெனவும் பருவமெனவுங் கூறப்படும். அவை, முறையே கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனிலென ஆறுவகையாம். அவற்றுள், ஈண்டு இளவேனிலென்றது சித்திரை வைகாசி மாதங்களை. கதிர் எரி இடபத்து - சூரியன் மிக்க வெம்மையைச் செய்கின்ற வைகாசிமாதத்தில்.

௪க. ஒருபதின் மேலும் ஒருமூன்று சென்றபின் - இருபத்தேழு நட்சத்திரங்களுள் கார்த்திகைமுதலாகிய பதின்மூன்றுநட்சத்திரங்கள் சென்றபின்பு.

௪௨. மீனத்து இடைநிலைமீனத்து அகவையின் - நட்சத்திரங்களுள் நடுவில் நிற்றலையுடையதான விசாகநட்சத்திரத்தில்; "போதித் தலைவனொடு பொருந்திய போழ்தது" என்று பின்புவருதலின், ஈண்டு விசாகம் கொள்ளப்பட்டது. அச்சுவினிமுதலிய இருபத்தேழனுள் பதினான்காவதும் நடுவிலுள்ளதுமாகிய நட்சத்திரம் சித்திரையாக இருக்க அதனை நடுவிலுள்ளதாகக்கூறாமல் இவ்விடத்தில் விசாகத்தைக்கூறியது என்னையோவெனின், ஒவ்வொருவருட

போதித் தலைவனொடு பொருந்தித் தோன்று
மாபுத் திரன்கை யமுத சுரபியெனு

த்தும், பகலையும் இரவையும் சமனாக முப்பது முப்பது நாழிகையாகவேபெற்ற இரண்டு விஷுவததினங்களுள் ஒன்றாகிய மேஷாயனத்திற் சூரியனுக்கு எந்தநட்சத்திரத்திற் பிரவேசமுண்டாகின்றதோ அதை நட்சத்திரங்களில் முதலாவதாகக் கூறுவது சோதிடநூற்றுணிபாதலாலும் முன்னொருகாலத்திற் சூரியனுக்குக் கிருத்திகாப்பிரவேசமிருந்தபொழுது மேஷாயனம் நேரிட்டிருந்ததென்றும் அதுபற்றிக் கார்த்திகையை முதலாகக்கொண்டு நட்சத்திரங்களை எண்ணிவந்தார்களென்றும் பழைய சோதிடநூல்களால் தெரிகின்றமையாலும் நட்சத்திரங்களின் நடுவிலுள்ளதை விசாகமென்றுகூறியது குற்றமன்றென்க. இப்படியே முன்னொருகாலத்தில் நட்சத்திரங்களைக் கார்த்திகை முதலாக எண்ணிவந்தார்களென்பது, கிருஷ்ணயஜுர்வேத ஸம்ஹிதையாலும் கிருஷ்ணயஜுர்வேத பிராஹ்மணத்தாலும் தெரிகின்றதென்பர். உச்சயினி நகரத்தில் விக்கிரமார்க்கனுடைய அவைக்களத்திலிருந்த நவரத்தினங்களுள் ஒருவரென்று சொல்லப்படுகிற வராகமிகிரரென்கிற பிரஸித்தஜ்யோதிஷ்கர், தமதுகாலத்தில் மேஷாயனத்திற் சூரியனுக்கு அச்வினீநட்சத்திரப் பிரவேசமுண்டாயிருத்தலையறிந்து பழையவழக்கத்திற்கு மாறாக நட்சத்திரங்களை அச்வினீமுதலாக எண்ணும் வழக்கத்தை வற்புறுத்தினமையின், இக்காலத்தில் நட்சத்திரங்கள் இங்ஙனம் எண்ணப்பட்டு வருகின்றனவென்பர். 'அகவயின்' என்றும் பாடம்.

௪௧ - ௪௨. இங்கே விசாகநட்சத்திரத்தைப் பதினான்காவதாகக் கூறியிருத்தலின், இந்நூலாசிரியர் நட்சத்திரங்களைக் கார்த்திகைமுதலாக எண்ணிவந்தகாலத்தினரென்பது ஊகித்தறியப்படுகின்றது.

௪௩. போதி - அரசமரம்; இதற்குப் போதத்தையுடையதென்பது பொருள்; போதம் - ஞானம்; இதனடியிலிருந்தபொழுது நால்வகைச்சத்தியங்களையும் அறிந்துகொள்ளுதற்குரிய ஞானத்தைப் புத்தன் அடைந்தமையால், இஃது இப்பெயர்பெற்றதென்பர்; புத்தன் இதனடியிலிருந்தானென்பதை, "போதி நீழற் பொருந்தித் தோன்று, நாதன்" (௧௧-ம் காதை, ௭௩ - ௭௪) எனவும், "போதி மூலம் பொருந்திய சிறப்பி, னாதன்" (௧௨ - ம் காதை, ௧0௧ - ௧0௨) எனவும், "ஓங்குயர் போதி யுரவோன்" (௧௨ - ம் காதை, ௧௧௧) எனவும், "போதித் தலைவனொடு" (௧௫ - ம் காதை, ௨௯) எனவும், "போதி மாதவன்" (௧௫ - ம் காதை, ௨௧) எனவும், "முன்னவன் போதியி னல்லறம்" (௨௮ - ம் காதை, ௧௪௧) எனவும், "பைம்பூம் போதிப் பகவற்கு" (௨௮ - ம் காதை, ௧௭௪) எனவும், "போதி மூலத்து, நாதன்" (௨௯ - ம் காதை, ௨௩ - ௨௪) எனவும், "போதி மூலம் பொருந்தி யிருந்து" (௩0 - ம் காதை, ௧0) எனவும் இந்நூலுள்ளே பின்வருவனவற்றாலுணர்க. இது மகாபோதியெனவுங் கூறப்படும். தலைவன் - புத்தன். இனி, போதியென்பதற்கு ஞானமென்று பொருள்செய்தல் பௌத்தர் சைனர்களுடைய வழக்கமாகவிருத்தலின், போதித்தலைவனென்றதற்கு ஞானத்திற்குத் தலைவனென்று பொருள் கூறினும் பொருந்தும்; "போதிச் செல்வம் பூணடவ ரேத்தும் பொலிவினா, லாதிக் காலத் தந்தணன் காதன் மகனொத்தான்" என்பதிற் காண்க; இது சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், ௩௩௭. தோன்றும் - முற்று.

௪0 - ௪௩:- ௧௫ - ம் காதை, ௨௩ - ௨௪.

௪௪. அமுத சுரபி - அமுதத்தினது மணம்போன்ற மணமுடையதென்றும், அமுதத்தைக்கொடுக்கும் காமதேனுவைப்போன்றதென்றும் பொருள் கூறுவர்; அமுதம் - அமிர்தம், உணவு. சுரபி - மணம், காமதேனு. இஃது ஆருயிர்மருந்தென்றும் கூறப்படும்; ௨௧ - ம் காதை, ௧௪௧.

௪0 - ௪௪. அமுதசுரபி, புத்தன்பிறந்த காலத்தே ஒவ்வொருவருடத்தும் கோமுகியென்னும் பொய்கையிலிருந்து தோன்றுதலின், 'போதித் தலைவனொடு பொருந்தித் தோன்றும்' என்றார்.

மாபெரும் பாத்திர மடக்கொடி கேளா
யங்நா ளிங்நா ளப்பொழு திப்பொழுது
நின்னுங்கு வருவது போலு நேரிழை
யாங்கதிற் பெய்த வாருயிர் மருந்து
வாங்குநர் கையகம வருத்துத லல்லது
தான்றொலை வில்லாத் தகைமைய தாகு
நறுமலர்க் கோதை நின்னூ ராங்க
ணறவணன் றன்பாற் கேட்குவை யிதன்றிற
மென்றவ ளுரைத்தலு மிளங்கொடி விரும்பி
மன்பெரும் பீடிகை தொழுதனள் வணங்கித்
தீவ திலகை தன்னொடுங் கூடிக்
கோமுகி வலஞ்செய்து கொள்கையி னிற்றலு
மெழுந்து வலம்புரிந்த விளங்கொடி செங்கையிற்
றொழுதகை மரபிற் பாத்திரம் புகுதலும்
பாத்திரம் பெற்ற பைங்தொடி மடவாண்
மாத்திரை யின்றி மனமகிழ் வெய்தி
மாரனை வெல்லும் வீர நின்னடி
தீநெறிக் கடும்பகை கடிந்தோய் நின்னடி

---

௪௩ - ௪௫. பாதத்திரம் தோன்றும்.

௪௭. நின்னுங்கு வருவது போலும் - அப்பாத்திரம் நினகையிடத்து வருவது போலும்; நின்னுங்கு.— ௧௦-ம் காதை, ௨௧. "நின்றுங்கு வரூஉ மென்னெஞ்சி னை, யென்னுங்கு வாரா தோம்பினைகொ ணமே." எனபது கலித்தொகை, ௨௫.

௪௮. அதில் - அமுதசுரபியென்னும் பாததிரததில். ஆருயிர் மருந்து - அன் னம்; பசிநோயால் வருந்தாவண்ணம் உயிர்களைப் பாதுகாத்தலின், இஃது இங் ஙனங் கூறப்பட்டது; "அகன்சுரைப் பெய்த வாருயிர் மருந்து" என்பர் பின் னும்; ௧௧-ம் காதை, ௧௧௭. சோற்றை யும் தண்ணீரையும் இருமருந்தென்பர் கோவூர்கிழார்; இதனை, புறநானூறு, ௭௦ - ம் பாட்டிற்காண்க.

௪௯. கையகம் - கையிடத்தை.

௫௦. தானென்றது - அன்னத்தை. தான்றொலை வறியா' என்றும் பாடம்.

௫௧. கோதை - விளி. 'நறைமலர்க் கோதை' என்றும் பாடம்.

௫௨. இதன்றிறம் - இப்பாத்திரத்தின் வரலாறு. இதன்றிறததை அறவணன் பாற்கேட்குவை.

௫௩. அவள் - தீவதிலகை. இளங் கொடி - மணிமேகலை.

௫௪. தொழுதனள் வணங்கி - கைகு வித்து வந்தித்து.

௫௬. கொள்கையின் நிற்றலும் - நிய மத்தோடு மணிமேகலைநிற்றலும்.

௫௭. எழுந்து - கோமுகியிலிருந்து எழுந்து. இளங்கொடி - மணிமேகலை.

௫௭ - ௫௮. பாத்திரம் எழுந்து இளங் கொடியினுடைய செங்கையிற்புகுத லும்.

௬௦. மாத்திரையின்றி - அளவின்றி.

௬௧. 'மாரனை' என்பது முதலியன, பாத்திரம்பெற்ற மகிழ்ச்சியால் மணிமே கலை புத்தனைக் குறித்துச் செய்யுந் துதி கள். 'மாரன்' என்பதற்குப் பொருள், ௫ - ம் காதை, ௭௭ - ம் அடிக்குறிப்பிற் காணக.

௬௨. ௫ - ம் காதை, ௧௦௩. தீ நெறிக் கடும்பகை - கொடிய வழிகளாகிய மிக்க

பிறர்க்கற முயலும் பெரியோய் நின்னடி
துறக்கம் வேண்டாத் தொல்லோய் நின்னடி
யெண்பிறக் கொழிய விறந்தோய் நின்னடி
கண்பிறர்க் களிக்குங் கண்ணோய் நின்னடி
தீமொழிக் கடைத்த செவியோய் நின்னடி
வாய்மொழி சிறந்த நாவோய் நின்னடி

---

பகையை; காமமுதலியவற்றை 'அரிஷட் வர்க்கம்' என்றும், 'வைரி' என்றும் வடநூலார் கூறுதல்போலத் தீநெறியைக் கடும்பகையென்றார். 'கடப்போய் நின்னடி' என்றும் பாடம்.

௬௩. பிறர்க்கு அறம் முயலும் பெரியோய் - மற்றையோர்க்குப் புண்ணியமுண்டாதற்கு முயலுகின்ற பெரியோனே; இப்படியே "பிறர்க்கற மருளும பெரியோன்" என்பர் பின்னும்; ௨௧-ம் காதை, ௪௭௮. போதிவிருட்சத்தினடியிற் புத்தனுக்கு ஞானோதயமானபொழுது மாரன் அவனைநோக்கி 'நீ இப்பொழுதே நிருவாணமடை' என்றுசொல்ல, புத்தன் மயங்குகையில், பிரஹ்மதேவர்வந்து 'நீ இப்பொழுது அடைய வேண்டாம்; நீ யறிந்த தருமத்தை உபதேசித்து நிருவாணமடைதற்குரியவழியை எல்லோர்க்குங் காட்டிவிட்டு அப்பாற் செல்க' என்றலின், புத்தன் தருமோபதேசஞ் செய்யத்தொடங்கினனென்று புத்தசரிதத்தால் தெரிகின்றது.

௬௪. துறக்கம் - சுவர்க்கம். அழிவற்ற நிருவாணமே அவனால் விரும்பப்பட்டமையின், அழிதன் மாலையதாயதுறக்கம் வேண்டப்படாததாயிற்று.

௬௫. எண் பிறக்கு ஒழிய இறந்தோய் - மாந்தர்களுடைய எண்ணங்கள் எட்டாமற் பின்னே கிடக்கும்படி மேற்பட்ட நிலையிற் சென்றோனே; பிறக்கு - பின்; "துறைபிறக் கொழியப் போகி" என்பது பெரும்பாணாற்றுப்படை, ௩௫௧; "முதிர்காய் வள்ளியங் காடுபிறக் கொழிய" என்பது முல்லைப்பாட்டு, ௧௦௧. இறத்தல் - கடத்தல். 'இருந்தோய் நின்னடி' என்றும் பாடம்.

௬௬. பிறர்க்குக் கண் அளிக்குங் கண்ணோய் - உயிர்களுக்கு ஞானத்தை யருளிச்செய்த ஞானியே; கண் - ஈண்டு ஞானம். புத்தன் பலர்க்குத் தருமோபதேசஞ்செய்த ஆசிரியனாதலின், இங்ஙனங்கூறினார். இனி, உலோகோபகாரத்திற்காகப் புத்தனெடுத்த அநேக ஜாதகங்களுள், ஒன்றில் இவன் கொடையைப் பரிசோதிக்கவெண்ணி, இந்திரன்வந்து இரண்டுகண்களையுங் கேட்டபொழுது இவன் அவற்றைக் கொடுத்தானென்பராகலின், இதற்கு இந்திரனுக்குக் கண்ணைக்கொடுத்தோயென்று பொருள்கூறினும் பொருந்தும். இதனைப் பின்வரும் பாடல்களாலுணர்க. "விண்ணவர் நாயகன் வேண்டக், கண்ணினி தளித்த காதற், புண்ணிய னிருந்த போதி, நணணிட நோய்நலி யாவே". இது வீரசோழியம், யாப்புப்படலம், ௩-ம் கலித்துறையின் உதாரணம். "கண்கொடுத்தான் றடிகொடுத்தான் கயப்புலிக்குத் தற்கொடுத்தான், பெண்கொடுத்தா னுடம்பினையும் பிளந்திட்டுப் பிறர்க்கீந்தான, மண்கொடுத்தான் மகக்கொடுத்தான் மன்னுந்தற் சேர்ந்தார்க்கு, விண்கொடுத்தா னவன்கொடுத்த விரித்துரைப்பன் கேளென்றாள்" இது நீலகேசி. "மிக்கதனங் களைமாரி மூன்றும் பெய்யும் வெங்கனிற்றை மிகுசிந்தா மணியை மேனி, யொக்கவரிந் தொருகூற்றை யிரண்டு கண்ணை யொளிதிகழுந் திருமுடியை யுடம்பி லூனை, யெக்கிவிழுங் குருதிதனை யரசு தன்னை யின்னுயிர்போற் றேவியையீன் றெடுத்த செல்வ, மக்களை வந் திரந்தவர்க்கு மகிழ்ந்தே யீயும் வானவர்தா முறைந்தபதி மாணு லூரே" இது நீலகேசிவிருத்திசமயதிவாகரத்திற் கண்டசெய்யுள்.

௬௭. தீமொழி - பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல் என்பன; மொழிக்கு - சொல்லைக் கேளாதிருத்தற்கு.

௬௮. வாய்மொழி - சத்தியம்.

நரகர் துயர்கெட நடப்போய் நின்னடி
யுரகர் துயர மொழிப்போய் நின்னடி
வணங்குத லல்லது வாழ்த்தலென் னாவிற்
கடங்கா தென்ற வாயிழை முன்னர்ப்
போதி நீழற் பொருந்தித் தோன்று
நாதன் பாத நவைகெட வேத்தித்
தீவ திலகை சேயிழைக் குரைக்குங்
குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும்
பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉ

௬௯. நரகர்களிற்சிலர்க்குக் கிலேசசாந்தி செய்வித்தற்பொருட்டு மனமிரங்கி ஒருஜாதகத்திற் புத்தன் நரகலோகத்திற்குச் சென்றானென்பராதலின், இங்ஙனங்கூறினார்; "அருவினை சிலர்கெட வொருபெரு நரகிடை, யெரிசுடர் மரைமல ரெனவிடு மடியினை" என்று வருதல் காண்க; இது, **வீரசோழியம்**, யாப்புப் படலம், ௧௧-ம் கலித்துறையினுதாரணம்.

௭௦. உரகர் - நாகர்; நாகர்களுக்குக் கருடனாலுண்டாகிய துன்பம் நீங்கும் பொருட்டு அவனுக்குத் தயாதர்மத்தை உபதேசஞ்செய்து அவனால் அவர்களுக்கு அமிர்தங்கிடைக்கும்படி புத்தன் செய்தானென்பது ஒருஜாதககதை. இதனைப் பின்னுள்ளசெய்யுட்களாலறிக; "மீதியல கருடனை விடவர வொடுபகை விதிமுறை கெடவறம் வெளியுற வருளினை.", "பொற்புடை நாகர்தந் துயரம் போக்கினை", "பைந்நாகர் குலமுய்ய வாயமிழ்தம் பகர்ந்தனையே.", "ஆரமிழ்த மணிநாகர் குலமுய்ய வருளினையே, வார்சிறைப்புள் ளரையற்கும் வாய்மைநெறி பகர்ந்தனையே." இவை, **வீரசோழியம்**, யாப்புப்படலம், ௧௧-ம் கலித்துறையினுதாரணங்கள். தயையைப் புலப்படுத்துதலையே பயனாகநினைந்து ஸ்ரீஹர்ஷகவியென்பவரால் வடமொழியிற் செய்யப்பட்டுள்ளதாகிய ஜீமூதவாகனன் சரிதமாயுள்ள **நாகாநந்த**மென்னு நாடகத்தை உற்றுநோக்கின், அது, ஈண்டுக்கூறிய புத்தஜாதககதையின் வழிப்பட்டதாக யாவருக்கும் நன்குவிளங்கும்.

௭௧-௭௨. வாழ்த்தல் அடங்காது; இப்படியே "ஆயிர வாரத் தாழியன் றிருந்தடி, நாவா யிரமிலே னேத்துவ தெவன்" என்று மூன்றும்வந்திருத்தல்காண்க. ௫-ம் காதை, ௧௦௪-௧௦௫.

௭௩. போதி - அரசமரம்.

௭௪. புத்தனை நாதனென்றல் மரபு; இதனை, "நவையறு நாத னல்லறம் பகர்வோர்" (௨௮-ம் காதை, ௭௧), எனவும், "நாத னல்லறங் கேட்டலை விரும்பி" (௨௮-ம் காதை, ௮௯) எனவும் இந்நூலுள்ளே பின்வருவனவற்றாலுணர்க. புத்தர்களிற் சிலர் தேவர்களையும நாதரெனபதுண்டு. நவை - குற்றம்.

௭௫. சேயிழைக்கு உரைக்கும் - மணிமேகலைக்குத் தீவதிலகை சொல்லுவாள்.

இனிப் பசியின கொடுமை கூறப்படுகின்றது.

பின்வரும் "பசிப்பிணி யென்னும் பாவி" (௮௦-ம் அடி) என்பதனை 'அழிக்கும்' (௭௬) என்பதுமுதலிய முற்றுவினைகளோடு தனித்தனியேகூட்டுக.

௭௬. குடிப்பிறப்பு அழிக்கும் - பசி தன்னாற்பற்றப்பட்டாருடைய உயர்குடிப்பிறப்பைக்கெடுக்கும்; அக்குடியிலிருந்த முன்னோர்களுக்கில்லாத இழிந்த செயல்களை அவர்களிடத்து உளவாக்கலான் இவ்வாறு கூறப்பட்டது; "தொலவரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக, நல்குர வென்னு நசை" என்பது **திருக்குறள்**, ௧௦௪௩. விழுப்பங் கொல்லும - சிறப்பினைவருத்தும்.

௭௭. கல்விப் பெரும்புணை விடூஉம் - கல்வியாகிய பெரிய தெப்பத்தை நீக்கும்; "நற்பொரு ணன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார், சொற்பொருள் சோர்வுபடும்" (**திருக்குறள்**, ௧௦௪௬.) எனவும், "பிறந்த குலமாயும பேராண்மை மாயுஞ், சிறந்ததங் கல்வியு மாயும்" (**நாலடி**

நாணணி களையு மாண்ணெழில் சிதைக்கும்
பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்
பசிப்பிணி யென்னும் பாவியது தீர்த்தோ
ரிசைச்சொ லளவைக் கென்னா நிமிராது
புன்மரம் புகையப் புகையழற் பொங்கி
மன்னுயிர் மடிய மழைவளங் கரத்தலி
னரசுதலை நீங்கிய வருமறை யந்தண
னிருநில மருங்கின் யாங்கணுந் திரிவோ
னரும்பசி களைய வாற்றுவது காணான்
றிருந்தா நாயூன் றின்னுத லுறுவோ
னிந்திர சிறப்புச் செய்வோன் முன்னர்
வந்து தோன்றிய வானவர் பெருந்தகை
மழைவளந் தருதலின் மன்னுயி ரோங்கிப்
பிழையா விளையுளும் பெருகிய தன்றே

---

யார், இன்மை, (கு) எனவும் வருதல் காண்க.

எஅ. நாண் அணி களையும் - நாணாகிய ஆபரணத்தை நீக்கும்; அழகுசெய்தலின், நாணுடைமை அணியெனப்பட்டது: "அணியன்றோ நாணுடைமை சான்றோர்க்கு" என்பது திருக்குறள், ௧0௧௪.

அ0. பண்பிற்குப் பண்பு இலலையேனும் தன்னாற் சாரப்பட்டாரிடத்துள்ள எல்லா நன்மைகளையும் அழித்தற்கொடுமைபற்றிப் பசியைப் பாவியென்றார்; இப்படியே "இன்மை யெனவொரு பாவி" என்றுவருதல் காண்க; இது திருக்குறள், ௧0௪௨. அது - அப்பசியை.

அக. இசை-புகழ். அளவைக்கு - அளத்தற்கு. என் நா நிமிராது - எனது நா எழமாட்டாது. நிமிர்தல் - பேசுதற்கு முயறல். உபகாரிகளின்புகழ் அளவுபடாதென்றபடி.

பசி யாரையும் வருத்தி வேறுபாடுறுவிக்குமென்பதற்கு உதாரணமாக விச்வாமித்திரமுனிவர் வறட்காலமொன்றில் நாயூன் தின்பதற்கு முயன்றதைத் தேவி இலகை இனிச்சொல்லுவாள்.

அ௩. மழை வளம் கரத்தலின் - மழையாகிய செல்வம் மறைந்துபோனமையால்.

அ௪. விச்வாமித்திரமுனிவர்.

அ௬. அரும்பசி-தீர்த்தற்கரிய பசியை. ஆற்றுவது காணான் - தணித்தற்குரிய உணவு யாதொன்றையும் காணாகி.

அ௭. விச்வாமித்திரமுனிவர் பசியின கொடுமையால் நாயூன் தின்பதற்கு முயன்றாரென்பதை மனுஸ்மிருதி, ௧0 - ம அத்தியாயம், ௧0அ - ம் சுலோகத்திற காண்க.

அஅ. இந்திரசிறப்பு - பலியிடுதல (=வைச்வதேவம்); இது மற்றைத்தேவர்களுக்கும் உரித்தெனினும் தலைமைபற்றி 'இந்திரசிறப்பு' எனப்பட்டது; உணபதற்குமுன்பு இதனைச் செய்தலவேண்டுமென்பது விதி.

அ௯. வானவர் பெருந்தகை - இந்திரன்.

௯0. 'மன்னுயிரோம்பி' என்றும பாடம்.

௯௧. பிழையா விளையுள் - தப்பாதவிளைவு; "வேலி, யாயிரம் விளையுட் டாக" என்பது பொருநராற்றுப்படை, ௨௪௬ - ௨௪௭; "வெள்ளமா றாது விளையுள் பெருக" என்பது மதுரைக்காஞ்சி, ௧0௯.

அ௩ - ௯௧. மழைவளங் கரத்தலின், அந்தணன் திரிவோன் காணான் உறுவோன செய்வோன் முன்னர் வந்துதோனறிய பெருந்தகை தருதலின், ஓங்கிப் பெருகியதன்றே.

வாற்றுநர்க் களிப்போ ரறவிலை பகர்வோ
ராற்றா மாக்க ளரும்பசி களைவோர்
மேற்றே யுலகின் மெய்ந்நெறி வாழ்க்கை
மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லா
முண்டி கொடுத்தோ ருயிர்கொடுத் தோரே
யுயிர்க்கொடை பூண்ட வுரவோ யாகிக்
கயக்கறு நல்லறங் கண்டனை யென்றலும்
விட்ட பிறப்பில்யான் விரும்பிய காதலன்
றிட்டி விடமுணச் செல்லுயிர் போவுழி
யுயிரொடு வேவே னுணர்வொழி காலத்து
வெயில்விளங் கமயத்து விளங்கித் தோன்றிய
சாது சக்கரன் றனையா னூட்டிய
காலம் போல்வதோர் கனாமயக் குற்றே
னாங்கதன் பயனே யாருயிர் மருந்தா
யீங்கிப் பாத்திர மென்கைப் புகுந்தது

---

௯௨. ஆற்றுநர்க்கு - பொறுக்கும் வன்மையையுடையோராகிய செல்வர்க்கு; ஆற்றுநர்க்களிப்போர் பயன் கருதிச் செய்வோராகின்றமையின், 'அறவிலைபகர்வோர்' என்றார். "இம்மைச் செய்தது மறுமைக் காமெனு, மறவிலை வாணிக னாஅ யல்லன்" என்பது புறநானூறு, ௧௩௪.

௯௩. ஆற்றாமாக்கள் - தரித்திரர். "எற்றைக்கு மாற்றாமை யென்னுந் தாம்வளையா, தாற்றாதார்க் கீவதா மாண்கடன்" என்பது நாலடியார், ஈகை, ௮.

௯௪. மேற்று - மேலது.

௯௩-௯௪. வாழ்க்கை களைவோர் மேற்று.

௯௨-௯௪. இவ்வடிகளின் கருத்து "எமக்கீவோர் பிறர்க்கீவோர், பிறர்க்கீவோர் தமக்கீபவென, வனைத்துரைத்தனன் யானாக" என்பதில் வந்திருத்தல் காண்க; இது புறநானூறு, ௧௩௬.

௯௫. மண்டிணி ஞாலத்து - அணுக்கள் செறிந்த நிலவுலகத்தில்; "மண்டிணிந்தநிலனும்" என்பது புறநானூறு, ௨.

௯௬. புறநானூறு, (௧௮) ௧௯-ம் அடி.

௯௭. உயிர்க்கொடை - உயிரைக்கொடுத்தல். உரவோயாகி - வலிய அறிவினையுடையோயாகி.

௯௮. கயக்கு - கயங்குதல் (=கசங்குதல்); "கயக்கறு மாக்கள் கடிந்தனர் கேளாய்" என்பர் பின்னும்; ௧௬-ம் காதை, ௮௫. 'கண்டனை' என்றது, தெளிவுபற்றி. என்றலும் - என்று தீவதிலகை சொல்லலும்.

௯௯. விட்டபிறப்பு - போனபிறப்பு. காதலன் - கணவன்; அவன் இராகுலன்.

௧௦௦. திட்டிவிடமுண - திருஷ்டிவிஷமெனனும் பாம்புதீண்ட; ௯-ம் காதை, ௪௯-ம் வரிக் குறிப்பைப்பார்க்க. உயிர்போவுழி - உயிர்போனவிடத்து.

௯௯-௧௦௦. காதலன் உயிர்போவுழி.

௧௦௧. உயிரொடு வேவேன் - அவன் பிரிவாற்றாது தீயிற்பாய்ந்து உயிரொடு வேவாநிற்பேன். வேவேன் - பெயர்.

௧௦௦-௧௦௧. ௯-ம் காதை, ௪௯-௫௦.

௧௦௨. ௫-ம் காதை, ௯௦; ௧௧-ம் காதை, ௧௦௨.

௧௦௩. ஊட்டிய - உண்ணச்செய்த.

௧௦௪. கனாமயக்குற்றேன் - கனவாகிய மயக்கத்தையடைந்தேன்.

௯௯-௧௦௪. காதலன் உயிர்போவுழி வேவேன் உணர்வொழிகாலத்துக் கனாமயக்குற்றேன்.

௧௦௫. அதன் - அக்கனவின்.

௧௦௫-௧௦௬. உயிர் உடம்பினீங்கும் பொழுதுள்ள நினைப்பின்பயனே மறுபிற

நாவலொடு பெயரிய மாபெருந் தீவத்து
வித்தி நல்லறம் விளைந்த வதன்பயன்
றுய்ப்போர் தம்மனைத் துணிச்சித ருடுத்து
வயிறுகாய் பெரும்பசி யலைத்தற் கிரங்கி
வெயிலென முனியாது புயலென மடியாது
புறங்கடை நின்று புன்கண் கூர்ந்துமு
னறங்கடை நில்லா தயர்வோர் பலரா
லீன்ற குழவி முகங்கண் டிரங்கித்
தீம்பால் சுரப்போ டன்முலை போன்றே
நெஞ்சு வழிப்படூஉம் விஞ்சைப் பாத்திரத்
தகன்சுரைப் பெய்த வாருயிர் மருந்தவர்
முகங்கண்டு சுரத்தல் காண்டல் வேட்கையே, னென
மறந்தே னதன்றிற நீயெடுத் துரைத்தனை
யறங்கரி யாக வருள்சுரந் தூட்டுஞ்

---

ப்பில் அவ்வுயிர் அடையுமென்பது தொன்னூற்றுணிபாதலின் இங்ஙனங்கூறினுள்; கச-ம் காதை, க0க-க0ச. இக்கருத்தை, "பிறப்பென்னும் பேதைமை" என்கிற கூருஅ-ம் திருக்குறளுக்குப் பரிமேலழகரெழுதிய விசேடவுரையாலுமுணர்க.

க0எ. சம்புத்தீவில்.

க0அ. நல்லறத்தை வித்தி. 'வித்திய நல்லறம்' என்றும் பாடம். பயன் - பயனை; என்றது பலவகைத்தாகிய செல்வத்தை.

க0கூ. துய்ப்போர் தம்மனை - அனுபவிக்கும் செல்வருடைய வீட்டில், துணிச்சிதருடுத்து-கிழிந்த சீரைகளை உடுத்திக்கொண்டு. சிதர் - சிதாரெனவும் வழங்கும்.

ககக. முனியாது - வெறுக்காமல். புயலென மடியாது - மழையென்று ஓரிடத்தில் தங்காமல்; மடிதல் - தங்குதல்; "மல்லற் பேரூர் மடியின்" என்பது பெரும்பாணாற்றுப்படை, உருச.

ககஉ. புறங்கடைநின்று - தலைவாயிலில் நின்றுகொண்டு, புன்கண் கூர்ந்து - துன்பமிகுந்து; "அகத்தாரே வாழ்வாரென் றண்ணாந்து நோக்கிப், புகத்தாம் பெறாஅர் புறங்கடை பற்றி, மிகத்தாம் வருந்தி யிருப்பரே மேலைத், தவத்தாற் றவஞ்செய்யா தார்." என்பது நாலடியார், அறன்வலியுறுத்தல், க.

ககஉ - ககங. முன் அறங்கடை - முற்பிறப்பிற்செய்த பாவத்தால், நில்லாது - ஓரிடத்தில் நில்லாது. அறத்தினீக்கப்பட்டமையின், பாவம் அறங்கடையெனப்பட்டது; "அறன்கடை நின்றாருளெல்லாம்" என்பது திருக்குறள், கசஉ.

ககரு. சுரப்போள் - தாய்.

ககசு. நெஞ்சுவழிப் படூஉம் - மனத்தின்வழியே யொழுகும். விஞ்சை - வித்தை.

ககஎ. சுரை - ஈண்டுப்பாத்திரத்தில உள்ளீடில்லாது குழிந்தபாகம்.

ககஎ - ககஅ. அவர்முகங்கண்டு - மேற்கூறிய பசியாளர்களுடைய வாடியமுகங்கண்டு. வேட்கை - விருப்பம். என - என்று மணிமேகலை சொல்ல.

கககூ. அதன் திறம் - அப்பாத்திரத்தின் வரலாற்றை. அதன்றிறமறந்தேன்.

கஉ0. அறம்கரியாக - தருமமேசான்றாக. அருள் - 'ஒன்றின் துயர்கண்டால் காரணமின்றித் தோன்றும் இரக்கம்' என்பர், புறநானூற்று உரையாசிரியர்; இதனை, புறநானூறு, ரு-ம் பாட்டின் விசேடவுரையிற் காண்க; 'தொடர்புபற்றாது இயல்பாக எல்லாவுயிர்கண்மேலுஞ் செல்வது' என்பர் பரிமேலழகர்; இதனை, திருக்குறள் உரு-ம் அதிகாரம் அருளுடைமையின் அவதாரிகையிற்காண்க.

சிறந்தோர்க் கல்லது செவ்வனஞ் சுரவா
தாங்கன மாயினை யதன்பய னறிந்தனை
யீங்குநின் றெழுவா யென்றவ ளுரைப்பத்
தீவ திலகை தன்னடி வணங்கி
மாபெரும் பாத்திர மலர்க்கையி னேந்திக்
கோமகன் பீடிகை தொழுதுவலங் கொண்டு
வானூ டெழுந்து மணிமே கலைதான்
வழுவறு தெய்வம் வாய்மையி னுரைத்த
வெழுநாள் வந்த தென்மகள் வாராள்
வழுவா யுண்டென மயங்குவோண் முன்னர்
வந்து தோன்றி யவர்மயக் கங்களைந்
தந்தி லவர்க்கோ ரற்புதங் கூறு
மிரவி வன்ம னொருபெரு மகளே
துரகதத் தானைத் துச்சயன் றேவி
யமுத பதிவயிற் றரிதிற் றோன்றித்
தவ்வைய ராகிய தாரையும் வீரையு
மவ்வைய ராயினீர் நும்மடி தொழுதேன்
வாய்வ தாக மானிட யாக்கையிற்
றீவினை யறுக்குஞ் செய்தவ நுமக்கிங்
கறவண வடிக டம்பாற் பெறுமின்
செறிதொடி நல்லீ ரும்பிறப் பீங்கிஃ

---

கoக. (பாத்திரம்) சுரவாது.

கoஉ. ஆங்கனமாயினை - அறங்கரியாக அருள்சுரந்தூட்டும் அத்தனமையையுடையாயாயினை. 'அவர்முகங்கண்டு சுரத்தல் காண்டல் வேட்கையேன்' என்று முன்பு கூறியதனால, 'அதன்பயனறிந்தனை' என்றாள்.

கoக. அவள் - தீவதிலகை.

கoசு. கோமகன் பீடிகை - புத்தனுடைய பாதபீடிகை.

கoஅ. தெய்வம்-மணிமேகலாதெய்வம்.

ககo. வழுவாய் - தப்புதல். என - என்று நினைத்து. 'வழுவா லுண்டென மயங்குவோள்' என்றும் பாடம். மயங்குவோள் - சுதமதி.

ககக. சுதமதியோடு மாதவியையும் உளப்படுத்தி 'அவர்' என்றார்.

ககஉ. அந்தில் - அவ்விடத்து. அற்புதம் - ஆச்சரியம். கூறும் - மணிமேகலை சொல்லுவாள்.

கoஎ - ககஉ. மணிமேகலைதான், மயங்குவோண் முன்னர் வந்து தோன்றிக் களைந்து அவர்க்கு ஓர் அற்புதங்கூறும்.

ககச. தேவியென்றது சுதமதியை.

ககக - ககச. எ-ம் காதை, கஅ - கக.

ககசு. தவ்வையர் - தமக்கைமார்.

ககரு - ககசு. 'தோன்றியெண், றவ்வையராகிய' என்றும் பாடம்.

ககஎ. அவ்வையர் - தாய்மார்.

ககஅ - ககக. வாய்வதாக-வாய்ப்புடைத்தாகுக. செய்தவம் நுமக்கு வாய்வதாக வென்க. "வாய்வ தாகநின் மனப்பாட்டறம்" என்பர் பின்னும்; உக-ம் காதை, களக; "வாய்வதின் வந்த குரவை" என்பது சிலப்பதிகாரம், துன்பமாலை; "வாய்வதிற் - றந்தையுந் தாயுந் தொழுதெழுக" என்பது ஆசாரக்கோவை, கு.

கஉo - கஉக. உம்பிறப்பின்வரலாற்றை அறவணவடிகளிடம் அறிந்துகொள்ளுமின்.

ஆபுத் திரன்கை யமுத சுரபியெனு
மாபெரும் பாத்திர நீயிருந் தொழுமெனத்
தொழுதன ரேத்திய தூமொழி யாரொடும்
பழுதறு மாதவன் பாதம் படர்கே
மெழுகென வெழுந்தன ளிளங்கொடி தானென.

பாத்திரம்பெற்றகாதை முற்றிற்று.

---

௧௪௧-௧௪௩. இஃது, ஆபுத்திரன் கையிலிருந்த அமுதசுரபியெனப்படுகின்ற மிகச்சிறந்துள்ள பாத்திரம்; இதனை நீருந் தொழுமினென்று மணிமேகலை சொல்ல.

௧௪௪. தூமொழியார் - சுதமதியும் மாதவியும்.

௧௪௫. பழுது - குற்றம்; இனி, **சிலப்பதிகாரம்**, ஊர்சூழ்வரியில் "பழுதொழிந் தெழுந்திருந்தான்" என்பதில் 'பழுது' என்பதற்கு உடம்பென்று **அடியார்க்குநல்லார்** பொருள்செய்திருத்தலால், இங்கே பழுதறு மாதவனென்பதற்கு உடற்பற்றொழிந்த அறவணவடிகளென்று பொருள்கூறினும் பொருந்தும்; "செய்தவ யாக்கையின், மேவினே னாயினும் வீழ்கதிர் போன்றேன்" என்று அறவணவடிகள் கூறியதாகப் பின்பு கூறுதல்காண்க; ௨௪-ம் காதை, ௧௦௧-௧௦௨. படர்கேம் - செல்லுவேம்.

௧௪௬. இளங்கொடி - மணிமேகலை. இளங்கொடி, நீர் எழுகவென்றுசொல்லி எழுந்தனளென்க.

௧-௧௪௬. மணிபல்லவத்தில் தெய்வம் நீங்கியபின்னர் மணிமேகலை தாழ்ந்து நோக்கித் திரிய, தீவதிலகை தோன்றி 'யார் நீ' என்றலும், 'கேளாய், என்வரவு ஈது, பயன் இது, அன்னாய், நீயார்' என்றலும், தீவதிலகை உரைக்கும்; அங்ஙனமுரைப்பவள், என்றுரைத்தலும், மணிமேகலை விரும்பிப் பீடிகையைத் தொழுது வணங்கிக் கூடி வலஞ்செய்து நிற்றலும், அவள்கையிற் பாத்திரம் புகுந்தது; புகுந்தலும், மகிழ்வெய்தி 'வாழ்த்தல் என்னாவிற்கடங்காது' என்றுள, என்ற மணிமேகலையின் முன்னர்த் தீவதிலகை யுரைக்கும்; அங்ஙனமுரைப்பவள் 'கண்டனை' என்றலும், மணிமேகலை 'காண்டல் வேட்கையேன்' என, அவளுரைப்ப, மணிமேகலை வணங்கி எதிர்கொண்டு எழுந்து மயங்குவோள் முன்னர் வந்துதோன்றிக் கிளந்து கூறும்; அங்ஙனங்கூறுகின்றவள், தொழுமென, தொழுதேத்திய அவரொடும், இளங்கொடி எழுந்தனளென வினைமுடிவு செய்க.

பன்னிரண்டாவது

# அறவணர்த்தொழுதகாதை.

[பன்னிரண்டாவது மணிமேகலை பாத்திரங்கொண்டு தன்னூர் அறவணர்த்தொழுதபாட்டு.]

ஆங்கவர் தம்முடை னறவண வடிகள்
யாங்குள ரென்றே யிளங்கொடி வினாஅய்
நரைமுதிர் யாக்கை நடுங்கா நாவி
னுரைமூ தாள னுறைவிடங் குறுகி
மைம்மலர்க் குழலி மாதவன் றிருந்தடி
மும்முறை வணங்கி முறையுளி யேத்திப்
புதுமலர்ச் சோலை பொருந்திய வண்ணமு
முதய குமரனுங் குற்றுரை செய்தது
மணிமே கலாதெய்வ மணிபல் லவத்திடை
யணியிழை தன்னை யகற்றிய வண்ணமு
மாங்கத் தீவகத் தறவோ னாசன
நீங்கிய பிறப்பு நேரிழைக் களித்தது
மளித்த பிறப்பி னாகிய கணவனைக்
களிக்கய னெடுங்கட் கடவுளிற் பெற்றதுந்
தவ்வைய ராகிய தாரையும் வீரையும்
வெவ்வினை யுருப்ப விளிந்துகே டெய்தி

---

௧. அவா - சுதமதி மாதவி.
௨. இளங்கொடி - மணிமேகலை. வினாஅய்=வினாவி - கேட்டுக்கொண்டு.
௪. உரைமூதாளன் - அறவணவடிகள். குறுகி - அடைந்து.
௩ - ௪. ௨௪ - ம் காதை, ௧௧ - ௧00; "நரைமூ தாளர்" என்பது புறநானூறு, ௫௨.
௫. குழலி - மணிமேகலை.
௬. முறையுளி - விதிப்படி.
மேல்வருவன மணிமேகலை வார்த்தை.
௭. சோலை - உவவனம்.
௧0. அணியிழை - எழுவாய்.
௧௧ - ௧௨. ஆசனம் பிறப்பை அளித்ததும்.
௧௪. கடவுளின் - மணிமேகலாதெய்வத்தால்.
௧௫ - ௧௬. வீரை மதுமயக்கத்தால யானைக்குமுன்னே சென்றும், தாரை நிலாமுற்றத்தின்மேல் ஏறி வீழ்ந்தும் இறந்தமையால், 'தாரையும் வீரையும், வெவ்வினை யுருப்ப விளிந்து' என்றார்; ௧௨ - ம் காதை, ௪௫ - ௪௮.

மாதவி யாகியுஞ் சுதமதி யாகியுங்
கோதையஞ் சாய னின்னொடுங் கூடின
ராங்கவர் தந்திற மறவணன் றன்பாற்
பூங்கொடி நல்லாய் கேளென் றுரைத்தது
முரைத்த பூங்கொடி யொருமூன்று மந்திரந்
தனக்குரை செய்துதா னேகிய வண்ணமுந்
தெய்வம் போயபின் றீவ திலகையு
மையெனத் தோன்றி யருளொடு மடைந்தது
மடைந்த தெய்வ மாபுத் திரன்கை
வணங்குறு பாத்திரம் வாய்மையி னளித்தது
மாபுத் திரன்றிற மறவணன் றன்பாற்
கேளென் றுரைத்துக் கிளரொளி மாதெய்வம்
போகென மடந்தை போந்த வண்ணமு
மாதவன் றன்னை வணங்கின ளுரைத்தலு
மணிமே கலையுரை மாதவன் கேட்டுத்
தணியா வின்பந் தலைத்தலை மேல்வரப்
பொற்றொடி மாதர் நற்றிறஞ் சிறக்க
வுற்றுணர் வாய்நீ யிவர்திற முரைக்கே
னின்னொடுந் தெய்வ நினக்கெடுத் துரைத்த
வந்நா ளன்றியு மருவினை கழூஉ
மாதி முதல்வ னடியிணை யாகிய
பாதபங் கயமலை பரவிச் செல்வேன்
கச்சய மாளுங் கழற்கால் வேந்தன்
றுச்சயன் றன்னையோர் சூழ்பொழிற் கண்டேன்
மாபெருந் தானை மன்ன நின்னொடுங்

---

௧௭ - ௧௮. ௧௦ - ம் காதை, ௭௩ - ௭௪.

௧௯. திறம் - வரலாறு.

௨௧. பூங்கொடி - மணிமேகலாதெய்வம். மூன்றுமந்திரம்-வேற்றுரு அடைவிப்பதும், ஆகாயத்தில் திரியச்செய்வதும், பசியை நீக்குவதும்; ௧௦-ம் காதை, ௮௦ - ௯௧.

௨௪. ஐயெனத் தோன்றி - விரைவாகத்தோன்றி.

௨௫. தெய்வம் - தீவதிலகை.

௨௭ - ௨௮. ௧௧ - ம் காதை, ௫௨. 'கேளென் றுரைத்த' என்றும் பாடம்.

௨௯. போக என - போவாயென்று சொல்ல.

௩௨. தலைத்தலை மேல்வர:—௨-ம் காதை, ௫.

மேல்வருவன அறவணவடிகளுடைய வார்த்தை.

௩௩. மாதர் - விளி. நற்றிறம் - நல்ல கூறுபாடுகள்.

௩௪. உரைக்கேன் - உரைப்பேன்.

௩௬. அந்நாள் அன்றியும்-அந்நாளிற் சென்றதல்லாமலும்.

௩௮. பாதபங்கயமலை:—௧௦-ம் காதை, ௯௧ - ௯௮.

௩௮ - ௪௦. செல்வேன் துச்சயனை ஓர் பொழிலிற்கண்டேன்.

## கஉ.—அறவணர்த்தொழுதகாதை.

தேவியர் தமக்குந் தீதின் றோவென
வழிதக வுள்ளமொ டாற்றின னாகி
யொளியிழை மாதர்க் குற்றதை யுரைப்போன்
புதுக்கோள் யானைமுன் போற்றாது சென்று
மதுக்களி மயக்கத்து வீரை மாய்ந்ததூஉ
மாங்கது கேட்டோ ராமிய மேறித்
தாங்காது வீழ்ந்து தாரைசா வுற்றதூஉங்
கழிபெருந் துன்பங் காவல னுரைப்பப்
பழவினைப் பயனீ பரியலென் றெழுந்தே
னாடு கூத்த ரணியே போல
வேற்றோ ரணியொடு வந்தீ ரோவென
மணிமே கலைமுன் மடக்கொடி யார்திறந்
துணிபொருண் மாதவன் சொல்லியு மமையான்
பிறவியு மறவியும் பெற்றியி னுணர்ந்த
நறுமலர்க் கோதாய் நல்கினை கேளாய்
தரும தலைவன் றலைமையி னுரைத்த
பெருமைசா னல்லறம் பெருகா தாகி
யிறுதியி னற்கதி செல்லும் பெருவழி
யறுகையு நெருஞ்சியு மடர்ந்துகண் ணடைத்தாங்குச்
செயிர்வழங்கு தீக்கதி திறந்து கல்லென்
றுயிர்வழங்கு பெருநெறி யொருதிறம் பட்டது

---

சங. 'ஆற்றானாகி' என்றும் பாடம்.

சச. உற்றதை - உற்றதுன்பத்தை.

சரு. புதுக்கோள் யானை - புதிதாகப் பிடித்துக்கொண்டுவரப்பட்ட யானை.

சஎ. அது - வீரைமாய்ந்தது. அரமியம் - நிலாமுற்றம்.

சகூ. கழிபெருந் துன்பம் - மிகப்பெரியதுன்பம்; அவ்விருவரும் இறந்த பெரியதுன்பமுமாம்; கழிதல் - நீங்குதல்.

சசு - சகூ. மாய்ந்ததும் சாவுற்றதுமாகிய துன்பத்தைக் காவலனுரைப்ப.

ருo. பரியல் - வருந்தாதே.

ருக. 'ஆடுங் கூத்திய ரணி' என்றும் பாடம்.

ருக - ருஉ. "ஆடுங் கூத்தர்போ லாருயி ரொருவழிக், கூடிய கோலத் தொருங்குநின் றியலாது" என்பது சிலப்பதிகாரம், நடுகற்காதை, கசுரு - கசுசு.

ருச. அமையான் - தணியானாகி.

ருரு. அறவி - புண்ணியத்தோடு கூடிய வழி.

ருசு. நல்கினை கேளாய் - உவந்துகேளாய்; நல்குதல் - உவத்தல்; "நல்கினு நல்கா னாயினும்" என்பது புறநானூறு. ரு.

ருரு - ருசு. உக-ம் காதை, கoரு - கoசு.

ருஎ. தருமதலைவன் - புத்தன்; இதன் பொருளை, கக-ம் காதை, சுo-ம அடிக்குறிப்பிற்காண்க.

ருகூ. இறுதியில்நற்கதி - நிருவாணம். பெருவழி - தருமம்.

சுo. அறுகை - அறுகம்புல். கண்ணடைத்தாங்கு - இடம் அடைக்கப்பட்டாற்போல.

சுக. செயிர் - குற்றம்.

சுஉ. உயிர்வழங்கு பெருநெறி - பிறந்திறக்கும் உயிர்களெல்லாம் போகும்

தண்பனி விழுங்கிய செங்கதிர் மண்டில
முண்டெனை வுணர்த லல்லதி யாவதுங்
கண்டினிது விளங்காக் காட்சி போன்றது
சலாகை நுழைந்த மணித்துளை யகவையி
னுலாநீர்ப் பெருங்கட லோடா தாயினு
மாங்கத் துளைவழி யுகுநீர் போல
வீங்கு நல்லற மெய்தலு முண்டெனச்
சொல்லலு முண்டியான் சொல்லுதல் தேற்றார்
மல்லன்மா ஞாலத்து மக்களே யாதலிற்
சக்கர வாளத்துத் தேவ ரெல்லாந்
தொக்கொருங் கீண்டித் துடிதலோ கத்து
மிகுகோன் பாதம் விழுந்தன ரிரப்ப
விருள்பரந்து கிடந்த மலர்தலை யுலகத்து
விரிகதிர்ச் செல்வன் றோன்றின னென்ன
வீரெண் ணூற்றோ டீரெட் டாண்டிற்
பேரறி வாளன் றோன்றுமதற் பிற்பாடு
பெருங்குள மருங்கிற் சுருங்கைச் சிறுவழி

---

வழி; **சிலப்பதிகாரம்**, நடுகற்காதை, ௧௭௩ - ௧௭௪. ஒருதிறம்பட்டது - ஒருவழிப்பட்டது.

௬௩. செங்கதிர்மண்டிலம் - சூரியமண்டலம்.

௬௪. யாவதும் - சிறிதும்.

௬௨ - ௬௫. பெருவழி போன்றது.

௬௬. சலாகை - சிறிய நாராசம். அகவையின் - உள்ளிடத்தே.

௭௦. யான்சொல்லலும் உண்டு. தேற்றார் - தெளியார்.

௭௦ - ௭௧. மக்கள் தேற்றாராதலின்.

௭௩. தொக்கு - கூடி. துடிதலோகம் - துஷிதலோகம்; இஃது உலகம் முப்பத்தொன்றனுள் ஒன்பதாவது; மஹாராஜிகலோகமுதலிய தெய்வலோகம் ஆறனுள் நான்காவது.

௭௪. மிக்கோன் - சிறந்ததேவன்; இவன் பெயர் **பிரபாபாலனென்று** சில புத்தநூலால் தெரிகின்றது.

௫௮ - ௭௪. ௩௦ - ம் காதை, ௭ - ௯.

௭௬. செல்வன் - சூரியன்.

௭௫ - ௭௬. "சுடர்வழக் கற்றத் தடுமாறு காலையோ, ரிளவள ஞாயிறு தோன்றிய தென்ன" (௧௦ - ம் காதை, ௧௦ - ௧௧) எனவும், "மைத்திருள் கூர்ந்த மனமாசு தீரப், புத்த ஞாயிறு தோன்றுங் காலை" (௧௨ - ம் காதை, ௮௫ - ௮௬) எனவும், "மறவிரு ளிரிய மன்னுயி ரேமுற, வறவெயில் விரித்தாங் களப்பில் விருத்தியொடு, புத்த ஞாயிறு தோன்றுங் காறும்" (௨௧ - ம் காதை, ௧௬௫ - ௧௬௭) எனவும், "துளக்கமில் புத்த ஞாயிறு தோன்றி" (௨௬ - ம் காதை, ௪௬) எனவும் இந்நூலில் யாண்டும் புத்தன்றோற்றத்திற்குச் சூரியனை உவமைகூறுதல் காண்க.

௭௭. (?)

௭௮. பேரறிவாளன் - புத்தன். பிற்பாடு - பின்னை; இஃது ஒருசொல், "பெண்ணணி கோலம் பெயர்ந்தபிற்பாடு" என்பது **சிலப்பதிகாரம்**, புறஞ்சேரியிறுத்தகாதை, ௧.

௭௬ - ௭௮. தோன்றினனென்னப் பேரறிவாளன் றோன்றுவான்.

௭௯. சுருங்கை - மதகு; இதனைக் கரந்துபடையென்பர் **அடியார்க்குநல்லார்**; **சிலப்பதிகாரம்**, ஊர்காண்காதை, ௬௫-ம் அடி யுரையிற்காண்க. **சிறுவழி** - சிறுவழியில்.

யிருமபெரு நீத்தம் புகுவது போல
வளாவாச் சிறுசெவி யளப்பரு நல்லற
முளமலி யுவகையோ டுயிர்கொளப் புகூஉங்
கதிரோன் றோன்றுங் காலை யாங்கவ
னவிரொளி காட்டு மணியே போன்று
மைத்திருள் கூர்ந்த மனமாசு தீரப்
புத்த ஞாயிறு தோன்றுங் காலைத்
திங்களு ஞாயிறுந் தீங்குறா விளங்கத்
தங்கா நாண்மீன் றகைமையி னடக்கும
வானம் பொய்யாது மாநிலம் வளம்படு
மூனுடை யுயிர்க ளுறுதுயர் காணா
வளிவலங் கொட்கு மாதிரம் வளம்படு
நளியிரு முந்நீர் நலம்பல தரூஉங்
கறவைகன் றார்த்திக் கலநிறை பொழியும
பறவை பயன்றுய்த் துறைபதி நீங்கா
விலங்கு மக்களும வெரூஉப்பகை நீங்குங்
கலங்கஞர் நரகரும் பேயுங் கைவிடுங்

---

௮௦. நீத்தம் - வெள்ளம்.

௮௧. செவி - செவியில்.

௮௨. உயிர் உவகையொடு கொள்ள.

௭௯ - ௮௨. சிறுவழியில் நீத்தம்புகுவதுபோலச் சிறுசெவியில் நல்லறம்புகும்.

௮௩. காலை - காலத்தில்.

௮௪. மணி - சூரியகாந்தம்.

௮௫. மைத்து - கறுத்து.

மேல்வருவன, புத்தன் அவதரிக்குங் காலத்து உளவாகும் நற்குறிகள்.

௮௭. தீங்கு உறாவிளங்க - தீமை உறாமல்விளங்க; விரோதமில்லாமலிருக்கவென்றபடி.

௮௮. நாண்மீன் - நக்ஷத்திரங்கள்.

௮௯. வானம் - மேகம.

௯௦. உடம்புமெலிந்த உயிர்கள் துயரைக்காணா; உடையுயிர் - வினைத்தொகை.

௯௧ வளி வலம் கொட்கும்-காற்று வலமாகச்சுழலும்; "வலமாதிரத்தான் வளிகொட்ப" என்பது **மதுரைக்காஞ்சி**, ௫. மாதிரம் - திசை; மலையுமாம்; "மாதிரங் கொழுக்க" என்பது **மதுரைக்காஞ்சி**, ௪௦.

௯௨. நளி இரு முந்நீர் - நீர்செறிந்த பெரியகடல்; "நளியிரு முந்நீர் நாவாயோட்டி" என்பது **புறநானூறு**, ௬௬. முந்நீர் - எழுவாய். நலம் - "ஓர்க்கோலை சங்க மொளிர்பவளம் வெண்முத்த நீர்ப்படு முப்பிறே டைந்து" என்னும்வளங்கள்.

௯௩. கறவை - கறத்தலையுடைய பசுக்கள், கன்று ஆர்த்தி - கன்றை உண்ணச்செய்து, கலன் நிறை பொழியும் - கறவைக்கலமும் அதனினின்றும் பால்சொரியும்சாலும் வழியும்படி பாலைப்பொழியும்; நிறை - சால்; "பீர்வாய் பரந்த நீரறு நிறைமுதல்" என்பது **பதிற்றுப்பத்து**, இரண்டாம்பத்து, ௫; "கன்றருத்தி மங்கையர் கலநிறை பொழிதர, நினைறமேதி" எனபது சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், ௪௦. கறவைகள் பொழியும்.

௯௪. பறவைகள் நீங்கா. துய்த்து அனுபவித்து; புசித்தென்றுமாம்.

௯௫. மிருகச்சாதியும் மனிதச்சாதியும் தம்முள் அச்சுதற்குக்காரணமாகிய பகைமையை ஒழியும்.

௯௬. அஞர் - துன்பம்; அஞரை நரகச்சாதியும பேய்ச்சாதியும் விட்டொழியும்.

கூனுங் குறளு மூமுஞ் செவிடு
மாவு மருளு மன்னுயிர் பெறாஅ
வந்நாட் பிறந்தவ னருளறங் கேட்டோ
ரின்னாப் பிறவி யிகந்தோ ராதலிற்
போதி மூலம் பொருந்திய சிறப்பி
னாதன் பாத நவைகெட வேத்துதல்
பிறவி தோறு மறவேன் மடக்கொடி
மாதர் நின்னால் வருவன விவ்வூ
ரேது நிகழ்ச்சி யாவும் பலவுள
வாங்கவை நிகழ்ந்த பின்ன ரல்லது
பூங்கொடி மாதர் பொருளுரை பொருந்தா
யாதி முதல்வ னருந்துயர் கெடுக்கும
பாதபங் கயமலை பரசின ராதலி
னீங்கிவ ரிருவரு மிளங்கொடி நின்னோ

---

௯௭. கூன் - வளைவு; ஈண்டு வளைவை யுடைய வடிவத்திற்கு ஆகுபெயர். குறள் - குறுகியவடிவம்; 'மக்களுள் திரக குறியானைக் குறளனென்றும், அவனில் நெடியானைச் சிந்தனென்றும்' கூறுவர் ஆசிரியர் நச்சினார்க்கினியர்; இதனை, தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுளியல், ௪௦-ம் சூத்திரவுரையிற் காண்க. ஊமம் - ஊமை.

௯௮. மா - விலங்குவடிவாகப்பிறப்பது. மருள் - அறிவின்றி மயங்கியிருப்பது. உயிர் - ஈண்டுமக்களுயிர்.

௯௭ - ௯௮. கூன்முதலியவடிவங்களை உயிர்கள் பெறமாட்டா. கூன்முதலிய ஆறனோடு குருட்டையும் மனைபோற்பிறப்பதாகிய பிண்டத்தையுங்கூட்டி எண்வகையெச்சமென்பர்; இதனை, "சிறப்பிற் சிதடு முறுப்பில் பிண்டமுங், கூனுங் குறளு மூமுஞ் செவிடு, மாவு மருளு முளப்பட வாழ்நர்க், கெண்பே ரெச்ச மென்றிவை யெல்லாம், பேதைமையல்ல தூதிய மில்லென" (புறநானூறு, ௨௮) என்பதனாலும், "குறளொடு செவிடு மூங்கை கூன்மருள் குருடு மாவே, யுறுமுறுப் பில்லாப் பிண்ட மோதிய வெண்மெய் யெச்சம்" (சூடாமணி நிகண்டு, பன்னிரண்டாவது, பல்பெயர்க் கூட்டத தொருபெயர்த்தொகுதி, ௯௪) என்பதனாலும் உணர்க.

௯௯. அருளறம் - வினைத்தொகை, தயாதருமமுமாம்.

௧௦௦. இன்னா - துன்பம். இகந்தோர் - கடந்தோர்.

௧௦௨. பாதம் - பாதத்தை. நவை - குற்றம்.

௧௦௨ - ௧௦௩. ஏத்துதலை மறவேன்; மறவேலெனறுமாம்.

௧௦௪. மாதர் - விளி. இவ்வூரில.

௧௦௫. ௨௧-ம் காதை, ௧௯. ஏதுநிகழ்ச்சியென்பதன்பொருளை, ௩௰ம் காதை, ௪-ம் அடிக்குறிப்பிற்காண்க.

௧௦௪ - ௧௦௫. வருவனவாகிய ஏதுநிகழ்ச்சி.

௧௦௭. பொருளுரை - மெய்வார்த்தை. என்றது தருமோபதேச மொழிகளை, "பொய்யில் காட்சியோர் பொருளுரையாதலின்" என்பது சிலப்பதிகாரம், நடுகற்காதை, ௧௯௮. 'பொருளுரைபொருந்தா' என்றும் பாடம்.

௧௦௮. ஆதிமுதல்வன் - புத்தன்.

௧௦௯. பரசினர் - துதித்தார்.

௧௦௮ - ௧௦௯. ஆதிமுதல்வனது பாதபங்கயமலை.

௧௧௦. இருவர் - மாதவி சுதமதியென்பவர். இளங்கொடி - விளி.

டோங்குயர் போதி யுரவோன் றிருந்தடி
தொழுது வலங்கொண்டு தொடர்வினை நீங்கிப்
பழுதி னன்னெறிப் படர்குவர் காணு
யாருயிர் மருந்தா மமுத சுரபியெனு
மாபெரும் பாத்திர மடக்கொடி பெற்றனை
மக்க டேவ ரெனவிரு சார்க்கு
மொத்த முடிவி னோரற முரைக்கேன்
பசிப்பிணி தீர்த்த லென்றே யவருந்
தவப்பெரு நல்லறஞ் சாற்றின ராதலின்
மடுத்த தீக்கொளிய மன்னுயிர்ப் பசிகெட
வெடுத்தனள் பாத்திர மிளங்கொடி தானென.

அறவணர்த்தொழுதகாதை முற்றிற்று.

---

ககக. உரவோன் - புத்தன்; உரம் - அறிவு.

ககரு. பழுது இல நன்னெறி - குற்றமில்லாத நல்லவழி; இதனை, விசுத்திமார்க்கமென்பர். நெறி - நெறியில். படர்குவர் - செல்குவர்.

க0கூ - ககரு. பரசினராதலின், இவரிருவரும் நின்னோடு உரவோனடியைத் தொழுது வலங்கொண்டு நீங்கிப் படர்குவர்.

ககசு. இருசார்க்கும் - இரண்டு பகுதிகட்கும்.

ககஅ தீர்த்தலாம். அவரும்-அறவணவடிகளும். 'பசிப்பிணி தீர்த்த வன்றே யாவரும்' என்றும் பாடம.

ககஎ - ககஅ. ஓரறம் தீர்த்தலாம்.

கககூ. தவப்பெரு நலலறம - மிகப்பெரிய நல்லதருமம்.

கஉ0. கொளிய - கொளுத்தினாற்போன்ற. 'தீக்கதி மன்னுயிர் பசிகெட' என்றும் பாடம்.

கஉக. இளங்கொடி பாத்திரத்தை எடுத்தனள். 'எடுத்தனன் பாத்திரம' என்றும் பாடம்.

க - கஉக. இளங்கொடி அவர்தம்முடன் அடிகள் யாங்குளரென்று வினாஅய்க்குறுகி மாதவனடியைவணங்கி வத்தி உரைத்தலும், கேட்டு அவரும் தவப்பெரு நல்லறம் சாற்றினராதலின், இளங்கொடி பாத்திரமெடுத்தனளென முடிக்க.

பதின்மூன்றாவது

# ஆபுத்திரன்றிறமறிவித்தகாதை.

[பதின்மூன்றாவது மணிமேகலைக்கு அறவணர் ஆபுத்திரன்றிறங்கூறியபாட்டு.]

மாபெரும் பாத்திர மடக்கொடிக் கருளிய
வாபுத் திரன்றிற மணியிழை கேளாய்
வார ணாசியோர் மறையோம் பாள
னாரண வுவாத்தி யபஞ்சிக னென்போன்
பார்ப்பனி சாலி காப்புக்கடை கழிந்து
கொண்டோற் பிழைத்த தண்ட மஞ்சித்
தென்றிசைக் குமரி யாடிய வருவோள்
சூன்முதிர் பருவத்துத் துஞ்சிரு ளியவிடை

உ. திறம் - வரலாற்றை.

ங. வாரணாசி - காசி; 'வாரணவாசி' என்றும் பாடம். மறையோம்பாளன் - வேதத்தைப் பாதுகாத்தலையுடையான்; அந்தணனென்றபடி. "வயனங் கோட்டிலோர் மறையோம் பாளன்" என்பர் பின்னும்; கரு - ம் காதை, சரு.

ச. ஆரண உவாத்தி - வேதம் ஓதுவிப்பவன்; இஃது உபாத்தியாயனென்னும் வடமொழிச்சிதைவு. வேதத்திற் சில பாகத்தையேனும் வேதாங்கங்களையேனும் ஜீவனத்தின்பொருட்டு ஓதுவிப்பவன் உபாத்தியாயன்; இதனை மனுஸ்மிருதி இரண்டாவது அத்தியாயம், கசக-ம் சுலோகத்திற் காண்க. இப்பெயர் தமிழ்நூல்களில் உவாத்தியன் உவாத்தியான் உவாத்திகனெனவும் வழங்கும். அபஞ்சிகன் - காரணப்பெயர்; பங்கமில்லாதவனென்பது பொருள். 'ஆரணவுவாத்திகன்' என்றும் பாடம்.

ரு. பார்ப்பனி சாலி - அவன் மனைவி சாலியென்பாள்; அந்தணர்களிற் கணவனைப் பார்ப்பானென்றும், மனைவியைப் பார்ப்பனியென்றுங் கூறுதல் மரபு; "பார்ப்பான் றன்னொடு கண்ணிழந் திருந்தவித, தீத்தொழி லாட்டி" என்று முனபு வந்திருத்தல்காண்க; சு-ம் காதை, கருஉ-கரு௩. காப்புக் கடை கழிந்து - காவலின எல்லையைக்கடந்து; வியபிசரித்தென்றபடி.

சு. கொண்டோற் பிழைத்த தண்டம் அஞ்சி - கணவனுக்குப் பிழைசெய்தமையாலுண்டாகும சிக்ஷைக்குப் பயந்து, தண்டம் - சிக்ஷை; "கொண்டோற் பிழைத்த தண்டந் தாங்கி" என்பது பெருங்கதை, உஞ்சைக்காண்டம், சாங்கியன்றாயுரை.

எ. குமரி - கன்னியாகுமரியென்னும் ஆறு. ஆடிய - ஆடுதற்பொருட்டு. குற்றமுற்ற குலமகளிர் அக்குற்றத்தைப் போக்குதற்பொருட்டுக் குமரியாடச்செல்லுதல மரபு; ரு - ம் காதை, கஎ - கஅ.

அ. 'சூன்முதி ருயக்கத்து' என்றும் பாடம். துஞ்சிருள் - யாவருந் தூங்குதற்குக் காரணமாகிய இருளில, இயவு இடை - வழியினிடத்தே. துஞ்சிருள் - செறிந்த இருளுமாம். 'துஞ்சிருள் யாமத்து' என்றும் பாடம்.

யீன்ற குழவிக் கிரங்கா ளாகித்
தோன்றாத் துடவையி னிட்டன ணீங்கத்
தாயிறா வாக்குழ வித்துயர் கேட்டோ
ராவந் தணைந்தாங் கதன்றுயர் தீர
நாவா னக்கி நன்பா லூட்டிப்
போகா தெழுநாட் புறங்காத் தோம்ப
வயனங் கோட்டிலோர் மறையோம் பாள
னியவிடை வருவோ னிளம்பூதி யென்போன்
குழவி யேங்கிய கூஉக்குரல் கேட்டுக்
கழுமிய துன்பமொடு கண்ணீ ருகுத்தாங்
காமக னல்ல னென்மக னென்றே
காதலி தன்னொடு கைதொழு தெடுத்து
நமபி பிறந்தான் பொலிகநங் கிளையெனத்
தம்பதிப் பெயர்ந்து தமரொடுங் கூடி
மார்பிடை முந்நூல வனையா முன்னர்
நாவிடை நன்னூ னன்கன நவிற்றி

---

க. குழவிக்கு - குழந்தைககு.

க0. துடவை - தோட்டம்; "தொடுப் பெறிந் துழுத துளர்படு துடவை." இது **பெரும்பாணாற்றுப்படை**, உ0க; "தொய் யாது வித்திய துளர்படு துடவை." இது **மலைபடுகடாம்**, கஉஉ.

க - க0. கரு - ம் காதை, அசு - அஎ

கக. தூவாக் குழவி - உண்ணாத குழந் தை. துயர் - பசித்துயரததால ஒழியா மல அழுது கூப்பிடும் ஒலி; ஆகுபெயர்; "தாயி றூவாக குழவி போல, வோவா து கூஉநின் னுடற்றியோர் நாடே." என்பது **புறநானூறு**, ச.

கஉ. ஆ - பசு. அதன்றுயர் - அக்குழ ந்தையின் பசித்துன்பம்.

கச. புறங்காதது ஓம்ப - பாதுகாக்க; இவை ஒருபொருட்பன்மொழி. புறங் காத்தல் - பாதுகாத்தல்; "வழிபடு தெ ய்வ நிற்புறங் காப்ப" என்பது **தொல் காப்பியம்**, செய்யுளியல், கக0; "மெலி வில செங்கோ ணீபுறங் காப்ப" என்பது **புறநானூறு**, சஉ. இதனால் ஆபுததிர னென்பது இவனுக்குப் பெயராயிற்று.

கரு. வயனங்கோடு - ஓரூர். 'வயவ னங் கோட்டில்' என்றும் பாடம். மறை யோம்பாளன் :—கரு - ம் காதை, ரு.

கசு. வருவோன் - மனைவியுடன்வரு வோன்; பின் "காதலி தன்னொடு கை தொழு தெடுத்து" (உ0 - ம் அடி) என் பதனால், 'மனைவியுடன்' என்பது கொ ள்ளப்பட்டது. பூதியென்பது அவன் பெயர்; "தாதை பூதியுந் தனமனை கடி தர" என்று இக்காதையிலேயே பின்பு வருதல்காண்க; க0க.

கஅ. கழுமிய - கலந்த; **புறநானூறு**, உருஅ. கண்ணீர் - உவகைககண்ணீர்

சக. ஆ மகன் அல்லன் - பசுவினுடைய மகனல்லன்; பசுப் பாதுகாததலைக் கண்டோனாதலின் இங்ஙனங்கூறினான்.

உ0. காதலி - மனைவி; கைதொழுது அக்குழந்தையைத் தனக்குத் தந்தது தெ ய்வமென்றெண்ணி அத்தெய்வத்திற்கு அஞ்சலிசெய்து; "பழுதில் காட்சிப் பைந்தொடி புதலவனைத, தொழுதனன் வாங்கி" என்று இநநூலுள்ளே பின்புவரு தல் காண்க; உரு - ம் காதை, கஅஅ - கஅகூ.

உக. நம் கிளை பொலிகவென்று.

உஉ. பதி - ஊர்.

உரு. முந்நூல - பூணுநூல். வனையா முன்னரென்பது விளையக்கற்பித்தமை விளக்கிநின்றது.

உச. நன்னூல் - வேதம் வேதாங்கங் கள். நவிற்றி - நவிற்ற; நவிலுதல் -

யோத்துடை யந்தணர்க் கொப்பவை யெல்லா
நாத்தொலை வின்றி நன்கன மறிந்தபி
னப்பதி தன்னுளோ ரந்தணன் மனைவயிற்
புக்கோ னாங்குப் புலைசூழ் வேள்வியிற்
குரூஉத்தொடை மாலை கோட்டிடைச் சுற்றி
வெரூஉப்பகை யஞ்சி வெய்துயிர்த்துப் புலம்பிக்
கொலைநவில் வேட்டுவர் கொடுமர மஞ்சி
வலையிடைப் பட்ட மானே போன்றாங்
கஞ்சிநின் றழைக்கு மாதுயர் கண்டு
நெஞ்சுநடுக் குற்று நெடுங்கணி ருகுத்துக்
கள்ள வினையிற் கடுந்துயர் பாழ்பட
நள்ளிருட் கொண்டு நடக்குவ னென்னு
முள்ளங் கரந்தாங் கொருபுடை யொதுங்கி
யல்லிடை யாக்கொண் டப்பதி யகன்றோன்
கல்லத ரத்தங் கடவா நின்றுழி
யடர்க்குறு மாக்களொ டந்தண ரெல்லாம்

---

கூறி அடிப்படுதல்; "நல்லோர் குழீஇய நாநவி லவையத்து" என்பது மலைபடுகடாம், எ௭; "மறைநவி லந்தணர் நுவலவும் படுமே" என்பது புறநானூறு, ௧.

௨௫. ஓத்து - வேதம்; "மறப்பினு மோத்துக் கொளலாகும்" என்பது திருக்குறள், ௧௩௪.

௨௬. நாத்தொலைவு: மணிமேகலை, ௨௪ - ம் காதை, ௧௧; சிலப்பதிகாரம், அரங்கேற்றுகாதை, ௪௪.

௨அ. புலை சூழ் வேள்வியில் - அசுத்தமாகிய ஊன்றினறலைக் கருதுகின்ற யாகசாலையில்; சூழ்தல் - கருதல். புலையும், வேள்வியும் ஆகுபெயர். 'புக்கோனாங்கப் புலைசூழ் வேள்வியில்' என்றும் பாடம்.

௨௯. நிறம்பொருந்திய தொடுக்கப்பட்டமாலை கொம்பின்கண்ணே சுற்றப்பட்டு. 'குரூஉக்கொடி மாலை' என்றும் பாடம்.

௩0. வெரூஉப்பகை - அச்சத்தைத்தரும்பகை. வெரூஉ - அச்சம்; "வெரூஉப்பறை நுவலும் பரூஉப்பெருந் தடக்கை" என்பது பொருநராற்றுப்படை, ௭௪௧. புலம்பி - வருத்தமுற்று; புலம்பு - வருத்தம்; "புலம்புவிட் டிருந்த புனிறில் காட்சி" என்பது மலைபடுகடாம், ௪௧.

௩௧. கொலைநவில் வேட்டுவர் - கொலைத்தலைச்செய்கின்ற வேடருடைய. கொடுமரம் - வில்.

௩௩. அழைக்கும் ஆ துயர் - கூப்பிடுகின்ற பசுவின துயரத்தை.

௩0 - ௩௩. புலம்பிப் போன்று அஞ்சி நின்று அழைக்கும் ஆ.

௨அ - ௩௩. புக்கோன் ஆவினது துயரத்தைக் கண்டென்க.

௩௫. கள்ளவினையில் - திருட்டுத்தொழிலால், கடுந்துயர் பாழ்பட - பசுவினது மிக்கதுன்பம் இல்லையாமபடி; கடுந்துயர் - மரணத்துன்பமுமாம. 'கடுவினை பாழ்பட' என்றும் பாடம்.

௩௬. நள்ளிருள் - செறிந்தவிருட்டு; "வெள்ளி முளைத்த நள்ளிருள் விடியல்" என்பது பொருநராற்றுப்படை, ௭௨.

௩௭. உள்ளம கரந்து - தன்னெண்ணத்தை மறைத்து.

௩௯. கல்லதரத்தம் - பருக்கைக்கற்கள் பொருந்திய சின்னெறியையுடைய அருநெறி; "கல்லத ரத்தஙு கடக்க" என்பது சிலப்பதிகாரம், கொலைக்களக்காதை, ௫௭.

௪0. அடர்க் குறுமாக்களொடு - நெருக்குதலைச்செய்யும் அறிவில்லாதாரோடு, "ஒலித்தொருங் கீண்டிய வூர்க்குறு மாக்

கடத்திடை யாவொடு கையகப் படுத்தி
யாகொண் டிந்த வாரிடைக் கழிய
நீமக னல்லாய் நிகழ்ந்ததை யுரையாய்
புலைச்சிறு மகனே போக்கப் படுதியென்
றலைக்கோ லதனா லறைந்தனர் கேட்ப
வாடடிநின் றலைக்கு மந்தண ருவாத்தியைக்
கோட்டினிற் குத்திக் குடர்புய்த் துறுத்துக
காட்டிடை நல்லாக் கதழ்ந்துகிளர்ந் தோட
வாபுத் திரன்றா னங்கவர்க் குரைப்போ
னோவன செய்யன்மி னொடிவன கேண்மின்
விடுநில மருங்கிற் படுபுல லார்ந்து
நெருநில மருங்கின் மக்கட் கெல்லாம்
பிறந்தநாட் டொட்டுஞ் சிறந்ததன் றீம்பா
லறந்தரு நெஞ்சோ டருள்சுரந் தூட்டு
மிதனொடு வந்த செற்ற மென்னை
முதுமறை யந்தணிர் முன்னிய துரைமோ

---

களும்'' என்பா பின்னும்; கரு - ம் காதை, ருக. குறுமாக்கள்.—கலித்தொகை, அஉ.

சக. கடம் - அருநெறி.

சஉ. ஆ கொண்டு - பசுவைக் கைப்பற்றிக்கொண்டு; ஆரிடை - அரியவழி.

சங. 'நீ மகனலலாய்' என்றும் பாடம்.

சச. ஊனைவிரும்பிப் பசுவைக்கவர்ந்தானென்று நினைந்து 'புலைச்சிறு மகனே' என்றார். 'புலைச்சிமகனே' என்றும் பாடம். போககப்படுதி - விலக்கப்படுவாய்.

சரு. அலைக்கோல் - வருத்துதலைச்செய்யும் கோல்; அறைந்தனர் - அடித்தனராய். 'கேட்புழி' என்றும் பாடம்.

சசு. ஆட்டி அலைக்கும் - மிகவும் வருத்துகின்ற. இவை ஒருபொருட்பன்மொழி.

சஎ. கோடு - கொம்பு. குடர் புய்த்துறுத்து - குடலைப்பிடுங்கி; "கோடுபுய்க் கல்லா துழக்கு நாடகேள்'' என்பது கலித்தொகை, கூஅ; "புய்த்தெறி கரும்பின் விடுகழை'' என்பது புறநானூறு, உஅ.

சஅ. கதழ்ந்து கிளர்ந்தோட - விரைந்தெழுந்தோட; கதழ்தல் - விரைதல்; ''தோயுநு கதழ்குருதி தோள்புடைப்ப'' என்பது புறப்பொருள்வெண்பாமாலை, காஞ்சிப்படலம், கசு. கிளர்தல் - எழுதல்; ''கால்கிளர்ந் தன்ன வேழம்'' என்பது திருமுருகாற்றுப்படை, அஉ. 'கழிந்துகிளர்ந் தோட' என்றும் பாடம்.

மேல்வருவன ஆபுத்திரன்கூற்று.

ரு௦. நொடிவன - சொல்லுவனவற்றை. ''நோவன செய்யே னொடியது கேண்மோ' என்றும் பாடம்.

ருக. விடுநிலமருங்கில் - மேய்தற்கு அரசனால்விடப்பட்ட நிலத்தினிடத்தே, படு புல் ஆர்ந்து - தானே உண்டாகிய புல்லைமேய்ந்து. பசுக்கள் கவலையின்றி மேய்தற்கு அரசனால் விடப்பட்டநிலம் கோஸஞ்சாரபூமியெனப்படும்.

ருங. பிறந்தநாள் - மக்கள்வினை. தீம்பால் - இனியபால்.

ருரு. இதனொடு - இப்பசுவினிடத்து; உருபுமயக்கம். செற்றம் - கோபம்.

ருசு. முன்னியது-எண்ணியது. உரைமோ - உரையுமென்னும் ஏவற்பன்மை உயிர்மெய்கெட்டு ஒகாரம்பெற்று வந்தது. 'முதுமறை மாக்கண் முன்னிய துரைமோ' என்றும் பாடம். எனவென்று ஒருசொல் வருவிக்க.

பொன்னணி நேமி வலங்கொள்சக் கரக்கை
மன்னுயிர் முதல்வன் மகனெமக் கருளிய
அருமறை நன்னூ லறியா திகழ்ந்தனை
தெருமர லுள்ளத்துச் சிறியை நீயவ்
வாமக னாதற் கொத்தனை யறியா
நீமக னல்லாய் கேளென விகழ்தலு
மான்மக னசலன் மான்மகன் சிருங்கி
புலிமகன் விரிஞ்சி புரையோர் போற்று
நரிமக னல்லனோ கேச கம்பள
னீங்கிவர் நுங்குலத் திருடி கணங்களென்
றோங்குயர் பெருஞ்சிறப் புரைத்தலு முண்டா
லாவொடு வந்த வழிகுல முண்டோ
நான்மறை மாக்கா ணன்னூ லகத்தென
வாங்கவர் தம்முளோ ரந்தண னுரைக்கு
மீங்கிவன் றன்பிறப் பியானறி குவனென
நடவை வருத்தமொடு நல்கூர் மேனியள்
வடமொழி யாட்டி மறைமுறை யெய்திக்
குமரி பாதங் கொள்கையின் வணங்கித்

---

௫௭. நேமி - சக்கரத்தின் சூடு; வட்டமுமாம். வலம் - வெற்றி; வலப்பக்கமுமாம். நேமியையுடைய சக்கராயுதம்.

௫௮. மன்னுயிர்முதல்வன் - திருமால். மகன் - பிரமன். 'எமக்களித்த' என்றும் பாடம்.

௬0. தெருமரல் - சுழற்சி. சிறியை - சிறுமையையுடையாய்.

௬௧. நூற்பொருளையறியும் அறிவிலா யென்பார், 'ஆமக னாதற் கொத்தனை' என்றார்; "விலங்கொடு மக்களனைய ரிலங்குநூல், கற்றாரோ டேனையவர்" என்று வருதல் காண்க; இது திருக்குறள், ௪௱௰.

௬௨. இகழ்தலும் - அவ்வந்தணர் இகழ்ந்துபேசுதலும்.

மேல்வருவன ஆபுத்திரன் கூற்று.

௬௩. (?) அசலனென்பவன் ஆனின் மகன்; ஆன் - பசு. சிருங்கியென்பவன் மானின் மகன்.

௬௪. (?) விரிஞ்சியென்பன் புலியின் மகன். புரையோர் - மேலோர்.

௬௫. (?) கேசகம்பளனென்பவன் நரியின் மகன்: அசிதகேசகம்பளரென்று ஒரு முனிவர்பெயர் பௌத்தநூல்களிற் காணப்படுகின்றது.

௬௮ - ௬௯. ஆவொடு - ஆவால். நன்னூலகத்து ஆவொடு வந்த அழிகுல முண்டோ? இல்லையென்றபடி. முன்னம் 'ஆமக னாதற் கொத்தனை' என்று அந்தணர் இகழ்ந்ததற்குப் பரிகாரங் கூறுகின்றவனாதலின், 'ஆவொடு வந்த வழிகுல முண்டோ' என்றான்.

௭0 - ௭௧. இவன்பிறப்பை யான் அறிகுவனென்று ஓரந்தணன் உரைப்பான்.

௭௨. நடவை - வழி. நல்கூர் மேனியள் - இளைத்த உடம்பையுடையாள்.

௭௩. வடமொழியாட்டி - பார்ப்பனி; இந்நூலில் ௫ - ம் காதை, ௪0 - ம் அடியிற் பார்ப்பாரை வடமொழியாளரென்று கூறியிருத்தல் காண்க. மறைமுறை யெய்தி - வேதவிதிப்படியே சென்று.

௭௪. குமரியாடப்போந்தோர், ஆங்குள்ள குமரித்தெய்வப் படிமத்தை வணங்குதல் மரபு.

தமரிற் றீர்ந்த சாலியென் போடலை
யாது நின்னூ ரீங்கென் வரவென
மாமறை யாட்டி வருதிற முரைக்கும்
வார ணாசியோர் மாமறை முதல்வ
னாரண வுவாத்தி யரும்பெறன் மனைவியான்
பார்ப்பார்க் கொவ்வாப் பண்பி னொழுகிக்
காப்புக்கடை கழிந்து கணவனை யிழந்தே
னெறிபய முடைமையி னிரியன் மாக்களொடு
தெற்கட் குமரி யாடிய வருவேன்
பொற்றேர்ச் செழியன் கொற்கையம் பேரூர்க்
காவதங் கடந்து கோவல ரிருக்கையி
னீன்ற குழவிக் கிரங்கே னாகித்
தோன்றாத துடவையி னிட்டனன் போந்தேன்
செல்கதி யுண்டோ தீவினை யேற்கென்
றல்லலுற் றழுத வவண்மக னீங்கிவன்
சொல்லுத றேற்றேன் சொற்பய மின்மையிற்
புல்லலோம் பன்மின் புலைமக னிவனென
வாபுத் திரன்பின் பமர்நகை செய்து

---

எரு. தமரிற்றீர்ந்த - தனக்குச் சிறந்தோரினின்றும் நீங்கிய.

எச - எரு. வணங்கித் தீர்ந்த சாலி.

எசு. ஈங்கு வரவு என்னென.

எஎ. உரைக்கும் - உரைப்பாள்.

எஅ. வாரணாசி=வாராணஸீ - காசி. வடமொழியில் 'ஸித்தாந்தகௌமுதி' என்னும நூலின் அவ்யயீபாவப்பிரகரணத்தில், "யஸ்யசாயாமஃ" என்னும் ஸூத்ரவியாக்கியானத்தில் 'வாராணஸீ' என்பதற்கு 'நல்லஜலத்துக்குத் தூரத்திலில்லாத நகரீ' என்று தத்துவபோதினியென்னும் உரையாசிரியர் பொருள்செய்திருப்பதாகக் கூறுவர்.

எகூ. 'உவாத்தி' என்பது, "தவாஅக் காதலொடு தன்யாழ் காட்டு, முவாத்தி யாதலின்" எனப் பெருங்கதையிலும் வந்திருத்தல் காண்க; இஃது உஞ்சைக்காண்டம, பிடியேற்றியது.

அ0. ஒழுகி - நடந்து.

அக. காப்புக்கடை கழிந்து :—கரு - ம் காதை, ரு.

அஉ. எறிபயம் - அடித்தலாலுண்டாகும் அச்சம். 'நெறிபய முடைமையின்' என்றும் பாடம். இரியல் மாக்கள் - கெடுதலுற்ற மாக்கள்; விரைந்துசெல்லுமாக்களென்றுமாம்.

அங. 'தக்கண குமரி' என்றும் பாடம். ஆடிய - நீராடும்பொருட்டு.

அச. செழியன் - பாண்டியன். கொற்கை - பாண்டியர்களின் பழைய இராசதானி.

அரு. கோவலர் - இடையர்.

அஎ. துடவை - தோட்டம்.

அசு - அஎ. கரு - ம் காதை, க - க0.

அஅ. தீவினையேற்குச் செல்கதியுண்டோ.

கூ0. பயம் - பிரயோசனம்; இன்மையிற் சொல்லுதறேற்றேன்.

கூக. புல்லலோம்பன்மின் - ஸ்பரிசித்தலைச் செய்யாதொழிக. இவன் புலைமகன் - இவன் அசுத்தமுடைய மகன். புலை - வியபிசாரமுமாம்; இது மலைநாட்டுவழக்கு.

கூஉ. அமர்நகை - விரும்புஞ்சிரிப்பு.

மாமறை மாக்கள் வருங்குலங் கேண்மோ
முதுமறை முதல்வன் முன்னர்த் தோன்றிய
கடவுட் கணிகை காதலஞ் சிறுவ
ரருமறை முதல்வ ரந்தண ரிருவரும்
புரிநூன் மார்பீர் பொய்யுரை யாமோ
சாலிக் குண்டோ தவறென வுரைத்து
நான்மறை மாக்களை நகுவன னிற்ப
வோத லந்தணர்க் கொவ்வா னென்றே
தாதை பூதியுந் தன்மனை கடிதர
வாகவர் கள்வனென் றந்தண ருறைதருங்
கிராம மெங்கணுங் கடிஞையிற் கலலிட
மிக்கசெல வத்து விளங்கியோர் வாழுந்
தக்கண மதுரை தான்சென் றெய்திச
சிந்தா விளக்கின் செழுங்கலை நியமத்
தந்தின் முன்றி லம்பலப் பீடிகைத்

---

௯௩. கேண்மோ - கேளுமென்னும் ஏவற்பன்மை உயிர்கெட்டு ஓகாரமபெற்றுவந்தது.

௯௪. முதுமறைமுதல்வன் - பிரஹ்மா.

௯௫. கடவுட்கணிகை - திலோத்தமை யென்பாள். சிறுவர் - பிள்ளைகள்.

௯௬. முதல்வராகிய அந்தணரிருவரும். இருவர் - வஸிஷ்டர், அகஸ்தியர்.

௯௫-௯௬. அந்தணரிருவரும் காதலஞ் சிறுவரெனக.

௯௪ - ௯௬. வஸிஷ்டரும் அகஸ்தியரும் திலோத்தமையின் பிள்ளைகளென்பதைப் பின்வரும் வாக்கியத்தாலுணர்க. ‘வஸிஷ்டனும் அகஸ்தியனும், பிரஹ்மா திலோத்தமையென்னும அப்ஸரஸைக்கண்டகாலத்துக் கலசத்து ஜனிததனர்’ என்பது, **நீலகேசிவிருத்திஸமய திவாகரத்திற்** கண்டது.

௯௮. தவறு - குற்றம்.

௯௯. நகுவனன் - சிரிப்பவனாகி.

**௧௦௦. ஒவ்வான் - பொருந்தான் ; என்றது ஆபுத்திரனை.**

௧௦௧. தாதை - தகப்பன். கடிதர - நீக்க.

௧௦௫. கடிஞை - பிச்சைப்பாத்திரம். கல் இட - கல்லைப் போகட ; உலகத்திற் கடிஞையிற் கலலிடுவோர் எக்காலத்தும் இலராகவும் இவனுக்கு இங்ஙனநிகழ்ந்ததேயென்று இரங்கிச்கூறினார் ‘கடிஞையிற கலலிடுவாரில்’ எனபது ஒரு பழமொழி ; இதனைப் பின்வரும வெணபாவாலுணர்க ; “நினைதத திதுவென்றந் நீர்மையை நோக்கி, மனதத தறிநதீவர் மாணடார் - புனதத, குடிஞையிரட்டுங் குளிர்வரை நாட, கடிஞையிற கல்லிடுவா ரில.” இது **பழமொழி**, ௨௪௬.

௧௦௫. தக்கணமதுரை - தென்றிசைககணுள்ள மதுரை ; என்றது கூடறபதியை ; தககணம் - வடசொற்றிரிபு ; **சிலப்பதிகாரம்**, ஊர்காண்காதை, ௧௪, **அடியார்க்கு நல்லாருரையைப்**பாாகக.

௧௦௬. சிநதாவிளககு - ஸரஸ்வதிதேவி; பதிகத்தின ௬௦-ம வரிக்குறிப்பைப் பாாக்க. நியமம் - கோயில் ; ஸரஸ்வதிதேவியின் கோயிலாதலின, அதற்குக கலைநியமமென்பது பெயராயிற்று ; ௧௪-ம **காதை, ௧௦ - ௧௧, ௧௭ - ௧௮.**

௧௦௭. முன்றில் அம்பலப்பீடிகை - சிநதாதேவியின் கோயில்வாயிற்கணுள்ள மன்றினிடத்தில். அம்பலப்பீடிகை - அம்பலமாகிய பீடிகை ; அஃது உயர்த்துக கட்டப்பட்டிருத்தலின், பீடிகையெனப்பட்டது ; பீடிகையென்பதற்குக் கோயில்வாயிற்கணுள்ள பலிபீடமெனினும

தங்கினன் வதிந்தத் தக்கணப் பேரு
ரையக் கடிஞை கையி னேந்தி
ககO மையறு சிறப்பின் மனைதொறு மறுகிக்
காணார் கேளார் கான்முடப் பட்டோர்
பேணுந ரிலலோர் பிணிநடுக குற்றோர்
யாவரும வருகவென் றிசைத்துட னூட்டி
யுண்டொழி மிச்சிலுண் டோடுதலை மடுத்துக்
ககரு கண்படை கொள்ளுங் காவலன் றுனென.

ஆபுத்திரன்றிறமறிவித்தகாதை முற்றிற்று.

---

பொருந்தும்; இங்ஙனங்கொள்ளுங்காற் பீடிகையையுடைய அம்பலமென மாறுக.

கOஅ. தங்கினன் வதிந்து - தங்கி; ஒருபொருட்பன்மொழி. தக்கணப்பேரூா - மதுரையில.

ககO. மை-குற்றம். மறுகி-சுழன்று.

ககக. காணார் - குருடர். கேளார் - செவிடர்.

ககஉ. பேணுநரில்லோர் - அகதிகள். 'பேணின ரில்லோர்' என்றும் பாடம். பிணி - நோய்.

ககக - ககஉ. உஅ -ம் காதை, உஉஉ- உஉரு.

ககரு. யாவரும் - மேற்கூறப்பட்ட காணார்முதலிய யாவரும். உடன் ஊட்டி - ஒருங்குண்ணச்செய்து; உடன - உடனேயென்றுமாம்.

ககச. உண்டொழி மிச்சில் உண்டு - அவர்கள் உண்டொழிந்த மிகுதியை யுண்டு; இது "விருந்தோம்பி, மிச்சின் மிசைவான்" என்ற அ௫-ம் திருக்குறளின் பொருளைத் தழுவி வந்தவாறு காண்க. ஓடு - பிச்சைப்பாத்திரம். தலைமடுத்து - தலையணையாகக்கொண்டு. 'தலையடுத்து' என்றும் பாடம்.

ககரு. கண்படை - உறக்கம். காவலன் - காததலையுடையவன்; என்றது ஆபுத்திரனை. காவலன் கண்படை கொள்ளுமென்க.

க - ககரு. அணியிழை, ஆபுததிரன் றிறங்கேளாய்; பாாப்பனி சாலி, கழிந்து அருசி வருவோள் இரங்காளாகிக குழவியை இட்டு நீங்க, ஆ கேட்டு அணைந்து நக்கி ஊட்டிப் போகாது ஓம்ப, பூதியென்போன் கேட்டு உருகி என்மகனென்று எடுததுப் பெயர்ந்து கூடி நவிற்ற, அறிந்தபின் புககோன் ஆதுயர் கண்டு உற்று உருதது உள்ளங்கரந்து ஒதுங்கி அகன்றோனுய்க் கடவாகின்றழி அந்தணரெல்லாம குறமாக்களோடு சென்று கையகப்படுத்திக கேட்ப, நல்லா குத்திப் புய்ததுறுத்து ஓட, ஆபுததிரன் உரைப்போன 'உரைமோ' என, அந்தணரிகழ்தலும், ஆபுததிரன் 'நன்னூலகத்து ஆவொடுவநத அழிகுலமுண்டோ' என, ஓரந்தணனுரைக்கும; அங்ஙனமுரைப்பவன 'புல்லலோம்பன்மின்; புலைமகனிவன்' என, ஆபுத்திரன் நகைசெய்து 'சாலிக்குத்தவறுண்டோ' என்றுரைத்து நகுவனனிற்ப, பூதி ஒவ்வானென்றகடிதர, கிராமமெங்கணுங்கல்லிட, காவலன் மதுரை சென்றெய்தி வதிந்து ஏந்திமறகி இசைதது ஊட்டி மிச்சிலுண்டு மடுத்துக கண்படைகொள்ளுமென வினைமுடிவுசெய்க.

பதினைன்காவது

# பாத்திரமரபுகூறியகாதை.

[பதினைன்காவது மணிமேகலைக்கு அறவணர் அமிர்தசுரபியென்னும் பாத்திரம் சிந்தாதேவி ஆபுத்திரற்குக் கொடுத்தவண்ணங் கூறியபாட்டு.]

ஆங்கவற் கொருநா ளம்பலப் பீடிகைப்
பூங்கொடி நல்லாய் புகுந்தது கேளாய்
மாரி நடுநாள் வல்லிருண் மயக்கத்
தாரிடை யுழந்தோ ரம்பல மரீஇத்
துயில்வோன் றன்னைத் தொழுதன ரேத்தி
வயிறுகாய் பெரும்பசி மலைக்கு மென்றலு
மேற்றா ணல்லது வேற்றா ணில்லோ
னாற்றுவது காணா னாரு ரெய்தக்

---

க. ஆங்கவற்கு - ஆபுத்திரனுக்கு; ஆங்கவன் - ஒருசொல்; "ஈங்கிவள்" என்புழிப்போல. இது திருச்சிற்றம்பலக்கோவையார், கக அம்பலப்பீடிகை - அம்பலத்தில். அம்பலம் - பலருஞ்சென்று தங்குதற்குரிய பொதுவிடம். இது மன்றமெனவுங் கூறப்படும். அம்பலப் பீடிகை:—கரு - ம் காதை, க0எ; சஎ-ம் காதை, ருக.

உ. நல்லாயென்றது, மணிமேகலையை. புகுந்தது - நேர்ந்தது.

க - உ. அவற்குப் புகுந்ததைக் கேள்.

கூ. மாரிநடுநாள் - மழைத்துளிகளையுடைய இடையாமத்தில். வல்லிருண்மயக்கத்து - வலிய இருட்கலப்பில்; 'இருண்மயக்கத்து' என்றதனால், நடுநாள் - இடையாமமாயிற்று; "புதையிருள்கூர், நெறியா ரருள்பெற நாநடு நாளிடை நீந்துதுமே" எனவருதல் காண்க; இது தஞ்சைவாணன்கோவை, உகரு.

ச. அரியவழியில் வருந்தி வந்தோராகிய கூத்தர்முதலியோர் அம்பலத்தை யடைந்து; கூத்தர்முதலியோர் வந்து தங்குமிடம் அம்பலமென்பதை, "மன்றில் வதியுநர் சேட்புலப் பரிசிலர்" எனபதனாலுணர்க. இது மலைபடுகடாம், சகூஉ. 'அம்பலம விறைஅய்' எனறும பாடம்.

ரு. துயில்வோன்றன்னை - ஆபுத்திரனை.

சு. மலைக்கும் - மாறுபடுத்தும்; வருத்துமென்றபடி; "மலைதல் போகிய சிலைத்தார் மார்ப" என்பது புறநானூறு, க0. "வயிறுகாய் பெரும்பசி வருத்தும்" என்று பின்னும் வருதல் காண்க. கஎ - ம் காதை, ருஎ. 'மலையு மென்றலும்' என்றும், 'அலைக்கு மென்றலும்' என்றும் பாடம்.

ச - சு. உழந்தோர் மரீஇத் தொழுதேத்திப் பசி மலைக்குமென்றலுமென்க.

எ. ஏற்றாண் - இரந்துண்ணுமுணவு. வேற்றாண் இல்லோன் - வேறு உணவில்லாத ஆபுத்திரன்.

அ. ஆற்றுவது காணான் - உதவும்வழியைக் காணாகி. ஆற்றுதல் - உதவுதல்; "ஒருவீ ரொருவீர்க் காற்றுதிர்" என்பது புறநானூறு, ருஅ. ஆர் அஞர் - தீர்த்தற்கரிய வருத்தம்.

கேளிது மாதோ கெடுகநின் றீதெனு
யாவரு மேத்து மிருங்கலை நியமத்துத்
தேவி சிந்தா விளக்குத் தோன்றி
யேடா வழிய லெழுந்திது கொள்ளாய்
நாடுவறங் கூரினுமிவ் வோடுவறங் கூராது
வாங்குநர் கையகம் வருந்துத லல்லது
தான்றொலை வில்லாத் தகைமைய தென்றே
தன்கைப் பாத்திர மவன்கைக் கொடுத்தலுஞ்
சிந்தா தேவி செழுங்கலை நியமத்து
நந்தா விளக்கே நாமிசைப் பாவாய்
வானோர் தலைவி மண்ணோர் முதல்வி
யேனோ ருற்ற விடர்களை வாயெனத்
தான்றொழு தேத்தித் தலைவியை வணங்கி
யாங்கவர் பசிதீர்த் தந்நா டொட்டு
வாங்குகை வருந்த மன்னுயி ரோம்பலின்
மக்களு மாவு மரஞ்சேர் பறவையுந்

---

இனி ஆபுத்திரன வருத்தம் தீரும்படி அவனுககுச் சிந்தாதேவி அமுதசுரபியெ ன்னும பாத்திரங்கொடுததமை கூறு வார்.

க. இதுகேள். நின் றீதுகெடுக.

கo. யாவரும் எத்தும் - எச்சமயத்தி னரும் துதிக்கும். நியமம் - கோயில். கலைநியமம் —கூ - ம் காதை, கoசு.

கக. தேவியாகிய சிந்தாவிளககு.

கஉ. அழியல் - வருந்தாதே. இது கொள்ளாய் - இப்பாததிரத்தைக்கொள். 'ஏடா பரிய லெழுந்திது கேளாய்' என் றும் பாடம்.

கரு. வறங்கூரினும் - வற்கடம் மிகி னும். வறம் - வற்கடம்; "ஞாலம் வறந் தீரப் பெய்யக் குணககோர்பு, காலத்திற் றோன்றிய கொண்மூப் போல" என்பது கலித்தொகை, அஉ. வறங்கூராது - வறுமையுறாது.

கரு. தான் என்றது, பாத்திரத்தை. என்று - என்றுசொல்லி. 'தான்றொலை வறியாத் தகைமையது' என்றும் பாடம்.

கச - கரு. கக - ம் காதை, சக - ருo; கஎ - ம் காதை, ரு - சு.

எ - கசு. இல்லோன் ஆருநெய்தச் சிந்தாவிளக்கு 'நின்றீதுகெடுக' எனத் தோன்றி 'கொள்ளாய், கூராது, தகை மையது' என்று பாத்திரத்தைக்கொடுத் தலும்.

மேல்வருவன, பாத்திரம்பெற்றமகிழ் ச்சியால் ஆபுத்திரன் சிந்தாதேவியைத் துதிக்குந்துதிகள்.

கஅ. நந்தாவிளக்கே-கெடாததீபமே; மைவிளக்கு அழிதன் மாலைததாதலின், நந்தாவிளக்கே யென்றான்; இது தெரி தருதேற்றவுவமையென்னு மலங்காரம். இவள் வாக்கின்மடந்தையாதலின், 'நா மிசைப் பாவாய்' என்றான்; "தேவ ராயி னும் பிரம ராயினு, நாமாசு கழூஉ நலங் கிளர் திருந்தடி" என்பர் பின்னும்; உரு - ம் காதை, கருo - கருக.

கஎ - உo. அடுக்கிய விளிகளாற் சிந் தாதேவிபால் ஆபுத்திரனுக்குள்ள அன பின் மிகுதி விளங்கும்.

உக. தொழுது - அஞ்சலிசெய்து. தலைவி - சிந்தாதேவி.

கூ - உக. உரு - ம் காதை, கககூ - கருகூ.

உகூ. வாங்குகை வருந்த:—ககூ - ம் காதை, சசு. மன்னுயிர் என்றார், விலங்குமுதலியனவும் உண்பிக்கப்படுதல் நோக்கி. ஓம்பலின் - பாதுகாத்தலி னாலே.

உச. மாவும் - விலங்குகளும்.

தொக்குட னீண்டிச் சூழ்ந்தன விடாஅ
பழுமரத் தீண்டிய பறவையி னெழூஉ
மிழுமென் சும்மை யிடையின் றொலிப்ப
வீண்டுநீர் ஞாலத் திவன்செய லிந்திரன்
பாண்டு கம்பளந் துளக்கிய தாதலிற்
றளர்ந்த நடையிற் றண்டுகா லூன்றி
வளைந்த யாக்கையோர் மறையோ னாகி

---

௨௫. உடன் தொக்கு ஈண்டி - ஒருமிக்கச்சேர்ந்து திரண்டு. விடா - விடாவாய்.

௨௬. பழுமரத்து ஈண்டிய - பழுத்தமரத்தின் கண்ணே வந்துகூடிய. பறவையின் - பறவைபோல :— **பொருநராற்றுப்படை**, ௬௪; **பெரும்பாணாற்றுப்படை**, ௨௦; **புறநானூறு**, ௧௭௩, ௩-ம் அடி; **சீவகசிந்தாமணி**, காந்தருவதத்தையாரிலம்பகம், ௩௩௬; **நாலடியார்**, சுற்றந்தழால், ௨. எழூஉம் - எழும்புகின்ற.

௨௭. சும்மை - ஒலி. இடையின்று - இடையீடில்லாமல். இடை - இடையீடு; "எய்தத லறியா திடையின்றி" என்பது **புறப்பொருள்வெண்பாமாலை**, பொதுவியற்படலம்.

௨௪ - ௨௭. ௨௮-ம் காதை, ௨௨௨ - ௨௩௨.

௨௦ - ௨௭. ஆபுத்திரன் களைவாயெனத் தொழுது எதிர் வணங்கி அந்நாள்தொட்டு அவர் பசிதீர்த்து ஓம்பலின் விடாவாய் எழூஉஞ் சும்மை இடையின்றொலிப்பவெனக.

மேலே, ஆபுத்திரனுடைய புண்ணியமிகுதியைத் தனது பாண்டுகம்பள நடுக்கத்தாலறிந்த இந்திரன் அவனுக்கு வரங்கொடுத்தற்பொருட்டு விருத்தவேதியன் வடிவுகொண்டுவருதலைக் கூறுவார்.—

௨௯. பாண்டு கம்பளம் - வெள்ளைக்கம்பளமாகிய ஆசனம். துளக்கியது - நடுங்கச்செய்தது.

௨௮ - ௨௯. ஆபுத்திரன் அறச்செயல் இந்திரனுடைய பாண்டுகம்பளத்தை நடுங்கச்செய்தது. இப்பூவுலகில் தானம் சீலம் முதலியவற்றிற் சிறந்த பௌத்தருளாராயினும், அவர்களுக்கு ஏதேனுந் துன்பமுளதாயினும் இந்திரனுடைய பாண்டுகம்பளம் நடுங்குமென்றும், அக்குறிப்பால் அவற்றையறிந்துவந்து அவர்களுக்கு வேண்டிய வரங்களைக்கொடுத்தலும் தீங்குகளை ஒழித்தலும் இந்திரனுடைய கடப்பாடென்றும் தெரிகின்றது. புத்ததருமவொழுக்கினனாகிய வணிகனொருவன் கப்பல் கவிழப்பெற்றுக் கடலில்வருந்தியதைத் தனது பாண்டுகம்பளத்தின் நடுக்கத்தாலறிந்த இந்திரன் அவ்வணிகனை அத்துன்பத்தினின்று நீக்கிப் பாதுகாத்தனனென்று இந்நூல் ௨௫-ம் காதையில் (௧௩ - ௨௬) வருதல்காண்க; "நமி விநமி யென்பாரிருவர்குமாரர் தபச்சரணம்பண்ணியருளாநின்ற பகவானை யடைந்து நமஸ்கரித்துக் கந்த புஷ்பாதிகளாற்பூசித்து நானாவித ஸ்தோத்திரங்களை அதிமதுரமாகப்பாடிநின்று விண்ணப்பஞ்செய்வார்—பகவானே, தம்மாற் புத்திரபௌத்திராதி புத்ரர்களுக்கு வேறுவேறு இராசசியம்கொடுக்கப்பட்டன, யாங்கள் அப்பொழுது ஸந்நிகிதமாயினமல்லேம், இப்பொழுது எங்களுக்கு விபவங்களைப் பிரஸாதித்தருளவேண்டுமென்று நிர்ப்பந்தித்துநின்று துதிப்ப, இதனைத் தரணேந்திரன் தனது ஆசனங்கம்பித்தலில் அறிந்து கடிதுவந்து மனுஷ்யரூபத்தைக்கொண்டு பருவதம்போலச் சலியாது எழுந்தருளிநின்ற பகவானது தைரியாதிசயத்தினைக்கண்டு விஸ்மிதனாகிப் பிரதக்ஷிணம்பண்ணித் துதித்துக் குமாரர்களை நோக்கிச்சொல்லுவான்" என்று ஸ்ரீபுராணத்துள்ள முதலாவது விருஷபதீர்த்தங்கரர்புராணத்தில் வருதலால், இப்படியே தனது ஆசனநடுக்கத்தால் அறியவேண்டுவனவற்றையறிந்து நல்லுயிர்களுக்குச் செய்யவேண்டுவனவற்றை இந்திரன் செய்வானென்று கூறுதல் சைனசம்பிரதாயமென்றும் தெரிகின்றது.

௩௦ - ௩௧. தளர்ந்தநடையின் - நடைதளர்தலால், தண்டுகால்ஊன்றி - தான்பி

மாயிரு ஞாலத்து மன்னுயி ரோம்பு
மாருயிர் முதல்வன் றன்முன் றோன்றி
யிந்திரன் வந்தே னியாது நின்கருத்
துன்பெருந் தானத் துறுபயன் கொள்கென
வெள்ளை மகன்போல் விலாவிற நக்கீங்
கெள்ளினன் போமென் றெடுத்துரை செய்வோ
னீண்டுச் செய்வினை யாண்டுநுகர்ந் திருத்தல்
காண்டகு சிறப்பினுங் கடவுள ரல்ல
தறஞ்செய மாக்கள் புறங்காத் தோம்புநர்
நற்றவஞ் செய்வோர் பற்றற முயல்வோர்
யாவரு மில்லாத் தேவர்நன் னாட்டுக்
கிறைவ னாகிய பெருவிறல் வேந்தே

டித்த தண்டினையே காலாகவூன்றி, வளைந்த யாக்கை மறையோன் ஆகி - கூனிய உடம்பையுடைய வேதியனாகி; "தளர்ந்த நடையிற் றண்டுகா லூன்றி, வளைந்த யாக்கை மறையோன்" என்பது சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை, ௪௪ - ௪௫. ஆகி ஊன்றியென்க.

௬௩. ஆருயிர்முதல்வன் - ஆபுத்திரன்; "ஆருயி ரோம்புநன்" எனவும், "அருந்தே மாந்த வாருயிர் முதல்வனை" எனவும், இவனை இக்காதையிலேயே பின்பு கூறுதல்காண்க; ௯௫ - ௯௮.

௬௪. யாதுநின்கருத்து - உன்னுடைய எண்ணம் என்ன.

௬௫. தானங்கள் பலவற்றுள்ளும் சிறந்தமையின், அன்னதானம், பெருந்தானமெனப்பட்டது. உறுபயன் - மிக்கபிரயோசனம். கொள்க என - கொள்கவென்று இந்திரன்சொல்ல.

இனி, இங்ஙனங்கூறிய இந்திரனுக்கு ஆபுத்திரன் விடைபகர்ந்தது கூறுவார்.

௬௬. வெள்ளைமகன் போல் - பயனில்லாதசொல்லையுடையவன்போல, "வெள்ளைக் கோட்டி" என்பதற்கு 'பயனில்லாத உரைக்கோட்டி' (வரந்தருகாதை, ௧௯௮) என்று பொருள்கூறுவர், சிலப்பதிகார அரும்பதவுரையாசிரியர்.

௬௭. எள்ளுதல் - இகழுதல். போம் - ஏவற்பன்மை. செய்வோன் - பெயர்.

௬௮. ஈண்டுச்செய்வினை - இவ்வுலகத்துச்செய்யும் புண்ணியங்களின்பயனை. ஆண்டு - அவ்விடத்தில்.

௬௮ - ௬௯. நுகர்ந்திருத்தல் காண்டகு - அனுபவித்திருத்தலைச் செய்கின்ற. நுங்கடவுளரென்றான், தனக்கு அவர் அயலென்னுங்கருத்தால்; "நின்ற நின் கார்மயி றன்னையும்" என்புழிப்போல. இது திருச்சிற்றம்பலக்கோவையார், ௭௬.

௭0. புறங்காத்தோம்பல்.— ௧௯-ம் காதை, ௧௪.

௭௨. யாவருமில்லா - அறஞ்செய்மாக்கள் முதலியோர்களில் ஒருவருமில்லாத.

௬௮ - [illegible]. தேவருலகம் வினைப்பயனனுபவிப்போர்க்கேயன்றி அறஞ்செய்மாக்கள் முதலியோர்க்கு இடமன்றென்பதை, "பொலம்பூங் காவி னன்னாட் டோருஞ், செய்வினை மருங்கி னெய்த லல்லதை, யுடையோ ரீதலு மில்லோ ரிரத்தலுங், கடவ தன்மையிற் கையற வுடைத்து" (புறநானூறு, ௩௮) எனவும், "ஈவாருங் கொள்வாரு மில்லாத வானத்து, வாழ்வாரே வன்க ணவர்" (௧0௫௮-ம் திருக்குறளுக்குப் பரிமேலழகரெழுதிய விசேடவுரையிற்கண்ட செய்யுள்.) எனவும், 'ஈவாரும் ஏற்பாருமின்றி எல்லாரும் ஒரு தன்மையராதலின் ஒப்புரவு புத்தேளுலகத்து அரிதாயிற்று' (திருக்குறள், ௨௧௩, பரிமேலழகருரை) எனவும் வருவனவற்றாலுணர்க.

௭௨ - ௭௩. "யாவரு...... பெருவிறல் வேந்தே" என்பது இகழ்ச்சி.

வருந்தி வந்தோ ரரும்பசி களைந்தவர்
திருந்துமுகங் காட்டுமென் றெய்வக் கடிஞை
யுண்டி கொல்லோ வுடுப்பன கொல்லோ
பெண்டிர் கொல்லோ பேணுநர் கொல்லோ
யாவையீங் களிப்பன தேவர்கோ னென்றலும்
புரப்போன் பாத்திரம் பொழிந்தூண் சுரந்தீங்
கிரப்போர்க் காணா தேமாந் திருப்ப
நிரப்பின் றெய்திய நீணில மடங்கலும்
பரப்பு நீராற் பல்வளஞ் சுரக்கென
வாங்கவன் பொருட்டா லாயிரங் கண்ணோ
னோங்குயர் பெருஞ்சிறப் புலகோர்க் களித்தலும்
பன்னீ ராண்டு பாண்டிநன் னாடு
மன்னுயிர் மடிய மழைவள மிழந்தது
வசித்தொழி லுதவ மாநிலங் கொழுப்ப
பசிப்புயி ரறியா பான்மைத் தாகலின்

---

௪௪. ௨௯-ம் காதை, ௧௯௫. 'அருந்துபசி களைந்து' என்றும் பாடம்.

௪௪ - ௪௫. வந்தோரரும்பசி - வந்தோருடைய பொறுத்தற்கரியபசியை. களைந்து - நீக்கி. அவர் திருந்துமுகங்காட்டும் - அவருடைய இனியமுகத்தை யான் காணக்காட்டும்; என்றது அவர் திருந்துமுகங்காட்டும் என் தெய்வக்கடிஞையே யமையும்; உன்னாற் கொடுக்கப்படுவன எனக்கு இன்பஞ் செய்யாவாகலின், அவைவேண்டாவென்றவாறு; "ஈத்துவக்கு மின்பம்" என்று வருதல்காண்க. இது திருக்குறள், ௨௨௮. காட்டும் - முற்று. தெய்வக்கடிஞையென்றான், வாங்குநர் கையகம் வருத்துதலல்லது தான் தொலைவில்லாத் தன்மைத்தாதலின்.

௪௮ ஈங்கு அளிப்பன - எனக்கு அளிப்பன; ஈங்கு - தன்மையையுணர்த்திற்று; "ஒழிக காம மீங்கென" என்புழிப்போல. இது சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், ௪௯. தேவர்கோன் - விளி.

௪௬ - ௪௮. உன்னாலளிக்கப்படுவன உண்டிமுதலியவற்றுள் யாவையென்று ஆபுத்திரன் இந்திரனை இகழ்ந்துகூறலும்.

௩௭ - ௪௮. ஏத்துணைசெய்வோன் என்றலுமென்க.

இனி, தன்னை ஆபுத்திரன் அவமதித்தானென்று இந்திரன் சினந்து அவன் அன்னதானஞ்செய்தற்கு இடமில்லையாகும்படி மழைபெய்வித்து நாட்டை வளப்படுத்தி இரப்பாரை இல்லையாக்கினமை கூறுவார்.

௪௯. புரப்போன்பாத்திரம் - உயிர்களைப் பாதுகாப்பவனுடைய பிச்சைப் பாத்திரம்.

௫௦. ஏமாந்திருப்ப - ஆபுத்திரன் உண்பித்தற்கு ஆசையடைந்திருக்கும்படி; "அருந்தே மாந்த நெஞ்சம்" என்பது புறநானூறு, ௧௦௧. துன்பமுற்றிருப்ப வெனினுமமையும்.

௫௧. நிரப்பு - வறுமை.

௫௩. ஆங்கவன் பொருட்டு - ஆபுத்திரன்பொருட்டு, ஆங்கவன ஒருசொல.

௫௪. அளித்தலும் - இந்திரன் கொடுத்தலும்.

௫௦ - ௫௪. ஏமாந்திருப்பப் பெருஞ்சிறப்பை இந்திரன் அளித்தலும்.

௫௬. ௨௮ - ம் காதை, ௧௫௭.

௫௫ - ௫௬. பன்னிரண்டுவருடம் மழைவளத்தை இழந்ததாகிய பாண்டிநாடு.

௫௭. வசி - மழை. வசி :— ௧ - வது காதை, ௭௧. வசித்தொழிலுதவ :— ௨௮ - ம் காதை, ௨௯.

௫௮. பசிப்பு - பசித்தல். 'பசியுயிரறியா' என்றும் பாடம்.

௫௫ - ௫௮. பாண்டிநன்னாடு பான்மைத்தாகலின்.

ஞருயி ரோம்புந னம்பலப் பீடிகை
யூஉணொலி யரவ மொடுங்கிய தாகி
விடருந் தூர்த்தரும் விட்டேற் றுளரு
நடவை மாக்களு நகையொடு வைகி
வட்டுஞ் சூதும் வம்பக் கோட்டியு
முட்டா வாழ்க்கை முறைமைய தாக
வாபுத் திரன்று னமபால நீங்கி
யூரூர் தோறு முண்போர் விஞஅ
யாரிவ னென்றே யாவரு மிகழ்ந்தாங்
கருந்தே மாந்த வாருயிர் முதல்வனை

ருகூ. ஆபுத்திரன் பலநாளிருந்து அறஞ்செய்தற்கிடனாயிருந்தது பற்றி அம்பலம் அவனதாகக்கூறப்பட்டது. அம்பலப் பீடிகை :— கரு - ம் காதை, கOஎ; கசு-ம் காதை, க.

சுO. ஊஉணொலி அரவம் - மக்களும் மாவும் பறவையும் ஒருங்குவந்து சோற்றை உண்ணுதலால் ஒலிக்கும்ஒலி. ஒலியரவம் - வினைத்தொகை.

சுக. விடர் - தீயநடையையுடைய காமுகர்; ஒரு வித்தையையுடையவரென்று கூறுவர் **பிரதாபருத்திரீய**மென்னும் வடநூலாசிரியர். தூர்த்தர் - வஞ்சகர். விடருந்தூர்த்தரும :—கரு - ம் காதை, சுO. விட்டேற்றுளர் - (?) "விடருந்தூர்த்தரும விட்டே றிசைப்ப" என்பது **பெருங்கதை**, உஞ்சைக்காண்டம், நருமதைச் சம்பந்தம். சிற்றினமாவது விடரும் தூர்த்தரும் நடருமுள்ளிட்ட குழுவென்று, **திருக்குறள்**, சிற்றினஞ்சேராமை யென்னும் அதிகாரத்தின் அவதாரிகையிலும், நகைவகையராகிய நட்பினராவார் விடரும தூர்த்தரும் வேழம்பரும்போன்று பலவகையால் நகுவித்துத் தாம் பயன்கொண்டு ஒழிவாரென்று அகஎ - ம் **திருக்குறளின்** விசேடவுரையிலும் **பரிமேலழகரெ**ழுதியிருக்கின்றனர். இவ்வடியிலுள்ள விடர்முதலிய மூன்றுபெயர்களுள் மூன்றாவதாகிய விட்டேற்றுளரென்பதற்குச் சரியாக முறையே 'நடர்' 'வேழம்பர்' என்பனவற்றைப் பரிமேலழகர் அமைத்திருத்தலை நோக்குமிடத்து விட்டேற்றுளரென்பதற்கு நடரென்றேனும் வேழம்பரென்றேனும பொருள்கொள்ளுதல பொருத்தமுடைத்தெனத் தோற்றுகின்றது. இனிச் சுற்றத்தினின்றும், நட்பினின்றும் நீங்கிப் பிறரையும் அவ்வண்ணம் செய்விப்போனை விட்டேற்றியென்றல் வழக்கின்கண் உண்மையின், விட்டேற்றுளரென்பதற்கு அத்தன்மையையுடையோரென்றுபொருள்கூறினும் பொருந்தும்.

சுஉ. நடவை - வழி. வைகி - (விடர் முதலியோர்) தங்குதலால்.

சுரு. வட்டு - உண்டையுருட்டுதல்; இதனை, "அரங்கின்றி வட்டாடி யற்றே" (**திருக்குறள்**, சOக) எனவும், "கல்லாச் சிறாஅர் நெல்லிவட் டாடும்" (**நற்றிணை**, ரு.) எனவும் வருவனவற்றாலுணர்க. வம்பக் கோட்டி - பயனில சொற்களைச் சொல்லுவோர்கூட்டம்; "புல்லா வெழுத்திற் பொருளில் வறுங்கோட்டி" என்பது **நாலடியார்**, மேன்மக்கள், கூ. "வெள்ளைக் கோட்டியும் விரகினி லொழிமின்" என்பது **சிலப்பதிகாரம்**, வரந்தருகாதை, கககூஅ.

சுச. முட்டா வாழ்கைகை - குறையாத வாழ்க்கை; "முட்டா வின்பத்து முடிவுல கெய்தினர்" என்பது **சிலப்பதிகாரம்**, அடைக்கலக்காதை, ககூஎ

ருகூ - சுச. பீடிகை ஒடுங்கியதாகி முறைமையதாகவென்க.

சுசு. உண்போர் விஞஅய் - உண்போரை வினவி. 'உண்போர் விஞவ' என்றும் பாடம.

சுஎ. இகழ்ந்து - இகழ்தலால்.

சுஅ. அருந்தேமாந்த - பிறர் உண்ண ஆசைப்பட்ட; கஅ - ம் காதை, எஉ.;

யிருந்தாய் நீயோ வென்பா ரின்மையிற்
றிருவின் செல்வம் பெருங்கடல் கொள்ள
வொருதனி வரூஉம் பெருமகன் போலத்
தானே தமியன் வருவோன் றன்முன்
மாநீர் வங்கம் வந்தோர் வணங்கிச்
சாவக நன்னாட்டுத் தண்பெயன் மறுத்தலி
னூனுயிர் மடிந்த துரவோ வென்றலு
மமரர்கோ னாணையி னருந்துவோர்ப் பெறாது
குமரி மூத்தவென் பாத்திர மேந்தி
யங்கந் நாட்டுப் புகுவதென் கருத்தென
வங்க மாக்களொடு மகிழ்வுட னேறிக்
கால்விசை கடுகக் கடல்கலக் குறுதலின்

---

புறநானூறு, ௧௦௧. ஆருயிர்முதல்வனை - ஆபுத்திரனை.

௬௬. நீ இருந்தாயோவென்று வினவுவோரில்லாமையால்.

௬௭ - ௬௯. இகழ்தலால் இன்மையின்.

௭௦. செல்வத்தைக் கடல்கொள்ள.

௭௧. பெருமகன் - அரசன்; "பெருநில முழுதாளும் பெருமகன்" என்பது சிலப்பதிகாரம், மங்கலவாழ்த்துப் பாடல்.

௭௨. உண்போர் பலரிடையேயிருந்தோன் இப்போது மிகத்தனிமையுற்றானென்பார் 'தானே தமியன் வருவோன்' என்று ஆசிரியர் இரங்கிக்கூறினர்; இப்படியே, "காடேந்து பூஞ்சாரல் சடந்தான் காலிற் கழலானே" சீவகசிந்தாமணி, பதுமையாரிலம்பகம், ௬௪.) என்றும், "கானம் வழங்கன் மேவிக் காலினனேகி னானே" (சீவகசிந்தாமணி, கேமசரியாரிலம்பகம், ௧.) என்றும் திருத்தக்கதேவர் நடந்துசென்ற சீவகனைப்பற்றி இரங்கிக்கூறியிருத்தல் காண்க.

௭௦ - ௭௨. "நயனுடையா னல்கூர்ந்தா னாதல் செயுநீர, செய்யா தமைகலா வாறு" என்னும் ௨௧௯-ம் திருக்குறளை இவ்வடிகளின்பொருளோடு ஒப்பிடுக.

௭௩. மாநீர் - கடல். வங்கம் - கப்பல்.

௭௪. தண்பெயல் மறுத்தலின் - தண்ணியமழை இல்லாது போனமையால்.

௭௫. ஊன் உயிர்மடிந்தது - உடம்போடு கூடியவுயிர் அவ்வுடம்பினின்றும் நீங்கிற்று. என்றலும் - என்று வங்கம்வந்தோர் கூறலும்.

௭௬. இந்திரன்கட்டளையினால் உண்போரைப்பெறாமல்; ஆணையிற் பெறாதென்க. ஆணை - கட்டளை. வரங்கொடுத்தற்குவந்த இந்திரனை ஆபுத்திரன் மதியாததுபற்றி இந்திரன் கோபங்கொண்டு இரப்போர் இலராகும்வண்ணம் நாடெங்கும் நிறைக்கும்படி மழை பெய்வித்தமையின், இங்ஙனங்கூறினார்; இதனை, இக்காதையில் ௯௪-ம் அடிமுதலியவற்றாலுணர்க.

௭௭. குமரி மூத்த என்பாத்திரம் - ஒரு கன்னிப்பெண் வறிதே மூத்தாற்போன்ற எனதுபாத்திரம்; கொடுப்போருங் கொழுநனுமேயன்றித் தானும் பயனிழந்து கழிந்த குமரியைக் கண்டு உவமைகூறினமையின், தானும் ஏற்பாருமேயன்றிப் பாத்திரமும் பயனிழந்து கழிந்ததேயென்று ஆபுத்திரன் இரங்கியவாறாயிற்று; "அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வ மிகநலம், பெற்றாள் தமியண்மூத் தற்று" என்றார் திருக்குறளிலும்; ௧௦௦௭. குமரிமூத்த.— ௨௨-ம் காதை, ௧௪௫. பாத்திரம் - பாத்திரத்தை.

௭௮. அங்கநாடு - இவை ஒருசொன்னீர்மைய. என் கருத்தென - எனதெண்ணமென்று ஆபுத்திரனியம்ப. 'புகுவதுபொருளென' என்றும் பாடம்.

௮௦. கால் - காற்று. 'கால்விசை நடுக்கி' என்றும் பாடம்.

மாலிதை மணிபல் லவத்திடை வீழ்த்தது
தங்கிய தொருநாட் டாளுங் கிழிந்தன
னிழிந்தோ னேறின னென்றிதை யெடுத்து
வழங்குநீ ரங்கம் வல்லிருட் போதலும்
வங்கம போயபின் வருந்துதுய ரெய்தி
யங்கு வாழ்வோர் யாவரு மின்மையின்
மன்னுயி ரோம்புமிம் மாபெரும் பாத்திர
மென்னுயி ரோம்புதல் யானோ பொறேஎன்
றவந்தீர் மருங்கிற் றனித்துய ருழந்தேன்
சுமந்தென பாத்திர மென்றன னெழுது
கோமுகி யென்னுங் கொழுநீ ரிலஞ்சியி
னோரியாண் டொருநாட் டோன்றென விடுவோ
னருளறம பூண்டாங் காருயி ரோம்புந
ருளரெனி லவர்கைப் புகுவா யென்றாங்
குண்ணா நோன்போ டுயிர்பதிப் பெயர்ப்புழி
யந்நா ளாங்கவன் றன்பாற் சென்றே
னென்னுற் றனையோ வென்றியான் கேட்பத்
தன்னுற் றனபல தானெடுத் துரைத்தனன்
குணதிசைத் தோன்றிக் காரிருள் சீத்தும்

---

௮௧. இதை - கப்பற்பாய்.

௮௨. ஒருநாள் கப்பல் தங்கியது.

௭௯ - ௮௨. ஏறி ஆங்கு இழிந்தனன்.

௮௬. அங்கு - மணிபல்லவத்தில்.

௮௭. ஓம்பும் - முற்று. பாத்திரம் மன்னுயிரோம்புமென்க.

௮௮. 'யானோபொற்றேன்' என்றும் பாடம்.

௮௯. இப்பாத்திரமடைதற்கு முற்பிறப்பில் மிகநல்வினைசெய்த நான் அதனையொழிந்து பின்னர்ச் சிறிது தீவினையுஞ் செய்தபக்கத்தானே தனித்துத் துயரத்தையுழந்தேன்; இவ்வடியைப்போலச் **சிலப்பதிகாரம்,** ஊர்காண்காதை, ௨௬ - ம் அடி வந்திருத்தல்காண்க.

௯௦. பாத்திரம் சுமந்து என் - ஏற்போரில்லாத இவ்விடத்தில் இப்பாத்திரத்தை யான்சுமத்தலால் வரும்பயன் யாது.

௯௧. 'என்னுமிக் கொழுநீர்' என்றும் பாடம்.

௯௨. ஓர்யாண்டொருநாளென்றது - வைசாகசுத்தபௌர்ணிமையை.

௯௩. அருளறம் - தயாதர்மம். இதனை, ௫ - ம் காதை, ௭௫ - ம் அடிக்குறிப்பிற் காண்க.

௯௪. புகு[illegible]ாயென்று - புகுவாயென்று சொல்லிப் பாத்திரத்தைக் கோமுகியில் விடுத்து.

௯௫. உண்ணாநோன்போடு - பட்டினிவிட்டிருத்தலாகிய விரதத்தால், உயிர்பதிப்பெயர்ப்புழி - உயிரை விடுகையில்; உயிர்பதிப்பெயர்த்தல் - உயிரைநீத்தல்; "உண்ணா நோன்போ டுயிர்பதிப் பெயர்த்தும்" என்பது சிலப்பதிகாரம், நீர்ப்படைக் காதை, ௮௯.

௯௬. யானென்றது அறவணவடிகள்.

௯௭. என் உற்றனையோ - யாது துன்பமடைந்தாயோ.

௯௮. தனுற்றனபல - தன்னையடைந்த பலதுன்பங்களை. 'தன்னுறுதுன்பம்' என்றும் பாடம்.

௯௯. குணதிசை - கீழ்த்திசை. சீத்து - நீக்கி.

குடதிசைச் சென்ற ஞாயிறு போல
மணிபல் லவத்திடை மன்னுடம் பிட்டுத்
தணியா மன்னுயிர் தாங்குங் கருத்தொடு
சாவக மாளுந் தலைத்தாள் வேந்த
னாவயிற் றுதித்தன னாங்கவன் றானென

பாத்திரமரபுகூறியகாதை முற்றிற்று.

---

௧௦௦. குடதிசை - மேற்றிசை.

௧௦௨. தன்னாற் பசிதணிக்கப்படாத நிலைபெற்ற உயிரைப்பாதுகாக்கும் எண்ணத்துடன்.

௧௦௩. தாள் - முயற்சி. வேந்தன் - பூமிசந்திரன். 'தலைத்தார்வேந்தன்' என்றும் பாடம்.

௧௦௪. ஆங்கவன் - ஆபுத்திரன்.

௧௦௩ - ௧௦௪. ஆபுத்திரனைப்பெற்றபசு மண்முகனென்னு முனிவனிடத்ததாயினும் பூமிசந்திரனுடையநாட்டகத்ததாதலின், 'வேந்தனு' எனப்பட்டது.

௧௦௨ - ௧௦௪. உயிர் உடம்பினீங்குங் காலத்து அதனால் யாதொன்று பாவிக்கப்பட்டது அஃது அதுவாய்த்தோன்றுமென்பது எல்லா நூல்களுக்கும் ஒத்த துணிபாகலின், 'மன்னுயிர் தாங்குங் கருத்தொடு, ஆவயிற் றுதித்தனன்' என்றார். இக்கருத்தை, ௩௫௮-ம் திருக்குறளுக்குப் பரிமேலழகரெழுதிய விசேடவுரையாலுணர்க.

௧ - ௧௦௪. உழந்தோர் மலைக்குமென்றலும், இல்லோன் ஆருரெய்த, சிந்தாவிளக்குத் தோன்றிப் பாத்திரங்கொடுத்தலும், ஆபுத்திரன் ஓம்பலின், விடாவாய் ஒலிப்ப, இந்திரன்கொள்கென, உரைசெய்வோன் 'யாவையீங்களிப்பன தேவர்கோன்' என்றலும், ஆயிரங்கண்ணோனை உலகோர்க்களித்தலும், பாண்டிநனாடு பான்மைத்தாகலின், பீடிகை முறைமையதாக, ஆபுத்திரன்நீங்கி உண்போரைவினவி எனபாரினமையின் வருவோனறன்முன் வந்தோர் மடிந்தவென்றலும், வங்கமேறி இழிந்தனன்; வங்கம் வலவிருட்போதலும் துயரெய்தி விடுவோன் புகுவாயென்று உயிர்பதிப்பெயர்ப்புழிச் சென்றேன் கேட்ப உரைத்தனன்; அவன் ஆவயிற்றுதித்தனனென வினைமுடிவு செய்க.

பதினைந்தாவது

# பாத்திரங்கொண்டுபிச்சைபுக்ககாதை.

[பதினைந்தாவது மணிமேகலை பாத்திரங்கொண்டு பிச்சைக்குப் பெருந்தெருப்போய பாட்டு.]

இன்னுங் கேளா யிளங்கொடி மாதே
யங்நா ளவனை யோம்பிய நல்லாத்
தண்ணென் சாவகத் தவள மால்வரை
மண்முக னென்னு மாமுனி யிடவயிற்
பொன்னின் கோட்டது பொற்குளம புடையது
தன்னலம பிறர்தொழத் தான்சென் றெய்தி
யீனு முன்ன மின்னுயிர்க் கெல்லாந்
தான்முலை சுரந்து தன்பா லூட்டலு
மூன்று காலமுந் தோன்றநன் குணர்ந்த
வான்ற முனிவ னதன்வயிற் றகத்து
மழைவளஞ் சுரப்பவு மன்னுயி ரோம்பவு
முயிர்கா வலன்வந் தொருவன் றோன்றுங்
குடர்த்தொடா மாலை பூண்பா னலலவ
னடர்ப்பொன் முட்டை யகவையிற் றானெனப்

---

உ. அங்நாள் - சாலியென்பவள் ஈன்று போகட்டுப்போனநாளில். — கரு - ம் காதை, கO. அவனை - ஆபுதிரனை. ஆ - பசு.

ங. சாவகம் - சாவகநாடு.

ச. இடவயின் - இடததில்.

ரு. கோட்டது - கொமபையுடையது.

அ. 'நான்முலை சுரந்து நன்பா லூட்டலும்' என்றுமபாடம்.

உ - அ. நலலா, மாமுனியிடத்திற் கோட்டதாய்க் குளம்புடையதாய்ச சென்றெய்தி உயிர்கவெல்லாம் தன்பாலூட்டலுமென்க.

கO. முனிவன் - மண்முகன்; அதன் வயிற்றகத்து - அப்பசுவயிற்றில, 'ஆன் வயிற் றகத்து' என்றும் பாடம்.

கஉ. உயிர்காவலனாகிய ஒருவன்வந்து தோன்றுவான்.

கO - கஉ. அதன்வயிற்றகத்துத் தோன்றுமென்க.

கச. அடர் - தகடு; பொன் அடர் முட்டை அகவையிற்றான் - பொற்றகட்டாலாகிய முட்டையின் உள்ளிடத்துள்ளான். என - என்று மண்முகமுனிவன்சொலல.

கங - கச. அங்ஙனந்தோன்றுவோன் குடர்மாலை பூண்பானல்லன், முட்டை அகவையிற்றானென ; "குடர்த்தொடர் மாலை சூழா தாங்கோ, ரடர்ப்பொன் முட்டையு ளடங்கிய வண்ணமும்" என்பர் பின்னும், உரு-ம் காதை, எஉ - எங.

பிணிநோ யின்றியும் பிறந்தறஞ் செய்ய
மணிபல் லவத்திடை மன்னுயிர் நீத்தோன்
றற்காத் தளித்த தகையா வதனை
யொற்கா வுள்ளத் தொழியா ணாதலி
னுங்கவ் வாவயிற் றமரர்கண முவப்பத
தீங்கனி நாவ லோங்குமித் தீவினுக்
கொருதா னாகி யுலகுதொழத் தோன்றினன்
பெரியோன் பிறந்த பெற்றியைக் கேணீ
யிருதிள வேனிலி லெரிகதி ரிடபத்
தொருபதின் மேலு மொருமூன்று சென்றபின்
மீனத் திடைநிலை மீனத் தகவயிற்
போதித் தலைவனொடு பொருந்திய போழ்தத்து
மண்ணக மெல்லா மாரி யின்றியும்
புண்ணிய நன்னீர் போதொடு சொரிந்தது
போதி மாதவன் பூமியிற் றோன்றுங்
கால மன்றியுங் கண்டன சிறப்பெனச
சக்கர வாளக் கோட்டம வாழு
மிக்க மாதவா விருமபினர் வியந்து
கந்துடை நெடுநிலைக கடவு ளெழுதிய
வந்திற் பாவை யருளு மாயிடி
னறிகுவ மென்றே செறியிருட் சேறலு

---

கரு. பிணிநோயின்றியும் - பிணியா லுளதாகும் வருத்தம் இல்லாதிருகக வும்.

கசு. உயிர் நீத்தோன் - உயிரைத்துறந் தவனாகிய ஆபுத்திரன்.'

கரு - கசு. நோயின்றியும் அறஞ்செய்தற்பொருட்டு உயிர்நீததோனெனக; "உண்ணு நோன்போ டுயிர்பதிப் பெயர்ப்புழி" என்று முன்புவந்திருததல் காண்க; கச - ம் காதை, கூரு.

கஎ. தகை - அழகு; தகுதியுமாம். தகையாத் தகுதி' எனறும்பாடம்.

கஅ. ஒற்கா - தளராத; இஃது ஒல்கா வென்பதன் விகாரம்; "ஒல்கா வுள்ளமொ டொருபுடைத் தழீஇ" என்பது புறநானூறு, கக௫.

கசு - உக. நீத்தோன் அவ்வாவயிற்றுத் தோன்றினன்.

உஉ. பெற்றி - பேறு. 'பெற்றி யது கேள்' என்றும் பாடம்.

உரு. 'எறிகதிரிடபத்து' எனறும் பாடம.

உரு - உசு. இவ்வடிகளின் பொருளை, கக - ம் காதையில் சுo - ம அடிமுதலிய வற்றின குறிப்பிற்காண்க.

உக - உசு. போழ்ததுத் தோன்றின னெனவினையயும்.

உகூ. போதிமாதவன் - புததன், 'போதிநாதன' என்றும் பாடம.

௩0. சிறப்புக்கள் காணப்பட்டன.

உக - ௩0. புததன் தோன்றுங்காலத்து உளவாகுஞ் சிறப்புக்களை, கஉ - ம் காதையில அசு - ம் அடி முதலியவற்றிற் காண்க.

௩௪. அந்தில் - அவ்விடத்து; "அந்தி லரங்கத் தகன்பொழி லகவயின்" என்பது சிலப்பதிகாரம், காடுகாண் காதை, சு.

உஎ - ௩௫. நீர்சொரிந்தது, சிறப்புக் கண்டனவென்று மாதவர்வியநது அறிகு

மணிபல் லவத்திடை மன்னுயிர் நீத்தோன்
றணியா வுயிருயச் சாவகத் துதித்தன
னாங்கவன் றன்றிற மறவண னறியுமென்
றீங்கென் னவை வருத்திய திதுகேள்
மண்ணாள் வேந்தன் மண்முக னென்னும்
புண்ணிய முதல்வன் றிருந்தடி வணங்கி
மக்களை யிலலேன் மாதவ னருளாற்
பெற்றேன் புதல்வனை யென்றவன் வளர்ப்ப
வரைசாள் செல்வ மவன்பா லுண்மையி
னிரைதார் வேந்த னாயின னவன்றான்
றுறக்க வேந்தன் றுயப்பிலன் கொல்லோ
வறக்கோல் வேந்த னருளிலன் கொல்லோ
சுரந்து காவிரி புரந்துநீர் பரக்கவு
நலத்தகை யின்றி நல்லுயிர்க் கெல்லா
மலத்தற் காலை யாகிய தாயிழை
வெண்டிரை தந்த வமுதை வானோ
ருண்டொழி மிச்சிலை யொழித்துவைத் தாங்கு
வறனோ டுலகின் வான்றுயர் கெடுக்கு
மறனோ டொழித்த லாயிழை தகாதென
மாதவ னுரைத்தலு மணிமே கலைதான்

வமென்று பாவைபாற் செறியிருளிற செல்லுதலுமென்க.

௩௯. என்னவை வருத்தியதென்றது-முனிவர்களுக்கு ஆபுத்திரன்வரலாற்றை யான் சொல்லும்படி அப்பாவை செய்ததென்றவாறு.

௪0. வேந்தன் - பூமிசந்திரன்.

௪௧. 'திருந்தடி பொருந்தி' என்றும் பாடம்.

௪௫. நிரைதார் - வினைத்தொகை. அவன்றான் - ஆபுத்திரன்றான்.

இதுகாறும் ஆபுத்திரன்பிறப்பு கூறப்பட்டது.

௪௬. துறக்கவேந்தன் - இந்திரன். துய்ப்பு இலன் கொல்லோ - அவிநுகர்ச்சி இலனாயினனோ. 'துப்பிலன் கொல்லோ' என்றும் பாடம்.

௫0. அலத்தற்காலை ஆகியது - வறுமைக்காலம உண்டாயிற்று.

௪௬ - ௫0. இப்படியே "செங்கோல் கோடியோ செய்தவம் பிழைத்தோ, கொங்கவிழ் குழலார் கற்புக்குறைபட்டோ, நலத்தகை நல்லாய் நன்னா டெல்லா, மலத்தற் காலை யாகிய தறியேன" என்று பின்வருதல காண்க; ௨௮ - ம் காதை, ௧௮௮ - ௧௯௧.

௫௨. ஒழித்து வைத்தாங்கு - பயன்படுத்தாதுவைத்தாற்போல. மிச்சில - மிகுதி. 'ஒளித்துவைத்த தாங்கு' என்றும் பாடம்.

௫௩. வறன் ஓடு உலகு - வற்கடமான காலம பரந்தவுலகம; "வறனோடின் வையகத்து வான்றருங கற்பினாள்" என்பது கலித்தொகை, ௧௬.

௫௪. அறனோடொழித்தல் - அமுதசுரபியைப் பயன்படுத்தாதுவைத்தல்.

௫௩ - ௫௪. ௨௧ - ம் காதை, ௧௫௭ - ௧௫௮.

௫௫. மாதவன் - அறவணவடிகள்.

றாயர் தம்மொடு தாழ்ந்துபல வேத்திக்
கைக்கொண் டெடுத்த கடவுட் கடிஞையொடு
பிக்குணிக் கோலத்துப் பெருந்தெரு வடைதலு
மொலித்தொருங் கீண்டிய வூர்க்குறு மாக்களு
மெலித்துகு நெஞ்சின் விடருந் தூர்த்தரும்
கொடிக்கோ சம்பிக் கோமக னாகிய
வடித்தேர்த் தானை வத்தவன் றன்னை
வஞ்சஞ் செய்துழி வான்றளை விடீஇய
வுஞ்சையிற் றோன்றிய யூகி யந்தண
னுருவுக் கொவ்வா வுறுநோய் கண்டு
பரிவுறு மாக்களிற் றம்பரி வெய்தி

---

ருசு. தாயர் - மாதவி, சுதமதி

ருஎ. கடிஞை - பிச்சைப்பாத்திரம்.

ருஅ. பிக்குணிக்கோலத்து - பிக்குணிக்கோலத்துடன்; துறந்தோர்களில் ஆண்பாலாரைப் பிக்ஷுக்களென்றும், பெண்பாலாரைப் பிக்ஷுணிகளென்றுங் கூறுதல் பௌத்தசம்பிரதாயம்; கோலம் - வேடம்.

ருரு - ருஅ. மணிமேகலை எத்திக் கடிஞையொடு கோலத்தொடு பெருந்தெரு வடைதலுமென்க.

இனிப் பெருந்தெருவிற் பிச்சைக்குப் போந்த மணிமேகலையின் பிக்குணிக் கோலத்தைக் கண்டோருடைய மனவருத்தத்தைக்கூறுவார்.

ருகூ. குறுமாக்கள் - அறிவில்லாதசிறியர்; "அடர்க்குறு மாக்கள்" என்றார் முன்னும; கரு - ம் காதை, சO; "மடக்குறு மாகககள்" என்பது கலித்தொகை, அஉ. 'ஒளித்தொருங கீண்டிய' என்றும் பாடம்.

சுO. மெலிந்து - மெலித்தென்றாயது விகாரம். விடருந் தூர்த்தரும் —கச-ம் காதை, சுக. 'விடமருந் தூர்த்தரும்' என்றும் பாடம்.

சுக. கோசம்பி - கௌசாம்பிநகரம்; இது, முதலிற் குசாம்பனென்பவனாற் செய்யப்பட்டதாதலின், இப்பெயர் பெற்றதென்பர்; பாகதம்; "கொடியணி நெடுமதிற் கொடிக்கோசம்பி" என்பது பெருங்கதை, உஞ்சைக்காண்டம், வயந்தகனகன்றது. கோமகனாகிய - அரசனாகிய.

சுஉ. வடி - திருத்தம்; "வானுட்கும வடி நீண்மதில்" என்பது புறநானூறு, கஅ. வத்தவன் - வத்ஸதேசத்தரசனாகிய உதயணன்; "வயந்தககுமரன் வத்தவற் குரைப்ப" என்பது பெருங்கதை, உஞ்சைக்காண்டம், ஊர்தீயிட்டது.

சுஉ - சுரு. வத்தவன றன்னை வஞ்சஞ் செய்துழி - (தனக்குத் திறைகொடாததுபற்றிச் சினந்து சாலங்காயனனென்னுந் தன்மந்திரியால் யந்திரயானையைக் காட்டி வஞ்சமாகப்பிடிப்பித்துப் பிரச்சோதனனென்னு மரசன்) உதயணனைச் சிறைப்படுத்தியபொழுது.

சுச. உஞ்சையில் - உச்சயினிநகரத்தில; இஃது அவந்திநாட்டிலுள்ளது; பிரச்சோதனனுடைய இராசதானி; இதையே அவந்தியென்றும் வழங்குவர் தோன்றிய-வேற்றுருவங்கொண்டு தோன்றிய; யூகியந்தணன - இவன் பிரமசுந்தரயோகியென்பவருடைய குமாரன, உதயணனுடைய மந்திரிகள் நால்வருளொருவன்.

சுசு. பரிவுறுமாக்களில் - துன்பமுற்ற சனங்களைப்போல.

சுக - சுசு. பிரச்சோதனன் உதயணனை வஞ்சித்துச் சிறைப்படுத்தியபொழுது அவனைச் சிறைமீட்டற்கு யூகியென்பவன் மாறுவடிவங்கொண்டு உச்சயினிநகரப் பெருந்தெருவையடைந்ததும், அவனைக்கண்டோர் பலரும் பரிவுற்றுச் சூழ்ந்ததுமாகியவிவற்றை உதயணகுமாரகாவ்யத்துள்ள உஞ்சைக்காண்டத்தாலுணர்க. பெருங்கதையென்று வழங

யுடைய குமர னுளங்கொண் டொளித்த
மதுமலர்க் குழலாள் வந்து தோன்றிப்
பிச்சைப் பாத்திரங் கையினேந் தியது
திப்பிய மென்றே சிந்தைநோய் கூர
மணமனை மறுகின் மாதவி யீன்ற
வணிமலர்ப் பூங்கொம பகமலி யுவகையிற்
பத்தினிப் பெண்டிர் பண்புட னிடூஉம
பிச்சை யேற்றல் பெருந்தக வுடைத்தெனக்
குளனணி தாமரைக் கொழுமலர் நாப்ப
ணொருதனி யோங்கிய திருமலர் போன்று
வான்றரு கற்பின் மனையுறை மகளிரிற்
றான்றனி யோங்கிய தகைமைய ளன்றோ
வாதிரை நல்லா ளவண்மனை யிம்மனை
நீபுகல வேண்டு நேரிழை யென்றனள்
வடதிசை விஞ்சை மாநகர்த் தோன்றித்
தென்றிசைப் பொதியிலோர் சிற்றியாற் றடைகரை
மாதவன் றன்னால வல்வினை யுருப்பச்
சாபம் பட்டுத் தனித்துய ருழாஉம்
வீவில் வெமபசி வேட்கையொடு திரிதரும்

---

குகின்ற உதயணன் கதையென்னும்பழையதமிழ்நூலில் இவ்வரலாற்றைக்கூறும்பாகங் கிடைக்கவில்லை.

எ0. திப்பியம் - ஈண்டு ஆச்சரியமென்னும்பொருளைத்தந்து நின்றது. சிந்தைநோய்கூர - மனவருத்தமிக; சிந்தை - சிந்தாகுலம்; "என்றுண்டாங் கொல்வினிக் கட்படு நாளெனுஞ் சிந்தையே" என்பது சீவகசிந்தாமணி, குணமாலையாரிலம்பகம், கூ0க.

ருக - எ0. குறுமாக்களும் விடரும் தூர்த்தரும், மாக்களிற் பரிவெய்தி, குழலாள் தோன்றி ஏந்தியது திப்பியமென்று நோய்கூரவென்க.

எஉ. பூங்கொம்பு-மணிமேகலை. 'அணிமலர்ப் பூங்கொடி' என்றும் பாடம்.

எஉ - எச. பூங்கொம்பு பத்தினிப்பெண்டிர் இடும் பிச்சையேற்றல பெருந்தக வுடைத்தெனககூற.

எரு - எசு. ச - ம் காதை, அ - க.

எஎ. வான்றருகற்பு - மழையைப்பெய்விக்குங்கற்பு; "ஆங்கவை யொழிகுவை யாயி னாயிழை, யோங்கிரு வானத்து மழையுநின் மொழியது" என்று பின்வருதலகாண்க; உஉ - ம் காதை, சுஅ - சுக; "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள், பெய்யெனப் பெய்யு மழை" எனபது திருக்குறள், ருரு. "வறனோடின் வையகத்து வான்றருங் கற்பினாள்" என்பது கலித்தொகை, கசு.

எசு - எக. திருமலர்போன்று ஆதிரைநல்லாள் தான் தனியோங்கிய தகைமையளன்றோவென்க.

அக. வடதிசை விஞ்சைமாநகர் - வடதிசையிலுள்ள வித்தியாதரநகரமாகிய காஞ்சனபுரத்தில்.

அஉ. பொதியில - பொதியின்மலை.

அரு. வல்வினை யுருப்ப - வலியதீவினை யழல; உருப்ப - தோன்றவென்றுமாம்.

அரு - அச. மாதவன்றன்னாற் சாபம பட்டு.

காயசண் டிகையெனுங் காரிகை தானென.

பாத்திரங்கொண்டு பிச்சைபுக்ககாதை முற்றிற்று.

---

அசு. காரிகை - பெண்.

அக - அசு. தோன்றி அடைகளாயில *மாதவனாற்சாபம்பட்டுத்திரிதருங் காயசண்டிகையெனுங்காரிகையென்க; கஎ-ம் காதை, உக - எரு; உ0 - ம் காதை, உஉ - உசு.

அ0 - அசு. என்றனள் காயசண்டிகை யெனுங்காரிகையென்க

க - அசு. "மாதே, கேளாய்; நல்லா சென்றெய்தி ஊட்டலும், முனிவன் 'ஒருவன்றேன்றும்; அவன் பூண்பானல லன்; அகவையிற்றான்' என, நீத்தோன் ஒழியானாதலின், ஒருநாளாகிப் போழ்தத்துத்தோன்றினன்; அப்போழ்தத்து நன் னீர் போதொடு சொரிந்தது; மாதவர் வியந்து அறிகுலமென்று பாலையாற்சேறலும், அஃது 'அறவணனறியும்' என்று என்னுளை வருத்திற்று; இது கேள்; மண்ணாள்வேந்தன் வணங்கிப் பெற்றேனென்றுவளர்ப்ப, உண்மையின், அவன வேந்தனாயினன்; அலததற்காலை ஆகியது; ஒழித்தல் தகாது" என மாதவனுரைத்தலும், மணிமேகலை தாயரொடு சூழ்ந்தேத்திக் கடிஞையொடு கோலத்தொடு பெருந்தெருவடைதலும், மாக்களும் விடரும் தூர்த்தரும் பரிவெய்தித் திப்பியமென்று நோய்கூரப் பூங்கொம்பு 'பெருந்தகவுடைத்து' என, அதுகேட்டுக் காரிகை, 'நீ புகல்வேண்டும்' என்றனளென வினைமுடிவுசெய்க.

## பதினாறாவது

# ஆதிரைபிச்சையிட்டகாதை.

[பதினாறாவது மணிமேகலைக்கு ஆதிரையென்னும்
பத்தினிப்பெண்டிர் பாத்தூணீத்தபாட்டு.]

ஈங்கிவள் செய்தி கேளென விஞ்சையர்
பூங்கொடி மாதர்க்குப் புகுந்ததை யுரைப்போ
ளாதிரை கணவ னாயிழை கேளாய்
சாதுவ னென்போன் றகவில னாகி
யணியிழை தன்னை யகன்றனன் போகிக்
கணிகை யொருத்தி கைத்தூ ணல்க
வட்டினுஞ் சூதினும் வான்பொருள் வழங்கிக்
கெட்ட பொருளின் கிளைகே டுறுதலிற்
பேணிய கணிகையும் பிறர்நலங் காட்டிக்
காண மிலியெனக் கையுதிர்க் கோடலும்
வங்கம் போகும் வாணிகர் தம்முடன்
றங்கா வேட்கையிற் றானுஞ் செல்வுழி

---

க. ஈங்கிவள் - ஒருசொல்; இவள் - ஆதிரை.

க - உ. விஞ்சையர்பூங்கொடி - காயசண்டிகை. மாதர்க்கு - மணிமேகலைக்கு; ஆதிரைக்கென்றுமாம். மாதர்க்கு உரைப்போளென்க. புகுந்ததை - (ஆதிரைக்குச்) சம்பவித்ததை.

ங - ச. கணவன் சாதுவனென்போன்.

ரு. ஆதிரையைப் பிரிந்துசென்று.

சு. கணிகை - வேசை. கைத்தூண் - (தீய) ஒழுக்கத்தால் வந்த உணவு; கை - ஒழுக்கம்; "கடவ தன்றுநின் கைத்தூண் வாழ்க்கை" என்பது சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை, ருஎ. நல்கவென்பதன்பின் 'உண்டு' என்று ஒருசொல் வருவிக்க.

எ. வட்டினும் சூதினும் - வட்டாடலிலும் சூதாடலிலும். வழங்கி - கொடுத்து. வட்டு சூது :— கச - ம் காதை, சுங.

அ. கணிகைக்கும் வட்டிற்கும் சூதிற்கும் கொடுக்கப்படுதல்பற்றி, 'கெட்ட பொருள்' என்றார். பொருளின்கிளை - பொருளின்பகுதிகள்.

கO. காணமிலி - பொன்னில்லாதவன். கையுதிர்க்கோடலும், உம் - உடனிகழ்ச்சி; "நீயெனப் பேச லோடும்.......மயங்கி வீழ்ந்தான்" என்புழிப்போல. இது சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், ஙசுO. 'கையுதிர்க்கோடல்' என்பதன் பொருளை, ங - ம் காதை, கOக - ம் அடிக்குறிப்பிற் பார்க்க; ரு - ம் காதை, ருரு.

அ - கO. கேடுறுதலிற் கையுதிர்க்கோடலுமென்க.

கக. வாணிகர் - வியாபாரிகள்.

கஉ. தங்கா வேட்கை - பலவிடத்தும் செல்லவேண்டுமென்ற விருப்பம். தானென்றது - சாதுவனை.

களியிரு முந்நீர் வளிகலன் வெளவ
வொடிமரம் பற்றி யூர்திரை யுதைப்ப
நக்க சாரணர் நாகர் வாழ்மலைப்
பக்கஞ் சார்ந்தவர் பான்மைய னாயின
னவாய் கேடுற நன்மரம் பற்றிப்
போயினன் றன்னோ டிருயப் போந்தோ
ரிடையிருள் யாமத் தெறிதிரைப் பெருங்கட
லுடைகலப் பட்டாங் கொழிந்தோர் தம்முடன்
சாதுவன் றானுஞ் சாவுற் றனனென
வாதிரை நல்லா ளாங்கது தான்கேட்
டேரீ ரேயோ வொள்ளழ லீமந்
தாரீ ரோவெனச் சாற்றினள் கழறிச்
சுடலைக் கானிற் றொடுகுழிப் படுத்து
முடலை விறகின் முளியெரி பொத்தி
மிக்கவென் கணவன் வினைப்பய னுய்ப்பப்

---

கங. வளி - காற்ற. கலன் - கப்பல். காற்றாற் கப்பல் கவிழ.

கச. ஒடிமரம் - பாய்மரத்தின் ஒடிந்த துண்டம்; "கூம்பிற்ற துணடந் தழுவிக் கிடந்தான்" என்பது சீவகசிந்தாமணி, காந்தருவததையாரிலம்பகம், உக. உதைப்ப - செலுத்த; "ஓடுந் திரைக ளுதைப்ப வுருணடுருண்டு" என்பது சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையாரிலம்பகம், உச.

கரு. நாகரென்பதன்பொருளை, அ - ம் காதை, ருச - ம் அடிக்குறிப்பிற்பார்க்க. உடையில்லாமற் சஞ்சரிப்பவராதலின், நாகர், 'நக்கசாரணர்' எனப்பட்டார். நக்கம்=நக்நம் - நிருவாணம். சாரணராகிய நாகர். நக்கசாரணர் நாகர்:—கசு - ம் காதை, ஙங.

கசு. பான்மை - பகுதித்தன்மை, ங - ம் காதை, ஙங.

ங-கஎ. கணவன் சாதுவனென்போன், அவன் ஆடிப் போகி உண்டு வழங்கிச் செல்வழி வெளவுதலாற் பற்றிச் சார்ந்து அவர்பான்மையனாயினனென்க.

சாதுவன் கடலில் இறந்தானென்று கேட்ட ஆதிரையின்செய்தியை இனிக் கூறுவார்.

கஎ. போயினன் - சாதுவன். உய்ய - பிழைக்க.

கஅ. இடையிருள்யாமத்து - இருளையுடைய இடையாமத்தில்; யாமம் - இரவு; "யாரு மும்பக லுமமறி யாமையால்" என்பது சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், கoசு.

உo. கஅ - ம் காதை, சுச. உடைகலப்பட்டு - உடைந்தகப்பலில் அகப்பட்டு ஒழிந்தோர் - இறந்தோர்.

உக. என - என்றுசொல்ல.

கஎ - உக. போந்தோர் சாவுற்றனன.

உங. ஈமம் - பிணஞ்சுடுதற்கு அடுக்கும் விறகடுக்கு; மயானமுமாம.

உச. தாரீர் - தருவீர்.

உரு. சுடலைககான் - மயானம். படுத்து - செய்து. தொடுகுழிப்படுத்தல்:— சு - ம் காதை, சுசு.

உசு. முடலைவிறகு - முறுக்குண்ட விறகு; "முடலை யாக்கை முழுவலி மாக்கள்" என்பது பெரும்பாணாற்றுப் படை, சுக. பொத்தி - மூட்டி; "தீய ழற் பொத்தி" என்றார் முன்னும்; உ-ம் காதை, ருங.

உஎ. உய்ப்ப - செலுத்த.

புக்குழிப் புகுவே னென்றவள் புகுதலும்
படுத்துடன் வைத்த பாயற் பள்ளியு
முடுத்த கூறையு மொள்ளெரி யுறாஅ
தாடிய சாந்தமு மசைந்த கூந்தலிற்
சூடிய மாலையுந் தொன்னிறம் வழாது
விரைமலர்த் தாமரை யொருதனி யிருந்த
திருவின் செய்யோள் போன்றினி திருப்ப
தீயுங் கொல்லாத் தீவினை யாட்டியேன்
யாது செய்கே னென்றவ ளேங்கலு
மாதிரை கேளுன் னரும்பெறற் கணவனை
யூர்திரை கொண்டாங் குய்ப்பப் போகி
நக்க சாரணர் நாகர் வாழ்மலைப்
பக்கஞ் சேர்ந்தனன் பல்லியாண் டிரான்
சந்திர தத்த னெனுமோர் வாணிகன்
வங்கந் தன்னொடும் வந்தனன் றோன்று
நின்பெருந் துன்ப மொழிவாய் நீயென
வந்தரந் தோன்றி யசரீரி யறைதலு
மையரி யுண்க ணழுதுயர் நீங்கிப்
பொய்கைபுக் காடிப் போதுவாள் போன்று
மனங்கவல் வின்றி மனையகம் புகுந்தென்
கண்மணி யனையான் கடிதீங் குறுகெனப்
புண்ணிய முட்டாள் பொழிமழை தரூஉ
மரும்பெறன் மரபிற் பத்தினிப் பெண்டிரும்

---

௨௮. புக்குழி - புக்கவிடத்து. அவள் - ஆதிரை.

௧௮ - ௨௮. போந்தோர் ஒழிந்தோர் தம்முடன் சாதுவனும் சாவுற்றானென, நலலாள் அதுகேட்டுக் கழறிப் படுத்துப் பொத்தி அதிற்புகுதலுமென்க

௨௯. பாயற்பள்ளி - படுக்கையிடம். 'படுததுட னமைதத பாவனைப் பள்ளியும்' என்றும் பாடம்.

௩௦. உறாது - உறாமல்.

௩௧. ஆடிய - பூசிய.

௩௨. வழாது - வழுவாமல்.

௩௩. தாமரை - தாமரைமலரில்.

௩௪. திருவின்செய்யோள் - திருமகள். இ - ம் காதை, ௪.

௩௬. யாதுசெய்கேன் - என்னசெய்வேன். அவள் - ஆதிரை.

௩௭. அருமபெறற்கணவன் - பெறுதற்கரியகணவன்.

௪௪. அந்தரம் - ஆகாயம். அசரீரி - அருவமாய் எங்கும் நிறைந்துள்ள முதற்றெய்வம்.

௪௫. 'அழியாது நீங்கி' என்றும்பாடம்.

௪௬. போதுவாள் - வருவாள்.

௪௭. கவல்வு - கவலையடைதல். மனையகம் - மனையிடம்.

௪௮. கண்மணியனையான் - கணவன். உறுகவென்று.

௪௯. முட்டாள் - வழுவாளாய்.

௫௦. பெண்டிரும், உம்மை - உயர்வுசிறப்பு.

விரும்பினர் தொழூஉம் வியப்பின ளாயின
ளாங்கவள் கணவனு மலைநீ ரடைகரை
யோங்குயர் பிறங்க லொருமர நீழன்
மஞ்சுடை மால்கட லுழந்தநோய் கூர்ந்து
துஞ்சுதுயில் கொள்ளவச் சூர்மலை வாழு
நக்க சாரணர் நயமிலர் தோன்றிப்
பக்கஞ் சேர்ந்து பரிபுலம் பினனிவன்
றானே தமியன் வந்தன னளிய
னூனுடை யிவ்வுடம் புணவென் றெழுப்பலு
மற்றவர் பாடை மயக்கறு மரபிற்
கற்றன னாதலிற் கடுந்தொழின் மாக்கள்
சுற்று நீங்கித் தொழுதுரை யாடி
யாங்கவ ருரைப்போ ரருந்திறல் கேளா
யீங்கெங் குருமக னிருந்தோ னவன்பாற்
போந்தரு ளீயென வவருடன் போகிக்
கள்ளடு குழிசியுங் கழிமுடை நாற்றமும்
வெள்ளென் புணங்கலும் விரவிய விருக்கையி
லெண்குதன் பிணவோ டிருந்தது போலப்
பெண்டுட னிருந்த பெற்றி நோக்கிப்
பாடையிற் பிணித்தவன் பான்மைய னாகிக்

---

௫௧. வியப்பு - ஆச்சரியம். (ஆதிரை) வியப்பினளாயினள்.
மேலே சாதுவன் செய்தி கூறுவார்.
௫௨. கணவனும் - சாதுவனும்.
௫௩. பிறங்கல் - மலை. 'ஓங்கிய பிறங்கல்' என்றும் பாடம். நீழல் - நிழலில.
௫௪. நோய் கூர்ந்து - வருத்தமிகுந்து.
௫௫. துஞ்சுதுயில்கொள்ள — (சாதுவன்) மிக்க நித்திரைகொள்ள. சூர் - அச்சம்.
௫௬. நயமிலர் - இனிமையில்லாதவர்.
௫௭. பரிபுலம்பினன் - இவன் மிகவும் வருந்தினான்; "பக்க நீங்குமின் பரிபுலம் பினரென" என்பது சிலப்பதிகாரம், நாடுகாண்காதை, ௨௨௬; "பரிபுலம் புலைத்ததும் வருத்தம் வீட" என்பது மலைபடுகடாம், ௪௧௭.
௫௯. எழுப்பலும் - சாதுவனை எழுப்பலும்.
௬0. அவர்பாடை - நாகர்களுக்குரிய பாஷையை. 'மயக்குறு மரபின்' என்றும் பாடம்.
௬௧. கடுந்தொழின்மாக்கள் - நாகர்.
௬௩. அருந்திறல் - பெறுதற்கரிய திறலுடையாய்.
௬௪. இருந்தோன் - முற்று.
௬௫. என - என்று நாகர்சொல்ல.
௬௬. குழிசி - பானை. கழிமுடை நாற்றமும் - மிகக புலால்நாற்றமும்.
௬௭. உணங்கல் - வற்றல்.
௬௮. எண்கு - கரடி. பிணவு - பெண் கரடி; "பன்றி புல்வாய்" என்னும் சூத்திரத்தில் 'ஒன்றிய' என்றதனால், பிணவென்பது கரடிக்குங்கொள்ளப்பட்டது. இது, தொல்காப்பியம், மரபியல், ௫௮.
௬௯. பெண்டு - மனைவி.
௭0. பாடையிற்பிணித்து - னாலே வயமாக்கி.

கோடியர் மாநிழற் குளிர்ந்த பின்னவ
னீங்குநீ வந்த காரண மென்னென
வாங்கவற் கலைகட லூற்றதை யுரைத்தலு
மருந்துத லின்றி யலைகட லுழந்தோன்
வருந்தின னளியன் வம்பின் மாக்கா
ணம்பிக் கிளையளோர் நங்கையைக் கொடுத்து
வெங்களு மூனும் வேண்டுவ கொடுமென
வவ்வுரை கேட்ட சாதுவ னயர்ந்து
வெவ்வுரை கேட்டேன வேண்டே னென்றலும்
பெண்டிரு முண்டியு மின்றெனின் மாக்கட்
குண்டோ ஞாலத் துறுபய னுண்டெனிற்
காண்குவம் யாங்களுங் காட்டுவா யாகெனத்
தூண்டிய சினத்தினன் சொல்லெனச் சொல்லு
மயக்குங் கள்ளு மன்னுயிர் கோறலுங்
கயக்கறு மாக்கள் கடிந்தனர் கேளாய்
பிறந்தவர் சாதலு மிறந்தவர் பிறத்தலு
முறங்கலும் விழித்தலும் போன்ற துண்மையி
னல்லறஞ் செய்வோர் நல்லுல கடைதலு
மல்லறஞ் செய்வோ ரருநர கடைதலு
முண்டென வுணர்தலி னுரவோர் களைந்தனர்
கண்டனை யாகெனக் கடுநகை யெய்தி

---

எக. கோடி - கிளை. நிழல் - நிழலில. 'குளிர்ந்தவன்பினன்' என்றும் பாடம். அவன் - நாகர்களுடைய குருமகன்.

எஉ. வந்தகாரணமென்னென - வந்தது யாதுகருதியென்று கேட்ப. வந்த காரணம் :—சிலப்பதிகாரம், நாடுகாண் காதை, கசுசு.

எங. அவற்கு - குருமகற்கு.

எரு. அளியன் - அளிக்கத்தக்கான்; "அளியன் றானே முதுவா யிரவலன்" என்பது திருமுருகாற்றுப்படை, உஅச.

எஎ. என - என்று குருமகன் சொல்ல.

எரு - எஎ. மாக்காள், நம்பிக்கு வேண்டுவகொடுமென.

எஅ. அயர்ந்து - கவலையுற்று.

அ0. உண்டி - உணவு. இன்றெனின் - இல்லையாயின்.

அக. உறுபயனுண்டோ.

அஉ. காண்குவம் - அறிவேம்.

அங. சினத்தினன் சொல்லென - கோபமுடையவனாய், சொல்வாயென்று நாகருடைய குருமகன்கேட்ப. சொல்லும - (சாதுவன்) சொல்லுவான்.

அரு. கயக்கு - கயங்குதல்; "கயக்கற நல்லறம்" என்றார் முன்னும்; கக - ம் காதை, கூஅ.

அச - அரு. கள்ளையும் கொலையையும் அறிவுடையோர் நீக்கினர்

அசு - அஎ. இவ்வடிகள், "உறங்கு வதுபோலுஞ் சாக்கா டுறங்கி, விழிப்பது போலும் பிறப்பு" என்னும் ௩௩௯-ம் திருக்குறளின் பொருளைத் தழுவிவந்திருத்தல் காண்க.

அகூ. அல்லறம் - பாவம்; அறமல்லாததென்றபடி.

கூ0. உரவோர் - அறிவுடையோர்.

அஎ - கூ0. உண்மையின், உணர்தலின் உரவோர் களைந்தனர்.

கூக. கண்டனையாக - அறிந்தாயாகுக.

யுடம்புவிட் டோடு முயிருருக் கொண்டோ
ரிடம்புகு மென்றே யெமக்கீங் குரைத்தா
யவ்வுயி ரெவ்வணம் போய்ப்புகு மவ்வகை
செவ்வன முரையெனச் சினவா திதுகே
ளுற்றதை யுணரு முடலுயிர் வாழ்வுழி
மற்றைய வுடம்பே மன்னுயிர் நீங்கிடிற்
றடிந்தெரி யூட்டினுந் தானுண ராதெனி
னுடம்பிடைப் போனதொன் றுண்டென வுணர்நீ
போனார் தமக்கோர் புக்கிலுண் டென்ப
தியானோ வல்லே னியாவரு முணர்குவ
ருடம்பீண் டொழிய வுயிர்பல காவதங்
கடந்துசேட் சேறல் கனவினுங் காண்குவை
யாங்கன மபோகி யவ்வுயிர் செய்வினை
பூண்ட யாக்கையிற் புகுவது தெளிநீ
யென்றவ னுரைத்தலு மெரிவிழி நாகனு
நன்றறி செட்டி நல்லடி வீழ்ந்து
கள்ளு மூனுங் கைவிடி னிவ்வுடம்
புள்ளுறை வாழுயி ரோம்புத லாற்றேன்
றமகதொழி மரபிற் சாவுறு காறு
மெமக்கா நல்லற மெடுத்துரை யென்றலு
நன்று சொன்னாய் நன்னெறிப் படர்குவை
யுன்றனக் கொல்லு நெறியற முரைக்கே
னுடைகல மாக்க ளுயிருய்ந் தீங்குறி
னடுதொழி லொழிந்தவ ராருயி ரோம்பி

---

என - என்று சாதுவன் சொல்ல. கடு
கைகை - பெருஞ்சிரிப்பு.

கரு. செவ்வனம் - நேரே; "திருவிரி பூம்பொழிற் செவ்வனஞ் சேர்ந்து" என்பது சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையாரிலம்பகம், உகூ. என – என்று குருமகன்சொல்ல.

கசு. உயிர்வாழ்வுழி உடல் உற்றதை யுணரும.

கஅ. தடிந்து - வெட்டி.

௧00. புக்கில் - புகுமிடம்.

௧0உ. காவதம் - காதம்.

௧0ரு. சேண் - நெடுந்தூரம்.

௧0உ - ௧0ரு. உயிர்சேறல் கனவினுங் காண்குவை.

௧0௪ - ௧0ரு. உயிர் புகுவது.

௧0சு. அவன் - சாதுவன்.

௧0எ. நன்று - தருமம்.

௧௧0. தமகதொழிமரபின் - தமக்கென்றே தீர்ந்த முறைமையினையுடைய.

௧௧0 - ௧௧௧. மரபினையுடைய நல்லறமென்க.

௧0சு - ௧௧௧ நாகனும் எடுத்துரையென்றலும்.

௧௧உ. படர்குவை - செல்வாய்.

௧௧ரு. ஒல்லுமநெறி - இயலும்வழி; இவ்வடி, "ஒலலும் வகையா னறவினை யோவாதே, செல்லும்வா யெலலாஞ்செயல்" என்ற ௩௩-ம் திருக்குறளின் கருத்தைத்தழுவி வந்தவாறு காணக.

௧௧ரு. அடுதொழில் - கொல்லுந்தொழில்.

## கசு.—ஆதிரைபிச்சையிட்டகாதை.

மூத்துவிளி மாவொழித் தெவ்வுயிர் மாட்டுந்
தீத்திற மொழிகெனச் சிறுமக னுரைப்போ
னீங்கெமக் காகு மிவ்வறஞ் செய்கே
மாங்குனக் காகு மரும்பொருள் கொள்கெனப்
கஉ0 பண்டும பண்டுங் கலங்கவிழ் மாக்களோ
யுண்டே மவர்த முறுபொரு ளீங்கிவை
விரைமர மென்றுகில் விழுநிதிக் குப்பையோ
டிவையிவை கொள்கென வெடுத்தனன் கொணர்ந்து
சந்திர தத்த னென்னும் வாணிகன்
கஉரு வங்கஞ் சேர்ந்ததில் வந்துட னேறி
யிந்நகர் புகுந்தீங் கிவளொடு வாழ்ந்து
தன்மனை நன்பல தானமுஞ் செய்தன
ளங்கன மாகிய வாதிரை கையாற்
பூங்கொடி நல்லாய் பிச்சை பெறுகென
கரு0 மனையகம் புகுந்து மணிமே கலைதான்
புனையா வோவியம போல நிற்றலுந்
தொழுதுவலங் கொண்டு துயரறு கிளவியோ
டமுத சுரபியி னகன்சுரை நிறைதரப்
பாரக மடங்கலும் பசிப்பிணி யறுகென
கருரு வாதிரை யிட்டன ளாருயி மருந்தென.

ஆதிரை பிச்சையிட்டகாதை முற்றிற்று.

---

கககசு. மூத்துவிளிமா - முதுமையுற்று இறக்கும் விலங்குகள்.

கககள. தீத்திறம்-கொலை. என-என்று சாதுவன் சொல்ல.

கஉஉ. விரைமரம் - சந்தனம அகில் முதலியன.

கஉரு. என-என்று நாகன் சொல்ல.

ககள - கஉரு உரைப்போன் இவையிவை கொள்கெனவென்க.

கஉரு. வங்கஞ்சேர்ந்ததில் - சேர்ந்தகப்பலில்.

கஉஅ. ஆங்கனமாகிய - அத்தன்மையை உடையளாகிய. 'ஆயிழைகையால்' என்றும் பாடம்.

உ-கஉக. உரைப்போள் பிச்சை பெறுகெனவென்க.

கருக. பிச்சைவாங்கும்பொழுது துறவறத்தினர் மௌனமாக நிற்கவேண்டுமென்பது விதியாதலின், 'புனையா வோவியம் போல நிற்றலும்' என்றார். புனையா வோவியம் :—உஉ - ம் காதை, அஅ.

கரு0 - கருக. மணிமேகலைதான் நிற்றலும்.

கருரு. அகன்சுரை :—கக - ம் காதை, ககள.

கருரு. ஆருயிர்மருந்து - அன்னம்.

கருரு-கருரு. நிறைதர இட்டனளென்க.

க - கருரு. உரைப்போள், 'ஆங்கனமாகிய ஆதிரைகையாற் பிச்சைபெறுக' என்று சொல்ல, மணிமேகலை மனையகம் புகுந்து நிற்றலும், ஆதிரை, தொழுது வலங்கொண்டு ஆருயிர் மருந்திட்டனளென முடிக்க.

பதினேழாவது

# உலகவறவிபுக்ககாதை.

[பதினேழாவது மணிமேகலை
காயசண்டிகையென்னும் விச்சாதரிவயிற்று யானைத்தீயவித்து
அம்பலம்புக்கபாட்டு.]

பத்தினிப் பெண்டிர் பாத்தூ ணேற்ற
பிச்சைப் பாத்திரப் பெருஞ்சோற் றமலை
யறத்தி னீட்டிய வொண்பொரு ளறவோன்
றிறத்து வழிப்படூஉஞ் செய்கை போல
வாங்குகை வருந்த மன்னுயிர்க் களித்துத்
தான்றொலை வில்லாத் தகைமை நோக்கி
யானைத் தீநோ யகவயிற் றடக்கிய
காயசண் டிகையெனுங் காரிகை வணங்கி
நெடியோன் மயங்கி நிலமிசைத் தோன்றி

---

க. பத்தினிப்பெண்டிர் - ஆதிரை. பாத்தூண் - (இயல்புடைய மூவர்முதலாயினுர்க்கும் தென்புலத்தார் முதலிய நால்வர்க்கும்) பகுத்துக்கொடுத்து உண்ணப்படும் உணவு; பாத்தல் - பகுத்தல்; இதனுல், ஆதிரையின் இல்வாழ்க்கைநலம் கூறப்பட்டது; இதனை, "பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் வாழ்க்கை, வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்" என்னும் ௪௪ - ம் திருக்குறளாலுணர்க. பெண்டிரது பாத்தூணை. 'பாத்தூ ணீத்த' என்றும் பாடம்.

உ. அமுதசுரபியிலுள்ள பெரிய சோற்றுத்திரளை; அமலை - சோற்றுத்திரளை; "அமலைக் கொழுஞ்சோறு" என்பது புறநானூறு, ௬௪.

க - உ. எற்ற பாத்திரம்.

௩. அறத்தின் ஈட்டிய - நல்வழியே சம்பாதித்த. ஒண்பொருள் :— திருக்குறள், ௭௬௦.

௩-௪. அறவோன் திறத்து வழிப்படூஉம் செய்கை போல - அறவோனிடத்துப் பெருகுதலுறுஞ் செய்கையைப்போல; அறவோன் - சற்பாத்திரம. தானப்பொருள் பாததிரத்தின் பெருமைக்குத்தக்கபடி பெருகுதலுறுமென்பதை, "விருந்தின், றுணைத்துணை வேள்விப் பயன்" (திருக்குறள், ௮௭) எனவும், "அறப்பயனுந், தான்சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக்கால், வான்சிறிதாப் போர்த்து விடும்." (நாலடியார், அறன்வலியுறுத்தல், ௮.) எனவும் வருவனவற்றாலுணர்க.

௬. தகைமையைக் (காயசண்டிகை) நோக்கி.

உ - ௬. ஒண்பொருள் வழிப்படூஉஞ் செய்கைபோலப் பெருஞ்சோற்றமலை தான் தொலைவில்லாததகைமையை நோக்கியென்க.

எ. யானைத்தீநோய் - பஸ்மகவியாதி.

௮. காரிகை மணிமேகலையைவணங்கி.

௯. நெடியோன் - திருமால். மயங்கி - பருவதமுனிவரும் நாரதமுனிவரும் அம்பரீடனுக்கிட்டசாபமாகிய அந்தகாரத்தைத் தான் எற்றுக்கொண்டமையால்

யடலரு முந்நீ ரடைத்த ஞான்று
குரங்குகொணர்ந் தெறிந்த நெடுமலை யெல்லா
மணங்குடை யளக்கர் வயிறு புக்காங்
கிட்ட தாற்றாக் கட்டழற் கடும்பசிப்
பட்டே னென்றன் பழவினைப் பயத்தா
லன்னை கேணீ யாருயிர் மருந்துவி
துன்னிய வென்னோய் துடைப்பா யென்றலு
மெடுத்த பாத்திரத் தேந்திய வமுதம்
பிடித்தவள் கையிற் பேணினள் பெய்தலும்
வயிறுகாய் பெரும்பசி நீங்கி மற்றவ
டயா நீங்கித் தொழுதன ளுரைக்கு
மாசில் வாலொளி வடதிசைச் சேடிக்
காசில்காஞ் சனபுரக் கடிநக ருள்ளேன்
விஞ்சையன் றன்னொடென் வெவ்வினை யுருப்ப,

---

மயக்கமுற்று. தோன்றி - இராமனாக அவதரித்து. நெடியோன் நிலமிசைத் தோன்றி மயங்கியெனமாறுக. திருமால் இராமனாக அவதரித்தபொழுது, முற்கூறிய சாபாந்தகாரத்தால் மயக்கமுற்றிருந்தாரென்பதைப் பின்வருஞ் செய்யுளாலுணர்க; "கன்னி யந்துழாய்க் கமலலோசனன்றய ரதற்கு, மன்னு நன்மகனாகியே வந்தன னுதித்து, முன்னை யந்தகா ரத்தினான் மூடிடப் பட்டுத், தன்னை மாயனென் றறிந்திடா துறைந்தனன் சார்ந்தே." இஃது இலிங்கபுராணம், உத்தரகாண்டம், அம்பரீடனை ஆழிகாத்தவத்தியாயம், அரு. இன்னும் இச்சாப வரலாறுமுழுவதும் முற்கூறிய அத்தியாயத்தாற் பெறப்படும். 'நெடுமோன் மயங்கி' என்றும் பாடம்.

க0. முந்நீர் - கடல். அடைத்த ஞான்று - இலங்காநகரஞ்செல்ல அடைத்தநாளில்.

கஉ. அணங்கு - வருத்தம்; தெய்வத்தன்மையுமாம். அளக்கர் - கடல். புககாங்கு - புகுந்தாற்போல.

கக - கஉ. மலையெல்லாம் அளக்கர் வயிறுபுக்காங்கென்க.

கங. இட்டது ஆற்று - இட்டபொருளால் தணியாத.

கச. பட்டேன் - அடைந்தேன். வினைப்பயத்தாற் பட்டேனென்க.

கரு. ஆருயிர் மருந்துவி - அரிய உயிரைப் பாதுகாக்கும் மருந்தையுடையாய்; ஆருயிர்மருந்து - அன்னம்.

கசு. துன்னிய - நெருங்கிய. என்னோய் - எனது பஸ்மக வியாதியை. 'துன்னிய வெங்நோய்' என்றும் பாடம். என்றலும்-என்று காயசண்டிகை சொல்லலும்.

சு-கசு. காரிகை, நோக்கி வணங்கி 'என்னோய் துடைப்பாய்' என்றலுமென்க.

கஎ. அமுதம் - அன்னத்தை.

கஅ. அவள்கையில் - காயசண்டிகையின்கையில். பிடித்துப் பெய்தலும்.

ககூ. அவள் - காயசண்டிகை.

உ0. தொழுது உரைப்பாள்.

ககூ - உ0. அவள் நீங்கி நீங்கித்தொழுது உரைக்கும்.

உக. வாலொளி - வெள்ளிய ஒளி. சேடி - வித்தியாதரருலகு. சேடி வெள்ளிமலைக்கண் உள்ளதாதலின், அதற்கு வாலொளி கூறப்பட்டது; "வெள்ளி மால்வரை வியன்பெருஞ் சேடி" என்பது சிலப்பதிகாரம், கடலாடுகாதை, க.

உஉ. காசு - குற்றம். காஞ்சனபுரமாகிய காவலையுடைய நகரம். 'காஞ்சனக் கடிநகர்' என்றும் பாடம்.

உங. விஞ்சையன் - கணவனாகிய வித்தியாதரன். உருப்ப - தோற்ற; அழல வென்றுமாம்.

தென்றிசைப் பொதியில் காணிய வந்தேன்
கடுவா லருவிக் கடும்புனல் கொழித்த
விடுமணற் கானியாற் றியைந்தொருங் கிருந்தேன்
புரிநூன் மார்பிற் றிரிபுரி வார்சடை
மரவுரி யுடையன் விருச்சிக னென்போன்
பெருங்குலைப் பெண்ணைக் கருங்கனி யனையதோ
ரிருங்கனி நாவற் பழமொன் றேந்தித்
தேக்கிலை வைத்துச் சேணுறு பாப்பிற்
பூக்கமழ் பொய்கை யாடச் சென்றோன்
றீவினை யுருத்தலிற் செருக்கொடு சென்றேன்
காலா லந்தக் கருங்கனி சிதைத்தே
னுண்டல் வேட்கையின் வரூஉம் விருச்சிகன்
கண்டன னென்னைக கருங்கனிச சிதைவுடன்
சீர்திகழ் நாவலிற் றிப்பிய மான
தீரா றண்டி லொருகனி தருவ
தக்கனி யுண்டோ ராறீ ராண்டு
மக்க ளியாக்கையின் வருமபசி நீங்குவர்
பன்னீ ராண்டி லொருநா ளல்ல
துண்ணா நோன்பினே னுண்கனி சிதைத்தா

---

உச. பொதியில் - பொதியின்மலை. காணிய - காணுதற்கு.

உக - உச. விஞ்சையனொடு வந்தேன்.

உரு. கடுவரல் - விரைந்துவருதல். கொழித்த - தெள்ளிய.

உசு. கான்யாறு - காட்டாறு. ஒருங் கிருந்தேன் - கணவனுடனிருந்தேன.

உச - உசு. வந்தேன் கான்யாற்றிருந் தேனென்க.

உஎ. புரிநூல் - முறுக்கியபூணுநூல. திரிபுரிவார்சடை - திரிததுமுறுக்கிய நீண்டசடை.

உஅ. மரவுரியுடையன் - வற்கலையாகிய ஆடையையுடையன். உடையனாகிய விருச்சிகனென்போன்.

உகூ. பெண்ணை - பனை. கருங்கனி - கரியகனி; பெரியகனியென்றுமாம்.

௩0. இருமை - பெருமை. நாவல் - சம்புமரம்.

௩க - ௩உ. சேணாறுபூ; சேண் - நெடுந்தூரம். பாப்பினையுடைய பொய்கை. ஆட - நீராட.

உஅ - ௩உ. விருச்சிகனென்போன், நாவற்பழமொன்றையேந்தி வைததுப் பொய்கையாடச் சென்றோனாகவென்க.

௩௩. உருத்தலின் - பயன்கொடுப்பத் தோற்றுதலினால். செருக்கு - களிப்பு.

௩௩-௩௪. உருத்தலிற் சென்று காலால அந்தக்கனியைச் சிதைத்தேன்.

௩ரு. வேட்கை - விருப்பம்.

௩௬. கருஙகனிச்சிதைவுடன் என்னைக் கண்டனன்.

மேல்வருவன விருச்சிகன்கூற்று.

௩எ. திப்பியம் -, தெய்வலோகததிலிருந்து உண்டாயது. திவ் - தெய்வலோகம். இதனை, எ - ம் காதை, கஎ - ம அடிக்குறிப்பிற் பார்க்க.

௩அ. ஆண்டு - வருடம்.

௩௯ - ௪0. உணடோர் பசியை நீங்குவர்.

௪உ. நோன்பு - விரதம். சிதைத்தாய் - அழித்தாய்.

யந்தாஞ் செல்லு மந்திர மிழந்து
தந்தித் தீயாற் றனித்துய ருழந்து
முந்நா லாண்டின் முதிர்கனி நானீங்
குண்ணு நாளுன் னுறுபசி களைகென
வந்நா ளாங்கவ னிட்ட சாப
மிந்நாள் போலு மிளங்கொடி கெடுத்தனை
வாடுபசி யுழந்து மாமுனி போயபின்
பாடிமி ழருவிப் பயமலை யொழிந்தே
னலவலை செய்திக் கஞ்சின னகன்ற
விலகொளி விஞ்சையன் விழுமமோ டெய்தி
யாரணங் காகிய வருந்தவன் றன்னாற்
காரண மின்றியுங் கடுநோ யுழந்தனை
வானூ டெழுகென மந்திர மறந்தே
னூனுயிர் நீங்கு முருப்பொடு தோன்றி
வயிறுகாய் பெரும்பசி வருத்துமென் றேற்குத்
தீங்கனி கிழங்கு செழுங்காய் நல்லன
வாங்கவண் கொணரவு மாற்றே னாக

---

சங. மந்திரத்தை இழந்து.

சச. தந்திதீ - பஸ்மகவியாதியென்று வழங்குகிற யானைத்தீயென்னும் நோய். தனித்துயர் - ஒப்பற்றதுன்பம்.

சரு. முந்நாலாண்டு - பன்னிரண்டு வருடம்..

சசு. உறுபசி - மிக்கபசியை. 'உறுதுயர்' என்றும் பாடம். களைகென - நீக்குகவென்று.

சஎ. அவன் - விருச்சிகன். சாபம் - சாபத்தை; சாபத்தினை முடிவெல்லையாகியநாளென்றுமாம். ஆகுபெயர்.

சஎ - சஅ. இளங்கொடி, சாபத்தைக் கெடுத்தனை.

சகூ. உழந்து - வருந்தி. முனி - விருச்சிகன். 'உழந்த மாமுனி' என்றும் பாடம்.

ருO. பாடு இமிழ் அருவிப் பயம் மலை - ஒலி முழங்குகின்ற அருவியாலுண்டாகிய பிரயோசனத்தையுடைய பொதியின்மலையை. பாடிமிழ்.—புறநானூறு, சகூ.

ருக. அலவலைச்செய்திக்கு - மனத்திற்றோற்றியதை ஆராயாதுசெய்த(என்) செய்கைக்கு; "அலவலைவந் தப்பூச்சி காட்டுகின்றான்" (உ-ம் பத்து, முதற்பதிகம், உ.) எனவும், "பலபல நாழஞ் சொலலிப் பழிததசிசு பாலன் றன்னை, யலவலைமை தவிர்த்த வழகன்" (ச - ம் பதது, ங - ம் பதிகம், ரு.) எனவும், பெரியாழ்வார்திருமொழியில் வருதல் காண்க. இஃது அலவலைமையென்றும் வழங்கும்

ருஉ. விழுமம் - துன்பம்.

ருங. ஆரணங்கு - அரியதெய்வத்தன்மை.

ருங - ருச. அருந்தவன்றன்னாற் கடுநோயுழந்தனை.

ருரு. வானூடு எழுக என - வானிடத்து எழுவாயென்று வித்தியாதரன் சொல்ல.

ருசு. ஊன் உயிர் நீங்கும் உருப்பொடு - உடம்பினின்றும் உயிர்நீங்குதற்குக் காரணமாகிய வெப்பத்தோடு.

ருஎ. வயிறுகாய் பெரும்பசி:—கச-ம் காதை, சு. வருததுமென்றேற்கு - வருத்துமென்ற எனபொருட்டு.

ருஅ. தீங்கனி - இனியபழம். நல்லனவென்பதை ஒவ்வொன்றோடுங்கூட்டுக.

ருகூ. ஆற்றேனாக - பசிதணியேனாக.

நீங்க லாற்று னெடுந்துய ரெய்தி
யாங்கவ னுங்கெனக் கருளொடு முரைப்போன்
சம்புத் தீவினுட் டமிழக மருங்கிற்
கம்ப மில்லாக் கழிபெருஞ் செல்வ
ராற்று மாக்கட் காற்றுந் துணை யாகி
நோற்றோ ருறைவதோர் நோனக ருண்டாற்
பலநா ளாயினு நிலனொடு போகி
யப்பதிப் புகுகென் றவனருள் செய்ய
விப்பதிப் புகுந்தீங் கியானுறை கின்றே
னிந்திர கோடணை விழவணி வருநாள்
வந்து தோன்றியிம் மாநகர் மருங்கே
யென்னுறு பெரும்பசி கண்டன னிரங்கிப்
பின்வரும் யாண்டவ னெண்ணினன் கழியுந்
தணிவில் வெம்பசி தவிர்த்தனை வணங்கினேன்
மணிமே கலையென் வான்பதிப் படர்கேன்
றுக்கந் துடைக்குந் துகளறு மாதவர்
சக்கர வாளக் கோட்டமுண் டாங்கதிற்
பலர்புகத் திறந்த பகுவாய் வாயி
லுலக வறவி யொன்றுண் டதனிடை
யூரு ராங்க ணுறுபசி யுழந்தோ
ராரு மின்மையி னருமபிணி யுற்றோ

---

௬௧. அவன் - வித்தியாதரன்.

௬௨. தமிழகமருங்கில் - தமிழ்நாட்டில்; "இமிழ்கடல் வரைப்பிற் றமிழக மறிய" என்பது சிலப்பதிகாரம், அரங்கேற்றுகாதை, ௩௭.

௬௩. கம்பம் - நடுக்கம். கழிபெருஞ் செல்வர் - மிகப்பெரிய செலவத்தையுடையர்.

௬௪. ௧௧ - ம் காதை, ௩௫. ஆற்றுமாக்கள் - வறிஞர், 'அருந்துணை யாகிய' என்றும் பாடம்.

௬௫. நோற்றோர் - முற்பிறப்பில் தவஞ்செய்தோர். நோன் நகர் - வலிமையையுடையநகர்; நோன் - வலி; "சாப நோன்ஞாண்" என்பது புறநானூறு, ௧௪. நகர் - காவிரிப்பூம்பட்டினம்.

௬௩ - ௬௫. செல்வர் நோற்றோர் ஆகி உறைவதோர் நகரென்க.

௬௬. பலநாள் ஆயினும் - ஆகாயவழியேசெல்லக்கூடாமையாற் பலநாள் ஆகுமாயினும். நிலனொடுபோகி - பூமியில் நடந்துசென்று.

௬௭. அவன் - வித்தியாதரன்.

௭௦. இம்மாநகர் மருங்கே வந்துதோன்றி யென்க.

௭௨. கழியும் - நீங்குவான்.

௭௪. மணிமேகலை - விளி. வான்பதிப் படர்கேன் - சிறந்த வைராகியகாஞ்சனபுரத்திற்குச் செல்வேன்.

௭௫. துக்கம் - பிறப்புமுதலியன; நால்வகைச்சத்தியங்களுள் துக்கம் முதலாவது.

௭௭ - ௭௮. ௭ - ம் காதை, ௧௨ - ௧௫.
அதனிடை - அவ்வுலகவறவியில்.

௭௯ - ௭௮. ஆங்கதில் ஒன்றுண்டு.

௮௦. ஆருமின்மையின் - பாதுகாப்போர் ஒருவரும் இல்லாமையினாலே.

ரிடுவோர்த் தேர்ந்தாங் கிருப்போர் பலரால்
வடிவாழ் கூந்த லதன்பாற் போகென்
றாங்கவள் போகிய பின்ன ராயிழை
யோங்கிய வீதியி னொருபுடை யொதுங்கி
வலமுறை மும்முறை வந்தனை செய்தவ்
வுலக வறவியி னொருதனி யேறிப்
பதியோர் தம்மொடு பலர்தொழு தேத்து
முதியோள் கோட்ட மும்மையின் வணங்கிக்
கந்துடை நெடுநிலைக் காரணங் காட்டிய
தந்துணைப் பாவையைத் தான்றொழு தேத்தி
வெயில்சுட வெம்பிய வேய்கரி கானத்துக
கருவி மாமழை தோன்றிய தென்னப்
பசிதின வருந்திய பைதன் மாக்கட்
கமுத சுரபியொ டாயிழை தோன்றி
யாபுத் திரன்கை யமுத சுரபியிஃ
தியாவரும் வருக வேற்போர் தாமென
வூணொலி யரவத் தொலியெழுந் தன்றே
யாணர்ப் பேரூ ரம்பல மருங்கென.

உலகவறவிபுக்ககாதை முற்றிற்று.

---

எஅ அக. அதனிடை இருப்போர் பலர்.

அஉ. வடி - வகிர். 'வடிவாழ் கூந்தல்' என்றது மணிமேகலையை.

அங. ஆயிழை - மணிமேகலை.

அச. 'ஒருபுடைபோகி' என்றும்பாடம்.

அரு. வலமுறையாக மூன்றுமுறை வந்து பணிந்து; 'வந்து' என்று ஒரு சொல் வருவிக்க.

அஅ. முதியோள்கோட்டம்-சம்பாபதி கோயில். மும்மையின்வணங்கி - மனம் வாக்குக் காயங்களால் வணங்கி; மூன்று முறை வணங்கி யென்றுமாம். 'முறைமையின் வணங்கி' என்றும் பாடம்.

கூ0. மணிமேகலையொடு மற்றையோரையும் உளப்படுத்தி 'தந்துணைப்பாவை' என்றார். 'தன்றுணைப்பாவை' என்றும் பாடம்.

கூக. வேய்கரிகானம் - மூங்கில்கரிந்த காடு.

கூங. பைதல் - துன்பம்.

கூசு. ஏற்போராகிய யாவரும் வருக வென்று மணிமேகலைசொல்ல. 'இரப்போர் தாமென' என்றும் பாடம்.

கூஎ. எழுந்தன்று - எழுந்தது.

கூஅ. யாணர்- புதுவருவாய்.

கூஎ - கூஅ. அம்பலமருங்கு ஒலியெழுந்தன்றென்க.

க - கூஅ. காயசண்டிகையெனுங்காரிகை, நோக்கி வணங்கி 'என்னோய்துடைப்பாய்' என்றலும், மணிமேகலை பெய்தலும், அவள் பசிநீங்கித் தொழுது உரைக்கும்; அங்ஙனம் உரைப்பவள் 'அதன்பாற்போக' என்றுகூறிப் போகியபின்னர், ஆயிழை ஒதுங்கி வந்து வந்தனைசெய்து ஏறி வணங்கித்தொழுதேத்தித் தோன்றி 'ஏற்போர்யாவரும்வருக' என, அம்பலமருங்கு ஒலியெழுந்தன்றென வினைமுடிவுசெய்க.

பதினேட்டாவது

# உதையகுமரன் அம்பலம்புக்ககாதை.

[பதினேட்டாவது மணிமேகலை அம்பலமடைந்தமை சித்திராபதி உதயகுமரனுக்குச்சோல்ல அவன் அம்பலம்புக்கபாட்டு.]

ஆங்கது கேட்டாங் கரும்புண் ணகவயிற்
றீத்துறு செங்கோல் சென்றுசுட் டாங்குக்
கொதித்த வுள்ளமொடு குரம்புகொண் டேறி
விதுப்புறு நெஞ்சினள் வெய்துயிர்த்துக் கலங்கித்
தீர்ப்பலிவ் வறமெனச் சித்திரா பதிதான்
கூத்தியன் மடந்தையர்க் கெல்லாங் கூறுங்
கோவல னிறந்தபின் கொடுந்துய ரெய்தி
மாதவி மாதவர் பள்ளியு ளடைந்தது

க. ஆங்கதுகேட்டு - மணிமேகலை பிக்குணிக் கோலம்பூண்டு பிச்சையேற்று யாவருக்கும் உணவுகொடுத்தலைகேட்டு. ஆங்கு - அப்பொழுதே.

உ. தீத்துறுசெங்கோல - தீயின்கண் பழுக்கக் காய்தலுற்ற செவ்வியகோல். சுட்டாங்கு - சுட்டாற்போல்.

௩. குரம்பு கொண்டு ஏறி - வரம்பை இடம்கொண்டெழுந்து; என்றது வரம்பு கடந்தென்றபடி; "குரம்பெழுந்து குற்றங்கொண் டேறார்" என்பது நாலடியார், மேனமக்கள், ௩ 'குரம்புகொண் டெழுந்து' என்றும் பாடம்

௪. விதுப்புறுநெஞ்சினள் - நடுக்கமுற்ற மனமுடையவளாய்.

௫. தீர்ப்பல் இவ்வறமென - மணிமேகலைகொண்ட இவ்வறத்தைத் தீர்த்துவிடுவேனென்று எண்ணி. சித்திராபதி - மாதவிநற்றாய்.

௬. எல்லா நாடகக்கணிகைகளுக்கும் சொல்லுவாள்.

க - ௬. அதுகேட்டு ஏறி நெஞ்சினளாய் வெய்துயிர்த்துக் கலங்கி இவ்வறத்தைத் தீர்ப்பலென்று எண்ணிக் கூத்தியன்மடந்தையர் எல்லாருக்கும் சித்திராபதி கூறுவாள்.

மேல்வருவன சித்திராபதிவார்த்தை

௮. மாதவர்பள்ளியுள - சங்கதசாரான அறவணவடிகளுடைய உறைவிடத்து பள்ளி - முனிவருறைவிடம், சிலப்பதிகாரம், இந்திரவிழவூரெடுத்த காதை, ௧௭௬.

௭ - ௮. கோவலனிறந்தமைகேட்டு மாதவி அறவணவடிகளிடம்புகுந்து துறவுபூண்டமையை, "ஈங்கிம மாதவருறைவிடம் புகுந்தேன், மறவண நீத்த மாசறு கேள்வி, யறவண வடிகளடி மிசை வீழ்ந்து உரம்வானருளினன்" (௨ - ம் காதை, ௫௧ - ௬௧) என வயந்தமாலைக்கு மாதவிகூறியதாக இந்நூலிலும், "மற்றது கேட்டு மாதவி மடந்தை,. . கோதைத் தாமங் குழலொடு களைந்து, போதித் தானம் புரிந்தறங் கொள்ளவும்", (நீர்ப்படைக்காதை, ௧0௩ - ௧0௮), "போதியின்கீழ் மாதவர்முன் புண்ணியத்தானம்புரிந்த, மாதவி தன்றுறவுங் கேட்டாயோ தோழி" (வாழ்த்துக்காதை, "காதலன்றன்"—) எனச

நகுதக் கன்றே நன்னெடும் பேரூ
ரிதுதக் கென்போர்க் கெள்ளுரை யாயது
காதலன் வீயக் கடுந்துய ரெய்திப்
போதல் செய்யா வுயிரொடு புலந்து
நளியிரும் பொய்கை யாடுநர் போல
முளியெரிப் புகூஉ முதுகுடிப் பிறந்த
பத்தினிப் பெண்டி ரல்லேம் பலர்தங்
கைத்தூண் வாழ்க்கை கடவிய மன்றே
பாண்மகன் பட்டுழிப் படூஉம பான்மையில்
யாழினம் போலு மியல்பின மன்றியு
நறுந்தா துண்டு நயனில் காலை
வறும்பூத் துறக்கும வண்டு போல்குவம்
வினையொழி காலைத திருவின் செல்வி
யனையே மாகி யாடவர்த துறப்பேந்
தாபதக கோலந் தாங்கின மென்ப
தியாவரு நகூஉ மியல்பின தன்றே
மாதவி யீன்ற மணிமே கலைவல்வி
போதவிழ் செவ்வி பொருந்துதல் விரும்பிய
வுதைய குமரனு முலகாள் வண்டின்

---

சிலப்பதிகாரத்தும் வருவனவற்றாலு ணர்க.

கூ நகுதக்கன்று - சிரிக்கததககது. பேரூர் - பேரூரில.

அ - கூ. அடைந்தது நகுதக்கன்று.

க௦. இது தககு என்போர்க்கு - இச்செய்கை தகுதியுள்ளதென்று சொல்லும் அறிஞர்ககு. தக்கது-விகாரம். எள்ளுரை- இகழ்ச்சியுரை.

கஉ போதல்செய்யா - நீங்காத. புலந்து - வெறுதது. 'போதல செல்லா வுயிரொடு புலர்ந்து' என்றும் பாடம்.

கக - கஉ. உ - ம் காதை, ௬அ - ௬கூ.

க௩. நளி இரும்பொய்கை - குளிர்ந்த பெரியகுளம். ஆடுநர் - ஆடுவோர்.

க௩ - க௪. உ - ம் காதை, ௪௫.

கக - க௫. காதலன்வீயத் துயரெய்திப் புலந்து எரிபுகும் பத்தினிப்பெண்டிரல்லேம் யாம்.

க௫ - க௬. பலருடைய கையதாகிய உணவை உண்டுவாழ்தலில் உரிமையையுடையேம்.

கஎ. பாண்மகன் - பாணன். பட்டுழி - இறந்த விடத்து.

கஅ. இயல்பினம - இயல்பையுடையேம்

கஎ - கஅ. பாண்மகனையும் யாழையும் உவமைகூறினள், நாடகக்கணிகை யாதலின்.

ககூ. நயன் - பசை; என்றது செல்வத்தை.

உ௦. வறும்பூ - தேனிலலாதபூ. இங்கே பரத்தையர்க்கு வண்டை உவமை கூறியதுபோல "வண்டிற் றுறக்குங் கொண்டி மகளிரை" என்று இக்காதையிலேயே பின்னர்க் கூறுதலகாண்க; க௦கூ.

உக. வினை - நலவினை. 'விலையொழி காலை' என்றும் பாடம்.

உ௩. தாபதககோலம் - பிக்ஷுணிக் கோலம்.

உ௪. நகூஉம் இயல்பினது - பழிக்கும் இயல்பையுடையது.

உ௬. செவ்வி - சமயம்.

உஎ. உதையகுமரனை இங்கே வண்டா

சிதையா வுள்ளஞ் செவ்விதி னருந்தக்
கைக்கொண் டாங்கவ ளேந்திய கடிஞையைப்
பிச்சை மாக்கள் பிறர்கைக் காட்டி
மற்றவன் றன்னான் மணிமே கலைதனைப்
பொற்றேர்க் கொண்டு போதே னாகிற்
சுடுமண் ணேற்றி யரங்குசூழ் போகி
வடுவொடு வாழு மடந்தையர் தம்மோ
ரனையே னாகி யரங்கக் கூத்தியர்
மனையகம் புகாஅ மரபின னென்றே
வஞ்சினஞ் சாற்றி நெஞ்சுபுகை யுயிர்த்து
வஞ்சக் கிளவி மாண்பொடு தேர்ந்து
செறிவளை நல்லார் சிலர்புறஞ் சூழக்
குறுவியர் பொடித்த கோலவாண் முகத்தள்
கடுந்தேர் வீதி காலிற் போகி
யிளங்கோ வேந்த னிருப்பிடங் குறுகி

கக்கூறியதுபோல "உதைய குமரனெனு மொருவன் டணீஇய, விரைவொடு வந்தேன்" என்று சம்பாபதிகூறியதாக இக்காதையிலேயே பின்னும் கூறுவர்; ௬௦-௬௧; "பெண்டிர் நலம்வெளவித் தண்சாரற் றாதுண்ணும், வண்டிற் றுறப்பான் மலை" என்று தலைமகனை வண்டாகக் கூறியிருத்தல்காண்க. இது கலித்தொகை, ௪௦.

௨௮. சிதையாவுள்ளம் - வேறொன்றால் அழியாதவுள்ளம்.

௨௯. கடிஞை - பிச்சைப்பாத்திரம்.

௩௧. அவன் - உதையகுமரன்.

௩௨. போதேனாகில் - வாரேனாயின்.

௩௩. சுடுமண் - செங்கல்.

௩௪. வடு - குற்றம். 'மடந்தையர் தம்மோடு' என்றும் பாடம்.

௩௫. 'ஆடற் கூத்தியர்' என்றும்பாடம்.

௩௪ - ௩௫. மடந்தையர் தம்மோரனையேனாகி - மடந்தையரை ஒப்பேனாகி; ஓர் - இடைச்சொல்.

௩௩ - ௩௫. பதியிலாரிற் குடிக்குற்றப்பட்டாரை எழு செங்கற்சுமத்தி அரங்கு சூழ்வித்துப் புறத்துவிடுதல் மரபாதலின் சித்திராபதி இங்ஙனம் சபதஞ்செய்வாளாயினள்; இதனை, சிலப்பதிகாரம், ஊர்காண்காதையிலுள்ள "சுடுமண் ணேற்றொடு நீங்கு சிறப்பின்" (௧௪௬-ம் அடி) என்பதனாலும், இதற்கு அடியார்க்குநல்லாரெழுதிய விசேடவுரையாலும் உணர்க.

௩௭. வஞ்சினம் - சபதம். நெஞ்சுபுகையுயிர்த்து - மனங்கொதித்து; "செங்கண் சிவந்து நெஞ்சுபுகை யுயிர்த்து" என்றார் முன்னும்; ௮-ம் காதை, ௫௮.

௭ - ௩௭. கூறுகின்ற சித்திராபதி, 'மாதவி பள்ளியுளடைந்தது நகுதக்கன்று அஃது எள்ளுரையாயது, யாம் பதினிப் பெண்டிரல்லேம், வாழ்க்கை கடவியமன்றே; இயல்பினம்; அனறியும் வண்டுபோல்குவம்; துறப்பேம்; சாங்கினமென்பது நகுமியல்பினது; ஆதலால், மணிமேகலையைப் பொற்றேர்க் கொண்டு போதுவேன்; அங்ஙனம் போதேனாயின் மரபினன்' எனவு வஞ்சினஞ் சாற்றியென்க.

௩௮. கிளவியைத்தேர்ந்து.

௪௦. வியர் - வேர். பொடித்த - தோன்றிய.

௪௨. இளங்கோவாகியவேந்தன் - உதையகுமரன்.

யாவ வண்டொடு தேனின மார்க்குந்
தருமணன் ஞெமிரிய திருநா றொருசிறைப்
பவளத் தூணத்துப் பசும்பொற் செஞ்சுவர்த்
திகழொளி நித்திலச் சித்திர விதானத்து
விளங்கொளி பரந்த பளிங்குசெய் மண்டபத்துத்
துளங்குமா னூர்தித் தூமலர்ப் பள்ளி
வெண்டிரை விரிந்த வெண்ணிறச் சாமரை
கொண்டிரு மருங்குங் கோதையர் வீச
விருந்தோன் றிருந்தடி பொருந்தினின் றேத்தித்
திருந்தெயி றிலங்கச் செவ்வியி னக்கவன்
மாதவி மணிமே கலையுட னெய்திய
தாபதக் கோலந் தவறின் றோவென
வரிதுபெறு சிறப்பிற் குருகுகரு வுயிர்ப்ப

சரு. வண்டும் தேனும் நல்லமணத்தே செல்வனவாதலின், இங்கே சேர்த்துக் கூறப்பட்டன; இசனே, "மங்கை நல்லவர்" என்னும் செய்யுளுரையாலுணர்க; இது சீவகசிந்தாமணி, குணமாலையாரிலம்பகம், சஉ.

சச. தரு மணல் ஞெமிரிய - கொண்டுவந்திட்ட மணல்பரந்த; "தருமணன் ஞெமிரிய திருநகர் முற்றத்து" என்பது நெடுநல்வாடை, கO. ஒருசிறை - ஒருபக்கம்.

சடு. பவளத்தூணம் - பவளத்தாலாகிய தூண், "பவளத் திரள்காற் பைம்பொன் வேதிகை" என்பது சிலப்பதிகாரம், இந்திரவிழவூரெடுத்த காதை, கசஅ.

சசு. நித்திலம் - முத்து; என்றது, முத்தாலாகிய சல்லியையும் தூக்கினையும். சித்திரவிதானம் - சித்திரங்களையுடைய மேற்கட்டி; "தவள நித்திலத் தாமந் தாழ்ந்த, கோணச சந்தி மாண்வினை விதானத்து" என்பர் பின்னும்; கக-ம் காதை, ககஉ - ககரு. "ஓவிய விதானத் துரைபெறு நித்திலத்து, மாலைத் தாமம் வளையுடனாற்றி" என்பது சிலப்பதிகாரம், அரங்கேற்று காதை, ககக - ககஉ.

சஎ. 'பளிக்குமண்டபத்து' என்றும் பாடம்.

சடு - சஎ. தூணத்தினையும் சுவரினையும் விதானத்தினையுமுடைய மண்டபமென்க.

சஅ. துளங்கும் மான் ஊர்தி - ஒளி அசைதலையுடைய சிங்காதனம். ஊர்தி - ஏறுதற்கிடமாகவுள்ள ஆசனமென்னும் பொருட்டு. பள்ளி - இடம்.

சகூ. வெண்டிரைவிரிந்த - வெள்ளிய அலைகள்போலேவிரிந்த. சாமரை - சாமரையை.

ருO. கோதையர் - மகளிர்.

சகூ - ருO. சாமரையைக் கோதையர் வீச.

ருக. இருந்தோன் - உதயகுமரன். ஏத்தி - ஏத்த.

சஎ - ருக. மண்டபத்துப் பள்ளியில் இருந்தோனென்க.

ருஉ. நக்கு-சிரித்து. அவன் - உதையகுமரன்.

ருச. தாபதக்கோலம் - தவவேடம்; என்றது பிக்குணிக்கோலத்தை. தாபதர் - தவமுடையவர். என - என்று உதையகுமரன் கேட்ப.

ருஉ - ருச. அவன் நக்குத் தாபதக் கோலம் தவறின்றோவென.

மேல்வருவன சித்திராபதிகூற்று; உதையகுமரன் இருந்தவிடம் அணுவக்கலமாதலின் மணிமேகலைசெய்தியைச்சிலேடையாற் கூறுவாள்.

ருரு. குருகு கருவுயிர்ப்ப - பறவைகள்

ஒருதனி யோங்கிய திருமணிக் காஞ்சி
பாடல்சால் சிறப்பிற் பரதத் தோங்கிய
நாடகம் விரும்ப நன்னலங் கவினிக்
காமர் செவ்விக் கடிமல ரவிழ்ந்த
துதைய குமரனெனு மொருவண் டுணீஇய
விரைவொடு வந்தேன் வியன்பெரு மூதூர்ப்
பாழ்ம் பறந்தலை யம்பலத் தாயது
வாழ்கநின் கண்ணி வாய்வாள் வேந்தென
வோங்கிய பௌவத் துடைகலப் பட்டோன்
வான்புணை பெற்றென மற்றவட் குரைப்போன்
மேவிய பளிங்கின் விருந்திற் பாவையிஃ
தோவியச் செய்தியென் றொழிவேன் முன்னர்க்

௫௬. திருமணிக்காஞ்சியென்பதற்கு அழகிய கரியகாஞ்சிமரமென்றும் அழகிய மணிமேகலையென்றும் பொருள்கொள்க. மேகலைக்குக் காஞ்சியென்று பெயருளதாதல், "எதிருன் றுதலு நிலையின் மையுமா, மணிமே கலையு மொருமரப் பெயரும், கருதுங் காஞ்சி யென்னும் கட்டுரை." என்னும் திவாகரச்சூத்திரத்தாலும், "ஒருமரப் பெயரு மோரிசைப் பெயருங், கச்சிப் பதியுமே கலையுங் காஞ்சி" என்னும் பிங்கலச்சூத்திரத்தாலும் துணியப்படும்.

௫௭. பரதமென்பதற்குப் பரதகண்டமென்றும் நாடகநூலென்றும் பொருள் கொள்க.

௫௮. நாடகம் - நாடுகளினிடமும், ஆடலும். நாடகம் இவளாற் சிறப்பெய்துமாகலின், 'நாடகம் விரும்ப' என்றார், "நாடகமேத்து நாடகக் கணிகை" என றுவருதல் காண்க; இது சிலப்பதிகாரம், பதிகம், ௧௫.

௫௯. செவ்வி - பருவம்.

௫௬ - ௫௯. காஞ்சி கவினிக் கடிமலரவிழ்ந்தது.

௬0. 'உதைய குமரனெனு மொருவண்டு' என்றது முன்னிலைப்புறம்; அஃதாவது முன்னிலையாய் நிற்கின்றவரை நோக்கிப் பிறனைக் கூறுமாறுபோலக் கூறுதல். உணீஇய - உண்ணும்பொருட்டு; உண்ணுதல் - மிசைதலும், அனுபவித்தலும்.

௬௨. பாழ்ம் பறந்தலை அம்பலத்து - பாழிடமாகிய புறங்காட்டைச்சார்ந்த உலகவறவியினிடத்து; பறந்தலை-புறங்காடு; "களரியம் பறந்தலை யொருசிறையலகை" என்பது புறநானூறு, ௨௬0.

௫௬ - ௬௨. காஞ்சி, நலங்கவினிக் கடிமலரவிழ்ந்தது; அதனை உதையகுமரனாகிய வண்டு உண்ணும்பொருட்டு வந்தேன; அக்காஞ்சி அம்பலத்தாயதென்க.

௬௩. கண்ணி - தலைமாலை; "கண்ணி கார்நறுங் கொன்றை" என்பது புறநானூறு, கடவுள்வாழ்த்து. நின்மாலைவாழ்கவென்றல் மரபு; "தாமரை யுறையுஞ் செய்யாள், வழுவினோர் தம்மைப் புல்லாள வாழ்கநுங் கண்ணி மாதோ" என்பது சீவகசிந்தாமணி, விமலையாரிலம்பகம், ௨. என - என்று சம்பாபதிசொல்ல.

௬௪. பௌவம் - கடல். உடைகலப் பட்டோன் - கப்பல் உடையப்பட்டோன்; "உடைகலப் பட்டாங் கொழிந்தோர் தம்முடன்" என்றார்முன்னும்; ௧௬ - ம காதை, ௨0. "உடைகலப் பட்ட வெங்கோன்" என்பது சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை, ௨௯.

௬௫. வான்புணை -
அவட்கு - சித்திராபதிக்கு.

மேல்வருவன உதையகுமரன் கூற்று.

௬௬. பளிங்கின் - பளிக்கறையின்கணுள்ள, விருந்திற் பாவை இஃது - புதுமையினையுடைய பாவையாகிய இது.

௬௭. ஓவியச்செய்தியென்று - சித்திரச் செய்கையென்று.

௬௬ - ௬௭. மணிமேகலை

காந்தளஞ் செங்கை தளைபிணி விடாஅ
வேந்திள வனமுலை யிறைநெரித் ததூஉ
மொத்தொளிர் பவளத் துள்ளொளி சிறந்த
முத்துக்கூர்த் தன்ன முள்ளெயிற் றமுத
மருந்தே மாந்த வாருயிர் தளிர்ப்ப
விருந்தின் மூர லரும்பிய தூஉ
மாயிதழ்க் குவளை மலர்புறத் தோட்டிக்
காய்வேல் வென்ற கருங்கய னெடுங்க
ணறிவுபிறி தாகிய தாயிழை தனக்கெனச்
செவியகம் புகூஉச் சென்ற செவ்வியும்
பளிங்குபுறத் தெறிந்த பவளப் பாவையென்
னுளங்கொண் டொளித்தா னுயிர்க்காப் பிட்டென்
றிடையிருள் யாமத் திருந்தேன் முன்னர்ப்

கண்டு அஞ்சிப் பளிக்கறையிற்புகுந்த பொழுது அவளைச் சித்திரமென்று தான் எண்ணியிருந்ததாக உதயகுமரன் கூறினான்; "தாமொளி மண்டபந் தன்கை யாற் றடைஇச், சூழ்வோன் சுதமதி தன் முக நோக்கிச், சித்திரக் கைவினை திசை தொறுஞ் செறிந்தன, வெத்திறத் தாளின் னிளங்கொடி யுரையென" என்றுமுன்பு வந்திருத்தல்காண்க; ௫ - ம் காதை, ௯ - ௧௨.

௬௮. தளைபிணி - கட்டியகட்டு; தளைதல் - கட்டுதல். விடா - விடாவாய்.

௬௯. இறை - சிறிது.

௬௮ - ௬௯ செங்கைகள் பிணிவிடாவாய் முலையை இறையளவு நெரித்தசெய்கையும்.

௭0. பவளமென்றது வாயை.

௭௧. முத்துக்கூர்த்தன்ன - முத்துக்கள் கூர்மையுற்றாலொத்த. எயிறு - பல்.

௭௨. அருந்த எமாந்த - உண்ணுதற்கு ஆசைப்பட்ட; "அருந்தே மாந்த வாருயிர் முதலவனை" என்றார்முன்னும்; ௧௪ - ம் காதை, ௬௮.

௭௧ - ௭௨, முள்வா யெயிறூ றமுதம் முனியாது மாந்திக், கொள்ளாத வின்பக் கடற்பட்டனன்" என்பது சீவக சிந்தாமணி, கோவிந்தையாரிலம்பகம், ௮௫.

௭௩. விருந்தின்மூரல் - புதிய இளநகை. அரும்புதல் - தோற்றுதல.

௭௧ - ௭௩.
ஆசையுற்ற எனதுயிர் செழிப்புறும்வண்ணம் புன்முறுவல் செய்ததும.

௭௪. மாயிதழ் - கரிய இதழ்.

௭௬. பிறிதாகியது - வேறுபட்டது. ஆயிழைதனக்கு - மணிமேகலைக்கு.

௭௭. புகூஉ - புகுந்து. 'செவிகுறுக் குறூஉச் சென்ற' என்றும் பாடம். செவ்வி - அழகு.

௭௪ - ௭௭. ஒட்டி வென்ற கண்கள் ஆயிழைக்கு அறிவுபிறிதாகியதென்று குறிப்பித்துச செவிக்கண்ணே சென்ற செவ்வியும்.

௭௮. பளிங்கு - உவவனத்திலுள்ள பளிககறை. பாவை - மணிமேகலை.

௭௯. கொண்டு - நெரித்ததூஉம் அரும்பியதூஉம் செவ்வியும் ஆகிய இவற்றைக் கொண்டு. உயிர்க்காப்பிட்டு - உயிரைக் காத்தல்செய்து.

௭௮ - ௭௯. பாவை கொண்டு உயிர்க் காப்பிட்டு என்னுளத்து ஒளிததானென்க.

௮0. இருந்தேன் முன்னர் - துயிலாதிருந்தேனுடைய முன்பு; "பொங்குமெல் லமளியிற் பொருந்தா திருந்தோன், முன்னர்த் தோன்றி" என்று முன்பு வந்திருததல்காண்க; எ - ம் காதை, ௬ - எ.

பான்மையிற் பிணித்துப் படிற்றுரை யடக்குதல்
கோன்முறை யன்றோ குமரற் கென்றலு
முதைய குமர னுள்ளம் பிறழ்ந்து
விரைபரி நெடுந்தேர் மேற்சென் றேறி
யாயிழை யிருந்த வம்பல மெய்திக்
காடமர் செல்வி கடிப்பசி களைய
வோடுகைக் கொண்டுநின் றூட்டுநள் போலத்
தீப்பசி மாக்கட்குச் செழுஞ்சோ றீத்துப
பாத்திர மேந்திய பாவையைக் கண்டலு
மிடங்கழி காமமோ டடங்கா னாகி
யுடம்போ டென்ற னுள்ளகம் புகுந்தெ
னெஞ்சங் கவர்ந்த வஞ்சக கள்வி
நோற்றூண் வாழ்க்கையி னொசிதவந் தாங்கி
யேற்றூண் விரும்பிய காரண மென்னெனத்
தானே தமிய ணின்றோண் முன்னர்
யானே கேட்ட லியல்பெனச் சென்று
நல்லா யென்கொ னற்றவம் புரிந்தது

---

கொடும்பி, யுருவப் பூங்கொம் பொசியப் புலவித் தீங்தேன் பருகி, யுருகு வாய்விட் டார்ப்ப வண்ணன் மெல்லச் சென்றான்." என்று வருதல் காண்க; இது சீவகசிந்தாமணி, கேமசரியாரிலம்பகம்; ச. கொண்டி மகளிர் - பொருள் கொள்ளுதலையுடைய பரத்தையர்; கொண்டி - கொள்ளையுமாம்; "நெஞ்சு நடுக் குறூஉக் கொண்டி மகளிர்" என்பது மதுரைக்காஞ்சி, ருஅகூ.

ககO. படிற்றுரை - பொய்வார்த்தை.

ககக. கோன்முறை - செங்கோன்முறை. என்றலும் - என்று சம்பாபதி கூறலும்.

ககஉ. உள்ளம் பிறழ்ந்து - மனம் வேறுபட்டு.

ககங. விரைபரி - வினைத்தொகை.

ககச. ஆயிழை - மணிமேகலை. அம்பலம் - உலகவறவி.

ககரு. காடமர்செல்வி - துர்க்கை; "காடமர் செல்வி கழிபெருங் கோட்டமும்" என்றார்முன்னும்; சு - ம் காதை, ருகூ. கடிப் பசி களைய - பேய்களின்பசியைத் தவிர்த்தற்பொருட்டு. 'களைஇய' என்றும் பாடம்.

ககரு - ககசு. ஊட்டுநளாகிய காடமர் செல்விபோலவென இயைக்க.

ககஎ - ககஅ. பாத்திரமேந்தி மாக்கட்குச் செழுஞ்சோறீந்தபாவை - மணிமேகலை. காணடலும் - உதையகுமரன் கண்டவுடன்.

கககூ. இடங்கழிகாமம் - வரம்பின்றிப் பெருகியகாமம்; இராகவேகமென்பாருமுளர்; "இடங்கழி நெஞ்சத் திளமை யானை" என்பது சிலப்பதிகாரம், கட்டுரைகாதை, கூஎ.

கஉக. கள்வி - மணிமேகலை.

கஉஉ. நோற்றூண் வாழ்க்கை - விரதங்களாற் பட்டினிவிட்டுண்ணுதலையுடைய வாழ்க்கை. வாழ்க்கை - தவத்திற்கு அடை. நொசிதவம் - நுண்ணியதவம்; "நோற்றுணல் யாக்கை நொசிதவத்தீர்" என்பது சிலப்பதிகாரம், நாடுகாண்காதை, உஉகூ.

கஉங. ஏற்றூண் - இரந்துண்ணுமுணவு. 'காரணம் யாதென' என்றும் பாடம்.

கஉங - கஉரு. என்னெனக் கேட்டல் இயல்பென்று உதையகுமரன் சென்று.

கஉசு. நற்றவம் புரிந்தது என்கொல்.

சொல்லா யென்று துணிந்துடன் கேட்ப
வென்னமர் காதல னிராகுல னீங்கிவன்
றன்னடி தொழுதலுந் தகவென வணங்கி
யறைபோய் நெஞ்ச மவன்பா லணுகினு
மிறைவளை முன்கை யீங்கிவன் பற்றினுந்
தொன்று காதலன் சொல்லெதிர் மறுத்த
னன்றி யன்றென நடுங்கினண் மயங்கிக்
கேட்டது மொழிவேன் கேள்வி யாளரிற்
றோட்ட செவியைநீ யாகுவை யாமெனிற்
பிறத்தலு மூத்தலும் பிணிப்பட் டிரங்கலு
மிறத்தலு முடைய திடும்பைக் கொள்கல
மக்கள் யாக்கை யிதுவென வுணர்ந்து
மிக்க நல்லறம் விரும்புதல் புரிந்தேன்
மண்டமர் முருக்குங் களிறனை யார்க்குப்
பெண்டிர் கூறும் பேரறி வுண்டோ

---

'நல்லா யெனக்கோ நற்றவம் புரிந்தது' என்றும் பாடம்.

கசஎ. கேட்ப-உதயகுமரன் கேட்ப 'துணைந்துடன் கேட்ப' என்றும் பாடம்.

கசஅ. என்னமர் காதலன் இராகுலன் - இவன் என்னை விரும்பிய கணவனாகிய இராகுலனுவான; என்றது பழம் பிறப்பின் செய்தி கூறியபடி.

கசகூ. வணங்கி - மணிமேகலை வணங்கி.

கருO. அறைபோய் - ஒட்டைபோய். நெஞ்சம் அறைபோய அவனபால் அணுகினுமென்க.

கருஉ. தொன்று - பழமை.

கருந. நன்றியன்று - நன்மையன்று.

கருச. கேட்டது மொழிவேன் - நீ கேட்டதற்கு விடை கூறுவேன. அவன் கேட்டது, முன்பு 'நல்லா யென்கொ னற்றவம் புரிநதது' (கஉசு - ம் அடி) எனபதனு லுணரப்படும். கேள்வியாளரின் - கேளவியாளர்களால.

கருரு. நீ துளைக்கப்பட்ட செவியை யுடையாயாயின்.

கருச - கருரு. எனின்மொழிவேனென இயையும். இதில "கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியாற், றோட்கப் படாத செவி" என்னும் சுகஅ - ம் திருக்குறளின் பொருள் அமைந்திருத்தல் காண்க.

மேல்வருவன மணிமேகலை கூற்று.

கருஎ. இடும்பை - துன்பம்.

கருஅ. யாக்கையாகிய இது.

கருசு-கருஅ. இஃது உடையது கொள் கலம் என்க. இவவடிகளிற்போலவே "வினையின் வந்தது வினைக்குவிளைவா யது, புனைவன நீங்கிற் புலால்புறத் திடுவது, மூத்துவிளி வுடையது தீப்பிணி யிருக்கை, பற்றின பற்றிடங் குறைக் கொள்கலம், புற்றடங் கரவிற் செற்றச் சேக்கை, யவலக் கவலை கையா றழுங்க, றவலா வுள்ளந் தனபா லுடையது, மக்கள் யாக்கை யிதுவென வுணர்ந்து, மிக்கோ யிதனைப் புறமறிப் பாராய்" என்று இந்நூலுள்ளே மூன்றும் மக்கள் யாக்கையை இழித்துககூறியிருததல்காண்க; சு - ம் காதை, கக்ரு - கஉக.

கருகூ. நல்லறம் - தயாதருமம்.

கசுO. மண்டு அமர் முருக்கும் களிறு-மிகக்குச் செல்லுகின்றபோரை அழிக்கும் யானை. 'மண்டல மாடுங் களிறு' என்றும் பாடம்.

கசுக. உண்டோ - இல்லையென்றபடி.

கசுO - கசுக. 'களிறனை யார்க்குப்,

கேட்டனை யாயின் வேட்டது செய்கென
வாட்டிறற் குரிசிலை மடக்கொடி நீங்கி
முந்தை முதல்வி முதியா ளிருந்த
குச்சரக் குடிகை தன்னகம் புககாங்
காடவர் செய்தி யறிகுநர் யாரெனத்
தோடலர் கோதையைத் தொழுதன ளேத்தி
மாய விஞ்சை மந்திர மோதிக்
காயசண் டிகையெனுங் காரிகை வடிவாய்
மணிமே கலைதான் வந்து தோன்ற
வணிமலர்த் தாரோ னவள்பாற் புக்குக்
குச்சரக் குடிகைக் குமரியை மரீஇப
பிச்சைப பாத்திரம் பெரும்பசி யுழந்த
காயசண் டிகைதன் கையிற் காட்டி
மாயையி னொளித்த மணிமே கலைதனை
யீங்கிம் மண்ணீட் டியாரென வுணர்கே
னாங்கவ ளிவளென் றருளா யாயிடிற்
பன்னா ளாயினும் பாடு கிடப்பே

---

பெண்டிர் கூறும் பேரறி வுண்டோ' என்றது முன்னிலைப்புறம்; இப்படியே "இளமை நாணி முதுமை யெய்தி, யுரை முடிவு காட்டிய வுரவோன் மருகற், கறிவுஞ் சால்பு மரசியல் வழக்குஞ், செறிவளை மகளிர் செப்பலு முண்டோ" என்று உதையகுமரனைநோக்கிச் சுதமதிகூறியதாக இந்நூலில முன்பு கூறியிருத்தல் காண்க; ச - ம் காதை, கOஎ - ககO.

கசஉ. வேட்டது - விரும்பியது.

கசங. குரிசிலை-உதையகுமரனை. மடக்கொடி - மணிமேகலை.

கசச. முதியாள் - சம்பாபதி.

கசரு. குச்சரக்குடிகை [=கூர்ச்சரகுடிகா] கூர்ச்சரதேசத்துப் பணியமைந்த சிறிய கோயில். கூர்ச்சரதேசம் சிற்பத்திற் பெயர் பெற்றதென்பர். "குச்சரக் குடிகைக்கன்னியை மரீஇ" என்று இக்காதையிலேயே பின்னும் வரும்; கருஉ. கூர்ச்சரமென்பது குஜ்ஜரமென்று கன்னடபாஷையில் வழங்கப்படுகின்றது.

கசசு. அறிகுநர் - அறிவோர்.

கசஎ. கோதை - சம்பாபதி.

கசஅ. மந்திரம் - மணிமேகலாதெய்வம் உபதேசித்த (வேற்றுரு வெய்துவிக்கும) மந்திரம. இதனை, கO - ம் காதை அO - ம் அடிமுதலியவற்றாலுணர்க.

கசகூ. காரிகை - பெண்.

கசகூ - கருO. மணிமேகலை காரிகை வடிவாய் வந்துதோன்றவென்க.

கருக. தாரோன் - உதையகுமரன. அவளென்றது, காயசண்டிகை வடிவு கொண்டு நின்ற மணிமேகலையை.

கருஉ. குமரி - சம்பாபதி.

மேல்வருவன உதையகுமரன் கூற்று.

கருங - கருச. பாத்திரத்தைக் கையிற் காட்டியென்க.

கருசு. மண்ணீடு - சுதையாற் செய்யப்பட்ட பாவை. மண்ணீடுகெளுள்ளென வெழுனுருபுவிரிக்க.

கருஅ. பாடுகிடப்பேன் - வரங்கிடப்பேன்; பாடு - படுக்கை, "பாசண்டச் சாத்தற்குப் பாடு கிடந்தாளுக்கு" (கனாத்திறமுரைத்தகாதை, கரு) எனவும், "பாசண் டன்பாற் பாடு கிடந்தாட்கு" (வரந்தருகாதை, எஅ) எனவும் சிலப்பதிகாரத்து வருதல்காண்க.

னின்னுங் கேளா யிமையோர் பாவாய்
பவளச் செவ்வாய்த் தவளவா ணகையு
மஞ்சனஞ் சேராச் செங்கய னெடுங்கணு
முரிந்துகடை நெரிய வரிந்தசிலைப் புருவமுங்
குவிமுட் கருவியுங் கோணமுங் கூர்நுனைக்
கவைமுட் கருவியு மாகிக் கடிகொளக்
கல்விப் பாகரிற் காப்புவலை யோட்டி
வல்வா யாழின் மெல்லிதின் விளங்க
முதுக்குறை முதுமொழி யெடுத்துக் காட்டிப்
புதுக்கோள் யானை வேட்டம் வாய்த்தென

---

கரு௯. இமையோர் பாவாய் - தேவர்களுடைய தலைவி; "பவமறு வித்த வானோர் பாவாய்" (உ௩ - ம் காதை, க௪எ) என்று சிந்தாதேவியைப் பின்பு கூறுதல காண்க.

இனி, உதயகுமரன் மணிமேகலையின் நகைமுதலியவற்றால் தான்வலியழிந்து அவளுக்கு வயமாயினமை கூறுவான், தன்னை யானையாகவும் அவள் நகைமுதலியவற்றை யானையையடக்கி வயமாக்குங் கருவிகளாகவும் உருவகஞ்செய்து கூறுகின்றான்.

கசுக. 'அஞ்சனஞ் சேரா' என்றதனாற் கண்ணுக்கு மையெழுதாமை துணியப்படும்.

கசு௩. கோணம் - தோட்டி; "கோணந் தின்ற வடுவாழ் முகத்த" என்பது மதுரைக்காஞ்சி, ரு௯உ.

கசு௪. கவைமுட்கருவி-கவைத்த முள்ளையுடைய பரிக்கோல; "கவைமுட் கருவியின் வடமொழி பயிற்றிக், கல்லா விளைஞர் கவளங் கைப்ப" என்பது முல்லைப்பாட்டு, ௩௫ - ௩௬. கடிகொள - காவல்கொள்ள.

கசு௩ - கசு௪. குவிமுட் கருவிமுதலிய மூன்றும் யானையையடக்குங் கருவி விசேடங்கள்.

கசுO-கசு௪. நகை குவிமுட்கருவியும், கண் கோணமும், புருவம் கவைமுட் கருவியுமாகிக் கடிகொளவென வியைக்க; இது நிரனிறை.

கசு௫. கல்வியாகிய பாகர்களாற் காதலாகிய வலையைப்போக்கி; "மடங் கெழு நோக்கின் மதிமுகத் திறப்புண், டிடங்கழி நெஞ்சத் திளமை யானை, கல்விப் பாகன் கையகப் படாஅது, தொல்கா வுள்ளத் தோடு மாயினும்" என்றதிற் கல்வியைப் பாகனாக உருவகஞ்செய்திருத்தல் காண்க. இது சிலப்பதிகாரம், கட்டுரைகாதை, ௯௬ - ௯௯.

கசுஎ. முதுக்குறைமுதுமொழி - பேரறிவைப் புலப்படுத்தியமொழி; என்பது "பிறத்தலு மூத்தலும்" என்றது முதலியவற்றை.

கசுசு - கசுஎ. யாழோசைபோல இனிமையாக மொழிகளை எடுத்துக்காட்டி; யானை யாழிற்கு வயமாகுமாதலின், இங்ஙனம் கூறினான்; இதனைப் பின்வரும் மேற்கோள்களாலுணர்க; "காழ்வரை நில்லாக் கடுங்களிற் றொருத்தல், யாழ்வரைத் தங்கி யாங்கு" என்பது கலித்தொகை, உ. "அணியிழை மகளிரும் யானையும் வணக்கு, மணியொலி வீணை" என்பது பெருங்கதை, உஞ்சைக்காண்டம், நருமதைச்சம்பந்தம். "இசையினிலிவட்குத தோற்றும் யானையால் வேறுமென்னினி, னிசைவதொன் றன்று கண்டீர்" என்பது சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையாரிலம்பகம, உ௫சு. 'யானை நாதத்திற்றோற்றலின், அதற்கு வணங்குதலியல்பு' என்பர் ஆசிரியர் நச்சினார்க்கினியர்.

கசுஅ. புதிதாகக் கொள்ளப்படும்யானை வேட்டையில் அகப்பட்டதென்றுகருதி. இது, மணிமேகலையின் உட்கோளென்று உதயகுமரன கருதினன். 'புதுக்கோட்டியானை' என்றும் பாடம்.

முதியா ளுன்றன் கோட்டம் புகுந்த
மதிவாண் முகத்து மணிமேகலைதனை
யொழியப் போகே னுன்னடி தொட்டே
னிதுகுறை யென்றன னிறைமகன் றானென

உதையகுமரன் அம்பலம்புக்ககாதை முற்றிற்று.

---

௧௬௯. முதியாள் - விளி.

௧௭௧. அடிதொடுதல் - சூளுறவுகளுள் ஒன்று; இதனைப் பின்வருவனவற்றாலு ணர்க; "நம்மூ, ரும்மூ சாஅங் சேணடி தொட்டேன்" என்பது கலித்தொகை, ௯௪. "அடல்வலி யெயினர்நி னடிதொடு கடனிது" எனவும் "அடிதொடு படுகடனிது" எனவும் வருவன சிலப்பதிகாரம், வேட்டுவவரி; "சுடரொடு"— "நுடியொடு".—

௧௭௨. இதுகுறை - இஃது எனக்கு வேண்டுகாரியம்; குறை - காரியம்; "முறைவேண் டுநர்க்குங் குறைவேண் டுநர்க்கும், வேண்டுப வேண்டுப வேண் டினர்க் கருளி" என்பது பெரும்பாணாற்றுப்படை, ௪௪௩ - ௪௪௪. இறைமகன் - உதையகுமரன்.

௧ - ௧௭௨. சித்திராபதி, அதுகேட்டு எறிவெய்துயிர்த்துக் கலங்கித் தீப்பலென்று கூத்தியன் மடந்தையரெல்லார்க்குங் கூறும்; அங்ஙனங் கூறுகின்றவள வஞ்சினஞ்சாற்றி உயிர்த்துத் தேர்ந்து போகிக் குறுகிப் பொருந்தி நின்று ஏத்த அவன் 'தவறின்றோ' என, அவள், 'வேந்தே; நின்கண்ணி வாழ்க, காஞ்சி அம்பலத்தாயது' என, அதுகேட்டு அவட்கு உரைப்போன் 'எய்யாமையலேன்' என்று சொல்ல, சித்திராபதி சிறுநகையெய்தி, 'பழமறையா யடங்குதல் கோன் முறையன்றோ குமரற்கு' என்றலும், உதையகுமரன் உள்ளம் பிறழ்ந்து எறியெய்திக் காண்டலும் அடங்காதாகிச்சென்று துணிந்து கேட்ப, அவள் வணங்கி நடுங்கி மயங்கி, 'வேட்டதுசெய்க' என்றுகூறி நீங்கிப் புகுத்த தொழுது ஏத்திக் காயசண்டிகை வடிவாய் வந்துதோன்ற, தாரோன்புக்கு மரீஇ 'இதுகுறை' என றனனென வினைமுடிவு செய்க.

## பத்தொன்பதாவது

# சிறைக்கோட்டமறக்கோட்டமாக்கியகாதை.

[பத்தொன்பதாவது மணிமேகலை காயசண்டிகைவடிவாய்ச் சிறைக்கோட்டம்புக்குச் சிறைவீடுசெய்து சிறைக் கோட்டம் அறக்கோட்டமாக்கிய பாட்டு.]

முதியாள் திருந்தடி மும்மையின் வணங்கி
மதுமலர்த் தாரோன் வஞ்சின்ங் கூற
வேட்கவிழ் தாரோ யெங்கோ மகன்மு
னாடாது துணிந்து நாநல்கூர்ந் தனையென
வித்தக ரியற்றிய விளங்கிய கைவினைச்
சித்திர மொன்று தெய்வங் கூறலு
முதைய குமர னுள்ளங் கலங்கிப்
பொதியறைப் பட்டோர் போன்றுமெய் வருந்தி
யங்கவ டன்றிற மயர்ப்பா யென்றே
செங்கோல காட்டிய தெய்வமுந் திப்பியம்

---

க. முதியாள் - சம்பாபதி. மும்மை - மனம் வாக்குக் காயங்கள். 'முறைமையின் வணங்கி' என்றும் பாடம்.

உ. தாரோன் - உதையகுமரன். வஞ்சினம் - சூளுறவு; அஃது "உன்னடி தொட்டேன்" என்றது; கஅ - ம் காதை, களக.

மேல்வருவன தெய்வத்தின் கூற்று.

ச. நாடாது துணிநது - ஆராயாது துணிவுற்று, நாநல்கூர்ந்தனை - நாவறுமையுற்றாய்; என்றது, "எண்ணித் துணிக கருமந் துணிந்தபி, னெண்ணுவ மென்ப திழுக்கு" என்னும் சசுஎ - ம் திருக்குறளின் பொருளைத் தழுவிவந்தவாறு காண்க. நாநலகூர்ந்தனை — க௦ - ம் காதை, ருச.

ரு. வித்தகர் - சிற்பாசாரிகள்; "வித்தக ரியற்றிய, கண்கவ ரோவியம்" (ரு - ம் காதை, கரு௦ - கருக) எனவும், "வித்தக ரியற்றிய விளங்கிய கைவினைச், சித்திர செயகை" (ரு - ம் காதை, கசுஎ - கசுஅ) எனவும் முன்பு வந்திருத்தல் காண்க; "வித்தக ரியற்றிய விளங்கிய கோலத்து" என்பது சிலப்பதிகாரம், நடுகற்காதை, உஉக.

சு. ஒன்றுதெய்வம் - பொருந்திய தெய்வம்.

ச - சு. நல்கூர்ந்தனையெனக் கூறலுமென்க.

அ. பொதியறை - துவாரமில்லாத கீழறை; "போதார் பிறவிப் பொதியறையோர்" என்பது சிலப்பதிகாரம், நாடுகாண்காதை, கககக.

கூ. அவள் - மணிமேகலை. அயர்ப்பாய் - மறப்பாய்.

க௦. செஙகோல் காட்டிய - செங்கோன்முறையை எடுத்துக் காட்டிய. தெய்வமுமென்றது மணிமேகலா தெய்வத்தை; உம்மை - எதிரதுதழீஇயது. திப்பியமென்பதன்பொருளை, எ - ம் காதை, கூஎ - ம் அடிக்குறிப்பிற்பார்க்க.

கூ - க௦. உதயகுமரனுக்கு மணிமேக

பையரா வல்குல் பலர்பசி களையக்
கையி லேந்திய பாத்திரந் திப்பிய
முந்தை முதல்வி யடிபிழைத் தாயெனச்
சித்திர முரைத்த விதூஉந் திப்பிய
மிங்கிலை யெல்லா மிளங்கொடி செய்தியிற்
பின்னறி வாமெனப் பெயர்வோன் றன்னை
யகல்வாய் ஞால மாரிரு ளுண்ணப்
பகலர சோட்டிப் பணையெழுந் தார்ப்ப
மாலை நெற்றி வான்பிறைக் கோட்டு
நீல யானை மேலோ ரின்றிக்
காமர் செங்கை நீட்டி வண்டுபடு
பூநாறு கடாஅஞ் செருக்கிக் கால்கிளர்ந்து

---

லாதெய்வம் செங்கோன் முறையைய எடுத்துக்காட்டி, மணிமேகலை திறத்தை நீ மறப்பாயென்று கூறியதனை, "கோனிலை திரிந்திடிற் கோணிலை திரியுங், கோணிலை திரிந்திடின் மாரி வறங்கூரு, மாரி வறங்கூரின் மன்னுயி ரில்லை, மன்னுயி ரெல்லா மண்ணாள் வேந்தன், றன்னுயி ரென்னுந் தகுதியின் றாகுந், தவத்திறம் பூண்டோ டன்மேல் வைத்த, வவத்திற மொழிகென் றவன்வயி னுரைத்தபின்" (எ - ம் காதை, அ - கசு) எனவும், "பொன்றிகழ் மேனி யொருத்தி தோன்றிச், செங்கோல் காட்டிச் செய்தவம புரிந்த, வங்கவ டன்றிற மயர்ப்பா யென்றனள்" (கஅ - ம் காதை, அக - அரு) எனவும் இந்நூலுள்ளே முன்புவந்தவாற்றானுணர்க.

கக. 'பசிகெடுப்ப' என்றும் பாடம்.

கக - கஉ. களைய எந்தியபாத்திரம்.

கரு. பிழைத்தாய் - தவறுசெய்தாய்.

கச. இதூஉம் - இதுவும்.

கரு. இங்கிலையெல்லாம் - செங்கோல் காட்டிய தெய்வமுதலிய மூன்றன் வரலாற்றையும். இளங்கொடி - மணிமேகலை.

கசு. பெயர்வோன்றன்னை - பெயர்ந்து செல்லும் உதயகுமரனை.

இனி இராத்திரியை யானையாக உருவகித்துக் கூறுவார்.

கஅ. பகல் அரசு - சூரியனாகிய அரசனை. பணை - பறை; யானை செல்லுங் கால அதன்வரவை எல்லார்க்குந் தெரிவித்தற்குப் பணைமுழங்கும்; "வெரூஉப் பறை நுவலும் பரூஉப்பெருந் தடக்கை, வெருவரு செலவின் வெகுளி வேழம்" என்பது **பொருநராற்றுப்படை**, கஎக - கஎஉ.

கக. மாலை நெற்றி - அந்திக்காலமாகியநெற்றி; பிறைக்கோடு - பிறையாகிய தந்தம்.

உ0. நீலயானை - கரியநிறத்தையுடைய (இராத்திரியாகிய) யானை. மேலோர் - பாகர்; "மேலோரின்றி" எனரூர் முன்னும்; ச - ம் காதை, ருரு; "மேலோர் வீசி" என்பது **மதுரைக்காஞ்சி**, ருஅக.

உக. காமர்செங்கை - விருப்பமாகிய துதிக்கை.

உஉ. பூநாறுகடாம் - எழிலைப்பாலை மலரினது மணநாறுகின்ற மதம்; இதனை, "பாதத யானையிற் பதங்களிற் படுமத நாறக், காதத வங்குச நிமிர்ந்திடக் கால்பிடித் தோடிப், பூதத வேழிலைப் பாலையைப் பொடிப்பொடி யாகக், காத்திரங்களாற் றலத்தொடுந் தேய்த்ததோர் களிறு" என்னுஞ் செய்யுளாலுணர்க; இது **கம்பராமாயணம்**, வனைக் காட்சிப்படலம், சு. செருக்கி - களித்து. கால்கிளர்ந்து - காற்றைப்போலே எழுந்து; "கால்கிளர்ந் தன்ன வேழம்" என்பது **திருமுருகாற்றுப்படை**, அஉ.

நிறையழி தோற்றமொடு தொடர முறைமையி
னகர நம்பியர் வளையோர் தம்முடன்
மகர வீணையின் கிளைநரம்பு வடித்த
விளிபுண ரின்சீ ரெஃகுளங் கிழிப்பப்
பொறாஅ நெஞ்சிற் புகையெரி பொத்திப்
பறாஅக் குருகி னுயிர்த்தவன் போயபி
னுறையுட் குடிகை யுள்வரிக் கொண்ட
மறுவில செய்கை மணிமே கலைதான்
மாதவி மகளாய் மன்றந் திரிதரிற்
காவலன் மகனோ கைவிட லீயான்
காய்பசி யாட்டி காயசண் டிகையென
வூர்முழு தறியு முருவங் கொண்டே
யாற்று மாககட் காற்றுந் துணையாகி

கசு - உரு. பெயர்வோன்றன்னை நீல யானை தொடர வெனவியைக்க; இரவுவர வென்றபடி.

உச. நம்பியர் - காதலஞ்செலவர்; "நறுஞ்சாந் தகலதது நமபியர்" என்பது சிலப்பதிகாரம், ஊர்காண்காதை, கOO. வளையோர் - மகளிர்.

உரு. மகரவீணை - மகரயாழ்; இது நாலவகையாழ்களுள் ஒன்று; பதினேழு நரம்புகளையுடையது கிளைநரம்பு - குரல், இளி, துத்தம், விளரி, கைககிளையென் னும் ஐந்துமாம்; இதனை "கிளையெ னப் படுவ கிளககுங காலைக், குரலே யிளியே துத்தம் விளரி, கைககிளை யென வைந் தாகுமென்ப." என்பதனுலுணர்க. வடித்தல - 'சுட்டு விரலும் பெருவிரலுங் கூட்டி நரம்பை அகமும் புறமும் ஆராய் தல்' என்பர் சிலப்பதிகார அரும்பத வுரையாசிரியர்; 'நரம்பை உருவுதல்' என்பர் ஆசிரியர் நச்சினார்க்கினியர்.

உசு. இளி-இசை; எழுநரம்பினுள் ஒன் றன் பெயராயிருந்தும் எல்லாப்பண்ணி ற்கும் இஃது அடிமணையாதலின், ஈண்டு இப்பொருளைத் தந்துநின்றது. சீர் - தா ளவறுதி. எஃகு - வேல். சீராகிய எஃகு உளததைக்கிழிப்ப.

உஎ. எரிபொததி - (காமமாகிய) தீமூ ட்டப்பட்டு.

உஅ பறாஅக்குருகின் உயிர்த்து - கொல்லனுலைமூசகுப்போலே யுயிர்த்து; பறாஅக்குருகு - வெளிப்படை; கருனை ப் பூவாவஞ்சியென்றும், குதிரைமலை யை ஊராக்குதிரையென்றும், குறிஞ்சி ப்பண்ணைக் கொய்யாக் குறிஞ்சியென் றும் நாஞ்சின்மலையை உழாநாஞ்சிலென் றும் நூல்களில வழங்குதல் காண்க. "ஊதுலைக் குருகி னுயிர்தது" என்றார் முன்னும்; உ - ம் காதை, சரு.

கசு - உஅ. பெயர்வோன்றன்னை நீல யானைதொடர, சீராகியஎஃகு உளங்கி ழிப்ப எரிபொத்தி உயிர்த்து அவன் போயபினென்க.

இனி, மணிமேகலை உதயகுமரனுக்கு அஞ்சிக் காயசண்டிகை வடிவத்துடன் பிச்சையிடுதற்கு வெளிப்பட்டு வந்தமை கூறுவார்.

உகூ. உறையுட் குடிகை - இருப்பிட மாகிய சிறிய கோயிலில். உள்வரிகொ ண்ட - வேற்றுருவங்கொண்ட; உள்வ ரியாவது பாண்டவர் விராடநகரததுப் பிறிதுருவங்கொண்டாற்போலவது; கிரு த்திரிமவேட மென்றும் வடிவுமறைத்த லென்றுங்கூறுவர் சிலப்பதிகார அரும் பதவுரையாசிரியர்.

ஙக. 'மாதவிமகளாய்' என்பது முத லியன மணிமேகலையின் உட்கோள். ம ன்றம் - உல்கவறவி.

ஙஉ. காவலன்மகன் - உதயகுமரன். கைவிடலீயான் - கைவிடான்.

ஙரு. கஎ - ம் காதை, கூச.

யேற்றலு மிடுதலு மிரப்போர் கடனவர்
மேற்சென் றளித்தல் விழுத்தகைத் தென்றே
நூற்பொரு ளுணர்ந்தோர் நுனித்தன ராமென
முதியாள் கோட்டத் தகவயி னிருந்த
வமுத சுரபியை யங்கையின் வாங்கிப்
பதியகந் திரிதரும் பைந்தொடி நங்கை
யதிர்கழல் வேந்த னடிபிழைத் தாரை
யொறுக்குந் தண்டத் துறுசிறைக் கோட்டம்
விருப்பொடும புகுந்து வெய்துயிர்த் துப் புலம்பி
யாங்குப் பசியுறு மாருயிர் மாக்களை
வாங்கு கையகம் வருந்தநின் றூட்டலு
மூட்டிய பாத்திர மொன்றென வியந்து
கோட்டங் காவலர் கோமகன் றனக்கிப
பாத்திர தானமும் பைந்தொடி செய்தியும்
யாப்புடைத் தாக விசைத்துமென் றேகி
நெடியோன் குறளுரு வாகி நிமிர்ந்துத
னடியிற் படியை யடக்கிய வந்நா
ணீரிற் பெய்த மூரி வார்சிலை
மாவலி மருமான் சீர்கெழு திருமகள்

௩௬ - ௩௮. வாங்குதலும கொடுததலும் இரப்போர்கடனுமாதலின், அவர் எவ்விடத்தும் வலிந்து சென்று கொடுததல் சிறப்புடைததென்று நூற்பொருளுணர்ந்தோர் ஆராய்ந்து சொன்னாரென்று கருதி. (?)

௪0. வாங்கி - கொண்டு.

௪௧. நங்கை - மணிமேகலை. 'பைந்தொடி மடந்தை' என்றும் பாடம்.

௪௨. பிழைததாரை - பிழை செய்தாரை.

௪௩. தண்டத்து - தண்டத்தினையுடைய, சிறைக்கோட்டம்-சிறைச்சாலை.

௩0 - ௪௫. மணிமேகலை, நுனித்தன ராமென வாங்கிப் புகுந்து நின்று மாக்களையூட்டலுமென்க.

இவள் பலரையும் உண்பித்தல்கண்ட கோட்டங்காவலர் வியப்புற்றுச்சென்று அரசனுககுத தெரிவித்தல் இனிக்கூறப்படும்.

௫0. யாப்புடைததாக - உறுதியுடைத்தாக. இசைததும் -சொலலுவேம.

௪எ - ௫0. கோட்டங்காவலர் வியந்து தானமும் செய்தியும் கோமகனுக்கு இசைததுமென்றேகியென்க.

௫௧. நெடியோன் - திருமால், குறளுருவாகி - வாமனனாகி, நிமிர்ந்து - பேருருவங்கொண்டு

௫௨. அடக்கிய- அடகக. அந்நாளில; அடககிய அந்நாளென வியைததுப் பெயரெசசததொடராக்கினுமமையும்.

௫௩. நீரிற் பெய்த - நீருடன் பூமியைக்கொடுத்த; பூமியைத தாரைவார்ததுக் கொடுத்தவெனறபடி.

௫௨ - ௫௩. அடககிய நீரிற் பெய்த வெனவியைகக.

௫௪. மாவலி மருமான் மகள் - மகாபலியின் வழிததோன்றலாகிய அரசனுடைய மகள்; அரசன்பெயர் புலப்படவில்லை.*

* மகாபலியின் பரம்பரையரசர் யாரென்று வினவியபொழுது, இராசாங்கத்துச் சிலாசாதன பரிசோதகர்களுள் ஒருவராகிய ம-ா-ா-ஸ்ரீ வி. வெங்கையாவர்கள்

சீர்த்தி யெனனுந் திருத்தகு தேவியொடு
போதவிழ் பூம்பொழில் புகுந்தனன் புக்குக்
கொம்பர்த் தும்பி குழலிசை காட்டப்
பொங்கர் வண்டின நலலியாழ் செய்ய
வரிக்குயில் பாட மாமயி லாடும்
விரைப்பூம் பந்தர் கண்டுளஞ் சிறந்தும்
புணர்துணை நீங்கிய பொய்கை யன்னமொடு
மடமயிற் பேடையுந் தோகையுங் கூடி
யிருசிறை விரித்தாங் கெழுந்துடன் கொட்பன

---

௫௫. சீர்த்தியென்று பெயர் கூறப்படும செல்வமிக்க தேவியுடன். ‘சீதரசகையெனுந் திருத்தகு தேவி’ என்றும் பாடம.

௫௬. போது - மலரும் பருவமுள்ள அரும்பு. ‘பொருந்தினன் புசகு’ என்றும் பாடம்.

௫௭. குழல் - வேய்ங்குழல்.

௫௮. பொங்கர் - சோலை

௫௭ - ௫௮. இவ்வடிகளிற்போலவே “குழலிசை தும்பி கொளுத்திக் காட்ட, மழலை வண்டினம் நல்லியாழ் செய்ய” என்று முனபு வந்திருத்தல் காண்க; ௪ - ம் காதை, ௩ - ௪.

௫௯. வரி - வரிப்பாட்டு ; கீற்றுமாம். ‘மாமயி லாடுவ’ என்றும் பாடம்.

௫௭ - ௬0. காட்டச் செய்யப் பாட ஆடும்பந்தர்கண்டு உளஞ்சிறந்துமென்க.

௬௧. துணை - பெண்ணன்னம்.

௬௨. தோகை - ஆண்மயில். ‘சேவலுங் கூடி’ என்றும் பாடம்.

௬௩. கொட்பன - சுழலுவனவற்றை.

---

(எம் - ஏ), அன்புடன் எழுதியனுப்பியவிடை வருமாறு:— “பாணவம்சத்து அரசர்கள் மகாபலியின் பரம்பரையைசசேர்ந்தவர்கள்; அவர்களின் கல்வெட்டுகள், வட ஆர்ககாடு ஜில்லா வேலூருக்கடுதத திருவல்லமென்கிற கிராமத்திலும் மைஸூர் ஸம்ஸ்தானததில துல்கான்போடே என்கிற ஊரிலும் கிடைத்திருக்கின்றன; “மூவுலகிலும் தொழப்பட்டவனும் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் தலைவனுமிருக்கின்ற பரமேசுவரனுக்கு வாயில்காக்கும்படியாக நியமிக்கப்பட்டமகாபலிகுலத்தைச்சேர்ந்தவன்” எனறு சிலபாணவரசர்கள், தங்களுக்குரிய கல்வெட்டுகளிற் சிறப்பிக்கப்பட்டிருக்கிறார்கள். பாணகுலததைச்சேர்ந்த செப்புப்பட்டயங்கள் இரண்டுண்டு. அவற்றில ஒனறு, சிதம்பரம் கனகஸபையின் முகட்டைப் பொன்வேய்ந்த பராந்தகனென்று சொல்லப்பட்ட வீரநாராயணச்சோழன் பாணவம்சத்தை நிர்மூலஞ்செய்து அவர்களின் நாட்டைக் கங்கவம்சத்தைச்சேர்ந்த அத்திமல்லனென்ற அரசனுக்குககொடுததகாகச் சொலலுகின்றது. இந்த வீரநாராயணன் கி. பி. 10 - ம் நூற்றாண்டின் முற்பாதியில ஜீவித்திருந்தான். மற்றொரு செப்புப்பட்டயததில் கீழே எழுதப்பட்டிருக்கும் வம்சாவலி கிடைத்தது:— பலி, அவன் மகன் பாணன், அவன குலததிற்பிறந்தவன் பாணுதிராசன், இவ்வம்சத்தைச்சேர்ந்த அநேக அரசர்கள் மரித்தபிறகு இருந்தோன் ஜயநந்திவர்மன் (-இவன் ஆந்திரதேசத்திற்கு மேற்கிலிருந்த நாட்டை ஆண்டவன்), அவன் மகன் முதலாம் விசயாதித்தன், அவன்மகன ஜகதேகமல்லனென்கிற மல்லதேவன், அவன்மகன் பாணவித்தியாதரன், அவன் மகன் பிரபுமேருதேவன், அவன் மகன் முதலாம் விக்கிரமாதித்தன், அவன் மகன் புகழ்விப்பவர்கண்டனென்கிற இரண்டாம் விசயாதித்தன், அவன்மகன் விசயபாகுவெனறு கூறப்பட்ட இரண்டாம் விக்கிரமாதிததன் (- இவன் கிருஷ்ணராஜனென்ற அரசனுக்கு நேசன்.) இந்த அரசர்களின்காலம் தெரியவில்லை.”

ஒருசிறைக் கண்டாங் குண்மகிழ் வெய்தி
மாமணி வண்ணனுந் தம்முனும் பின்னையு
மாடிய குரவையிஃ தாமென நோக்கியுங்
கோங்கலர் சேர்ந்த மாங்கனி தன்னைப்
பாங்குற விருந்த பல்பொறி மஞ்ஞையைச்
செம்பொற் றட்டிற் றீம்பா லேந்திப்
பைங்கிளி யூட்டுமோர் பாவையா மென்று
மணிமலர்ப் பூம்பொழி லகவயி னிருந்த
பிணவுக்குரங் கேற்றிப் பெருமதர் மழை
மடவோர்க் கியற்றிய மாமணி யூசல
கடுவனூக் குவது கண்டுநகை யெய்தியும்
பாசிலை செறிந்த பசுங்காற் கழையொடு
வால்வீ செறிந்த மராஅங் கண்டு
நெடியோன் முன்னொடு நின்றன னாமென

---

௬௪. ஒருசிறை - ஒருபக்கம்.

௬௫. மாமணிவண்ணன் - கண்ணன். தம்முன் - பலதேவர். பின்னை - நப்பின்னை. 'பின்னையும்' என்றும் பாடம்.

௬௬. ஆடிய - (துவராபதியில் எருமன்றத்தே அக்காலத்து) ஆடிய. குரவை - கைகோத்தாடுங் கூத்து; இதனை, வரிக்கூத்தின் ஒருறுப்பென்றும், வினோதக் கூத்து ஆறினுள் ஒன்றென்றுங் கூறுவர் அடியார்க்கு நல்லார்.

௬௫ - ௬௬. கண்ணனும் பலதேவரும் நப்பின்னையுமாகிய மூவரும் துவராபதியில் எருமன்றத்தே குரவைக்கூத்து ஆடியதனை, "மாயவன்றன் முன்னினொடும் வரிவளைக்கைப் பின்னையொடும், கோவலர்தஞ் சிறுமியர்கள் குழற்கோதை புறஞ்சோர, வாய்வளைச்சீர்க் கடிபெயர்த்திட் டசோதையார் தொழுதேத்த, தாமெருமன் றத்தாடுங் குரவையோ தகவுடைத்தே" என்பதனாலுணர்க. இது சிலப்பதிகாரம், ஆய்ச்சியர் குரவை.

௬௧ - ௬௬. அன்னத்திற்குப் பலதேவரும், மயிற்பேடைக்கு நப்பின்னையும், தோகைக்குக் கண்ணனும் உவமைகள். கொட்பனவுற்றறக் கண்டு மகிழ்வெய்திக் குரவையிஃதாமென நோக்கியுமென்க.

௬௮. கோங்கலர் - கோங்கம்பூ.

௬௯. மஞ்ஞை - மயில்.

௭௦. பாவை - பெண். என்றும் - என்று கருதியும்.

௬௭ - ௭௦. கோங்கலர்க்குப் பாவையுடைய பொற்றட்டும், மாங்கனிக்குக் கிளியும், மயிலுக்குப் பெண்ணும் உவமைகள்.

௭௨. பிணவுக்குரங்கு - பெண்குரங்கு, "பன்றி புல்வாய் நாயென மூன்றும், ஒன்றிய வென்ப பிணவென் பெயர்க்கொடை" (தொல்காப்பியம், மரபியல், ௫௮) என்னுஞ் சூத்திரத்தில் 'ஒன்றிய என்றதனாற் பிணவு' என்பது குரங்குக்குங் கொள்ளப்பட்டது.

௭௩. மடவோர்க்கு - மகளிர்க்கு.

௭௪. கடுவன் - ஆண்குரங்கு; "குரங்கி னேற்றினைக் கடுவ னென்றலும்" என்பது தொல்காப்பியம், மரபியல், ௬௮. ஊக்குவது - செலுத்துதலை. 'கண்டுமகிழ் வெய்தியும்' என்றும் பாடம்.

௭௨ - ௭௪. கடுவன், பிணவுக்குரங்கை யேற்றி ஊசலை ஊக்குவதுகண்டு நகையெய்தியுமென்க.

௭௫. கழை - மூங்கில்.

௭௬. வால்வீ - வெள்ளியமலர். மராம் - வெண்கடம்பு.

௭௭. நெடியோன் - கண்ணன். முன் - தமையன்; என்றது பலதேவனை. 'நெடியோன் றம்முனொடு' என்றும் பாடம்.

௭௫ - ௭௭. கழைக்குக் கண்ணனும்,

தொடிசேர் செங்கையிற் றொழுதுநின் றேத்தியு
மாடற் கூத்தினோ டவிநயந் தெரிவோர்
நாடகக் காப்பிய நன்னூ னுனிப்போர்
பண்ணியாழ் நரம்பிற் பண்ணுமுறை நிறுப்போர்
தண்ணுமைக் கருவிக் கண்ணெறி தெரிவோர்
குழலொடு கண்டங் கொளச்சீர் நிறுப்போர்
பழுனிய பாடல பலரொடு மகிழ்வோ
ராரம பரிந்த முத்தங் கோப்போ
ரீரம் புலர்ந்த சாந்தந் திமிர்வோர்
குங்கும வருணங் கொங்கையி னிழைப்போ
ரஞ்செங் கழுநீ ராயிதழ் பிணிப்போர்
நன்னெடுங் கூந்த னறுவிரை குடைவோர்
பொன்னணி ஞடியிற் பொருந்துபு நிற்போ
ராங்கவர் தமமோ டகலிரு வானத்து
வேந்தனிற் சென்று விளையாட் டயர்ந்து

---

வெண்கடம்பிற்குப் பலதேவரும் உவமைகள்.

எஅ. தொடி - வீரவளை; "தொடித் தோட்கை துடுப்பாக" என்பது மதுரைக்காஞ்சி, ௩௪.

எகூ. அவிநயம - கதைதழுவாதே பாட்டுக்களின பொருள்தோன்றக் கைகாட்டி அவிநயிப்பது.

அ0. நாடகம் - கதைதழுவிவருங்கூத்து. காப்பியம் - காவயம். நாடகக்காப்பியமாகிய நன்னூலென்க. நுனிப்போா - கூர்ந்து ஆராய்வோர்; "நூற்பொரு ளுணர்ந்தோர் நுனித்தனர்" என இக்காதையிலேயே முன்பு வந்திருத்தல் காண்க; ௩அ-ம் அடி.

அக. பண்களையுடைய வீணைநரம்புகளிற பண்களை முறையே நிறுத்துவோர்.

அஉ. தண்ணுமைக்கருவி - மத்தளம்; இதனை உத்தமத்தோற கருவியென்பர். கண்ணெறிதெரிவோர் - அதன் முகத்தில அடித்தலையாராய்வோர்; கண் - வாத்தியங்களின் முகம்; "பண்ணமை முழவின் கண்ணெறி யறிந்து" என்பது **சிலப்பதிகாரம்**, அரங்கேற்றுகாதை, ௬௧.

அங. குழலொடு கண்டம் கொள - வேய்ங்குழலோடு மிடற்றுப்பாடல் பொருந்துமவண்ணம். சீர் - தாளவறுதி.

அச. பழுனிய பாடல் - முற்றுப்பெற்ற இசைப்பாடல். மகிழ்வோர் - மகிழ்ந்துபாடுவோர். 'பலவொடு மகிழ்வோர்' என்றும் பாடம்.

அரு. ஆரம் பரிந்தமுத்தம் - ஆரம் அறுபடுதலாற சிந்தியமுத்துக்கள்.

அசு. புலர்ந்த சாந்தம் - உலர்ந்த சந்தனம.

அஎ. குங்குமவருணம் - சிவந்தநொய்யிற்குழம்பு. இழைப்போர் - எழுதுவோா.

அஅ. ஆயிதழ்பிணிப்போர் - அழகிய இதழைக்கட்டுவோர்; 'ஆயிதழ் பிணைப்போர்' என்றும் பாடம்.

கூ0. ஆடி - கண்ணாடி. 'பொன்னணியாடியின்' என்றும் பாடம்.

எகூ - கூக. தெரிவோரும், நுனிப்போரும், நிறுப்போரும், தெரிவோரும், நிறுப்போரும், மகிழ்வோரும், கோப்போரும், திமிர்வோரும், இழைப்போரும், பிணிப்போரும், குடைவோரும், நிற்போருமாகிய அவர்களோடென்க.

கூக - கூஉ. வானத்து வேந்தனில் - இந்திரன்போல, "வேந்தன் மேய தீம்புன லுலகமும" (தொல்காப்பியம்,

குருந்துந் தளவுந் திருந்துமலர்ச் செருந்தியு
முருகுவிரி முல்லையுங் கருவிளம் பொங்கரும்
பொருந்துபு நின்று திருந்துநகை செய்து
குறுங்கா னகுலமு நெடுஞ்செவி முயலும
பிறழ்ந்துபாய் மானு மிறுமபகலா வெறியும
வம்மெனக் கூஉய் மகிழ்துணை யொடுதன
செமமலர்ச் செங்கை காட்டுபு நின்று
மன்னவன் றனு மலர்க்கணை மைந்தனு
மின்னிள வேனிலு மிளங்காற் செல்வனு
மெந்திரக் கிணறு மிடுங்கற் குன்றமும்
வந்துவீ ழருவியு மலர்ப்பூம் பந்தரும்
பரப்புநீர்ப் பொய்கையுங் கரப்புநீரக் கேணியு
மொளித்துறை யிடங்களும் பளிக்கறைப் பள்ளியு
மாங்கணுந் திரிந்து தாழ்ந்துவிளை யாடி

அகத்திணையியல, ரு) எனவும், வேந்தனும் வேந்து கெடும்" திருக்குறள், அகக.) எனவும் வருதலால், வேந்தனென்றற்கே இந்திரனென்று பொருள்கூறினும் இழுக்காது. விளையாட்டயர்ந்து - விளையாட்டை விரும்பிச்செய்து.

கூரு. தளவு - செம்முல்லை. செருந்தி - ஒருமரம்; இது செருந்தெனவும் வழங்கும். 'குருகுந் தளவுந் திருமலர்ச் செருந்தியும்' என்றும் பாடம்.

கூச. முருகு - வாசனை. கருவிளா - ஒருமரம். "நறுந்தண் ணகிலுஞ் சாந்தனச் குழையுங், கருவிளம் சோடும்" என்பது பெருங்கதை, உஞ்சைக்காண்டம், நீராட்டரவம். பொங்கர் - சோலை; கிளையுமாம்.

கூகூ. நகுலம் - கீரி.

கூஎ. இறும்பு - குறுங்காடு. வெறி - ஆடு. 'விரும்பு கயாவெறியும' என்றும் பாடம்.

கூஅ. வம்மெனக்கூஉய் - வாருமென்று கூவி, வாருமென்றது 'வம்' என நின்றது, "கதுமெனக் கரைந்து வம்மெனக் கூஉய்" என்பது பொருநராற்றுப்படை, கoக. மகிழ்துணை - இராசமாதேவி.

கூகூ. காட்டுபு - காட்டி.

கoo. மலர்க்கணை மைந்தன் - மன்மதன்.

கoக. இன்னிள வேனில் - இனிய இளவேனிற்பருவம்; அஃதாவது சித்திரைவைகாசிமாதங்கள். இளங்காற்செல்வன் - தென்றற்காற்றாகிய செல்வன், "சிறுகாற் செல்வன் மறுகிற் றூற்ற" என்பது சிலப்பதிகாரம், அந்திமாலைச் சிறப்புசெய்காதை, கஅ.

கoஉ. எந்திரக்கிணறு - நீரை நிறைக்க வேண்டுமாயின் நிறைத்துப் போக்கவேண்டுமாயிற் போக்குதற்குரிய கிணறு. இடுங்கற்குன்றம் - செய்குன்று.

கoச. கரப்புநீர்க்கேணி - மறைதலையுடைய நீரையுடைய கிணறு; இதனை அந்தக்கேணியென்பர்.

கoரு. பளிக்கறை - பளிங்கறை. பள்ளி - இடம்.

கoசு. யாங்கணும் - கிணறும் குன்றமும் அருவியும் பந்தரும் பொய்கையும் கேணியும் இடங்களும் பள்ளியுமாகிய எவ்விடத்தும். திரிந்து - மன்னவனும் மைந்தனும் வேனிலும் செல்வனும் திரிந்து.

கoஉ - கoசு. இவ்வடிகளிற்போலவே, "அந்தக்கேணியு மெந்திரக் கிணறுந், தண்பூம் பொய்கையுந் தலைத்தலை சான்றவை, மெண்சுனைக் குன்றொடு வேண்டுவ பிறவும், மிளமையாக வியற்றிய விளையாட்டிடத்து, ... புரிந்து நோக்கி" (பெருங்கதை, உஞ்சைக்காண்டம், மாலை

மகத வினைஞரு மராட்டக் கம்மரு
மவந்திக் கொல்லரும் யவனத் தச்சருந்
தண்டமிழ் வினைஞர் தம்மொடு கூடிக்
கொண்டினி தியற்றிய கண்கவர் செய்வினைப்
பவளத் திரள்காற் பன்மணிப் போதிகைத
தவள நித்திலத் தாமந் தாழ்ந்த
கோணச் சந்தி மாண்வினை விதானத்துத்
தமனியம் வேய்ந்த வகைபெறு வனப்பிற்
பைஞ்சேறு மெழுகாப் பசும்பொன் மண்டப
திந்திர திருவன் சென்றினி தேறலும்
வாயிலுக கிசைத்து மன்னவ னருளாற்
சேய்நிலைத் தன்றியுஞ் செவ்வியின் வணங்கி

ப்புலம்பல்) எனவும், "பளிககறைப் பூமி யும்பந்தெறி களதது, மணிக்கயிற் றூசன் மறலிய விடததுங், கொய்மலர்க காவும் பொய்கைக கறையு, மந்தக் கேணியும் வந்துபெயர் கூவி" (பெருங்கதை, உஞ் சைக்காண்டம், யாழ்கை வைததது) எனவும் வருதல்காண்க.

கOஎ. மகதவினைஞர் - மகதநாட்டுப்பிறந்த இரததினவேலைககாரர். மராட்டம்- மகாராஷ்டிரதேசம்.

கOஅ. அவந்தி - அயந்திதேசம். யவனம - யவனதேசம்.

கOஎ - கOஅ. மகததேசததுப் பிறந்த இரததினவேலைக்காரா முதலியோா தொழிலிற் பெயர்பெறறவரென்பதை, "யவனத தச்சரு மவநதிக கொலலரு, மகதத்துப் பிறந்த மணிவினைக காரரும பிறந்த பசும்பொன் வினைஞருங, கோசலத தியன்ற வோவியத தொழிலரும், வதத நாட்டு வண்ணக் கம்மரும" என்பதனாலுணர்க. இது, பெருங்கதை, உஞ்சைககாண்டம, சயந்திபுககது.

கOஎ - கOகூ. மேற்கூறிய மகதவினைஞர் முதலியோர் தண்ணிய தமிழ்நாட்டிற்பிறந்த வேலைக்காரருடனே கூடி.

ககஉ. நிததிலததாமம - முத்துமாலை.

ககங. கோணச்சந்தி - கோணமாகிய சந்தி; "சந்திக கோணமு மெந்திர வாணியும்" என்பது பெருங்கதை, உஞ்சைக்காண்டம், சயந்திபுககது. விதானம் - மேற்கட்டி.

ககச. தமனியம் - பொன். 'வகை வேறு வனப்பின்' என்றும் பாடம்.

ககரு. பைஞ்சேறு மெழுகா - ஆப்பியால் மெழுகப்படாத; "பைஞ்சேறு மெழுகிய படிவ நன்னகர்" பெரும்பாணாற்றுப்படை, உகூஅ; சந்தனததால மெழுகியவென்றபடி; "மங்கல வெள்ளை வழிததுமுத் தீர்த்தபின்" என்று வருதல காணக. இது சீவகசிந்தாமணி, கேமசரியாரிலம்பகம், கூகூ. 'செமபொன் மண்டபதது' எனறும பாடம்.

ககசு. இந்திரதிருவன் - இந்திரச்செலவமுடைய அரசன.

ருக - ககசு. இந்திரதிருவன், தேவியொடுபுக்குக கண்டு உளஞ்சிறந்தும் நோககியும பாவையாமென்றும நகையெய்தியும் ஐதியும அவர்தம்மோடுசென்று அயர்ந்து பொருந்துபுநின்று நகைசெய்து கூஉய்க் காட்டுபுநின்று யாஙகளுந்திரிந்து விளையாடி மண்டபதது அவன் சென்று இனிது எறலுமென்க.

ககஎ. வாயிலுககு இசைதது - வாயில காவலர்க்குத தெரிவிதது. அருளால் - கட்டளையால்.

கசஅ. சேய்நிலைத்தன்றியும் - தூரமான இடததே தாம் நின்றதல்லாமலும். செவ்வியின் - சமயததில்.

சஅ - ககஅ. கோட்டங்காவலர் இசைத்துமென்றேகி இசைதது வணங்கியெனக் கூட்டுக.

யெஞ்சா மண்ணசைஇ யிகலுளந் துரப்ப
வஞ்சியி னிருந்து வஞ்சி சூடி
முறஞ்செவி யானையுந் தேரு மாவு
மறங்கெழு நெடுவாள் வயவரு மிடைந்த
தலைத்தார்ச் சேனையொடு மலைத்துத் தலைவந்தோர்
சிலைக்கய னெடுங்கொடி செருவேற் றடக்கை
யார்புனை தெரிய விளங்கோன் றன்னாற்
காரியாற்றுக் கொண்ட காவல் வெண்குடை
வலிகெழு தடக்கை மாவண் கிள்ளி
யொளியொடு வாழி யூழிதோ றூழி

கககூ. எஞ்சா மண் நசைஇ - குறை யாத மண்ணைவிரும்பி, இகல் உளம் துரப்ப - மாறுபாடு உள்ளத்தைச்செலுத்த. எஞ்சார் மண்ணசை' என்றும் பாடம்.

கஉ0. வஞ்சியின் இருந்து - கருவூரி லிருந்து, வஞ்சி சூடி - வஞ்சிப்பூமாலை யைச்சூடி; "பூவா வஞ்சியிற் பூத்த வஞ்சி, வாய்வாணெடுந்தகை மணிமு டிக் கணிந்து" என்று இப்படியே சிலப் பதிகாரத்துங் கூறியிருத்தல் காண்க; கால்கோட்காதை, ௫0.

கககூ - கஉ0. இதனை, "எஞ்சா மண் ணசை வேந்தனை வேந்த, னஞ்சு தகச் சென் றடல்குறித் தன்றே" (தொல்காப் பியம், புறத்திணையியல், எ.) எனவும், "வாடா வஞ்சி தலைமலைந்து, கூடார் மண கொளல்குறித்தன்று"; "வஞ்சி வணங்கார் வணக்கிய வண்டார்ப்பக், குஞ்சி மலைந்தானெங் கோ" (புறப்பொ ருள்வெண்பாமாலை, வஞ்சிப்படலம், க) எனவும் வருவனவற்றாலுணர்க.

கஉக. முறஞ்செவி யானை - முறம் போலும் காதுகளையுடையயானை; "முற ஞ்செவி வாரணம்" என்பது சிலப்பதி காரம், நாடுகாண்காதை, உ௪எ.

கஉஉ. மறம் - ஆண்மை. வயவர் - வீரர். 'மறவரு மிடைந்த' என்றும் பாடம்.

கஉ௩. தலைத்தார்ச்சேனையொடு - முத ன்மையாகிய தூசிப்படையோடு. மலை த்து - மாறுபட்டு. தலைவந்தோரென்றது சேரபாண்டியர்களை; பின் "சிலைக்கய னெடுங்கொடி" என்று வருதலால் இங் ஙனங்கொள்ளப்பட்டது.

கஉ௪. சிலைக்கயல நெடுங்கொடி - (சே ரனுடைய விற்கொடியையும், பாண்டிய னுடைய கயற்கொடியையும்.

கஉ௫. ஆர் - ஆத்தி; இது சோழர்க ளுக்கு உரிய அடையாளமாலை. இளங் கோன் - தம்பி; இவன் யுவராஜனாக இருத்தலின், 'இளங்கோன்' என்றார் போலும்.

கஉ௬. காரியாறு - ஒருநதியின்பெயர். இதனை, 'காரியாற்றுத் தரீஇயநெடுங்கி ள்ளி' (புறநானூறு, ௪௭) எனவும், "செ ல்கதிமுன் னளிப்பார்தந் திருக்காரிக் கரைபணிந்து" (பெரியபுராணம், திரு நாவுக்கரசுநாயனார்புராணம, ௬௪௬) என வும் வருவனவற்றாலுணர்க. பெரும்போ ர்புரிவோர் ஆற்றிடையே அது செய்தல் இயல்பு; "உடன்றமேல் வந்த வாரிய மன்னரைக, கடும்புனற் கங்கைப்பேரியா ற்று வென்றோய்" (சிலப்பதிகாரம், நடு கற்காதை, கஉ0 - கஉ௧.) என்று வருதல் காண்க.

கஉஎ. மாவண்கிள்ளி - கிள்ளி, இவ்வ ரசன் பெயர்.

கஉ௬ - கஉஎ. வந்தோருடைய கொ டிகளை இளங்கோனாற் காரியாற்றுக்கொ ண்ட மாவண்கிள்ளியென்க.

கஉஅ. ஊழி - உறங்காநிற்கவும் உல ங்காக்கின்ற அரசரிடத்துள்ள கடவுட் டன்மை; "இளைய ரிளமுறைய ரென் றிகழார் நின்ற, வொளியியா டொழுகப் படும்" என்பது திருக்குறள், ௬௯அ, "உ றங்கு மாயினு மன்னவன் றன்னொளி, கறங்கு தெண்டிரை வையகங் காக்கு மால்" என்பது சீவகசிந்தாமணி, நாமக

வாழி யெங்கோ மன்னவர் பெருந்தகை
கேளிது மன்னோ கெடுகநின் பகைஞர்
யானைத் தீநோய்க் கயர்ந்துமெய் வாடியிம்
மாநகர்த் திரியுமோர் வம்ப மாத
ரருஞ்சிறைக் கோட்டத் தகவயிற் புகுந்து
பெரும்பெயர் மன்ன நின்பெயர் வாழ்த்தி
ஐயப பாத்திர மொன்றுகொண் டாங்கு
மொய்கொண் மாக்கண் முசிக்கவூண் சுரந்தன
ளீறுதிதோ றாழி யுலகங் காத்து
வாழி யெங்கோ மன்னவ வென்றலும்
வருக வருக மடக்கொடி தாவென்
றருள்புரி நெஞ்சமொ டரசன் கூறலின்
வாயி லாளரின் மடக்கொடி தான்சென்
றாய்கழல் வேந்த னருள்வா ழியவெனத்
தாங்கருந் தன்மைத் தவத்தோய் நீயார்
யாங்கா கியதிவ் வேந்திய கடிஞையென்
றரசன் கூறலு மாயிழை யுரைக்கும்
விரைத்தார் வேந்தே நீநீடு வாழி
விஞ்சை மகள்யான் விழவணி மூதூர்
வஞ்சந் திரிந்தேன் வாழிய பெருந்தகை
வானம வாய்கக மண்வளம் பெருகுக
தீதின் றாக கோமகற் கீங்கீ
தையக் கடிஞை யம்பல மருங்கோர்

---

ளிலமபகம், உகக. 'ஒலியொடுவெழாஅற' என்றும பாடம்.

கஉகூ. 'வாழி யெஙகோ வாழிய பெருந்தகை' என்றும் பாடம்.

கஙுக. அயர்நது - கவலையுற்ற.

கஙுஉ. வம்பமாதர் - காயசணடிகை; யம்பு - புதுமை.

கஙுச. பெருமபெயர் - பெரியபுகழ்.

கஙுசா. மொய் - நெருக்கம். முசிகக - (வாங்குதலால்) மெலிய. 'மொசிக்கவூண் சுரந்தனள்' எனறும் பாடம்.

கஙுஉ - கஙுசா. மாதா புகுந்து வாழ்த்தி கொணடு ஊணை சுரந்தனள்.

கஙுஅ. என்றலும - என்று கோட்டங் காவலர் கூறலும.

கஙுகூ. மடககொடிவருகவருகவென்று.

கசக. வாயிலாளரின் - வாயிலாளர் களால்.

கசஉ. வாழியவென - வாழ்கவென்று மணிமேகலைசொல்ல. 'தாள்வா ழிய' என்றும் பாடம்,

மேலவருவது அரசன்கூற்று.

கசச. நீ எந்திய இப்பாததிரம் எங்கே கிடைத்தது.

மேலவருவன மணிமேகலைகூற்று.

கசஎ. விஞ்சைமகளென்பதற்கு வித்தையையுடைய மகளென்றும், விததியாதரமகளென்றும் இருபொருள்கொள்க. பின்வருவனவும் இப்படியே எற்பப்பொருள் கொள்ளுதற்குரியவை.

கசகூ. வானம் - மழை.

கருo. கோமகற்குத் தீதின்றாகுக. 'கோமகன் றனக்கீங்கு' என்றும் பாடம்.

கருo - கருக. ஈது ஐயக்கடிஞை - இது பிச்சைப்பாத்திரம்.

தெய்வந் தந்தது திப்பிய மாயது
யானைத் தீநோ யரும்பசி கெடுத்த
நூனுடை மாக்கட் குயிர்மருந் திதுவென
யான்செயற் பாலதெ னிளங்கொடிக் கென்று
வேந்தன் கூற மெல்லிய லுரைக்குஞ்
சிறையோர் கோட்டஞ் சீத்தரு ளருளாற்
றறவோர்க் காக்கு மதுவா ழியரென
வருஞ்சிறை விட்டாங் காயிழை யுரைத்த
பெருந்தவர் தம்மாற் பெரும்பொரு ளெய்தக்
கறையோ ரில்லாச் சிறையோர் கோட்ட
மறவோர்க் காக்கின னரசாள் வேந்தென

சிறைக்கோட்டம் அறக்கோட்டமாக்கியகாதை முற்றிற்று.

---

க௫௨. திப்பியமாயது-தெய்வலோகத்திருந்து உண்டாகியபொருளாவுள்ளது.

க௫௪ ஊன் உடைமாக்கட்கு-உடம்பு மெலிந்தவர்களுக்கு. உயிர்மருந்து - உயிரைக்கொடுக்குமருந்து. 'மானிட மாக்களுயிர்மருந்து' என்றும்பாடம். என - என்று மணிமேகலைசொல்ல.

க௫௭. 'கோட்டஞ் சிதைத்து' என்றும் பாடம்.

க௫௮. 'அறவோர்க் காக்குமதி' என்றும் பாடம்.

க௫௭ - க௫௮. சிறைச்சாலையை இடித்துத் தூய்மைசெய்து அவ்விடத்தை அருள்பொருந்திய மனத்தையுடைய முனிவர்களுக்கு உரிய இடமாகச்செய்யுமதுவே நீ செயற்பாலதென்று மணிமேகலை சொல்ல.

க௫௯. 'அருஞ்சிறை விடுத்த தாயிழை தானென' என்றும் பாடம்.

க௬0. பெரும்பொருள் - அறம்; ஞானமுமாம்.

க௬க. கறையோர் - கடமைகொடுப்போர். இல்லாக்கோட்டமென்க; என்றதனால், அரசன் கறைவீடுசெய்த செங்கோன் முறையையுடையனென்றவாறாயிற்று; இதனை, "சிறைப்படு கோட்டஞ் சீமின் யாவதுங், கறைப்படு மாக்கள் கறைவீடு செய்ம்மி, னிடுபொருளாயினும் படுபொருளாயினு, முற்றவர்க் குறுதி பெற்றவர்க் காமென, யானையெருத்தத் தணிமுர சிரீஇக், கோன்முறையறைந்த கொற்ற வேந்தன்" (கட்டுரை காதை, க௨௬ - க௩௧.) எனவும், "சிறையோர் கோட்டஞ் சீமின் யாங்கணுங், கறைகெழு நல்லூர்க் கறைவீடு செய்ம்மென" (நடுகற்காதை, ௨0௩ - ௨0௪) எனவும் சிலப்பதிகாரத்து வருதல்காண்க.

க - க௬௨. சாரோன் வணங்கிக் கூறத் தெய்வங்கூறலும், உள்ளங்கலங்கி வருந்தி அறிவாமெனப் பெயர்வோன் றனை நீலயானைதொடர எஃகு உளங்கிழிப்ப அவன் பொததி உயிர்தந்துப் போயபின, மணிமேகலை நுனித்தனரெனறு கருதி வாங்கிக் கோட்டம்புகுந்து மாக்களை ஊட்டலும், காவலர் வியந்து கோமகனுக்கு இசைத்துமென்றேகி, திருவன் சென்று எறலும, வாயிலுககிசைத்து வணங்கி, 'மன்னவ, வம்பமாதர் ஊண சுரந்தனள்' என்றலும், 'வருகவருக' என்று அரசன்கூறலின், மடக்கொடி வாயிலாளரிற சென்று 'நின் அருள்வாழிய' என, 'யாங்காகியது' என்றுஅரசன் கூறலும், ஆயிழையுரைக்கும்; அங்ஙனமுரைப்பவள் 'உயிர்மருந்து இது' என, 'யான்செயற்பாலது என்' என்று வேந்தன்கூற, மெல்லியல் உரைக்கும்; அங்ஙனம் உரைப்பவள் 'நீ செயற்பாலது அறவோர்க்கு ஆக்குமது' என, வேந்து பெரும்பொருளெய்துதற்குக் கோட்டத்தை அறவோர்க்கு ஆக்கினனென வினைமுடிவுசெய்க.

இருபதாவது

# உதயகுமரனைக் காஞ்சனன் வாளாலெறிந்தகாதை.

இருபதாவது மணிமேகலை காயசண்டிகைவடிவெய்தக் காயசண்டிகை கணவனாகிய காஞ்சனனென்னும் விச்சாதரன்வந்து காயசண்டிகையாமெனக்கருதி அவள் பின்னிலைவிடா உதையகுமரனைப் புதையிருட்கண் உலகவறவியில் வாளாலெறிந்துபோனபாட்டு.

அரச னாணையி னாயிழை யருளா
னிரயக் கொடுஞ்சிறை நீக்கிய கோட்டந்
தீப்பிறப் புழந்தோர் செய்வினைப் பயத்தான்
யாப்புடை நற்பிறப் பெய்தினர் போலப்
பொருள்புரி நெஞ்சிற புலவோன் கோயிலு
மருள்புரி நெஞ்சத் தறவோர் பள்ளியு
மட்டிற் சாலையு மருந்தினர் சாலையுங்
கட்டுடைச் செல்வக் காப்புடைத் தாக
வாயிழை சென்றதூஉ மாங்கவ டனக்கு
வீயா விழுச்சீர் வேந்தன் பணிந்ததூஉஞ்

உ. நிரயக கொடுஞ்சிறை - நரகவேதனையைச்செய்யும் கொடியசிறை. கோட்டம் - அறை.

ங. தீப்பிறப்புழந்தோர் - கொடிய பிறவியிற்பிறந்து வருந்தினோர். 'செய்தவப் பயததால' எனறும் பாடம்.

ச. யாப்பு - பொருத்தம்.

ரு. பொருளபுரிநெஞ்சிற் புலவோன் - சததியம் நான்கினையும் விரும்பிய நெஞ்சினையுடைய புததன்; பொருள் - சத்தியம்.

சு. அறவோர்-பௌத்தமுனிவர்; "அறவோர் பள்ளியு மறனோம் படையும" என்று வருதல்காண்க; இது சிலப்பதிகாரம், இந்திரவிழவூரெடுத்த காதை, கஎக. "அருணெஞ்சத், தறவோர் பள்ளி" (உ0 - ம் காதை, கக - கஉ) என்பர் பின்னும்.

எ. அட்டிற்சாலை - மடைப்பள்ளி; "அடிசில் வைக லாயிரம்" என்பது சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், சுஎ. அருந்தினர்சாலை - போசனசாலை.

அ. கட்டு - உறுதி. காப்பு உடைத்தாக - காவலையுடையதாக.

உ - அ. கோட்டம் காப்புடைத்தாகவென இயைக்க.

கூ. ஆயிழை - மணிமேகலை.

க0. வீயாவிழுச்சீர - மாறாத சிறந்த கீர்த்தி. பணிததது - சொல்லியது; அது, "யான்செயற் பாலதெ னிளங்கொடிகக" (கக - ம் காதை, சரு) என்றது.

சிறையோர் கோட்டஞ் சீத்தரு ணெஞ்சத்
தறவோர் கோட்ட மாக்கிய வண்ணமுங்
கேட்டன னாகியத் தோட்டலர் குழலியை
மதியோ ரெள்ளினு மன்னவன் காயினும்
பொதியி னீங்கிய பொழுதிற் சென்று
பற்றினன் கொண்டென் பொற்றே ரேற்றிக்
கற்றறி விச்சையுங் கேட்டவ ளுரைக்கு
முதுக்குறை முதுமொழி கேட்குவ னென்றே
மதுக்கமழ் தாரோன் மனங்கொண் டெழுந்து
பலர்பசி களையப் பாவைதா னொருங்கிய
வுலக வறவியி னூடுசென் றேறலு
மழைசூழ் குடுமிப் பொதியிற் குன்றத்துக்
கழைவளர் கான்யாற்றுப் பழவினைப் பயத்தான்
மாதவன் மாதர்க் கிட்ட சாப
மீரா றாண்டு வந்தது வாராள்
காயசண் டிகையெனக் கையற வெய்திக்
காஞ்சன னென்னு மவடன் கணவ
னோங்கிய மூதூ ருள்வந் திழிந்து

கக-கஉ. அருணெஞ்சத் தறவோர்.—உ0-ம் காதை, கூ.

கங. கேட்டனனாகி - (உதயகுமரன்) கேட்டு.

கச. மதியோர் எள்ளினும் - அறிவுடையோர் இகழ்வாராயினும். காயினும் - கோபித்தாலும்.

கரு. பொதியில்=பொது இல் - அம்பலம்.

கசு. பற்றினன்கொண்டு - பிடித்துக் கொண்டு.

கரு - கசு. குழலியைப் பற்றினன் கொண்டென்க.

கஎ. விச்சை - வித்தை; உம்மை இறந்தது தழீஇயது. 'விஞ்சையும்' என்றும் பாடம்.

கஅ. முதுக்குறை முதுமொழி:—கஅ-ம் காதை, கசுஎ; உ0-ம் காதை, எச. 'முதுக்குறை மொழியுங் கேட்குவன்' என்றும் பாடம்.

கக. தாரோன் - உதயகுமரன்.

உ0. 'பாவைதா னொடுங்கிய' என்றும் பாடம்.

உக. ஊடு - உள்ளே.

கூ - உக. சென்றதூஉம் பணித்ததூஉம் வண்ணமும் கேட்டு எள்ளினும் காயினும் சென்று குழலியைப் பற்றிக்கொண்டு ஏற்றிக் கேட்டுக் கேட்குவனென்று மனங்கொண்டு தாரோன் எழுந்து சென்று ஏறலு மென்க.

மேலே, காஞ்சனன் காயசண்டிகையைத் தேடிப்போந்ததும், உதயகுமரனைக் கொன்றதும் கூறப்படும்.

உஉ. பொதியிற்குன்றம் - பொதியின் மலை.

உங. கழை - மூங்கில். யாற்று - ஆற்றில்.

உச. மாதவன் - விருச்சிகன். மாதர்க்கு - காயசண்டிகைக்கு.

உரு. ஈராறாண்டு - பன்னிரண்டுவருடம்.

உசு. கையறவு - செயலறுதல்.

உரு-உசு. காயசண்டிகை வாராள்.

உஅ. மூதூர் - காவிரிப்பூம்பட்டினம். இழிந்து - இறங்கி; என்றதனால், காஞ்சனன் ஆகாயகமனமுடையனென்பது பெறப்பட்டது; "விஞ்சையன் போயினன் விலங்குவிண் படர்ந்தென" என்று

பூத சதுக்கமும் பூமலர்ச் சோலையு
மாதவ ரிடங்களு மன்றமும் பொதியிலுந்
தேர்ந்தனன் றிரிவோ னேந்திள வனமுலை
மாந்தர் பசிநோய் மாற்றக் கண்டாங்
கின்றுநின் கையி னேந்திய பாத்திர
மொன்றே யாயினு முண்போர் பலரா
லானாத் தீநோ யரும்பசி களைய
வான வாழ்க்கைய ரருளினர் கொல்லெனப்
பழமைக் கட்டுரை பலபா ராட்டவும்
விழையா வுள்ளமொ டவன்பா னீங்கி
யுதைய குமரன் றன்பாற் சென்று
நரைமூ தாட்டி யொருத்தியைக் காட்டித்
'தண்ணறல் வண்ணந் திரிந்துவே றாகி
வெண்மண லாகிய கூந்தல் காணாய்
பிறைநுதல் வண்ணங் காணா யோநீ
நரைமையிற் றிரைதோற் றகையின் றாயது
விறலவிற் புருவ மிவையுங் காணா
யிறவி னுணங்கல் போன்றுவே றாயின
கழுநீர்க் கண்காண் வழுநீர் சுமந்தன
குமிழ்மூக் கிவைகா ணுமிழ்சீ யொழுக்குவ

---

இக்காதையிற் பின்வருதல் காண்க; ௧௨௬ - ம் அடி. 'உள்வந்து புகுந்து' என்றும் பாடம்.

௨௯. பூதசதுக்கம் - தவவேடத்தில் மறைந்துநின்று அத்தவத்திற்கு இழுக்கானவற்றின்கணொழுகும் பொய்வேடத்தார்முதலிய அறுவகையோரையும் பாசத்தாற்கட்டி அடித்துண்ணும் பூதம் நிற்றற்கிடமாகிய சதுக்கம்; சதுக்கம் - நாற்சந்தி; "தவமறைந்தொழுகுந் . . . பூதம் புடைத்துணும் பூத சதுக்கமும்" என்று சிலப்பதிகாரத்து வருதல்காண்க; இந்திர விழவூரெடுத்தகாதை, ௧௨௮ - ௧௩௪. பூ - பொலிவு. 'பூமரச் சோலையும்' என்றும் பாடம்.

௩0. மன்றம் - ஊர்க்குநடுவாய் எல்லாருமிருக்கு மரத்தடி. பொதியில் - அம்பலம்; "மன்றமும் பொதியிலும்" (திருமுருகாற்றுப்படை, ௨௨௬.) என்பதற்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் இங்ஙனம் எழுதியிருத்தல்காண்க.

௩௧. தேர்ந்து திரிவோன் - காஞ்சனன்.

௩௨. கண்டு - (காஞ்சனன்) கண்டு. மேலவருவன காஞ்சனன் கூற்று.

௩௫. நோய் - பஸ்மகவியாதி.

௩௬. வானவாழ்க்கையர் - தேவர்.

௩௫ - ௩௬. களைய அருளினர்கொல

௩௭. பலபாராட்ட - பலவற்றைக்கூறிப் பாராட்ட.

௩௮. அவன் - காஞ்சனன்.

௪0. நரைமூதாட்டி- நரையையும் முதுமையையுமுடையவள்.

௪௧. 'தண்ணறல் வண்ணம்' என்பதுமுதலியன மணிமேகலைகூற்று. அறல் - கருமணல்.

௪௨. 'கூந்தலுங் காணாய்' என்றும் பாடம்

௪௪. நரைமை - வெண்மை.

௪௬. இறவின் உணங்கல் - இறான்மீனின்வற்றல்.

௪௮. 'ஒழுகுவ' என்றும் பாடம்.

நிரைமுத் தனைய நகையுங் காணாய்
சுரைவித் தேய்ப்பப் பிறழ்ந்துவே றாயின
இலவிதழ்ச் செவ்வாய் காணா யோநீ
புலவுப் புண்போற் புலால்புறத் திடுவது
வள்ளைத் தாள்போல் வடிகா திவைகா
ணுள்ளூன் வாடிய வுணங்கல் போன்றன
இறும்பூது சான்ற முலையுங் காணாய்
வெறும்பை போல வீழ்ந்துவே றாயின
தாழ்ந்தொசி தெங்கின் மடல்போற் றிரங்கி
வீழ்ந்தன இளவேய்த் தோளுங் காணாய்
நரம்பொடு விடுதோ லுகிர்த்தொடர் கழன்று
திரங்கிய விரல்க ளிவையுங் காணாய்
வாழைத் தண்டே போன்ற குறங்கிணை
தாழைத் தண்டி னுணங்கல் காணா
யாவக் கணைக்கால் காணா யோநீ
மேவிய நரம்போ டென்புபுறங் காட்டுவ
தளிரடி வண்ணங் காணா யோநீ
முளிமுதிர் தெங்கி னுதிர்கா யுணங்கல்
பூவினுஞ் சாந்தினும் புலான்மறைத் தியாத்துத்
தூசினு மணியினுந் தொல்லோர் வகுத்த
வஞ்சந் தெரியாய் மன்னவன் மகனென
விஞ்சை மகளாய் மெல்லிய லுரைத்தது
தற்பா ராட்டுமென் சொற்பயன் கொள்ளாய

௪௯. நகை - பல். 'பல்லுங்காணாய்' என்றும் பாடம்.

௫0. சுரைப்பழத்தின்விதை பல்லுக்கு உவமையாதலை "சுரைவித்துப் போலுந் தம் பல்." என்பதனாலுமுணர்க; இது நாலடியார், அவையறிதல், ௫.

௫௨. புலவு - புலானாற்றம்.

௫௩. வள்ளைத்தாள் - வள்ளைத்தண்டு. வடிகாது - வடிந்தகாது. 'வடிந்தகாது' என்றும் பாடம்.

௫௪. உணங்கல் - வற்றல்.

௫௫. இறும்பூது - அதிசயம்; "இறும்பூது போலுமஃ தறிந்தருளீயென" என்பது சிலப்பதிகாரம், பதிகம், ௯. 'முலையிவைகாணாய்' என்றும் பாடம்.

௫௭. திரங்கி - திரைந்து.

௫௮. 'தோளிவைகாணாய்' என்றும் பாடம்.

௫௯. உகிர்த்தொடர் - நகத்தின்தொடர்ச்சி. 'உகிரொடுகழன்று' என்றும் பாடம்.

௬௩. குறங்கு - தொடை. இணை - இரண்டு.

௬௫. ஆவம் - அம்புக்கூடு.

௬௬. முளிமுதிர்தெங்கு - உலர்ந்த முதிர்ந்த தெனனை.

௬௭. "புனைவன நீங்கிற் புலால்புறத் திடுவது" என்றார் முன்னும்; ௬-ம் காதை, ௧௧௪. 'புலான்மறுத்து' என்றும் பாடம்.

௬௯. தெரியாய் - தெரிந்துகொள்வாய்.

௭0. விஞ்சைமகளாய் - காயசண்டிகையாய், மெல்லியல் - மணிமேகலை.

பிறன்பின் செல்லும் பிறன்போ னோக்கு
மதுக்கம ழலங்கன் மன்னவன் மகற்கு
முதுக்குறை முதுமொழி யெடுத்துக் காட்டிப்
பவளக் கடிகையிற் றவளவா ணகையுங்
குவளைச் செங்கணுங் குறிப்பொடு வழாஅ
தீங்கிவன் காதல னாதலி னேந்திழை
யீங்கொழிந் தனளென விகலெரி பொத்தி
மற்றவ ளிருந்த மன்றப் பொதியிலுட்
புறந்தடங் காவிற் புக்கொளித் தடங்கினன்
காஞ்சன னென்னுங் கதிர்வாள் விஞ்சைய
னாங்கவ ளுரைத்த வரசிளங் குமரனுங்
களையா வேட்கை கையுதிர்க் கொள்ளான்
வளைசேர் செங்கை மணிமே கலையே
காயசண் டிகையாய்க் கடிஞை யேந்தி
மாய விஞ்சையின் மனமயக் குறுத்தனை

---

மேல்வருவது காஞ்சனன்செய்தி.

௭௨. பிறனென்றது உதயகுமரனை. இங்கே பிறன்பின் செல்லுமென்றது போல, "எண்ணிப்பத் தங்கையிட்டா லிந்திரன் மகளு மாங்கே, வெண்ணெய்க் குன்றெரியுற் றாற்போல் மெலிந்து பின் னிற்கு மன்றே." (கனகமாலையாரிலம்பகம், ௬௬) என்று சீவகசிந்தாமணியிலும் வந்திருத்தல்காண்க.

௭௪. ௧௮-ம் காதை, ௧௬௭.

௭௫. பவளக்கடிகை - பவளத்துண்டம்; என்றது உதட்டினை. 'கடிகையும்' என்றும் பாடம்.

௭௬. குறிப்பு - இங்கிதம்.

௭௫ - ௭௬. இவ்வடிகளின் பொருளோடு "ஒத்தொளிர் பவளத் துள்ளொளி சிறந்த, முத்துக்கூர்த்தன்ன முள்ளெயிற் றமுதம், மருந்தே யாங்க வாருயிர் தளிர்ப்ப, விருந்தின் மூரல் அரும்பிய தூஉ, மாயிதழ்க் குவளை மலர்புறத் தோட்டிக், காய்வேல் வென்ற கருங்கயனெடுங்கண், அறிவுபிறி தாகிய தாயிழை தனக்கெனச், செவியகம் புகூஉச்சென்ற செவ்வியும், பளிங்கு புறத்தெறிந்த பவளப் பாவையென், னுளங்கொண் டொளித்தா ளுயிர்க்காப் பிட்டு" (௧௮-ம் காதை, ௭௦ - ௭௧.) என்று உதயகுமரன் கூறியவாக்கியம் ஒப்புநோக்கற்பாலது.

௭௭. இவனென்றது உதயகுமரனை. காதலன் - ஆசாநாயகன்.

௭௮ ஈங்கு ஒழிந்தனள் - இவ்விடத்திலேயே தங்கிவிட்டாள்; என்னைத்தவிர்ந்தாளென்றுமாம்; ஈங்கு - தன்மையையுணர்த்துதலை "ஒழிக காம மீங்கென" (சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், ௬௩) என்பதிற்காண்க. இகல் - மாறுபாடு.

௭௯. மன்றப்பொதியில் - மன்றமாகிய பொதியில்; இருபெயரொட்டு; இப்படியே, "மன்றப் பொதியிற், கந்துடை நெடுநிலைக் கடவுட் பாவை" (௨௧-ம் காதை, ௬ - ௭.) என்று பின்னும்வரும்.

௮௦. இங்கே காஞ்சனனுக்குப்பாம்பை உவமை கூறியதற்கேற்ப "வேகவெந்தீ நாகங் கிடந்த, போகுயர் புற்றளை புகுவான் போல" (௯௮ - ௯௯.) எனவும், "வெஞ்சின வரவ நஞ்செயி றரும்பத், தன்பெரு வெகுளியி னெழுந்துவை விரித்தென" (௧௦௪ - ௧௦௫) எனவும் இக்காதையிலேயே பின்புவருதல் காண்க.

௮௨. அவள் - மணிமேகலை.

௮௩. கையுதிர்க்கொள்ளான் - நீக்கான்.

மேல்வருவன உதயகுமரனுட்கோள்.

௮௬. மாயவிஞ்சையின் - மாயவித்தையினால்.

ளம்பல மருங்கி லயர்ந்தறி வுரைத்தவிவ்
வம்பலன் றன்னொடிவ் வைகிரு ளொழியா
ளிங்கிவள் செய்தி யிடையிருள் யாமத்து
வந்தறி குவனென மனங்கொண் டெழுந்து
வான்றேர்ப் பாகனை மீன்றிகழ் கொடியனைக்
கருப்பு வில்லியை யருப்புக்கணை மைந்தனை
யுயாவுத் துணையாக வயாவொடும் போகி
யூர்துஞ் சியாமத் தொருதனி யெழுந்து
வேழம் வேட்டெழும் வெம்புலி போலக்
கோயில் கழிந்து வாயி னீங்கி
யாயிழை யிருந்த வம்பல மணைந்து
வேக வெந்தீ நாகங் கிடந்த
போகுயர் புற்றளை புகுவான் போல
வாகந் தோய்ந்த சாந்தல ருறுத்த
வூழடி யிட்டத னுள்ளகம் புகுதலு
மாங்குமுன் னிருந்த வலர்தார் விஞ்சைய
னீங்கிவன் வந்தன னிவள்பா லென்றே
வெஞ்சின வரவ நஞ்செயி றரும்பத்
தன்பெரு வெகுளியி னெழுந்துபை விரித்தென

அஎ. அயர்ந்து - வருந்தி; மறந்தென்றுமாம். அறிவுரைதத - பழமைக்கட்டுரை பலபாராட்டிய.

அஅ. வம்பலன் - அயலான். வைகிருள் - வைகறைப்பொழுது. 'ஒளியான்' என்றும் பாடம்.

கூக. வான்றேர் - ஆகாயத்திலுலவும் தென்றற்காற்றாகிய தேர். 'மான்றோ' என்றும் பாடம்.

கூஉ. கஅ - ம் காதை, க0கு, உகு - ம் காதை, கூ0; "மைதுழா நெடுங்கணார் மனத்துட் காமனு, னாதுலாங் கவர்கணை யரும்பு வைத்தவே" என்பது சூளாமணி, குமாரகாலச்சருக்கம், கு.

கூங. உயாவுத்துணையாக - வினாவுந்துணையாக; கொண்டென்று ஒருசொல் வருவிக்க; தனியேசென்றானென்றபடி. வயா - வேட்கைநோய்; இதுவயவெனவும் வழங்கும்; "வயவுறு மகளிர் வேட்டுணி னல்லது" என்பது புறநானூறு, உ0. 'உயிர்த்துணை யாகவயர்வொடும்' என்றும், அயாவொடும்' என்றும் பாடம்.

கூச. போயவன் நடுஇரவில் மீட்டும் எழுந்து வந்தான்.

கூஅ. தீ - விடம்.

கூகூ. போகுயாபுற்றளை - மிகவுயர்ந்த புற்றின் துவாரம்.

கூஅ - கூகூ. உ0 - ம் காதை, அ0; க0ச - க0ரு.

க00. சாந்து - சந்தனம். அலருறுதத - பலரறியச்செய்ய.

க0க. ஊழ் அடியிட்டு - முறையே அடிவைதது; "ஊழடி முட்டம்" என்பது குறிஞ்சிப்பாட்டு, உருஅ. அதன் உள்ளகம் - அம்பலத்தினுள்ளிடம்.

க0ங. 'புகுவ நதனன' என்றும் பாடம். என்று - என்றுகருதி.

க0ச. நஞ்சு எயிறு அரும்ப - விடத்தைப் பல் வெளிப்படுதத; விடத்தையுடைய பல்தோன்றவென்றுமாம்.

க0கு. பை - படம்.

க0ச-க0கு. உ0-ம் காதை, அ0; கூஅ-கூகூ

விருந்தோ னெழுந்து பெரும்பின் சென்றவன்
சுரும்பறை மணித்தோ ளணிய வீசிக்
காயசண் டிகையைக் கைக்கொண் டந்தரம்
போகுவ லென்றே யவள்பாற் புகுதலு
நெடுநிலைக் கந்தி னிடவயின் விளங்கக்
கடவு ளெழுதிய பாவையாங் குரைக்கு
மணுக லணுகல் விஞ்சைக் காஞ்சன
மணிமே கலையவண் மறைந்துரு வெய்தினள்
காயசண் டிகைதன் கடும்பசி நீங்கி
வானம் போவுழி வந்தது கேளா
யந்தரஞ் செலவோ ரந்தரி யிருந்த
விந்த மாலவரை மீமிசைப் போகார்
போவா ருளரெனிற் பொங்கிய சினத்தள்
சாயையின் வாங்கித் தன்வயிற் றிடூஉம்
விந்தங் காக்கும விந்தா கடிகை
யம்மலை மிசைப்போ யவள்வயிற் றடங்கினள்
கைமமை கொள்ளேல் காஞ்சன விதுகே

---

க0சு. இருந்தோன் - காஞ்சனன்.

க0எ. சுரும்பு அறை மணித்தோள் - மலையையொதத அழகியதோள்; சுரும்பு - மலை. அறை - உவமவுருபு.

க0கூ. போகுவல - போவேன.

க0உ - க0கூ. விஞ்சையன் இருந்தோன், இவன் இவள்பால வந்தனனென்று எழுந்து சென்று வீசிப் போகுவலென்று புகுதலுமெனக.

கக0. கந்து - தூண.

ககக. கடவுள் எழுதிய - மயனாறபண்ணப்பட்ட; "மயனெனக கொப்பா வகுத்த பாவையி, னீங்கேன்" என்று பினவருதலகாண்க; உக - ம காதை, கரூஉ - கரூரு.

மேலவருவன கந்திற்பாவை காஞ்சனனைநோககிக்கூறும் கூற்று.

ககஉ. அணுகல் அணுகல் - அணுகாதே அணுகாதே.

ககச - ககரு. தன்பசிநீங்கிக் காயசணடிகை வானம்போவுழி அவளுக்கு வந்த துன்பத்தைககேள்.

ககசு. அந்தரஞ்செலவோர் - தேவர். அந்தரி - துர்ககை.

ககஎ. விந்தமால்வரை - விந்தியமலை, 'மீமிசைச் செல்லார்' என்றும் பாடம்.

ககசு - ககஎ. விநதியமலையிலிருத்தல் பற்றித் துர்க்கைககு விந்தியவாஸினி யென்றும் ஒரு பெயருண்டு.

ககஅ - கஉ0. விந்தமலையைப் பாதுகாக்கும் விந்தாகடிகை யென்பவள், யாரேனும் மேற்போவாராயின் மிக்ககோபத்தையுடையளாய்ச் சாயையினால், அவர்களை இழுத்துத் தன்வயிற்றிலிடுவள்; பிரஹ்மதேவரிடம் வரம்பெற்ற ஸிம்ஹிகை யென்னுமரக்கி இலஙகைக்குச் சென்ற ஹநுமானை நிழலாலிழுத்துத் தடைப்படுத்தியதாக ஸ்ரீமத் வான்மீக ராமாயணம், சுந்தரகாணடத்தால் தெரிகின்றது.

கஉக. (காயசண்டிகை) விந்தாகடிகையின் வயிறறிலடஙகினள்.

கஉஉ. கைம்மை கொள்ளேல்-சிறுமையைக்கொள்ளாதே; கைம்மை - சிறுமை; சிறுமையென்றது ஆராயாது செய்தலை. இனி, உதையகுமரன் மணிமேகலையின் பூர்வஜன்மநாயக னென்பதனைத் தனது ஞானத்தாலறிந்த கந்திற்பாவை அவன

ஞூழ்வினை வந்திங் குதைய குமரனை
யாருயி ருண்ட தாயினு மறியாய்
வெவ்வினை செய்தாய் விஞ்சைக் காஞ்சன
வவ்வினை நின்னையு மகலா தாங்குறு
மென்றிவை தெய்வங் கூறலு மெழுந்து
கன்றிய நெஞ்சிற் கடுவினை யுருத்தெழ
விஞ்சையன் போயினன் விலங்குவிண் படர்ந்தென.

உதையகுமரனைக் காஞ்சனன் வாளாலெறிந்தகாதை முற்றிற்று.

---

இறந்தது பற்றி, மணிமேகலையை அமங் கலையாக நினைந்து அவளைக் கொள்ளாதே யென்று கூறிற்றென்றலுமாம்; கைம் மை - அமங்கலை.

கஉரு - கஉசு. மடைத்தொழில செய் வோனை முற்பிறப்பில வெட்டிய பாவம் உதையகுமரனை வெட்டுண்ணச் செய் தது; ஆனாலும் ஆராயாது செய்தலின் நீ அறியாய். இவ்வரலாற்றை, உக - ம் காதையாலும் (சஎ - ம் அடிமுதலியவை.) உரு - ம் காதையாலும் (அஉ - ம் அடி முதலியவை.) அறிந்து கொள்க.

கஉஅ. கடுவினை - உதையகுமரனைக் கொன்ற பாவம்.

கஉக. விலங்கு - குறுக்காக.

க-கஉக. கோட்டம் காப்புடைத்தாய், தாரோன் சேட்டு மனங்கொண்டு எழுந்து சென்றானெனலும், கணவன் கையறவெய்தி வந்து இழிந்து சேர்ந்து திரிவோனைக் கண்டு பலபாராட்டவும், [illegible] ன்று காட்டி மெல்லியல் உரைத்தாய, விஞ்சையன் புகுந்து ஒளித்து அடங்கினன்; அரசிளங்குமாரனும் கொள்ளான மனங்கொண்டு எழுந்து போகி எழுந்து கழிந்து நீங்கி அணைந்து புகுதலும, விஞ்சையன், எழுந்து சென்று வீசிப் புகுதலும், பாவை உரைக்கும்; அங்ஙனம் உரைப்பது கூறலும, விஞ்சையன் எழுந்து படர்ந்து போயினனென வினைமுடிவு செய்க.

## இருபத்தோன்றாவது

# கந்திற்பாவை வருவதுரைத்தகாதை.

[இருபத்தோன்றாவது மணிமேகலை உதையகுமரன்மடிந்ததுகண்டு உறுதுயரெய்த, நெடுநிலைக்கந்தின் நின்றபாவை வருவதுரைத்து அவள் மயக்கொழித்தபாட்டு.]

கடவு ளெழுதிய நெடுநிலைக் கந்தின்
குடவயி னமைத்த நெடுநிலை வாயின்
முதியாள் கோட்டத் தகவையிற் கிடந்த
மதுமலர்க் குழலி மயங்கின ளெழுந்து
விஞ்சையன் செய்தியும் வெண்வேல் வேந்தன்
மைந்தற் குற்றது மன்றப் பொதியிற்
கந்துடை நெடுநிலைக் கடவுட் பாவை
யங்கவற் குரைத்த வற்புதக் கிளவியுங்
கேட்டன ளெழுந்து கெடுகவிவ் வுருவெனத்
தோட்டலர்க் குழலி யுள்வரி நீங்கித்
திட்டி விடமுண நின்னுயிர் போநாட்
கட்டழ லீமத் தென்னுயிர் சுட்டே

௧. கடவுள் எழுதிய - துவதிகனையொத்த பாவையை (மயன்) பண்ணின; "கடவுட் பாவை" என்பர் பின்னும்; ௭-ம் அடி.

௨. குடவயின்-மேற்றிசை யிடத்தே.

௩. முதியாள் கோட்டம் - சம்பாபதி கோயில.

௧ - ௩. இவ்வடிகளால், சம்பாபதிகோயில், கந்திற்பாவைக்கு மேற்றிசையிலுள்ளதென்று தெரிகின்றது.

௪. குழலி - மணிமேகலை.

௫. விஞ்சையன்-காஞ்சனன். வெண் - வெற்றி; "வென்வே லாடவன்" என்பது புறப்பொருள்வெண்பாமாலை, வஞ்சிப் படலம், ௨௪. 'வெள்வேல' என்றும பாடம்.

௬. மைந்தற்கு-உதயகுமரனுக்கு. மன்றப்பொதியில் :—௨௦-ம் காதை, ௭௯.

௭. கந்திற்பாவை.

௮. அங்கவற்கு - காஞ்சனனுக்கு. அற்புதம் - ஆச்சரியம்.

௯. இவ்வுருக் கெடுகவென்று.

௧௦. குழலி-சுட்டு, உள்வரிநீங்கி-மறைந்தவேட மொழிந்து; என்றது காயசண்டிகையின் வடிவமொழிந்தென்றபடி.

இனி, உதயகுமரனைக்குறித்து மணிமேகலை புலமபுதல் கூறப்படும்.

௧௧. திட்டிவிடம் - கண்ணில் விடமுடையதோர் பாம்பு; இதனியலபை, இந்நூல ௯-ம் காதை, ௪௯-ம் அடிக்குறிப்பிற்பார்க்க. இதனைப் பாம்புகளுக்கு அரசென்றுங் கூறுவர்.

௧௨. கட்டழல் - மிக்கநெருப்பு. ஈமம்-மயானம.

௧௧ - ௧௨. இவ்வடிகளாற் போனபிறப்பின்செய்தி கூறினள்.

னுவவன மருங்கி னின்பா லுள்ளந்
தவிர்விலே னாதலிற் றலைமக டோன்றி
மணிபல் லவத்திடை யென்னையாங் குய்த்துநுட்
பிணிப்பறு மாதவன் பீடிகை காட்டி
யென்பிறப் புணர்ந்த வென்முற் றோன்றி
யுன்பிறப் பெல்லா மொழிவின் றுரைத்தலிற்
பிறந்தோ ரிறத்தலு மிறந்தோர் பிறத்தலு
மறந்தரு சால்பு மறந்தரு துன்பமும்
யானினக் குரைத்துநின் னிடர்வினை யொழிக்கக்
காயசண் டிகைவடி வானேன் காதல
வைவாள் விஞ்சையன் மயக்குறு வெகுளியின்
வெவ்வினை யுருப்ப விளிந்தனை யோவென
விழுமக் கிளவியின் வெய்துயிர்த் துப் புலம்பி
யழுதன ளேங்கி யயாவுயிர்த் தெழுதலுஞ்
செலலல் செல்லல் சேயரி நெடுங்க
ணல்லியந் தாரோன் றன்பாற் செல்ல
னினக்கிவன் மகனாத் தோன்றிய தூஉ
மனக்கினி யாற்குநீ மகளாய தூஉம்
பண்டும பண்டும பல்பிறப் புளவாற்

---

கசு. தலைமகள் - மணிமேகலாதெய்வம்.

கரு - கசு. உவவனத்திற் கண்டபொழுது உதயகுமரன்பால் மணிமேகலைக்குக் காதலிருந்ததென்பதை, "புதுவோன பின்னறைப் போனதென் னெஞ்சம், மிதுவோ வன்னாய் காமத் தியற்கை" (ச-ம் காதை, அக - கூ0) என்றும், "அவன்பா லுள்ள, நீங்காத தன்மை நினக்குமுண் டாதலின" (க0-ம் காதை; சச - சரு) என்றும் முன்வந்திருத்தலா லுணர்க.

கஎ. பிணிப்பறு மாதவன் - புத்தன்; பிணிப்பு - பற்று; "பிணிப்பறுத்தோர் தம் பெற்றி யெய்தவும்" என்பது சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை, க00.

கசு - கஅ. தலைமகள் தோன்றி உய்த்துக் காட்டித் தோன்றி உரைத்தலினென்க.

உ0. சால்பு - அமைதி; இன்பமுமாம். மறம் - பாவம்.

கக - உ0. உக-ம் காதை, ககரு.

உச. உருப்ப - கோபிக்க விளிந்தனையோ - இறந்தாயோ.

உரு - உச. உருப்ப வெகுளியின் விளிந்தனையோ.

உரு. விழுமக்கிளவி - துன்பத்தைப் புலப்படுத்தும் சொற்கள். வெய்துயிர்த்து - வெம்மையைப்போக்கி.

உசு. அயாவுயிர்த்து - நெட்டுயிர்ப்புக் கொண்டு. எழுதலும் - மணிமேகலை எழுதலும.

மேல், மணிமேகலையைநோக்கிக் கந்திற்பாவை கூறுதலைச் சொல்லுவார்.

உஎ. செல்லல் செல்லல் - போகாதே போகாதே. சேயரிநெடுங்கண் - விளி.

உஅ. அல்லி - அகவிதழ். தாரோன் - உதையகுமரன்.

உகூ. மகனா - கணவனாக.

கூ0. மனக்கினியாற்கு - உதயகுமரனுக்கு. மகளாயதூஉம் - மனைவியானதும.

உகூ - கூ0. "நோதக வுண்டோ நும் மக ளார்க்கு" எனக் கணவனை மகனென்றார் சிலப்பதிகாரம், கொலைக்களக

கண்ட பிறவியே யல்ல காரிகை
தடுமாறு பிறவித் தாழ்தரு தோற்றம்
விடுமாறு முயல்வோய் விழுமங் கொள்ளே
லென்றிவை சொல்லி யிருந்தெய்வ முரைத்தலும்
பொன்றிகழ் மேனிப் பூங்கொடி பொருந்திப்
பொய்யா நாவொடிப் பொதியிலிற் பொருந்திய
தெய்வ நீயோ திருவடி தொழுதேன்
விட்ட பிறப்பின் வெய்துயிர்த் தீங்கிவன்
றிட்டி விடமுணச் செல்லுயிர் போயது
நெஞ்சு நடுங்கி நெடுந்துயர் கூரயான்
விஞ்சையன் வாளி னிவன்விளிந் ததூஉ
மறிதலு மறிதியோ வறிந்தனை யாயிற்
பெறுவே னல்லநின் பேரரு ளீங்கென
வையரி நெடுங்க ணாயிழை கேளெனத்
தெய்வக் கிளவியிற் றெய்வங் கூறுங்
காயங் கரையெனும் பேரியாற் றடைகரை
மாயமின் மாதவன் வருபொரு ளுரைத்து

---

காதையில் [அடி - ௧௭] கூறியிருத்தல் காண்க.

௩௨. நீ அறிந்துகொண்ட முற்பிறப்பில் மட்டுமல்ல; காணுதல - அறிதல்.

௩௧-௩௨. தோன்றியதூஉம் ஆயதூஉம் கண்டபிறவியேயலல, பண்டும பண்டும பல்பிறப்புளவாலென வியைக்க.

௩௩. தாழ்தரு - தங்குகின்ற; அழுந்துகின்றவென றுமாம்.

௩௪. விழுமம் - துன்பம்.

௩௫. சொலலியுரைத்தல் - கூறிவிளக்குதல்; "அறைந்தனர் சாற்றும்" (சிலப்பதிகாரம், நாடுகாண்காதை, ௩௩) என்புழிப்போல.

௩௬. பூஙகொடி - மணிமேகலை.

மேல், மணிமேகலையின் வினாவும், கந்திற்பாவைகூறும் விடையும் கூறப்படும்.

௩௮. விட்டபிறப்பு - போனபிறப்பு. இவன் - உதயகுமரன்.

௩௮ - ௪௦. இவன் உயிர்போதற்குக் காரணமாகிய தீவினையையும்.

௪௧. யான் நெடுந்துயர் கூர; கூர-மிக.

௪௨. விளிந்ததூஉம் - இறந்ததற்குக் காரணமாகிய தீவினையையும்.

௪௩. அறிதலுமறிதியோ - அறிதலும் செய்தியோ; இஃது, "உண்ணலு முண்ணேன் வாழலும் வாழேன்" (கலித்தொகை, பாலைக்கலி, ௨௨) என்பது போல் நின்றது.

௪௪. நல்ல நினது பெருங்கருணையை இவ்விடத்துப் பெறுவேன்; என்றது - நீகூறும் விடையைக்கேட்கும் விருப்ப முடையேனென்றவாறு. என - என்று மணிமேகலை சொலல. 'பேறுவே நில்லேன்' என்றும் பாடம்.

௪௫. ஆயிழை - விளி.

௪௬. தெய்வம் - கந்திற்பாவை.

௪௭. கரை - கரையில்.

௪௮. மாதவன் வருபொருள் - புத்தன் அவதரித்தலை. உலகத்திற் பாவங்கள் அதிகரித்தகாலந்தோறும அப்பாவங்களைப்போக்கி அருளறத்தை நிலைநிறுத்தி உயிர்களை நிருவாணமடைவித்தற்பொருட்டுப் புத்தாவதாரமுண்டென்பது பௌத்தநூற்றுணிபு; "ஈரெண் ணூற்றோ டீரெட் டாண்டிற், பேரறி வாளன் றோன்றும்" (௧௨ - ம் காதை, ௭௭ - ௭௮) எனவும், "மறவிரு ளிரிய மன்னுயி ரே

மருளுடை மாக்கள் மனமாசு கழூஉம்
பிரம தருமனைப் பேணினி ராகி
யடிசிற் சிறப்பியா மடிகளுக் காக்குதல்
விடியல் வேலை வேண்டின மென்றலு
மாலைநீங்க மனமகிழ் வெய்திக்
காலை தோன்ற வேலையின் வரூஉ
நடைத்திறத் திழுக்கி நல்லடி தளர்ந்து
மடைக்கலஞ் சிதைய வீழ்ந்த மடையனைச்
சீல நீங்காச் செய்தவத் தோர்க்கு

---

முற, வறவெயில் விரித்தாங் களப்பி லிருத்தியொடு, புத்த ஞாயிறு தோன்றுங் காறும்" (௨௧-ம் காதை, ௧௫௫-௧௫௭) எனவும், "புலவன் முழுதும் பொய்யின் றுணர்ந்தோ, னுலகுயக் கோடற் கொருவன் றோன்று, மந்நா ளவனறங் கேட்டோ ரல்ல, தின்னாப் பிறவி யிழுக்கு நரில்லை" (௨௫-ம் காதை, ௪௫-௪௮) எனவும், "கரவரும் பெருமைக் கபிலையம் பதியி, னளப்பரும் பாரமிதை யளவின்று நிறைந்து, துளக்கமில் புத்த ஞாயிறு தோன்றி" (௨௬-ம் காதை, ௪௪-௪௬) எனவும் இந்நூலுள்ளே பலவிடத்தும வருதல் காண்க.

௪௯. மருள் உடை மாக்கள் - மயக்கத்தையுடைய மனிதர் மனமாசு - காமவெகுளி மயக்கங்கள்; "வெஃகல் வெகுளல் பொல்லாக காட்சியென், றுள்ளந் தன்னி லுருப்பன மூன்றும்" (௩௦-ம் காதை, ௭௦-௭௧) என்பதனாலுணர்க. கழூஉம் - கழுவும்.

௫௧. அடிகளுக்கு அடிசிற்சிறப்பு ஆக்குதலென்க

௫௨. விடியல் வேலை-நாள்வெயிற்காலம்; வைகறைப்பொழுதெனினும்பொருந்தும்.

௫௧ - ௫௨. அடிகளுக்கு அடிசிற்சிறப்பு விடியல்வேலையாக்குதல் வேண்டினமென்று மடையனை நோக்கிக் கூறுதலும்.

௫௩. மாலைநீங்கி' என்றும் பாடம்.

௪௭ - ௫௨. அடைகளாயில் உரைத்துக் கழூஉம் பிரமதருமனைப்பேணி விடியல்வேலையில் ஆக்குதலை வேண்டினமென்றலுமென்க

௫௩. மாலை - இரவு.

௫௪. காலை-நாள்வெயிற்காலை. வரூஉ - வந்து.

௫௫. நடைத்திறத்து இழுக்கி - நடைவகையால வழுக்கி.

௫௬. மடைக் கலம் - சோற்றுப்பாத்திரம். மடையன் - சமையற்காரன்.

௫௭. சீலம் - பஞ்சசீலம்; தசசீலமுமாம்; கொல்லாமை = அஹிம்ஸை, பொய்சொல்லாமை = ஸத்தியம, களவின்மை = அஸ்தேயம், காமமின்மை = பிரமசரியம், இரவாமை = அஸங்கிரகம என்னும் இவை பஞ்சசீலம்; இவ்வைந்தனோடு உயர்ந்த ஆசனத்து இருத்தலிடுதலின்மை, சந்தனம் மாலை முதலியன தரியாமை, பொன்வெள்ளிகளைத் தீண்டாமை, பாடலாடல் விரும்பாமை, உதயத்திற்கு முன்பு புசித்தல் என்னும் ஐந்தும்சேரத் தசசீலமாம். பஞ்சசீலத்துள், இரவாமை நின்ற நிலைக்களத்தின்கண் கள்ளுண்ணாமையைச்சேர்த்துக்கூறுவாருமுளர். இது, நீலகேசி விருத்திஸமயதிவாகரத்திற் கண்டது. கொல்லாமை, திருடாமை, வியபிசரியாமை பொய்கூறாமை, கள்ளுண்ணாமையென்னுமிவை பஞ்சசீலமென்றும், இவை இல்லறத்தார் எல்லோர்க்கும் உரியனவென்றும், இவ்வைந்தனோடு இரவிலுணவுண்ணாமை தூய்மையில்லாத உணவைப்புசியாமை, சந்தனமுதலிய மணமுள்ள பொருள்களை உபயோகியாமை, தரையிற் பாய்மேலே படுத்தல் என்னும் மூன்றுஞ்சேர அஷ்டாங்கசீலமென்றும், இவை இல்லறத்தாரில் நிஷ்டாபரர்களுக்கே யுரியனவென்றும, இவ்வெட்டனோடு நாட்டியம் சானமுத

வேலை பிழைத்த வெகுளி தோன்றத்
தோளுந் தலையுந் துணிந்துவே றாக
வாளிற் றப்பிய வல்வினை யன்றே
விராமலர்க் கூந்தன் மெல்லிய னின்றோ
டிராகுலன் றன்னை யிட்டக லாதது
தலைவன் காக்குந் தன்பொருட் டாகிய
வவல வெவ்வினை யென்போ ரறியா
ரறஞ்செய் காத லன்பின னாயினு
மறஞ்செய் துளதெனின் வல்வினை யொழியா
தாங்கவ் வினைவந் தணுகுங் காலைத்
தீங்குறு முயிரே செய்வினை மருங்கின்
மீண்டுவரு பிறப்பின் மீளினு மீளு
மாங்கவ் வினைகா ணாயிழை கணவனை
யீங்கு வந்திவ் விடர்செய் தொழிந்த
தின்னுங் கேளா யிளங்கொடி நல்லாய்
மன்னவன் மகற்கு வருந்துதுய ரெய்தி
மாதவ ருணர்த்திய வாய்மொழி கேட்டுக்
காவல னின்னையுங் காவல்செய் தாங்கிடு

---

வியவற்றை விரும்பாமை, பொன் வெள்ளிகளைத் தொடாமையென்னும் இவ்விரண்டும்சேரத் தசசீலமென்றும், இப்பத்தும் துறவிகளுக்கேயுரியனவென்றும், இப்பத்தில் வியபிசரியாமை நின்றவிடத்திற் பிரமசரியம் கூறப்படுமென்றும் தீர்மிகசூத்திர மென்னும் பௌத்தநூல் கூறும்.

௫௮. பிழைத்தவெகுளி - தவறினமையால்வந்த கோபம்.

௬௦. தப்பிய - வெட்டிய.

௬௧. மெல்லியல் - விளி.

௫௯ - ௬௨. இவ்வடிகளிற்போலவே, "மடைக்கலஞ் சிதைய வீழ்ந்த மடையனை, யுடற்றுணி செய்தாங் குருத்தெழும் வல்வினை, நஞ்சுவிழி யரவி னல்லுயிர் வாங்கி, விஞ்சையன் வாளால் வீட்டிய தன்றே" என்று இராசமாதேவியை நோக்கி மணிமேகலை கூறியதாகப் பின்புவருதல் காண்க; உ௩-ம் காதை, அஉ-அ௫.

௬௩. தலைவன் - கடவுள். காக்கும் - காப்பான்; தடுப்பானென்றபடி.

௬௩ - ௬௪. வினையைத் தலைவன் காக்குமென்போர் அறியாரென இயைக்க, செய்தவன் நுகர்ந்தாலன்றி வினை தொலையாதென்றவாறு.

௬௫. 'அறஞ்செய் காதல னன்பினனாயினும்' என்றும் பாடம்.

௬௬. மறம் செய்துளதெனின் - பாவம் செய்யப்பட்டிருப்பின். வல்வினை - சுட்டு.

௬௮. தீங்கு - துன்பம்.

௭௦. அவ்வினை - மடையனை வெட்டியபாவம். கணவனை - உதயகுமரனை.

௭௦ - ௭௧. அவ்வினை ஈங்குவந்து உன் கணவனை இவ்விடர் செய்தொழிந்ததென்க.

இனி, மணிமேகலைக்குப்பின் வருவனவற்றைக் கந்திற்பாவைதெய்வம் கூறுதல் கூறப்படும்.

௭௩. மகற்கு - உதயகுமரன் இறந்ததற்காக.

௭௪. உணர்த்தியவன் ஒருவனாயினும் உரைக்கவந்தோர் பலராதலின் 'மாதவருணர்த்திய' என்றார். 'மாதவருணர்த்த' என்றும் பாடம. வாய் - உண்மை.

௭௫. காவல் செய்தாங்கிடும் - சிறையில வைப்பான். 'காதலி நின்னையும்' என்றும் பாடம்.

மிடுசிறை நீக்கி யிராசமா தேவி
கூட வைக்குங் கொட்பின ளாகி
மாதவி மாதவன் மலரடி வணங்கித்
தீது கூறவவ டன்னொடுஞ் சேர்ந்து
மாதவ னுரைத்த வாய்மொழி கேட்டுக்
காதலி நின்னையுங் காவ னீக்குவ
ளரசாள் செல்வத் தாபுத் திரன்பாற்
புரையோர்ப் பேணிப் போகலும் போகுவை
போனா லவனொடும் பொருளுரை பொருந்தி
மாநீர் வங்கத் தவனொடு மெழுந்து
மாயமில் செய்தி மணிபல் லவமெனுந்
தீவகத் தின்னுஞ் சேறலு முண்டாற
தீவ திலகையிற் றன்றிறங் கேட்டுச்
சாவக மன்னன் றன்னா டடைந்தபி
னாங்கத் தீவமவிட் டருந்தவன் வடிவாய்ப்
பூங்கொடி வஞ்சி மாநகர் புகுவை
யாங்கந் நகரத தறிபொருள் வினவு

௭௬. இராசமாதேவி - பட்டமகிஷி.

௭௭ கொட்பு - கொள்கை.

௭௮. மாதவன் - அறவணவடிகள்.

௭௯. தீது - மணிமேகலை சிறையில வைக்கப்பட் டிருத்தல்.

௮௦. வாய்மொழி-உண்மைமொழி.

௭௬-௮௧. இராசமாதேவி நீககிக கொட்பினளாகிக கேட்டு நின்னைக காவல் நீக்குவளென்க.

௮௨. ஆபுத்திரனென்றது புண்ணியராசனை; இது, "நாக புரமிது நன்னகரான்வோன், பூமிசந் திரன்மகன் புண்ணிய ராசன்" (௨௪-ம் காதை, ௧௭௦-௧௭௧) என்று தருமசாவகன் மணிமேகலைக்குக் கூறியவாற்றாலுணரப்படும்; புண்ணியராசனை ஆபுத்திரனென்றே இந்நூலிற் பெரும்பாலும் வழங்குவர்.

௮௩. புரையோர் - சங்கத்தார்; புரை-உயர்ச்சி. போகலும் போகுவை - போகுதலுஞ்செய்வை. 'போக்கலும் போக்கும்' என்றும் 'போகினும் போகுவை' என்றும் பாடம்.

௮௪. பொருளுரை - தருமபதம்; என்றது, நாகபுரத்தின் பக்கததாகிய சோலையிலுள்ள தருமசாவகன ஆபுத்திரனுககுக்கூறும் உபதேசமொழிகளைககுறித்துநின்றது. பொருந்தி - கேட்டு. அம்மொழிகளாவன, "அறனு மறனு மநிததமு நிததத, திறனுந துக்கமுஞ் செலலுயிர்ப் புகலிலுஞ், சார்பிற் றோற்றமுஞ் சார்பறுத் துய்தியு, மாரிய னமைதியும்" (௨௫ - ம் காதை, ௯ - ௯) என்பவைகள்.

௮௫ - ௮௭. மணிமேகலை நாகபுரத்திலிருநது ஆகாயவழியேபோந்து மணிபல்லவததையடைந்தாளெனறும், ஆபுததிரன் கப்பல்வழியேவந்து அததீவததை அடைந்தானென்றும் ௨௫-ம காதையிலுள்ள ௨௯-ம் அடிமுதலியவற்றால விளங்குதலால், 'வங்கத் தவனொடு மெழுந்து' என்பதற்குப் பின்பு கப்பலேறி மணிபல்லவத்தை யடைவோனாகிய ஆபுத்திரனினின்று நீங்கி ஆகாயவழியேயெழுந்தெனப் பொருள்கொண்டு எழுநது சேறலுமுண்டெனவியைக்க. அவனொடு மென்பது, ஐந்தாவதன்மயக்கம்.

௮௯. சாவகமன்னன் - சாவகநாட்டரசனாகிய ஆபுத்திரன்.

௯௦. தீவம் - மணிபல்லவம்.

௯௧. வஞ்சிமாநகர் - கருவூர்; இது

மோங்கிய கேள்வி யுயர்ந்தோர் பலரா
லிறைவ னெங்கோ னெவ்வுயி ரனைத்து
முறைமையிற் படைத்த முதல்வனென் போர்களுந்
தன்னுரு வில்லோன் பிறவுருப் படைப்போ
னன்றே யிறைவ னாகுமென் போர்களுந்
துன்ப நோன்பித் தொடர்ப்பா டறுத்தாங்
கின்பவுல குச்சி யிருத்துமென் போர்களும்
பூத விகார புணர்ப்பென் போர்களும்
பல்வேறு சமையப் படிற்றுரை யெல்லா
மல்லியங் கோதை கேட்குறு மந்நா
ளிறைவனு மில்லை யிறந்தோர் பிறவா
ரறனே டென்னையென் றறைந்தோன் றன்னைப்
பிறவியு மறவியும பெற்றியி னுணர்ந்த
நறுமலர்க் கோதை யெள்ளினை நகுதி
யெள்ளினை போலு மிவ்வுரை கேட்டிங்
கொளளிய துரையென வுன்பிறப் புணர்த்துவை
யாங்குநிற் கொணர்ந்த வருந்தெய்வ மயக்கக்
காம்பன தோளி கனுமயக் குற்றனை
யென்றவ னுரைக்கு மிளங்கொடி நல்லா
யன்றென் றவன்முன் னயர்ந்தொழி வாயலை

---

சேரர்களுடைய இராசதானி; மலைநாட்டி லுள்ளது.

கூச - கூரு. படைத்த முதல்வனே இறைவன் எங்கோன் எனபோர்களுமென்க; இவர்கள பிரஹ்மவாதிகள்; "பேருலகெல்லாம் பிரம வாதியோர், தேவனிட்ட முட்டை யென்றனன்" (உஎ - ம் காதை, கூசு-கூஎ) என்றவருதல் காண்க. இவர்களை இரணிய கருப்பவாதிகளென்றுங்கூறுவர்.

கூசு. 'தானுருவிலலோன்' என்றும் பாடம்.

கூசு - கூஎ. என்போர்கள் அத்துவைத வாதிகள்.

கூஅ. நோன்பு - கன்மங்கள். இத்தொடர்ப்பாடு - இந்தப்பந்தங்கள். 'நோன்பிற் றொடர்ப்பாடு' னெறும் பாடம்.

கூஅ - கூகூ. நோன்பு அறுத்து இருத்துமென்போர்கள் - கர்மப்ரஹ்மவாதிகள்.

க௦௦. புணர்ப்பென்போர்கள் - பூதவாதிகள.

கூச - க௦௦. இவ்வடிகளிற்கூறிய சமய இலக்கணங்களுட் சிலவும், இன்னும் பலவும இந்நூல் உஎ - ம் காதையால் விளஙகவுணரப்படும்.

க௦ச. அறனேடு என்னை - தருமத்தாலவரும் பயன்யாது. அறைந்தோனை - உலோகாயதன்.

க௦ரு. அறவி - தருமத்தோடு பொருந்தியவழி.

க௦சு. எள்ளினை நகுதி - இகழ்ந்துசிரிப்பாய்.

க௦ச - க௦சு. அறைந்தோன்றன்னை எள்ளினை நகுதி.

க௦எ. இவ்வுரைகேட்டு எள்ளினைபோலும். 'என்னுரை கேட்டீங்கு' என்றும் பாடம்.

கக௦. 'காம்பிணைத்தோளி' என்றும் பாடம்.

ககஉ. அயர்ந்தொழிவாயலை - மறந்தொழியாய்.

தீவினை யுறுதலுஞ் செத்தோர் பிறத்தலும்
வாயே யென்று மயக்கொழி மடவாய்
வழுவறு மரனு மண்ணுங் கல்லு
மெழுதிய பாவையும் பேசா வென்ப
தறிதலு மறிதியோ வறியாய் கொல்லோ
வறியா யாயி னுங்கது கேளாய்
முடித்துவரு சிறப்பின் மூதூர் யாங்கணுங்
கொடித்தேர் வீதியுந் தேவர் கோட்டமு
முதுமர விடங்களு முதுநீர்த் துறைகளும்
பொதியிலு மன்றமும் பொருந்துபு நாடிக
காப்புடை மாநகர்க் காவலுங் கண்ணி
யாப்புடைத் தாக வறிந்தோர் வலித்து
மண்ணினுங் கல்லினு மாததினுஞ் சுவரினுங்
கண்ணிய தெய்வதங் காட்டுநர் வகுக்க
வாங்கத் தெய்வத மவ்விட நீங்கா
வூன்கணி னார்கட் குற்றதை யுரைக்கு
மென்றிறங் கேட்டியோ விளங்கொடி நல்லாய்
மன்பெருந் தெய்வ கணங்களி னுள்ளேன்
றுவதிக னென்பேன் றொன்றுமுதிர் கந்தின்
மயனெனக் கொப்பா வகுத்த பாவையி
னீங்கேன் யானென் னிலையது கேளாய
மாந்த ரறிவது வானவ ரறியா

---

௧௧௩. ௨௧-ம் காதை, ௧௧-௨௦

௧௧௪. வாயே - உண்மையே. 'மடக கொடி மடவாய்' என்றும் பாடம்.

௧௧௫. ௨௧-ம் காதை, ௧௨௫.

௧௧௭. அறிதலு மறிதியோ - அறிதலும் செய்தியோ.

௧௨௦. தேவர் கோட்டம் - தேவர்கோயில்.

௧௨௧. முதுமரம் - பழையமரம்.

௧௨௩. காவலுங்கண்ணி - காவலையுங் கருதி.

௧௨௪. யாப்புடைத்தாக - உறுதியுடைத்தாக. வலித்து - எண்ணி.

௧௨௬. தெய்வதங்காட்டுநர் - தெய்வத்தை நிறத்துவோர்; ௨௨-ம் காதை, ௧௨௧. 'கண்ணிய வுருவங் காட்டுநர் வகுத்த' என்றும் பாடம்.

௧௨௮. ஊன்கணினார்கட்கு - மானிடர்களுக்கு.

மேல்வருவன, மணிமேகலைக்குத் தன துவரலாற்றைக் கந்திற்பாவை கூறுங் கூற்று.

௧௨௯. கேட்டி - கேட்பாய்.

௧௩௧. துவதிகனென்பேன் - துவதிகனென்று பெயர் கூறப்படுவேன். தொன்று முதிர் - கந்து - பழைமை முதிர்ந்த தூண்.

௧௩௨. மயன் - தெய்வத்தச்சன்; அசுரத்தச்சனென்றுங்கூறுவர்; கந்திற்பாவை இருத்தற் கிடமாகிய சக்கரவாளக் கோட்டமும் மயனாற்செய்யப்பட்டதென்ற இந்நூல் ௬-ம் காதை, ௧௯௨ ம் அடிமுதலியவற்றால் தெரிகின்றது. 'பாவையை' என்றும பாடம்.

ஓவியச் சேனனென் னுறுதுணைத் தோழ
னாவதை யிந்நகர்க் காருரைத் தனரோ
வவனுடன் யான்சென் றாடிட மெல்லா
முடனுறைந் தார்போ லொழியா தெழுதிப்
பூவும் புகையும் பொருந்துபு புணர்ந்து
நாநனி வருந்தவென் னலம்பா ராட்டலின்
மணிமே கலையான் வருபொரு ளெல்லாந்
துணிவுட னுரைத்தே னென்சொற் றேறெனத்
தேறே னல்லேன் றெய்வக் கிளவிக
ளீறு கடைபோக வெனக்கரு ளென்றலுந்
துவதிக னுரைக்குஞ் சொல்லலுஞ் சொல்லுவேன்
வருவது கேளாய் மடக்கொடி நல்லாய்
மன்னுயிர் நீங்க மழைவளங் கரந்து
பொன்னெயிற் காஞ்சி நகர்கவி னழிய
வாங்கது கேட்டே யாருயிர் மருந்தா
மீங்கிம் முதியா ளிடவயின் வைத்த
தெய்வப் பாத்திரஞ் செவ்வியின் வாங்கித்
தையனிற் பயந்தோர் தம்மொடு போகி
யறவணன் றானு மாங்குள னாதலிற்
செறிதொடி காஞ்சி மாநகர் சேர்குவை
யறவண னருளா லாய்தொடி யவ்வூர்ப்
பிறவண மொழிந்துநின் பெற்றியை யாகி
வறனோ டுலகின் மழைவளந் தரூஉ

---

௧௩௫. ஓவியச்சேனன்-சித்திரசேனன்.

௧௩௭. அவனுடன் - சித்திரசேனனுடன். ஆடிடம் - விளையாடுமிடம்.

௧௩௯. 'கொணர்ந்து' என்றும் பாடம்.

௧௪௨. தேறென - தெளிவாயென்று கந்திற்பாவைசொல்ல.

மேல்வருவன மணிமேகலைகூற்று.

௧௪௩. தெய்வக்கிளவிகளைத் தேறே னல்லேன்; தெளிவேனென்றபடி.

௧௪௪. ஈறு கடைபோக-மரணம் இறுதியாக; "கடைபோகச் செல்வமுய்த் தார்" என்பது நாலடியார், மெய்ம்மை, ௯. என்றலும்-என்று மணிமேகலை சொல்லலும்.

மேல்வருவன கந்திற்பாவைகூற்று.

௧௪௫. உரைக்கும் - முற்று. சொல்லலுஞ் சொல்லுவேன்-யான் சொல்லுதலையுஞ் செய்வேன்.

௧௪௭. நீங்கக் கரந்து - நீங்கும்படி மறைந்து.

௧௫௦. முதியாள் - சம்பாபதி.

௧௫௨. நிற்பயந்தோர் - மாதவியும் சுதமதியும்.

௧௫௩. ஆங்கு - காஞ்சிநகரில்.

௧௫௪. செறிதொடி - விளி.

௧௫௩ - ௧௫௪. ஆங்குளனாதலிற் சேர்குவை.

௧௪௯ - ௧௫௪. அதுகேட்டு வாங்கிக் காஞ்சிமாநகர் சேர்குவையென்க.

௧௫௬. பிறவணமொழிந்து - ஆணுருவொழிந்து; வேற்றுமதப் பற்றொழிந் தென்றுமாம்.

௧௫௭. வறன் ஓடு உலகில் - வறட்காலம் பரந்த உலகத்தில்.

மறனோ டேந்தி யாருயி ரோம்புவை
யாய்தொடிக் கவ்வூ ரறனொடு தோன்று
மேது நிகழ்ச்சி யாவும் பலவுள
பிறவற முரைத்தோர் பெற்றிமை யெல்லா
மறவணன் றனக்குநீ யுரைத்த வந்நாட்
டவமுந் தருமமுஞ் சார்பிற் றோற்றமும்
பவமறு மார்க்கமும் பான்மையி னுரைதது
மறவிரு ளிரிய மன்னுயி ரேமுற
வறவெயில் விரித்தாங் களப்பி லிருத்தியொடு
புத்த ஞாயிறு தோன்றுங் காறுஞ்
செத்தும் பிறந்துஞ் செம்பொருள் காவா
வித்தல நீங்கே ளிளங்கொடி யானுந்
தாயரு நீயுந் தவறின் றாக
வாய்வ தாகநின் மனப்பாட் டறமென
வாங்கவ னுரைத்தலு மவன்மொழி பிழையாய்
பாங்கிய னல்லறம் பலவுஞ் செய்தபின்
கச்சிமுற் றத்து நின்னுயிர் கடைகொள

---

கடுஅ. அறனோடு - அமுதசுரபி.

கடுஎ-கடுஅ. கடு-ம் காதை, ருகூ-ருச.

கசுக. பிறவறமுரைத்தோர் - வஞ்சி நகரத்தில் மற்றைச் சமயதருமங்களைச் சொன்னோருடைய.

கசுரு. சார்பு - துவாதசநிதானம்; அவை, "பேதைமை செய்கை யுணர்வே யருவுரு, வாயி லூறே நுகர்வே வேட்கை, பற்றே பவமே தோற்றம் வினைப்பய, னிற்றென வகுத்த வியல்பீ ராறும்" என்பன; உச-ம் காதை, க0ரு - க0அ; கூ0 - ம் காதை, சரு - சஅ. இவற்றின் இயல்பு, கூ0 - ம் காதையில் விளங்கக் கூறப்படும்.

கசுச. பவம் - கருமங்களின் கூட்டம்; "பவமெனப் படுவது கரும வீட்டம்" (கூ0 - ம் காதை, ககூ) என வருதல் காண்க. 'உரைத்தவன்' என்றும் பாடம்.

கசுரு. மறவிருள் - பாவமாகிய இருட்டு. எம் உற - நிருவாணமாகிய இன்பத்தை அடையும்படி; எம் - இன்பம்.

கசுசு. இருத்தி-அணிமாதியோக சித்திகளெட்டும்; "எத்திறத் தார்க்கு மிருத்தியுஞ் செய்குவம்" என்று பின்னும் வருதல்காண்க; உக - ம் காதை, சுக. சித்தி எண்பதெதொன்பதென்று கூறுதலுமுண்டு; "எண்பத்தொன் பதுசித்தியில பிறு லுளவென்று, பண்பொருத நுண்பொருளைப் பாசறியப் பகர்ந்தனையே" என்று வருதல்காண்க; இது, வீரசோழியம், யாப்புப்படலம், கக - ம கலித்துறை யுதாரணத்திற் கண்டது.

கசுஎ. தோன்றுங்காறும் - தோன்றுமளவும்.

கசுஅ. செம்பொருள் - தருமம்; மெய்யுணர்ந்தார் நெறிசிறசெலலாஞ் செம்மையுடைத்தாய்த் தோன்றலின், இப்பெயர் பெற்றது; "செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்" என்பது திருக்குறள், கக. காவா - காத்து.

கசுகூ. இத்தலம்-இக்காஞ்சிநகரத்தை. 'இத்திற நீங்கேன்' என்றும பாடம்.

கஎக. அறம் வாய்வதாக.

கஎஉ. அவன் - அறவணன். பிழையாய் - தப்பாயாய்.

கசுச - கஎஉ. அவன் உரைத்து நின் மனப்பாட்டறம் வாய்வதாகவென வுரைத்தலும்.

கஎரு. நலலறம் - காருண்யம்.

கஎச. கச்சிமுற்றம் - காஞ்சிநகரிடம். கடை - முடிவு.

வுத்தர மகதத் துறுபிறப் பெல்லா
மாண்பிறப் பாகி யருளற மொழியாய்
மாண்பொடு தோன்றி மயக்கங் களைந்து
பிறர்க்கற மருளும பெரியோன் றனக்குத்
தலைச்சா வகனாய்ச் சார்பறுத் துய்தி
யின்னுங் கேட்டியோ நன்னுதன் மடந்தை
யூங்க ணோங்கிய வுரவோன் றன்னை
வாங்குதிரை யெடுத்த மணிமே கலாதெய்வஞ்
சாது சக்கரற் காரமு தீத்தோ
யீது நின்பிறப் பென்பது தெளிந்தே
யுவவன மருங்கி னின்பாற் றோன்றி
மணிபல லவத்திடைக் கொணர்ந்தது கேளெனத்
துவதிக னுரைத்தலுந் துயர்க்கட னீங்கி
யவதி யறிந்த வணியிழை நல்லாள்
வலையொழி மஞ்ஞையின் மனமயக் கொழிதலு
முலகுதுயி லெழுப்பினன் மலர்கதி ரோனென.

கந்திற்பாவை வருவதுரைத்தகாதை முற்றிற்று.

---

கஎரு. உததரமகதம் - வடமகதநாடு.

கஎசு. ஒழியாய் - நீங்காயாய்.

கஎஅ. பெரியோன் - புததன்.

கஎகூ. தலைச்சாவகனாய் - முதன்மாணாக்கனாய், சாவகன்=ஸ்ராவகன் - கேட்பவன்; "தரும சாவகன றன்னடி வணங்கி" என்பர் பின்னும்; உரு-ம் காதை, உ. சார்பு - பன்னிருநிதானம். உய்தி - பிழைப்பாய்.

கஅக. உன்குலத்தில் முன்பு அறத்தால் உயர்ச்சியுற்றிருந்த அறிவுடையோனாகிய ஒருவனை; ஊங்கண் - முன்பு; "தூங்கெயி லெறிந்தநின் னூங்கணோர் நினைப்பின்" என்பது புறநானூறு, ருக "போந்தைக் கண்ணிநின் னூங்கணோர் மருங்கிற், கடற்கடம் பெறிந்த காவலன்" என்பது சிலப்பதிகாரம், நடுகற்காதை, கருச - கருரு.

கஅஉ. திரை எடுத்த - அழுந்தி இறவாவண்ணம் கடலினின்றும எடுதத. எடுத்தகதையை, சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை, உஅ - ம் அடி முதலியவற்றிற் காண்க.

கஅரு. சாதுசக்கரற்கு - சாது சக்கரனென்னும் முனிவனுககு.

கஅச. ஈது - இத்தன்மையையுடையது.

கஅஅ. அவதி - எல்லை.

ககூ௦. மலர்கதிரோன் - விளைத்தொகை.

க - ககூ௦. குழலி எழுந்து கேட்டு எழுந்து நீங்கி வெய்துயிர்தது புலம்பி அழுதேங்கி அயாவுயிர்த்தெழுதலும், இருந்தெய்வம் உரைத்தலும், பூங்கொடி பொருந்தி 'நின்பேருள் பெறுவேன்' என, தெய்வங்கூறும்; அங்ஙனங்கூறுந் தெய்வம் 'என்சொற்றேறு' என, மணிமேகலை 'எனக்கு அருள்' என்றலும் துவதிகனுரைக்கும்; அங்ஙனமுரைக்குந் துவதிகன் உரைததலும், நல்லாள்நீங்கி மயககொழிதலும், கதிரோன் துயிலெழுப்பினனென வினைமுடிவுசெய்க.

## இருபத்திரண்டாவது

# சிறைசெய் காதை.

[இருபத்திரண்டாவது மணிமேகலைபொருட்டால் மடிந்தான் உதயகுமரனென்பது மாதவர்வாய்க்கேட்ட மன்னவன் மணிமேகலையை மந்திரியாகிய சோழிகவேனாதியாற் காவல்கொண்டபாட்டு.]

கடவுண் மண்டிலங் காரிருள் சீப்ப
நெடுநிலைக் கந்தி னின்ற பாவையொடு
முதியோள் கோட்டம் வழிபடல் புரிந்தோ
ருதைய குமரற் குற்றதை யுரைப்பச்
சாதுயர் கேட்டுச் சக்கர வாளத்து
மாதவ ரெல்லா மணிமே கலைதனை
யிளங்கொடி யறிவது முண்டோ விதுவெனத்
துளங்கா தாங்கவ ளுற்றதை யுரைத்தலு
மாங்கவ டன்னை யாருயிர் நீங்கிய
வேந்தன் சிறுவனொடு வேறிடத் தொளித்து
மாபெருங் கோயில் வாயிலுக் கிசைத்துக
கோயின் மன்னனைக் குறுகினர் சென்றீங்
குயர்ந்தோங் குச்சி யுவாமதி போல
நிவந்தோங்கு வெண்குடை மண்ணக நிழற்செய
வேலுங் கோலு மருட்கண் விழிக்க
தீதின் றுருள்கநீ யேந்திய திகிரி

---

க. கடவுண்மண்டிலம் - சூரியன்.

௩. முதியாள் - சம்பாபதி.

க - ச. பாவையொடு கோட்டத்தை வழிபடல்புரிந்தோர் உற்றதை முனிவர்க்கு உரைப்ப.

ரு. சாதுயர் - உதயகுமரனிறந்ததுன்பம்.

சு. மணிமேகலையைநோக்கி.

எ. இளங்கொடியென்பது முன்னிலைக்கண்வந்தது. இது - உதயகுமரனிறந்தது. என - என்று முனிவர்கேட்ப.

ரு - எ. மாதவரெல்லாம் மணிமேகலையைநோக்கி இதனை நீ அறிவது முண்டோவென.

அ. துளங்காது - நடுங்காது.

இனி, சக்கரவாளக் கோட்டத்துள்ள முனிவர் அரசனையடைந்து உதயகுமரன் இறந்தது மொழிதல கூறப்படும்.

கக. வாயில் - வாயில்காப்போர்.

கங. உவாமதி - பூர்ணசந்திரன்.

கச. செய - வியங்கோள்.

கரு. திகிரி தீதின்று உருள்க; தீது - இடையூறு.

நினக்கென வரைந்த வாண்டுக ளெல்லா
மனக்கினி தாக வாழிய வேந்தே
யின்றே யல்ல விப்பதி மருங்கிற்
கன்றிய காமக் கள்ளாட் டயர்ந்து
பத்தினிப் பெண்டிர் பாற்சென் றணுகியு
நற்றவப் பெண்டிர் பின்னுளம் போக்கியுந்
தீவினை யுருப்ப வுயிரீறு செய்தோர்
பாராள் வேந்தே பண்டும் பலரான்
மன்மருங் கறுத்த மழுவா ணெடியோன்
றன்முன் றோன்ற றகாதொழி நீயெனக்
கன்னி யேவலிற் காந்த மன்னவ
னிந்நகர் காப்போர் யாரென நினைஇ
நாவலந் தண்பொழி னண்ணார் நடுக்குறக்
காவற் கணிகை தனக்காங் காதல
னிகழ்ந்தோர் காயினு மெஞ்சுத லில்லோன்
ககந்த னாமெனக் காதலிற் கூஉ

---

கஎ. வரைந்த - எல்லையிட்ட.

கஅ. இனிது - பன்மையொருமை மயக்கம்.

காமமிகுதியாற் கொலையுண்ட உதய குமரன்பொருட்டு வருந்தாவண்ணம், முற்காலத்து அந்நகரத்திற் காமமிகுதியால் தீங்கிழைத்துக்கொலையுண்ட இருவருடைய சரிதிரங்களை அம்முனிவர்களுள் ஒருவர் அரசனுக்குக் கூறுதல் மேற்கூறப்படும்.

௨௦. கன்றிய - அடிப்பட்ட; "காமமே கன்றி நின்ற" என்பது சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், கஅக. அயர்ந்து-செய்து. காமக்கள்ளாட்டு :—கஅ-ம் காதை, அஅ; ௨௫-காதை, ௬௧.

௨௨. நற்றவப்பெண்டிர் - நல்ல தவஞ்செய்யுமகளிர்; நற்றவம் - வீடுபெறுதற்குச் செய்யுந் தவமுமாம்; "நற்றவஞ்செய் வார்க்கிடந் தவஞ்செய் வாரக்கு மஃதிடம்" என்பது சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், ௪அ.

௨௪. பண்டும், உம்மை-எதிரதுதழீஇய வெச்சப்பொருளது.

௨௫. மன்மருங்கறுத்த - இராசகுலத்தை இல்லையாக்கின; "சூர்மருங் கறுத்த மொய்ம்பின் மதவலி" என்பது திருமுருகாற்றுப்படை, ௨எ௫. மழுவாணெடியோன் - பரசுராமன்; மழுவாள் - மழுவாகிய வாள்.

௨எ. கன்னி - துர்க்கை; சம்பாபதியுமாம். காந்தமன்னவன் - காந்தனென்னும் பெயரையுடைய அரசன்.

௨அ இந்நகரென்றது, காவிரிப்பூம்பட்டினத்தை. நினைஇ - நினைந்து.

௨௯. நாவலந்தண்பொழில் - சம்புத்தீவில். நண்ணார் - பகைவர்.

௩௦. காவற்கணிகை - களத்தாடுங்கூத்தி; இராக்கிடைப் பெண்டென்பர் சிலப்பதிகார அரும்பதவுரையாசிரியர்; இந்திரவிழவூரெடுத்தகாதை, ௩௦-ம் அடிக்குறிப்பைப் பார்க்க. இவள் அரசன் காமக்கிழத்திபோலும். காதலன்-மகன்.

௩௧. எஞ்சுதல் - குறைதல். 'இகந்தோர்க் காயினும்' என்றும் பாடம்.

௨௯ - ௩௧. நண்ணார் இகழ்ந்தோராய் நடுக்குறக்காயினும் எஞ்சுதலில்லோன்.

௩௨. ககந்தனாமென - ககந்தன் காத்தற்குரியனாவானென்று நினைந்து. கூஉய்- அழைத்து.

௩௦ - ௩௨. காதலனும் எஞ்சுதலில்லோனுமாகிய ககந்தனென்க.

மேல்வருவது, ககந்தனைநோக்கி அரசன் கூறுங்கூற்று.

யரசா ளுரிமை நின்பா லின்மையிற்
பரசு ராமனின் பால்வந் தணுகா
னமர முனிவ னகத்தியன் றனாது
துயர்நீங்கு கிளவியின் யான்றோன் றளவுங்
ககந்தன் காத்தல் காகந்தி யென்றே
யியைந்த நாம மிப்பதிக் கிட்டீங்
குள்வரிக் கொண்டவ் வுரவோன் பெயர்நாட்
டெள்ளுநீர்க் காவிரி யாடினள் வரூஉம்
பார்ப்பனி மருதியைப் பாங்கோ ரின்மையின்
யாப்பறை யென்றே யெண்ணின னாகிக்
காவிரி வாயிலிற் ககந்தன் சிறுவ
னீவா வென்ன நேரிழை கலங்கி
மண்டிணி ஞாலத்து மழைவளந் தரூஉம
மொண்டி ராயிற் பிறர்நெஞ்சு புகாஅர்
புக்கேன் பிறனுளம் புரிநூன் மார்பன்
முத்தீப் பேணு முறையெனக் கில்லென
மாதுய ரெவ்வமொடு மனையகம் புகாஅள்
பூத சதுக்கம் புக்கனண் மயங்கிக்
கொண்டோற் பிழைத்த குற்றந் தானிலேன்

---

௩௩. ககந்தன் கணிகைமகனாதலின், அவன்பால் அரசவுரிமை இலதாயிற்று.

௩௫. அமரமுனிவனாகிய அகத்தியன்.

௩௫ - ௩௬. இம்மன்னவன் அகத்திய முனிவர்பாற் பத்திமையுடையனாதலை, "கஞ்ச வேட்கையிற் காந்தமன் வேண்ட, வமர முனிவ னகத்தியன் றனாது, கரகங் கவிழ்த்த காவிரிப் பாவை" (பதிகம், ௧௦-௧௨) என்பதனாலுணர்க.

௩௭. ககந்தன் - அண்மைவிளி. காத்தல் - வியங்கோள்; 'என்று கூறி' என வருவிக்க. 'ககந்தன் காத்தலின்' என்றும் பாடம்.

௩௯. உள்வரிக்கொண்டு - வேற்றுருவங்கொண்டு. நாள் - நாளில்.

இனிக் கூறப்படுவது, பத்தினிப்பெண்டிர்பாற்சென்றணுகித் தீங்குற்றோன் கதை.

௪௨. யாப்பறை - உறுதியற்றவன். 'என்னின னாகி' என்றும் பாடம்.

௪௩. காவிரிவாயிலில் - காவிரிக்கரையில் திருமுகத்துறைகழிகின்றவாயிலில்; "காவிரி வாயிற் கடைமுகங் கழிந்து" என்பது சிலப்பதிகாரம், நாடுகாண்காதை, ௩௩.

௪௪. என்ன - என்றுகூற. நேரிழை - மருதி.

௪௭. பிறனுளம்புக்கேனென்க. இக்கருத்தைத்தழுவி, சிலப்பதிகாரம், மங்கலவாழ்த்துப் பாடலிலுள்ள "தீதிலா வடமீன்" என்பதில் 'தீது' என்பதற்கு 'பிறர்நெஞ்சு புகுதல்' என்று அடியார்க்குநல்லார் பொருள்செய்திருத்தல் காண்க. புரிநூன்மார்பனென்றது தன் கணவனாகிய அந்தணனை.

௪௯. மாதுயரெவ்வம் - மிக்கதுன்பம். புகாஅள் - புகாளாய்.

௫௦. பூதசதுக்கம் - தவமறைந்தொழுகுந் தன்மையிலாளர்முதலிய அறுவகையினரைப் பாசத்தாற்கட்டிப் புடைத்துண்ணும் பூதநிற்றலையுடைய சதுக்கம்; சதுக்கம் - நாற்சந்தி. பூதசதுக்கத்தின் வரலாற்றைச் சிலப்பதிகாரம், இந்திரவிழவூரெடுத்தகாதை, ௧௨௮ - ம் அடிமுதலியவற்றாலுணர்க.

௫௨. கொண்டோன் - கணவன.

கண்டோர் நெஞ்சிற் கரப்பெளி தாயினேன்
வான்றரு கற்பின் மனையறம் பட்டேன்
யான்செய் குற்றம் யானறி கில்லேன்
பொய்யினை கொல்லோ பூத சதுக்கத்துத்
தெய்வ நீயெனச் சேயிழை யாற்றலு
மாபெரும் பூதந் தோன்றி மடக்கொடி
நீகே ளென்றே நேரிழைக் குரைக்குந்
தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றவப்
பொய்யில் புலவன் பொருளுரை தேறாய்
பிசியு நொடியும் பிறர்வாய்க் கேட்டு
விசிபிணி முழவின் விழாக்கோள் விரும்பிக்
கடவுட் பேணல கடவியை யாகலின்
மடவர லேவ மழையும் பெய்யாது
நிறையுடைப் பெண்டிர் தம்மே போலப்
பிறர்நெஞ்சு சுடூஉம் பெற்றியு மில்லை
யாங்கவை யொழிகுவை யாயி னாயிழை
யோங்கிரு வானத்து மழையுநின் மொழியது
பெட்டாங் கொழுகும் பெண்டிரைப் போலக்
கட்டா துன்னையென் கடுந்தொழிற் பாச

---

ருஉ. கரப்பு - ஒளித்தல்.

ருங. வான்றருகற்பு - மழையைதத ரும் கற்பு. மனையறமபட்டேன் - இல் லறத்திற்குத் துணையாக நிற்றலை ஒழிந் தேன்.

ருச. யானறிகில்லேன்-யானறியேன்.

ருரு. பொய்யினைகொல்லோ - பொய் ம்மையை யுடையாயோ; 'போயினை கொல்லோ' என்றும் பாடம்.

ருரு - ருசு. நீ இல்லையாயினையோ.

ருஎ. பூதம் - சதுக்கப்பூதம். 'மாபெ ருந் தெய்வம்' என்றும் பாடம்.

ருகூ - சுo. திருக்குறள், ருரு. 'தொழு மவள்' என்றும் பாடம்.

சுக. பொய்யில்புலவன் - திருவள்ளு வர். பொருளுரை - பொருளையுடைய சொல்; தருமவார்த்தையுமாம். தேறாய்- தெளியாயாய்.

சுஉ. பிசி - பொய்; என்றது பொரு ளொடு புணராப் பொய்ம்மொழிகளை; நொடி - பொருளொடு புணர்ந்த நகை மொழி. 'கேட்டும்' என்றும் பாடம்.

சுங. விசிபிணிமுழவின் விழா - கட் டப்பட்ட கட்டினையுடைய முழவினை யுடைய விழா. 'விரும்பியும்' என்றும் பாடம்.

சுச. கடவியையாகலின் - கடப்பா டாக வுடையையாகலின்.

சுரு. மடவரல் - முன்னிலைப்பெயர்.

சுசு. நிறை - நிறுத்தல். பெண்டிர் தம்மேபோல - பெண்டிரைப்போல.

சுஎ. பெற்றியுமில்லை - தன்மையுமி ல்லை.

சுஅ. அவை - பிசியும் நொடியும் கே ட்டலும், விழாக்கோள்விரும்பலும், கட வுட்பேணலும்.

எo. பெட்டாங்கு - விரும்பியவண் ணம். பெண்டிரைப்போல - பெண்டி ரைக்கட்டுவதுபோல.

மன்முறை யெழுநாள் வைத்தவன் வழூஉம்
பின்முறை யல்ல தென்முறை யில்லை
யீங்கெழு நாளி லிளங்கொடி நின்பால்
வாங்கா நெஞ்சின் மயரியை வாளாற்
கக்கந்தன் கேட்டுக் கடிதலு முண்டென
விகந்த பூத மெடுத்துரை செய்ததப்
பூத முரைத்த நாளா லாங்கவன்
றாதை வாளாற் றடியவும் பட்டன
னின்னுங் கேளா யிருங்கட லுடுத்த
மண்ணாள் செல்வத்து மன்னவ ரேறே
தரும தத்தனுந் தன்மா மன்மகள்
பெருமதர் மழைக்கண் விசாகையும் பேணித்
தெய்வங் காட்டுந் திப்பிய வோவியக்
கைவினை கடந்த கண்கவர் வனப்பினர்
மைத்துனன் முறைமையால் யாழோர் மணவினைக்
கொத்தன ரென்றே யூர்முழு தலரெழப்
புனையா வோவியம் புறம்போந் தென்ன
மனையக நீங்கி வாணுதல் விசாகை
யுலக வறவியி னூடுசென் றேறி
யிலகொளிக் கந்தி னெழுதிய பாவா
யுலகர் பெரும்பழி யொழிப்பாய் நீயென
மாநக ருள்ளீர் மழைதரு மிவளென
நாவுடைப் பாவை நங்கையை யெடுத்தலுந்
தெய்வங் காட்டித் தெளித்திலே னாயின்
மைய லூரோ மனமா சொழியாது
மைத்துனன் மனையாண் மறுபிறப் பாகுவே

---

௭௨. எழுநாள் - எழுநாளாம். வைத்து - சொன்னடை; இதற்குப்பொருளில்லை. வழூஉம் - தவறும்.

௭௫. மயரி - மயக்கமுடையான்.

௭௩-௭௬. எழுநாளிற்கடிதலுமுண்டு.

௭௭. இகந்தபூதம் - (தீமையைக்) கடந்தபூதம்.

௭௮. நாளால் - நாளில்.

இனிக்கூறப்படுவது, நற்றவப்பெண்டிர் பின்னுளம்போக்கித் தீங்குற்றோன் கதை.

௮௨-௮௫. தருமதத்தனும் விசாகையும் வனப்பினர்.

௮௬. யாழோர்மணவினைக்கு - காந்தருவவிவாகத்திற்கு.

௮௭. ஒத்தனர் - இயைந்தனர்.

௮௮. புனையாவோவியம் - வண்ணங்களைக்கொண்டெழுதாதவடிவைக்கோட்டினசித்திரம்; "புனையா வோவியங் கடுப்ப" என்பது நெடுநல்வாடை, ௧௪௭; செயற்கையழகு யாதொன்றும் இன்மையின், இங்ஙனங்கூறினர்.

௯௦. ஊடு - உள்ளே. 'ஊடுவந் தேறி' என்றும் பாடம்.

௯௨. என - என்று விசாகைவேண்ட.

௯௩. இவள் மழையைத் தருவாளென்று.

௯௪. நாவுடைப்பாவை - கந்திற்பாவை. எடுத்தல் - உயர்த்தல்.

௯௭. மறுபிறப்பில் மைத்துனன் மனை

னிப்பிறப் பிவனொடுங் கூடே னென்றே
நற்றாய் தனக்கு நற்றிறஞ் சாற்றி
மற்றவள் கன்னி மாடத் தடைந்தபின்
றரும தத்தனுந் தந்தையுந் தாயரும்
பெருநகர் தன்னைப் பிறகிட் டேகித்
தாழ்தரு துன்பந் தலையெடுத் தாயென
நாவுடைப் பாவையை நலம்பல வேத்தி
மிக்கோ ருறையும் விழுப்பெருஞ் செல்வத்துத்
தக்கண மதுரை தான்சென் றடைந்தபின்
றரும தத்தனுந் தன்மா மன்மகள்
விரிதரு பூங்குழல் விசாகையை யல்லது
பெண்டிரைப் பேணே னிப்பிறப் பொழிகெனக்
கொண்ட விரதந் தன்னுட் கூறி
வாணிக மரபின் வருபொரு ளீட்டி
நீணிதிச் செல்வனாய் நீணில வேந்தனி
னெட்டிப் பூப்பெற் றிருமுப் பதிற்றியாண்
டொட்டிய செல்வத் துயர்ந்தோ னாயின
னந்த ணாள னொருவன் சென்றீங்
கென்செய் தனையோ விருநிதிச் செல்வ
பத்தினி யில்லோர் பலவறஞ் செய்யினும்
புத்தே ளுலகம் புகாஅ ரென்பது
கேட்டு மறிதியோ கேட்டனை யாயி
னீட்டித் திராது நின்னக ரடைகெனத்
தக்கண மதுரை தான்வறி தாக

---

ஒழியாவேன். மைத்துனனென்றது தருமதத்தனை.

௪௯௯. நற்றிறம் - விரதம்.

௫00. அவள் - விசாகை.

௫0௨. பெருநகர் - காவிரிப்பூம்பட்டினம். பிறகிட்டு - பின்வைத்து.

௫0௩. தலையெடுத்தாய் - நீக்கினாய்.

௫0௬. தக்கணமதுரை - கூடல்; தக்கணம் - பாகதச்சிதைவு.

௫0௭ தருமதத்தனும், உம்மை - இறந்ததுதழீஇயது.

௫௧0. கொண்ட - மேற்கொண்ட.

௫௧௧ வாணிகமரபு - கொள்வதூஉமிகையும் கொடுப்பது குறையுமாகாமல் ஒப்ப நாடிச்செய்தல்.

௫௧௩. எட்டிப்பூப்பெற்று - அரசனாற் கொடுக்கப்படும் எட்டிப்பட்டத்திற்குரிய பூவைப்பெற்று; இதன்வரலாற்றை இந்நூல் ௪ - ம் காதை, ௫௮ - ம் அடிக் குறிப்பிற்பார்க்க. இரு முப்பதிற்றியாண்டு - அறுபதுவருடம்; என்றது அவன்பிராயத்தை; "ஆறைந் திரட்டி யாண்டுனக் காயது" என்று பின்பு விசாகைகூறுதல் காண்க; ௫௨௯ - ம் அடி.

௫௧௪. ஒட்டிய - நிரம்பிய.

௫0௭ - ௫௧௪ தருமதத்தனும் கூறி எட்டிப் பெற்று உயர்ந்தோனாயினனென்க.

௫௨0 அடைகென - அடைவாயென்று அந்தணாளன் கூற.

விப்பதிப் புகுந்தன னிருநில வேந்தே
மற்றவ னிவ்வூர் வந்தமை கேட்டுப்
பொற்றொடி விசாகையு மனைப்புறம் போந்து
நல்லா ளுணாள் பலலோர் காப்ப
வல்லவை கடிந்த வவன்பாற் சென்று
நம்முணு மறிந்தில நம்மை முன்னாள்
மம்மர் செய்த வனப்பியாங் கொளித்தன
வாறைந் திரட்டி யாண்டினை காயதே
னுறைங் கூந்தலு நரைவிரா வுற்றன
விளமையுங் காமமும் யாங்கொளித் தனவோ
வுளனில லாள வெனக்கீங் குரையா
யிப்பிறப் பாயினியா னின்னடி யடையே
னப்பிறப் பியானின் னடித்தொழில் கேட்குவ
னிளமையு நில்லா யாக்கையு நில்லா
வளவிய வான்பெருஞ் செல்வமு நில்லா
புத்தே ளுலகம் புதல்வருந் தாரா
மிக்க வறமே விழுத்துணை யாவது
தானஞ் செய்யெனத் தருமதத் தனு
மாமன் மகள்பால வான்பொருள் காட்டி
யாங்கவ னவளுடன் செய்த நல்லற
மோங்கிரு வானத்து மீனினும் பலவாற்
குமரி மூத்தவக் கொடுங்குழை நல்லா
ளமர னருளா லகனக ரிடுஉம்

---

௧௨௨. புகுந்தனன் - தருமதத்தன் புகுந்தனன்.

௧௨௬. அலலவை -பொய்முதலியன. மேல் வருவது விசாகைகூற்று.

௧௨௮. மம்மர் - மயக்கம வனப்பென்றது இருவருடைய அழகையும.

௧௨௯ - ௧௩௦. என் கூந்தலும - எனது கூந்தலும், கூந்தல் - மயிர்மாத்திரையாய் ஐவகையுமுணர்த்தலின், 'நரைவிரா வுறறன' என்று பன்மைகூறினர்; "வண்ணப்போ தருச்சித்து மகிழ்வாளுத் தகையவே" என்று சீவகசிந்தாமணியில் வந்திருத்தல்காண்க; காமகவிலம்பகம், ௧௩௫.

௧௩௩. 'யாங்குருத் தனவோ' என்றும் பாடம்.

௧௩௪. அப்பிறப்பு - மறுபிறப்பு.

௧௩௫. 'நில்லாது' என்றும் பாடம்.

௧௩௭. புதேளுலகம் - தேவருலகம்.

௧௩௯. தானஞ்செய்யென - தானஞ் செய்யென்று விசாகைசொல்ல.

௧௪௦. மாமன்மகா ...சாகை. 'மாமன் மகள்போல் வா..ெ..ாருள் காட்டி' என்றும் பாடம்.

௧௪௩. குமரிமூத்த - கன்னிப்பெண்ணாகவிருந்து வறிதே மூப்புற்ற; நலலாள் - விசாகை; "குமரி மூத்தவென் பாத்திரம்" என ஆபுத்திரன் கூறியதாக முன்னும கூறியிருத்தல்காண்க; ௧௪ஆம் காதை, ௭௭; "அற்றார்க்கொன் றாற்றாதான் செலவ மிகநலம், பெற்றா டமியண் மூத்தற்று." என்பது திருக்குறள், ௧௦௦௭.

௧௪௪. அமரன் அருளால் - கந்திற்பா

படுபழி நீங்கிப் பல்லோர் காப்பட்
கொடியிடை வீதியின் வருவோள் குழன்மேன்
மருதி பொருட்டான் மடிந்தோன் றம்முன்
கருகிய நெஞ்சினன் காமங் காழ்கொளச்
சுரியிரும் பித்தை சூழ்ந்து புறந்தாழ்ந்த
விரிபூ மாலை விரும்பினன் வாங்கித்
தொல்லோர் கூறிய மணமீ தாமென
வெல்லவிழ் தாரோ னிடுவான் வேண்டி
மாலை வாங்க வேறிய செங்கை
நீலக் குஞ்சி நீங்கா தாகலி
னேறிய செங்கை யிழிந்தில திந்தக்
காரிகை பொருட்டெனக் கந்தன் கேட்டுக்
கடுஞ்சினந் திருகி மகன்றுயர் நோக்கான்
மைந்தன் றன்னை வாளா லெறிந்தன
னூழிதோ றூழி யுலகங் காத்து
வாழிய வெங்கோ மன்னவ வென்று
மாதவர் தம்முளோர் மாதவன் கூறலும்
வீயா விழுச்சீர் வேந்தன் கேட்டன
னின்றே யல்ல வென்றெடுத் துரைத்து
நன்றறி மாதவிர் நலம்பல காட்டினி
ரின்று முளதோ விவ்வினை யுரைமென

---

வையிலுள்ள துவதிகனென்னும் தேவனுடைய கருணையால்.

கசரு. படுபழி - மைத்துனன் முறையால் யாரோர் மணவினைக்கு ஒத்தனரென்று ஊர்கூறிய பொய்ப்பழி.

கசரு - கசசு. நாப்பண்வருவோள் - விசாகை.

கசஎ. மருதி - முற்கூறிய பார்ப்பனி மருதி. தம்முன் - தமையன்.

கசஅ. கருகிய நெஞ்சு - இருண்ட நெஞ்சு. காழ்கொள - வயிரங்கொள்ள. காழ்கொளக் கருகிய நெஞ்சினனென்க.

கசகூ. சுரியிரும்பித்தை - சுரிந்தகரிய தன் குடுமியில்.

கரு0. மாலையை விரும்பி வாங்கி.

கருஉ. எல் - விளக்கம். இடுவான் வேண்டி - இடவிரும்பி.

கருங. வாங்க-கொள்ளுதற்பொருட்டு.

கருச. நீலக்குஞ்சி - கருமையையுடைய குடுமி; நீலம் - கருமை; "நீல யானை மன்னவன்" என்பது சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், கக௯.

கருங - கருச. கை நீங்காதாகலின்.

கருரு - கருசு. விசாகைக்குச் சூட்டுதற்பொருட்டு மாலைவாங்குதற்கு ஏறிய கை குஞ்சியினின்றும் இழிந்திலதென்று கந்தன் கேட்டு.

கருஎ. சினந்திருகி - கோபமுறுகி; "காய்சினந் திருகிய கடுந்திறல் வேனில்" என்பது பெரும்பாணாற்றுப்படை, ௩. நோக்கான் - நோக்கானாய்; இது நோக்கல் நோக்கம்.

கசுஉ. வீயா - மாறாத.

கசுங. 'இன்றேயல்ல' என்று எடுத்துரைத்ததனை இக்காதையில் கக - ம் அடியிற் காண்க.

கசுரு. உரைமென - சொல்லுமென்று அரசன் சொல்ல.

வென்றி நெடுவேல் வேந்தன் கேட்பத்
தீதின் றாக செங்கோல் வேந்தென
மாதவர் தம்முளோர் மாதவ னுரைக்கு
முடிபொரு ளுணர்ந்தோர் முதுநீ ருலகிற்
கடியப் பட்டன வைந்துள வவற்றிற்
கள்ளும் பொய்யுங் களவுங் கொலையுந்
தள்ளா தாகுங் காமந் தம்பா
லாங்கது கடிந்தோ ரல்லவை கடிந்தோரென
நீங்கின ரன்றே நிறைதவ மாக்க
ணீங்கா ரன்றே நீணில வேந்தே
தாங்கா நரகந் தன்னிடை யுழப்போர்
சேயரி நெடுங்கட் சித்திரா பதிமகள்
காதல னுற்ற கடுந்துயர் பொறாஅண்
மாதவி மாதவர் பள்ளியு ளடைந்தனண்
மற்றவள் பெற்ற மணிமே கலைதான்
முற்றா முலையினண் முதிரா கிளவியள்
செய்குவன் றவமெனச் சிற்றிலும் பேரிலு
மையங் கொண்டுண் டம்பல மடைந்தன
ளாங்கவ ளவ்வியல் பினளே யாயினு
நீங்கா னவளை நிழல்போல யாங்கணும்

௧௬௭. வேந்தே, செங்கோல் தீதின்றாகவென்று.
௧௬௮. உரைக்கும் - உரைப்பான்.
௧௬௯. முடிபொருள் உணர்ந்தோர் - பரமார்த்தத்தத்துவஞானிகள்.
௧௭௦. கடியப்பட்டன - விலக்கப்பட்டன. ஐந்தாவன, கள், பொய், களவு, கொலை, காமமென்பன; "கள்ளும பொய்யுங் காமமுங் கொலையு, முள்ளக் களவுமென் றுரவோர் துறந்தவை" என்பர் பின்னும்; ௨௪ - ம் காதை, ௭௭ - ௮. அவற்றில் - அவ்வைந்தனுள்ளே.
௧௭௧ - ௧௭௨. காமம், கள்முதலிய நான்கினையும் நீக்காது; என்றது, காமமுடையோர் மற்றை நான்கு குற்றத்தையும் உடையராவரென்றபடி.
௧௭௩. ஆங்கது - அத்தன்மையதாகிய காமத்தை. அல்லவை கடிந்தோர் - அலாதகள்முதலியவற்றையுங் கடிந்தோராவார். 'அவைகடிந்தோரெ' என்றும் பாடம்.
௧௭௪. நீங்கினரன்றே - அக்காமத்தை நீங்கினோரே.
௧௭௬. உழப்போர் - வருந்துவோர்.
௧௭௫ - ௧௭௬. நீங்காரே நரகத்தில் துன்பமனுபவிப்போராவார்.
மேல் உதயகுமரன்செய்திகூறப்படும்.
௧௭௮. காதலனுற்ற கடுந்துயர்-கோவலன் கொலையுண்டிறந்தது.
௧௭௯. மாதவர்பள்ளியுள் - சங்கத்தாரான அறவணவடிகளுடைய உறைவிடத்தில். 'அடைதலும்' என்றும் பாடம்.
௧௭௭ - ௧௭௯. மகளாகியமாதவி பள்ளியுளடைந்தனள்.
௧௮௦. அவள் - மாதவி.
௧௮௨. தவம் செய்குவனென்று.
௧௮௩. ஐயம் - பிச்சை. அம்பலம் - உலகவறவி.
௧௮௫. அவளை நிழல்போல் யாங்கணும் நீங்கானாய்.

காரிகை பொருட்டாற் காமங் காழ்கொள
வாரிரு ளஞ்சா னம்பல மடைந்தனன்
காயசண் டிகைவடி வாயினள் காரிகை
காயசண் டிகையு மாங்குள ளாதலிற்
காயசண் டிகைதன் கணவ னாகிய
வாய்வாள் விஞ்சைய னொருவன் றோன்றி
யீங்கிவள் பொருட்டால் வந்தன னிவனென
வாங்கவன் றீவினை யுருத்த தாகலின்
மதிமருள் வெண்குடை மன்ன நின்மக
னுதய குமர னொழியா னாக
வாங்கவ டன்னை யம்பலத் தேற்றி
யோங்கிருள் யாமத் திவனையாங் குய்த்துக்
காயசண் டிகைதன் கணவ னாகிய
வாய்வாள் விஞ்சையன் றனனையுங் கூஉய்
விஞ்சை மகள்பா லிவன்வந் தனனென
வஞ்ச விஞ்சையன் மனத்தையுங் கலக்கி
யாங்கவன் றன்கை வாளா லம்பலத்
தீங்கிவன் றன்னை யெறிந்ததென் றேத்தி
மாதவர் தமமுளோர் மாதவ னுரைத்தலுஞ்
சோழிக வேனாதி தன்முக நோக்கி

கஅசு. காரிகைபொருட்டு - மணிமேகலைபொருட்டு. காழ்கொள - முற்ற.

கஅஎ. அஞ்சானாய அமபலமடைந்தனன்.

கஅஅ. காரிகை - மணிமேகலை.

கஅகூ. உளள் - உள்ளாள்.

ககூக. வாய்வாள் - தப்பாத வாள்.

ககூஉ. இவள்பொருட்டு - காயசண்டிகையின பொருட்டு.

ககூரு. அவன - உதயகுமரன்; காஞ்சனனுமாம.

ககூச. மருள் - உவமவுருபு. 'மதிமருணெடுங்குடை, என்றும பாடம்.

ககூசு. அவளதனனை - மணிமேகலையை.

ககூஎ. இவனை - உதயகுமரனை.

ககூகூ. கூஉய் - அழைதது.

௨00. விஞ்சைமகள் - காயசண்டிகை.

௨0ங. எறிநதது -(அதீவினை) வெட்டியது.

௨0ரு. ஏனாதியென்பது வேந்தனாற் கொடுக்கப்படும் பட்டப்பெயர்களுளொன்று; இதனை, தொல்காப்பியம், புறததிணையியல, [illegible]அ - ம சூததிரததில் 'யாராயம் பெற்ற நெடுமொழி யானும்' என்பதற்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் எழுதிய வுரையாலும, அதில "போர்க்கடலாற்றும் புரவிதேர்ப் பல்படைக்குக, கார்க்கடல பெற்ற கரையனறோ - போர்க்கெல்லாந், தானாதி யாகிய தார்வேந்தன் மோதிரஞ்சேர், ரேனாதிப் பட்டத்திவன்" என்று அவர் எடுததுக்காட்டிய பழம்பாட்டாலுமுணர்க; பெரியபுராணததுக கூறப்பட்டுள்ள திருததொண்டர்களுள் ஒருவர்கு ஏனாதிநாதநாயனாரென்ற திருநாமம் இதுபற்றியே வந்த குடிப்பெயாபோலும்; சீவகசிந்தாமணி, மண்மகளிலம்பகத்தில் "செம்பொனீண்முடி" என்னுங்கவியில் 'ஆழி தொட்டான்' என்பதறகு 'ஏனாதிமோதிரஞசெறித்த சேனாபதி' என்று ஆசிரியர் நச்சினார்க்கினியரெழுதி யிருககின்

யான்செயற் பால திளங்கோன் றன்னைத்
தான்செய் ததனாற் றகவிலன் விஞ்சையன்
மாதவர் நோன்பு மடவார் கற்புங்
காவலன் காவ லின்றெனி னின்றால்
மகனை முறைசெய்த மன்னவன் வழியோர்
துயர்வினை யாளன் றோன்றின னென்பது
வேந்தர் தஞ்செவி யுறுவதன் முன்னம்
மீங்கிவன் றன்னையு மேமத் தேற்றிக்
கணிகை மகளையுங் காவல்செய் கென்றனன்
அணிகிளர் நெடுமுடி யரசாள் வேந்தென.

சிறைசெய்காதை முற்றிற்று.

---

றனர். மேற்கூறியவாற்றாலும், இக்காதையின் தலைப்பில் 'மந்திரியாகிய சோழிகவேனாதி' என்றிருத்தாலும் 'சோழிகவேனாதி' என்பதற்குச் சோழனுடைய (ஏனாதிமோதிரஞ்செறித்த) சேனாபதியும மந்திரியுமாகிய ஒருவனென்று பொருள்கொள்ளுதல பொருத்தமுடைத்து.

உ0௭. விஞ்சையன் தகவிலன் - காஞ்சனன் தகுதியில்லாதவனாயினான்.

உ0௬ - உ0௭. யான் செயற்பாலதைத் தான் செய்ததனாலெனக.

உ0௮ - உ௧௧. காவலின்றெனின், நோன்புமின்றாம், கற்புமின்றாம்; "அருந்திற லரசர் முறைசெயி னல்லது, பெரும்பெயர்ப் பெண்டிர்க்குக் கற்புச் சிறவாது" என்பது சிலப்பதிகாரம், நடுகற் காதை, உ0௭ - உ0௮.

உ௧0. மகனை முறைசெய்த மன்னவன் - கன்றையிழந்த பசுவின் துயரைத் தீர்த்தற்குத் தன்மகனைக்கிடத்தி அவன் மார்பில் உருளைசெல்லும்படி தேரையூர்ந்த மனுவேந்தன்; இதனைப் பின்வருவனவற்றாலுணர்க; "வாயிற் கடைமணி நடுநா நடுங்க, வாவின் கடைமணி யுகுநீர் நெஞ்சுசுடத் தான்றன், அரும்பெறற் புதல்வனை யாழியின் மடித்தோன், பெரும்பெயர்ப் புகாரென பதியே" (வழக்குரைகாதை, ௫௩ - ௫௬) எனவும, "கறவை முறைசெய்த காவலன்காணம மானை, காவலன பூம்புகார் பாடேலோ ரம்மானை" (வாழ்த்துக்காதை, "புறவு நிறை"—) எனவும வருவன சிலப்பதிகாரம்; "மருளும் பசுவொன்றின மம மர்நோய் தீர, வருமாருந் திருத்தேருரவோன" என்பது குலோத்துங்கசோழனுலா. இக்கதையின் விரிவைப் பெரிய புராணத்தில் திருவாரூர்ச் சிறப்பிற்காணக.

உ௧௧ துயர்வினை - தீவினை.

உ௧உ - உ௧௩. முன்னம் எற்றி

உ௧௪. கணிகைமகள் - மணிமேகலை

௧ - உ௧௫ மண்டிலம் சிப்பப் புரிந்தோர் உரைப்பக்கேட்டுமாதவரெல்லாம மணிமேகலையைநோக்கி 'இதனை நீயறிவதுமுண்டோ' என, அவள் உரைத்தலும், அவளைச் சிறுவனொடு வேறிடத்தொளித்து இசைத்துச்சென்று குறுகி ஓர் மாதவனுரைத்தலும், கேட்டு வேந்தன் 'உரையும்' என, ஓர்மாதவனுரைக்கும்; அங்ஙனமுரைககுமாதவன் எதிருரைத்தலும், வேந்து காவல்செய்கென றனனென வினைமுடிவுசெய்க.

## இருபத்துமூன்றுவது

# சிறைவிடுகாதை.

[இருபத்துமூன்றுவது மணிமேகலை சிறைவீடுசெய்த இராசமாதேவி குறைகொண்டிரப்பச் சீலங்கோடுத்தபாட்டு.]

மன்னவ னருளால் வாசந் தவையெனு
நன்னெடுங் கூந்த னரைமூ தாட்டி
யாசற் காயினுங் குமரற் காயினுந்
திருநிலக் கிழமைத் தேவியர்க் காயினுங்
கட்டுரை விரித்துங் கற்றவை பகர்ந்தும்
பட்டவை துடைக்கும் பயங்கெழு மொழியின
ளிலங்கரி நெடுங்க ணிராசமா தேவி
கலங்கஞ ரொழியக் கடிதுசென் றெய்தி
யழுதடி வீழா தாயிடை தன்னைத்
தொழுதுமுன் னின்று தோன்ற வாழ்த்திக்
கொற்றங் கொண்டு குடிபுறங் காத்துச்
செற்றந் தெவ்வர் தேயந்தம தாக்கியுந்
தருப்பையிற் கிடத்தி வாளிற் போழ்ந்து

௨. நரைக்கூந்தல - வெண்மையையு[டை]ய கூந்தல்.

௩ - ௪. ஆயினுமென்பது விகற்பப் பொருளைத் தருவதோ ரிடைசொல்; [எ]ண்ணிடைச்சொல்லுமாம்.

௫. கட்டுரை - பொருள்பொதிந்த சொல்.

௬. பட்டவை - உண்டான து[ன்]பங்கள். 'பட்டது துடைக்கும' என்றும் பாடம். பயம் - பிரயோசனம்.

௫ - ௬. விரித்தும் பகர்ந்தும் துடை[க்]கு மொழியினள்.

௮. கலங்கஞர் - கலங்குதற்குக் காரணமாகிய துன்பம். கடிதுசென்று விரை[வா]ய்ச்சென்று.

௧ - ௮. வாசந்தவையெனுமூதாட்டி, [மொ]ழியினள், தேவியது அஞரொழிய மன்னவனருளாற் கடிதுசென் றெய்தி யென்க.

௯. 'அழுதன ளடிவீழ்ந்து' என்றும் பாடம்.

௧௦. தொழுது - அஞ்சலிசெய்து.

௧௧. கொற்றங்கொண்டு - வெற்றிகொண்டு; "கொற்றங் கொண்டு கோவினி தோச்சென" என்பது பெருங்கதை, இலாவாணகாண்டம், மண்ணு நீராட்டியது. குடிபுறங்காத்து - குடிகளைப் பிறர் நலியாமற் பாதுகாத்து; "குடிபுறங் காத்தோம்பி" என்பது திருக்குறள்,௫௪௪.

௧௨. செற்றம் - பகைமை நெடுங்காலம் நிகழ்வது. தெவ்வர் - பகைவர். 'செற்ற தெவ்வர்' என்றும் பாடம்.

௧௩. தருப்பையிற்கிடத்தி - பரப்பிய தருப்பைப்புல்லிற் கிடத்தி. போழ்ந்து-பிளந்து.

செருப்புகன் மன்னர் செல்வுழிச் செல்கென
மூத்து விளிதலிக் குடிப்பிறந் தோர்க்கு
நாப்புடை பெயராது நாணுத்தக வுடைத்தே
தன்மண் காத்தன்று பிறர்மண் கொண்டன
றென்னெனப் படுமோ நின்மகன் மடிந்தது
மன்பதை காக்கு மன்னவன் றன்முன்
றுன்பங் கொள்ளே லென்றவள் போயபின்
கையாற் றுள்ளங் கரந்தகத் தடக்கிப்
பொய்யாற் றொழுக்கங் கொண்டுபுற மறைத்து
வஞ்சஞ் செய்குவன் மணிமே கலையையென்
றஞ்சி லோதி யரசனுக் கொருநாட்
பிறர்பின் செல்லாப் பிக்குணிக் கோலத்

௧௪. செருப்புகல் மன்னர் - போரின்கண்ணே புகுதுப் போர்செய்து வீழ்தலையுடைய அரசர், செல்வழிச் செல்கென - செல்லுமுலகத்திலே செல்கவென்று அந்தணா கூறுமவண்ணம்.

௧௫. மூத்துவிளிதல - மூப்புற்று இறத்தல. இக்குடி - சோழபரமபரை.

௧௩ - ௧௫. போரிலிறவாமல் முதுமையுற்று நோயால் இறந்த அரசருடம்பை அந்தணர் தருப்பைப்புல்லிற்கிடத்தி, தமது ஆண்மையேற்றக்கோடாக யுத்தத்திலேயிறந்த அரசர்செல்லும் உலகத்திலே இவர்செல்கவென்று அவ்வுடம்பைவாளாற்பிளந்து அடக்குதல் மரபாதலின், இங்ஙனங்கூறினர்; இப்படியே, "ஒடன் மரீஇய பீடின் மன்னர், நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇக், காதன் மறந்தவர் தீதுமருங் கறுமார், அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர், திறம்புரி பசும்புற் பரப்பினர் கிடப்பி, மறங்கந் தாக நல்லமர் வீழ்ந்த, நீள்கழன் மறவர் செல்வுழிச் செல்கென, வாள்போழ்ந் தடக்கலு முய்ந்தனர்" எனப் புறநானூற்றில், ௯௩-ம் பாட்டில் வந்திருத்தல் காண்க.

௧௬. நாப் புடைபெயராது - இதனைக் கூறுதற்கு எனது நாப் புடைபெயரமாட்டாது நாணுத்தகவுடைத்து - நாணுந்தகுதியையுடைத்து; "மலைத்தனை யென்பது நாணுத்தகவுடைத்தே" என்பது புறநானூறு, ௩௬. 'நாணுத் தகவுடைத்தென' என்றும் பாடம்.

௧௫ - ௧௬. விளிதல் நாணுத்தகவுடைத்து.

௧௫ - ௧௬. தமதாகவியம் மூத்துவிளிதல் இக்குடிப்பிறந்தோர்க்கு நாணுத்தகவுடைத்து.

௧௭ - ௧௮. நின்மகன் மடிந்தது தன் மண் காத்தமையாலன்று; பிறர்மண் கொண்டமையாலுமன்று; காமத்தால், அவ்விறப்பு யாதென்று கூறப்படும்.

௧௯. மன்பதை - உயிர்ப்பன்மை.

௨௦ கொள்ளேல் - கொள்ளாதே. அவள் போயபின் - வாசந்தவைபோனபின்பு

இராசமாதேவி, அரசனையடைந்து மணிமேகலையைச் சிறைமீட்டு உடன்கொண்டுசென்று தன் காவலில்வைத்து வஞ்சித்தல் இனிக்கூறப்படும்.

௨௧. கையாற்றுள்ளங்கரந்து - செயலறவினையுடைய உள்ளத்தைமறைத்து; என்றது புத்திரசோகத்தை வெளிப்படுத்தாமலென்றபடி.

௨௨. பொய்யாற்றொழுக்கங்கொண்டு - பொய்வழிக்கண் ஒழுகுதலைக்கொண்டு. புறமறைத்து - புறத்தே தோன்றாமல் மறைத்து; என்றது மணிமேகலையை வஞ்சித்தற்கெண்ணிய தனது தீயவெண்ணத்தை ஒருவாற்றானும் வெளிப்படுத்தாமலென்றபடி.

௨௩. மணிமேகலையை வஞ்சஞ்செய்குவனென்று கருதி.

௨௪. அஞ்சிலோதி - அழகிய சிலவான கூந்தலையுடைய இராசமாதேவி.

௨௫. கோலத்து - வேடத்தைக்கொண்டு.

தறிவு திரிந்தோ னரசிய குனிலன்
கரும்புடைத் தடக்கைக் காமன் கையற
வரும்பெற லிளமை பெரும்பிறி தாக்கு
மறிவலைப்பட்ட வாயிழை தனக்குச்
௩0 சிறைதக் கன்று செங்கோல் வேந்தெனச்
சிறப்பின் பாலார் மக்க ளல்லார்
மறப்பின் பாலார் மன்னர்க் கென்ப
தறிந்தனை யாயினிவ் வாயிழை தன்னைச்
செறிந்த சிறைநோய் தீர்க்கென் றிறைசொல
௩௫ வென்றோ டிருப்பினு மிருக்கவிவ் விளங்கொடி
தனேறொ டெடுப்பினுந் தகைக்குந ரில்லென்
றநகவ டனைகக்கூஉ யவடன் னோடு
கொங்கவிழ் குழலாள் கோயிலுட் புக்காங்
கறிவு திரித்திவ் வகனக ரெல்லா
௪0 மெறிதரு கோலமயான் செய்குவ லென்றே

உ௬. அறிவுதிரிந்தோன் - அறிவு வேறுபட்ட உதயகுமரன். 'அறவிய திரிந்தோன்' என்றும் பாடம்.

உஎ. கையற - செயலற.

உஅ. இளமை-இளமையை. பெரும்பிறிதாக்கும் பயனபடாது கெடச்செய்த.

உஎ - உஅ. கையறப் பெரும்பிறிதாக குமென்க.

உகூ. தலைப்பட்ட-நேர்பட்ட; முதன்மைப்பட்டவென்றுமாம்.

௩0. தககன்று - தக்கதன்று; விகாரம். வேந்து - அண்மைவிளி. என - என்று இராசமாதேவி சொலல.

உ௯ - ௩0. அஞ்சிலோதி ஒருநாள் அரசனுக்குச் சிறைதக்கனறெனவென்க.

௩க - ௩உ. சிறப்பின்பாலார் மககள் - கல்விமுதலியவிசேடமுடையவர்கள் புதல்வர். அல்லார் மறப்பின்பாலார் - அல்லாதவாகள் மறததற்குரியவா. என்பது - என்று பெரியோர்கூறுதலை; இவ்வடிகளின் கருததது, "உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும், பிற்றை நிலை முனியாது கற்ற னன்றே, பிறப்போ ரன்ன வுடன்வயிற் றுள்ளுஞ், சிறப்பின் பாலாற் றாயு மனந்திரியு, மொருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளு, மூத்தோன்வருக வென்னா தவரு, ளறிவுடை யோனாறரசுஞ் செல்லும், வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளுங், கீழ்ப்பா லொருவன் கற்பின், மேற்பா லொருவனு மவன்கட் படுமே." என்னும் (புறநானூறு, க௮௩.) பாட்டின் பொருளை ஒருவாறு தழுவிவந்திருத்தல்காண்க.

௩௩. ஆயிழை - மணிமேகலை.

௩௪. சிறைநோய் - சிறைத்துன்பம். தீர்க்கென்று - தீர்க்கவென்று. இறை - அரசன்.

௩௬. தன் ஓடு எடுப்பினும் - தனக்குரிய ஓட்டையேந்திப் பிச்சைக்குப் புகுவாளாயினும், தகைக்குநர் இல் - தடுப்பவர்களில்லை; "அணித்தகை யுடம்பு" என்பது சீவகசிந்தாமணி, பதுமையாரிலம்பகம், எ. என்று - என்றுகூறி.

௩எ. அவள்தனைககூஉய் - மணிமேகலையை யழைத்து.

௩அ. குழலாள் - இராசமாதேவி.

௩எ - ௩அ. குழலாள் அவளோடு கோயிலுட்புக்கு.

௩௯. அறிவுதிரித்து - அறிவைமருந்தால் வேறுபடச்செய்து; பித்தாக்கியென்றபடி.

௪0 எறிதருகோலம் - அடிக்குங்கோலத்தை. செய்குவலென்று - இவளுக்குச செய்வேனென்றுகருதி.

மயற்பகை யூட்ட மறுபிறப் புணர்ந்தா
ளயர்ப்பது செய்யா வறிவின ளாகக்
கல்லா விளைஞ னொருவனைக் கூஉய்
வல்லாங்குச் செய்து மணிமே கலைதன்
னிணைவளை ரிளமுலை யேந்தெழி லாகத்துப்
புணர்குறி செய்து பொருந்தின ளென்னும்
பான்மைக் கட்டுரை பலர்க்குரை யென்றே
காணம் பலவுங் கைந்நிறை கொடுப்ப
வாங்கவன் சென்றவ் வாயிழை யிருந்த
பாங்கி லொருசிறைப் பாடுசென் றணைதலுந்
தேவி வஞ்ச மிதுவெனத் தெளிந்து
நாவியன் மந்திர நடுங்கா தோதி
யாண்மைக் கோலத் தாயிழை யிருப்பக்
காணம் பெற்றோன் கடுந்துய ரெய்தி
யரச ருரிமையி லாடவ ரணுகார்

---

௪௩. மயற்பகையூட்ட - பிசகேறுதற்குக் காரணமாகிய மருந்தையூட்ட; "வஞ்சமுண்டு மயற்பகை யுற்றோ" என்பது சிலப்பதிகாரம், இந்திரவிழவூரெடுத்தகாதை, ௧௨௨. உணர்ந்தாள் - மணிமேகலை.

௪௪. அயர்ப்பது - மறப்பது.

௪௩-௪௪. "மயற்பகை யூட்டினை மறுபிறப் புணர்ந்தே, னயர்ப்பது செய்யா வறிவினே னாயினேன்" என்று இக்காதையிலேயே பின்பு வருதல்காண்க; ௩௨ - ௩௩. உணர்ந்தாள் அறிவினளாக.

௪௫. கூஉய் - அழைத்து.

௪௬. வல்லாங்குச்செய்து - வல்லபடி செய்து; "வடியா நாவின் வல்லாங்குப் பாடி" என்பது புறநானூறு, ௪௭.

௪௮. காணம் - பழங்காசு; இதனை, சீவகசிந்தாமணி, குணமாலையாரிலம்பகம், ௨௬௭ - ம் கவியுரையிற்காண்க. கைந்நிறைகொடுப்ப - கைந்நிறையக்கொடுப்ப; நிறைய - விகாரம்; "நிலனெளி பரந்த வன்றே" என்பதில் 'நெளி' என்பதுபோல; இது சீவகசிந்தாமணி, கோவிந்தையாரிலம்பகம், ௨௫.

௪௫ - ௪௭. ஒருவனைக்கூஉய் 'செய்து புணர்குறிசெய்து பொருந்தினளென்னும் கட்டுரையைப் பலர்க்கும் உரை' என்றுகூறிக் காணம்பலவும் கொடுப்ப வென்க.

௪௯. ஆயிழை - மணிமேகலை.

௫௦. பாங்கில ஒருசிறைப்பாடு - அழகில்லாத ஒரு பக்கத்தினிடத்தே; பக்கத்துள்ள ஒரு சாவடியிடத்தென்றுமாம்.

௪௯ - ௫௦. அவன்சென்று பாடுசென்றணைதலுமென்க.

௫௧. தேவி - இராசமாதேவி. இது - இவ்விளைஞன் வந்தது.

௫௨. நாவியல் மந்திரம் - நாப்புடை பெயருமளவிலே உச்சரிக்கப்படும் மந்திரம்; என்றது வேற்றுருவெய்துவிக்கு மந்திரத்தை, "ஆறெழுத் தடக்கிய வருமறைக் கேள்வி, நாவியன் மருங்கி னவிலப் பாடி" என்பது திருமுருகாற்றுப்படை, ௧௮௬ - ௧௮௭.

௫௧ - ௫௩. ஆயிழை இது தேவிவஞ்சமெனத் தெளிந்து மந்திரத்தையோதிக் கோலத்துடனிருப்பவென்க.

௫௫. அரசருரிமையில் ஆடவரணுகார் - அரசருடைய தேவிமாரிருக்கும் அந்தப்புரத்தில் ஆண்மக்கள் குறுகார்; "ஆடவர் குறுகா வருங்கடி வரைப்பின்" என்பது நெடுநல்வாடை, ௧௦௭. அந்தப

நிரயக் கொடுமக ணினைப்பறி யேனென்
றகநகர் கைவிட் டாங்கவன் போயபின்
மகனைநோய் செய்தாளை வைப்ப தென்னென்
றுய்யா நோயி னூழொழிந் தனளெனப்
பொய்ந்நோய் காட்டிப் புழுக்கறை யடைப்ப
வூழொழி மந்திர முடைமையி னந்த
வாணுதன் மேனி வருந்தா திருப்ப
வையென விம்மி யாயிழை நடுங்கிச்
செய்தவத் தாட்டியைச் சிறுமை செய்தே
னென்மகற் குற்ற விடுக்கண் பொறாது
பொன்னே ரனையாய் பொறுக்கென் றவடொழ
நீல பதிதன் வயிற்றிற் றோன்றிய
வேலங் கமழ்தா ரிராகுலன் றன்னை
யழற்க ணாக மாருயி ருண்ண

---

புரத்தை, 'குழைமுகப் புரிசை' என்பர் திருத்தக்கதேவர்; சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், ௨௪௬.

௫௬. நரகத்தையடைதற்குரிய கொடுமையையுடைய இவளது தீயவெண்ணத்தை நானறிந்திலேனெனக்கருதி; இராசமாதேவி விபரீசிக்குங்கருத்துடையாளென்று அவ்விளைஞன கருதினனபோலும் 'நினைப்பதறியேனெனறு' என்றும் பாடம்.

௫௭. அகநகர் - அந்தப்புரம்.

௫௪ - ௫௭. காணமபெற்றோன், துயரெய்தி அறியேனென்று கைவிட்டுப் போயபினென்க.

௪௫ - ௫௭. உரு-ம காதை, ௯௪ - ௯௫.

௫௮. மகனைநோய்செய்தாளை-உதயகுமரனுக்குக்காமநோயை உணடாக்கிக்கொல்லுவித்த இவளை, வைப்பது என்னென்று-உயிருடன்வைத்தல நமதன்பிற்கு யாதுபயனென்று இராசமாதேவி கருதி.

௫௯. உய்யாநோயின் - உயிரைத்தாங்கியிராமைக்குக் காரணமாகிய நோயினால்.

௬௰. புழுக்கறை - புழுங்கச்செய்யும் அறை; "புழுக்கறைப் பட்டோர் போன்று" என்றார் முன்னும்; ரு-ம் காதை, ௯௫.

௫௮-௬௰. (இராசமாதேவி) வைப்பதென்னென்று காட்டி அடைப்பவென்க.

௬௨. வாணுதல் - மணிமேகலை.

௫௮ - ௬௨:—உரு-ம் காதை, ௯௬ - ௯௭.

௬௩. ஐயெனவிம்மி - விரையப் பொருமி; "ஐயென வளைப்ப" (கோவிந்தையாரிலம்பகம், ௬௰) எனவும், "மோதிரந் தொட் டையென" (குணமாலையாரிலம்பகம், ௧௧௫) எனவும் வருவன சீவகசிந்தாமணி. ஆயிழை - இராசமாதேவி.

௬௪. செய்தவத்தாட்டியை - மணிமேகலைக்கு; ஐ - உருபுமயக்கம். சிறுமை - குற்றம்; என்றது மயற்பகையூட்டியது முதலிய மூன்றனையும்.

௬௪ - ௬௫. பொருது செய்தேனென்க.

௬௬. பொன்னேரனையாய்-திருமகளின்மறுதலைபோல்வாய்; திருமகளுக்குநேராகிய அத்தன்மையையுடையாயெனினுமமையும்; இப்படியே, "கோளரிக் குங்கிரன்னூர்" (திருச்சிற்றம்பலக்கோவையார், ௨௰௫) என்று வந்திருத்தல் காணக.— ௨-ம காதை, ௧௬. அவள் - இராசமாதேவி.

மேலவருவன மணிமேகலைகூற்று.

௬௭ - ௬௮. தோன்றிய இராகுலன்றன்னை.

௬௯. அழற்கண்ணாகம் - திட்டிவிடமென்னும்பாம்பு. அழல்-விடம்; "ஐந்தலை யரவின் சீற்றத் தாரழல் குளிக்க

விழித்த லாற்றே னென்னுயிர் சுடுநாள்
யாங்கிருந் தழுதனை யிளங்கோன் றனக்குப்
பூங்கொடி நல்லாய் பொருந்தா து செய்தனை
வுடற்கழு தனையோ வுயிர்க்கழு தனையோ
யுடற்கழு தனையே லுன்மகன் றன்னை
யெடுத்துப் புறங்காட் டிட்டனர் யாரே
யுயிர்க்கழு தனையே லுயிர்புகும் புக்கில்
செயப்பாட்டு வினையாற் றெரிந்துணர் வரிய
தவ்வுயிர்க் கன்பினை யாயி னாய்தொடி
யெவ்வுயிர்க் காயினு மிரங்கல் வேண்டும்
மற்றுன் மகனை மாபெருந் தேவி
செற்ற கள்வன் செய்தது கேளாய்
மடைக்கலஞ் சிதைய வீழ்ந்த மடையனை
யுடற்றுணி செய்தாங் குருத்தெழும் வல்வினை
நஞ்சுவிழி யரவி னல்லுயிர் வாங்கி
விஞ்சையன் வாளால் வீட்டிய தன்றே

---

னூற்றார்" என்பது **சீவகசிந்தாமணி**, காந்தருவதத்தையாரிலம்பகம், உருச; ".அழல்வாய் நாகத் தாரெயிறழுந்தினர்" என்பது **சிலப்பதிகாரம்**, இந்திரவிழவூ ரெடுத்தகாதை, கஉச. "நஞ்சுவிழி யரவு என்ற இப்பாம்பின்பெயர் இக்காதையி லேயே பின்னும் வருதல்காண்க; அச-ம் அடி.

எ0. விழித்தல்-உயிர்வாழ்தல்; நாகத தின் றொழிலாக்கினுமமையும். 'இழித தலாற்றேன்' என்றும் பாடம்.

எக. இளங்கோன்றனக்கு யாங்கிருந் தழுதனை; அழுதிலாயென்றபடி.

எரு. புறங்காடு - மயானம். 'ஈமப் புறங்காடு' என்றும் பாடம்.

எசு. புக்கில் - புகுமிடமாகிய வுடம்பு; "நோக்கார்கொ லொறுப்பதோர் புகலில்" (**நாலடியார்**, தூய்தன்மை, ச.) என்பதில் 'புக்கில்' என்பது உடம் பென்னும்பொருளில் வந்திருத்தல் காண்க.

எஎ. வினையென்றது நல்வினை தீவினையென்னுமிரண்டையும். 'செயற்பாட்டு வினை' என்றும் பாடம்.

எசு - எஎ. வினையால் உயிர்புகும்புக்கில் தெரிந்துணர்வரியதென்க.

எஅ. அன்பினையாயின் - அன்பினையுடையாயாயின்; ஆய்தொடி - விளி.

எகூ. எவ்வுயிர்க்காயினும் - எவ்வுயிர்க்கும்.

அ0. மாபெருந்தேவி-இராசமாதேவி; விளி.

அக. செற்றகள்வன் - கோபித்த காஞ்சனன். செய்தது கேளாய - கொலை செய்ததற்குக் காரணமான தீவினையைக் கேள்.

அஉ. மடைக்கலம் - சோற்றுப்பாத்திரம். மடையன் - சோறுசமைப்போன்.

அங. உடம்பைத் துண்டமாகவெட்டினமையால் தோன்றியெழுந்த வலிய தீவினை. 'உருத்தெழு மல்வினை' என்றும 'உருத்தெழு மெய்வினை' என்றும், 'உருத்தெழு பாவம்' என்றும் பாடம.

அச. அரவின் - அரவினால. நல்லுயிர் வாங்கியென்றது முற்பிறப்பின்செய்தியை.

அரு. வீட்டியது - கொன்றது; வீழ்த்தியதென்பதன்மரூஉவுமாம்.

அங-அரு. வினை முற்பிறப்பில உயிரை அரவின்வாங்கி இப்பிறப்பில விஞ்சையன்வாளால் வீட்டியது

யாங்கறிந் தனையோ வீங்கிது நீயெனிற்
பூங்கொடி நல்லாய் புகுந்த திதுவென
மொய்ம்மலர்ப் பூம்பொழில் புக்கது முதலாத்
தெய்வக் கட்டுரை தெளிந்ததை யீறா
வுற்றதை யெல்லா மொழிவின் றுரைத்து
மற்று முரைசெயு மணிமே கலைதான்
மயற்பகை யூட்டினை மறுபிறப் புணர்ந்தே
னயர்ப்பது செய்யா வறிவினே னாயினேன்
கல்லாக் கயவன் காரிருட் டான்வர
நல்லா யாணுரு நான்கொண் டிருந்தே
னாமொழி மந்திர முடைமையி னன்றோ
மாணிழை செய்த வஞ்சம் பிழைத்த
தந்தாரு சேறலு மயலுருக் கோடலுஞ்
சிந்தையிற் கொண்டிலேன் சென்ற பிறவியிற்
காதலற் பயந்தோய் கடுந்துயர் களைந்து
தீதுறு வெவ்வினை தீர்ப்பது பொருட்டாற்
றையா லுன்றன் றடுமாற் றவலத்
தெய்யா மையறீர்ந் தின்னுரை கேளா

---

அசு. இது - இச்செய்தியை.

*அஎ. புகுந்தது இதுவென - சம்பவித்தது இதுவென்று.

அஅ. பொழில - உவவனம்.

அகூ. தெய்வககட்டுரை-கந்திற்பாவை த்தெய்வங் கூறிய பொருள் பொதிந்த சொல்.

கூ0. ஒழிவின்று - தப்பாமல.

அஎ - கூ0. இதுவெனவுரைததென்க.

கூக. மணிமேகலை பின்னும் சொல்லுவாள்.

கூஉ. மயற்பகை - பித்தேறுதற்குக்காரணமாகிய மருந்து.

கூரு. அயர்ப்பது - மறப்பது.

கூஉ - கூரு. "மயற்பகை யூட்ட மறுபிறப் புணர்ந்தா, ளயர்ப்பது செய்யா வறிவின ளாக" என்று இப்படியே இக்காதையில் முன்னும் வந்திருத்தல்காண்க; சக - சஉ.

கூச. கயவன் - கீழ்மகன்; கொடியவனுமாம். இருள் - இருளில்.

கூரு. நான் ஆணுருக்கொண்டிருந்தேன்.

கூச - கூரு:—உரு - ம் காதை, சரு - ருஎ.

கூசு. 'உடைமையி னன்றே' என்றும் பாடம்.

கூஎ. [illegible]ஞ்சம் - ஊணொழிந்தனளென்று பொய்ந்நோய்காட்டிப் புழுக்கறையடைத்தது. பிழைத்தது - தப்பியது.

கூசு-கூஎ. மந்திரமுடைமையினன்றோ வஞ்சம்பிழைத்தது; உரு-ம் காதை, ருஅ - சுஉ.

கூஅ. அயலுருக்கோடல் - வேற்றுருவங்கொள்ளல்.

கூகூ - க00. போனபிறப்பில் எனக்குக் கணவனாயிருந்தோனை இப்பிறப்பிற் பெற்றோய்.

கூஅ - க0க. உனது துயரைக்களைந்து வினையைத் தீர்த்தற்பொருட்டே சேறலும் கோடலும் சிந்தையிற் கொண்டிலேன்.

க0உ. தையால் - விளி.

க0உ - க0ரு. தடுமாற்றவலத்தெய்யாமையல் - தடுமாறுதற்குக் காரணமாகிய வருத்தத்தைச்செய்யும் அறியாமையாகி

யாள்பவர் கலக்குற மயங்கிய நன்னாட்டுக்
காருக மடந்தை கணவனுங் கைவிட
வீன்ற குழவியொடு தான்வே றாகி
மான்றோர் திசைபோய் வரையாள வாழ்வுழிப்
புதல்வன் றன்னையோர் புரிநூன் மார்பன்
பதியோ ரறியாப் பான்மையின் வளர்க்க
வாங்கப் புதல்வ னவடிற மறியான்
றான்புணர்ந் தறிந்துபின் றன்னுயிர் நீத்தது
நீர்நசை வேட்கையி னெடுங்கட முழலுஞ்
சூன்முதிர் மடமான் வயிறுகிழித் தோடக்
கான வேட்டுவன் கடுங்கணை துரப்ப
மான்மறி விழுந்தது கண்டு மனமயங்கிப்
பயிர்க்குரல் கேட்டதன் பான்மைய னாகி
யுயிர்ப்பொடு செங்க ணுகுத்த நீர்கண்

---

யமயக்கம்; மையல் - செல்வச்செருக்குமாம்; "மையன்மத யானைநிரை மன்னன்" என்பது சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையாரிலம்பகம், கஎ.

மேல், காமம், கொலை, கள், பொய், களவு ஆகிய இவ்வைந்தும் நீக்கற்பாலன வென்று இராசமாதேவிக்கு மணிமேகலை உபதேசித்தல் முதலியன கூறப்படும்.

க0௪. ஆள்பவர்கலக்குற - அரசர் கொடுங்கோல் செலுத்துதலால். மயங்கிய நன்னாட்டு - யாவரும் தத்தம் நிலைதடுமாறிய நல்லநாட்டில்.

க0ரு. காருகமடந்தை - இல்லறவொழுக்கினளாகியவொருத்தி; நெய்வோர் குலத்துப் பிறந்த ஒருத்தியென்றுமாம். கைவிட - துறக்க.

க0௬. குழவியும் தானும் வெவ்வேறிடத்துப் பிரிவுற்று.

க0எ. மான்று - மயங்கி. வரையாள் - தன்னலம் விலைகொடுப்பார் யாவர்க்கும் விற்பதல்லது அதற்கு ஆவார் ஆகாதாரென்னும் நியதியில்லாளாய்.

க0௪ - க0எ. நாட்டிற் காருகமடந்தை கணவன்கைவிடுதலால் வேறாகி மான்று போய் வரையாளாய் வாழ்வுழியென்க. இல்லறவொழுக்கினளாகிய இவள் கற்பொழிந்து வரைவின்றி வாழ்தற்கு அரசன் கொடுங்கோன்மை காரணமாதலின், 'ஆள்பவர் கலக்குற' என்பது கூறப்பட்டது; "மாதவர் நோன்பு மடவார் கற்புங், காவலன் காவ லின்றெனி லின்றால்" என்று இந்நூலிலேயே இக்கருத்து முன்பு வந்திருத்தல் காண்க; உஉ-ம் காதை, உ0அ - உ0௯.

க0அ - க0௯. புரிநூன்மார்பன புதல்வன்றன்னை வளர்க்க.

க௧0. ஆங்கப்புதல்வனை - அங்ஙனம் வளர்க்கப்பட்டபுதல்வனை; அவள்திறம் - அவள் தன்னுடைய தாயென்னுந்தன்மையை.

க௧௧. பின்னறிந்தென்க.

க௧௨. நீர்நசைவேட்கையின் - நீரை நச்சிய விருப்பத்தால்; நசைவேட்கை - வினைத்தொகை; "நின்னசைவேட்கையி னிரவலர் வருவதை" என்பது புறநானூறு, ௯. கடம் - காடு.

க௧௩. சூல் - கருப்பம்.

க௧௪. வேட்டுவனை - வேடன். துரப்ப - செலுத்த.

க௧ரு. மான்மறி - பெண்மான்; மான்குட்டியுமாம்.

க௧௬. பயிர்க்குரல் - பயிராகியகுரல்; பயிர் - மிருகங்களுள் ஒன்றை மற்றொன்று அழைக்கும் அழைக்குறிப்பு; "மடமான் றெந்தை பிணைபயி ரழைப்பின" என்பது புறநானூறு, க௩௪. அதன் பான்மையனாகி - அதன் பக்கத்தோனாய்.

டோட்டி யெய்தோ ஞெருயிர் துறந்ததுங்
கேட்டு மறிதியோ வாட்டடங் கண்ணி
கடாஅ யானைமுன் கட்கா முற்றோர்
விடாஅது சென்றதன் வெண்கோட்டு வீழ்வ
துண்ட கள்ளி னுறுசெருக் காவது
கண்டு மறிதியோ காரிகை நல்லாய்
பொய்யாற் றொழுக்கம் பொருளெனக் கொண்டோர்
கையாற் றவலங் கடந்ததுமுண்டோ
களவேர் வாழ்க்கைய ருறூஉங் கடுந்துய
ரிளவேய்த் தோளாய்க் கிதுவென வேண்டா
மன்பே ருலகத்து வாழ்வோர்க் கிங்கிவை
துன்பந் தருவன துறக்கல் வேண்டுங்
கற்ற கல்வி யன்றாற் காரிகை
செற்றஞ் செறுத்தோர் முற்ற வுணர்ந்தோர்
மல்லன்மா ஞாலத்து வாழ்வோ ரென்போ
ரல்லன் மாக்கட் கில்லது நிரப்புநர்
திருந்தே ரெலவனை செல்லுல கறிந்தோர்
வருந்தி வந்தோ ரரும்பசி களைந்தோர்

கசஅ. ஒட்டியெய்தோன - வேட்டுவன்; சுட்டு. 'ஒட்டியெயதோன்' என்றும் பாடம்.

கககக-கககூ. நீததுதும் துறநததும் கேட்டுமெறிதியோ; இதனுல், காமததையும் கொலையையும் நீததலவேணடுமெனபது கூறப்பட்டது.

கஉ0. சடாஅயானை - மதயானை; "கடாஅக் களிற்றின்மேல்" என்பது திருக்குறள், க0அஎ. கட்காமுறறோர் - கள்ளை விரும்பியுண்டுகளிததோர்.

கஉக. கோடு - கொம்பு

கஉ0 - கஉங. கட்கா முற்றோர் இங்ஙனமாதலை, "புதுக்கோள் யானை முன் போற்றாது சென்று, மதுககளி மயககதது வீழா மாய்நததூஉம்" (கஉ - ம் காதை, சரு-சசு,) என்றதனுலுமுணர்க.

கஉச பொய்யாற்றொழுக்கம-பொய்வழிக்கணொழுகுதல், பொருளெனககொண்டோர் - காரியமாககொணடோர்.

கஉரு. கையாற்றவலம் - செயலறவாகிய துன்பம.

கஉசு. களவேர்வாழ்க்கையர் - களவேஉழவுபோலும் இலவாழ்ககைப்பொருளாகவுடையோர், "கைப்பொருள் வெளவங் களவேர் வாழ்க்கைக், கொடியோர்" என்பது பெரும்பாணாற்றுப்படை, ச0 - சக. கடுந்துயர் - மிக்கதுயர்.

கஉஅ. இவை - காமமுதலிய இவ்வைந்தும்.

கங0, கலவி காரிகை அன்று - கல்வி அழகுடைத்தன்று; காரிகை - அழகு; என்றது பின்பு கூறப்படும் நற்குணங்களிலலாதவழி கல்வி அழகுடையதன்றென்றவாறு. இவ்வடியைமுனனுள்ள அடியோடு கூட்டித துன்பந் தருவனவற்றைத் துறவாவழிக் கலவி அழகுடைத்தன்றென்று பொருள்கூறினும பொருந்தும்.

கஙக. செற்றம் - பகைமை நெடுங்காலம் நிகழ்வது.

கஙங. அல்லன்மாக்கட்கு - வறுமைத் துன்பமுடையார்க்கு. 'இல்லது நிரப்பினர்' என்றும் பாடம்

கஙஉ - கஙங. நிரப்புநரே வாழ்வோ ரென்போர்.

கஙச. எலவனை-விளி

கஙச - கஙரு. அரும்பசி களைந்தோரே செலவுலகறிநதோா.

துன்ப மறுக்குந் துணிபொரு ளுணர்ந்தோர்
மன்பதைக் கெல்லா மன்பொழி யாரென
ஞான நன்னீர் நன்கனந் தெளித்துத்
தேனு ரோதி செவிமுதல் வார்த்து
மகன்றுயர் நெருப்பா மனம்விற காக
வகஞ்சுடு வெந்தீ யாயிழை யவிப்பத்
தேறுபடு சின்னீர் போலத் தெளிந்து
மாறுகொண் டோரா மனத்தின ளாகி
யாங்கவ டொழுதலு மாயிழை பொறாஅ
டான்றொழு தேத்தித் தகுதி செய்திலை
காதலற் பயந்தோ யன்றியுங் காவலன்
மாபெருந் தேவியென் றெதிர்வணங் கினளென.

சிறைவிடுகாதை முற்றிற்று.

---

௧௩௬. துணிபொருள்-பரமார்த்த தத்துவஞானம்.

௧௩௭. மன்பதைக்கெல்லாம் - உயிர்ப்பன்மைகளுக்கெல்லாம்.

௧௩௬ - ௧௩௭. அன்பொழியாரே துணிபொருளுணர்ந்தோர்.

௧௩௮. ஞானநன்னீர் - ஞானமாகிய நல்லநீரை. நன்கனம் - நன்றாக.

௧௩௯. தேனுரோதி - இராசமாதேவி. செவிமுதல் - செவியிடம்.

௧௪௦. மகன்றுயர் - புதல்வனிறந்ததுயரம் — புத்திரசோகம்.

௧௪௧. அகம் - உள்ளிடம். ஆயிழை - மணிமேகலை.

௧௩௮ - ௧௪௧. ஞானநீரைத் தெளித்து வார்த்து வெந்தீயை அவிப்பவென்க.

௧௪௨. தேறு - தேற்றாங்கொட்டை.

௧௪௩. மாறுகொண்டு - பகைமைகொண்டு.

௧௪௪. ஆங்கவள் - இராசமாதேவி. ஆயிழை - மணிமேகலை.

௧௪௫. காதலற்பயந்தோயன்றியும் - எனது பூர்வஜன்ம நாயகனைப் பெற்றதலலாமலும்.

௧௪௬ - ௧௪௭. காவலன் மாபெருந்தேவியென்று - அரசனது பட்டமகிஷியாகவுமுள்ளாயென்று.

- ௧௪௭. வாசந்தவையென்னுமுதாட்டி, மொழியினள், அவள் மன்னவனருளாற் சென்றெய்தித் தொழுது முனனின்று வாழ்த்தி, 'மன்னவனறன முன் துன்பங்கொள்ளேல' என்று போயபின், அஞ்சிலோதி கரந்து அடக்கிக் கொண்டு மறைத்து 'மணிமேகலையை வஞ்சஞ்செய்குவல்' என்று ஒரு நாள அரசனுக்கு, 'சிறைதக்கன்று' என, 'தீர்க்க' என்று இறைசொல, குழலாள அவளைக்கூய்ப் புக்கு 'செய்குவல' என்று ஊட்ட, அறியினளாக, சொடுப்ப, அணைதலும், இருப்ப, போயபின், அடைப்ப, இருப்ப, அவன்தொழ, மணிமேகலை ஒழியின்றனைத்து மற்றுமுனைசெய்யும; அங்கனமுனைசெய்பவள் அவிப்ப, அவள தொழுதலும், ஆயிழை பொறாஅளாய 'மாபெருந்தேவி' என்று எதிர்வணங்கினளென வினைமுடிவுசெய்க.

## இருபத்துநான்காவது

# ஆபுத்திரனாடடைந்தகாதை.

[இருபத்து நான்காவது மணிமேகலை மாநகரோழிந்து ஆபுத்திரனாடடைந்தபாட்டு.]

மன்ன குமரனை வஞ்சம் புணர்த்த
தொன்முது கணிகைதன் சூழ்ச்சியிற் போயவன்
விஞ்சையன் வாளின் விளிந்தோ னென்பது
நெஞ்சு நடுக்குறக் கேட்டுமெய் வருந்தி
மாதவி மகடனை வான்சிறை நீக்கக்
காவலன் றேவி காற்கீழ் வீழ்ந்தாங்
கரவே ரல்கு லருந்தவ மடவா
ருரவோற் களித்த வொருபத் தொருவரு
மாயிரங் கண்ணோ னவிநயம் வழூஉக்கொள
மாயிரு ஞாலத்துத் தோன்றிய வைவரு
மாங்கவன் புதல்வனோ டருந்தவன முனிந்த
வோங்கிய சிறப்பி னொருநூற்று நால்வருந்
திருக்கிளர் மணிமுடித் தேவர்கோன் றன்மு
னுருப்பசி முனிந்த வென்குலத் தொருத்தியு
மொன்று கடைநின்ற வாறிரு பதின்மரி
தொன்றுபடு மாநகர்த் தோன்றிய நாண்முதல்
யானுறு துன்ப மியாவரும் பட்டிலர்
மாபெருந் தேவி மாதர் யாரினும்

க. மன்னகுமரனை - உதயகுமரனை. புணர்த்த - சோததிய.

உ. முதுகணிகை - சிததிராபதி; எழுவாய்; தொன்முது - ஒருபொருட்பன்மொழி. போயவன் - உதயகுமரன.

ஙூ. விளிந்தோன் - இறநதான்.

ரு. மாதவிமகடனை - மணிமேகலையை. நீகக - நீககுதறபொருட்டு.

சு. காவலன்றேவி - இராசமாதேவி.

ரு - சு. நீகக வீழ்ந்து.

உ - சு கணிகை, விளிந்தோனெனபதைக் கேட்டு வருந்தி வீழ்ந்து.

எ. 'அரவேர்' என்பது முதலியன சிததிராபதிகூற்று.

கக. புதலவன் - சயந்தன்.

எ - கஎ. (?)

கரு. நூற்றிருபததொருவர். 'ஒன்று கடையிட்ட' எனறும் பாடம்.

கசு. தொன்று - பழமை.

கஅ. மாபெருந்தேவி - விளி. மாதர் நாடககணிகைகள். 'மாதர் யாவரும்' என்றும பாடம்.

கஎ-கஅ. மாதரெல்லாருள்ளும் யானுற்ற துன்பம் யாயரும்பட்டிலரென இயைக்க.

பூவிலை யீத்தவன் பொன்றின னென்று
மாதவி மாதவர் பள்ளியு ளடைந்ததும்
பரந்துபடு மனைதொறும் பாத்திர மேந்தி
யரங்கக் கூத்திசென் றையங் கொண்டது
நகுத லல்லது நாடகக் கணிகையர்
தகுதி யென்னார் தன்மை யன்மையின்
மன்னவன் மகனே யன்றியு மாதரா
லிந்நக ருறூஉ மிடுக்கணு முண்டா
லும்பளந் தழீஇய வுயர்மண னெடுங்கோட்டுப்
பொங்குதிரை யுலாவும் புன்னையங் கானற்
கிளர்மணி நெடுமுடிக் கிள்ளி முன்னாள்
விளவேனி லிறுப்ப விறும்பூது சான்ற
பூநாறு சோலை யாருமி லொருசிறைத்
தானே தமிய ளொருத்தி தோன்ற
வின்ன ளார்கொ லீங்கிவ ளென்று
மன்னவ னறியான் மயக்க மெய்தாக்
கண்ட கண்ணினுங் கேட்ட செவியினு
முண்ட வாயினு முயிர்த்த மூக்கினு
முற்றுண ருடம்பினும வெற்றிச்சிலைக் காமன்

---

கக. பூவிலை - அற்றைப்பரிசம்; "பூவிலை மடந்தைய ரேவற் சிலதியர்" என்பது சிலப்பதிகாரம், இந்திரவிழவூரெடுத்தகாதை, ருக. ஈத்தவன் - கோவலன்.

உ0 மாதவர்பள்ளி - சங்கத்தாரான அறவணவடிகளுறையுமிடம்.

உஉ. அரங்ககக்கூத்தி - மணிமேகலை.

உக - உஉ. அரங்கக்கூத்தி பாத்திரமேந்திச் சென்று மனைதொறும் ஐயங்கொண்டதும்.

உ0 - உச. அடைந்ததும் கொண்டதும் நகுதற்குக் காரணமாவனவேயன்றி நாடகக்கணிகையர்களுடைய இயல்பன்மையால் அவற்றை அவர்க்குத் தகுதியென்று கூருர்; இனி 'நாடகக்கணிகையர்' என்பதை எழுவாயாகக் கொண்டு அவர் தகுதியென்னுரெனினுமமையும்.

உரு. மன்னவன் மகனேயன்றியும் - உதயகுமாரனுக்கு உண்டான இடுக்கணல்லாமலும், மாதரால்-மணிமேகலையால்.

உசு. இடுக்கண் - துன்பம்.

உஎ. உம்பளம் - உப்பளம; விகாரம. கோடு - கரை.

உஅ. கானல் - கடற்கரைச்சோலை

உக. நெடுமுடிக்கிள்ளி - அரசனபெயர். முன்னாள் - முன்னாக.

௩0. இறுப்ப - தங்குதலால் இறும்பூது - அதிசயம். இறப்பசசான்ற.

௩க. சோலை - சோலையில. ஒருசிறை - ஒருபக்கத்தில்.

௩உ தானே தமியள் - தான் தனித்தவளாய்; தமி - தனிமை; கஅ - மகாதை, கஉச.

உக-௩உ. முன்னாத் தோன்றவென்க.

௩௩. ஈங்குளளாகிய இத்தன்மையையுடையாள் யாவளோவென்று

௩௪. அறியான் - அறியானாய். மன்னவன் மயக்கமெய்தி; 'மயக்கமெய்தா' என்பது இடககர்.

௩௬. வாயென்றது நாவினை. உயிர்த்த - மோந்த.

௩எ. உற்றுணருடம்பு - தீண்டியுணருமுடம்பு.

மயிலையுஞ் செயலையு மாவுங் குவளையும்
பயிலிதழ்க் கமலமும் பருவத் தலர்ந்த
மலர்வா யம்பின் வாசங் கமழப்
பலர்புறங் கண்டோன் பணிந்துதொழில் கேட்ப
வொருமதி யெல்லை கழிப்பினு முரையாள்
பொருவரு பூங்கொடி போயின வந்நாள்
யாங்கொளித் தனளவ் விளங்கொடி யென்றே
வேந்தனை யட்டோன் மெல்லியற் றேர்வுழி
நிலத்திற் குளித்து நெடுவிசும் பேறிச்
சலத்திற் றிரியுமோர் சாரணன் றோன்ற
மன்னவ னவனை வணங்கி முன்னின்
றென்னுயி ரனையா ளீங்கொளித் தாளுள
ளென்று ளொருத்தியைக் கண்டிரோ வடிகள்
சொல்லுமி னென்று தொழுதவ னுரைப்பான்
கண்டிலே னாயினுங் காரிகை தன்னைப்
பண்டறி வுடையேன் பார்த்திப கேளாய்

---

௩௮. மயிலை - மல்லிகைவிசேடம். செயலை - அசோகு.

௩௯. பயிலிதழ் - செறிந்தஇதழ்.

௪0. கமழ - கமழ்தலால்.

௩௮ - ௪0. மயிலை முதலியனவாகிய அம்பென்க.

௩௫ - ௪0. கண்ணினும் செவியினும் வாயினும் மூக்கினும் உடம்பினும் காமனுடைய மலரம்பின் வாசங்கமழ்தலால். ஈண்டுக்கூறிய ‘கண்டகண்’ முதலியன அரசனுடைய பொறிகள்; என்றது - வேறுவேறுகாலங்களில் வேறுவேறுபொருள்களானனுபவிக்கப்படுவன ஒருகாலத்து அவள்கண்ணே யனுபவிக்கப்பட்டனவென்பதாம்.

௪௧. பலர்புறங்கண்டோன் - அரசன்.

௪௨. மதி - மாதம். கழிப்பினும் - கழித்தாளாயினும். உரையாள் - சொல்லாளாய்.

௪௩. அந்நாள் - அந்நாளில்.

௪௫. தேர்வுழி - தேடும்பொழுது.

௪௬. நிலத்திற்குளித்து-நீரிற்புகுவதுபோல நிலத்திற் புகுந்து. நெடு விசும்பேறி - சந்திரசூரியர்களை யெட்டிப்பிடித்தற்குச்செல்வதுபோல் நீண்ட ஆகாயத்திற்சென்று.

௪௭. சலத்தில் திரியும் - பூமிமேல்நடப்பதுபோல் நீர்மேலேநடந்துதிரியும்.

௪௬ - ௪௭. குளித்து ஏறித் திரியும் ஓர்சாரணன்தோன்றவென்க. நிலத்திற் குளித்தல் முதலியன அற்புதசத்தியாகிய இருத்தியெனப்படும். தனது தந்தையாகிய சுத்தோதனனுக்கு ஞானமுண்டாகுதற்பொருட்டு நிலத்திற்குளித்தன்முதலிய பலவற்புதங்களைப் புத்தன காட்டினனென்று அசுவகோஷபோதிசத்துவரென்பவராற் செய்யப்பட்டுள்ள புத்தசரிதத்தின், ௯-ம் வர்க்கத்தாற் றெரிகின்றது; "நீரினிற் பூவில வானினினைத்துழி யொதுங்கு கின்ற, சாரணரெண்ம ராவர் சமணரி லிருத்தி பெற்றோர்" என்றார் சூடாமணிநிகண்டுடையாரும்; மக்கட்பெயர்த்தொகுதி ௪. "வானூடிழிந்தோன்" (௧0-ம்காதை, ௩௩) என்று இந்நூலில் முனவந்திருத்தல்காண்க.

௪௮. அவனை - அச்சாரணனை.

௫0. அன்னாள் - அத்தன்மையாள்.

௪௮ - ௫௧. அவனை வணங்கி நின்று சொல்லுமினென்று மன்னவன் றொழுது வென்க.

௫௩. அறிவுடையேன் - அறிதலுடையேன்.

நாக நாடு நடுக்கின் றாள்பவன்
வாகை வேலோன் வளைவணன் றேவி
வாசமயிலை வயிற்றுட் டோன்றிய
பீலிவளை யென்போள் பிறந்த வந்நா
ளிரவிகுலத் தொருவ னிணைமுலை தோயக்
கருவொடு வருமெனக் கணியெடுத் துரைத்தனன்
ஆங்கப் புதல்வன் வரூஉ மல்லது
பூங்கொடி வாராள் புலம்ப லீதுகே
டீவகச் சாந்தி செய்யா நாளுன்
காவன் மாநகர் கடல்வயிறு புகூஉம்
மணிமே கலைதன் வாய்மொழி யாலது
தணியா திந்திர சாபமுண் டாகலின்
ஆங்குப்பதி யழிதலு மீங்குப்பதி கெடுதலும்
வேந்தரை யட்டோய் மெய்யெனக் கொண்டிக்
காசின் மாநகர் கடல்வயிறு புகாமல்
வாசவன் விழாக்கோண் மறவே லென்று
மாதவன் போயின வந்நாட் டொட்டும்
காவன் மாநகர் கலக்கொழி யாதாற்
றன்பெயர் மடந்தை துயருறு மாயின்
மன்பெருந் தெய்வம் வருதலு முண்டென
அஞ்சினே னரசன் றேவியென் றேத்தி
நன்மனம் பிறந்த நாடகக் கணிகையை
யென்மனைத் தருகென விரசபா தேவி

௫௫. வாகை - வெற்றி.

௫௫ - ௫௬. தேவியாகிய வாசமயிலை.

௫எ. அந்நாள் - அந்நாளில்.

௫௯. கரு - கருப்பம். வரும் - வருவான். கணி - நூலவல்ல நிமித்திகன்.

௫எ - ௫௯. அந்நாளிற் கணியெடுத்துரைத்தனன்.

௬0. வரூஉமல்லது - வருவானேயன்றி.

௬௧. பூங்கொடி - பீலிவளை. புலம்பல் - வருந்தாதே.

௬௨. தீவகச்சாந்தி - இந்திரவிழவு.

௬௩. நகர் - காவிரிப்பூம்பட்டினம்.

௬௪. மணிமேகலை - மணிமேகலாதெய்வம். அது - நகர் கடல்வயிறு புகுதல்.

௬௨ - ௬௪. செய்யாநாளில் வாய்மொழியால் நகர் கடல்வயிறு புகூஉமென்க.

௬௪ - ௬௫. இந்திரசாபமுமுண்டாதலின், அது தணியாது.

௬௬. ஆங்கு - அக்காலத்தே. பதியிரண்டில் முன்னது நகரம், பின்னது அரசன். 'ஆங்குப் பதியழிதலு மீங்குப்பதி புகுதலும்' என்றும் பாடம்.

௬௮. காசு - குற்றம்.

௬௯. மறவேல - மறவாதே.

எ0. மாதவன் - சாரணன்.

எ௧. கலக்கு - கலங்குதல்.

எ௨. மடந்தை - மணிமேகலை.

எ௩. தெய்வம் - மணிமேகலாதெய்வம்.

எ௫. நாடகக்கணிகை - மணிமேகலை. 'நஞ்சனையிறந்த நாடகக் கணிகை' என்றும் பாடம்.

எ௬. தருகென - தருவாயென்று சித்திராபதியைக் கேட்ப.

கள்ளும் பொய்யுங் காமமுங் கொலையு
முள்ளக் களவுமென் றுரவோர் துறந்தவை
தலைமையாக் கொண்டநின் றலைமையில் வாழ்க்கை
புலைமையென் றஞ்சிப் போந்த பூங்கொடி
நின்னொடு போந்து நின்மனைப் புகுதா
ளென்னோ டிருக்குமென் றீங்கிவை சொல்வுழி
மணிமே கலைதிறம் மாதவி கேட்டுத்
துணிகயந் துகள்படத் துளங்கிய வதுபோற்
றெளியாச் சிந்தையள் சுதமதிக் குரைத்து
வளியெறி கொம்பின் வருந்திமெய்ந் நடுங்கி
யறவண ரடிவீழ்ந் தாங்கவர் தம்முடன்
மறவேன் மன்னவன் றேவிதன் பால்வரத்
தேவியு மாயமுஞ் சித்திரா பதியு
மாதவி மகளு மாதவர்க் காண்டலு
மெழுந்தெதிர் சென்றாங் கிணைவளைக் கையாற்
றொழுதகை மாதவன் றுணையடி வணங்க
வறிவுண் டாகவென் றாங்கவன் கூறலு
மிணைவளை நல்லா ளிராசமா தேவி
யருந்தவர்க் கமைந்த வாசனங் காட்டித்
திருந்தடி விளக்கிச் சிறப்புச் செய்தபின்

---

எஎ. 'கள்ளும்பொய்யும்' என்பது முதலியன இராசமாதேவிகூற்று.

எஅ. உரவோர் - அறிவுடையோர். துறந்தவை - நீக்கியவை.

எஎ-எஅ. உஉ-ம் காதை, கஎ0-கஎஉ.

எகூ. தலைமையில் வாழ்க்கை - கடையான பரத்தைமைத்தொழில்; "மேலோ ராயினு நூலோ ராயினும், பால்வகை தெரிந்த பகுதியோ ராயினும், பிணியெனக் கொண்டு பிறக்கிட் டொழியுங், கணிகையர் வாழ்க்கை கடையே" என்றார் சிலப்பதிகாரத்தும், காடுகாண்காதை, கஅ0 - கஅகூ. 'தன்மையில் வாழ்க்கை' என்றும் பாடம்.

எஎ - எகூ — உ - ம் காதை, ருஎ.

அ0. புலைமை-அசுத்தமுடையது. பூங்கொடி - மணிமேகலை.

அஉ. இருக்கும் - இருப்பாள். ஈங்கிவைசொல்வுழி-இவற்றை இராசமாதேவி சொல்லும்பொழுது.

இனி மணிமேகலையின் செய்திகேட்டமாதவி அறவணவடிகளுடன் இராசமாதேவிபால்வருதல் கூறப்படும்.

அ௩. திறம்-காவலிலிருத்தல். திறத்தைக்கேட்டு.

அச. துணிகயம் - தெளிந்த நீர்நிலை. துளங்குதல் - கலங்குதல்.

அரு. சிந்தையள் - சிந்தையளாய்.

அசு. வளியெறிகொம்பின் - காற்றாலலைக்கப்பட்ட பூங்கொம்புபோல.

அஉ - அஅ. ஈங்கிவை சொல்வுழி மாதவி கேட்டுத் தெளியாச்சிந்தையளாய் உரைத்து வருந்தி நடுங்கி வீழ்ந்து அவருடன் இராசமாதேவிபால் வரவென்க.

அகூ—உச-ம் காதை, கசக. ஆயம் - சிலதியர்கூட்டம்.

கூச - கூசு. நல்லாளாகியதேவி ஆசனங்காட்டி விளக்கிச் சிறப்புச் செய்தபினென்க.

யாண்டுபல புக்கநும் பிணையடி வருந்தவென்
காண்டகு நல்வினை நும்மையீங் கழைத்தது
நாத்தொலை வில்லா யாயினுந் தளர்ந்து
மூத்தவிவ் யாக்கை வாழ்கபல் லாண்டெனத்
தேவி கேளாய் செய்தவ யாக்கையின்
மேவினே னாயினும் வீழ்கதிர் போன்றேன்
பிறந்தார் மூத்தார் பிணிநோ யுற்றா
ரிறந்தா ரென்கை யியல்பே யிதுகேள்
பேதைமை செய்கை யுணர்வே யருவுரு
வாயி லூறே நுகர்வே வேட்கை
பற்றே பவமே தோற்றம் வினைப்பய
னிற்றென வகுத்த வியல்பீ ராறும்
பிறந்தோ ரறியிற் பெரும்பே றறிகுவ
ரறியா ராயி னாழ்நர கறிகுவர்
பேதைமை யென்ப தியாதென வினவி
னோதிய விவற்றை யுணரா து மயங்கி
யியற்படு பொருளாற் கண்டது மறந்து
முயற்கோ டுண்டெனக் கேட்டது தெளித
லுலக மூன்றினு முயிரா முலக
மலகில பல்லுயி ரறுவகைத் தாகு

௯௭. 'யாண்டு பலபுக்க' எனபது முத லியன இராசமாதேவிகூற்று. யாண்டு - வருடம்.

௯௭ - ௯௮. எனது நல்வினை இணையடி வருந்த நும்மை ஈங்கழைத்தது.

௯௯. நாத்தொலைவில்லாயாயினும் - நா மெலிதலில்லாயாயினும்; சொல்வன் மை குறைந்திலா யென்றபடி. 'நாத தொலை வில்லை யாயினுங் கிளர்ந்து' என்றும் பாடம்.

௧00. இவ்யாக்கையென்றது - அறவ ணவடிகளுடம்பை. 'மூத்தநிவ் யாக் கை' என்றும் பாடம். என - என்று இராசமாதேவிசொல்ல.

௯௯ - ௧00. "நரைமுதிர் யாக்கை நடு ங்கா நாவி, னுரைமூ தாளன்" என்று முன்னும் வந்திருத்தல் காண்க; ௧௨-ம் காதை, ௧ - ௪.

௧0௧. 'தேவிகேளாய்' என்பது முதலி யன அறவணவடிகள் கூற்று. தவயாக் கை - தவவுடம்பு.

௧0௨. வீழ்கதிர் - அஸ்தமிக்குஞ்சூரி யன். மரணத்திற்குச் சூரியன் அஸ்தமி த்தலை உவமைகூறுதல் பௌத்தநூன்ம ரபு. "சாககாடென்ப சருவருத தன்மை, யாக்கை வீழ்கதி ரெனமறைந் திடுதல" (௩0 - ம் காதை, ௧0௨ ௧0௩) என இந்நூ லிற் பின்பு வருதல் காண்க.

௧0௩ - ௧0௪. பிறப்புப்பிணிமூப்பிறப் புக்கள உடலுக்கியற்கையென்றபடி.

௧0௫. ௧0௮. பேதைமை முதலிய பன னிரண்டும் துவாதசநிதானமெனப்படும்; இவற்றினியல்பை, இந்நூல, ௩0 - ம் கா தையால் விளங்கவுணர்க.

௧௧௧. பேதைமை - அவிச்சை.

௧௧௨. இவற்றை-துவாதசநிதானத்தை.

௧௧௪. கோடு - கொம்பு.

௧௧௧ - ௧௧௪. பேதைமையென்பது மயங்கிக் கண்டதுமறந்து கேட்டது தெ ளிதலென்க.

௧௧௫. 'உலகமூன்றினும்' என்பது முதற் செய்கை கூறப்படும்.

௧௧௫ - ௧௧௬. உயிராமுலகம் அலகில - உயிராகிய உலகம் அளவில்லாதன. செ ய்கை கூறுதற்கு அங்கமாக ஈண்டு அறு வகையுயிர்களும் கூறப்பட்டன.

௧௧௬ - ௧௧௮. பேயுமென்றே அறுவகை த்தாகுமென்க.

மக்களுந் தேவரும் பிரமரு நாகருந்
தொக்க விலங்கும் பேயு மென்றே
நல்வினை தீவினை யென்றிரு வகையாற்
சொல்லப் பட்ட கருவினுட் டோற்றி
வினைப்பயன் விளையுங் காலை யுயிர்கட்கு
மனப்பே ரின்பமுங் கவலையுங் காட்டுந்
தீவினை யென்ப தியாதென வினவி
ஞய்தொடி நல்லா யாங்கது கேளாய்
கொலையே களவே காமத் தீவிழை
வுலையா வுடம்பிற் றோன்றுவ மூன்றும்
பொய்யே குறளை கடுஞ்சொல் பயனில்
சொல்லெனச் சொல்லிற் றோன்றுவ நான்கும்
வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சியென்
றுள்ளந் தன்னி .னுருப்பன மூன்றுமெனப்
பத்து வகையாற் பயன்றெரி புலவ
ரித்திறம் படரார் படர்குவ ராயின்
விலஙகும் பேயு நரகரு மாகிக்
கலங்கிய வுள்ளக் கவலையிற் றோன்றுவர்
நல்வினை யென்ப தியாதென வினவிற்
சொல்லிய பத்தின் றொகுதியி னீங்கிச்
சீலந் தாங்கித தானந் தலைநின்று
மேலென வகுத்த வொருமூன்று திறத்துத்
தேவரு மககளும் பிரமரு மாகி

---

கஉ0. சொலலப்பட்ட கரு - மேற்கூறிய மக்கட் கருமுதலிய ஆறும்; "தெய்வக்கருவுந் திசைமுகக் கருவும் (பதிகம், உஅ.) என்று முன்புவந்திருததல் காண்க.

ககஎ - கஉஉ. (செய்கை) இருவகையால் தோற்றிக காட்டு மென்க.

கஉரு. காமததீவிழைவு - காமமாகிய கொடிய விழைவு.

கஉரு - கஉசு. கொலையும் களவும் காமமுமென உடம்பிற்றோன்றுவன மூன்றும்.

கஉஎ. குறளை - கோள். பயனில் சொல - அறம்பொருளின்பஙகளுள் ஒன்றும் பயவாத சொல்.

கஉ௯ வெஃகல் - விரும்பல். வெகுளல் - கோபிததல்; வெஃகல் முதலிய மூன்றும் முறை[illegible]ய காமம் வெகுளி மயக்கமெனப்படும்.

க௩0. உருப்பன - தோன்றுவன.

கஉரு - க௩க. தீவினையென்பது, மூன்றும் நான்கும் மூன்றுமெனப் பத்துவகைப்படும்.

க௩உ. இத்திறம்-கொலைமுதலிய தீய வழிகளில். படரார் - செல்லார்.

க௩உ - க௩ச. இக்கருத்து "விலங்கு நரகரும் பேய்களு மாக்குங், கலங்களுர்த் தீவினை கடிமின்" எனப்பின்னும் வருதல் காணக; உரு-ம் காதை, சக-சஉ.

க௩சு. சொல்லியபத்து-கொலை, களவு, காமம், பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல், வெஃகல், வெகுளல், பொல்லாக்காட்சியென்பன.

க௩எ. சீலம் - பஞ்சசீலமுதலியன.

மேவிய மகிழ்ச்சி வினைப்பய னுண்குவ
ரரசன் றேவியொ டாயிழை நல்லீர்
புரைதீர் நல்லறம் போற்றிக் கேண்மின்
மறுபிறப் புணர்ந்த மணிமே கலைநீ
பிறவறங் கேட்ட பின்னாள் வந்துனக்
கித்திறம் பலவு மிவற்றின் பகுதியு
முத்தேர் நகையாய் முன்னுறக் கூறுவ
லென்றவ னெழுதலு மிளங்கொடி யெழுந்து
நன்றறி மாதவ னல்லடி வணங்கித்
தேவியு மாயமுஞ் சித்திரா பதியு
மாதவர் நன்மொழி மறவா தும்மி
னிந்நகர் மருங்கின்யா னுறைவே னாயின்
மன்னவன் மகற்கிவள் வருங்கூற் றென்குவ
ராபுத் திரனா டடைந்ததற் பின்னாண்
மாசின் மணிபல் லவந்தொழு தேத்தி
வஞ்சியுட் புக்கு மாபத் தினிதனக்
கெஞ்சா நல்லறம் யாங்கணுஞ் செய்குவ
லெனக்கிட ருண்டென் றிரங்கல் வேண்டா
மனக்கினி யீரென் றவரையும் வணங்கி
வெந்துறு பொன்போல் வீழ்கதிர் மறைந்த
வந்தி மாலை யாயிழை போகி
யுலக வறவியு முதியாள் குடிகையு
மிலகொளிக் கந்தமு மேத்தி வலங்கொண்
டந்தர மாறாப் பறந்துசென் றாயிழை

---

கசo. மகிழ்ச்சிவினை - நல்வினை.

கஙரு - கசo:—௬o - ம் காதை, சரு - அக.

கசக. ஆயிழை நல்லீரென்றது, மாதவியையும் சுதமதியையும் ஆயத்தையும்

கசஉ. புரை - குற்றம். நல்லறம் - அருளறம்.

கசச. பிறவறம் - மற்றைச் சமயதருமம்.

கசசு. 'முத்தொகை யாக முன்னர்க் கூறுவன' என்றும் பாடம்.

கசரு - கசசு. இத்திறம் பலவற்றையும் இவற்றின்பகுதிகளையுங் கூறுவேன.

கசஎ. இளங்கொடி - மணிமேகலை.

கசக:—உச - ம் காதை, அக.

கருரு. மாபத்தினிதனக்கு வஞ்சியுட் புக்கு - கண்ணகியைதரிசித்ததற்பொருட்டு வஞ்சிநகரத்திற் புகுந்து.

கருஅ. அவரையும், உம் - இறந்தது தழீஇயது.

கசுo அந்தி மாலையில்.

கசுக. முதியாள் குடிகை - சம்பாபதி கோயில். 'முதியாள்கோட்டமும்' என்றும் பாடம்.

கசுஉ. கந்தம் - தூண். என்றது கந்திற்பாவையை; ஆகுபெயர் "கலிகெழு கடவுள் கந்தங் கைவிட" என்பது புறநானூறு, ருஉ

கசுங அந்தரம் ஆறு - ஆகாயமேவழியாக.

யிந்திரன் மருமா னிரும்பதிப் புறத்தோர்
பூம்பொழி லகவையி னிழிந்து பொறையுயிர்த்
தாங்குவாழ் மாதவ னடியிணை வணங்கி
யிந்நகர்ப் பேர்யா திந்நக ராளு
மன்னவன் யாரென மாதவன் கூறு
நாக புரமிது நன்னக ராள்வோன்
பூமிசந் திரன்மகன் புண்ணிய ராச
னீங்கிவன் பிறந்த வந்நாட் டொட்டு
மோங்குயர் வானத்துப் பெயல்பிழைப் பறியாது
மண்ணு மரனும் வளம்பல தரூஉ
முண்ணின் றுருக்கு நோயுயிர்க் கில்லெனத்
தகைமலர்த் தாரோன் றன்றிறங் கூறின
னகைமலர்ப் பூம்பொழி லருந்தவன் றனென.

ஆபுத்திரனாடடைந்தகாதை முற்றிற்று.

---

கசுச. இந்திரன்மருமான் - புண்ணிய ராசன்; மருமான் - வழித்தோன்றல். பதி - நாகபுரம்.

கசுரு. அகவையின் - உள்ளிடத்தே.

கசுசு. மாதவன் - தருமசாவகன்.

கசுஅ யாரென - யாரென்று மணிமேகலை கேட்ப. கூறும் - சொல்லுவான்.

கஎக. தொட்டு - தொடங்கி.

கஎஉ. பெயல் - மழை. பிழைப்பு அறியாது - தவறுதலையறியாது.

கஎங. தரூஉம் - கொடுக்கும்.

கஎச. உயிர்களுக்கு நோயில்லை.

கஎரு. தாரோன் - புண்ணியராசன்.

கஎசு. அருந்தவன் - தருமசாவகன்.

க-கஎசு. தொனமுதுகணிகை கேட்டு வருந்தி வீழ்ந்து எத்தி, 'தருக' என, இராசமாதேவி ஈங்கிவை சொல்வுழி, மாதவி அறவணவடிகளுடன் வர, காணடலும், எதிரசென்று துணையடிவணங்க, அவன், 'அறிவுண்டாக' என்றுகூறலும், இராசமாதேவி காட்டி விளக்கிச் செய்தபின், 'வாழ்க' என, 'தேவி கேளாய்; நல்லீர், கேண்மின்; மணிமேகலை முன்னுறககூறுவல்' என்று அவனெழுதலும், இளங்கொடி எழுந்து வணங்கி என்று வணங்கிப் போகி எத்தி வலங்கொண்டு சென்று இழிந்து பொறையுயிர்தது வணங்கி, 'யாது? யாவர்' என, மாதவன் கூறும்; அங்ஙனங்கூறுமருந்தவன் கூறினனென வினைமுடிவுசெய்க.

இருபத்தைந்தாவது

# ஆபுத்திரனோடு மணிபல்லவமடைந்தகாதை.

[இருபத்தைந்தாவது மணிமேகலை ஆபுத்திரனை மணிபல்லவத்திடை யழைத்துப் புத்தபீடிகைகாட்டிப் பிறப்புணர்த்தி வஞ்சிமாநகர்புக்கபாட்டு.]

அரச னுரிமையோ டப்பொழில் புகுந்து
தரும சாவகன் றன்னடி வணங்கி
யறனு மறனு மநித்தமு நித்தத்
திறனுந் துக்கமுஞ் செல்லுயிர்ப் புக்கிலுஞ்
சார்பிற் றோற்றமுஞ் சார்பறுத் துய்தியு
மாரிய னமைதியு மமைவுறக் கேட்டுப
பெண்ணிணை யில்லாப் பெருவனப் புற்றாள்
கண்ணிணை யியக்கமுங் காமனோ டியங்கா
வங்கையிற் பாத்திரங் கொண்டறங் கேட்கு
மிங்கிணை யில்லா ளிவள்யா ரென்னக்
காவலற் றொழுது கஞ்சுக னுரைப்போ

---

க. அரசன் - புண்ணியராசன்; உரிமை - மனைவி; "உரிமைமுன் போக்கி யல்லா லொளிமுடி மன்னர் போகார்" என்பது சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், உசரு

உ. தருமசாவக னென்பது - அப்பொழிலில் நோற்றுவதியும் ஒரு முனிவன் பெயர். இப்பெயர்க்குத் தருமங்கேட்பவ னென்பது பொருள்.

ங. மறன் - பாவம். அநித்தம் - அநித்தியப்பொருளின்வகை.

ங-ச. நித்தத்திறன் - நித்தியப்பொருளின்வகை. துக்கம் - பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடு, விரும்பியனபெறாமை, வேண்டாதனபெறுதல் என்னுமாறும். புக்கில் - புகுமிடம்.

ரு. சார்பிற்றோற்றம் - பேதைமை முதலிய பன்னிரண்டு நிதானத்தினது தோற்றம். உய்தி-பிழைத்தல்; "செய்தி கொன்றோர்க் குய்தியில்" (புறநானூறு, ஙச.) எனவும், "உய்திக கால முறையி ரோ" (சிலப்பதிகாரம்) நாடுகாண்காதை, உச0) எனவும் வருதலகாணக.

சா. ஆரியன - ஆசிரியன்; என்றது புததனை. 'அறிவுறக் கேட்டு' எனறும் பாடம்.

எ. பெருவனப்பு - பேரழகு.

அ. இயக்கம் - இயங்குதல; இவ்வடியோடு "உருவிலாளனொ டுருவம் பெயர்ப்ப" (ரு-ம் காதை, சு.) என்று முன்வந்தது ஒப்புநோக்கற்பாலது.

கூ. அறங்கேட்கும் - தருமத்தைக்கேட்பாள்.

க0. யாரென்ன - யாரென்று அரசன் கேட்ப.

க - க0. அரசன், புகுந்து வணங்கிக் கேட்டு 'இவள்யார்' என்னவென்க.

கக. கஞ்சுகன் - சட்டையிட்ட பிரதானி.

கஞ்சுகன் மணிமேகலையின் வரலாற

னாவலந் தீவினிந் நங்கையை யொப்பார்
யாவரு மில்லை யிவடிற மெல்லாங்
கிள்ளி வளவனொடு கெழுதகை வேண்டிக்
கள்ளவிழ் தாரோய் கலத்தொடும் போகிக்
காவிரிப் படப்பை நன்னகர் புககேன்
மாதவ னறவண னிவள்பிறப் புணர்ந்தாங்
கோதின னென்றியா னன்றே யுரைத்தே
னாங்கவ ளிவளவ் வகனகர் நீங்கி
யீங்கு வந்தன ளென்றலு மிளங்கொடி
நின்கைப் பாத்திர மென்கைப் புகுந்தது
மன்பெருஞ் செல்வத்து மயங்கினை யறியா
யப்பிறப் பறிந்திலை யாயினு மாவயிற்
றிப்பிறப் பறிந்திலை யென்செய் தனையோ
மணிப்பல் லவம்வலங் கொண்டா லல்லது
பிணிப்புறு பிறவியின் பெற்றியை யறியா
யாங்கு வருவா யரசநீ யென்றப்
பூங்கமழ் தாரோன் முன்னர்ப் புகன்று
மையறு விசும்பின் மடக்கொடி யெழுந்து
வெய்யவன் குடபால் வீழா முன்னர்
வானின் றிழிந்து மறிதிரை யுலாவும்
பூநா றடைகரை யெங்கணும் போகி
மணிப்பல் லவம்வலங் கொண்டு மடக்கொடி

---

றை அரசனுக்குக் கூறுதல் இனிக் கூறப்படும்.

கங. இவள் திறமெல்லாம் - இவளுடைய வரலாறு முழுதும்.

கச. கிள்ளிவளவனென்றது உதயகுமரன் தந்தையை. கெழுதகைமை-உரிமை; என்றது - நட்பை.

கசு. காவிரிப்படப்பை நன்னகர் - காவிரியைத் தோட்டக் கூற்றிற்கு எல்லையாகவுடைய காவிரிப்பூம்பட்டினம்; படப்பை - பக்கமுமாம்; "காவிரிப் படப்பைப் பட்டினம" என்பது சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை, கருக.

கஅ. அன்றே - யான்போய்வந்த அக்காலததே.

கங - கஅ. இவடிறமெல்லாம் அன்றே யுரைத்தேன்.

உ0. இளங்கொடி - மணிமேகலை.

கக - உ0. உரைப்போனாகிய கஞ்சுகன் 'ஈங்குவந்தனள்' என்றலும்.

உக. 'நின்கைப்பாத்திரம்' என்பது முதலியன, புண்ணியராசனைநோக்கி மணிமேகலைகூறுங்கூற்று. பாத்திரம் - அமுதசுரபி.

உஉ. செல்வத்து - செல்வத்தால்.

உங அப்பிறப்பு - போனபிறப்பு; என்றது சாலிவயிற்றிற்பிறந்த பிறப்பை.

உரு. பிணிப்பு - பற்று. பெற்றி - தன்மை.

உஎ. ஆங்கு - மணிபல்லவத்திற்கு. நீ ஆங்கு வருவாயென்று.

உஅ. தாரோன் - புண்ணியராசன்.

உ0 - உஅ. இளங்கொடி புகன்று.

உகூ. மடக்கொடி - மணிமேகலை.

ங0. குடபால - மேற்றிசை.

ஙக இழிந்து - இறங்கி.

பிணிப்பறு மாதவன் பீடிகை காண்டலுந்
தொழுதுவலங் கொள்ளவத் தாமணிப் பீடிகைப்
பழுதில் காட்சி தன்பிறப் புணர்த்தக்
காயங் கரையெனும் பேரியாற் றடைகரை
மாயமின் மாதவன் றன்னடி பணிந்து
தருமங் கேட்டுத் தாதொழு தேத்திப்
பெருமகன் றன்னொடும் பெயர்வோர்க் கெல்லாம்
விலங்கு நரகரும பேய்களு மாக்குங்
கலங்கஞர்த் தீவினை கடிமின் கடிந்தாற்
றேவரு மக்களும் பிரமரு மாகுதி
ராகலி னல்வினை யயரா தோம்புமின்
புலவன் முழுதும் பொய்யின் றுணர்ந்தோ
னுலகுயக் கோடற் கொருவன றோன்று
மந்நா ளவனறங் கேட்டோ ரல்ல
தின்னாப் பிறவி யிழுக்குந ரில்லை
மாற்றருங் கூற்றம் வருவதன் முன்னம
போற்றுமி னறமெனச் சாற்றிக் காட்டி

௩௪. மாதவன்பீடிகை - புத்தபீடிகை.

௩௧ - ௩௪. மடக்கொடி எழுந்து இழிந்து போகி வலங்கொண்டு காண்டலு மென்க.

௩௬. பழுது - குற்றம்

௩௫-௩௬. பீடிகைககாட்சி உணர்த்த.

௩௭. அடைகரை - அடைகரையிலுள்ள.

௩௮. மாதவன் - பிரமதருமன்.

௩௯. 'தருமங்கேட்டு' என்பது முதலியன, பிரமதருமனை முன்னிலையாககி, மணிமேகலை கூறுங்கூற்று.

௪0. பெருமகன் - அரசன்; என்றது அத்திபதியை. பெயர்வோர்க்கெல்லாம- அவந்நகரத்திற்குச் செலவோ ரெல்லோருக்கும்.

௪௨. கலங்கஞர்த்தீவினை - கலங்குதற்குக் காரணமாகிய துன்பத்தையுண்டாக்கும் கொலைமுதலிய பததுவகையினதாகிய பாவத்தை.

௪௪. நல்வினை - கொலலாமைமுதலிய பத்துவகையினதாகிய புண்ணியததை. அயராது ஓம்புமின் - மறவாது பாதுகாத்திடுமின.

௪௫. புலவன் - ஞானி; புத்தனென்பது இப்பொருட்டு. முழுதும் பொய்யின் றுணர்ந்தோன் - ஸர்வஜ்ஞன்.

௪௬. உலகுயக்கோடற்கு - உலகைப் பிழைப்பித்தற்பொருட்டு; ஏகதேவனென்பது புத்தன்பெயர்களுள் ஒன்றாதலின், இங்கே ஒருவனென்றார்.

௪௫ - ௪௬. புலவனும் உணர்ந்தோனுமாகிய ஒருவன் உலகை உயககோடற்குத தோன்றுமென்க.

௪௭. அவனறம் - அவனாற் கூறப்படும் அறம்.

௪௮. இன்னாமை - துன்பம். இழுக்குநரில்லை - தப்புவோரில்லை.

௪௯. மாற்றருங்கூற்றம் - பிறரால் தடுத்தற்கரிய கூற்றம்; "மாற்றருங் கூற்றம்" என்பது தொல்காப்பியம், புறத்திணையியல், ௨௪; "மருந்தில் கூற்றம்" என்பர், இரும்பிடர்த்தலையார்; புறநானூறு, ௩.

௫0. அறம்போற்றுமினென்று, சாற்றிக்காட்டி - சொல்லிப் பொருளைவிளங்கச்செய்து; சாற்றி - நிறைத்தென்றுமாம்; "நிவந்துசெ னீத்தங் குளங்கொளச் சாற்றி" என்பது மதுரைக்காஞ்சி, ௨௪௬.

நாக்கடிப் பாக வாய்ப்பறை யறைந்தீ
ரவ்வுரை கேட்டு நும் மடிதொழு தேத்த
வெவ்வுரை யெங்கட்கு விளம்பினி ராதலிற்
பெரியவன் றோன்று முன்னரிப் பீடிகை
கரியவ னிட்ட காரணந் தானு
மன்பெரும் பீடிகை மாய்ந்துயிர் நீங்கிய
வென்பிறப் புணர்த்தலு மென்னென் றியான்றொழ
முற்ற வுணர்ந்த முதல்வனை யல்லது
மற்றப் பீடிகை தன்மிசைப் பொறாஅது
பீடிகை பொறுத்த பின்ன ரல்லது
வானவன் வணங்கான் மற்ற வானவன்
பெருமகற் கமைத்துப் பிறந்தார் பிறவியைத்
தரும பீடிகை சாற்றுக வென்றே
யருளின னாதலி னாயிழை பிறவியு
மிருளறக் காட்டு மெனவெடுத் துரைத்த
தன்றே போன்ற தருந்தவர் வாய்மொழி
யின்றெனக் கென்றே யேத்தி வலங்கொண்
டங்கவ ளின்னண மாக விறைவனு
மாங்கப் பொழில்விட் டகனகர் புகருத்

---

௫௧. நாவே கடிப்பாக வாயாகிய பறையை அறைந்தீர்; கடிப்பு - பறையடிக்குங் குறுந்தடி; "நாக்கடிப் பாக வாய்ப் பறை யறையினும்" என்பது சிலப்பதிகாரம், ஊர்காண்காதை, ௨௧.

௪0 - ௫௧ பெயர்வோர்க்கெல்லாம் சாற்றிக்காட்டி அறைந்தீரெனவியைக்க.

௫௩. வெவ்வுரை - பதினாறு நாளில் இராகுலன் திட்டிவிடமெனனும் பாம்பா லிறப்பானென்றும், நீ அவனோடு தீயில் மூழ்குவையென்றுஞ் சொன்ன சொற்கள். இதனை, இந்நூல் ௯ - ம் காதை, ௪௮-ம் அடிமுதலியவற்றாலுணர்க.

௫௪. பெரியவன - புத்தன்; பீடிகை - பீடிகையை.

௫௫ கரியவன் - இந்திரன்; "தேவர்கோ னிட்ட மாமணிப் பீடிகை" என்று முன்பு வந்திருத்தல்காண்க; அ - ம் காதை, ௫௨.

௫௫ - ௫௭. காரணந்தானும் உணர்த்தற்குக காரணமும் என்னவென்று யான் தொழ.

௫௮. முற்றவுணர்ந்த முதல்வன் - எல்லாமறிந்த முதல்வன்; ஸர்வஜ்ஞன்.

௫௯ பொறாஅது - சுமவாது; முற்று.

௬௧. வானவன் - இந்திரன்.

௬௨. பெருமகற்கமைத்து - புத்தனை அறிந்து கோடற்பொருட்டு இயற்றி. பிறந்தார்பிறவியை - பிறந்தோருடைய பழம்பிறப்பின் செய்தியை.

௬௩. சாற்றுக - உணர்த்துக.

௬௪. அருளினன்-ஆணை தந்தான். ஆயிழைபிறவியும் - உன்பிறவியையும்.

௬௧ - ௬௪ அவ்வானவன் அமைத்துச் சாற்றுகவென்று அருளினனென்க.

௬௫. இருளற - மயக்கமற.

௬௬. அருந்தவர்-முன்னிலைக்கண் வந்தது.

௬௫ - ௬௬. அன்று உரைத்ததாகிய வாய்மொழி.

௬௬ - ௬௭. எனக்கு வாய்மொழி இன்றைக்குவாய்த்தது போன்றதென்று.

௬௮ இவள் - மணிமேகலை; இன்ன

தந்தை முனியாத் தாய்பசு வாக
வந்த பிறவியு மாமுனி யருளாற்
குடர்த்தொடர் மாலை சூழா தாங்கோ
ரடர்ப்பொன் முட்டையு ளடங்கிய வண்ணமு
மாமுனி யருளான் மக்களை யில்லோன்
பூமிசந் திரன்கொடு போந்த வண்ணமு
மாய்தொடி யரிவை யமரசுந் தரியெனுந்
தாய்வாய்க் கேட்டுத் தாழ்துய ரெய்தி
யிறந்த பிறவியின் யாய்செய் ததூஉம்
பிறந்த பிறவியின் பெற்றியு நினைந்து
செருவேன் மன்னர் செவ்விபார்த் துணங்க
வரசுவீற் றிருந்து புரையோர்ப் பேணி
நாடகங் கண்டு பாடற் பான்மையிற்
கேள்வி யின்னிசை கேட்டுத் தேவிய
ரூடற் செவ்வி பார்த்துநீ டாது
பாடகத் தாமரைச் சீறடி பணிந்து
தேமரு கொங்கையிற் குங்கும மெழுதி
யங்கையிற் றுறுமலர் சுரிகுழற் சூட்டி
நறுமுகை யமிழ்துறூஉந் திருநகை யருந்தி

---

ணமாக - இப்படி இங்கேயிருக்க. இறைவன் - புண்ணியராசன்.

௭௦. முனி-மண்முகமுனிவன்; ௧௫-ம் காதை, ௪.

௭௩. அடர் - தகடு.

௭௨ - ௭௩:—௧௫ - ம் காதை, ௧௩ ௧௪.

௭௧ - ௭௩. அருளால் அடங்கியவண்ணமும்.

௭௫. பூமிசந்திரன் - நாகபுரத்தரசன்.

௭௪ - ௭௫. இல்லோனாகிய பூமிசந்திரன்.

௭௬. அமரசுந்தரி - பூமிசந்திரன் மனைவி.

௬௮ - ௭௭. இறைவனும் விட்டுப் புக்குப் பிறவியும் அடங்கியவண்ணமும் போந்தவண்ணமும் கேட்டுத் துயரெய்தியென்க.

௭௮. இறந்தபிறவி - போனபிறப்பு. யாய் - தாய்; என்றது சாலியை. இறந்த பிறப்பின் செய்தியை மணிமேகலையாலுணர்ந்தான்போலும்.

௭௯. பெற்றி - பேறு; என்றது பசு வயிற்றிற்பிறந்ததுமுதலியவற்றை.

௮௦. செவ்வி - தம் குறைகூறுதற்கேற்ற மனமொழிமெய்கள் இனியனாங் காலம். உணங்க - வாட.

௮௧. வீற்றிருந்து - கவலையின்றி யிருந்து; செம்மாந்திருந்தென்றுமாம். புரையோர்ப்பேணி - பெரியோரை வழிபட்டு; அமைச்சர் புரோகிதர்களை விரும்பித் துணைக்கொண்டென்றுமாம்.

௮௪. ஊடல - பிணங்கல்; 'வழக்காட்டு' என்பர், புறப்பொருள்வெண்பாமாலை உரையாசிரியர். நீடாது - தாழாது.

௮௫. பாடகம் - ஒருவகைக்காலணி.

௮௬. குங்குமம் - குங்குமச்சாந்து.

௮௭. அங்கையின் - அகங்கையினாலே. துறுமலர் - நெருங்கிய மலர். அங்கையிற்சூட்டி.

௮௮. முகை - அரும்பு; நறுமுகைபோலுந் திருநகை. 'அமிழ்தூறு திருநகை' என்றும் பாடம்.

மதிமுகக் கருங்கட் செங்கடை கலக்கக்
கருப்பு வில்லி யருப்புக்கணை தூவத்
தருக்கிய காமக் கள்ளாட் டிகழ்ந்து
தூவறத் துறந்த னன்றெனச் சாற்றித்
தெளிந்த நாதனென் செவிமுத லிட்டவித்
தேதமின் றாயின் றுவிளைந்தது
மணிமே கலைதன் காரண மாகவென்
றணிமணி நீண்முடி யரசன் கூற
மனம்வே றாயினன் மன்னென மந்திரி
சனமித் திரனவன் றொழுதேத்தி
யெங்கோ வாழி யென்சொற் கேண்மதி
நுங்கோ னுன்னைப் பெறுவதன் முன்னாட்
பன்னீ ராண்டுப் பதிகெழு நன்னாடு
மன்னுயிர் மடிய மழைவளங் கரந்தீங்
கீன்றாள் குழவிக் கிரங்கா ளாகித்
தான்றனி தின்னுந் தகைமைய தாயது
காய்வெங் கோடையிற் கார்தோன் றியதென
நீதோன் றினையே நிரைத்தா ரண்ணல்
தோன்றிய பின்னர்த் தோன்றிய வுயிர்கட்கு
வானம் பொய்யாது மண்வளம் பிழையா

---

௯0. கருப்புவில்லி - மன்மதன். 'கருப்புவி லநங்கன்' என்றும் பாடம். அருப்புக்கணை - மொட்டாகுமலராகிய அம்பு. வில்லி கணையைத்தூவ.

௯௧. காமக்கள்ளாட்டு - காமமாகிய கள்ளையுண்டு விளையாடும் விளையாட்டு; "காமக் கள்ளாட் டடங்கினர் மயங்க" என்பது சிலப்பதிகாரம், அழற்படுகாதை, ௧௨௭.

௮௨ - ௯௧. 'நாடகங் கண்டு' என்பது முதலியன காமக்கள்ளாட்டிற்கு அடை.

௯௨. தூவறத்துறத்தல் - பற்றுக்கோடறத்துறத்தல்; 'துவரத்துறத்தல்' என்றும்பாடம்.

௯௩. நாதன் - தருமசாவகன். முதல் - இடம். வித்து - அவன்கூறிய உபதேசமொழி.

௯௪. ஏதமின்றாய் - குற்றமில்லாமல்.

௯௬. நீண்முடி - தொன்றுதொட்டுவந்தமுடி; குலத்தின்பெருமை கூறியவாறு; "நெடுமுடிக் குரிசில" என்பது சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், ௨௯௫. அரசன் - புண்ணியராசன்.

௯௩ - ௯௬. வித்து, மணிமேகலைதன் காரணமாக இன்று விளைந்ததென்று அரசன்கூற.

௭௭ - ௯௬. அரசன் துயரெய்தி நினைந்து இகழ்ந்து சாற்றிக் கூறவென்க. மேல்வருவன, சனமித்திரனென்னு மந்திரிகூற்று.

௯௭. மன் - அரசன்.

௯௯. கேண்மதி - கேள்; மதி - முன்னிலையசை.

௧00. நுங்கோன் - பூமிசந்திரன். 'நுங்கோனின்னை' என்றும பாடம்.

௧0௧. இப்பதிகெழு நன்னாடு - இந்நகரத்தினையுடைய நல்ல சாவகநாடு.

௧0௨. கரந்து - மறைந்து

௧0௧ - ௧0௨ —௧௪-ம் காதை, ௫௫-௫௬.

௧0௩ ஈன்றாள் - தாய்.

௧0௧ - ௧0௪. நாடு தகைமையதாயது.

௧0௮. பிழையாது - தப்பாது.

ஊனுடை யுயிர்க ளுறுபசி யறியா
நீயொழி காலை நின்னா டெல்லாந்
தாயொழி குழவி போலக் கூஉந்
துயர்நிலை யுலகங் காத்த லின்றிநீ
யுயர்நிலை யுலகம் வேட்டனை யாயி
னிறுதி யுயிர்க ளெய்தவு மிறைவ
பெறுதி விரும்பினை யாகுவை யன்றே
தன்னுயிர்க் கிரங்கான் பிறவுயி ரோம்பு
மன்னுயிர் முதல்வ னறமுமி தன்றான்
மதிமா றோர்ந்தனை மன்னவ வென்றே
முதுமொழி கூற முதல்வன் கேட்டு
மணிபல் லவம்வலங் கொள்வதற் கெழுந்த
தணியா வேட்கை தணித்தற் கரிதா
லரசு முரிமையு மகநகர்ச் சுற்றமு
மொருமதி யெல்லை காத்தனின் கடனெனக்
கலஞ்செய் கம்மியர் வருகெனக் கூஉ
யிலங்குநீர்ப் புணரி யெறிகரை யெய்தி
வங்க மேறினன் மணிபல் லவத்திடைத்

---

௧௦௯. உயிர்கள் அறியா.

௧௧௦ நீ ஒழிகாலை-நீ நீங்கியபொழுது.

௧௧௧. கூஉம் - கூப்பிடும்; முற்று.

௧௧௦ - ௧௧௧:—"தாயி றூவாக குழவி போல, வோவாது கூஉம்" என்பது புறநானூறு, ௪; "புன்கண் கொள்ளனீ போந்ததற் கிரங்கினின், மன்பெரு நன்னாடு வாயெடுத தழைக்கும்" என்று இக் காதையிலேயே பினபு வருதல்காண்க; ௨௬௯ - ௨௭௦.

௧௧௩. உயர்நிலையுலகம் - நிருவாணம்; "வரனென்னும் வைப்பு" (திருக்குறள், ௨௪.) என்று வந்திருத்தல்காண்க. வேட்டனையாயின் - விரும்பினையாயின்.

௧௧௪. இறுதி - மரணம். உயிர்கள் இறுதியெய்தவும்.

௧௧௫. பெறுதி - இலாபம்.

௧௧௩ - ௧௧௫. வேட்டனையாயின் விரும்பினையாகுவை.

௧௧௬. தன்னுயிர்க்கு - தன்னுயிர் வருந்துதற்கு. ஓம்பும் - பாதுகாக்கும். மன்னுயிர்முதலவன் - புத்தன். அறம் - காருணியம. இது நீ துறந்து நிருவாணமடைதற்கெண்ணியது. இது முதல்வனறமுமன்று.

௧௧௬ - ௧௧௭. புத்தனை, 'பரதுக்கதுக்கன்' (சிவஞானசித்தியார், பரபக்கம், சௌத்திராந்திகன்மதம) என்று கூறியிருத்தலகாண்க.

௧௧௮. மதி மாறோர்ந்தனையென்றான்; பிறவுயிர்களின் வருததசதை நீக்கக்கருதாது தன்பயனைககருதித் துறததற்கு எண்ணினமையால்

௧௧௯. முதல்வன் - புண்ணியராசன்.

௯௮ - ௧௧௯. சனமித்திரன், மன்மனம் வேறுயினனென்று தொழுதேதி முதுமொழிகூற.

௧௨௩. மதி - மாதம்.

௧௨௪. கலஞ்செய் கம்மியர்-கப்பலில் தொழில்செய்வோர்; "கலம்புணர் கம்மியர்" (௭-ம் காதை, ௭௦.) என்று முன்புவந்திருத்சல் காண்க.

௧௨௫. புணரி - கடல்.

௧௧௯ - ௧௨௬. முசல்வன் அம்மொழியைக்கேட்டுக் காத்சல் நின்கடனெனக கூறிக் கூஉய் எய்தி ஏறினனென்க.

தங்கா தக்கலஞ் சென்றுசார்ந் திறுத்தலும்
புரைதீர் காட்சிப் பூங்கொடி பொருந்தி
யரசன் கலமென் றகமகிழ் வெய்திக்
காவலன் றன்னொடுங் கடற்றிரை யுலாவுந்
தேமலர்ச் சோலைத் தீவகம் வலஞ்செய்து
பெருமகன் காணாய் பிறப்புணர் விக்குந்
தரும பீடிகை யிதுவெனக் காட்ட
வலங்கொண் டேத்தினன் மன்னவன் மன்னவற்
குலந்த பிறவியை யுயர்மணிப் பீடிகை
கையகத் தெடுத்துக் காண்போர் முகத்தை
மையறு மண்டிலம் போலக் காட்ட
வென்பிறப் பறிந்தே னென்னிடர் தீர்ந்தேன்
றென்றமிழ் மதுரைச் செழுங்கலைப் பாவாய்
மாரி நடுநாள் வயிறுகாய் பசியா
லாரிரு ளஞ்சா தம்பல மணைந்தாங்
கிரந்தூண் வாழ்க்கை யென்பால் வந்தோர்க்
கருந்தூண் காணா தழுங்குவேன் கையி
னுடுவறங் கூரினு மிவ்வோடு வறங்கூரா
தேடா வழிய லெழுந்திது கொள்கென
வமுத சுரபி யங்கையிற் றந்தென்
பவமறு வித்த வானோர் பாவா

---

கஉஎ. தங்காது-இடையே தங்காமல். இறுத்தலும் - தங்கலும்.

கஉஅ. புரை - குற்றம். காட்சி - அறிவு. பூங்கொடி - மணிமேகலை.

கூ0-கூக. காவலன் றன்னொடும் வலஞ்செய்து.

கூஉ. பெருமகன் - அரசன்; அண்மைவிளி.

கஉஅ - கூங. பூங்கொடி பொருந்தி மகிழ்வெய்தி வலஞ்செய்து காட்ட.

கூரு. உலந்தபிறவி-போனபிறப்பில் நிகழ்ந்த செய்தியை.

கூஎ. மையறுமண்டிலம்-குற்றமற்ற கண்ணாடி; "வயக்குறு மண்டிலம்" என்பது கலித்தொகை, உரு.

கூரு - கூஎ. மண்டிலம்போலப் பீடிகை உலந்தபிறவியைக் காட்ட.

மேல்வருவன, பழம்பிறப்புணர்ந்த புண்ணியராசன் கூற்று.

கூகூ. கலை - வித்தை.

கச0. மாரிநடுநாள் - மழையையுடைய நடுஇரவில்.

கசஉ. இரந்துண்ணுமுணவையே வாழ்க்கைப்பொருளாகவுடைய என்பால்வந்தோர் பொருட்டு.

கசங. அழுங்குவேன்-வருந்துவேன்; பெயர்.

கசரு. 'வடாபரியல்' என்றும்பாடம்.

கசச - கசரு:—கச - ம் காதை, கஉ-கரு.

கசசு. அங்கையின் - அழகிய கையினால்.

கசஎ. பவம் - கருமக்கூட்டம்.

கூகூ - கசஎ. இவ்வடிகளிற்கூறப்பட்டுள்ள சரிதத்திரத்தை, இந்நூலில் கச - ம் காதை, ரு - ம் அடி முதலியவற்றால் உணர்க.

யுணர்விற் றோன்றி யுரைப்பொரு ளுணர்ந்து
மணிதிக ழவிரொளி மடந்தை நின்னடி
தேவ ராயினும் பிரம ராயினு
நாமாசு கழூஉ நலங்கிளர் திருந்தடி
பிறந்த பிறவிகள் பேணுத லல்லது
மறந்து வாழேன் மடந்தையென் றேத்தி
மன்னவன் மணிமே கலையுட னெழுந்து
தென்மேற் காகச் சென்று திரையுலாங்
கோமுகி யென்னும் பொய்கையின் கரையோர்
தூமலர்ப் புன்னைத் துறைநிழ லிருப்ப
வாயுத் திரளோ டாயிழை யிருந்தது
காவற் றெய்வதங் கண்டுவந் தெய்தி
யருந்துயிர் மருந்துமு னங்கையிற் கொண்டு
பெருந்துயர் தீர்த்தவப் பெரியோய் வந்தனை
யந்நா ளின்னை யயர்த்துப் போயினர்
பின்னாள் வந்துநின் பெற்றிமை நோக்கி
நின்குறி யிருந்து தம்முயிர் நீத்தோ
ரொன்பது செட்டிக ளுடலென் பிவைகா
ணாங்கவ ரிடவுண் டவருடன் வந்தோ

கசஅ. உரைப்பொருள் - சொற்பொருள்.

கசக. மணி - பளிங்கு; "மணிமருடெண்ணீர்" என்பது மலைபடுகடாம், உரு0; முத்துமாம்.

கருக. நாமாசு-நாக்குற்றம். கழூஉம்-போக்கும். 'நாமுறை புகழ்ந்த நலந்திகழ் திருந்தடி' என்றும் பாடம்.

கருஉ. பிறவிகள் - பிறவிகள்தோறும். பேணுதல் - உட்கொண்டு வழிபடுதல.

கருங. மடந்தை - விளி.

கசக - கருங. நின்னடிகளைப் பிறவிகடோறும் பேணுதலலலது மறவேன்.

கருரு. உலாம - உலாவும்.

கருசு. கரை - கரையில்.

கருங - கருஎ. மன்னவன் ஏத்தி எழுந்து சென்று கரையில நிழலில் இருப்ப வென்க.

கருஅ. 'ஆயிழை தன்னை' என்றும்பாடம்.

கருக. தெய்வதம் - தீவதிலகை.

கசுo 'அருந்துயிர் மருந்து' என்பது முதலியன, தீவதிலகை புண்ணியராசனை நோக்கிக்கூறும் கூற்று. உயிர்மருந்து-சோறு.

கசுக. பெருந்துயர் - பசிததுயர். வந்தனை - வந்தாய்.

கசுஉ. அந்நாள்-போனபிறப்பில் மதுரையிலிருந்து கப்பல்வழியேவந்து இத தீவத்தைஅடைந்த அந்தநாளில. அயாதது - மறந்து. போயினர் - வினையெச்சமுற்று.

கசுங. பெற்றிமை-தன்மை. என்றது உண்ணோன்போ டுயிர்பதிப்பெயர்ததமை; கச - ம் காதை, கூரு.

கசுச. நின்குறியிருந்து - நீஇறந்தவிடத்து உண்ணு நோன்புடனிருந்து; குறி-இடம்.

கசுசு. ஆங்கவரிடவுண்டு-அவ்வொன்பது செட்டிகளும் உணவளிக்கவுண்டு. 'ஆங்கவர் மடவா ரவருடன் வந்தோர்' என்றும் பாடம்.

சேர்ங்கிமெய் வைத்தோ ரென்பு மிவைகா
ணூர்திரை தொகுத்த வுயர்மணல் புதைப்ப
வாய்மலர்ப் புன்னை யணிநிழற் கீழா
லன்புடை யாருயி ராசற் கருளிய
வென்புடை யாக்கை யிருந்தது காணாய்
நின்னுயிர் கொன்றாய் நின்னுயிர்க் கிரங்கிப்
பின்னாள் வந்த பிறருயிர் கொன்றாய்
கொலைவ னலலையோ கொற்றவ னாயினை
பலர்தொழு பாத்திரங் கையி னேந்திய
மடவா னலலாய் நின்றன் மாநகர்
கடல்வயிறு புக்கது காரணங் கேளாய்
நாக நன்னா டாள்வோன் றன்மகள்
பீலிவளை யென்பாள் பெண்டிரின் மிக்கோள்
பனிப்பகை வானவன் வழியிற் றோன்றிய
புனிற்றிளங் குழவியொடு பூங்கொடி பொருந்தியித்
தீவகம் வலஞ்செய்து தேவர்கோ னிட்ட
மாபெரும் பீடிகை வலங்கொண் டேத்துழிக்
கம்பளச செட்டி கலமவண் திறுப்ப

---

கசுஎ. மெய்வைத்தோர் - உயிர்நீங்கினோர்.

கசுஅ. ஊர்திரை தொகுதத - பரந்த அலைகள் திரட்டிய. 'ஊதை யீட்டிய வுயர்மணல்' என்றும்பாடம்.

கசுகூ. ஆய்மலர்-அழகியமலர். கீழால-கீழிடததே; உருபுமயக்கம்.

கஎ0. அன்பையுடைய அரியவுயிரை உனககுக் கொடுதத. ஆருயிரென்றது, ஈண்டு விஞ்ஞானஸ்கந்ததனை.

கஎக. காணாய் - பாராய்.

கஎ0-கஎக. இவ்வடிகளோடு, "அன்போ டியைந்த வழககென்ப வாருயிர்க், கென்போ டியைந்த தொடர்பு." என்னும் எங-ம் திருக்குறள் ஒப்புநோக்கற்பாலது.

கசுஅ - கஎக. புதைப்பக் கீழால் யாக்கையிருந்தது காணாயென்க.

கஎச. கொலைவன் - கொல்லுதலைச் செய்பவன்; "கொலைவன் யார்கொலோ கொலைவன் மற்றிவன்" என்பது புறநானூறு, கருஉ.

கஎஉ - கஎச. 'நின்னுயிர் கொன்றாய்' என்பது முதலியன வஞ்சப்புகழ்ச்சி.

கஎரு. 'பலர்தொழுபாததிரம' என்பது முதலியன, தீவதிலகை மணிமேகலையைநோக்கிக் கூறுங்கூற்று.

கஎசு. நகர் - காவிரிப்பூம்பட்டினம்.

கஎசு - கஎஎ, நகர் கடலிலழுந்திற்று.

கஎஅ. நாக நன்னாடாள்வோன் - வளைவணன்.

கஅ0. பனிப்பகைவானவன்-சூரியன். வழி - பரம்பரை.

கஅக. பூங்கொடி - பீலிவளை.

கஅ0 - கஅக. பூங்கொடிபொருந்தியதனை, இந்நூல உச-ம காதையில் உகூ-ம் அடிமுதலியவற்றாலுணாக.

கஅக - கஅஉ. இததீவகமென்றது - மணிபல்லவததை.

கஅரு. பீடிகை - புத்தபீடிகை. எத்துழி - துதிக்குமிடத்து.

கஎஅ-கஅரு. மகள் என்பாள் மிக்கோள் பூஙகொடி குழவியொடுபொருந்தி வலஞ்செய்து வலஙகொணடு எத்துழியென்க.

கஅச. இறப்ப - தஙக.

வங்கவன் பாற்சென் றவன்றிற மறிந்து
கொற்றவன் மகனிவன் கொள்கெனக் கொடுத்தலும்
பெற்ற வுவகையன் பெருமகிழ் வெய்திப்
பழுதில் காட்சிப் பைங்கொடி புதல்வனைத்
தொழுதனன் வாங்கித் துறைபிறக் கொழியக்
கலங்கொண்டு பெயர்ந்த வன்றே காரிரு
ளிலங்குநீ ரடைகரை யக்கலங் கெட்டது
கெடுகல மாக்கள் புதல்வனைக் கெடுத்தது
வடிவேற் கிள்ளி மன்னனுக் குரைப்ப
மன்னவன் மகனுக் குற்றது பொறாஅ
னன்மணி யிழந்த நாகம் போன்று
கானலுங் கடலுங் கரையுந் தேர்வுழி
வானவன் விழாக்கோண் மாநக ரொழிந்தது
மணிமே கலாதெய்வ மற்றது பொறாஅ
ளணிநகர் தன்னை யலைகடல் கொள்கென
விட்டனள் சாபம் பட்ட திதுவாற்
கடவுண் மாநகர் கடல்கொளப் பெயர்ந்த
வடிவேற் றடக்கை வானவன் போல
விரிதிரை வந்து வியனகர் விழுங்க
வொருதனி போயின னுலக மன்னவ
னருந்தவன் றன்னுட னாயிழை தாயரும்
வருந்தா தேகி வஞ்சியுட் புக்கனர்
பரப்புநீர்ப் பௌவம் பலர்தொழக் காப்போ
ளுரைத்தன கேட்க வுறுகுவை யாயினின்

---

கஅ௫. அவன்றிறம் - அவன் காவிரிப் பூம்பட்டினத்திற்குச் செல்லுதலை.

கஅசு. கொடுத்தலும் (பீலிவளை) கொடுத்தலும்.

கஅகூ. தொழுதனன்வாங்கி - தொழுதுவாங்கி; கூ - ம் காதை, உ0. பிறக்கொழிய - பின்னொழிய.

கக0. இருள் - இருளில்.

ககஉ. கெடுத்தது - இழந்தசெய்தியை.

கக௪. உற்றது பொறாஅன் - உண்டான துன்பத்தைப் பொறாமல்.

கக௫:—எ - ம் காதை, கஉக.

ககசு. தேர்வுழி - தேருமிடத்து. 'கானலும் பொழிலும்' என்றும்பாடம்.

ககஎ. வானவன் விழாக்கோள் - இந்திரவிழாவெடுத்தலை.

ககசு - ககஎ. தேர்வுழி ஒழிந்தது.

உ00. பட்டது - உண்டானசெய்தி.

உ0க - உ0உ. (?)

உ0௪. ஒருதனி - துணையின்றி. மன்னவன் - நெடுமுடிக்கிள்ளி.

உ0௫. அருந்தவன் - அறவணவடிகள். ஆயிழைதாயர் - உன்தாயர்; என்றது மாதவியையும் சுதமதியையும்.

உ0எ. பௌவம்-கடல். காப்போள்-மணிமேகலாதெய்வம். பலர்தொழப்பௌவத்தைக்காப்போளென்க.

உ0அ. உரைத்தன-சொல்லப்பட்டன; முற்று.

உ0எ - உ0அ. மேற்கூறிய செய்திகள், காப்போளால் எனக்கு உரைக்கப்பட்டனவென்க. இனி, 'உரைத்தன' என்ப

மன்னுயிர் முதல்வனை மணிமே கலாதெய்வ
முன்னா ளெடுத்தது மங்கா ளாங்கவ
னறவர சாண்டது மறவணன் றன்பின்
மறுபிறப் பாட்டி வஞ்சியுட் கேட்பையென்
றந்தரத் தீவகத் தருந்தெய்வம் போயபின்
மன்னவ னிரங்கி மணிமே கலையுடன்
றுன்னிய தூமண லகழத் தோன்றி
யூன்பிணி யவிழவு முடலென் பொடுங்கித்
தான்பிணி யவிழாத் தகைமைய தாகி
வெண்சுதை வேய்ந்தவ ணிருக்கையி னிருந்த
பண்புகொள் யாக்கையின் படிவ நோக்கி
மன்னவன் மயங்க மணிமே கலையெழுந்
தென்னுற் றனையோ விலங்கிதழ்த் தாரோய்
நின்னா டடைந்தியா னின்னையீங் கழைத்தது
மன்னா நின்றன் மறுபிறப் புணர்த்தி
யந்தரத் தீவினு மகன்பெருந் தீவினு
நின்பெயர் நிறுத்த நீணில மாளு
மரசர் தாமே யருளறம் பூண்டாற்
பொருளு முண்டோ பிறபுரை தீர்த்தற்

---

தைப்பெயராக்கி, 'கேட்கவுறுகுவையாயின்' என்பதனோடு கூட்டிப் பொருளுரைப்பினும் பொருந்தும்.

௨௦௮ - ௨௦௯. நின்மன்னுயிர் முதல்வனென்றது - கோவலன்மரபில் முற்பட்டானொருவணிகனை.

௨௧௦. முன்னாள் - மரக்கலமுடைந்த அக்காலத்தில்.

௨௧௧. அறவரசாண்டது - புண்ணியதானஞ் செய்தது. 'ஆங்கவன்றன்னை' என்றும் பாடம்.

௨௧௩. தெய்வம் - தீவதிலகை.

இனிமணலைத்தோண்டித தன்பழைய உடம்பைக்கண்டு புண்ணியராசன் வருந்துதலும் மணிமேகலை அவனைத்தேற்றுதலும் கூறப்படும்.

௨௧௫. தூ - தூய்மை. அகழ - தோண்ட.

௨௧௬. ஊன்பிணியவிழவும்-தசையின் பிணிப்புநீங்கவும்.

௨௧௭. தானென்றது - யாக்கையை. பிணியவிழா - கட்டவிழாத.

௨௧௮. வெள்ளிய சுண்ணச்சாந்தால் வேயப்பட்டு அவ்விடத்து இருத்தல்போல இருந்த. 'வேய்ந்தவ ரிருக்கையின்' என்றும் பாடம்.

௨௧௯. படிவம் - வடிவம்.

௨௨௨. ஈங்கு - இத்தீவத்திற்கு.

௨௨௩. மறுபிறப்பு - பழம்பிறப்பு.

௨௨௪. அந்தரத்தீவினும் - இரண்டாயிரம் சிறுதீவுகளினும், அகன்பெருந்தீவினும் - நான்கு பெருந்தீவுகளினும்.

௨௨௫. பெயர் - புகழ்.

௨௨௨ - ௨௨௫. நின்னையீங்கழைத்தது உணாததிநிறுத்தற்பொருட்டேயென்க.

௨௨௭. உலகத்திற் குற்றந்தீர்த்தற்குப் பொருளேயிராது; எல்லாவுயிர்களும் குற்றமற்றனவாமென்றபடி. பிற - இடைச்சொல். புரை - குற்றம்.

௨௨௬ - ௨௨௭. இவ்வடிகளின் பொருள், "மன்னவ னெப்படி மன்னுயிரப்படி" எனனும் பழமொழியின் பொருளை விளக்கிற்று.

கறமெனப் படுவ தியாதெனக் கேட்பின்
மறவா திதுகேண் மன்னுயிர்க் கெல்லா
முண்டியு முடையு முறையுளு மல்லது
கண்ட தில்லெனக் காவல னுரைக்கு
மென்னாட் டாயினும் பிறர்நாட் டாயினு
நன்னுத லுரைத்த நல்லறஞ் செய்கே
னென்பிறப் புணர்த்தி யென்னைநீ படைத்தனை
நின்றிற நீங்க லாற்றேன் யானெனப்
புன்கண் கொள்ளனீ போந்ததற் கிரங்கினின்
மன்பெரு நன்னாடு வாயெடுத் தழைக்கும்
வங்கத் தேகுதி வஞ்சியுட் செல்வனென்
றந்தரத் தெழுந்தன ளணியிழை தானென.

ஆபுத்திரனோடு மணிபல்லவமடைந்தகாதை முற்றிற்று.

---

௨௩௦. உண்டிமுதலியவற்றையல்லாமல். உறையுள் - இருப்பிடம்; "பகுத்துண்டு பல்லுயி ரோம்புத னூலோர் - தொகுத்தவற்று ளெல்லாந் தலை" என்பது திருக்குறள், ௩௨௨.

௨௩௧. கண்டதில்லெனா - கண்டதில்லையென்று சொல்ல.

௨௨௮-௨௩௧. அறமெனப்படுவது எல்லாவுயிர்கட்கும் உண்டிமுதலியவற்றை யீதலையன்றி வேறுகண்டதில்லை யென்று மணிமேகலைசொல்ல; உண்டி முதலியவற்றை யீதலே யறமென்றபடி.

௨௩௨. ஆயினும்-எண்ணிடைச்சொல்.

௨௩௩. நன்னுதல் உரைத்த - நீசொல்லிய. செய்கேன் - செய்வேன்.

௨௩௪. என்பிறப்பு உணர்த்தி - என்பழம்பிறப்பை யறிவித்து. பழம்பிறப்புணர்ந்து நல்லறம் பூணுதற்குரிய விசேடவுணர்வினனாதற்குக் காரணமாயிருந்ததுபற்றி, 'என்னைநீ படைத்தனை' என்றான். இது, "நானவன்றன்மகள்" (சிலப்பதிகாரம், வாழ்த்துக்காதை, "தென்னவன்") என்றாற்போன்றது.

௨௩௫. நின்னிடத்தினின்றும் பிரியும் வன்மையிலலேனென்று அரசன் சொல்ல.

௨௩௬. புன்கண் கொள்ளல் நீ - நீ துன்பங்கொள்ளாதே. போந்ததற்கு இரங்கி - நீ இங்குவந்ததற்கு வருந்தி.

௨௩௭. நாடு உன்னையழைக்கும்.

௨௩௬ - ௨௩௭ :—௨௫ - ம் காதை, ௧௧௦-௧௧௧.

௨௩௮. ஏகுதி - போவாய்.

௨௩௯. அந்தரத்து-ஆகாயத்தில். அணியிழை - மணிமேகலை.

௧ - ௨௩௯. அரசன், புகுந்து வணங்கிக் கேட்டு, 'இவள் யார்' என்ன, கஞ்சு

கன், 'ஈங்குவந்தனள்' என்றலும், இள
ங்கொடி, 'வருவாய்' என்று புகன்று
எழுந்து இழிந்து போகி வலங்கொண்டு
பீடிகையைக்காண்டலும், அதனைத்தொ
ழுது அவள் வலங்கொள்ள, அப்பீடிகை
உணர்த்த, பணிந்து, 'போன்றது' என்
று ஏத்தி வலங்கொண்டு இன்னணமாக,
இறைவனும் விட்டுப் புக்குக் கேட்டு
எய்தி நினைந்து கள்ளாட்டிகழ்ந்து சா
ற்றி, 'விளைந்தது' என்று கூற, மந்திரி
சனமித்திரன், தொழுதேத்தி 'மன்னவ,
மதிமாறோர்ந்தனை' என்று முதுமொழி
கூற, முதல்வன் கேட்டு, 'காத்தல் நின்
கடன்' என்று கூறிக் கூஉய்க் கரையெ
ய்தி எறினன்; அக்கலம், சென்று சார்ந்
திறுத்தலும், பூங்கொடி, பொருந்தி
மகிழ்வெய்தி வலஞ்செய்து, 'பீடிகை
இது' எனக்காட்ட, மன்னவன் வல
ங்கொண்டேத்தினன், அவனுக்குப் பீடி
கை பிறவியைக்காட்ட, மன்னவன், 'மற
ந்துவாழேன்' என்று ஏத்தி மணிமேகலை
யுடன் எழுந்து சென்று இருப்ப, தெய்
வதம் கண்டு வந்தெய்தி, 'பெரியோய்,
வந்தனை; உடலென்பு இவைகாண்; என்
புமிவைகாண்; காணாய்; கொன்றாய்;
கொன்றாய்; ஆயினை; மடவரனல்லாய்,
நகர் கடல்வயிறு புக்கது; காரணங்கே
ளாய்; மணிமேகலாதெய்வம் சாபமிட்ட
னள்; இதுபட்டது; உலகமன்னவன்
போயினன்; தாயரும் புக்கனர்; கேட்
கவுறுகுவையாயின் வஞ்சியுட் கேட்பை'
என்று தெய்வம் போயபின், மன்னவன்
இரங்கிப் படிவ நோக்கி மயங்க, மணி
மேகலை எழுந்து, 'கண்டது இல்' என,
காவலன் உரைக்கும்; அங்ஙனம் உரைப்
பவன், 'நீங்கலாற்றேன் யான்' என, அ
ணியிழை, 'ஏகுதி; செல்வன்' என்று
எழுந்தனளென வினைமுடிவுசெய்க.

# இருபத்தாறுவது

# வஞ்சிமாநகர்புக்ககாதை.

[இருபத்தாறுவது மணிமேகலை கண்ணகிகோட்டமடைந்து வஞ்சிமாநகர் புக்கபாட்டு.]

அணியிழை யந்தா மாறு வெழுந்து
தணியாக் காதற் றாய்கண் ணகியையுங்
கொடைகெழு தாதை கோவலன் றன்னையுங்
கடவு ளெழுதிய படிமங் காணிய
வேட்கை துரப்பக் கோட்டம் புகுந்து
வணங்கி நின்று குணம்பல வேத்தி
யற்புக்கட னில்லாது நற்றவம் படாது
கற்புக்கடன் பூண்டு நுங்கடன் முடித்த

---

க. அணியிழை - மணிமேகலை.

உ. தணியா - குறையாத. தாய் கண்ணகி - தாயாகிய கண்ணகி.

ங. கொடைகெழுதாதைகோவலன் - ஈதல்பொருந்திய தாதையாகியகோவலன்; கோவலன் கொடையிற் சிறந்தவனென்பது, கீரிப்பிள்ளையை அறியாது கொன்ற கணவனால் நீப்புண்ட பார்ப்பனியின் கொலைப்பாவ நீங்குதற்குத் தருமாசனத்தோருரைத்த நூல்வழியே தானஞ்செய்து அப்பார்ப்பனியைக் கணவனோடுகூட்டிப் பாதுகாத்தானென்றற் றொடக்கத்துச் சரித்திரங்களால் நன்கு புலப்படும்; இதனை, சிலப்பதிகாரம், அடைக்கலக்காதையிற் காண்க.

ச. (இமயமலைச்சிலையால்) தெய்வமாகப்பண்ணிய வடிவத்தைத் தரிசித்தற்பொருட்டு; "கைவினை முற்றிய தெய்வப் படிமம்" (நடுகற்காதை, உஉஅ.) என்று சிலப்பதிகாரத்து வந்திருத்தல் காண்க. 'படிவங்காணிய' என்றும் பாடம்.

ரு. வேட்கை துரப்ப - ஆசை செலுத்துதலால். கோட்டம் - கோயில்; இது சேரன் செங்குட்டுவனாற் கட்டுவிக்கப்பட்டது.

எ. 'அற்புக்கடன்' என்பதுமுதலியன மணிமேகலைவார்த்தை. அற்புக்கடன்- காதலனிறப்ப உடனிறத்தலும் தீப்பாய்தலும். நற்றவம்படர்தல் - நல்லதவவழியிற்சேறல்; அஃதாவது கைம்மைநோன்பைநோற்று உடம்பை வருத்துதல்.

அ. கற்புக்கடன் பூண்டு - கற்பைக் கடனாக மேற்கொண்டு; "கற்புக்கடம் பூண்ட வித்தெய்வ மல்லது, பொற்புடைத தெய்வம் யாங்கண் டிலமால்" (அடைக்கலக்காதை, கசங - கசச) எனவும், "தற்பயந்தாட் கில்லைத் தன்னைப் புறங்காத்த, வெற்பயந் தாட்கு மெனக்குமோர் சொல்லில்லை, கற்புக் கடம்பூண்டு காதலன் பின்போந்த, பொற்றொடி நங்கைக்குத் தோழிநான் கண்டீர்" (வாழ்த்துக்காதை) எனவும் இவ்வண்ணம் கண்ணகியை முறையே கவுந்தியடிகளும் அடித்தோழியும் சிறப்பித்துப் பாராட்டி யிருததல் காண்க; சிலப்பதிகாரம். கண்ணகிகற்பை, மறக்கற்பென்றும், சிறியகற்பென்றுங் கூறுவர். நும் கடன்முடித்தது - உம்முடையகடனை நிறைவேற்றியது; என்றது, இங்கே மதுரையை அழற்படுத்திச் சிதைத்துப் பதினான்காநாளிற் கோவலனைச் சென்று கூடியதை யுணர்த்திற்று.

எ - அ. இவ்வடிகளின்கருத்து இன்ன

தருளல் வேண்டுமென் றழுதுமுன் னிற்ப
வொருபெரும் பத்தினிக் கடவுளாங் குரைப்போ
ளெம்மிறைக் குற்ற விடுக்கண் பொறாது
வெம்மையின் மதுரை வெவ்வழற் படுநாண்
மதுரா பதியெனு மாபெருந் தெய்வ
மிதுநீர் முன்செய் வினையின் பயனாற்
காசில் பூம்பொழிற் கலிங்கநன் னாட்டுத்
தாய மன்னவர் வசுவுங் குமரனுஞ்
சிங்க புரமுஞ் செழுநீர்க் கபிலையு
மங்காள் கின்றோ ரடற்செரு வுறுநாண்
மூவிரு காவத முன்னுந ரின்றி
யாவரும் வழங்கா விடத்திற் பொருள்வேட்டுப்
பல்கலன் கொண்டு பலரறி யாம
லெல்வளை யாளோ டரிபுர மெய்திப்
பண்டக கலம்பகர் சங்கமன் றன்னைக்

---

தாதலே, "காதல ரிறப்பிற் கனையெரி பொத்தி, யூதுலைக் குருகி னுயிர்த்தகத் தடங்கா, தின்னுயி ரீவ ரீயா ராயி, னன்னீர்ப் பொய்கையி னளியெரி புகுவர், நளியெரி புகாஅ ராயி னன்பரோ, டுடனுறை வாழ்க்கைக்கு நோற்றுடம் படுவர், பத்தினிப் பெண்டிர் பரப்புநீர் ஞாலத், தத்திறத் தாளு மல்லளெம் மாயிழை, கணவற் குற்ற கடுந்துயர் பொறாஅள், மணமலி கூந்தல் சிறுபுறம் புதைப்பக, கண்ணீ ராடிய கதிரிள வனமுலை, திண்ணிதிற் றிருகித் தீயழற் பொத்திக், காவலன் பேரூர் கனையெரி யூட்டிய, மாபெரும் பத்தினி" (உ-ம் காதை, ௪உ-ருரு) என்று இந்நூலில் முன்பு வந்திருத்தலாலுணர்க.

கூ. 'அழுதன ணிற்ப' என்றும்பாடம்.

க-கூ. அணியிழை எழுந்து புகுந்து வணங்கிநின்று எத்தி அருளல்வேண்டுமென்று அழுது நிற்பவென்க.

க0. பத்தினிக்கடவுள் - கண்ணகி.

கக. 'எம்மிறைக்கு' என்பது முதலியன, பத்தினிக்கடவுளாகிய கண்ணகிவார்த்தை. இறை - கோவலன். இடுக்கண் - துன்பம்; ஈண்டுக் கொலை.

கஉ. வெம்மையின் - கோபத்தால். மதுரை - மதுரையை. படுநாள் - படுத்து நாள்; விகாரம்.

கங. மதுராபதியென்பது மதுரையம் பதியின் அதிதேவதையின் பெயர்; "மதுரா பதியென்னு மாது" என்றார் இளங்கோவடிகளும்.

க௪. 'இதுநீர' என்பதுமுதலியன, மதுராபதி தனக்குக் கூறியதைக் கொண்டுகூறும் பத்தினிக்கடவுள் வார்த்தை. வினை - தீவினை. பயன் - பிரயோசனம். இது பயன். ஆல - அசை.

கரு. காசு - குற்றம்.

கசு. ஞாதியராகிய வசுவும் குமரனும்.

கஎ. கபிலை - கபிலபுரம். 'செழிநீர்க் கபிலை' என்றும் பாடம.

கசு - கஎ. சிங்கபுரம் வசுவுக்கும், கபிலை குமரனுக்கும் உரிய நகரங்கள்.

கஅ ஆள்கின்றோர் - பெயர். நாள் - நாளில்

கசு. மூவிருகாவதம்-ஆறுகாதம். முன்னுநர் - முறபடுவோர்.

உ0. வழங்கா - செல்லாத. பொருள் வேட்டு - பொருளை விரும்பி.

உக. கலன் - ஆபரணம்.

உஉ. எல்வளை - ஒளிபொருந்தியவளையையுடையாள்; என்றது நீலியை. அரிபுரம் - சிங்கபுரம.

உங. பண்டக்கலம் - பொன்னலாகிய அணிகலம; பண்டம் - பொன்; பண்டமும் கலமுமாம்; ஈண்டுப் பண்டம -

கண்டனர் கூறத் தையலின் கணவன்
பார்த்திபன் றொழில்செயும் பரத னென்னுந்
தீத்தொழி லாளன் றெற்றெனப் பற்றி
யொற்ற னிவனென வுரைத்துமன் னற்குக்
குற்றமி லோனைக் கொலைபுரிந் திட்டன
னங்கவன் மனைவி யழுதன ளரற்றி
யேங்கிமெய் பெயர்ப்போ ளிறுவரை யேறி
யிட்ட சாபங் கட்டிய தாகு
மும்மை வினைவந் துருத்தலொழி யாதெனு
மெய்ம்மைக் கிளவி விளம்பிய பின்னுஞ்
சீற்றங் கொண்டு செழுநகர் சிதைத்தேன்

---

௨௩. பகர்சங்கமன்தன்னை - விற்கும சங்கமனென்னும வணிகனை.

௨௪. தையல் - விளி.

௨௫. பார்த்திபனென்றது வசுவை. பரதனென்பது கோவலனுடைய பூர்வஜனமநாமதேயம்.

௨௬. தெற்றென - விரைவாக.

௨௭. ஒற்றன்-வேய்த்தறிபவன. மன்னற்குரைத்து. 'உரைத்து மன்னவனால்' என்றும பாடம்.

௨௮. குற்றமிலோனை - நிரபராதியை

௨௯. மனைவி - நீலியென்பவள். அழுதரற்றி.

௩0. மெய்பெயர்ப்போள் - உயிர்விடுவோள். 'மெய்வைப்போள்' என்றுமபாடம். இறுவரை - பெரியமலை; "இறுவரை யிவர்வதோ ரிலங்கெயிற் றரியென" என்பது சீவகசிந்தாமணி, கனகமாலையாரிலம்பகம், ௨௭௭.

௩௧. கட்டியதாகும் - பந்தித்ததாகும்.

௩௨. உம்மைவினை - பழவினை. உருத்தல் - தோன்றுதல்.

௩௩. கிளவி - சொல.

௧௩ - ௩௩. மாபெருந்தெய்வம் விளம்பியபின்னுமென்க. இச்சாபவரலாறு, "கடிபொழி லுடுத்த கலிங்கநன் னாட்டு, வடிவேற் றடக்கை வசுவுங் குமரனுந், தீம்புனற் பழனச் சிங்கபுரத்தினுங், காம்பெழு கானக் கபிலபுரத்தினு, மரசாள் செல்வத்து நிரைதார் வேந்தர், வீயாத் திருவின் விழுக்குடிப் பிறந்த, தாய வேந்தர் தம்முட் பகையுற, விருமுக் காவதத் திடைநிலத் தியாங்கணுஞ், செருவெல் வென்றியிற் செல்வோ ரின்மையி, னருமபொருள் வேட்கையிற் பெருங்கலன் சுமந்து, கரந்துறை மாக்களிற் காதலி தன்னொடு, சிங்கா வண்புகழ்ச் சிங்கபுரத்தினோ, ரங்கா டிப்பட் டருங்கலன் பகருஞ், சங்கம னெனனும் வாணிகன் றன்னை, முந்தைப் பிறப்பிற் பைந்தொடி கணவன, வெந்திறல் வேந்தற்குக் கோத்தொழில் செய்வோன், பரத னென்னும் பெயரனக் கோவலன், விரத நீங்கிய வெறுப்பின னாதலி, னொற்ற னிவனெனப் பற்றினன் கொண்டு, வெற்றிவேன் மன்னற்குக் காட்டிக் கொல்வுழீஇக், கொலைக்களப் பட்ட சங்கமன் மனைவி, நிலைக்களங் காணா ணீலி யென்போ, ளரசர் முறையோ பரதர் முறையோ, வூரீர் முறையோ சேரியீர் முறையோ வென, மன்றினு மறுகினுஞ் சென்றனள் பூசலிட், டெழுநா ளிரட்டி யெல்லை சென்றபின், றொழுநா ளிதுவெனத் தோன்ற வாழ்த்தி, மலைத்தலை யேறியோர் மால்விசும் பேணியிற், கொலைத்தலை மகனைக் கூடுபு நின்றோ, ளெம்முறு துயரஞ் செய்தோர் யாவதுந், தம்முறு துயரமிற் றாகுக வென்றே, விழுவோ ளிட்ட வழுவில் சாபம், பட்டனிர்" (சிலப்பதிகாரம், கட்டுரைகாதை, ௧௩௮ - ௧௭0) என்று கண்ணகிக்கு மதுராமாநகர்த் தெய்வங் கூறியதாக இளங்கோவடிகள் கூறியிருத்தலாலும் விளங்கவுணரப்படும்.

௩௪. நகர் - மதுரை.

மேற்செய்நல் வினையின் விண்ணவர்ச் சென்றே
மவ்வினை யிறுதியி னடுசினப் பாவ
மெவ்வகை யானு மெய்துத லொழியா
தும்ப ரில்வழி யிம்பரிற் பல்பிறப்
பியாங்கணு மிருவினை யுய்த்துமைப் போல
நீங்கரும் பிறவிக் கடலிடை நீந்திப்
பிறந்து மிறந்து முழல்வோம் பின்னர்
மறந்து மழைமாறு மகதநன் னாட்டுக்
கொருபெருந் திலகமென் றரவோ ருரைக்குங்
காவரும் பெருமைக் கபிலையம் பதியி
னளப்பரும் பாரமிதை யளவின்று நிறைத்துத்
துளக்கமில் புத்த ஞாயிறு தோன்றிப்
போதி மூலம பொருந்திவந் தருளித்
தீதறு நால்வகை வாய்மையுந் தெரிந்து

---

௩௫. விண்ணவர்ச்சென்றேம் - கணவனும் யானும் தேவராகச்சென்றேம்.

௩௬. அவ்வினை - மேற்செய்நலவினை. அடுசினப்பாவம் - மதுரையையழித்த கோபத்தாலுண்டானபாவம்.

௩௬-௩௭. பாவம் எய்துதலொழியாது.

௩௮. உம்பர் இலவழி - தேவருலகத்தில் நலவினை நுகர்ச்சியில்லாதவிடத்து.

௩௮ - ௩௯. பல்பிறப்பு யாங்கணும் - எல்லாப்பிறவியின் கண்ணும. இருவினையுய்த்து - இருவினைகளாற் செலுத்தப்பட்டு.

௪௨. ‘மழைவறு’ என்றும் பாடம். மகதநன்னாட்டுக்கு - மகதநாட்டுக்கு.

௪௩. திலகம் - மேலாதல். கபிலை இராசதானியாதலின், இங்ஙனம கூறப்பட்டது.

௪௪. கரவு-மறைத்தல. கபிலையம்பதி-கபிலநகர்; இது, கபிலரென்று பெயருள்ள ஒருமுனிவர் தவஞ்செய்தற்கு முனனம இடமாயிருந்ததுபற்றி இப்பெயர் பெற்றதென்பர்; கபிலவஸ்துவெனவும் வழங்கும்.

௪௫. பாரமிதை - உடம்பு நேரவும் உறுப்பு நேரவும் பொருள் நேரவும் தான முதல் ஞானமீறாகவுள்ள பத்தும பூரித்தல்; அவை, (௧) தானபாரமிதை, (௨) சீலபாரமிதை, (௩) க்ஷமாபாரமிதை, (௪) வீரியபாரமிதை, (௫) தியானபாரமிதை, (௬) ப்ரஜ்ஞாபாரமிதை, (௭) உபாயபாரமிதை, (௮) தயாபாரமிதை, (௯) பலபாரமிதை, (௧0) ஞானபாரமிதை யென்பன. இவை தசபாரமிதையென்று கூறப்படும். இதனை, “தானஞ் சீல மேபொறை தக்க தாய வீரிய, மூன மில்தி யானமே யுணர்ச்சி யோடு பாயமும், மான மில்ல ருளினை வைத்த லேவ லிம்மையு, ஞான மீறாம் பாரமிதை நாடுங காலி வைகளே.” என்னும் செய்யுளாலுணர்க; இது, நீலகேசி, மொக்கலவாதச்சருக்கவுரையிற் கண்டது. தசபாரமிதையென்பது, தசபாரமெனவும் வழங்கும்; இதனை, “இன் பஞ்சால் பெரும்பார மீரைந்து முடனிறைத்து, நன்கன நிலைபெற்ற நாதன்” (நீலகேசி, மொக்கலவாதச்சருககம.) எனவும், “ தானமே முதலாகத் தசபார நிறைததருளி, யூனமொன் றில்லாமை யொழிவின்றி யியற்றினையே” (வீரசோழியம், யாப்புப்படலம், ௧௧ - ம் கலித்துறையுதாரணம்) எனவும் வருவனவற்றாலுணர்க. அளவின்று - அளவில்லாமல். ‘அளவினறு நிறைந்து’ என்றும பாடம்.

௪௬ புத்தஞாயிறு - புத்தனாகிய ஞாயிறு.

௪௭. போதி - அரசவிருக்ஷம்; என்றது மகாபோதியை.

௪௮. நாலவகைவாய்மை - துக்கமுதலியன.

பன்னிரு சார்பின் பகுதித் தோற்றமு
மந்நிலை யெல்லா மழிவுறு வகையு
மிற்றென வியம்பிக் குற்றவீ டெய்தி
யெண்ணருஞ் சக்கர வாள மெங்கணு
மண்ண லறக்கதிர் விரிக்குங் காலைப்
பைந்தொடி தந்தை யுடனே பகவ
னிந்திர விகார மேழுமேத் துதலிற்
றுன்பக் கதியிற் றோற்றர வின்றி
யன்புறு மனத்தோ டவனறங் கேட்டுத்
துறவி யுள்ளந் தோன்றித் தொடரும
பிறவி நீத்த பெற்றிய மாகுவ
மத்திற மாயினு மநேக கால

---

௪௯. பன்னிருசார்பு - பேதைமைமுதலிய துவாதசநிதானங்கள்.

௫௦. பன்னிருசார்பின் அழிவும்.

௪௯ - ௫௦. "சார்பிற் றோற்றமுஞ் சார்பறுத் துய்தியும்" என முன்பு வந்திருத்தல் காண்க; ௨௫ - ம் காதை, ௫.

௫௧. இற்று - இத்தன்மைத்து; இதனைத் தோற்றத்தோடும் வகையோடும் தனித்தனியேகூட்டுக. குற்றவீடெய்தி - காமமுதலிய குற்றங்களினின்றும் விடுதலைபெற்று; "குற்றவீ டராக மாதிக குணங்களைக் குறைத்தலாகும்" என்பது சிவஞானசித்தியார், பரபக்கம், சௌத்திராந்திகனமதம், ௬.

௫௩. அண்ணல் - தலைமை. முன்பு புத்தனை ஞாயிறாக உருவகித்ததற்கேற்ப ஈண்டு அவனுபதேசிக்கப்படும் அறங்களைக் கதிராக உருவகஞ் செய்தார். 'விரிக்கும் போது' என்றும் பாடம்.

௪௨ - ௫௩. மகதநாட்டிற் கபிலையம்பதியில் நிறைத்துத் தோன்றி வந்தருளித் தெரிந்து இயம்பி எய்தி விரிக்குங் காலை யென்க.

௫௪. பைந்தொடி-முன்னிலைப்பெயர்.

௫௫. இந்திரவிகாரம் ஏழும் - இந்திரனால் நிருமிக்கப்பட்ட அரங்குகள் ஏழனையும்; இவை காவிரிப்பூம்பட்டினத்துள்ளவைகள், ஆகாயசாரிகள் மறையவிருந்து பௌத்தாகமத்தின் பொருளை யாவர்க்கும் விளங்கவுணர்த்துவதற்கு இடமாக இருப்பவை, இதனை, "பணையைந் தோங்கிய பாசிலைப் போதி, யணிதிகழ் நீழ லறவோன் றிருமொழி, யந்தர சாரிக ளறைந்தனர் சாற்று, மிந்திர விகார மேழுட னுபோகி" (சிலப்பதிகாரம், நாடுகாண்காதை, ௧௧ - ௧௪.) என்பதனாலுணர்க. ஏத்துதலின் - ஏத்திய புண்ணியத்தால்; இதனால், கோவலனும் கண்ணகியும் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்த பொழுது இவற்றை ஏத்திவழிபட்டார் களென்பது பெறப்பட்டது.

௫௬. துன்பக்கதி - துன்பத்தைச்செய்யும் இழிந்தபிறப்பு. தோற்றரவு - தோன்றுதல். 'இன்றி' என்றதனால், நற்கதியிற்பிறத்தல் கூறப்பட்டது.

௫௭. அவனறம் - அவன்செய்யும் தருமோபதேசமொழிகளை.

௫௫ - ௫௭. காலையிற் கேட்டென்க.

௫௮. துறவி - துறத்தல்; உள்ளத்தே துறவி தோன்றியென்க; "மாதவி துறவிக்கு" (௨ - ம் காதை, ௧௦) என்று இந்நூலில் முன்பு வந்திருத்தல்காண்க; திருச்சிற்றம்பலக்கோவையாரில், "அளவியை" என்னும் ௧௦.- ம் செய்யுளின் விசேடவுரையில், 'துறவு துறவியென நின்றாற்போல அளவு அளவியென நின்றது' என்று பேராசிரியர் எழுதியிருக்கின்றனர்.

௫௯. பெற்றி - நிருவாணம்.

௫௫ - ௫௯. ஏத்துதலின், இன்றிக் கேட்டுத் தோன்றி நீத்த பெற்றியமாகுவமென்க.

மெத்திறத் தார்க்கு மிருத்தியுஞ் செய்குவ
நறைகமழ் கூந்த லங்கை நீயு
முறைமையி னிந்த மூதா ரகத்தே
யவ்வவர் சமயத் தறிபொருள் கேட்டு
மெய்வகை யின்மை நினக்கே விளங்கிய
பின்னர்ப் பெரியோன் பிடகநெறி கடவா
யின்னதிவ் வியல்பெனத் தாயெடுத் துரைத்தலு
மிளையள் வளையோ ளென்றுனக் கியாவரும்
விளைபொரு ளுரையார் வேற்றுருக் கொள்கென
மையறு சிறப்பிற் றெய்வதந் தந்த
மந்திர மோதியோர் மாதவன் வடிவாய்த்

---

சுக. இருத்தி - வித்தி

சுஉ. 'நறைகமழ்கூந்தல்' என்பதுமுதலியவற்றால் மணிமேகலைக்குப் பின் நிகழ்வன கூறுவாள்.

சுரு. இந்தமூதூரென்றது வஞ்சிநகரத்தை.

சுரு. மெய்வகையின்மை - உண்மையில்லாமை. 'விளங்கி' என்றும் பாடம்.

சுசு. பெரியோன் பிடகநெறி - புத்தனருளிச்செய்த ஆகமங்களின் வழியை. புத்த தன்ம சங்கமென்னு மூன்றுமணிகளும் யாதோரிடையூறுமின்றியிருத்தற்கிடமாய்க் கூடைபோலுதலின், பௌத்தாகமங்கள் பிடகமெனப்பட்டனவென்பர்; பிடகம் - கூடை; பிடகம், வினயபிடகம் ஸூத்திரபிடகம் அபிதர்மபிடகமென மூன்றுவகைப்படும்; இவற்றைத் திரிபிடகமென்றும், பிடகத்திரயமென்றும் வழங்குவர்; அவற்றுள், முதலாவது வினயபிடகம், விபங்கம் கண்டகம் பரிவாரபாடமென மூன்றுவகைப்படும். இவற்றுள், விபங்கம் பாராஜிகாதி பிரதமபாகமென்றும் (இது சங்கத்திலிருந்து விலக்குதற்குரிய குற்றங்களைக் கூறுவது), பிராயச்சித்தீயாதி துவிதீய பாகமென்றும் (இது பிராயச்சித்தத்தால் நிவர்த்தித்தற்குரிய குற்றங்களைக் கூறுவது) இரண்டு பகுதியுடைத்து; கண்டகம், மஹாவர்க்கம் க்ஷுல்லவர்க்கமென இரண்டு பகுதி யுடைத்து; இரண்டாவது ஸூத்திரபிடகம், தீர்க்கநிகாயம், மத்தியமநிகாயம், ஸம்யுக்தநிகாயம், அங்கோத்தரநிகாயம், க்ஷுத்திரக நிகாயமென ஐந்துவகையினையுடைத்து [நிகாயம் - கூட்டம்]. இவற்றுள், க்ஷுத்திரகநிகாயம் க்ஷுத்திரகபாடம், தருமபதம், உதானம், இதத்யுக்தம், ஸூத்திரநிபாதம், விமானவஸ்து, பிரேதவஸ்து, ஸ்தேரகாதை ஸ்தேரீகாதை (ஸ்தேரரென்றும், ஸ்தவிரரென்றும் உத்தம பிக்ஷுக்களுக்குப்பெயர்), ஜாதகம், நிர்த்தேசம், பிரதிஸம்பிதாமார்க்கம், அபதானம், புத்தவம்சம், சரியாபிடகமெனப் பதினைந்து பகுதியுடைத்து. மூன்றாவது அபிதர்மபிடகம் [தர்]மசங்கணி, விபங்கம், கதாவஸ்துப்பிரகரணம், புத்கலப்பிரஜ்ஞப்தி, தாதுகதை, யமகம், பிரஸ்தானப்பிரகரணமென ஏழுவகையினையுடைத்து; "ஆத்தனேயெனத் தெளிந்தவண்மாநதிருந் தவர்கருச, சூத்திரம்மிது வினயமு மிதுவிது பறிதாஞ், சாத்திரம்மிவை மூன்றென வன்றவத் தோன்றல், பாத்து ரைக்குந்தன் பதப்பொருள் பலவகைப் படவே" என்பது நீலகேசித் திரட்டு.

சுஎ. தாய் - கண்ணகியாகிய பத்தினிக்கடவுள்.

இனி, மணிமேகலை வேற்றுருக்கொண்டு வஞ்சி நகரத்துள்ளே செல்லுதல் கூறப்படும்.

சுகூ. 'வேண்டுருக்கொள்கென' என்றும் பாடம்.

சுஅ-சுகூ.—கo-ம் காதை, ஙக-அo

எo. தெய்வதம்-மணிமேகலாதெய்வம்.

எக. மந்திரம் - வேற்றுருவெய்துவிக்கு மந்திரம்

தேவ குலமுந் தெற்றியும் பள்ளியும்
பூமலர்ப் பொழிலும் பொய்கையு மிடைந்து
நற்றவ முனிவருங் கற்றடங் கினரு
நன்னெறி காணிய தொன்னூற் புலவரு
மெங்கணும் விளங்கிய வெயிற்புற விருக்கையிற்
செங்குட் டுவனெனுஞ் செங்கோல் வேந்தன்
பூத்த வஞ்சி பூவா வஞ்சியிற்
போர்த்தொழிற் றானை குஞ்சியிற் புனைய
நிலநா டெல்லைதன் மலைநா டென்னக்
கைம்மலைக் களிற்றினந் தம்முண் மயங்கத்
தேரு மாவுஞ் செறிகழன் மறவருங்
கார்மயங்கு கடலிற் கலிகொளக் கடைஇக்
கங்கையம் பேர்யாற் றடைகரைத் தங்கி
வங்க நாவியி னதன்வடக் கிழிந்து
கனக விசயர் முதற்பல வேந்த

---

௭௨. குலம் - கோயில்; "தேவகுலநிழல்" என்பது ஆசாரக்கோவை, ௩௩. தெற்றி - வேதிகை; திண்ணையுமாம். பள்ளி - சாலை; "ஒதுக்கின் றிணிமணற் புதுப்பூம் பள்ளி" என்பது புறநானூறு, ௩௩.

௭௩. மிடைந்து - நெருங்கி.

௭௫. காணிய - கண்ட.

௭௨ - ௭௬. தேவகுலமுதலியன மிடைந்து முனிவர் முதலியோர் எங்கணும் விளங்கிய இருக்கையென்க.

௭௭. செங்குட்டுவன்-சேரன்; இவன் இளங்கோவடிகள் தமையன்; கண்ணகியைப் பிரதிஷ்டிப்பித்தோன்.

௭௮. பூத்தவஞ்சி-வஞ்சிமலர்; பகைவர் நாட்டைக் கொள்ளநினைந்து போர் செய்தற்கு அவர்மேற்செல்வோர் அதற்கு அறிகுறியாக அணிந்துகொள்வது; இது முதலுக்கேற்ற அடையடுத்து நின்றது. பூவாவஞ்சி - கருவூர்; வெளிப்படை; இந்நகரை வாடாவஞ்சியென்றுங் கூறுவர்; "பூவா வஞ்சியிற் பூத்த வஞ்சி, வாய்வா ணெடுந்தகை மணிமுடிக் கணிந்து" என இப்படியே சிலப்பதிகாரத்தும் வருதல் காண்க; கால்கோட்காதை, ௫௦ - ௫௧. 'பூவா வஞ்சியிற் பூத்த வஞ்சி' என்றும் பாடம்.

௭௬-௭௭. இருக்கையினையுடைய பூவா வஞ்சியென்க.

௭௯. தானை - சேனை. குஞ்சி - குடுமி. 'புனைந்து' என்றும்பாடம்.

௭௮ - ௭௯. பூவாவஞ்சியிற் பூத்தவஞ்சியைத் தானை குஞ்சியிற் புனையவென்க.

௮௧. கையையுடைய மலைபோலுங் களிற்றினம. மயங்க - கலக்க.

௮௦ - ௮௧. மலைநாடென்று சொல்லும் வண்ணம் களிற்றினங்கள் மயங்கவென்க; செல்லுநெறிககணுள்ள நாடுகள், யானைகளின் மிகுதியால் மலைநாடென்று சொல்லப்பட்டன.

௮௩. கலிகொள - முழங்க. கடைஇ- செலுத்தி.

௮௫. நாவி - மரக்கலவிசேடம்; இம்மொழி மலைநாட்டில் வழங்குகின்றது. வங்கநாவி - இருபெயரொட்டுப்பண்புத்தொகை. 'வங்கநாவாய்' என்றும், 'வடகிழககிழிந்து' எனறும் பாடம். இழிந்து- இறங்கி.

௮௬. கனகவிசயர் - கனகனும் விசயனும்; இவர் ஆரியவரசர். பலவேந்தர் - உத்தரன, விசித்திரன, உருத்திரன், பைரவன், சித்திரன், சிங்கன், தனுத்தரன், சிவேதன்முதலியோர்; இசனை, சிலப்

ரனைவரை வென்றவ ரம்பொன் முடிமிசைச்
சிமய மோங்கிய விமய மால்வரைத்
தெய்வக் கல்லுந் தன்றிரு முடிமிசைச்
செம்பொன் வாகையுஞ் சேர்த்திய சேரன்
விற்றிறல் வெய்யோன் றன்புகழ் விளங்கப்
பொற்கொடிப் பெயர்ப்படூஉம் பொன்னகர்ப் பொலிந்தன
டிருந்துநல் லேது முதிர்ந்துள தாதலிற்
பொருந்துநால் வாய்மையும் புலப்படுத் தற்கென.

வஞ்சிமாநகர்புக்ககாதை முற்றிற்று.

---

பதிகாரம், கால்கோட்காதை, கஅஉ - ம் அடி முதலியவற்றிற்காண்க.

அஎ. அனைவரைவென்று - எல்லோரையும் வென்று; உம்மை விகாரவகையால தொக்கது. அவரென்றது கனகவிசயரை.

அஅ. சிமயம் - உச்சி.

அகூ தெய்வககல - பத்தினிக்கடவுளாகிய கண்ணகிவடிவம் அமைததற்குரிய கல்.

கூ0. வாகை - வாகைமலர்; பகைவரை வென்றோர் வென்றதற்கு அறிகுறியாக அணிந்துகொள்ளுவது; அரசர் அம்மலரைப் பொனனாற்செய்து அணிந்துகொள்ளுதல் இயல்பாதலின, 'செம்பொன் வாகை' என்றார்; "பொலந்தோட்டுப் பைந்தும்பை" (உஉ - ம் பாட்டு) எனவும, "பொலந்துமபை" (கூஎ - ம் பாட்டு) எனவும் புறநானூற்றிற் கூறியிருததல காண்க.

அஎ - கூ0. அவர் முடிமிசைக் கல்லும் தன்முடிமிசை வாகையுஞ் சேர்த்திய சேரனென இயைக்க.

எஅ - கூ0. புனைய மயங்கக் கலிகொளக் கடைஇத் தங்கி இழிந்து வென்று சேர்த்தியசேரனென்க. சேரன்செஙகுட்டுவன் வடநாடுசென்று ஆரியவரசரை வென்று கற்கொணடுமீண்ட வரலாற்றை, சிலப்பதிகாரம், கால்கோட்காதை முதலியவற்றால் விளங்கவுணர்க.

கூக. விற்றிறல்வெய்யோன் - வில்வலியை விரும்பினோன்; "வெம்முனை வெற்றி விறல்வெய்யோன்" என்பது புறப்பொருள்வெண்பாமாலை, காஞ்சிப் படலம், அ.

எஎ - கூக. வேந்தன் சேரன் வெய்யோன் அவன்றன்புகழென்க.

கூஉ. பொற்கொடி - அழகியகொடி; என்றது வஞ்சிக்கொடியை. நகர் - கருவூர்; "பூங்கொடிப் பெயாப்படூஉ, திருந்திய நனனகர்" (உஅ - ம் காதை, க0க - க0உ) என்று பின்வருதல் காண்க.

கூக - கூஉ. விளங்கப் பொலிந்தனள்.

கூரு. நலலேது - நல்வினையாகிய காரணம்.

கூஉ - கூரு. ஆதலிற் பொலிந்தனள்.

கூச. நாலவாய்மை - நான்குவகைப்பட்ட ஸத்தியம்; அவை துக்கமுதலியன; இவற்றை ஸத்திய சதுஷ்டயமென்பர்.

கூஉ - கூச. புலப்படுத்தற்குப் பொலிந்தனளென்க

க - கூச. அணியிழை, எழுந்து புகுந்து நின்று எத்தி 'அருளல்வேண்டும்' என்று அழுதுநிற்ப, பததினிககடவுள் உரைப்பாள்; அஙஙன முரைப்பவளாகியதாய், 'இனன திவ்வியல்பு' என எடுததுரைததலும, மணிமேகலை ஒதி வடிவாய்ப் பொன்னகர்ப் பொலிந்தனளென வினைமுடிவுசெய்க.

இருபத்தேழாவது

# சமயக்கணக்கர் தந்திறங்கேட்டகாதை.

[இருபத்தேழாவது வஞ்சிமாநகர்ப்புறத்துச் சமயக்கணக்கர் தந்திறங்கேட்டபாட்டு.]

நவையறு நன்பொரு ளுரைமி னோவெனச்
சமயக் கணக்கர் தந்திறஞ் சார்ந்து
வைதிக மார்க்கத் தளவை வாதியை
யெய்தின ளெய்தியின் கடைப்பிடி யியம்பென
வேத வியாதனுங் கிருத கோடியு
மேதமில் சைமினி யெனுமிவ் வாசிரியர்
பத்து மெட்டு மாறும பண்புறத்
தத்தம் வகையாற் றமபகர்ந் திட்டனர்
காண்டல் கருத லுவம மாகம
மாண்டைய வருத்தா பத்தி யோடியல்
பைதிக மபாவ மீட்சி யொழிவறி
வெய்தியுண் டாநெறி யென்றிவை தம்மாற்
பொருளி னுண்மை புலங்கொளல் வேண்டு

---

க. நவை - குற்றம். பொருள் - தத்துவம்.

உ. சமயக்கணக்கர் - சமயவாதிகள். திறம் - தொகுதி; இடமுமாம்.

க - உ. உரைமினோ வெனச்சார்ந்து.

ந. அளவைவாதி - பிரமாணவாதி

ச. கடைப்பிடி - சித்தாந்தம். இயம்பென - சொல்லென்று மணிமேகலையினுவ.

ந - ச. அளவைவாதியை எய்தி இயம்பென.

**பிரமாணவாதம் :—**

ரு. 'வேதவியாதனும்' என்பதுமுதலியன அளவைவாதியின் வார்த்தை.

சு. ஏதம் - குற்றம்.

ரு - அ. வேதவியாதன் பததளவையும், கிருதகோடி எட்டளவையும், சைமினி ஆறளவையும் பகர்ந்திட்டனரென்க.

கூ. 'காணடல்' என்பது முதலியவற்றால் பததளவைகளின் பெயரும், அவற்றினிலக்கணமுங் கூறப்படும். காண்டல் - பிரத்தியக்ஷம். கருதல் - அனுமானம; இது கருத்தெனவும் வழங்கும்.

க0. இயல்பு - ஸ்வபாவலிங்கம்; 'இயைபு' என்றும்பாடம்.

கக. ஐதிகம் - ஐதிஹ்யம். அபாவம் - இன்மை. மீட்சியொழிவறிவு - மீட்சியினால் ஒழிந்தபொருளை யறியுமளவை; என்றது பாரிசேடத்தை.

கஉ. உண்டாநெறி - சம்பவம். இவை தம்மால் - காண்டன்முதலிய இந்தப்பத்துப் பிரமாணஙகளாலே.

கந. புலங்கொளல் - அறிதல்.

மருளில் காட்சி யைவகை யாகுங்
கண்ணால் வண்ணமுஞ் செவியா லோசையு
நண்ணிய மூக்கா னாற்றமு நாவாற்
சுவையு மெய்யா னூறுமெனச் சொன்ன
விவையிவை கண்டுகேட் டுயிர்த்துண் டுற்றுத்
துக்கமுஞ் சுகமு மெனத்துயக் கறவறிந்
துயிரும் வாயிலு மனமுமூ றின்றிப்
பயிலொளி யொடுபொரு ளிடம்பழு தின்றிச்
சுட்ட றிரிதல கவர்கோட றொன்றாது
கிட்டிய தேச நாம சாதி
குணக்கிரி யையி னறிவ தாகுங்
கருத்தள வாவது
குறிக்கொ ளனுமா னத்தனு மேயத்
தகைமை யுணருந் தன்மைய தாகு
மூவகை யுற்றது பொதுவெச்ச முதலாம்
பொதுவெனப் படுவது சாதன சாத்திய
மிவையந் நுவய மின்று யிருந்துங்
கடந்திகழ் யானைக் கானவொலி கேட்டோ
னுடங்கெழில் யானையங் குண்டென வுணர்த
லெசச மென்பது வெள்ளவே துவினா
னிச்சயித் தத்தலை மழைநிகழ் வுரைத்தன்

---

**காட்சியளவை :—**

கச. 'மருளில்' என்பது முதலாகக் காட்சியளவையினிலக்கணங்கூறப்படும். மருள் - மயக்கம். காட்சி - பிரதக்ஷியக்ஷப் பிரமாணம்.

ககூ. துயக்கு - தடை.

உ0. வாயில்-இந்திரியம். ஊறு-இடையூறு.

உக. ஒளி - சோமசூரியாக்கினிகள்.

உஉ. சுட்டல் - பொருளுண்மைமாத்திரைகாணடல். திரிதல் - ஒன்றை மற்றொன்றாகக்கருதல்; இது விபரீதமெனப்படும். கவர்கோடல்-சந்தேகம் ; "கண்ட பொருளை யிரட்டுறவே கருத லையந் திரியவே, கொண்ட றிரிவாம்" என்பது சிவஞானசித்தியார், சுபக்ஷம், அளவை, ௩.

**அனுமானவளவை :—**

உரு. 'கருத்தளவு' என்பதுமுதல் அனுமானப்பிரமாணம் கூறப்படும். கருத்தளவு - அனுமானப்பிரமாணம்.

உசு. அனுமானத்து-அனுமானத்தால்; 'அனுமானமாவது சாத்தியத்தையொழியச் சம்பவியாததாகிய சாதனத்தாற் சாத்தியத்தைப்பற்றிப் பிறக்கும் ஞானமாகும்' என்பர் நீலகேசிவிருத்திசமயதிவாகரமுடையார். அனுமேயம் - அனுமித்துணரப்படுவது.

உஅ. அது - அவ்வனுமானவளவை. அது பொதுவெனவும் எச்சமெனவும் முதலெனவும் மூன்று வகைப்படும்.

உகூ. சாதனம்-எது. சாத்தியம-துணிபொருள்.

௩0. இவை-இவற்றிற்கு. அந்நுவயம்-சேர்க்கை ; அஃதாவது நியதமான உடனிகழ்ச்சி. 'இவைதமொடு' என்றும்பாடம்.

௩க. கடம் - மதம். கானம் - காடு.

௩உ. உடங்கு - உடனே.

உகூ-௩உ. பொதுவெனப்படுவது உணர்தலென்க. பொதுவைச் சாமானியானுமான மென்பர்.

௩௩ - ௩ச. வெள்ள எதுவினால் - வெள்

முதலெனமொழிவது கருக்கொண் முகில்கண்
டிதுமழை பெய்யு மெனவியம் பிடுத
லென்னு மேதுவி னென்றுமுக் காலந்
தன்னி லொனறிற் சார்ந்துள தாகி
மாண்ட வுயிர்முதன் மாசின் றாகிக
காண்டற் பொருளாற் கண்டில துணர்த
லுவம மாவ தொப்புமை யளவை
கவய மாவாப் போலுமெனக கருத
லாகம வளவை யறிவ னூலாற்
போக புவன முண்டெனப் புலங்கொள
லருத்தா பத்தி யாய்க்குடி கங்கை
யிருக்கு மென்றாற் கரையிலென் றெண்ண
லியல்பி யானைமே லிருந்தோன் றோட்டிக்
கயலொன் றியா ததுவே கொடுத்த

ளமாகிய சாதனத்தால. அத்தலை - அவ்விடம். எசசமென்பது வெள்ளவேதுவினால் அத்தலை மழைநிகழ்வு நிச்சயித்துரைதல. இதனைச் சேஷானுமானமெனவும் காரியானுமானமெனவுங்கூறுவர்.

௩௫. கரு - சூல். முகில் - மேகம்.

௩௬. இது - இம்மேகம்.

௩௫ - ௩௬. முதலெனமொழிவது சூற்கொண்ட மேகத்தைககண்டு இது மழை பெய்யுமென்று நிசசயித்தல். இதனைக் காரணானுமானமெனவும், பூர்வானுமானமெனவுங கூறுவர். இது, பாவியை (வரற்பாலதை) முன்னமே அனுமிப்பது.

௩௭ - ௩௯. இவ்வடிகளிற் கூறப்பட்டுள்ள அனுமானங்களை, "இடிதது மின்னியிருணடு மேக மெழுந்த போதிது பெய்யுமென், றடுத்த தும்மகில் சந்த முந்கியலைத்து வார்புன லாறுகொண், டெடுத்து வந்திட மால்வ ரைக்க ணிருந்து கொண்டல் சொரிந்ததென்ற, முடித்த தும்மிவை காட்சி யன்றனு மான மென்று மொழிந்திடே" சிவஞானசித்தியார், (பரபக்ஷம், உலோகாயதன்மதமறுதலை, ௨.) என்பதனாலுமுணர்க.

௩௮. தன் - பன்மையொருமைமயக்கம்.

௩௯. உயிர்முதல் - உயிரும் இந்திரியமும் மனமும். 'உயிரும் வாயிலு மனமுமூறின்றி' என்றார் முன்னும்; ௨௭-ம்காதை, ௨௦.

உவமவளவை :—

௪௨. கவயமா - ஒரு மிருகவிசேடம். ஆப்போலும் - பசுவையொககும்.

௪௧-௪௨. "கண்ணன் கருமுகிலபோல் வண்ணனெனக் கேட்டவனைக், கண்ணுமுணர் வொப்பெனவே காண்" என்றும வரும்.

ஆகமவளவை :—

௪௩. அறிவனூல - ஆப்தன்வாக்கியமாகியநூல்.

௪௪. போகபுவனம் - சுவர்க்க நரகங்கள். புலங்கொளல் - அறிதல்.

௪௩ - ௪௪. ஆகமவளவையாவது புலங்கொளலென்க. இதனைச் சாத்தமெனறும் உரையளவையென்றுங் கூறுவர்.

அருத்தாபத்தியளவை :—

௪௫. ஆய்க்குடி - இடைச்சேரி.

௪௫ - ௪௬. இது பொருளளவையென்றுங் கூறப்படும; "அடுதநுல கோதும் பொருளருத் தாபத்தி யாமதுதான், எடுத்த மொழியினஞ் செப்புவ தாகுமிவ ஆரிலுளர், படைத்தவ ரென்னிற் படையா தவருமுண் டென்றமிவன், கொடுப்பவ னென்னிற் கொடாதாரு முண்டென்றுங் கொள்வதுவே" என்றும்வரும.

இயல்பளவை :—

௪௭. 'இயைபு' எனவும்பாடம். இருந்தோன் ஒன்றுதாவெனி லென வருவித்துக்கொள்க. தோட்டி - அங்குசம்.

௪௭-௪௮. "மாமே லிருந்தொரு கோறு

ஐதிக மென்ப துலகுரை யிம்மாத்
தெய்திய தோர்பே யுண்டெனத் தெளித
லபாவ மென்ப தின்மையோர் பொருளைத்
தவாதவ் விடத்துத் தானிலை யென்றன்
மீட்சி யென்ப திராமன்வென் றனென
மாட்சியி விராவணன் றோற்றமை மதித்த
லுள்ளநெறி யென்பது நாராசத்திரிவிற்
கொள்ளத் தகுவது காந்தமெனக் கூற
லெட்டுள பிரமா ணபாசங்கள்
சுட்டுணர் வொடுதிரி யக்கோட லையந்
தேராது தெளிதல் கண்டுணராமை
யெய்து மிலவழக் குணர்ந்ததை யுணர்த

---

வெனிற்சுள்ளிக கோறரலுஞ், சோமே லிருந்தொரு கோறு வெனிறறர வேது ணிநது, பூமேவு கண்ணழுத தங்கோல கொடுததலும் பூதலத்தே, நாமே வியல பென்று கூறுவர் நலலசொன் ஞவலரே" என்றும்வரும்; சோ - மதில்.

**ஐதிகவளவை :—**

சக, உலகுரை - உலோகவாதம். அஃ தாவது கர்ணபரம்பரையால் வரும்வாக் கியம்.

சக-௫0. "கொன்பயில் வேலைக் கடலபுடை சூழுங் குவலயத்தோ, ரனபுட ஞலி லலகையுண் டென்பர்க ளென்ப துவு, மின்பயில் புற்றில் விடநாக முண டென்ப ரென்பதுவு, மென்பர்க ணவல ரென்பது மைதிக மென்பர்களே" என் றும வரும்.

**அபாவவளவை :—**

௫க - ௫உ. அபாவமாவது இன்மையா குமு; அஃது ஒருபொருளை இல்லையென் பது.

**மீட்சியளவை :—**

௫ச, மாட்சி - பெருமை.

௫ரு - ௫ச. இஃது ஒழிபெனவும் பாரி சேடமெனவும் கூறபபடும். "சீராரொ ழிபென்று செப்பப் படுவது திணபுவி மேற், போராடி நின்று பொருதா ரிருவர்தம் போர்க்களத்துப், பாரா ரிராகவன் வென்று னெனிற்றன் பரிசழிந்து, நேரா பிராவணன் றோற்றசொல் லாகி நிகழ்வதுவே" என்றும் வரும். மூன்று பெயரிலே இருவரைக் கள்வரல்லரென் றால் நின்றவொருவனைக் கள்வனென்ற றிகையுமது.

**சம்பவவளவை :—**

௫௫. நாராசததிரிவின் - இருப்புச்சலா கையின் சலனததால.

௫௫ - ௫௬. உள்ளநெறி யெனினும், உணடாநெறி யெனினும், சம்பவமெனி னு மொககும்; "துயககற வுணமை யெனநா வலர்க ணிந்துரைப்ப, தியற் கைப் பொருளினை யிற்றென லாமிது தானுரைக்கின், வியக்குற்ற கால்சலிக குநீச் சுடும்விய னீர்குளிரும், வயக்குற்ற மணவலி தென்றுபட் டாங்கு வழங்குவதே" எனறுமவரும்; ஆயிரததில நூறணடென்பதும், நூற்றிலே தொண்ணூறணடென்பதுமது.

மேல் உவமைமுதலிய அளவைகளுக்குக காட்டிப்போந்த "கண்ணன் கருமுகில்போல்" என்றற் றொடக்கத்துச் செய்யுட்கள், சிவஞானசித்தியார், சுபக்ஷம், அளவையிலக்கணததிற்கு மறைஞானதேசிகர் எழுதியவுரையிற் காணப்பட்டன.

இதுகாறும் காட்சிமுதலிய அளவைகள் பத்தும அவற்றினிலக்கணங்களும் முறையே கூறப்பட்டன. இனி, சுட்டுணர்வு முதலிய பிரமாணபாசங்களெட்டும் அவற்றினிலக்கணஙகளும் முறையே கூறப்படும்.

**பிரமாணபாசங்கள் எட்டு :—**

௫எ. பிரமாணபாசங்கள் - பிரமாணப் போலிகள்.

னினைப்பென நிகழ்வசுட் டுணர்வெனப் படுவ
தெனைப்பொரு ளுண்மை மாத்திரை காண்ட
றிரியக் கோட லொன்றையொன் றென்றல்
விரிகதி ரிப்பியை வெள்ளியென் றுணர்த
லைய மென்ப தொன்றைநிச் சயியா
மையற் றறியோ மகனோ வென்ற
றோராது தெளிதல் செண்டு வெளியி
லோராது தறியை மகனென வுணர்தல்
கண்டுண ராமை கடுமாப் புலியொன்
றண்டலை முதலிய கண்டுமறி யாமை
யில்வழக் கென்பது முயற்கோ டொப்பன
சொல்லின்மாத் திரத்தாற் கருத்திற் றோன்ற
லுணர்ந்ததை யுணர்த லுறுபனிக் குத்தீப்
புணர்ந்திடன் மருந்தெனப் புலங்கொள நினைத்த
னினைப்பெனப் படுவது காரண நிகழாது
நினக்கிவர் தாயுந் தந்தையு மென்று
பிறர்சொலக் கருதலிப் பெற்றிய வளவைகள்
பாஙகுறு முலோகா யதமே பௌத்தஞ்
சாங்கிய நையா யிகம்வை சேடிக
மீமாஞ் சகமாஞ் சமயவா சிரியர்
தாம்பிரு கற்பதி சினனே கபில
னக்க பாதன் கணாதன் சைமினி
மெய்ப்பிரத் தியமனு மானஞ் சாத்த
முவமான மருத்தா பத்தி யபாவ
மிவையே யிப்போ தியன்றுள வளவைக

---

௬௨. எனைப்பொருள் - எலலாப்பொருள்.
௬௪. இப்பி - சுத்தி.
௬௫. 'நிச்சயியாது' என்றும் பாடம்.
௬௬. மையல் - மயக்கம். தறி - கட்டை.
௬௭. செண்டுவெளி - முற்றம்.
௬௮. ஓராது - உணராது.
௬௯. கடுமாவாகிய புலி. கடுமை-சினம். கண்டுணராமையை உபேக்ஷாத மகஞான மென்பர். 'கடுமருப் புலியி லோர்ந்து' என்றும் பாடம்.
௭௦. அண்டலை, ஐ - சாரியை.
௭௧. கோடு - கொம்பு.
௭௪. மருந்து - பரிகாரம்.
௭௭. இப்பெற்றிய - இத்தன்மையையுடையன; முற்று.
௭௮. பாஙகு - பகுதி.
௮௧. சினன் - புத்தன்.
௮௨ அக்கபாதன் - அக்ஷபாத முனிவர்; இவர்க்குக கௌதமமுனிவரென்றும் பெயருண்டு. கணாதனென்பதற்கு நொய்யைப் புசிப்பவனென்று பொருள், கணம்-நொய். இவர் இது காரணததாற் கணாசனரென்றும் பெயர்பெறுவர்
௮௩. பிரததியம் - பிரத்தியக்ஷம். சாததம் - ஆகமம.
௭௭-௮௫. உலோகாயதமுதலிய அறு

ளென்றவன் றன்னைவிட் டிறைவ னீசனென
நின்ற சைவ வாதிநேர் படுதலும்
பரசுநின் றெய்வ மெப்படித் தென்ன
விருசுட ரோடிய மானனைம் பூதமென்
றெட்டு வகையு முயிரும்யாக் கையுமாய்க்
கட்டிநிற் போனுங் கலையுருவி னோனும்
படைத்து விளையாடும் பண்பி னோனுந்
துடைத்துத் துயர்தீர் தோற்றத் தோனுந்
தன்னில் வேறு தானொன் றிலோனு
மன்னோ னிறைவ னாகுமென் றுரைத்தனன்
பேருல கெல்லாம் பிரம வாதியோர்
தேவ னிட்ட முட்டை யென்றனன்
காதல் கொண்டு கடல்வணன் புராண
மோதின னாரணன் காப்பென் றுரைத்தனன்
கற்பங் கைசந் தங்கா லெண்கண்
டெற்றெ னிருத்தஞ் செவிசிக் கைமூக்
குற்ற வியாகர ணமுகம் பெற்றுச்

---

வகைச் சமயங்கட்கும் முறையே பிருகஸ்பதிமுதலிய அறுவரும் ஆசிரியரெனவும், மேற்கூறிய பத்தளவைகளுள் அவர்களாற் கைக்கொள்ளப்பட்டு இப்பொழுது வழங்கும் அளவைகள் பிரத்தியக்ஷமுதல் அபாவமிறுதியாகிய ஆறுமேயெனவுங்கொள்க. உலோகாயதமுதலிய அறுவகைச்சமயங்களுள், உலோகாயதத்திற்குப் பிரத்தியக்ஷமொன்றும், பௌத்தத்திற்குப் பிரத்தியக்ஷத்தோடு அனுமானமும், சாங்கியத்திற்கு அவ்விரண்டனோடு ஆகமமும், நையாயிகத்திற்கு அம்மூன்றனோடு உவமானமும், வைசேடிகத்திற்கு அந்நான்கனோடு அருத்தாபத்தியும், மீமாஞ்சகத்திற்கு அவ்வைந்தனோடு அபாவமும் பிரமாணமாமெனக்கொள்க.

அ௬. என்றவன் - அளவைவாதி.

**சைவவாதம் :—**

அ௭. இறைவன்-எப்பொருளிலுந் தங்குகின்றகடவுள். இறுத்தல - தங்குதல.

அஅ. துதிக்கப்படும நினதுதெய்வம் எத்தன்மையையுடையதென்று மணிமேகலைவினவ.

அ௯. இருசுடர் - சந்திரசூரியர். இயமானன் - உயிர்; யாகத்தலைவனுமாம.

௯௧. கலையுருவினோன் - கலைகளை உருவாகவுடையவன்; "ஐயா றதன்மிசையெட்டுத லையிட்ட, மையில வான்கலைமெய்யுடன் பொருந்தி" என்றார் பெரியோரும.

௯௩. துடைத்து - சங்கரித்து. துயர்தீர்தோற்றத்தோன்-உயிர்களது இளைப்பொழிக்கும் பெருமையையுடையவன்.

**பிரமவாதம் :—**

௯௬ - ௯௭. உலகெல்லாம் ஓர் தேவனிட்டமுட்டையென்று பிரமவாதி கூறினன்.

**வைணவவாதம் :—**

௯௮. கடல்வணன் - திருமால். புராணம் - பழமை.

௯௯. ஓதினன் - வைணவவாதி.

**வேதவாதம் :—**

௧00. 'கற்பம்' என்பதுமுதல் வேதவாதிகூற்று. சந்தம்-சந்தோவிசிதி. எண்-சோதிடம.

௧0௧. நிருத்தம் - நிருக்தம். சிக்கை - சிக்ஷை

௧00 - ௧0௨. கற்பம் சந்தோவிசிதி சோதிடம நிருக்தம் சிக்ஷை வியாகரணம் என்னுமிவ்வாறும் முறையே வேதத்திற்

சார்பிற் றோன்றா வாரண வேதக்
காதியந்த மில்லை யதுவே நெறியெனும்
வேதிய னுரையின் விதியுங் கேட்டு
மெய்த்திறம் வழக்கென விளம்பு கின்ற
வெத்திறத் தினுமிசை யாதிவ ருரையென
வாசீ வகநூ லறிந்த புராணனைப்
பேசுநின் னிறையார் நூற்பொருள் யாதென
வெலலையில் பொருள்களி லெங்குமெப் பொழுதும்

---

குக கை கால கண் காது மூக்கு முகம் என்னுமுறுப்புக்களாகவுள்ளன; இதனை, "முகமவ்யாகரணந் தஸ்யஜ்யோதிஷந்நேத்ரமுச்யதே, நிருக்தம் ச்ரோத்ர முதிஷ்டஞ் சந்தஸாம் விசிதிஃபதே, சிக்ஷாகராணந்து வேதஸ்ய ஹஸ்தௌகல்பாந் ப்ரசக்ஷதே" என்னும சுலோகத்தாலுமறிந்துகொள்க; இது, பாணினீயவ்யாகரணத்தைச்சார்ந்ததும், பட்டோஜிதீக்ஷிதராற் செய்யப்பட்டதுமாகிய சப்தகௌஸ்துப மென்னும் வடநூலின் முதலிலுள்ளதாகிய பஸ்பசி யென்னுமாந்நிகதில உதாகரிகக ப்பட்டதெனபர். இதுபற்றியே கற்ப முதலியவாறும வேதாங்கமெனப்படும. 'ஆறஙகமாவன, உலகியற்சொலலையொழிதது வைதிகசசொல்லையாராயும நிருததமும், அவ்விரண்டையும் உடனாராய்ந்த ஐந்திரத்தொடக்கத்து வியாகரணமும், போதாயனீயம் பாரதத்துவாசம் ஆபத்தம்பம ஆத்திரேயமுதலிய கற்பங்களும், நாராயணீயம் வாராகமுதலிய கணிதங்களும், எழுத்தாராய்ச்சியாகிய பிரமமும், செய்யுளிலக்கணமாகிய சந்தமுமாம்' என்பர் ஆசிரியர் நச்சினார்க்கினியர். இதனை, தொல்காப்பியப் புறத்திணை யியலிலுள்ள "அறுவகைப்பட்ட" என்னும சூத்திரவுரையிலும, கலித்தொகைக்கடவுள்வாழ்த்துரையிலுங காண்க.

௧௦௩. சார்பிற்றோன்றா - ஒரிடத்திற்றோன்றாத; ஸ்வயம்புவென்றபடி. திருவள்ளுவமாலையில் வெள்ளிவீதியார்பாட்டில வேதம், "செய்யாமொழி" என்று கூறப்பட்டிருததல் காண்க; இக்கருத்தை, நீலகேசி, வேதவாதச்சருககம், (௩) "நாத்திக மல்லது சொல்லலே யாயின்மு னன்பயந்த, சாத்திர மாவது வேதமன் றேவது தான்சயம்பு, சூத்திரி நீயது வல்லைய லாமையிற் சொல்லுகிலாய், போத்தந்தி யோவதன் றீமையென் றூன்பொருகிப் பூதிகனே." (௪)- "பூதிகனை றனது சொல்லலும் யானது வல்லனெலலாஞ், சாதிகண் டாயெனத தான்றள ராளது சாற்றுகென்றாட், காதியென் றானுமொ ரந்தமென் றானுமுண் டேலதற்கு, நீதியி னுலுரை நீயினி யானது நேர்வனென்றான்" எனவருவன வற்றாலுணாக. வேதக்கு - வேதத்திற்கு.

௧௦௫. வேதியன் - வேதவாதி.

௧௦௬. மெய்த்திறம் - நூல்வகைகள். மெய்யுணர்த்துவனவற்றை மெய்யென்றார்; "மெய்த்திறம் வழககு நன்பொருள் வீடு" என முன்புவநதிருத்தல் காண்க; ௧ - வது காதை, ௧௧; "யாமெய் யாக கண்டவற்றுள்" எனனுந் திருக்குறளில், 'மெய்' எனபது இப்பொருளதாதலறிக. வழககு - உலகியல்.

௧௦௬-௧௦௭. இவ்வடிகளாற் கூறப்பட்டுள்ளவை மணிமேகலையின் உட்கோள்.

௧௦௮. ஆசீவகநூல் - சமணசமயத்தின் பாகுபாடு இரணடனுள் ஒன்றாகிய ஆசீவகமததுநூல; "அனனதோர் வாய்மை யாசீ வகனம ணர்களிற் கூறும்" என்பது சிவஞானசித்தியார், பரபக்கம், ஆசீவகன்மதம, ௧. புராணன் - முதியோன். ஆசீவகமதம், முற்காலததுச சமதண்டமென்றுபெயருள்ள ஒரூரிற் பரவியிருநததென்று நீலகேசியால் தெரிகின்றது.

௧௦௯. இறை யார் - கடவுள்யாவன். நூற்பொருள் யாதென - உனது நூலிற் சொல்லப்படும பொருள் என்னவென்று மணிமேகலை கேட்ப.

**ஆசீவகவாதம் :—**

**௧௧௦ - ம் அடிமுதல ௧௬௫ - ம் அடி**

புல்லிக் கிடந்து புலப்படு கின்ற
வரம்பி லறிவ னிறைநூற் பொருள்களைந்
தாங்கரு முயிரோ டொருநால் வகையணு
வவ்வணு வுற்றுங் கண்டு முணர்ந்திடப்
பெய்வகை கூடிப் பிரிவதுஞ் செய்யு
நிலநீர் தீக்காற் றெனநால் வகையின
மலைமர முடம்பெனத் திரள்வதுஞ் செய்யும
வெவ்வே றாகி விரிவதுஞ் செய்யு
மவ்வகை யறிவ துயிரெனப் படுமே
வற்ப மாகி யுறுநிலந் தாழ்ந்து
சொற்படு சீதந் தொடுசுவை யுடைத்தா
யிழினென நிலஞ்சேர்ந் தாழ்வது நீர்தீத்
தெறுதலு மேறசே ரியல்பு முடைததாங
காற்று விலங்கி யசைத்தல கடனிவை

யிறுதியாகவுள்ளவை ஆசீவகமததோன் வார்தததை.

௧௧௨. வரம்பிலறிவன் இறை - அநந்த ஞானியாகிய மற்கலிதேவனே எமது கடவுள். நூற்பொருள்கள் ஐந்து - நவ கதிரென்னும் நூலிற் கூறப்பட்டுள்ள பொருள்கள் ஐந்தாகும்.

௧௧௩. அப்பொருள்கள் உயிரும் நால் வகையணுககளுமாம்.

௧௧௨ - ௧௧௩. ஆசீவகமதத்தினர்க்குத் தெய்வம் மற்கலியென்பதும் நூல் நவ கதிரென்பதும், அதிற் கூறப்பட்ட பொருள்கள் ஐந்தென்பதும் ஆகியவிவற்றை, "என்றலு மற்கலி தானே யிறையினி, யொன்பது வாங்கதிர் நூல்யாமுடையன, மன்பெரு நுண்பொருளைந் தியல் பாயவை, யின்ப நிகழ்ச்சியுங் காழ்ப்பா டெனச்சொல" (நீலகேசி, ஆசீவகவாதச்சருக்கம, ௧௩.) என்பதனுலறிந்துகொள்க. "மற்கலி நூலின் வகையிது" (௧௬௫) என்று இக்காதையிலேயே பின் வருதல் காண்க.

௧௧௪. அவ்வணுவென்றது உயிரை.

௧௧௫. கூடி - நிலவணு முதலிய நால் வகை யணுக்களோடுங் கூடி.

௧௧௪-௧௧௫ இவ்வடிகள் உயிரணுவின் இலக்கணங்கூறின.

௧௧௬. மேற்கூறிய நால்வகையணுக்களும் இவையென்றபடி.

௧௧௭ - ௧௧௮. அந்நால்வகையணுக்களும் திரள்வதுஞ் செய்யும் விரிவதுஞ் செய்யும்.

௧௧௬ - ௧௧௮. இவ்வடிகளால் மேற்கூறிய நால்வகையணுக்களின் பொது விலக்கணஙகூறப்பட்டது.

௧௨௦. வற்பம் - வன்மை நிலம் வற்பமாகியுறும்.

௧௨௦ - ௧௨௨. தாழ்ந்து உடைததாய்ச் சேர்ந்து ஆழ்வது நீரெனக.

௧௨௩. தெறுதல் - சுடுதல்.

௧௨௨ - ௧௨௩. தீ, தெறுதலும் மேற்சேரியல்புமுடைத்து.

௧௨௪. விலங்கி - குறுக்கிட்டு. இவை- இவ்வணுககள்.

௧௧௧ - ௧௨௪. இவ்வடிகளாற் கூறப்பட்டுள்ள ஐந்துபொருள்களினியலபைப் பின்வருஞ் செய்யுட்களாலு மறிக; நீலகேசி, ஆசீவகவாதச்சருக்கம, ௧௭. "நிலநீ ரெரிகாற் றுயிரின் னியல்பும், பலநீரவற்றின் படுபா லவைதாம், புலமாகொலியொன் றொழிய முதற்காஞ், சலமா யதுதண் மையையே முதலாம்", ௧௮: "எறிததன் முதலா யினதீ யினவாஞ், செறிததல் லொலியோ டிவைகாற் றினவா, மறிதசல் லறிதல் லவைதா முயிராங, குறித்த பொருளின் குணமா லிவையே."

வேற்றியல் பெய்தும் விபரீ தத்தா
லாதி யில்லாப் பரமா ணுக்க
ளீதற் றியாவதுஞ் சிதைவது செய்யா
புதிதாய்ப் பிறந்தொன் றொன்றிற் புகுதா
முதுநீ ரணுநில வணுவாய்த் திரியா
வொன்றிரண் டாகிப் பிளப்பதுஞ் செய்யா
வன்றியு மவற்போற் பரப்பதுஞ் செய்யா
வுலாவுந் தாழு முயர்வதுஞ் செய்யுங்
குலாமலை பிறவாக் கூடும் பலவும்
பின்னையும் பிரிந்துதந் தன்மைய வாகு
மன்னிய வயிரமாய்ச் செறிந்துவற் பமுமாம்
வேயாத் துளைபடும் பொருளா முளைக்குந்
தேயா மதிபோற் செழுநில வரைப்பா
நிறைந்தவிவ் வணுக்கள் பூதமாய் நிகழிற்
குறைந்து மொத்துங் கூடா வரிசையி
னொன்று முக்கா லரைகா லாயுறுந்
துன்றுமிக் கதனாற் பெயர்சொலப் படுமே
யிக்குணத் தடைந்தா லல்லது நிலனாய்ச்
சிக்கென் பதுவு நீரா யிழிவதுந்
தீயாய்ச் சுடுவதுங் காற்றாய் வீசலு
மாய தொழிலை யடைந்திட மாட்டா
வோரணுத் தெய்வக் கண்ணோ ருணர்குவர்
தேரார் பூதத் திரட்சியு ளேனோர்

---

௧௨௫. வேற்றியல்பு - வேறுதன்மை.

௧௨௭. யாவதும்-சிறிதும். சிதைவது-அழிதல்.

௧௩௧. அவற்போல் - அவைபோல.

௧௩௩ 'கூடுமலையும்' என்றும் பாடம்.

௧௩௫. வற்பம் - வன்மை.

௧௩௬. வேய் - மூங்கில.

௧௩௭. தேயாமதி - முழுமதி.

௧௩௯. குறைந்தும் ஒத்தும்கூடா-பின் சொல்லப்படுமளவிற் குறைந்தும் அளவொத்துங் கூடுவனவல்ல.

௧௩௯ - ௧௪௧. "ஒன்றினை யொருவி மூன்றங் குற்றிடா விரண்டு விட்டு, நின்றிடா திரண்டு கூடு நெறிநில நான்கு நீர்மூன், றின்றிரண் டழல்கா லொன்றா விசைந்திடும் பூமி யிவ்வா, றென்றுநீர் தீகா லாகி யீண்டுவ தென்றி யம்பும்" என வருதல்காண்க; இது சிவஞானசித்தியார் பரபக்ஷம், ஆசீவகன்மதம், எ - ம் செய்யுள்.

௧௪௩. சிக்கென்பதுவும் - வன்மையுற்றிருத்தலும்; 'வற்ப மாகி யுறுநிலம்' (௧௨௦ - ம் அடி) என்று இக்காதையில் முன்பு வந்திருத்தல்காண்க.

௧௪௬. தெய்வக்கண்ணோர் - கேவலஞானிகள்.

௧௪௭. தேரார் - அறியார். ஏனோர் - மற்றையோர். என்றது கேவலஞானிகளலலாதாரை. 'திரட்சியுளானோர்' என்றும் பாடம்.

௧௪௬ - ௧௪௭. ஓரணுவை ஏனோர் தேராரென்க.

மாலைப் போதி லொருமயி ரறியார்
சாலத் திரண்மயிர் தோற்றுதல் சாலுங்
கரு௦ கரும்பிறப்புங் கருநீலப் பிறப்பும
பசுமம பிறப்புஞ் செம்ம் பிறம்பும
பொன் பிறப்பும் வெண்ண் பிறப்பு
மென்றிவ் வாறு பிறப்பினு மேவிப்
பண்புறு வரிசையிற் பாற்பட்டுப் பிறந்தோர்
கருரு கழிவெண் பிறப்பிற் கலந்துவீ டணைகுவ
ரழியல் வேண்டா ரதுவுறற் பாலா
ரிதுசெம் போக்கி னியல்பிது தப்பு
மதுமண் டலமென் றறியல் வேண்டும
பெறுதலு மிழத்தலு மிடையூ றுறுதலு
கசா௦ முறுமிடத் தெய்தலுந் துக்கசுக முறுதலும
பெரிதவை நீங்கலும பிறத்தலுஞ் சாதலுங்
கருவிற் பட்ட பொழுதே கலக்கு
மின்பமுந் துனபமு மிவையுமணு வெனத்தகு
முன்னுள வூழே பின்னுமுறு விபபது

---

கசஅ. மாலைப்போது-மாலைக்காலம்.

கசகூ. சாலும்-மேற்கூறியதற்கு உவமையாகவமையும்.

கரு௦. கரும்பிறப்பென்றது நரகஜன்மத்தை.

கருரு. கழிவெண்பிறப்பு - மிகவெள்ளியபிறப்பு.

கரு௦ - கருரு. இவ்வடிகளிற்கூறிய கரும பிறப்புமுதலியவைகள் முறையே ஒன்றற்கொன்று எற்றமுடையவை, "வெண்மைநன் பொனமை செமமை நீலகழி வெணமை பச்சை, யுண்மையிவ் வாறி னுள்ளுங் கழிவெண்மை யோங்கு வீட்டின், வணமைய தாகச் சேரு மற்றிவை யுருவம் பற்றி, யுண்மையவ் வொட்டுத் தீட்டுக கலப்பினி லுணரு மென்றான்." என்பது சிவஞானசித்தியார், பரபக்ஷம், ஆசீவகன்மதம், அ. ஏண்டுப் பிறப்புககளை வகுத்துக்கூறியதுபோல, "மணியுயிர் பொன்னுயிர் மாண்ட வெள்ளியி, னணியுயிர் செம்புயி ரிரும்பு போலவாம், பிணியுயி ரிறுதியாப் பேசி னேனினித, துணிமின மெனத்தொழு திறைஞ்சி வாழ்ததினர்" என்று உயிர்களை வகுததுக் கூறியிருத்தல் காண்க; இது சீவகசிந்தாமணி, முததியிலம்பகம, ருகஙா.

கருசு. 'அது' எனறது கழிவெண்பிறப்பினை.

கருஎ. 'இது' என்றது கரும்பிறப்பு முதல் கழிவெணபிறபப இறுதியாகவுளள பிறப்புககளில முறையே பிறந்து வீடுபெறுதலை.

கருகூ. 'இடையூருறுதலும்' என்றும் பாடம்.

கசாஉ. 'கருவிற் பட்ட பொழுதே பிறக்கும்' என்றும் பாடம்.

கருகூ - கசாஉ. பெறுதன்முதற் சாதலீறாகவுள்ளவைகள் கருவிற் சோந்தபொழுதே கலப்பனவாம.

கசாரு. இன்பதுன்பங்களாகிய இவைகளும் அணுவென்று கூறப்படும்.

கருகூ - கசாச. இவ்வடிகளின் பொருளோடு, "பேறிழ விடையூ றின்பம் பிரிவிலா திருக்கை மற்றம, வேறொரு நாட்டிற் சேறல விளைந்திடு மூப்புச் சாதல, கூறிய வெட்டு முனனே கருவினுட் கொண்ட தாகுந், தேறிய வூழிற் பட்டுசெ

மற்கலி நூலின் வகையிது வென்னச்
சொற்றடு மாற்றத் தொடர்ச்சியை விட்டு
நிகண்ட வாதியை நீயுரை நின்னாற்
புகழுந் தலைவன்யார் நூற்பொருள் யாவை
யப்பொரு ணிகழ்வுங் கட்டும் வீடு
மெய்ப்பட விளம்பென விளம்ப லுறுவோ
னிந்திரர் தொழப்படு மிறைவனெம் மிறைவன்
றந்த நூற்பொரு டன்மாத்தி காயமு
மதன்மாத்தி காயமுங் காலா காயமுந்
தீதில் சீவனும் பரமா ணுக்களு
நல்வினை யுந்தீ வினையுமவ் வினையாற்
செய்வுறு பந்தமும் வீடுமித் திறத்த
வான்ற பொருடன் றன்மைய தாயுந்
தோன்றுசார் வொன்றின் றன்மைய தாயு

---

சொலவதிவ் வுலக மென்றான்." எனவும், "புண்ணிய பாவ மென்னு மிரண்டினும் பொருந்த வைசதே, யெண்ணியவிவற்றினொடு மேழென வெங்க ளோடு, நண்ணிய வொருவன் கூறு ஞானமிவ் வாற தென்று, கண்ணிய கருத்தி னோர்கள் கதியினைக் காண்ப ரென்றான்." எனவும் வரும் சிவஞானசித்தியார், பரபக்கச் செய்யுட்களை ஒப்பிடுக.

கசுரு. மற்கலிதேவனது ஒன்பதுகதி ரென்னும் நூலிற் கூறப்பட்டுள்ளவகை இதுவாகுமென்று ஆசீவகமதத்தோன் சொல்ல

கசுசு. சொற்றடுமாற்றத் தொடர்ச்சி- தடுமாற்றச் சொற்றொடர்ச்சி; என்றது- பூர்வாபரவிரோதமுள்ள ஆசீவகமதத் தோன் கூற்றை.

கஎ0. மெய்ப்பட - உண்மைப்பட.

கசுஎ - கஎ0. நிகண்டவாதியைநோக்கி உங்கள் தலைவன்யார்? நூற்பொருள்கள் யாவை; அப்பொருள்களின் நிகழ்ச்சியையும், பந்தத்தையும், வீட்டினையும், சொல்லுவாயென்றுமணிமேகலைகேட்ப. நிகண்டவாதி - சமணர் இருதிறத்தாரில் ஒருவகையான்; இவன் நிர்க்கந்தவாதி யென்றும், திகம்பரவாதியென்றுங் கூறப்படுவன்; இறைவன், நூல், பொருள், பொருணிகழ்வு என்னு மிந்நான்கினையும், முறையே ஆப்தன் ஆகமம் பதார்த்தம் பிரவர்த்தியென்பர்.

**நிகண்டவாதம் :—**

கஎக. சதேந்திரர்களாலே வணங்கப்படும் அருகனே எமதுஸ்வாமி; சதேந்திரராவார்.—பவணேந்திரர் நாற்பத்திருவரும், வியந்தரேந்திரர் முப்பத்திருவரும், கற்பேந்திரர் இருபத்திருவரும், சந்திரனும் சூரியனும் நரேந்திரனும் மிருகேந்திரனுமென்பார்.

கஎஉ. தந்தநூற்பொருள் - (அருகன்) உண்டுபண்ணிய அங்காகமம் பூர்வாகமம் பகுசுருதியாகமமென்னுமூன்று ஆகமங்களிலும் கூறப்பட்டுள்ள பொருள்கள்.

கஎங. காலமும் ஆகாசமும்.

கஎஉ-கஎசு. தந்தநூற்பொருள்கள் தருமாஸ்திகாயமுதல் வீடு இறுதியாகவுள்ள இந்தப் பத்துப்பகுதியின.

கஎக - கஎசு. இவ்வடிகளாற் கூறப்பட்டுள்ள இறைவனையும் அவன்கூறிய நூற்பொருள்கள் பத்தையும், பின்வரும் நீலகேசிச் செய்யுளாலுமறிந்துகொள்க. "எனக்கேட்டாங் கெடுத்துரைப்பா னிந்திரர்க டொழப்படுவோன், றனக்காய தன்மமு மதன்மமுங் காலமுங், கனப்பாட்டிலாகாய முயிருருவும் புண்ணியமே, நினைகருங்காற பாவமே கட்டுவீ டெனநிறுத்தி."

மநித்தமு நித்தமு மாகி நின்று
நுனித்த குணத்தோர் கணத்தின் கண்ணே
தோற்றமு நிலையுங் கேடு மென்னு
மாற்றரு மூன்று மாக்கலு முரித்தா
நிம்ப முளைத்து நிகழ்த னித்திய
நிமபத் தப்பொரு ளன்மை யநித்தியம
பயற்றுத் தன்மை கெடாது கும மாய
மியற்றி யப்பய றழிதலு மேதுத்
தருமாத்தி காயந் தானெங்கு முளதாய்ப்
பொருளகளை நடத்தும் பொருநத நித்தியமா
வப்படித் தாகி யதன்மாத் திகாயமு
மெபபொருள் களையு நிறுத்த லியற்றுங்

க௭௧ - க௮0. ஒருபொருள் ஒரே கணத்தில் அநித்தியத்தன்மை நித்தியததன்மையென்னும் இரண்டையுமடையுமென்பதை, "கல்வியா னல்லனே காமாதி யிற்றீயன், செல்வத் துயர்ந்தான் குலத்தினிற் றாழ்ந்தானும், வலலுவனென் றென்று வலலா னிதுவன்றே, நில்லாமை நித்தநிலை யொருமுகததா னிலையினதே" (நீலகேசி, மொக்கலவாதச்சருக்கம்) என்பதனாலுமுணர்க. கணம் - க்ஷணம்.

க௮0 - க௮௨. ஒருபொருள் ஒரேகணத்தில உற்பததி ஸ்திதி நாசமென்னு மூன்றையுமடையுமென்பதை, "உருவப் பிழம்பப் பொருளென் றுரைப்பனிப் பாறயிர்மோர், பருவததி னும்பரி யாயப் பெயரென்பன் பாலழிந்து, தருவித் துறைதத தயிருரு வாய்மும்மைத தன்மை யதாந், திருவதத தென்பொரு ளாதலைத் தேர தெளியிதென்றான்." (நீலகேசி, மொக்கலவாதச்சருக்கம், ௩௮௧.) என்னுஞ் செய்யுளாலும, 'உருவப்பொருளாகிய புற்கலத்தை அப்பொருளென்பேன்; பாலதயிர் முதலாயின அதனதுபரியாயமென்பேன்; பாற்பரியாயதது நின்ற புற்கல திரவியம்தயிர்ப்பரியாயமடைந்து பரிணமித்தலினால் உற்பததி ஸ்திதிவிநாசாதமகமாகித தூஷிககப்படாத பெருமைததாம் என்பொருளென்று கொள என்று சொன்னான்' என்னும் இதனுரையாலுமறிந்துகொள்க.

க௭௭-க௮௨. பொருள் உரித்தாமென்க.

க௮௩. நிம்பம் - வேம்பு.

க௮௫ - க௮௬ இவ்வடிகளாற் கூறப்பட்டுள்ள திருஷ்டாந்தததி னியல்பை, "பெற்றது தானுங்கும் மாயத் திரிபு பயற்றியல்பே, யிற்ற திதுவென திட்டமென் பாயிவ் விருமையினுந், தெற்றெனத் தீர்ந்தோர் பொருளென்னை தேற்றினித் தேற்றலையேன், மற்றது வாமை மயிரெனச் சொல்லுவன் மன்னுமென்றான்." (நீலகேசி, மொக்கலவாதச்சருக்கம், ௩௯0 ) என்பதனாலுமுணர்க. கும்மாயம் - புழுக்கிய பச்சைப் பயற்றோடு சருக்கரைமுதலியனகூட்டி ஆககப்படுவதொரு சிற்றுண்டி; இஃது இப்பெயரோடு விஷ்ணுவாலயங்களில் இக்காலத்தும் வழங்கிவருகின்றது; "கும்மாயத்தொடு வெண்ணெய்விழுங்கி" (முதலாயிரம், பெரியாழ்வார் திருமொழி, ௩ ப. ௩.) என்பதில் 'கும்மாயம்' என்பதற்குப் ஸ்ரீபெரியவாச்சான்பிள்ளை 'குழையச்சமைத்தபருப்பு' என்று பொருள்செய் திருக்கின்றனர்.

க௮௭ - க௮௮. தருமாத்திகாயம் எங்குமுளதாகி எககாலததும் பொருள்களை நடத்துமென்க. கமிப்பித்தலையுடையதென்றபடி.

க௮௯ - க௯0. அதன்மாத்திகாயம் எப்பொருள்களையும் நிற்கச்செய்யும்

க௮௭ - க௯0. இவ்வடிகளாற் கூறப்பட்டுள்ள சருமாஸ்திகாயம் அதருமாஸ்

காலங் கணிக மெனுங்குறு நிகழ்ச்சியு
மேலுங் கற்பத் தின்னெடு நிகழ்ச்சியு
மாக்குமா காய மெல்லாப் பொருட்கும்
புக்கு மிடங்கொடுக்கும் புரிவிற் றாகுஞ்
சீவ னுடம்போ டொத்துக் கூடித்
தாவில்சுவை முதலிய புலன்களை நுகரு
மோரணு புறகலம் புறவுரு வாகுஞ்
சீர்சா னல்வினை தீவினை யவைசெயும
வருவழி யிரண்டையு மாற்றி முன்செ
யருவினைப் பயனனு பவித்தறுத் திடுத
லதுவீ டாகு மென்றன னவன்பி

---

திகாயங்களினிலக்கணங்களைப் பின்வரு பவைகள் நன்குபுலப்படுத்தும:—"அத்தியா யமூர்த்தியா யளவி றேசியா, யொத்தள வுலகினொ டுலக லோகமாந், தத்துவந் தனைச்செய்து தம்மத தம்மமா, மதிகள் செலவொடு நிலையிற் கேதுவாம்.", "அச்சுநீர் தேரொடு மீனை யீர்த்திடா, வச்சுநீ ரன்றியத் தேரு மீன்செலா, வச்சுநீர் போலத்தம் மததி சேறலை, யிச்சையு முயற்சியு மின்றி யாக்குமே.", "அந்தரத் தறுபத்து மூன்ற தாகிய, விந்திர படலமு நிரைய மேழ்களு, மந்தர மலை மண்ணு மற்று நின்றிடா வந்தமி னிலைய தம் மத்தி யிலலையேல", "பறவையின் சிறகொடு பாத நின்றுழி, நெறியினுற் செலவொடு நிலையை யாக்குமா, லுறவிபுற் கலமிவை யோட னிற்றலைச், செறிவுறத் தம்மத்தம் மததி செய்யுமே." இவை, மேருமந்தரபுராணம், வைசயந்தன்முத்திச்சருக்கம், அஅ, கூ0, கூக, கூ௨. 'தருமாததிகாயம், குயவன் திகிரிகுக் கீழிட்டசிலைபோலவும், தேருககு அச்சுப்போலவும், கலததிற்குக் கடலபோலவுமாம்' எனவும், 'தருமாத்தியும் அதருமாததியும் பக்ஷிக்குச் சிறகுங்காலும்போலச் சீவபுற்கலங்களுடைய கமனததிற்கும் ஸ்திதிக்கும் அப்பிரேரகசாதனமாம்' எனவும் உள்ளவை, நீலகேசிவிருத்திசமயதிவாகரத்திற்கண்டவை.

ககக. கணிகம் - க்ஷணிகம்.

ககக - ககரு. காலம் குறுநிகழ்ச்சியையும் நெடுநிகழ்ச்சியையு மாக்குமென்க; கணிகமென்பது எழுசெங்கழுநீரிதழை ஒருகுறட்டிலடுக்கிப் பலவானுயினுலொருவன் மிகவுங்கூரியதோருளிவைத்துக் கூடமிட்டுப்புடைத்தால் ஆறும்புரையற்று ஏழாம்புரையிற்செலலுமளவாம்; கற்பமாவது, ஒசனையகன்றுயர்ந்ததோர் வசசிரமலை கருப்பிணியுடுத்த பட்டாடைத் தோகைபட்டுகெ கையறததேய்ந்ததாம்' என்பர் நீலகேசியுரையாசிரியர்.

ககரு - ககச. ஆகாயம் எல்லாப்பொருட்கும் இடங்கொடுக்குஞ் செயலையுடையது.

ககரு. 'ஒத்துத்தோன்றி' என்றும் பாடம்.

ககரு - ககசு. சீவன் உடம்போடொத்துக்கூடிப் புலன்களை நுகரும.

ககஎ. ஓரணு - பரமாணு; அவ்வணு புற்கலமும் புறவுருவுமாகும். புற்கலமென்றது உடம்பை; புறவுருவென்றது மற்றை வடிவங்களை.

ககஅ. நலவினை நல்வினையையும், தீவினை தீவினையையுமுண்டாக்கும்; இன்பதுன்பங்களையுண்டாக்குமெனினும் பொருந்தும்.

பந்தத்தினிலக்கணங்கூறிற்றிலர், "அவ்வினையாற் செய்வுறு பந்தமும்" என்று முன்னர்க்கூறினமையின்.

ககக. வருவழியிரண்டு - நல்வினைவரும்வழியும் தீவினைவரும்வழியும். முன செய் - முற்பிறப்பிற்செய்த.

௨0க. என்றனன் - என்று நிகண்டவாதி கூறினன்.

ககக - ௨0க. வீட்டிலக்கணம் இவ்வடிகளாற் கூறப்பட்டதுபோல, "பெரு

ணிதுசாங் கியமத மென்றெடுத் துரைப்போன்
றணையறி வரிதாய்த் தான்முக் குணமாய்
மனநிகழ் வின்றி மாண்பமை பொதுவா
யெல்லாப் பொருளுந் தோன்று தற் கிடமெனச்
சொல்லுதன் மூலப் பகுதிசித் தத்து
மானென் றுரைதத புததி வெளிப்பட்
டதனக ணாகாயம வெளிப்பட் டதன்கண்
வாயு வெளிப்பட் டதன்க ணங்கி
யானது வெளிபபட் டதன்க ணப்பின்
றன்மை வெளிப்பட் டதின்மண் வெளிப்பட்
டவற்றின் கூட்டத தின்மனம வெளிப்பட்
டார்பபுறு மனததாங கார விகாரமு
மாகா யத்திற் செவியொலி விகாரமு
வாயுவிற் றொககு மூறெனும விகாரமும்
மங்கியிற் கண்ணு மொளியுமாம விகாரமுந்
தங்கிய வப்பிலவாய் சுவையெனும விகாரமு
நிலக்கண் மூக்கு நாறறவி காரமுஞ்
சொலப்பட் டிவறறிற் றொககு விகாரமாய்
வாக்குப பாணிபாத பாயு ருபத்தமென
வாக்கிய விவைவெளிப் பட்டிங் கிறைநத
பூத விகாரத் தான்மலை மரமுத
லோதிய வெளிப்பட் டுலகாய நிகழ்நது
வந்த வழியே யிவைசென் றடஙகி
யந்தமில் பிரளய மாயிறு மளவு
மொன்று மெங்குமம பரந்துநித் தியமா
மறிதற் கெளிதாய் முக்குண மன்றிப்

---

ம்பாவமறததுய்ததுப் பெறுதுமயாம் வீ டென்றே, மருமபாவ காரிநீ யாவர்வா யறுகேட்டாய், வரும்பாவமெதிர்காத்து மன்னுந்தம் பழவினையு, மொருஙகாக வுதிர்த்தக்கா லுயிர்ததுயமை வீடென்று ன." (நீலகேசி, மொககலவாதச்சருக்கம்) என்னும் செய்யுளில வநதிருததல காணக.

**சாங்கியவாதம் :—**

௨0௬. சொல்லுதல் மூலப்பகுதி-சொலலப்படுவது மூலப்பகுதி. சிததம்-மூலப்பகுதி.

௨0௭. மான் - மகதததுவம. புத்தததுவததிற்குப் புததியென்றும் ஒரு பெயருண்டு.

௨0௯. அங்கி - அக்கினி.

௨௧0. அப்பு - நீர்.

௨௧௨. கூட்டம் - ஸமஷ்டி.

௨௧௫. தொககு - துவககிந்திரியம். ஊறு - ஸ்பரிசம்.

௨௧௮. நிலககண் - நிலத்தின்கண்.

௨௨௧. இவையென்றது கருமேந்திரியபஞ்சகததை.

௨௨௩ ஓதிய - தொழிற்பெயர்.

௨௨௭. 'முக்குணமின்றி' என்றும்பாடம.

பொறியுணர் விக்கும் பொதுவு மன்றி
யெப்பொரு ளுந்தோன் றுதற்கிட மன்றி
யப்பொரு ளெல்லா மறிந்திடற் குணர்வா
யொன்று மெங்கும் பரந்துநித் தியமாய்
நின்றுள வுணர்வாய் நிகழ்தரும் புருடன்
புலமார் பொருள்க ளிருபத் தைந்துள
நிலநீர் தீவளி யாகா யம்மே
மெய்வாய் கண்மூக் குச்செவி தாமே
யுறுசுவை யொளியூ றோசைநாற் றம்மே
வாக்குப்பாத பாணி பாயு ருபத்த
மாக்கு மனோபுத்தி யாஙகார சித்த
முயிரொனு மான்மா வொன்றொடு மாமெனச்
செயிரறச் செப்பிய திறமுங் கேட்டு
வைசே டிகநின் வழக்குரை யென்னப்
பொய்தீர் பொருளுங் குணமுங் கருமமுஞ்
சாமா னியமும் விசேடமுங் கூட்டமு
மாமா று கூறு மதிற்பொரு ளென்பது
குணமுந் தொழிலு முடைத்தா யெதற்காகைப்
பொருளுக்கு மேதுவா மப்பொரு ளொன்பான்
ஞால நீர்தீ வளியா காயந்
திசைகால மான்மா மனமிவற் றுண்ணில
மொலியூறு நிறஞ்சுவை நாற்றமொ டைந்தும்

---

உஉஅ. 'பொருளுமின்றி' என்றும் பாடம்.

உஉஎ - உ௩உ. இவ்வடிகளாற் புருஷ தத்துவத னிலக்கணங்கூறப்பட்டது. இதனை, "எதனிறத் தென்னுஞ்செய் யான்குண மொன்றிலன், றத்துவ னின்பினன் பேதன பேதக, னித்திய னெங்கு முளனெடுங் காட்சியன், றுய்த்த லுடையனென் றோன்றலு மென்றான்" என்னும் (நீலகேசி, சாங்கியவாதச்சருக்கம், எ.) செய்யுளாலு மறிந்துகொள்க.

உ௩அ. புத்தி-மகத்தத்துவம். சித்தம்-பிரகிருதி.

உ௩௩ - உ௩௯. இவ்வடிகளால் இருபத்தைந்து தத்துவங்களுங் கூறப்பட்டன. இதனை, "மன்னுயிர் தெற்றென வில்லது யான்செருக, கென்னவு மிந்திய மைந்தைந் தொருமன, மன்னதன் மாத்திரை யைந்தைந்து பூதமும், பன்னியவையைம் பதப்பொரு ளென்றான்." (நீலகேசி, சாங்கியவாதச்சருக்கம், ௬.) என்பதனலுமுணர்க; தெற்றெனவில்லது - பிரகிருதி. செருக்கு - அகங்காரம்.

உ௪0. கேட்டு - மணிமேகலைகேட்டு.

உ௪க. உரையென்ன - சொல்வாயென்று மணிமேகலைகேட்ப.

**வைசேடிகவாதம்:—**

உ௪௩. சாமானியம் - பொதுமை. விசேடம்-சிறப்பு. கூட்டம் - சமவாயம். இதனை உடன்புணர்ப்பென்றுங் கூறுவர்.

உ௪௪. ஆறுகூறும்-ஆறுபகுதியாகும்.

உ௪௬. அப்பொருள் ஒன்பான் - அந்தப்பொருள் ஒன்பது வகைப்படும்.

உ௪௪-உ௪௬. பொருளென்பது உடைத்தாய் எதுவாகும்.

பயில்குண முடைத்து நின்ற நான்குஞ்
சுவைமுத லொரோகுண மவைகுறை வுடைய
வோசை யூறு நிறநாற் றஞ்சுவை
மாசில பெருமை சிறுமை வன்மை
மென்மை சீர்மை நொய்மமை வடிவ
மென்னு நீர்மை பக்கமுத லநேகங்
கண்ணிய பொருளின் குணங்க ளாகும்
பொருளுங் குணமுங் கரும மியற்றற்
குரிய வுண்மை தருமுதற் பொதுத்தான்
போதலு நிற்றலும பொதுக்குண மாதலிற்
சாதலு நிகழ்தலு மப்பொருட் டன்மை
யொன்றணு கூட்டங் குணமுங் குணியுமென்
றொன்றிய வாதியு முரைத்தன னுடனே
பூத வாதியைப் புகனீ யென்னத்
தாதகிப் பூவுங் கட்டியு மிட்டு

---

உ௫0. நின்றநான்கு - நீர் தீ காற்று ஆகாயமென்பன.

உ௫௧. சத்தமுதல் நாற்றமிறுதியாகிய ஐந்தனுள், நீர் சத்தமுதலிய நான்கு குணங்களையும், தீ சத்தமுதலிய மூன்றினையும், காற்றுச் சத்தமுதலிய இரண்டினையும், ஆகாயம் சத்தமொன்றினையு முடையன.

திசைமுதலிய நான்கினிலக்கணங்களும் ஒருபிரதியிலும் காணப்படவில்லை; பின்வருவனவற்றுள்ளும சில இப்படியே யுள்ளன.

உ௫உ - உ௫௬. இவ்வடிகளாற் குணங்கள் பகுத்துக்கூறப்பட்டன.

உ௫௭ - உ௫௮. பொருளும் குணமும் கருமத்தைச்செய்தற்குஉரிமையையுடையன; பொருள் குணமென்னுமிரண்டாலும் நிகழ்வது கருமமென்றபடி. உண்மை - ஸத்துவம். முதற்பொது - பரசாமானியம். முதற்பொது உண்மைதருமென்க.

உ௫௯ - உ௬0. (?)

உ௬௧. ஒன்று - விசேடம், அணு - பிருதுவி முதலிய நான்கு பூதங்களின் பரமாணுக்கள்; ஒன்று அணுவிலுள்ளதெனக. கூட்டம் - ஸமவாயம். இவ்வடி, விசேடத்தினிலக்கணமும், சமவாயத்தினிலக்கணமுங்கூறிற்று.

உ௬உ. ஒன்றியவாதி - விசேடவாதி.

உ௪உ - உ௬உ. இவ்வடிகளாற் கூறப்பட்டுள்ள பொருள்களாறி னியல்பை, "நெறியெனப் படுவது நின்ற மெய்ம்மையங், கறிதலுக கரியன வாறு சொற்பொருள், செறியயான் சொலு குணந் தொழில், பொறியினுய் பொதுச்சிறப் புடன்பு ணர்ப்பதே." எனவும், "பூதமைந் தொடுதிசை மனமும் போழ்துயி, ரோதினப் பொருள்களோ மொன்ப தாமவை, நீதியிற் குணமவற் றியலபு செய்கையும், போதரும் பொருட்புடை பெயர்சசி யாகுமே," எனவும், "பெரியதும் பின்னது மாய தப்பொது, வுரிதினிற் பொருளகளைச் செலுதது மொறறுமை, தெரிவுற வருவது சிறப்ப தாங்குணக், கிரியைக ளிதற்கெனக கிளததல் கூட்டமே" எனவும்வருஞ் செய்யுட்களாலு முணர்க; இவை நீலகேசி, வைசேடிக வாதச்சருக்கம், ௩, ௪, ௫.

உ௬௩. புகல நீ என்ன - நீசொலவாயென்று மணிமேகலைசொல்ல.

பூதவாதம்:—

உ௬௪. தாதகிப்பூ - ஆத்திப்பூ. கட்டி - கருப்புகக்கட்டி.

மற்றுங் கூட்ட மதுக்களி பிறந்தாங்
குற்றிடும் பூதத் துணர்வு தோன்றிடு
மவ்வுணர் வவ்வப் பூதத தழிவுகளின்
வெவ்வேறு பிரியும பறையோ சையிற்கெடு
முயிரோடுங் கூட்டிய வுணர்வுடை பூதமு
முயிரில் லாத வுணர்வில பூதமு
மவ்வப் பூத வழியவை பிறகக
மெய்வகை யிதுவே வேறுரை விகற்பமு
முண்மைப் பொருளுமுலோ காயத னுணாவே
கண்கூ டல்லது கருததள வழியு
மிமமையு மிமமைப் பயனுமிப பிறப்பே
பொய்மமை மறுமையுண் டாய்வினை துயத்த
லென்றலு மெலலா மார்க்கமுங் கேட்டு

---

உசுரு. மற்றுங்கூட்ட - கூட்டற்குரியமற்றைப் பொருள்களையுங்கூட்ட, மதுக்களி பிறந்தாஙகு - மதுவினிடத்துளள மதசக்தி தோன்றினாற்போல.

உசுசு. பிருதுவிமுதலிய ஐந்துதத்துவங்களின் சமவாயததில அறிவு உதிககும்; பூதங்களைந்துமுண்டெனபது பூதவாதியின் கொள்கை. நிலம், நீர், தீ, வளியெனப்பூதம், நான்கே யென்பது உலோகாயதன கொள்கை.

உசுஅ. பறை - பேரிகை. ஓசையின் - ஓசையைப்போல.

உசுஎ - உசுஅ. 'மாமுதலாகிய ஐந்து திரவியத்தின் கூட்டததில் மதசக்திபிறந்தாற்போலப் பிருதுவியாதி பஞ்சபூத சமவாயததது ஞானசுகாதிதோனறி அவைவளரவளாந்து அந்தப்பூதங்கள பிரிந்தால் அவை தமமினமாகிய பூதஙகளிற சென்றுசேரும்' என்பது, நீலகேசி, பூதவாதச்சருக்கம், ரு - ம் பாட்டினுரை.

உஎஉ. வேறு உரைவிகற்பமும் - யான் கூறும் வேறுள்ள சொல்விகறபங்களும்.

உஎஙா. உண்மைப்பொருளும் - தததுவஙகளும். உலோகாயதனுணர்வே - உலோகாயத னுணர்ந்தவைகளே; உலோகாயதன்கொள்கையினை, சிவஞானசித்தியார் பரபக்ஷததுள்ள உலோகாயதன மதததாலும, 'காட்சியே அளவையாவதென்றும், நிலம் நீர் தீ வளியெனப்பூதம நான்கேயென்றும், அவற்றது புணர்ச்சி விசேடத்தாற்றோன்றிப் பிரிவால மாய்வதாய உடம்பினகண்ணே அறிவு மதுவின்கட் களிப்புப்போல வெளிப்பட்டழியுமென்றும, இறந்தவுயிர் பின்பிறவாதென்றும், இனபமும்பொருளும் ஒருவனாற் செய்யப்படுவனவென்றுஞ் சொலலும் உலோகாயதம்' என்று பரிமேலழகரெழுதிய வாறறாலுமுணர்க; திருக்குறள், உஅக, விசேடவுரை.

உஎஉ - உஎஙா. உலோகாயதன் கொள்கைகளுள் பூதநானகே யென்பதொழிந்தவைகள் தன்கொள்கையோ டொககுமாதலின, 'வேறுரைவிகற்பமும், உண்மைப்பொருளு முலோகாயதனுணர்வே' என்றான்

உஎச. கண்கூடு - பிரத்தியக்ஷப் பிரமாணம்; கருததளவு - அனுமானப்பிரமாணம்.

உஎரு. இப்பிறப்பே - இப்பிறப்பிலேதானே கழிவன; ஈண்டு, 'கழிவன' என்று ஒருசொல்வருவிகக. 'இமமைப்பயனுமெய்யே' என்றும்பாடம்.

உஎசு. துய்ததல் - அனுபவித்தல்; துய்த்தல் பொய்ம்மையென்க.

உஎஎ. என்றலும் - எனறு பூதவாதி சொல்லலும். கேட்டு - மணிமேகலைகேட்டு.

உசுஎ - உஎஎ. இவ்வடிகளிற் கூறப்பட்டுள்ளவற்றைப் பினவருஞ் செய்யுட்கண் கண்குபுலப்படுததும்:— நீலகேசி,

நன்றல வாயினு நான்மா றுரைக்கிலேன்
பிறந்தமுற் பிறப்பை யெய்தப் பெறுதலி
னறிந்தோ ருண்டோ வென்றுநக் கிடுதலுந்
தெய்வ மயக்கினுங் கனவுறு திறத்தினு
மைய லுறுவார் மனம்வே றும்வகை
யைய மன்றி யில்லையென் றலுநின்
றந்தைதா யரையனு மானத் தாலல
திந்த ஞாலத் தெவ்வகை யறிவாய
மெய்யுணர் வின்றிமெய்ப் பொருளுணர் வரிய
வைய மல்லதிது சொல்லப் பெறுயென

---

பூதவாதச்சருக்கம், (ங) "அணிகொளாரத தரசவை கேட்கெனப், பிணிகொண் மூஞ்சிப் பிசாசகன் சொலலுவான, குணிகு ணமமெனுங் கூறறிலனுலதென், றணிவைம் பூதங்களேதொழிலசொலலுவேன்.", (ச) "திண்ணென்றீநில நீர்வளி காயததாற், கண்ணு மூக்கொடு நாமெய் செவிகளாய், வண்ணநாற்றஞ் சுவையினெடூறுலி, யெணணுங் காலை யியைந்துழி யெய்துமே.", (ரு) "ஐந்துங் கூடி யறிவின்ப மா,தியா, வந்து தோன்றி மதுமயக் காற்றலி, னந்தி நாளுங குடஞ்சுடர் நாட்டம்போற, சிந்தி னுலவை செனறினஞ் சேருமே.", (சு) "உலகெலாமவையேயுயிருணடெனச், சொலவலாருளை சொற்றெளிந் தேநின்று, பலக லாஙகளுஞ் செய்ப பயனிலார், புலவ ராவதன ரேறுவஙகுப் போந்ததே.", (எ) "செனற காலததுஞ் செலகின்ற காலதது, நின்ற காலததி லும்மிந் நிகழ்சசியே, யெனறுமிவவுல கத்தன்மைத தேயிது, வன்றதென்றுரைப் பாரயர்ப் பார்களே."

உஎகூ. முற்பிறப்பை எய்தப்பெறுதலின் - முற்பிறப்புணர்ச்சியைப் புததபீடிகையால் நான அடையப்பெற்றதை; சாரியைநிற்க இரண்டனுருபுதொககது.

உஅ0. எனறு நக்கிடுதலும - என்று மணிமேகலை உட்கொண்டு மறுபிறப்பில்லையென்ற பூதவாதிகூற்றை நினைந்து நகைத்து, நகைததென்னையெனறு வினவிய அவனுக்குத் தான் பழம்பிறப்புணர்ந்ததைத தெரிவிததலும்.

உஎஅ-உஅ0. 'நன்றலவாயினும்' என்பதுமுதல 'உண்டோ' என்பது இறுதியாகவுளளவை மணிமேகலையின் உட்கோள.

உஅக-உஅங. நீ பழம்பிறப்புணர்ந்தேனென்றது, மையலுறுவார்மனம் தெய்வமயக்கினும கனவுறுதிறததினும் வேறுபடும விதமேயாகும; அது, பிரததியக்ஷமன்மையாற் சந்தேகமேயன்றி வேறில்லையென்று அவன கூறலும்.

உஅங - உஅரு. இவ்வடிகள், பிரத்தியக்ஷமன்றி அனுமானவளவை கொள்ளாத பூதவாதிககு அவ்வளவையுண்டென்று கூறுமுகததால மறுமையுண்டெனறு மணிமேகலை சாதிதததைக்கூறின.

உஅசு. மெய்யுணர்வு-சததியஞானம். மெய்ப்பொருள - பரமார்ததததுவங்கள்.

உஅஎ. ஐயமல்லது இது - இது சந்தேகமன்று. சொலலப்பெறாய் - சொல்லாதே

உசுச - உஅஎ. இவ்வடிகளிற் கூறப்பட்டுள்ள பூதவாதிகூற்றுககளும் அவற்றிற்கு மணிமேகலைகூறிய விடையுமாகிய இவை, "இறைவனு மில்லை யிறந்தோர் பிறவா, ரறனே டெனனையென்றறைந்தோன் றன்னைப், பிறவியு மறவியுமபெற்றியி னுணர்ந்த, நறுமலர்க் கோதை யெளளினை நகுதி, யெள்ளினை போலு மிவ்வுரை கேட்டிங, தொள்ளிய துணையென வுன்பிறப் புணர்த்துவை, யாங்குநிற் கொணாந்த வருந்தெய்வ மயக்குக், காம்பன தோளி கனமயக் குற்றனை, யென்றவ னுரைககு மிளங்கொடி நல்லா, யன்றென் றவன்மு னயர்ந்தொழி வாய

வுள்வரிக் கோலமோ டுன்னிய பொருளுரைத்
தைவகைச் சமயமு மறிந்தன ளாங்கெனை.

**சமயக்கணக்கர்தந்திறங்கேட்டகாதை முற்றிற்று.**

---

லை" (உக - ம் காதை, ௧0௬ - ௧௧உ.) எனக்கந்திற்பாவை மணிமேகலைக்கு வருவதுரைத்ததாக முன்வந்ததனோடு ஒப்பு நோக்கற்பாலன.

உஅஅ. உள்வரிக்கோலம் - மறைந்த வேடம்.

உஅகூ. இக்காதையிற் கூறியவை பத்து மதங்களாகவிருப்ப, இங்கே 'ஐவகைச்சமயம்' என்றது இழுக்கன்றோவெனின், அளவைவாதமுதலிய ஐந்தும் ஒருவகையிலும் ஆசீவகவாதம்நிகண்டவாதமென்னுமிரண்டும் ஒருவகையிலும் அடங்குமென்பராதலின், அன்றெனக; "அவ்வுரு வென்ன வைவகைச் சமயமுஞ், செவ்வி தன்மையிற் சிந்தையின் வைததிலேன்" என்று அறவணவடிகளுக்கு மணிமேகலை கூறியதாகப் பின்னும் வருதல்காண்க; உகூ - ம் காதை, சகூ - சச; "ஐவகைச் சமயமு மறிந்து" எனப் பெருங்கதையிலும் வரும்; உஞ்சைக்காண்டம், சாங்கியன்றுயுரை. ஆங்கு - வஞ்சி நகரத்தில்.

க-உஅகூ. (மணிமேகலை) சார்ந்து அளவைவாதியையெய்தி இயம்பென, அவன் அளவைகளென்றனன்; என்றவன் றன்னைவிட்டுச் சைவவாதியை நின்தெய்வம் எப்படித்தென்ன, அவன் இறைவனுகுமென்றுரைத்தனன்; பிரமவாதி முட்டையென்றனன்; கடல்வணன்புராணமோதினன் காப்பென்றுரைததனன், அவற்றோடு வேதியனுரையின் விதியுங் கேட்டு இவருரை இசையாதென்று நினைந்து, ஆசீவகனைநோக்கி, இறை யார்? நூற்பொருள்யாது? என, அவன் 'வகையிது' என்ன, நிகண்டவாதியை நோக்கி, 'மெய்ப்படவிளம்பு' என, அவன் அது வீடாகுமென்றனன், அவன்பின் சாஙகியன் செப்பியதிறமுங்கேட்டு 'வைசேடிக நின்வழக்கையுரை' என்ன, அவனும் உரைத்தனன்; உடனே பூதவாதியை நோககி, 'நீபுகல' என்ன, அவன 'வினைதுய்த்தல பொய்ம்மை' என றலும, நகைத்தலும், அவன் இல்லையென்றலும், 'எவ்வகையறிவாய்; இது சொல்லப் பெறாய்' என உரைதது ஐவகைச் சமயமுமறிந்தனளென வினைமுடிவுசெய்க.

## இருபத்தெட்டாவது

# கச்சிமாநகர்புக்ககாதை.

[இருபத்தெட்டாவது தாயரோடு அறவணரடிகளையுந்தேர்ந்து கச்சிமாநகர்க்கட்சென்றபாட்டு.]

ஆங்குத் தாயரோ டறவணர்த் தேர்ந்து
வாங்குவிற் றானை வானவன் வஞ்சியின்
வேற்று மன்னரு முழிஞைவெம் படையும்
போர்ப்புறஞ் சுற்றிய புறக்குடி கடந்து
சுருங்கைத் தூம்பின் மனைவளர் தோகையர்
கருங்குழல் கழீஇய கலவை நீரு
மெந்திர வாவியி லிளைஞரு மகளிருந்
தந்தமி லாடிய சாந்துகழி நீரும்
புவிகா வலன்றன் புண்ணிய நன்னாட்
சிவிறியுங் கொம்புஞ் சிதறுவிரை நீரு

---

க. ஆங்கு வஞ்சிநகரத்தில். தாயரென்றது - மாதவியையும் சுதமதியையும்.

உ. வாங்குவில் - வளைந்தவில். வானவன் - சேரன்.

ங. வேற்றுமன்னர் - பகையரசர். உழிஞைவெம்படை - உழிஞைமாலையைச் சூடி அரணைக்காக்கும் வெவ்வியபடை. உழிஞை, புறமதிலைவளைப்போரும் அதனைக்காப்போருமாகிய இருதிறத்தினரும் அணிதற்குரித்து.

ச. புறக்குடி - புறத்தேயிருத்தற்குரிய பலவகைமாந்தரும் குடியிருக்குமிடம்; என்றது புறநகரத்தை; இது புறஞ்சிறையென்றும், புறப்படைவீடென்றும், புறஞ்சேரியென்றுங் கூறப்படும்.

ங - ச புறநகர், நாலவகைப்படைவீரரும் பிறருஞ் செறிந்திருத்தற்கு இடமாதலின், இங்ஙனங்கூறப்பட்டது.

ரு. சுருங்கை - நீர்செல்லுதற்குக் கற்களாற் கரந்துபடுத்தது; தூம்பு - சலதாரை, சுருங்கையாகிய தூம்பென்க; "நீணிலம்வ கந்துநீர் பிரந்து வந்தி ழிதரச், சேணிலத்தி யற்றிய சித்திரச்சுருங்கைசேர், கோணிலத்து வெய்யவாங் கொடுஞ்சுறத்த டங்கிடங்கு" என்பது சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், ககங; "சுருங்கைவீதி மருங்கிற் போகி" என்பது சிலப்பதிகாரம், ஊர்காண்காதை, சரு. 'சுருங்கைத்தூம்பின' என்பது 'பாய்தலின' (அடி - கஎ) என மேல்வருவதனோடு சென்றியையும்.

சு. கழீஇய - கழுவிய.

எ. எந்திரவாவி - வேண்டும்பொழுது நீரைநிறைத்தற்கும் வேண்டாதாயிற் போக்குதற்குமுரிய யந்திரங்களையுடைய பொய்கை; இஃது, இலவந்திகையெனவுங் கூறப்படும். இளைஞர் - ஆடவர்.

அ. ஆடிய - பூசிய. சாந்து - சந்தனம்.

கூ. காவலன் - அரசன். புண்ணியநன்னாள் - புண்ணியத்தையுடைய நல்ல நக்ஷத்திரத்தில்; என்றது அரசனுடைய சனனநக்ஷத்திரத்திலென்றவாறு.

க0. சிவிறி கொம்பு என்னுமிரண்டும் நீர்வீசுங் கருவிவிசேடங்கள்; சிவிறியைப் பெருந்துருத்தியென்று கூறுவர்.

கூ - க0. சீவிதத்திருக்குங்காறும் ஒருவ

மேலை மாதவர் பாதம் விளக்குஞ்
சீல வுபாசகர் செங்கைநறு நீரு
மறஞ்செய் மாக்க ளகின்முதல் புகைத்து
நிறைந்த பந்தற் றசும்புவார் நீரு
முறுப்புமுரா ணுருமற் கந்தவுத் தியினற்
செறித்தகைப் போர்தஞ் செழுமணி நீரு
மென்றிந் நீரே யெங்கும பாய்தலிற்
கன்றிய கராமு மிடங்கரு மீன்களு
மொன்றிய புலவொழி யுடம்பின வாகித்
தாமரை குவளை கழுநீ ராம்பற்
பூமிசை பரந்து பொறிவண் டார்ப்ப
விந்திர தனுவென விலங்கக முடுத்து

னுடைய பிறந்தநக்ஷத்திரத்திலும், இறந்தபின்பு அவன் இறந்ததிதியிலும் சிறப்புச் செய்யவேண்டுமென்பது தருமநூற்றுணிபு.

கக. மேலைமாதவர் - மேன்மையையுடைய முனிவர்; ஐ - சாரியை.

கஉ. சீலவுபாசகர் - பஞ்சசீலத்தையுடைய உபாஸகர்; பௌத்தரில், இல்லறமநடத்தும் ஆடவரையும் மகளிரையும முறையே உபாஸகரென்றும் உபாஸகைகளென்றுங் கூறுதல் மரபு.

கச. பந்தல் தசும்பு - தண்ணீர்ப்பந்தரிலுள்ள நீர்க்குடம்; இனி உலோகத்தாற் குழாய்வடிவமாகச் செய்யப்பட்ட உறுப்பினையுடைய தாபமுட்டியுமாம; பந்தல்- அம்பணமெனவும் வழங்கும்; இதனை, "கிம்புரிப் பகுவா யம்பண நிறைய" (நெடுநல்வாடை, கூசு.) என்பதில், 'அம்பணம்' என்பதற்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் 'பந்தல்' என்று பொருள் செய்திருத்தலா லுணர்க. வார்நீர்-ஒழுகுகின்றநீர். 'தசும்புமார்நீரும்' என்றும பாடம.

கரு. உறுப்புமுரணுருமல்-உறுப்புககள் மாறுபடாமல்; "நேர்கட்டி செந்தேனிரியாசம் பச்சிலை, யார மகிலுறுப்போராறு.' என்பதனால், உறுப்புக்களை அறிந்துகொள்க. கந்தவுத்தியினால் - சேர்த்தற்குரிய வாசனைப் பண்டங்களால்; உத்தி-சேர்த்தல்; இது யுக்தியென்னும் வடமொழிச்சிதைவு. 'கந்தபுந்தியினால்' என்றும்பாடம்.

கசு 'செறித்தமைப் போர்தரு செழுமணி நீரும்' என்றும்பாடம்.

கஎ. 'எங்கும் பரத்தலின்' என்றும் பாடம்

ரு - கஎ. சுருங்கைத்தூம்பிற் பாய்தலினென்க.

கஅ. கன்றிய-பகைமையிற்றழும்பிய. கராம் இடங்கர் என்னுமிரண்டும் முதலைச்சாதி விசேடங்கள்; "கொடுந்தாண் முதலைய மிடங்கருங் கராமும்" என்பது குறிஞ்சிப்பாட்டு, உருஎ.

கஎ-ககூ. பாய்தலிற் புலவொழிந்தன.

உ0. தாமரைமுதலிய மூன்றும பகற்பூவென்றும், ஆம்பல் இராப்பூவென்றுங் கூறுவர் அடியார்க்குநல்லார், இதனை, சிலப்பதிகாரப், மனையறம்படுத்தகாதை, கச, கரு-ம அடிகளின் விசேடவுரையிற் காண்க.

உக. மிசைபரந்து - மேலேபரவப்பெற்று; இவ்வெச்சம காரணப்பொருட்டு. ஆர்ப்பப் பரந்தென்க.

உஉ. கலவைநீர் முதலியன பாயப்பெற்றுப் பலநிறப் பூக்களையுடைமையின, அகழிக்கு வானவில் உவமையாயிற்று, "சுந்த ரம்ம லர்க ளெண்ணெய் சுண்ணந் தாது குங்குமஞ், சந்த னக்கு ழம்பு மேற்ப ரந்து பாடி சூழ்ந்தக, ழந்த ரத்ருக்க னைய ணிந்து சூழ்கி டந்ததோ, யிந் திரத்த னுவின் வண்ண மென்ன தனனதாகுமே" என்பது பேருமந்தரபுராணம், முதலாவது வைசயந்தன் முத்திச்சருககம.

ரு - உஉ. கலவைநீரும் சாந்துகழிநீரும் விரைநீரும் நறுநீரும வார்நீரும் மணிநீ

வக்தெறி பொறிகள் வகைமாண் புடைய
கடிமதி லோங்கிய விடைநிலை வரைப்பிற்
பசுமிளை பரந்து பஃறொழி னிறைந்த
வெள்ளிக் குன்ற முள்கிழிந் தன்ன
நெடுநிலை தோறு நிலாச்சுதை மலரும்
கொடிமிடை வாயில் குறுகினள் புக்குக்
கடைகாப் பமைந்த காவ லாளர்
மிடைகொண் டியங்கும் வியன்மலி மறுகும்
பன்மீன் விலைஞர் வெள்ளுப்புப் பகருநர்
கண்ணொடை யாட்டியர் காழியர் கூவியர்

ரும் ஆகிய இந்நீர் சுருங்கைத்தூம்பினூல் எங்கும்பாய்தலின், உடம்பினவாகிப் பரததலான் இலங்கு அகழெனக.

உரு. பொறிகள் - யந்திரங்கள்; அவற்றின் வகையைப் பின் வருவனவற்றாலுணர்க:—"மாற்றவர் மறப்படை மலைந்துமதில் பற்றி, னூற்றுவரைக் கொல்லியொடு நூககியெறி பொறியுங், தோற்றமுறு பேய்களிறு துற்றுபெரும் பாம்புங், கூற்றமன கழுகுதொடர் குந்தமொடு கோண்மா" எனவும், "விற்பொறிகள் வெய்யவிடு குதிரைதொட ரயில்வாள், கற்பொறிகள் பாவையன மாடமடு செந்தீக், கொற்புனைசெய் கொளளிபெருங் கொக்கெழிலசெய் கூகை, நற்றலைக டிருகதம்வலி நெருக்குமர நிலையே" எனவும, "செமபுருகு வெங்களிக ளுமிழ்வதிரிந தெங்கும், வெம்புருகு வட்டுமிழ்வ வெந்நெயமுகந் துமிழ்வ, வம்புமிழ்வ வேலுமிழ்வ கலலுமிழ்வ வாகித, தமபுலன்களால்யவனா தாட்படுதத பொறியே" எனவும, "கரும்பொனியல் பன்றிகத நாகம்விடு சகடங், குரங்குபொரு தகரினொடு கூர்ந்தரிவ நுண்ணூல, பரந்தபசும் பொற்கொடிகள் பதாகையொடு கொழிக்குந், திருந்துமதி றெவ்வர்தலை பனிப்பத்திருந தின்றே" எனவும்வருவன **சீவகசிந்தாமணி**, நாமகளிலமபகம, எஉ, எரு, எச, எரு; "வளைவிற் பொறியுங, கருவிரலூகமுங் கலலுமிழ் கவணும், பரிவுறு வெந்நெயும் பாகடு குழிசியுங, காய்பொன்னுலையுங் கலலிடு கூடையுந், தூண்டிலுந் தொடக்கு மாண்டலை யடுப்புங, கவையுங் கழுவும் புதையும் புழையு, மையவி துலாமுங் கைபெய ரூசியுஞ், சென்றெறி சிரலும் பன்றியும் பணையு,மெழுவுஞ் சீப்பு முழுவிறற் கணையமுங், கோலுங் குந்தமும் வேலும் பிறவும்" என்பது **சிலப்பதிகாரம்**, அடைக்கலக்காதை, உ0எ - உகசு.

உச. கடிமதில் - காவலாகியமதில; என்றது எணியெய்தாத உயர்ச்சியும் புறத்தோர்க்கு அகழலாகா அடியகலமும் அகத்தோர்க்கு நின்று வினைசெய்யலாந் தலைபகலமும் கலஇட்டிகைகளாற் செய்யப்பட்டிருத்தலிற் குத்தப்படாமையுமுடைமதென்றவாறு.

உரு - உச. "உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கி, னமைவர ணென்றுரைக்கு நூல" எனபது **திருக்குறள்**, எசரு.

உரு. மிளை - காவற்காடு.

உஎ. 'நெடுநிலைமனைதொறும்' என்றும்பாடம்.

ச-உஅ. கடந்து குறுகினள் புக்கெனக.

உசு - உஅ. உள்கிழிந்தன்னவாயில். புக்கு - புகுந்து.

உக. கடைகாப்பமைந்த - வாயில்சாத்தற்கமைந்த.

ரு0. மிடைகொண்டு - நெருங்குதல் கொண்டு.

ருக. மீன்விலைஞர் - மீன்விலைப் பரதவர். உப்புப் பகருநா - உப்புவிற்போர்; இவரை உமணரென்பர்; உமட்டியருமாம, அளவருமாம்; பகர்தல் - விற்றல.

ருஉ கள் நொடையாட்டியர் - கள்ளை விற்கும் வலைச்சியர்; நொடை - விலை; "மீனொடுத்து நெற்குவைஇ" என்பது **புறநானூறு**, ருசரு. காழியர் - பிட்டுவாணிகர். கூவியர் - அப்பவாணிகர்; "காரகற் கூவியன் பாகொடு பிடிதத" என்பது **பெரும்பாணாற்றுப்படை**, ருஎஎ.

பைந்நிண விலைஞர் பாசவர் வாசவ
ரென்னுநர் மறுகு மிருங்கோ வேட்களுஞ்
செம்பு செய்குநருங் கஞ்ச காரரும்
பைம்பொன் செய்குநரும் பொன்செய் கொல்லரு
மரங்கொ றச்சரு மண்ணீட் டாளரும்
வரந்தர வெழுதிய வோவிய மாக்களுந்
தோலின் றுன்னருந் துன்ன வினைஞரு
மாலைக் காரருங் காலக் கணிதரு
நலந்தரு பண்ணுந் திறனும் வாய்ப்ப
நிலங்கலங் கண்ட நிகழக் காட்டும
பாண ரென்றிவர் பல்வகை மறுகும்
விலங்கரம் பொரூஉம் வெள்வளை போழ்நரோ
டிலங்குமணி வினைஞ ரிரீஇய மறுகும
வேத்தியல் பொதுவிய லென்றிவ் விரண்டின்
கூத்தியல் பறிந்த கூத்தியர் மறுகும்

---

௩௩. பைந்நிண விலைஞர் - பசிய நிணம் விற்போர்; என்றது ஆட்டுவாணிகரை. பாசவர் - இலையமுதிடுவோர்; அன்றிக் கயிறுதிரித்துவிற்போரும், பச்சிறைச்சி சூட்டிறைச்சி விற்போருமாம். வாசவர் - பஞ்சவாசம் விற்போர்; அவை, "தக் கோலந் தீம்பூத் தகைசா லிலவங்கங், கற்பூரஞ் சாதியோ டைந்து." என்பன.

௩௪. கோவேட்கள் - குயவர்; இப்பெயர் வேட்கோவரெனவும் வழங்கும்.

௩௫. செம்பு செய்குநர் - செம்புகொட்டிகள். 'செய்நரும்' என்றும் பாடம். கஞ்சகாரர் - வெண்கலக்கன்னார்; கஞ்சம் - வெண்கலம்.

௩௬. பைம்பொன் செய்குநர் - பொற்பணிசெய்வோர். 'செய்நரும்' என்றும் பாடம். பொன்செய்கொல்லர் - உருக்குத தட்டார்.

௩௭. மரங்கொல்தச்சர் - மரத்தைவெட்டுந்தச்சர்; கொல்லல் - வெட்டல். மண்ணீட்டாளர் - சிற்பாசாரிகள்; அன்றிச் சுதையாற் பாவையுள்ளிட்டன பண்ணுவாரென்றுமாம்; மண் - ஈண்டுச்சுதை; "மண்ணோ டியைந்த மரத்தனையர்" என்பது திருக்குறள், ௫௭௬.

௩௮. ஓவியமாக்கள் - சித்திரகாரிகள். 'வரந்தரவெழுதும்' என்றும்பாடம்.

௩௯. தோலின்துன்னர் - உறைகாரரும் பறம்பர்முதலாயினரும். 'தோலின்றொழினரும்' என்றும்பாடம். துன்னவினைஞர் - தையற்காரர்.

௪௦. மாலைககாரர் - மாலைதொடுப்போர். காலக்கணிதர் - சோதிடநூலோர்; இவர்கள் கணிகளெனவுங் கூறப்படுவர்

௪௧. பண் - இசை; பாலை குறிஞ்சி மருதம் செவ்வழியென்னும் பெரும்பண்ணுமாம்; திறம் - அவற்றின்கிளைகள்; அவை இருபத்தொருவகைப்படும்.

௪௨. நிலம் - மூவகைத்தானம்; அவை எழுத்தும் அசையும் சீரும். கலம் - யாழ். கண்டம் - குரல்.

௪௩ பாணர் - இசைக்காரர். இசைப்பாணரும், யாழ்ப்பாணரும், மண்டைப்பாணருமெனப் பாணர் பலவகையினராவார்.

௪௪. விலங்கரம் - வாளரம்; விலங்கு - குறுக்கு. வளைபோழ்நர் - சங்கறுப்பார்.

௪௫. மணிவினைஞர் - முத்துக்கோப்பார்.

௪௬. வேத்தியல் - அகக்கூத்து. பொதுவியல் - புறக்கூத்து.

௪௭. கூத்தியல்பு - கூத்தினிலக்கணம். கூத்தியர் - பதியிலார்.

பால்வே றாக வெண்வகைப் பட்ட
கூலங் குவைஇய கூல மறுகு
மாகதர் சூதர்வே தாளிகர் மறுகும்
போகம் புரக்கும் பொதுவர்பொலி மறுகுங்
கண்ணுழை கல்லா நுண்ணூற் கைவினை
வண்ண வறுவையர் வளந்திகழ் மறுகும்
பொன்னுரை காண்போர் நன்மனை மறுகும்
பன்மணி பகர்வோர் மணிய மறுகு
மறையோ ரருந்தொழில் குறையா மறுகு
அரசியன் மறுகு மமைச்சியன் மறுகு
மெனைப்பெருந் தொழில்செ யேனோர் மறுகு
மன்றமும் பொதியிலுஞ் சந்தியுஞ் சதுக்கமும்
புதுக்கோள் யானையும் பொற்றார்ப் புரவியுங்
கதிக்குற வடிப்போர் கவின்பெறு வீதியுஞ்
சேணோங் கருவி தாழ்ந்தசெய் குன்றமும்
வேணவா மிகுக்கும் விரைமர காவும்

---

சஅ. பால் - பகுதி.

சக. குவைஇய-குவித்த. கூலமறுகு-கூலக்கடைத்தெரு.

சஅ - சக. எண்வகைக்கூலங்களாவன. "நெல்லுப் புல்லு வரகு தினை சாமை, யிறுங்கு தோரையொடு கழைவிளை நெல்லே." என்பன; கூலம் பதினெண்வகைத்தென்பர் கூத்தநூலார்.

ருO. மாகதர்-இருந்தேத்துவார். சூதர்-நின்றேத்துவார். வேதாளிகர் வைதாளியாடுவார்; "சூதர் வாழ்த்த மாகதர் நுவல, வேதா ளிகரொடு நாழிகை யிசைப்ப" என்பது மதுரைக்காஞ்சி, சுஎO - சுஎக.

ருக. பொதுவர்-பொதுமகளிர். 'போகம்புரக்குமுழவர்' என்றும் பாடம்.

ருஉ. நுழைகல்லா-நுழையாத. 'ஒண்ணூற் கைவினை' என்றும் பாடம்.

ருங. வண்ணவறுவையர் - பலநிறங்களையுடைய உடைநெய்வோர்; புடைவை விற்பாருமாம்.

ருச. பொன்னுரைகாண்போர் - பொன்னை உரைத்தவுரையை அறுதியிடும் பொன்வாணிகர்.

ருரு. பன்மணிபகர்வோர் - பலவகைப் பட்ட இரத்தினங்களை விற்கும் வாணிகர்.

ருசு. அந்தணர் வீதி.

ருஎ. இராசப்பெருந்தெருவும் மந்திரிகள் வீதியும்.

ருஅ. எனை - எனை; விகாரம். ஏனோர்-சேனாதிபதிகள் முதலியோர்.

ருகூ. மன்றம் - ஊர்க்குநடுவாய் எல்லாருமிருக்கும் மரத்தடி. பொதியில் - அம்பலம். 'மன்றமுங்கவலையும்' என்றும் பாடம். சந்தி - முச்சந்தியும் ஐஞ்சந்தியும். சதுக்கம் - நாற்சந்தி; "சதுக்கமுஞ் சந்தியும் புதுப்பூங் கடம்பு, மன்றமும் பொதியிலும்" என்பது திருமுருகாற்றுப்படை, உஉரு - உஉசு.

சுO. புதுக்கோள் யானை - புதிதாகப் பிடிக்கப்பட்டுவந்த யானை. பொற்றார்ப்புரவி - பொன்னாலாகிய கிண்கிணிமாலையையணிந்த குதிரை.

சுக. கதிக்குற - நடையில் மேம்பாடுற. வடிப்போர் - பயிற்றும் யானைப்பாகரும், அச்சுவவாதியரும்; வடித்தல் - பயிற்றல்; "வடிகயி ரூய்ந்து" என்பது சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையாரிலம்பகம், கூOஉ. 'கவின்கொள் வீதியும்' என்றும் பாடம்.

சுஉ. சேண் - நெடுந்தூரம். செய்குன்றம் - கட்டுமலை.

சுங. வேணவா-வேட்கையாலுண்டாகிய அவா; வேட்கையாவது பொருள்

விண்ணவர் தங்கள் விசும்பிட மறந்து
நண்ணுதற் கொத்த நன்னீ ரிடங்களுஞ்
சாலையுங் கூடமுந் தமனியப் பொதியிலுங்
கோலங் குயின்ற கொள்கை யிடங்களுங்
கண்டுமகிழ் வுற்றுக் கொண்ட வேடமோ

கண்மேற்றோன்றும் பற்றுள்ளம்; அவாவாவது அப்பொருள்களைப் பெறவேண்டுமென்று மேன்மேல் நிகழும் ஆசை; "செய்யுண மருங்கின் வேட்கை யென்னு, மையெ ணிறுதி யவாமுன் வரினே, மெய்யொடுங் கெடுத லென்மனார் புலவர், டகார ணகார மாதல் வேண்டும்." என்னுந் தொல்காப்பியம், உயிர்மயங்கியற் சூத்திரத்தால் முடித்துக்கொள்க.

௬௪. 'விசும்பிடை' என்றும் பாடம்.

௬௫. நீரிடங்கள் - பொய்கை முதலியவைகள்.

௬௬. சாலை - அறச்சாலைகள். தமனியப்பொதியில - பொன்னாலாகிய அம்பலம்; 'பொன்னம்பலமு முண்டு' என்பர் அடியார்க்குநல்லார்; "கண்ணிலாக் கவர்வன கனக கூடமும்" என்று சூளாமணியில நகர வருணனையில் வருதல் காண்க.

௬௭. கோலங்குயின்ற - சித்திரமெழுதப்பெற்ற. கொள்கையிடங்கள் - விரதங்களை அனுட்டித்திருத்தற்குரிய தவச்சாலைகள்; கொள்கை - விரதம்; "தாவில் கொள்கைத் தந்தொழின் முடிமார்" என்பது திருமுருகாற்றுப்படை, ௮௯; "கோவலன் சென்றக கொள்கையி னிருந்த, காவுந்தி யையையைக் கைதொழு தேத்தி" என்பது சிலப்பதிகாரம், ஊர்காண் காதை, ௧௫ - ௧௬.

௨௯-௬௮. வியன்மலி மறுகு முதற்கொள்கையிடங்களிறுதியாகவுள்ள இடவிசேடங்களைக் (மணிமேகலை) கண்டெனக. இவ்வடிகளிற்போலப் பற்பலசாதியாருடைய குடியிருப்புக்களையும் இளங்கோவடிகள் கூறியிருத்தலகாண்க; அது வருமாறு:—"வேயா மாடமும் வியன்கல விருக்கையு, மான்கட் காலதர் மாளிகை யிடங்களுங், கயவாய் மருங்கிற் காண்போர்த் தடுக்கும், பயனற வறியா யவன ரிருக்கையுங், கலந்தரு திருவிற் புலம்பெயர் மாக்கள், கலந்திருந் துறையு மிலங்குநீர் வரைப்பும், வண்ணமுஞ் சுண்ணமுந் தண்ணறுஞ் சாந்தமும், பூவும் புகையு மேவிய விரையும், பகர்வனர் திரிதரு நகர வீதியும், பட்டினு மயிரினும் பருத்தி நூலினுங், கட்டு நுண்வினைக் காருக ரிருக்கையு, மாரமு மகிலுந் தூசுந் துகிரு, மாசறு முத்து மணியும் பொன்னு, மருவ கல வெறுக்கையோ டளந்துகடை யறியா, வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகும், பால்வகை தெரிந்த பகுதிப் பண்டமொடு, கூலங் குவித்த கூல வீதியுங், காழியர் கூவியர் கணவெணை யாட்டியர், மீன்விலைப் பரதவர் வெள்ளுப்புப் பகருநர், பாசவர் வாசவர் பன்னிண விலைஞரோ, டோசுநர் செறிந்த வூன்மலி யிருக்கையுங், கஞ்ச காரருஞ் செம்புசெய் குநரு, மரங்கொ றச்சருங் கருங்கைக் கொல்லரு, கண்ணுள் வினைஞரு மண்ணீட் டாளரும், பொன்செய் கொல்லரு நன்கலந் தருநருந், துன்ன காரருந் தோலின் றுன்னருங், கிழியினுங் கிடையினுந் தொழில்பல பெருக்கிப், பழுதில் செய்வினைப் பால்கெழு மாக்களுங், குழலினும் யாழினுங் குரன்முத லேழும், வழுவின் றிசைத்து வழித்திறங் காட்டு, மரும்பெறன் மரபிற் பெரும்பா ணிருக்கையுஞ், சிறுகுறுங் கைவினைப் பிறர்வினை யாளரொடு, மறுவின்றி விளங்கு மருவூர்ப் பாக்கமுங்,கோவியன் வீதியுங் கொடித்தேர் வீதியும், பீடிகைத் தெருவும் பெருங்குடி வாணிகர், மாட மறுகு மறையோ ரிருக்கையும், வீழ்குடி யுழவரொடு விளங்கிய கொள்கை, யாயுள் வேதருங் காலக் கணிதரும், பால்வகை தெரிந்த பன்முறை யிருக்கையுந், திருமணி குயிற்றுநர் சிறந்த கொள்கையொ, டணிவளை போழுந ரகன்பெரு வீதியுஞ், சூதர் மாகதர் வேதா ளிகரொடு, நாழிகைக் கணக்கர் நலம்பெறு கணணுளர், காவற் கணிகைய ராடற் கூத்தியர், பூவிலை மடந்தைய ரேவற் சிலதியர், பயிறு

டந்தர சாரிக ளமர்ந்தினி துறையு
மிந்திர விகார மெனவெழில் பெற்று
நவையறு நாத னல்லறம் பகர்வோ
ருறையும் பள்ளிபுக் கிறைவனை நல்லாள்
கோவலன் றாதை மாதவம் புரிந்தோன்
பாதம் பணிந்துதன் பாத்திர தானமுந்
தானப் பயத்தாற் சாவக மன்னவ
னூனமொன் றின்றி யுலகாள் செல்வமுஞ்

---

ழிற் குயிலுவர் பன்முறைக் கருவியர், நகைவே ழம்பரொடு வகைதெரி யிருக்கையுங், கடும்பரி கடவுநர் களிற்றின் பாகர், நெடுந்தே ரூருநர் கடுங்கண் மறவ, ரிருந்துபுறஞ் சுற்றிய பெருமபா யிருக்கையும், பீடுகெழு சிறப்பிற் பெரியோர் மல்கிய, பாடல்சால் சிறப்பிற் பட்டினப் பாக்கமும்" (சிலப்பதிகாரம், இந்திரவிழவூரெடுத்தகாதை, எ - ருஅ)

சுக. அந்தரசாரிகள் - ஆகாயசாரிகள். அமர்ந்து - விரும்பி.

எ0. இந்திரவிகாரம்-புத்தனாலயத்தில் இந்திரனால் நிருமிககப்பட்ட அரஙகு; 'விகாரம் - கையாற் கருவியாற் பண்ணு து மனத்தால் நிருமித்தல்' என்பர் அடியார்க்கு நல்லார்; இதனை, சிலப்பதிகாரம், நாடுகாண்காதை, கச - ம் அடியுரையிற்காண்க.

சுக - எ0. இந்திர விகாரமென்றது, காவிரிப்பூம்பட்டினத்துப் புத்தசைததியததுள்ள எழரங்கினையும்; இஃது, 'அந்தர சாரிக ளமர்ந்தினி துறையும்' என்பதனாற் பெறப்பட்டது; "அந்தர சாரிக ளறைந்தனர் சாற்று, மிந்திர விகார மேழுடன் போகி" (நாடுகாண்காதை, கரு - கச) எனவும், "இந்திா விகார மேழுடன் புககாங, கந்தர சாரிக ளாஸறைம பதின்மர்" (நீர்ப்படைககாதை, கஉ - கரு) எனவும் சிலப்பதிகாரத்து வருதல் காண்க.

எக. நவை - குற்றம். நாதன் - புத்தன். நல்லறம் - அருளறம். பகர்வோர் - சங்கத்தார்.

எஉ. பள்ளி - தவத்தோருறைவிடம்; "ஐயருறை பள்ளியிடம்" என்பது சீவகசிந்தாமணி, கனகமாலையாரிலம்பகம், உஉசு.

எ0 - எஉ. இந்திரவிகாரம் பள்ளிக்கு உவமம்.

எங. கோவலன்றாதை - மாசாத்துவான்; இவன், மதுரையிற் கோவலன் கொலையுணடது முதலியவற்றை மாடலனென்னும் மறையவன்கூறக்கேட்டுத் தன் பொருளையெல்லாம் தானஞ்செய்து விட்டுக் காவிரிபபூம்பட்டினத்திற் புதத சைத்தியத்துள்ள எழுவிகாரங்களிலுமிருந்து நோற்கும பௌததமுனிவர்களுக்கு முன்னே சென்று துறவுபூண்டானாதலின், மாதவம்புரிந்தோனென்றார்; இதனை, "மைந்தற் குற்றது மடந்தைக் குற்றதுஞ், செங்கோல் வேந்தற் குற்றதுங கேட்டுக், கோவலன் றாதை கொடுந்துயரெய்தி, மாபெருந் தானம் வான்பொருளீத்தாங், கிந்திர விகார மேழுடன் புக்காங், கநதர சாரிக ளாறைம் பதின்மர், பிறந்த யாககைப் பிறப்பற முயன்று, துறந்தோர் தம்முன் றுறவி யெய்தவும்" (நீர்ப்படைக்காதை, அஅ - கூரு.) "மாசாத்துவான் றுன்றுறப்பவும்" (வாழ்த்துக்காதை, உரைப்பாட்டுமடை) எனச் சிலப்பதிகாரத்து வருதலாலும், இக்காதையிற் பின்னேவரும் 'தையல் கேள்' (அடி - கூரு) என்பது முதலியவற்றாலும் அறிந்துகொள்க.

எச. தன பாத்திரதானம் - தன்கையிலுள்ள அமுதசுரபியென்னும பாததிரததாற் செய்யப்படுமெ அன்னதானம்.

எரு. தானப்பயம - முற்பிறப்பிற்செய்த அன்னதானததாலுணடாகிய புண்ணியம்; பயம் - பிரயோசனம். சாவகமன்னவன் - சாவகநாட்டரசனாகிய புண்ணியராசன்.

எரு - எசு. உலகாளுதற்குககாரணம் தானப்பயன்.

செல்வற் கொணர்ந்தத் தீவகப் பீடிகை
யொல்காது காட்டப் பிறப்பினை யுணர்ந்தது
முணர்ந்தோன் முன்ன ருயர்தெய்வந் தோன்றி
மனங்கவல் கெடுத்தது மாநகர் கடல்கொள
வறவண ரடிகளுந் தாயரு மாங்குவிட்
டிறவா திப்பதிப் புகுந்தது கேட்டதுஞ்
சாவக மன்னன் றன்னா டெய்தத்
தீவகம் விட்டித் திருநகர் புகுந்ததும்
புக்கபி னந்தப் பொய்யுரு வுடனே
தக்க சமயிக டந்திறங் கேட்டது
மவ்வவர் சமயத் தறிபொரு ளெல்லாஞ்
செவ்விது தன்மையிற் சிந்தைவை யாதது
நாத னல்லறங் கேட்டலை விரும்பி
மாதவற் றேர்ந்து வந்த வண்ணமுஞ்
சொல்லின ளாதலிற் றூயோய் நின்னையென்
னல்வினைப் பயன்கொ ளுன்கண் டதுவெனத்
தையல் கேணின் றாதையுந் தாயுஞ்
செய்ததீ வினையிற் செழுநகர் கேடுறத்
துன்புற விளிந்தமை கேட்டுச் சுகதன்
னன்புகொ ளறத்திற் கருகனே னாதலின்

---

எஎ. செல்வற்கொணர்ந்து - புண்ணியராசனை அழைத்துவந்து. பீடிகை - புத்தபீடிகை.

எஅ. ஒல்காது - தளராது.

எஎ - எஅ. பீடிகையைக்காட்ட.

எகூ. உணர்ந்தோன் - புண்ணியராசன். தெய்வம் - தீவதிலகை.

அ0. மனங்கவல் கெடுத்ததும் - உள்ளம் கவலைகொள்ளுதலைக் கெடுத்ததும்; கவல் - கவலுதல்; முதனிலைத் தொழிற்பெயர். நகர் - காவிரிப்பூம்பட்டினம்.

அஉ. இப்பதியென்றது, வஞ்சியை. கேட்டதும் - (தீவதிலகையால்) தான் கேட்டதும்.

அங. சாவகமன்னன் - புண்ணியராசன்.

அச. தீவகம் - மணிபல்லவம்.

அரு. புக்கபின் - புகுந்து கண்ணகி கோட்டம் தொழுதபின். பொய்யுரு - மாதவன்வடிவு.

அசு. சமயிகள் - அளவைவாதிமுதலியோர்.

அஅ. செவ்விது அன்மையின் - திருத்தமுடையன அல்லாமையின்; செவ்விது - பன்மையொருமைமயக்கம்.

அகூ. நாதனல்லறம் - புத்தன் கூறிய தருமங்களை.

கூ0. மாதவற்றேர்ந்து - அறவணவடிகளைத்தேடி.

கூக. 'தூயோய்' என்றது முதலியன கோவலன்றாதை வார்த்தை.

கூங. தையல் - விளி. தாதையும் தாயும் - கோவலனும் கண்ணகியும்.

கூச. தீவினை - முற்பிறப்பிற் சங்கமனைக் கொல்வித்ததனாலாகிய பாவம். நகர்-மதுரை. 'திருநகர்' என்றும் பாடம்.

கூரு. விளிந்தமை - இறந்தமை. 'வீந்தமை' என்றும் பாடம். சுகதன் - புத்தன், நல்ல வருகையையுடையவனென்று பொருள், நல்ல நடையையுடையவனென்றுமாம்.

கூச - கூரு. தீவினையிற் கொலையுண்டிறந்தமையைக்கேட்டு.

கூசு. அன்புகொள் அறம் - நல்லறம். அருகன் - பக்குவி.

மனைத்திற வாழ்க்கையை மாயமென் றுணர்ந்து
தினைத்தனை யாயினுஞ் செல்வமும் யாக்கையு
நிலையா வென்றே நிலைபெற வுணர்ந்தே
மலையா வறத்தின் மாதவம் புரிந்தேன்
புரிந்த யானிப் பூங்கொடிப் பெயர்ப்படூஉந்
திருந்திய நன்னகர் சேர்ந்தது கேளாய்
குடக்கோச் சேரலன் குட்டுவர் பெருந்தகை
விடர்ச்சிலை பொறித்த வேந்தன் முன்னாட்
டுப்படு செவ்வாய்த் துடியிடை யாரொடு
மிப்பொழில் புகுந்தாங் கிருந்த வெல்லையு
ளிலங்கா தீவத்துச் சமனொளி யென்னுஞ்
சிலம்பினை யெய்தி வலங்கொண்டு மீளுந்
தரும சாரணர் தங்கிய குணத்தோர்

---

௯௭. மனைத்திறவாழ்க்கை - இல்வாழ்க்கை. மாயம் - பொய்.

௯௮. தினைத்தனையாயினும் - தினையளவாவது.

௧௦௦. பௌத்ததருமம் பூர்வோத்தரவிரோதமில்லாத தென்பராதலின், 'மலையாவறத்தின்' என்றார்; மலைதல் - மாறுபடல், "முரணாத திருவறம்" [அடி - ௬] என்றும், "முன்பின் மலையா மங்கல மொழியின்" [அடி - உ௬௧] என்றும் ௩௦ - ம் காதையில் வருதல்காண்க. புரிந்தேன் - செய்தேன்.

௧௦௧. கொடி - வஞ்சி.

௧௦௨. நகர் - வஞ்சிநகர்.

௧௦௧ - ௧௦௨ இந்நகர், "பொற்கொடிப் பெயர்ப்படூஉம் பொன்னகர்" என்று முன்னுங்கூறப்பட்டது; உ௬ - ம் காதை, ௯உ.

௧௦௩ குடக்கோச் சேரலன் - மேனாட்டிற்கு அரசனாகிய சேரன்; குடக்கு - மேற்கு; கொடுந்தமிழ்நாடு பன்னிரண்டனுள் ஒன்றாகிய குடநாட்டிற்கு அரசனென்பது பற்றிக் குடக்கோவென்றாரெனினுமமையும் குட்டுவர் பெருந்தகை - குட்டநாட்டார்க்கு அரசன்; குட்டமும் கொடுந்தமிழ் நாடுகளுள் ஒன்று; "குடவர் கோவே" (சிலப்பதிகாரம், நீர்ப்படைக்காதை, ௬௪.) எனவும், "இயறேர்க் குட்டுவன்" (சிறுபாணாற்றுப்படை, ௪௯.) எனவும் வந்திருத்தல்காண்க.

௧௦௪. விடர்ச்சிலைபொறித்த வேந்தன் - நெடுஞ்சேரலாதன்; இவன் வடநாட்டரசர்களைவென்று சென்று இமயமலையில் தமது இலச்சினையாகிய விற்பொறியைப் பொறித்தமையால், இமயவரம்பனென வும், விடர்ச்சிலைபொறித்த வேந்தனென வும் பெயர்பெற்றான்; இவனை, இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனெனவுங் கூறுவர்; இது, பதிற்றுப்பத்தில் இரண்டாம் பத்தாலுணரப்படும்; "இமயஞ் சூட்டிய வேம விற்பொறி, மாண்வினை நெடுந்தேர் வானவன்" எனப் புறநானூற்றிலும் (௩௯) "விடர்ச்சிலை பொறித்த விறலோன்" எனச் சிலப்பதிகாரம், நடுகற்காதையிலும் (௧௩௬) இவன் கூறப்பட்டிருத்தல்காண்க.

௧௦௫. துப்பு-பவளம். துடி-உடுக்கை.

௧௦௩ - ௧௦௬. சேரலனும் பெருந்தகையுமாகிய வேந்தன் முன்னொருகாலத்துத் துடியிடையாரொடும் இப்பொழிலிற்புகுந்து இருந்தவிடத்தெனக

௧௦௬. 'தருமசாதனர்'என்றும் பாடம்.

௧௦௭ - ௧௦௯. இலங்கைத்தீவத்துள்ள சமனொளியெனுமலையையடைந்துவலங்கொண்டு மீண்ட சாரணர். இம்மலை, சமந்தமென்றும் சமந்தகூடமென்றும் பெயர்பெறும். இதன் விவரணம், இந்நூல் ௧௧-ம் காதை, உஉ - ம் அடிக்குறிப்பிற் கூறப்பட்டது. தங்கிய குணத்தோர் - குணங்கள் தங்கப்பெற்றோர்.

கருமுகிற் படலத்துக் ககனத் தியங்குவோ
ரரசற் கேது வவ்வழி நிகழ்தலிற்
புரையோர் தாமுமிப் பூம்பொழி லிழிந்து
கற்றலத் திருந்துழிக் காவலன் விரும்பி
முற்றவ முடைமையின் முனிவரை யேத்திப்
பங்கயச் சேவடி விளக்கிப் பான்மையி
னங்கவர்க் கறுசுவை நால்வகை யமிழ்தம்
பாத்திரத் தளித்துப் பலபல சிறப்பொடு
வேத்தவை யாரொடு மேத்தின னிறைஞ்சலிற்
பிறப்பிற் றுன்பமும் பிறவா வின்பமு
மறத்தகை முதல்வ னருளிய வாய்மை
யின்ப வாரமு திறைவன் செவிமுதற்
றுன்ப நீங்கச் சொரிய மன்னா
நின்பெருந் தாதைக் கொன்பது வழிமுறை
முன்னோன் கோவலன் மன்னவன் றனக்கு
நீங்காக் காதற் பாங்க னாதலிற்
றூங்கா நல்லறந் தானுங் கேட்டு
முன்னோர் முறைமையிற் படைத்ததை யன்றித்
தன்னா லியன்ற தனம்பல கோடி
யெழுநா ளெல்லையு ளிரவலர்க் கீத்துத்

---

௧௧௦. முகிற்படலம்-மேகக்கூட்டம். ககனம்-ஆகாயம்; ககனத்தியங்கல் இருத்திகளில் ஒன்று.

௧௧௧. அரசற்கு - இமயவரம்பனுக்கு. ஏது அவ்வழி நிகழ்தலின் - நல்வினையாகியகாரணம பயனளித்தற்கு அவ்விடத்தே தோற்றுதலினாலே.

௧௧௨. புரையோர் - மேற்கூறிய தருமசாரணர்.

௧௦௬ - ௧௧௨. சாரணரும் குணத்தோரும் இயங்குவோருமாகிய புரையோர்.

௧௧௩. கற்றலத்து - சிலாதலத்தில். காவலன் - சேரன்.

௧௦௪ - ௧௧௩. வேந்தன் இருந்தவெல்லையுள் அவனுக்கு ஏது நிகழ்தலிற் புரையோரும் இழிந்து அப்பொழிலிற் கற்றலத்திருந்தபொழுது.

௧௧௪. முனிவரை - தருமசாரணரை.

௧௧௬. அறுசுவையாவன:—கைப்பு, கார்ப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, தித்திப்பு என்பன. நால்வகையமிழ்தமாவன:— உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன; ௨௮-ம் காதை, ௨௩௧; அமிழ்தம - உணவு.

௧௧௮. 'வேந்தனிறைஞ்சலின்' என்றும் பாடம்.

௧௧௩ - ௧௧௮. காவலன், விரும்பி ஏத்தி விளக்கி அளித்து ஏத்தி இறைஞ்சலினென்க.

௧௨௦. அறத்தகைமுதல்வன் - புத்தன்; தருமராசனென்றவாறு. வாய்மை-நால்வகைச்சத்தியம்.

௧௧௯ - ௧௨௦:—௨ - ம் காதை, ௬௪ - ௬௭; ௩௦ - ம் காதை, ௧௮௬ - ௧௮௮.

௧௨௧ இறைவன் செவிமுதல் - அரசனுடைய செவியிடத்தே.

௧௨௦-௧௨௧. வாய்மையாகிய அமுதை.

௧௨௩. நின்பெருந்தாதைக்கு - உனது தந்தையாகியகோவலனுக்கு.

௧௨௪. கோவலன் - அவன்பெயர்.

௧௨௭. முறைமையின்-நல்வழியாலே.

௧௨௯. எழுநாளென்றல் ஒரு மரபு.

தொழுதவம் புரிந்தோன் சுகதற் கியற்றிய
வானோங்கு சிமையத்து வாலொளிச் சயித்த
மீனோர்க் கெல்லா மிடர்கெட வியன்றது
கண்டு தொழுதேத்துங் காதலின் வந்தித்
தண்டாக் காட்சித் தவத்தோ ரருளிக்
காவிரிப் பட்டினங் கடல்கொளு மென்றவத்
தூவுரை கேட்டுத் துணிந்திவ ணிருந்த
தின்னுங் கேளாய் நன்னெறி மாதே
தீவினை யுருப்பச் சென்றநின் றாதையுந்
தேவரிற் றோற்றிமுற் செய்தவப் பயத்தா
லாங்கத் தீவினை யின்னுந் துய்த்துப்
பூங்கொடி முன்னவன் போதியி னல்லறந்
தாங்கிய தவத்தாற் றன்றவந் தாங்கிக்
காதலி தன்னொடு கபிலைய பதியி
னாத னல்லறங் கேட்டுவீ டெய்துமென்
றற்புதக் கிளவி யறிந்தோர் கூறச்
சொற்பய னுணர்ந்தேன் றோகை யானு
மந்நா ளாங்கவ னறநெறி கேட்குவ

---

௧௩௦. புரிந்தோன் - முற்கூறிய முன்னோனாகிய கோவலன். சுகதற்கு - புத்தனுக்கு.

௧௩௧. சிமையத்து - மலையில். வாலொளிச் சயித்தம் - வெள்ளிய ஒளியையுடைய ஆலயம்; சயித்தம் - சைத்திய மென்னும் வடமொழிச்சிதைவு. 'வாலவொளிச்சயித்தம்' என்றும் பாடம்.

௧௩௨. ஈனோர்க்கு - இவ்வுலகத்தோர்க்கு; "ஈனோர்க் குரைப்பாம் பதிகத்துளியன்ற வாறே" என்பது சீவகசிந்தாமணி, பதிகம், ௨௪.

௧௩௪. தண்டாக் காட்சி - நீங்காத அறிவு.

௧௩௫ - ௧௩௪. இத்தவத்தோரென்றது ஆண்டுள்ள முனிவர்களை.

௧௩௬. யான் இவ்விடமிருந்தது தூவுரைகேட்டமையாலேயேயென்க. 'துணிந்தியானிருந்தது' என்றும் பாடம்.

இதுகாறும், தான் துறந்ததற்கும் வஞ்சிநகரடைந்ததற்கும் ஆண்டேவதிவதற்குங் காரணங்கூறிய மாசாத்துவான், மேலே பெரியோர் தனக்குக்கூறிய செய்தி முதலியன கூறுவான்.

௧௩௮. சென்ற - கொலையுண்டிறந்த.

௧௩௯. முற்செய்தவப்பயத்தால் தேவரிற் றோற்றியென்க.

௧௪௦. ஆங்கத்தீவினை - முற்கூறிய தீவினையின் பயனை. துய்த்து - அனுபவித்து.

௧௪௧. பூங்கொடி - விளி. முன்னவன் - புத்தன். போதி - அரசமரம்; ஞானமுமாம்.

௧௪௩. காதலி - கண்ணகி. கபிலையம் பதி - கபிலநகர்; இது புத்தன்பிறந்த இடம்; கபிலவஸ்துவென்றுங் கூறப்படும்.

௧௪௪. நாதன் - புத்தன். எய்தும் - அடைவான்.

௧௪௫. கிளவி - சொல்.

௧௪௬. பயன் - பிரயோசனம். தோகை - விளி.

௧௪௭. அவனறநெறி - புத்தனுபதேசிக்கும் அறவழிகளை. 'அறநெறி கடவேன்' என்றும் பாடம்.

௧௪௬ - ௧௪௭. யானும் அறநெறிகேட்குவன.

னின்னது தன்மையங் கெடுநிலைக் கந்திற் றன்னிய
துவதிக னுரையிற் றுணிந்தனை யன்றே
தவநெறி யறவணன் சாற்றக் கேட்டன
னாங்கவன் றானுநின் னறத்திற் கேதுப்
பூங்கொடி கச்சி மாநக ராதலின்
மற்றம் மாநகர் மாதவன் பெயர்நாட்
பொற்றொடி தாயரு மப்பதிப் படர்ந்தன
ரன்னதை யன்றியு மணியிழை கேளாய்
பொன்னெயிற் காஞ்சி நாடுகவி னழிந்து
மன்னுயிர் மடிய மழைவளங் கரத்தலி
னந்நகர் மாதவர்க் கைய மிடுவோ
ரின்மையி னிந்நக ரெய்தினர் காணாய்
யாருயிர் மருந்தே யந்நாட் டகவயிற்
காரெனத் தோன்றிக் காத்தனின் கடனென
வருந்தவ னருள வாயிழை வணங்கித்
திருந்திய பாத்திரஞ் செங்கையி னேந்திக்
கொடிமதின் மூதூர்க் குடக்கணின் றோங்கி
வடதிசை மருங்கின் வானத் தியங்கித்
தேவர் கோமான் காவன் மாநகர்
மண்மிசைக் கிடந்தென வளந்தலை மயங்கிய
பொன்னகர் வறிதாப் புல்லென் றாயது
கண்டுளங் கசிந்த வொண்டொடி நங்கை

---

கசஅ. நின்னது தன்மை-உனது பிற்காலச் செய்தியை.

கசஅ - கசகூ. நின்னது தன்மையைத துவதிசனுரையால தெளிந்தாயனறே.

கருo. (கந்திற்பாவையால் நீ அறிந்தாயென்பதை) அறவணவடிகள் சொல்லககேட்டேன்.

கருக. அவன்றானும் - அறவணவடிகளும். ஏது-எதுநிகழ்ச்சிக்குரிய இடம்.

கருஉ. பூஙகொடி - விளி.

கருச. பொற்றொடிதாயரும் - உனது தாயராகிய மாதவியும் சுதமதியும்.

கருங - கருச. பெயர்நாளில் தாயரும் உடன் சென்றார்.

கருசு. காஞ்சிநாடு - காஞ்சிநகரத்தையுடைய நாடு.

கருஎ. மடிய - இறக்க.

கருஅ ஐயம் - பிச்சை.

கருகூ. எய்தினர் - (அம்மாதவர்) வநதார்.

ககூக. காரை உவமைகூறினார், இவள் கைம்மாறுகருதாமலளிககின்றமையின; "கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரி மாட், டென்னாற்றுங் கொலலோ வுலகு." என்பது திருக்குறள், உகக.

ககூஉ. மாசாததுவானை அருந்தவனென்றார், துறவுபூண்டமையின்.

ககூச மூதூர்க்குடககண் - பழைமையாகிய வஞ்சி நகரததின் மேற்றிசைக கண்ணே.

ககூகூ மாநகர் - அமராவதி.

ககூஅ. பொனனகர் - காஞ்சிநகர். வறிதாப் புல்லென்றாயது - செல்வமின்றிப் பொலிவிழந்திருந்ததை.

ககூகூ, நங்கை - மணிமேகலை.

பொற்கொடி மூதூர்ப் புரிசைவலங் கொண்டு
நடுநக ரெல்லை நண்ணின ளிழிந்து
தொடுகழற் கிள்ளி துணையிளங் கிள்ளி
செம்பொன் மாச்சினைத் திருமணிப் பாசடைப்
பைம்பூம் போதிப் பகவற் கியற்றிய
சேதியந் தொழுது தென்மேற் காகத்
தாதணி பூம்பொழி றான்சென் றெய்தலும்
வையங் காவலன் றன்பாற் சென்று
கைதொழு திறைஞ்சிக் கஞ்சுக னுரைப்போன்
கோவலன் மடந்தை குணதவம் புரிந்தோ
ளாவலந் தீவிற் றானனி மிக்கோ
ளங்கையி னேந்திய வமுத சுரபியொடு
தங்கா திப்பதித் தருமத வனத்தே
வந்து தோன்றினண் மாமழை போலென
மந்திரச் சுற்றமொடு மன்னனும் விரும்பிக்
கந்திற் பாவை கட்டுரை யெல்லாம்
வாயா கின்றென வந்தித் தேத்தி
யாய்வளை நல்லா டன்னுழைச் சென்று
செங்கோல் கோடியோ செய்தவம் பிழைத்தோ

---

கஎ0. புரிசை - மதில்.

கஎஉ. தொடுகழற் கிள்ளியின் தம்பியாகிய இளங்கிள்ளி; கிள்ளி - சோழன்.

கஎ௩. சினை - கிளை. திருமணி - அழகிய மரகதமணி. பாசடை - பசிய இலை.

கஎச. போதி - அரசமரம். பகவன்- புத்தன்.

கஎ௩-கஎச. இவ்வடிகளிற் கூறியது போலவே, "பவளச் செழுஞ்சுடர் மரகதப் பாசடைப், பசும்பொன் மாச்சினை விசும்பகம்புதைக்கும் போதி" (வீரசோழியம், யாப்புப்படலம், கக-ம் கலித்துறையுதாரணம்) என்று மகாபோதியை இங்ஙனஞ் சிறப்பித்துக் கூறியிருத்தல் காண்க. மகாபோதி பொன்மயமாயிருந்ததென்பது பற்றிப் பௌத்தர் இக்காலத்தும் அரசமரத்தைப் பொற்றகட்டாலலங்கரித்து வழிபடுவர்.

கஎரு. சேதியம் - கோயில். 'சேதிமந்தொழுது' என்றும் பாடம்.

கஎஉ-கஎரு. துணையிளங்கிள்ளி பகவற்கியற்றிய சேதியத்தைத் தொழுது.

கஎஎ. வையங்காவலன் - துணையிளங்கிள்ளி.

கஎஅ. கஞ்சுகன் - சட்டையிட்ட பிரதானி.

கஎகூ. 'கோவலன்மடந்தை' என்பது முதலியன கஞ்சுகன் கூற்று. மடந்தை- மகள்.

கஅஉ. தருமத்தைக்கொடுக்கும் வனம் தருமதவனம். 'தருமதாவனத்தே' என்றும், 'தருமசார்வனத்தே' என்றும் பாடம்.

கஅ௩. மழைபோல் வந்து தோன்றினளென்று கஞ்சுகன் கூற.

கஅச. மந்திரச்சுற்றம் - மந்திரிகள்.

கஅரு. கந்திற்பாவையென்றது, காஞ்சியில் ஒரு தூணிலுறையும் தெய்வவிசேடத்தை.

கஅசு. வாயாகின்றென-உண்மையாகின்றதென்று வந்தித்தேத்தியது, மேற்கூறிய கந்திற்பாவையை.

கஅஎ. நல்லாள் - மணிமேகலை.

கஅஅ. 'செங்கோல்' என்பதுமுதல் துணையிளங்கிள்ளி வார்த்தை.

கொங்கவிழ் குழலார் கற்புக் குறைபட்டோ
நலத்தகை நல்லாய் நன்னா டெல்லா
மலத்தற் காலை யாகிய தறியேன்
மயங்குவேன் முன்னரோர் மாதெய்வந் தோன்றி
யுயங்கா தொழிநின் னுயர்தவத் தாலோர்
காரிகை தோன்று மவள்பெருங் கடிஞையி
னாருயிர் மருந்தா லகனில முய்யு
மாங்கவ ளருளா லமரர்கோ னேவலிற்
றூங்கா மாரியுந் தானனி பொழியு
மன்னா ளிந்த வகனகர் புகுந்த
பின்னா ளிகழும் பேரறம பலவாற்
கார்வறங் கூரினு நீர்வறங் கூராது
பாரக வீதியிற் பண்டையோ ரிழைத்த
கோமுகி யென்னுங் கொழுநீ ரிலஞ்சியொடு
மாமணி பல்லவம் வந்த தீங்கெனப்
பொய்கையும் பொழிலும் புனைமினென் றறைந்தத்
தெய்வதம் போயபிற் செய்தியா மமைத்த
திவ்விட மென்றே யவ்விடங் காட்டவத்
தீவகம் போன்ற காவகம் பொருந்திக்
கண்டுளஞ் சிறந்த காரிகை நல்லாள்
பண்டையெம் பிறப்பினைப் பான்மையிற் காட்டிய
வங்கப் பீடிகை யிதுவென வறவோன்
பங்கயப் பீடிகை பான்மையின் வகுத்துத்
தீவ திலகையுந் திருமணி மேகலா

---

ககக. அலத்தற்காலை - வறுமைக்காலம். அறியேன் - அறியேனாகி.

கஅஅ - ககக :—கடு - ம் காதை, சகூ - கூo.

ககங. உயங்காதொழி - வருந்தவேண்டா.

ககச. தோன்றும் - தோன்றவாள். கடிஞை - பிச்சைப்பாத்திரம்

சகரு. ஆருயிர் மருந்து - சோறு.

ககஎ. மாரி - மேகம்.

ககசு - ககஎ. அவளருளால் எவலிற் பொழியும்

ககஅ. அன்னாள் - அம்மங்கை.

ககக. பின்னாள் - பிற்காலத்து.

உoo. கார்வறங்கூரினும் - மழை பெய்யாதொழியினும். கூராது - முற்று.

உoக. பண்டையோரிழைத்த - முன்னோர் செய்த

உoஉ. இலஞ்சி - பொய்கை.

உoச. புனைமின் - அலங்கரித்துச்செய்மின்.

உoசு. (துணையிளங்கிள்ளி) காட்ட.

உoஎ. தீவகம் - மணிபலலவம். காவகம் - சோலையினுள்ளே.

உகo. அங்கப்பீடிகை - மணிபல்லவத்திருந்த புத்தபீடிகை. அறவோன் - புத்தன்.

உகக. பங்கயப்பீடிகை - பாதபீடம். வகுத்து - செய்து.

மாதெய்வந் தன்னையும் வந்தித் தேத்துதற்
கொத்த கோயி லுளத்தகப் புனைந்து
விழவுஞ் சிறப்பும வேந்த னியற்றத்
தொழுதகை மாதர் தொழுதன ளேத்திப்
பங்கயப் பீடிகைப் பசிப்பிணி மருந்தெனு
மங்கையி னேந்திய வமுத சுரபியை
வைத்துநின் றெல்லா வுயிரும் வருகெனப்
பைத்தர வல்குற் பாவைதன் கிளவியின்
மொய்த்த மூவறு பாடை மாக்களிற்
காணார் கேளார் கான்முட மாணோர்
பேணா மாக்கள் பேசார் பிணித்தோர்
படிவ நோன்பியர் பசிநோ யுற்றோர்
மடிநல் கூர்ந்த மாக்கள் யாவரும்
பன்னா றாயிரம் விலங்கின் றொகுதியு
மன்னுயி ரடங்கலும் வந்தொருங் கீண்டி
யருந்தியோர்க் கெல்லா மாருயிர் மருந்தாய்ப்
பெருந்தவர் கைபெய் பிச்சையின் பயனு
நீரு நிலமுங் காலமுங் கருவியுஞ்
சீர்பெற வித்திய வித்தின் விளைவும்
பெருகிய தென்னப் பெருவளஞ் சுரப்ப
வசித்தொழி லுதவி வளந்தந் ததுவெனப்
பசிப்பிணி தீர்த்த பாவையை யேத்திச

---

உகச. உளத்தக - நினைத்தற்குதகக.

உகசு. மாதர் - மணிமேகலை.

உகஎ. பங்கயப்பீடிகை - பாதபீடிகையில்.

உகக. வருகென - வருகவென்று மணிமேகலைசொல்ல.

உகஎ - உகக. பீடிகையில் அமுதசுரபியை வைத்தென்க.

உஉஉ. காணார் - குருடர். கேளார - செவிடர்; அவயவஹீனாக்கு இரங்குதலைப் பததுநிஷ்டைகளுள் ஒன்றென்பர்.

உஉங. பேணுமாக்களா - பாதுகாக்கப் படாதமாக்கள்; என்றது அகதிகளை.

உஉஉ - உஉங: — கங - ம் காதை, ககக - ககஉ.

உஉச. படிவநோன்பியர் - தவவேடத்தையும் நோன்பையுமுடையவர்.

உஉரு. மடிநல்கூர்ந்தமாக்கள் - உடுத்தற்கு ஆடையுமின்றி வறுமையுற்றமாக்கள், மடி - ஆடை; சோம்புதலால் வறுமையுற்றமாக்களெனினுமமையும்; மடி - சோம்பு.

உஉகூ. பெருந்தவர் கைப்பெய் பிச்சையின்பயன் பெருகுதலை, “அறப்பயனுந், தான்சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டககால், வான்சிறிதாப் போர்த்து விடும்” (நாலடியார், அறன்வலியுறுததல், அ) என்பதனாலுணர்க.

உங௧. வித்தியவிதது-விதைத்தவிதை.

உஙஉ. (அப்பாத்திரஞ்) சுரப்ப.

உஉகூ - உஙஉ. பிச்சையின் பயனும் வித்தின் விளைவும் பெருகியதென்னச் சுரப்ப.

உஙங. வசி - மழை.

உஙச. பாவையை - மணிமேகலையை.

செல்லுங் காலைத் தாயர் தம்முட
னல்லவை கடிந்த வறவண வடிகளு
மல்லன் மூதூர் மன்னுயிர் முதல்வி
நல்லறச் சாலை நண்ணினர் சேறலுஞ்
சென்றவர் தம்மைத் திருவடி வணங்கி
நன்றென விரும்பி நல்லடி கழுவி
யாசனத் தேற்றி யறுசுவை நால்வகைப்
போனக மேந்திப் பொழுதினிற் கொண்டபிற்
பாசிலைத் திரையலும் பளிதமும் படைத்து
வாய்வ தாகவென் மனப்பாட் டறமென
மாயைவிட் டிறைஞ்சினண் மணிமே கலையென.

கச்சிமாநகர்ப்புக்ககாதை முற்றிற்று.

---

ஏத்தி - மேற்கூறிய காணாமுதலியோர் துதித்து.

உ௩௫. காலை - காலத்தில். தாயர்தம் முடன் - மாதவி சுதமதியென்னுமிருவருடன்.

உ௩௬. அல்லவைகடிந்த - அறமல்லாதவற்றை நீக்கிய.

உ௩௭. உயிர்முதல்வி - மணிமேகலை.

உ௩௮. அறச்சாலை - தருமசாலையை.

உ௩௫ - உ௩௮. தாயர்தம்முடன் அறவணவடிகளும் உயிர்முதல்வியின் அறச்சாலையை நண்ணுதலும்.

உ௩௯. சென்று வணங்கி. 'திருவடி தொழுது' என்றும் பாடம்.

உ௪0. கழுவி - விளக்கி. 'நல்லடி விளக்கி' என்றும் பாடம்.

உ௪௧:—உ௮ - ம் காதை, ௧௧௬.

உ௪உ. பொழுதினில் - காலம்பெற.

உ௩௯-உ௪உ:—உ௮-ம் காதை, ௧௧௪-௧௧௭.

உ௪௩. திரையல் - வெற்றிலை. பளிதம் - கருப்பூரம்.

உ௪௪. வாய்வதாக - தப்பாது பலித்திடுக.

௧ - உ௪௫. மணிமேகலை, தேர்ந்து கடந்து வாயில் குறுகினள்புக்குக் கண்டு மகிழ்வுற்றுப் பள்ளிபுக்குப் பணிந்து சொல்லினளாதலின, அருந்தவன, 'நினைக் கண்டது என் நல்வினைப்பயன்கொல்' என்றுகூறி, 'காததல் நின்கடன்' என அருள, ஆயிழை வணஙகி ஏந்தி ஓங்கி இயங்கி வலங்கொண்டு இழிந்து தொழுது சென்றெய்தலும், கஞ்சுகனுமைப போன், 'வந்து தோன்றினள்' என, மன்னனும்விருமபி ஏததிச சென்று காட்ட நல்லாள் பொருந்தி வகுத்துப் புனைந்து ஏத்தி வைதது 'வருக' என, காணார்முதலியோரும் விலங்கின்றெருகுதியும் மனுயி ரடங்கலும் வந்தீண்டி ஏத்திச செல்லுங்காலையில் தாயர்தம்முடன் அறவணவடிகளும் நண்ணினர் சேறலும் மணிமேகலை வணஙகி விரும்பிக் கழுவி ஏற்றி ஏந்திப் படைத்து விட்டு இறைஞ்சினளென வினைமுடிவுசெய்க.

இருபத்தோன்பதாவது

# தவத்திறம்பூண்டு தருமங்கேட்டகாதை.

[இருபத்தோன்பதாவது மணிமேகலை, காஞ்சிமாநகர்க்கட்சென்றபின்னர் அறவணரடிகளும் தாயருஞ்செல்ல அவரைக்கண்டு இறைஞ்சித் தருமங்கேட்ட பாட்டு.]

இறைஞ்சிய விளங்கொடி தன்னை வாழ்த்தி
யறந்திகழ் நாவி னறவண னுரைப்போன்
வென்வேற் கிள்ளிக்கு நாகநா டாள்வோன்
றன்மகள் பீலி வளைதான் பயந்த
புனிற்றிளங் குழவியைத் தீவகம் பொருந்தித்
தனிக்கலக் கம்பளச் செட்டிகைத் தரலும்
வணங்கிக் கொண்டவன் வங்க மேறிக்
கொணர்ந்திடு மந்நாட் கூரிரு ளியாமத்
தடைகரைக் கணித்தா வம்பி கெடுதலு
மாக்கலங் கெடுத்தோன் மைந்தனைக் காணா
தரசற் குணர்த்தலு மவனயர் வுற்று
விரைவனன் றேடி விழாக்கோண் மறப்பத்
தன்விழாத் தவிர்தலின் வானவர் தலைவ
னின்னுயிர்த் தந்தை நெடுயகுலத் துதித்த
மன்னுயிர் முதல்வன் மகர வேலையுள்

---

க. இளங்கொடிதன்னை-மணிமேகலையை.

௩. வென் - வென்றி. கிள்ளி - நெடுமுடிக்கிள்ளி. நாகநாடாள்வோன - வளைவணன்.

௪. மகளாகிய பீலிவளை. பயந்த - பெற்ற.

௫. குழவியை - குழந்தையை. தீவகம் - மணிபல்லவம்.

௬. தனிக்கலம் - ஒற்றைக்கப்பல்.

௩-௬. பீலிவளை தான் கிள்ளிக்குப் பயந்தகுழவியைத் தீவகத்தைப்பொருந்திக் கம்பளச்செட்டியின்கையில் தரலும்.

௭. அவன் - கம்பளச்செட்டி.

௮. கூரிருள்யாமத்து - மிக்க இருளையுடைய இடையிரவில்.

௯. அணித்தா - சமீபமாக. அம்பி - கப்பல்.

க௦. கெடுத்தோன் - கம்பளச்செட்டி. மைந்தனை - குழந்தையை.

கக. அரசற்கு - நெடுமுடிக்கிள்ளிக்கு. அயர்வுற்று - வருந்தி.

க௨. விரைவனன் - விரைபவனாகி. தேடி - குழந்தையைத்தேடுதலால். விழாக்கோள் - இந்திரவிழாக்கொள்ளுதலை.

க௩. வானவர்தலைவன் - இந்திரன்.

க௪. நின்னுயிர்த்தந்தை - கோவலன்.

க௫. மன்னுயிர்முதல்வனென்றா, அருளறம்பூண்டோனாதலின்.

முன்னிய வங்க முங்கிக் கேடுறப்
பொன்னி னூசி பசுங்கம் பளத்துத்
துன்னிய தென்னத் தொடுகட லுழந்துழி
யெழுநா ளெல்லை யிடுக்கண்வந் தெய்தா
வழுவாச் சீலம் வாய்மையிற் கொண்ட
பான்மையிற் றனது பாண்டு கம்பளந்
தானடுக் குற்ற தன்மை நோக்கி
யாதி முதல்வன் போதி மூலத்து
நாத னவோ னளிநீர்ப் பரப்பி
னெவ்வமுற் றுன்றன தெவ்வந் தீரெனப்
பௌவத் தெடுத்துப் பாரமிதை முற்றவு

கசு. முங்கி - முழுகி; 'முருங்கி' என்றும் பாடம்.

கஎ. ஊசி வணிகனுக்கும், பசுங்கம்பளம் கடலுக்குமுவமம்.

கஅ. உழந்துழி - வருந்தி நீந்தியபொழுது.

கரு - கக. எழுநாளெல்லை உயிர்முதல்வன் தொடுகடலுழந்துழியென்க;"நண்ணு வழியின்றி நாள்சில நீந்த" என்றார் **சிலப்பதிகாரத்துள்**; அடைக்கலக்காதை, ககக. 'எழுநாள்' என்பதைப் பின்வரும் 'கொண்ட என்பதனோடுகூட்டினும் பொருந்தும்'—உஅ - ம் காதை, கஉகூ-ககூ0.

உ0. சீலத்தை நால்வகைவாய்மையுடன்கொண்ட.

உக. பாண்டுகம்பளம - வெள்ளைக்கம்பளம்.

உக - உஉ. (இந்திரன்) பாண்டுகம்பளம் நடுக்குற்ற தன்மையைநோக்கி.

உகூ - உச. ஆதிமுதல்வனாகிய நாதனுகற்பாலோன்; என்றது முறகூறியவணிகனை; இங்ஙனம் புததனுகற்பாலோனைப் போதிசத்துவரெனபர். நளி பெருமை.

உச - உரு. நாதனுவோன் கடலில் துன்பமுற்றான்; அவனது துன்பததைத் தீர்ப்பாயென்று மணிமேகலாதெய்வததிற்கு இந்திரன்சொல்ல.

உசு. பாரமிதை-தானம், சீலம், க்ஷமை, வீரியம், தியானம், பிரஜ்ஞை, உபாயம், தயை, பலம், ஞானம் என்னும் பதது மாம். இதனை, "தானஞ் சீல மேபொறை தகக தாய வீரிய, மூனமிற்றி யானமே யுணாச்சி யோடு பாயமு, மான மில்லருளினை வைத்த லேவ லிமையு, ஞானமீரைம் பாரமிதை நாடுங் காலி வைகளும்" என்னும் **நீலகேசி** மொக்கலவாதச் சருக்கச் செய்யுளாலுணர்க; இப்பத்தும் பூரித்தல் தசபாரமிதையெனப்படும்; இப்பெயா பாரமெனவும் வழஙகும்; "இன்பஞ்சார் பெரும்பார மீரைந்து முடனிறைநது, நன்கன நிலைபெற்ற நாதன" (**சிவஞானசித்தியார்** பரபக்ஷம, "அழிதிடு மராகம்" என்னுந திருவிருததததிற்கு **ஸ்ரீ ஞானப்பிரகாசரெழுதி**ய உரையிற்காணப்பட்ட உதாரணச்செயயுள்) எனவும், "தானமே முதலாகத் தசபார நிறைத்தருளி, யூனமொன் றில்லாமை யொழிவினறி யியற்றினையே." (**வீரசோழியம்**, யாப்புப்படலம், கக - ம் கலித்துறையுதாரணம) எனவும வருதலகாண்க. இப்பததும் உயிருறப்புப்பொருணோச்சிவகையான் முப்பதாமென்பா, "அருணெறியாற் பாரமிதை யாறைந்து முடனடக்கிப், பொருணமுழுதும போதிநிழ னன்குணாந்த முனிவரனற, னருண்மொழியா னல்வாய்மை யறிந்தவரோ பிறப்பறுப்பார், மருணெறியாற் பிறநூலு மயக்கறுக்கு மாறுளதோ." என்பது **பௌத்தசித்தாந்தத்தொகை**. பாரமிதையென்பதற்குக் கரையையடைநததென்றுபொருள். ஈண்டுக்கூறிய தானமுதலியபத்தும நிரம்பப்பெற்றவனாகையின், புததன் தசபலனெனறுவழங்கப்படுவன். இப்பத்தினுள், தானபாரமிதையை விளஙகக்கூறித **தானபாரமிதை**யெனறு பெயாபெற்றுள்ள ஒரு வடநூலிதப்பரு

மறவா சாளவு மறவாழி யுருட்டவும்
பிறவிதோ றுதவும் பெற்றிய ளென்றே
சாரண ரறிந்தோர் காரணங் கூற
வந்த வுதவிக் காங்கவள் பெயரைத்
தந்தையிட் டனனினைத் தையனின் றுறவியு
மன்றே கனவி னனவென வறைந்த
மென்பூ மேனிமணி மேகலா தெய்வ
மென்பவட் கொப்ப வவனிடு சாபத்து
நகர்கடல் கொள்ளநின் றுயரும் யானும
பகருநின் பொருட்டா லிப்பதிப் படர்ந்தன
மென்றலு மறவணன் றாளிணை யிறைஞ்சிப்
பொன்றிகழ் புத்த பீடிகை போற்றுந்
தீவ திலகையு மித்திறஞ் செப்பின
ளாதலி னன்ன வணிநகர் மருங்கே
வேற்றுருக் கொண்டு வெவ்வே றுரைக்கு
நூற்றுறைச் சமய நுண்பொருள் கேட்டே
யவ்வுரு வென்ன வைவகைச் சமயமுஞ்
செவ்வி தன்மையிற் சிந்தையின் வைத்திலே
னடிகண் மெய்ப்பொரு ளருளுக வென்ன

---

கத தெரிகின்றது; இது ஸ்ரீ ஹர்ஷகவி செய்த ஸம்ஸ்கிருதநைஷதம், ௫-ம் ஸர்க்கத்துள்ள கக-வது சுலோகத்தாலும் அதற்கு ஸ்ரீ மல்லிநாதஸூரி செய்த வியாக்கியானத்தாலுமுணரப்படும். முற்றவும் பூரிக்கவும்.

கச - உகூ:—உக-ம் காதை, கஅக - கஅஉ.

உஎ. அறவாழி - தருமசக்கரம்.

உகூ - உஅ. எடுத்துப்பிறவிதோறும் உதவும்பெற்றியள்.

உஅ - உகூ. பெற்றியளென்றுகூற.

௩0. அந்தவுதவிக்கு-மேற்கூறிய வணிகனைக்கரையேற்றிய அவ்வுபகாரத்தைத் தான மறவாதிருத்தலைப் புலப்படுத்தற் பொருட்டு.

௩க. தந்தை - கோவலன். நினை நினக்கு. துறவியும் - துறத்தலையும்.

கச - ௩க:—சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை. உஅ - ௩எ.

௩0 - ௩௩:—எ-ம் காதை, ௩௩-௩அ.

௩ச. என்பவட்கொப்பவென்றதனால், மணிமேகலாதெய்வம் சாபமிட்டமை பெறப்பட்டது. 'என்பவட்குறைப்பவவனிடுசாபத்து' என்றும் பாடம்.

௩௫. நகர் - காவிரிப்பூம்பட்டினம்.

க௩-௩௫. தன்விழாததவிர்தலின், மணிமேகலாதெய்வத்திற்கொப்ப வானவர்தலைவனுகிய அவன் இட்டசாபத்தால் நகரை கடல்கொள்ளவென்க.

௩ - ௩௫:—உச-ம் காதை, உகூ-சுக.

௩௬. பதி - காஞ்சிநகரம்.

௩௫ - ௩௬:—உஅ-ம் காதை, கடுக - கடுச.

௩எ. என்றலும் - என்று அறவணவடிகள் கூறலும்.

௩அ - ௩௯. புத்தபீடிகைபோற்றும் தீவதிலகை:—கக-ம காதை, உஎ உகூ.

௩ - ௩௯:—உ௫-ம்காதை, கஎஎ-உகூ.

௪0. நகர் - வஞ்சிநகரம்.

௪உ. சமயம் - அளவைவாதமுதல் பூதவாதமிறுதியாகிய சமயங்கள்.

௪௪. செவ்விது - பன்மையொருமை மயக்கம்.

௪௫. அடிகள் - விளி. என்ன - என்று மணிமேகலைகேட்ப.

நொடிகுவெ னங்காய் நுண்ணிதிற் கேணி
யாதி சினேந்திர னளவை யிரண்டே
யேதமில் பிரத்தியங் கருத்தள வென்னச்
சுட்டுணர் வைப்பிரத் தியக்க மெனச்சொலி
விட்டனர் நாம சாதி குணக் கிரியைகண்
மற்றவை யனுமா னத்துமடை யும்மெனக்
காரண காரிய சாமா னியக்கருத
தோரிற் பிழைக்கையு முண்டுபிழை யாதது
கனலிற் புகைபோற் காரியக் கருத்தே
யேனை யளவைக ளெல்லாங் கருத்தினி
லான முறைமையி னனுமான மாம்பிற
பக்க மேதுத் திட்டாந்த முபநய
நிகமன மென்ன வைந்துள வவற்றிற்
பக்க மிம்மலை நெருப்புடைத் தென்றல்
புகையுடைத் தாதலா லெனல்பொருந் தேது

சசு. நொடிகுவென் - சொல்லுவேன்; 'நொடிகுவென்' என்பதுமுதலியன அறவணவடிகளுடைய வார்த்தை.
சஎ. சினேந்திரன் - புத்தன்.

சஅ. ஏதம் - குற்றம். பிரத்தியம்-பிரத்தியக்ஷம்:—௨எ - ம காதை, அசு. கருத்தளவு - அனுமானப்பிரமாணம்.
சஎ - சஅ. என்ன இரண்டேயெனக.

இவ்வடிமுதலியவற்றால் இக்காதையிற் கூறப்பட்டுள்ள பிரத்தியக்ஷம் அனுமானமென்னும் இரண்டளவை யிலக்கணங்களும் அவற்றின் பாகுபாடுகளும் இன்ன நூலின் கருத்தைத் தழுவிவந்தனவென்று விளங்காமையாலும், தமிழிலுள்ள தருக்க சங்கிரகம் அன்னம்பட்டீய முதலியவற்றிலும், சிவஞானசித்தியார் சுபக்ஷத்துள்ள அளவையிலக்கணத்திற்குப் பலரெழுதிய உரைகளிலும் வந்துள்ள குறியீடுமுதலியவைகள் வேறுமுறையாக இருத்தலாலும், இயன்றவளவு விசாரித்தும் இந்தமுறையுள்ள பழைய நூல்கள் இக்காலத்து வழங்கவில்லையென்று, வடமொழித் தருக்கநூல்கள் பலவற்றிலும் மிக்க பாண்டித்தியமுள்ளவரும் இப்பொழுது கும்பகோணத்தில் வசிப்பவருமாகிய குறிச்சி ஸ்ரீமான் உ - வே. ரங்காசாரியரவர்கள்முதலிய மஹாவித்துவான்கள் பலரும் சொல்லிவிட்டமையாலும், இவற்றைப்பற்றி இலங்கையிலுள்ள வித்தியோதயபாடசாலைத்தலைவரும் பௌத்தமதாசாரியருமாகிய ஸ்ரீ ஸுமங்களரை விசாரிக்கும்படிசெய்ததற்கு அவர் பிரத்தியக்ஷம் அனுமேயம் ஸ்ரோத்தேயமெனப் பிரமாணம் மூன்றுவகைப்படுமென்றும் அவற்றுட் பிரத்தியக்ஷத்தினிலக்கணம் அங்கோத்தரநிகாயமென்னு நூலிலுள்ள காலாமசூத்திரத்திலும் மத்தியமநிகாயமென்னு நூலிலுள்ள மஹாஹஸ்திபதோபமசூத்திரத்திலும் அனுமேயத்தினிலக்கணம் மேற்கூறிய நூல்களிலுள்ள அனுமானசூத்திரங்களிலும் ஸ்ரோத்தேயத்தினிலக்கணம் மேற்கூறிய நூலிலுள்ள மஹாஸிஹ்மநாதசூத்திரத்திலுங் கூறப்பட்டுள்ளனவென்றுமட்டுந் தெரிவித்தமையாலும், அந்நூல்களும் அவற்றைப்புலப்படுத்துவோரும் இங்கேகிடையாமையாலும், அவைகள் கிடைக்குமாயிற் பின்பு பார்த்துக் கொள்ளலாமென்று நிச்சயித்துக்கொண்டமையின், இந்தப்பாகத்திற்குக் குறிப்புரை எழுதப்படவில்லை; ஆயினும் மேற்கூறிய வித்துவான்களுடைய முன்னிலையிற் பலமுறை ஆராய்ச்சிசெய்து ஏட்டில் இருந்தவாறே மூலமாத்திரம் பதிப்பிக்கப்பட்டது.

வகையமை யடுக்களை போற்றிட் டாந்த
முடாநய மலையும் புகையுடைத் தென்ற
ணிகமனம் புகையுடைத் தேநெருப் புடைத்தென
னெருப்புடைத் தல்லாதி யாதொன் றதுபுகைப்
பொருத்த மின்று புனல்போ லென்றன்
மேவிய பக்கத்து மீட்சி மொழியாய்
வைதன் மியதிட் டாந்த மாகுந்
தூய காரிய வேதுச் சுபாவ
மாயிற் சத்த மநித்த மென்றல்
பக்கம் பண்ணப் படுத லாலெனல்
பக்க தன்ம வசன மாகும்
யாதொன்று யாதொன்று பண்ணப் படுவ
தநித்தங் கடம்போ லென்றல் சபக்கத்
தொடர்ச்சி யாதொன் றநித்தமல் லாதது
பண்ணப் படாதது ஆகாசம் போலெனல்
விபக்கத் தொடர்ச்சி மீட்சிமொழி யென்க
வநன்னு வயத்திற் பிரமாண மாவ
திவ்வெள் ளிடைக்கட் குடமிலை யென்றல்
செவ்விய பக்கந் தோன்று மையிலெனல்
பக்க தன்ம வசன மாகு
மின்மையிற் கண்டில முயற்கோ டென்ற
லந்நெறிச் சபக்கம் யாதொன் றுண்டது
தோற்றா வடுக்குங் கைநெல்லி போலென
லேற்ற விபக்கத் துரையென லாகு
மிவ்வகை யேதுப் பொருள்சா திப்பன
வென்னைகா ரியம்புகை சாதித்த தென்னிற்
புகையுள விடத்து நெருப்புண் டென்னு
மன்னுவயத் தானு நெருப்பிலா விடத்துப்
புகையில்லை யென்னும் வெதிரேகத் தானும
புகைநெ ருப்பைச் சாதித்த தென்னி
னேரிய புகையி ணிகழ்ந்துண் டான
வூர்த்தச் சாமங் கௌடிலச் சாமம்
வாய்த்த நெருப்பின்வரு காரிய மாதலின்
மேனோக் கிக்கறுத் திருப்பபகைத திருப்ப
தாமே நெருப்பைச் சாதிக்க வேண்டு
மன்னு வயஞ்சா திக்கின் முன்னுங்

கழுதை யையுங் கணிகை யையுந்
தம்மி லொருகா லத்தோ ரிடத்தே
யன்னு வயங்கண் டான்பிற் காலத்துக்
கழுதையைக் கண்ட விடத்தே கணிகையை
யனுமிக்க வேண்டு மதுகூ டாநெருப்
பிலாவிடத் துப்புகை யிலையென னோரத்
திருத்தகு வெதிரேகஞ் சாதிக்கு மென்னி
னுய்வா லில்லாக் கழுதையின் பிடரி
னரிவா லுமிலையாக் காணப் பட்ட
வதனையே கொண்டு பிறிதோ ரிடத்து
நரிவாலி னுனுய் வாலையனு மித்த
லரிதா மதனு லதுவு மாகா
தொட்டிய வுபநய நிகமன மிரண்டுந்
திட்டாந் தத்தி லேசென் றடங்கும
பக்க மேதுத் திட்டாந் தங்க
ளொக்க நல்லவுந் தீயவு முளவதில்
வெளிப்பட் டுள்ள தன்மி யினையும்
வெளிப்பட் டுளசாத் தியதன் மத்திறம்
பிறிதில் வேறும் வேறுபாட் டினையுந்
தன்கட் சார்த்திய நயந்தருத லுடையது
நன்கென் பக்கமென நாட்டுகை வதுதான்
சத்த மநித்த நித்தமென் றொன்றைப்
பற்றி நாட்டப் படுவது தன்மி
சத்தஞ் சாத்திய தன்ம மாவது
நித்தா நித்த நிகழுநல் லேது
மூன்றாய்த் தோன்று மொழிந்த பக்கத்
தூன்றி நிற்றலுஞ் சபக்கத்துண் டாதலும்
விபக்கத் தின்றியே விடுதலுஞ் சபக்கஞ்
சாதிக் கிற்பொரு டன்னாற் பக்கத்
தோதிய பொதுவகை யொன்றி யிருத்தல்
சத்த வநித்தஞ் சாத்திய மாயி
னுத்த வநித்தங் கடாதி போலெனல்
விபக்கம் விளம்பில் யாதொன் றியாதொன்
றநித்தமல் லாதது பண்ணப் படாத
தாஅ காசம் போலென் றுரும்
பண்ணப் படுதலுஞ் செயலிடைத் தோன்றலு

நண்ணிய பக்கஞ் சபக்கத் திலுமாய்
விபக்கத் தின்றி யநித்தத் திலுக்கு
மிகத்தகு மேதுவாய் விளங்கிற் றென்க
வேதமி றிட்டாந் தமமிரு வகைய
சாதன் மியமவை தன்மி யம்மெனச்
சாதன் மியமெனப படுவது தானே
யநித்தங் கடாதி யனுவயத் தென்கை
வைதன் மியதிட் டாந்தஞ் சாததிய
மெய்தா விடத்தி லேதுவு மின்மை
யித்திற நல்ல சாதனத் தொத்தன
தீய பககமுந் தீய வேதுவுந்
தீய வெடுத்துக காட்டு மாவன
பககப் போலியு மேதுப் போலியுந
திட்டாந் தப்போ லியுமா மிவற்றுட்
டக்கப் போலி யொன்பது வகைப்படும
பிரத்தி யக்க விருதத பனுமான
விருத்தஞ் சுவசன விருதத முலோக
விருத்த மாகம விருத்த மப்பிர
சித்த விசேடண மப்பிர சிதத
விசேடிய மபபிர சிதத வுபய
மப்பிர சித்த சம்பந தமமென
வெண்ணிய விவற்றுட் பிரத்தியக்க விருத்தம
கண்ணிய காட்சி மாறுகொள லாகுஞ
சத்தஞ் செவிக்குப புலனன் றென்றன்
மற்றனு மான விருத்த மாவது
கருத்தள வையைமா றுதக் கூற
லநித்தியக கடத்தை நித்திய மென்றல
சுவசன விருததந்தன் சொன்மாறி யியமப
லென்றாய் மலடி யென்றே யியமப
லுலக விருத்த முலகின்மா றுமுரை
யிலகுமதி சந்திர னலல வென்ற
லாகம விருததந்தன் னூன்மா றறைதல்
லநித்த வாதியா யுள்ளவை சேடிக
னநித்தி யத்தைநித தியமென நுவறல்
லப்பிர சித்த விசேடண மாவது
தத்தமெதி ரிக்குப் பாதபியப தெரியாமை

பௌத்தன் மாறாய் நின்றசாங் கியனைக்
குறித்துச் சத்தம் விநாசி யென்று
லவனவி நாச வாதி யாதலிற்
சாத்திய விநாசமப் பிரசித்த மாகு
மப்பிர சித்த விசேடிய மாவ
தெதிரிக்குத் தன்மி பிரசித்த மின்றி
யிருத்தல் சாங்கியன் மாறாய் நின்ற
பௌத்தனைக் குறித்தான் மாச்சை தனியவா
னென்று லவன நான்ம வாதி
யாதலிற் றன்மி யப்பிர சித்த
மப்பிர சித்த வுபய மாவது
மாறா ஞேற்குத் தன்மி சாத்திய
மேறு தப்பிர சித்தமா யிருத்தல்
பகர்வை சேடிகன் பௌத்தனைக் குறித்துச்
சுகமுத லியதொகைப் பொருட்குக் காரண
மான்மா வென்றற் சுகமுமான் மாவுந்
தாமிசை யாமையி லப்பிரசித் தோபய
மபபிர சித்த சம்பந்த மாவ
தெதிரிக் கிசைந்த பொருள்சா திதநன்
மாறும பௌத்தற்குச் சத்த வநித்தங்
கூறி லவன்கொள் கையஃ தாகலில்
வேறுசா திக்க வேண்டா தாகு
மேதுப் போலி யோதின்மூன் றாகு
மசித்த மநைகாந் திகம்விருத் தமமென
வுபயா சித்த மன்னியதா சித்தஞ்
சித்தா சித்த மாசிரயா சித்த
மெனநான் கசித்த முபயா சித்தஞ
சாதன வேது விருவாக்கு மின்றிச
சதத மநித்தங் கட்புலத் தென்ற
லன்னியதா சித்த மாறாய் நின்றாற்
குன்னிய வேது வன்று யொழிதல
சததஞ செயலுற லநித்த மென்னிற்
சித்த வெளிப்பா ட்டல்லது செயலுற
லுய்த்த சாங்கி யனுக்க சித்த
மாகுஞ சித்தா சித்த மாவ
தேதுச சஙகய மாய்ச்சா தித்த

லாவி பனியென வையுறு நின்றே
தூய புகைநெருப் புண்டெனத் துணிதல்
லாசிரயா சித்த மாறு னவனுக்
கேற்ற தன்மி யின்மை காட்டுத
லாகாசம, சத்த குணத்தாற் பொருளா மென்னி
னாகா சம்பொரு ளல்லவென் பாற்குத்
தன்மி யசித்த மனைகாந் திகமுஞ்
சாதா ரணமசா தாரணஞ் சபக்கைக
தேச விருத்தி விபக்க வியாபி
விபக்கைக தேச விருத்தி சபக்க
வியாபி யுபயைக தேச விருத்தி
விருத்த வியபி சாரியென் றாறு
சாதா ரணஞ்சபக்க விபக்கத் துக்கு
மேதுப் பொதுவா யிருத்தல் சத்த
மநித்த மறியப் படுதலி னென்று
லறியப் படுதனித் தாநித்த மிரண்டுக்குஞ்
செறியுங் கடம்போ லநித்தத் தறிவோ
வாகாசம் போல நித்தத் தறிவோ
வென்ன லசாதா ரணமா வதுதா
னுன்னிய பக்கத் துண்டா மேதுச்
சபக்க விபக்கந் தம்மிலின் றாதல
சத்த நித்தங் கேட்கப் படுதலி
னென்னிற் கேட்கப் படலெனு மேதுப்
பக்கத் துள்ள தாயி னல்லது
சபக்க விபக்கத்து மீட்சித் தாதலிற்
சங்கய மெய்தி யநேகாந் திகமாஞ்
சபக்கைக தேச விருத்தி விபக்க
வியாபி யாவ தேதுச சபக்கத்
தோரிடத் தெய்தி விபக்கத் தெங்கு
முண்டாத லாகுஞ் சத்தஞ் செயலிடைத்
தோன்றா தாகு மநித்த மாகலி
னென்று லநித்த மென்ற வேதுச
செயலிடைத் தோன்றா மைக்குச் சபக்க
மின்னலு மாகா சத்தினு மின்னி
னிகழ்ந்தா காசத்திற் காணு தாகலி
னநித்தக கடாதியி னுறுதலிற் கடம்போ

லழிந்து செயலிற் றோன்றுமோ மின்போ
லழிந்து செயலிற் றோன்றா தோவெனல
விபக்கைக தேச விருத்தி சபக்க
வியாபி யாவ தேது விபக்கத்
தோரிடத் துற்றுச் சபக்கத்தொத்த தியறல
சத்தஞ் செயலிடைத் தோன்று மநித்த
மாதலி னென்னி னநித்த வேதுச்
செயலி டைத்தோன் றற்கு விபக்க
வாகா யத்தினு மின்னினு மின்னி
னிகழ்ந்தா காசத் துக்கா ணுது
சபக்கக் கடாதிக டம்மி லெங்குமா
யேகாந்த மல்ல மினபோ லநித்தமாய்ச்
செயலி டைத்தோன் றுதோ கடம்போ
லநித்தமாய்ச் செயலிடைத் தோன்று மோவென
லுபயைக தேச விருத்தி யேதுச
சபக்கத் தினுமவிபக் கத்தினு மாகி
யோர்தே சத்துவர்த் தித்தல் சத்த
நித்த மமூர்த்த மாதலி னென்னி
னமூர்த்த வேது நித்தத் தினுக்குச்
சபக்கவா காச பரமா ணுக்களி
ளுகா சத்து நிகழ்ந்து மூர்த்தமாம்
பரமா ணுவினிக ழாமை யானும்
விபக்க மான கடசுகா திகளிற்
சுகத்து நிகழ்ந்து கடத்தொழிந் தமையினு
மேகதே சத்து நிகழ்வதே காந்தமன்
றமூர்த்த மாகா சம்போ லநித்தமோ
வமூர்த்த சுகம்போ லநித்த மோவெனல்
விருத்த வியபிசாரி திருந்தா வேதுவாய்
விருத்த வேதுவிற் குமிடங் கொடுத்தல
சத்த மநித்தஞ் செயலிடைத் தோன்றலி
னொத்த தெனினச் செயலிடைத் தோன்றற்குச்
சபக்கமா யுள்ள கடாதி நிற்கச்
சத்த நித்தங் கேட்கப் படுதலிற்
சத்தத் துவம்போ லெனச்சாற் றிடுதே
லிரண்டினுஞ் சங்கயமா யேகாந்த மல்ல
விருத்தந் தன்னை திருத்தக விளம்பிற

றன்மச் சொரூப விபரீத சாதனந்
தன்ம விசேட விபரீத சாதனந்
தன்மிச் சொரூப விபரீத சாதனந்
தன்மி விசேட விபரீத சாதன
மென்ன நான்கு வகைய தாகுமத
தன்மச் சொரூப விபரீத சாதனஞ்
சொன்ன வேதுவிற் சாத்திய தன்மத்
துருவங் கெடுதல் சத்த நித்தம்
பண்ணப் படுதலி னென்றூற் பண்ணப்
படுவ தநித்தமா தலிற்பண்ணப் பட்ட
வேதுச் சாத்திய தன்மநித் தத்தைவிட்
டநித்தஞ் சாதித்த லான்விப ரீதந்
தன்ம விசேட விபரீத சாதனஞ்
சொன்ன வேதுச் சாத்திய தன்மந்
தன்னிடை விசேடங் கெடச்சா தித்தல்
கண்முத லோர்க்கு மிந்திரி யங்க
ளெண்ணிற் பரார்த்தந் தொகுநிற் றலினூற்
சயன சனங்கள் போல வென்றூற்
றொக்கு நிற்றலி னென்கின்ற வேதுச்
சயன சனத்தின் பரார்த்தம் போலக்
கண்முத லிந்தியங் களையும் பரார்த்தத்திற் சாதித்துச்
சயன சனவா னைப்போ லாகிக்
கண்முத லிந்தியத் துக்கும் பரனுஞ்ச
சாதிக்கி றநிர வயவமா யுள்ள
வான்மா வைச்சா வயவ மாகச்
சாதித் துச்சாத் தியதன் மத்தின்
விசேடங் கெடுத்த லின்விப ரீதந்
தன்மிச் சொரூப விபரீத சாதனந்
தன்மி யுடைய சொரூபமாத் திரத்தினை
யேதுத் தானே விபரீதப் படுத்தல
பாவந் திரவியங் கன்ம மன்று
குணமு மன்றெனத் திரவிய மாமெக்
குணகன் மத்துண் மையினவே றுதலாற்
சாமா னியவிசே டமபோ லென்றூற
பொருளுங் குணமுங் கருமமு மொன்றாய
நின்றவற் றினிடை யுண்மைவே றுதலா லென்று

காட்டப் பட்ட வேது மூன்றினுடை
யுண்மை யேதுப் படுத்தும பொதுவா
முண்மை சாத்தியத் திலலா மையினுந்
திட்டாந் தத்திற் சாமானிய விசேடம
போக்கிப் பிறிதொன் றில்லாமை யானும
பாவ மென்று பகர்ந்த தன்மியினை
யபாவ மாக்குத லானவிப ரீதந்
தன்மி விசேட விபரீத சாதனந்
தன்மி விசேட வபாவஞ்சா திததன்
முன்னங் காட்டப் பட்ட வேதுவே
பாவமா கின்றது கருத்தா வுடைய
கிரியையுங் குணமுமா மதனை விபரீத
மாக்கிய தாதலாற் றன்மி விசேடங்
கெடுத்தது தீய வெடுத்துக்காட் டாவன
தாமே திருட்டாந்த வாபா சஙக
டிருட்டாந் தம்மிரு வகைபபடு மென்றுமுற்
கூறப் பட்டன விங்க வற்றுட்
சாதன் மியதிருட் டாந்தவா பாச
மோதி லைந்து வகையுள தாகுஞ்
சாதன தன்ம விகலமுஞ் சாததிய
தன்ம விகலமு முபய தன்ம
விகலமு மநன்னு வயமவிப ரீதான்
னுவய மென்ன வைதன் மியதிருட்
டாந்த வாபா சமுமை வகைய
சாத்தி யாவி யாவி ருத்தி
சாத னவி யாவி ருத்தி
யுபயா வியாவிருததி யவ்வெதி ரேகம்
விபரீத வெதிரேக மென்ன விவற்றுட்
சாதன தன்ம விகல மாவது
திருட்டாந் தத்திற சாதனங குறைவது
சத்த நித்த மமூர்த்த மாதலான்
யாதொன்றி யாதொன் றமூர்த்தமது நித்த
மாத லாற்காண் புற்றது பரமா
ணுவினெனிற் றிருட்டாந் தப்பர மாணு
நித்தந் தோடு மூர்த்த மாதலாற்
சாத்திய தன்ம நித்தததுவ நிரமபிச்

சாதன தன்மவமூர்த் தத்துவங் குறையுஞ்
சாத்திய தன்ம விகல மாவது
காட்டப் பட்ட திருட்டாந் தத்திற்
சாத்திய தன்மங் குறைவு படுதல்
சத்த நித்த மமூர்த்த மாதலால்
யாதொன்றி யாதொன் றமூர்த்தமது நித்தம்
புத்தி போலென் றுற்றிருட் டாந்த
மாகக் காட்டப் பட்ட புத்தி
யமூர்த்த மாகி நின்றே யநித்த
மாத லாற்சா தனவமூர்த் தத்துவ
நிரம்பிச் சாத்திய நித்தத்துவங் குறையு
முபய தன்ம விகல மாவது
காட்டப் பட்ட திருட்டாந் தத்திலே
சாத்திய சாதன மிரண்டுங் குறைத
லன்றியு மதுதான் சன்னு மசன்னு
மென்றிரு வகையா மிவற்றுட்சன் னுவுள
வுபய தன்ம விகல மாவ
துள்ள பொருட்கட் சாத்திய சாதனங்
கொள்ளு மிரண்டுங் குறையக் காட்டுதல்
சத்த நித்த மமூர்த்த மாதலான்
யாதொன் றியாதொன் றமூர்த்தமது நித்தங்
கடம்போ லெனிற்றிருட் டாந்த மாகக்
காட்டப் பட்டகடந் தானுண் டாகிச்
சாத்திய மாயுள நித்தத் துவமுஞ்
சாதன மாயுள வமூர்த்தத் துவமுங் குறையு
மசன்னு யுள்ள வுபயதன்ம விகல
மில்லாப் பொருட்கட் சாத்திய சாதன
மென்னு மிரண்டுங் குறையக் காட்டுதல்
சத்த மநித்த மூர்த்த மாதலான்
யாதொன்றி யாதொன்று மூர்த்தம தநித்த
மாகாசம் போலெனுந் திருட்டாந் தத்துச்
சாத்திய தன்மமா யுள்ள வநித்தமுஞ்
சாதன தன்மமா யுள்ள மூர்த்தமு
மிரண்டுமா காச மசத்தென் பானுக்
கதன்க ணின்மை யானே குறையு
முண்டென் பானுக் காகாய நித்த

வமூர்த்த மாதலா லவனுக்குங் குறையு
மன்னுவய மாவது சாதன சாததியந்
தம்மிற் கூட்டமாத் திரஞ்சொல் லாதே
யிரண்ட னுடைய வுண்மையைக் காட்டுதல்
சத்த மநித்தங் கிருத்த மாதலின்
யாதொன்று யாதொன்று கிருத்தம தநித்தமெனு
மன்னுவயஞ் சொல்லாது குடத்தின் கண்ணே
கிருத்த வநித்தங் காணப் பட்ட
வென்று லன்னுவயந் தெரியா தாகும
விபரீதான் னுவயம் வியாபகத் துடைய
வன்னுவயத் தாலே வியாப்பியம் விதித்தல்
சதத மநிததங் கிருத்தத தாலெனின்
யாதொன்று யாதொன்று கிருத்த மநித்தமென
வியாப்பியத் தால்வியா பகத்தைக் கருதா
தியாதொன் றியாதொன் றநிததமது கிருத்தமென
வியாபகத தாலவியாப் பியததைக் கருதுத
லப்படிக் கருதின்வியா பகம்வியாப் பியத்தை
யின்றியு நிகழ்த லின்விப ரீத
மாம்வை தன்மிய திருடடாந் தத்துச
சாததி யாவி யாவி ருததி
யாவது சாதன தன்ம மீண்டு
சாத்திய தன்ம மீளா தொழிதல்
சத்த நிதத மமூர்ததத தென்றல
யாதொன் றியாதொன்று நிததமு மன்றது
வமூர்ததமு மன்று பரமாணுப போலெனி
னப்படித திட்டாநத மாகக காடடப்
படடபர மாணு நிததமாய் மூர்தத
மாதலிற் சாதன வமூர்த்த மீண்டு
சாததிய நிதத மீளா தொழிதல
சாத னுவி யாவி ருததி
யாவது சாத்திய தன்ம மீண்டு
சாதன தன்ம மீளா தொழிதல்
சதத நிதத மமூர்தததத தென்றல
யாதொன் றியாதொன்று நிதத மன்றஃ
தமூர்ததமு மன்று கன்மம போல
வென்றல மைதன மியதிருட டாநத

மாகக் காட்டப் பட்ட கன்ம
மமூர்த்தமாய் நின்றே யநித்த மாதலிற்
சாத்திய மான நித்திய மீண்டு
சாதன மான வமூர்த்த மீளா
சஉ௫ துபயா வியாவிருத்தி காட்டப் பட்ட
வைதன் மியதிருட் டாந்தத்தி னின்று
சாதன சாத்தியங்கண் மீளாமை யன்றியு
முண்மையி னுபயா வியாவி ருத்தி
யின்மையி னுபயாவி யாவி ருத்தி
சஙo யெனவிரு வகையுண் மையினுப யாவி
யாவி ருத்தி யுள்ள பொருட்கட
சாத்திய சாதன மீளா தபடி
வைதன் மியதிருட் டாந்தங் காட்டல்
சத்த நித்த மமூர்த்த மாதலி
சங௫ னென்றுறகி யாதொன்றி யாதொன்று நித்தமன்
றமூர்த்தமு மன்று காசமபோ லென்றால்
வைதன் மியதிருட் டாந்த மாகக்
காட்டப் பட்ட வாகா சமபொரு
ளென்பாற் காகாச நித்தமு மமூர்த்தமு
சசo மாதலாற் சாத்திய நித்தமுஞ் சாதனமா
வுள்ள வமூர்த்தமு மிரண்டு மீண்டில
வின்மையி னுபயா வியாவிருத்தி யாவது
சத்த மநித்த மூர்த்த மாதலா
னென்ற விடத்தி யாதொன் றியாதொன்
சச௫ றநித்தமூர்த்த தமுமன் றுகா ரம் போலென
வைதன் மியதிருட் டாந்தங் காட்டி
லாகா சமபொரு ளலலவென் பானுக
காகாசந் தானே யுண்மையின் மையினாற்
சாத்திய வநித்தமுஞ் சாதன மூர்த்தமு
ச௫o* மீட்சியு மீளா மையுமிலை யாகு
மவ்வெதி ரேக மாவது சாத்திய
மிலலா விடத்துச சாதன மின்மை
சொல்லாதே விடுத லாகுஞ் சத்த
நித்தம பண்ணப் படாமையா லென்றால்
ச௫௫ யாதொன்றி யாதொன்று நித்த மன்று

* 'மீட்சியு மீளா மையு மாகுக்' என்றும் பாடம்.

பண்ணப் படுவ தல்லா ததுவு
மன்றெனு மிவ்வெதி ரேகந் தெரியச்
சொல்லாது குடத்தின் கண்ணே பண்ணப்
படுதலு மநித்தமுங் கண்டே மாதலா
னென்னின் வெதிரே கநதெரி யாது
விபரீ தவெதி ரேக மாவது
பிரிவைத் தலைதடு மாறாச சொல்லுதல
சத்த நித்த மூர்த்த மாதலி
னென்றா லென்று நின்ற விடத்து
யாதோ ரிடத்து நித்தமு மிலலையவ
விடத்து மூர்த்தமு மில்லையெ னாதே
யாதோ ரிடத்து மூர்த்தமு மில்லையவ்
விடத்து நிததமு மில்லை யென்றால்
வெதிரேக மாறு கொள்ளுமெனக் கொள்க
நாட்டிய விப்படித் தியசா தனததாற
காட்டு மனுமான வாபா சத்தின்
மெய்யும் பொய்யு மித்திற விதியா
லைய மின்றி யறிநதுகொ ளாய்நதென.

தவத்திறம்பூண்டு தருமங்கேட்டகாதை முற்றிற்று.

முப்பதாவது

# பவத்திறமறுகெனப்

# பாவைநோற்றகாதை.

[முப்பதாவது பவத்திறமறுகெனப் பாவைநோற்ற பாட்டு.]

தானந் தாங்கிச் சீலந் தலைநின்று
போன பிறப்பிற் புகுந்ததை யுணர்ந்தோள்
புத்த தன்ம சங்க மென்னும்

---

க:—ந௦ - ம் காதை, எ௨. சீலம - பஞ்சசீலம, அஷ்டாங்கசீலம், தசசீல மென மூன்று வகைப்படும. "ஐவகைச் சீலத் தமைதியுங் காட்டி" (௩-ம காதை, ௬௨) என்று முன்பு வந்திருத்தல் காண்க அவற்றினியல்பை, இந்நூல் ௨௧ - ம் காதை, ௱எ - ம் அடிக்குறிப்பிற் காண்க. மணிமேகலை பிக்குணியாதலின, அவற்றுள், தசசீலமே ஏண்டுக் கொள்ளற்பாலன. "எண்ணிகந்த காலங்க ளெமபொருட்டான் மிகவுழன, றெண்ணிகந்த வுலகங்க ளிருடீர வொருங்குணர்ந், தெண்ணிகந்த தானமுஞ் சீலமு மிவையாக்கி, யெண்ணிகந்த குணத்திற னெயபெருமா னல்லனோ." (இது நீலகேசியுரையிற் கண்டது) என்றும, "தோடா ரிலங்கு மலர்கோதி வண்டு வரிபாட நீடு துணர்சேர், வாடாத போதி நெறிநீழ லெம்மை வரதன் பயந்த வறநூல், கோடாத சீல விதமேவி வாய்மை குணனாக நாளு முயலவார்,வீடாத வின்ப நெறிசேர்வா துன்ப வினைசோத னாளு மிலரே" (இது, வீரசோழியம், யாப்புப்படலம், ந - ம கலித்துறையுரையிலுள்ள உதாரணச்செய்யுள்) எனறும தானசீலங்கள் கூறப்பட்டு வருதல்காண்க.

௨. உணர்ந்தோள்-மணிமேகலை. பழம பிறப்பில் நிகழ்ந்தவற்றை அறிதற்குரிய அறிவும் யோகவித்தியைப்போன்ற இருத்தியும் பகுவிகளுக்கு எப்படியேனும உண்டாகுமென்பது பௌத்தநூற்றுணிபு இப்பழம்பிறப்புணர்ச்சியையும் இருத்தியையும முறையே மணிபல்லவத்துள்ள புத்தபீடிகைக்காட்சியாலும் மணிமேகலாதெய்வத்தாலும் மணிமேகலையடைந்தாளென்று இந்நூலிலுள்ள கூ - ம் காதை, க௦ - ம் காதை கூறுதல் காண்க. மஹாபோதி விருக்ஷத்தினடியிலிருந்தபொழுது ஸித்தார்த்தனுக்கு முற்பிறப்புகளில நிகழ்ந்தசெயதிகள் மனத்திற்றோற்றியபின்னரே ஸத்தியசதுஷ்டய ஞானம் தோற்றியதென்று புத்தசரித்திரங் கூறும்.

ந. புத்த மென்னும் - புத்தனும் தருமமும் சங்கமுமெ[ன்]கிற, **புத்தன்** - ஸர்வஜஞன, பாலீபாஷையிலுள்ளதாகிய **மகாவர்க்க** மென்னும் நூலிலுள்ள மகாகண்டகமென்னும்பாகத்திலும, மத்தியம நிகாயத்துள்ள ஆரியபரியேஷணஸூத்திரத்திலும், தீர்க்கநிகாயத்துள்ள மகாபரிநிர்வாணஸூத்திரத்திலும், மஹாபதானஸூத்திரத்திலும புத்தசரிதங் கூறப்பட்டுள்ளதென்பா. **தருமம்** - அவனகூறிய அருளறங்கள அவை, அபிதருமம், ஸூத்திரதருமம், வினயதருமமென மூன்று வகைப்படுமெனறும், அவற்றுள் அபிதருமவகைகள் அபிதர்மார்த்தஸங்கிரகமெனனுநூலிலும், ஸூத்திரதாமவகைகள் ஸாரஸங்கிரகமென்னு நூலிலும், வினயதாமவகைகள பிராதிமுக்தகவினயவினி

முத்திற மணியை மும்மையின் வணங்கிச்
சரணா கதியாய்ச் சரண்சென் றடைந்தபின்
முரணாத் திருவற மூர்த்தியை மொழிவோ
னறிவு வறிதா யுயிர்நிறை காலத்து
முடிதயங் கமரர் முறைமுறை யிரப்பத்
துடித லோக மொழியத் தோன்றிப்

ச்சயமென்னுநூலிலும் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளனவென்றும், இம்மூன்றுவகைத்தருமங்களும் பிடகத்திரயத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளனவென்றுங் கூறுவர். ஸங்கம் - பௌத்தரில் துறந்தோர்களின்கூட்டம், இதில்துறந்த இருபாலாரும் கலப்பின்றி வேறுவேறிடங்களில் இருத்தல்வேண்டுமென்பதும், அவர்களில் பிக்ஷுக்களுக்குப் பிக்ஷுணிகள் வணங்கி நடத்தல்வேண்டுமென்பதும், பதின்மருக்குக் குறையாமலிருத்தல்வேண்டுமென்பதும்விதி. மற்றையவிதிகளை வந்தவிடங்களிற் கண்டுகொள்க.

௪. முத்திறமணி - த்ருமணி, மேற்கூறிய புத்த தரும சங்கத்தை தருமணியென்பர். மும்மையின் வணங்கலாவது- "புத்தம் சரணங்கச்சாமி, தர்மம் சரணங்கச்சாமி, ஸங்கம் சரணங்கச்சாமி" என்பனவற்றை மூன்றுமுறைஜபித்து மூன்றுமுறைபணிதல், இனி 'மும்மையின் வணங்கி' என்பதற்கு மனோவாக்குக்காயங்களென்னும் முக்கரணங்களால் வணங்கியெனினும் பொருந்தும். 'முறைமையின் வணங்கி' என்றும் பாடம்

௫. சரணாகதி - சரணமாக அடைதல் சரணம் - அடைக்கலம்

௪ - ௫. உணர்ந்தோள் வணங்கிச்சென்று அடைந்தபின்னைக என்றது தருரத்நங்களையும் மணிமேகலை வணங்கியபின்னென்றவாறு.

௬. முரணாத் திருவறமூர்த்தியை - பூர்வோத்தர விரோதமில்லாத தாமஸ்வருபத்தை, "மலையா வறத்தின் மாதவம் புரிந்தேன்" (உ௮ - ம் காதை, ௧௦௦) எனவும், "முன்பின் மலையா மங்கல மொழி" (௩௦ - ம் காதை, உ௬௧) எனவும் இந்நூலுள்ளே வந்திருத்தல் காண்க. தங்கள் தருமத்தை முதலிலும் இடையிலும் கடையிலும் உத்தமமானதென்று கூறுவர் பௌத்தர்.

மேல்வருவன அறவணவடிகள்கூற்று.

௭. அறிவு வறிதாய - நிருவாண இலக்கணத்தை ஆராய்ந்து அதனைப் பெறுதற்குரிய ஞானமின்றி காரணகாரிய ஞானமின்றியென்றுமாம். ௧௦-ம் காதை, ௭.

௮. அமரர் - மஹாராஜிகலோகமுதலிய ஆறுலகிலுமுள்ள தேவர்கள்; ஆறு தேவலோகங்களின் பெயரை இந்நூற்பதிகம், ௨௪ - ௨௯ - ம் அடிகளின் குறிப்பிற் பார்க்க.

௯. துடிதலோகம் = துஷிதலோகம், இது மேற்கூறிய மஹாராஜிகலோக முதலிய தெய்வலோக மாறினுள் நான்காவது. கௌதம புத்தராக அவதரித்த பிரபாபாலரென்னும் போதிஸத்துவர் இங்ஙனம் அவதரிப்பதற்கு முன்பு இருந்த விடமென்பர் "தொழுமடிய ரிதயமலரொருபொழுதும் பிரிவரிய துணைவனெனலா, மெழுமிரவி கிரணநிக ரிலகுதுகிலபுனைசெய்தரு ளிறைவ னிடமாங், குழுவுமறை யவருமுனி வரருமரி பிரமருரகவனு மெவருந், தொழுதகைய விமையவரு மறமருவு துதிசெய்தெழு துடிதபுரமே." (வீரசோழியம், யாப்புப்படலம், ௩௩ - ம் கலித்துறை யுதாரணம்) என்னுஞ்செய்யுள், துடிதபுரமென்று ஒரு புத்தஸ்தலம் பூமியிலிருந்ததாகத் தெரிவிக்கின்றது. துடிதவிமானமென்ற ஒரு விமானமிருப்பதாக நீலகேசியுரை கூறுகின்றது. தோன்றி - கோசலதேசத்திற கபிலவஸ்துவிற் சாக்கியசக்கிரவர்த்தியாகிய சுத்தோதனனுடைய பட்டமகிஷியான மாயாதேவியின் வயிற்றிலிருந்து அவள் வலமருங்குலவழியே உலும்பினி வனத்தில் அவதரித்து இங்ஙனம் அவதரித்ததை, "உலும்பினி வனத்து ளோங்குசாலத் தேவி, வலம்படு மருங்குல வயின் நோயுறும, லான்றோ னவ்வழித் தோன்றின னதலின், னின்றோ ளேழாநா ளினனுயிர் வைத்தாள்." (இது, விம்பசார

கo போதி மூலம பொருந்தி யிருந்து
மாரனை வென்று வீர ஞகிக்
குற்ற மூன்று முற்ற வறுக்கும

ந்தையென்னுங் காப்பியம்) என்னுஞ் செய்யுளாலுணர்க.

அ - கூ. எண்டுக் கூறியதுபோலவே "சக்கர வாளத்துத் தேவ ரெல்லாந், தொக்கொருங் கீண்டித் துடித லோகதது, மிககோன் பாதம் விழுந்தன ரிரப்ப" (உ - ம காதை, எஉ - எச) என்று முன புவந்திருததல் காண்க.

கo. போதிமூலம - இக்காலததுப் புத தகயையென்று வழங்கப்படுவதும நைரஞ்சரா அல்லது பல்குனியெனறு கூறப் படும் நதிக்கரையிலுள்ளதுமாகிய இடததில ஐநது கிளையை யுடைததாய்விளங கிய அரசமரததின் அடியில போதி - அரசமரம. இஃது ஐநதுகிளையையுடை ததாதல, "பணையைந தோஙகிய பாசி லைப் போதி, யணிதிகழ் நீழ லறவோன்" (சிலப்பதிகாரம், நாடுகாண்காதை. கக-கஉ) என்பதனுற் பெறப்படுகின்றது. ஸிததாரததன் உணமையறிவை யடைதற்குத் துறவுபூண்டு பலவிடததுஞ்சென்று பலவாறுமுயன்று முடிவில இம்மரத தடியில்வநது சீலசமாதியிலிருநது பழம் பிறப்புக்களை யறிநது தசபாரமிதையும நிறையப்பெற்று ஆராய்நதபொழுது ஸத தியசதுஷ்டய ஞானமுழுதும அவனுக குததோறறினமையால, இம்மரம, மஹா போதிவிருக்ஷமெனறு பௌததாகளால மிகப்பாராட்டி, நெடுந்தூரததிருந்தும திக்குநோககி வணங்கப்படுவது. பண டைக்காலததில இததெனனுடைடியிருநத பௌததாகள் வடதிசைநோககி இதனை த தொழுதுவந்தாாகளெனறுந தெரிகின் றது, 'போதிவிருட்சம் வடக்கேயிருப் பதென்று பௌததன தொழுதலால திக் குணதெனக' என்பது சிவஞான சித்தியார், சௌததிராந்திகன் மதமறுதலை, கூகூ - ம் திருவிருததததுரை. இம்மரத தினகீழிருநது ஞானமபெற்றமையால், புத்தன் போதிவேநதனென்று கூறப்படு வன்; இம்மரததடியில் ஸிததாரததன தசபாரமிதையும் நிறையப்பெறறு எல லாமறிந்தானென்பது, "அருணெறியாற் பாரமிதை யாறைந்து முடனடக்கிப், பொருண்முழுதும் போதியின்கீழ் முழு துணர்ந்த முனிவரன்ற, னருண்மொழி யா ஞல்வாய்மை யறிந்தவரோ பிறப்பறுப் பார், மருணெறியாம் பிறநூலு மயக் கறுக்கு மாறுளதோ." என்னும் சித்தாந் தத்தொகைச் செய்யுளால் நன்குணர்த் தப்பட்டது, இச்செய்யுளையும் இஃது இந்த நூலிலுள்ளதென்பதையும் நீலகேசி திரட்டுரையும், சிவஞான சித்தியார் பரபக்கததிற்கு ஸ்ரீ ஞானப்பிரகாசரெழு தியவுரையுந் தெரிவித்தன.

கக. மாரன் - தர்மவிரோதியான ஒரு தேவன், இவன் புத்தனுக்கு ஞானமுண் டாகாதவண்ணம் தனமகளிர் மூவரும தானுமாகவநது பலவகையான இடை யூறுகளைச்செய்து முடிவில் தோல்வியுற் ருன்; "தாமநறுங குழன்மழைக்கட் டளிரியலார தமமுன்னாக, காமனையே முனைந்தொலைததாற் கண்ணோட்டம் யா தாஙகொல்." என்பது வீரசோழியம், யாப்புப்படலம், கக-ம க - றை, உ - ம். மாரனைவென்றமையால், புத்தனை மாரஜி ததென்று கூறுவர். வீரியம தசபாரமிதை யுளொனறுதலின, அதனையுடையானை னபார் 'வீரன்' எனறுர், வீரியமென் றது, இங்கே அறிவுபெறுந்துணையும் பல வகையான இடையூறறினுககுமஞ்சாது மடிவின்றிமுயன்ற முயறசியை, அது "வினைவாய போதிமையுறுமளவும் வினை மடியான், றளர்வின்றி யோடிய தாளி னலலனே" என்பதனுற் பெறப்படும. இச்செயயுள், நீலகேசிவிருத்திசமயதி வாகரத்தில், புததனுடைய வீரியபாரமி தைககுககாட்டிய மேறகோள, "காமற கடநத வாமன" (ரு - ம காதை, எ), "மாரனை வெலலும வீர" (கக-ம காதை, கூக) என்ரு முன்னும. இராமனை யுதத வீரனென்றும, கனனனைத தானவீரனெ னறும, புததனைத தயாவீரனென்றுங்கூறு வாவடநூலார.

கஉ. குறற மூனறு - காமம் வெகுளி மயக்கஙகள, "காமம் வெகுளி மயக்கங காரணம" எனபா பின்னும, உருகூ - ம் அடி. இம்மூன்றையும் துவரத் துறந்த

வாமன வாய்மை யேமக் கட்டுரை
யிறந்த காலத் தெண்ணில்புத் தர்களுங்
கறு சிறந்தருள் கூர்ந்து திருவாய் மொழிந்த
தீரறு பொருளி னீந்தநெறி யுடைத்தாய்ச்

மையின், புத்தன் முக்குற்றங் கடிந்தோ னென்று கூறப்படுவன்; "குற்றங்கெடுத் தோய்" (ரு-ம் காதை, ௧00) என்று முன் புவந்திருத்தல் காண்க; 'அறுக்கும்' என் றதனால் குற்றமூன்றையும கட்டென்று ராயிற்று. "போய்க் குற்ற மூன்று மறுத்த தான்புகழ் கூறுவேற்கென, வாய்க்குற்ற சொல்லின் வழுவும்வழு வல்ல வன்றே." என்பது குண்டலகேசி, அவையடக்கம். "பூமகனே முதலாகப் புகுந்தமர ரெண் டிசையுந், தூமலரா லடிமலரைத் தொழு திரந்து வினவியநாட், காமமுங் கடுஞ்சி னமுங் கழிப்பரிய மயக்கமுமாய்த்,தீமை சால் கட்டினுக்குத் திறற்கருவி யாய்க்கி டந்த,நாமஞ்சா நமர்களுக்கு நயப்படுமா றினிதுரைத்துச, சேமஞ்சா நன்னெ றிக்குச் செல்லுமா றருளினையே." என் பது, வீரசோழியம், யாப்புப்படலம், ௧௧-ம் கலித்துறை யுதாரணம். இனி, பொய், கொலை, கள், காமம், களவு என் பனவற்றை ஐங்குற்றமென்று இவர் வழங்குவதுமுண்டு "கள்ளும் பொய் யுங் காமமுங் கொலையு, முள்ளக் களவு மென் றுரவோர் துறந்தவை" (௨௪-ம் காதை, ௭௭-௭௮) என்றும், "வீடு கொ ண்ட நல்லறம் பகர்ந்து மனபதைக்கெ லாம் விளங்கு திங்க ணீர்மையால் விரிந் திலங்கு மனபிறேன், மோடுகொண்ட வெண்ணுரைக் கருங்கடற் செழுஞ்சுடர் முளைத்தெழுந்த தென்னலாய் முகிழ்ந்தி லங்கு போதியி, லூடுகின்ற மூவகைப் பவங்கடந்து குற்றமான வைந்தொடங் கொர் மூன்றறுத்த நாதனுண் மலர்த்து ணைப், பீடுகொண்டவார் தளிர்ப்பிறங்கு போதியானை யெம்பிரானை நாளுமேத்து வார் பிறப்பிறப்பிலார்களே." (இது, வீர சோழியம், யாப்புப்படலம், ௩-ம் கலித் துறையுதாரணச்செய்யுள்) என்றும் வரு தல் காண்க.

௧௩. வாமன்... கட்டுரை— புத்தனது நால்வகைச் சத்தியங்களாகிய, இன்பத் தை விளைவிக்கும் பொருள் பொதிந்த சொல்; வாமன் - அழகியவன

ஏ - ௧௩. காலத்து இரப்பத் தோன்றி இருந்து வென்று வீரனாகி அறுக்கும் வாமனது வாய்மையாகிய கட்டுரையெ ன்க, ௧௨-ம் காதை, ௫௮ - ௭௪.

௧௪. கௌதம புத்தருடைய காலத்தி ற்குமுன்பு தருமங்குறைந்த ஒவ்வொரு காலத்தும் ஒவ்வொருவராகப் புத்தர்கள் பலர் அவதரித்து உபதேசஞ்செய்து தரு மஸ்தாபனஞ்செய்தார்களென்பது பௌ த்தநூற்றுணிபாதலின், 'இறந்த காலத் தெண்ணில்புத் தர்களும்' என்றார், கௌ தம புத்தருடைய சரித்திரத்திலும், புத்த ஜாதக கதையிலும் இக்கருத்து ஆங்காங் குப்பெறப்படும், கௌதம புத்தருக்கு முன்னேயுள்ள புத்தர்களுள், இருபத்தெ ழுவர் பெயர்களமட்டும இப்பொழுது தெரிகின்றன. அவைவருமாறு :—(௧)- தண்ணகாரர், (௨) - மேதங்கரர், (௩) - சரணங்கரர், (௪) - தீபங்கரர், (௫)-கௌ ண்டினனியர், (௬) - மங்களர், (௭) - ஸு மங்களர், (௮) - இரேவதர், (௯) - சோபி தர், (௧0) - அநோமதர்சி, (௧௧) - பதுமர், (௧௨) - நாரதர், (௧௩) - பதுமோத்தரர், (௧௪)-ஸுமேதா, (௧௫)-ஸுஜாதா, (௧௬) பிரியதர்சி, (௧௭) - அத்ததர்சி, (௧௮) - தர்மதர்சி, (௧௯) - ஸித்தார்த்தா, (௨0) - திஷ்யா, (௨௧) - புஷ்யர், (௨௨)-விபச்சித், (௨௩) - சிகி, (௨௪) - விருஷபர், (௨௫) - ககுந்தர், (௨௬) - கோவகாமா, (௨௭) - கசியபரென்பன. இவ்விருபத்தெழுவரும கௌதம புத்தரும ஸர்வஜ்ஞய புத்தரெ ன்று கூறப்படுவர். இஃது, இலங்கையி லுள்ள வித்தியோதய பாடசாலைத் தலை வராகிய ஸ்ரீ ஸுமங்களரால் தெரிந்து கொள்ளப்பட்டது. தண்ணங்காரன், மஹாவீரன் முதலிய இருபத்துமூன்று புத்தரென்பாருமுளர்.

௧௩ - ௧௫. யான்கூறுவது, ஏமக்கட் டுரையும் திருவாய்மொழிந்ததுமாகவுள் ளதென்று அறவணவடிகள் கூறினா ரென்க.

௧௬. ஈரறு பொருளின் - பன்னிரண்டு பொருள்களால், என்றது 'பேதைமை

சார்பிற் றோன்றித் தத்தமின் மீட்டு
மிலக்கணத் தொடர்தலின்
மண்டில வகையா யறியக் காட்டி
யெதிர்முறை யொப்ப மீட்சியு மாகி
யீங்கி தில்லா வழியில லாகி
யீங்கி துள்ள வழியுண் டாகலிற்
றக்க தக்க சார்பிற் றோற்றமெனச்
சொற்றகப் பட்டு மிலக்கணத் தொடர்பாற்
கருதப் பட்டுங் கண்டனன் குடைத்தாய்

---

முதலியவற்றை. அவையாவன :— பேதைமை, செய்கை, உணர்வு, அருவுரு, வாயில், ஊறு, நுகர்வு, வேட்கை, பற்று, பவம், தோற்றம், வினைப்பயனென்பன. இவற்றை முறையே அவித்யை, கர்மம அல்லது ஸம்ஸ்காரம், விஜ்ஞானம், நாமரூபம் அல்லது ரூபாரூபம், ஷடாயதனம், ஸ்பரிசம், வேதனை, த்ருஷ்ணை, உபாதானம், பவம, ஜன்மம் கர்மபலம என்பர் வடநூலார். இவை துவாதச நிதானமெனப்படும, இவற்றுள் விஜ்ஞானததிற்குப் பௌதிக இயல்பு உண்டென்பர், (௩0 - ம் காதை, ௪௫ - ௪௮.)

'ஈராறுபொருளின்' என்றது முதலியவற்றிற்குப் பின்வரும், 'பேதைமை' (௪௫ - ம் அடி) என்பது முதலியவற்றால் விவரணங் கூறப்படும.

௧௭ - ௧௮. சார்பிற்றோன்றி - சம்பந்தத்தால் உண்டாகி, சம்பந்தமென்றது காரியகாரணத் தொடர்ச்சியை. "சார்பிற்றோற்றம்" (௨௫ - ம் காதை, ௧௯௩) என்று முன்பு வந்திருத்தல் காண்க. மேற்கூறிய பன்னிரண்டனுள் பேதைமையிலிருந்து செய்கையும், அதிலிருந்து உணர்வும், அதிலிருந்து அருவுருவும, அதிலிருந்து வாயிலும, அதிலிருந்து ஊறும, அதிலிருந்து நுகர்வும், அதிலிருந்து வேட்கையும, அதிலிருந்து பற்றும, அதிலிருந்து பவமும், அதிலிருந்து தோற்றமும், அதிலிருந்து வினைப்பயனுந் தோன்றுமெனக்கொள்க. இதனால் முதன்முறைத் தோற்றங் கூறியவாறாயிற்று. தத்தமில் மீட்டும் இலக்கணத்தொடர்தலின் - அப்பன்னிரண்டனுள் செய்கை முதலிய ஒவ்வொன்றும் தத்தமக்கு முன்னுள்ளவற்றில்நின்றும் தோன்றியதுபோலப் பன்னிரண்டாவதாகிய வினைப்பயனினின்றும் எண்ணுமுறையில் முதற்கண்ணின்றதாகிய பேதைமைதோன்ற அதனினின்று திரும்பவும் செய்கைமுதலியன முன்தோன்றியவாறே தோன்றுதலால், மீட்டும, உம்மை - இறந்ததுதழீஇயது. பேதைமை முதலிய பன்னிரண்டும் தங்கட்டோன்றுவனவற்றைநோக்கப் பகுதியாதலும், தமக்கு முதலாவனவற்றைநோக்க விகுதியாதலு முடையனவென்பது பௌத்தர்கொள்கை. இலக்கு-குறி. (௩0 - ம் காதை, ௧0௪ - ௧௧௮.)

௧௯. மண்டிலம் - வட்டம், "ஊழின் மண் டிலமாக சூழுமிந் நுகர்ச்சி" என்பா பின்னும, (௩0 - ம் காதை, ௧௧௮.)

௨0. எதிர்முறை ஒப்ப - தோன்றும் முறைமையைநீக்க எதிர்தல் - தோன்றுதல், என்றது காரணத்தை இல்லையாக்க வென்றபடி. பேதைமைமீளச் செய்கையும், அதுமீள உணர்வும், அதுமீள அருவுருவும், அதுமீள வாயிலும, அதுமீள ஊறும், அதுமீள நுகர்வும், அதுமீள வேட்கையும, அதுமீளப் பற்றும, அதுமீளப் பவமும, அதுமீளத் தோற்றமும், அதுமீள வினைப்பயனுமீளுமென்றவாறாயிற்று. மீளுதல - ஈண்டு இன்மைப் பொருட்டு. 'எதிர்முறையொப்ப' என்றும் பாடம், (௩0 - ம் காதை, ௧௧௧ - ௧௩௩.)

௨௧. இதுவென்றது காரணத்தை. இல்லாகி - காரியங்களில்லையாகி.

௨௫. மேற்கூறிய பேதைமைமுதலிய பன்னிரண்டனுள், பேதைமை, செய்கை என்னும் இந்த இரண்டும் முதற்கண்டமென்றும், உணர்வு, அருவுரு, வாயில்,

மருவிய சந்தி வகைமூன் றுடைத்தாய்த்
தோற்றம் பார்க்கின் மூன்று வகையாய்த்
தோற்றற் கேற்ற காலமூன் றுடைத்தாய்க்
குற்றமும் வினையும் பயனும் விளைந்து
நிலையில வறிய துன்பமென நோக்க
வுலையா வீட்டிற் குறுதி யாகி
நால்வகை வாய்மைக்குச் சார்பிட னாகி
யைந்துவகைக் கந்தத் தமைதி யாகி
மெய்வகை யாறு வழக்குமுக மெய்தி
நயங்க ணான்காற் பயன்க ளெய்தி
யியன்றநால் வகையால் வினாவிடை யுடைத்தாய்
நின்மிதி யின்றி யூழ்பா டின்றிப்
பின்போக் கல்லது பொன்றக் கெடாதாய்ப்

ஊறு, நுகர்வு என்னு மிவ்வைந்தும் இரண்டாங் கண்டமென்றும், வேட்கை, பற்று, பவம் என்னுமிம்மூன்றும் மூன்றாங்கண்டமென்றும், தோற்றமும் வினைப்பயனும் நான்காங்கண்டமென்றுங் கூறப்படும்; (௩௦-ம் காதை, ௧௩௫-௧௪௭.)

௨௬. செய்கையு முணர்வுஞ் சேர்தலை முதற்சந்தியென்றும், நுகர்வும் வேட்கையுஞ்சேர்தலை இரண்டாஞ்சந்தியென்றும், பவமுந் தோற்றமுஞ்சேர்தலை மூன்றாஞ்சந்தியென்றுங் கூறுவர், (௩௦-ம் காதை, ௧௪௮-௧௫௨.)

௨௭. தோற்றம் - பிறப்பு (௩௦-ம் காதை, ௧௫௩-௧௫௮.)

௨௮:—௩௦-ம் காதை, ௧௫௯-௧௬௮.

௨௯:—௩௦-ம் காதை, ௧௬௯-௧௭௪.

௩௦-௩௧:—௩௦-ம் காதை, ௧௭௫-௧௭௮.

௩௨. நால்வகை வாய்மைக்கு-நான்கு வகைப்பட்ட சத்தியங்களுக்கு, நான்கு சத்தியங்களாவன:—துக்கம், துக்கோத்பத்தி, துக்கநிவாரணம், துக்கநிவாரண மார்க்கமென்பன, (௩௦-ம் காதை, ௧௭௯-௧௮௮.)

௩௩. ஐந்துவகைக்கந்தம் - பஞ்சஸ்கந்தம், ஸ்கந்தம் - கூட்டம், அவையாவன:—உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, விஜ்ஞானம் என்பன; "ஓங்குருவம் வேதனை யுளக்குறிப்புப் பாவனை மெய், தாங்குணர்வென் னைந்தாங்கந்தம்" என்பது பரமதத்திமிரபானு, (௩௦-ம் காதை, ௧௮௯-௧௯௦.)

௩௪. ஆறுவழக்காவன:— உண்மைவழக்கு, இன்மைவழக்கு, உள்ளதுசார்ந்த உண்மைவழக்கு, இல்லதுசார்ந்த இன்மைவழக்கு, உள்ளதுசார்ந்த இன்மைவழக்கு, இல்லதுசார்ந்த உண்மைவழக்கு, என்பன (௩௦-ம் காதை, ௧௯௧-௨௧௬)

௩௫. நயங்கள்நான்கு-ஒற்றுமைநயம், வேற்றுமைநயம், புரிவின்மைநயம், இயல்புநயம் என்பன, (௩௦-ம் காதை, ௨௧௭-௨௨௮.) பயன்கள் - பிரயோசனங்கள், அவை நான்குவகைப்படும் (௩௦-ம் காதை, ௨௨௮-௨௩௪.)

௩௬. நால்வகையால் வினாவிடையுடைமை - துணிந்துசொல்லல், கூறிட்டுமொழிதல், வினாவின்விடுத்தல், வாய்வாளாமை என்பன, (௩௦-ம் காதை, ௨௩௫-௨௪௧.)

௩௭. நின்மிதி-நிர்மாணம்=உண்டாக்குதல். ஊழ்பாடு-முடிவுபடுதல் ஊழ்-முடிவு. தொடக்கமும் ஈறுமின்றி யென்பதாம்.

௩௮. பின்போக்கு - தொடர்ச்சி, இதனை ஸந்தானமென்பர், அது வாயுஸந்தானம், தீபஸந்தானம், தாராஸந்தானம், பிபீலிகாஸந்தானம் என நான்குவகைப்படும். பொன்றககெடாதாய் - முற்றக்கெடாததாகி.

௩௮-௪௪:—௩௦-ம் காதை, ௨௫௦-௨௫௧.

பண்ணுந ரின்றிப் பண்ணப் படாதா
யானு மின்றி யென்னது மின்றிப்
போனது மின்றி வந்தது மின்றி
முடித்தலு மின்றி முடிவு மின்றி
வினையும் பயனும் பிறப்பும் வீடு
மினையன வெல்லாந் தானே யாகிய
பேதைமை செய்கை யுணர்வே யருவுரு
வாயி லூறே நுகர்வே வேட்கை
பற்றே பவமே தோற்றம் வினைப்பய
னிற்றென வகுத்த வியல்பீ ராறும்
பிறந்தோ ரறியிற் பெரும்பே றறிகுவ
ரறியா ராயி னாழ்நர கறிகுவர்
பேதைமை யென்பது யாதென வினவி
னோதிய விவற்றை யுணரா து மயங்கி
யியற்படு பொருளாற் கண்டது மறந்து
முயற்கோ டுண்டெனக் கேட்டது தெளித
லுலக மூன்றினு முயிரா முலக

---

இனிப் பேதைமைமுதலிய பன்னிரண்டுசார்பும் அவற்றின் இலக்கணங்களும் முறையே கூறப்படும்.

௪௫. பேதைமை - அவித்யை. செய்கை - காமம். உணர்வு - விஞ்ஞானம. அருவுரு - நாமரூபம்.

௪௬. வாயில் - ஷடாயதனம், அஃதாவது ஞானேந்திரியங்களும் மனமும். ஊறு - ஸ்பரிசம, அஃதாவது இந்திரிய விஷயசம்பந்தம். நுகர்வு-வேதனை, அஃதாவது சுகதுக்க அனுபவம். வேட்கை- த்ருஷ்ணை, அஃதாவது இன்பத்தை அடையவேண்டுமென்றும் துன்பத்தைப் போக்கவேண்டுமென்று முண்டாகு மாசை.

௪௭. பற்று-உபாதானம்; அஃதாவது இன்பத்தைக்கொடுக்கும் பொருள்களோடு ஒட்டிக்கொள்ளுதல. தோற்றம்- ஜனனம். வினைப்பயன் - காமபலம். இயல்பு - ஸ்வபாவம்.

௪௯. பெரும்பேறு - நிர்வாணம்.

௫௨. இவற்றையென்றது நான்கு சத்தியங்களையும், அவற்றை நன்கு விளக்குந் துவாதச நிதானங்களையும்.

௫௪. கோடு - கொம்பு.

௫௩ - ௫௪. பேதைமையென்பது மயங்கிக் கண்டதுமறந்து கேட்டது தெளிதலென்க, "பேயமை யாகுமிப் பேதைமைகள்வனோ டுளையக, காமுற் றுமதன் பயந்[illegible] காமனைக் கடந்து, நாமரூஉம்புகழ் கொடுபயந்தார் நன்னெறிநண்ணும, வாமன வாயமொழி மறந்திட்டு மறநதொழி கின்றும்" (இது வீரசோழியம், யாப்புப்படலம், ௫ - ம கலித்துறை யுதாரணம்) என்று கூறப்பட்டிருத்தல் காணக. இவவடிகளாற் பேதைமையதிலககணம் கூறப்பட்டது.

௫௫. உலகமூன்றினும் - மூன்றுலகங்களுள்ளும், உலகம முப்பத்தொன்றென் பாரெனின் மஹாராஜிகலோகமுதலிய உலகம் இருபத்தாறினையும் மேலுலகென்றும், நரகலோகமுதலிய உலகம நான்கினையும் கீழுலகென்றுங்கொண்டு அவற்றை நடுநின்ற மனுஷ்யலோகத்துடன் கூட்டி, இந்நூலாசிரியர் உலகம மூன்றெனக் கொண்டார்போலுமென்க, "திருமேவு பதுமஞ்சேர் திசைமுகனே முதலாக, வருமேவி யவதரித்த வுயிரனைத்து

மலகில பல்லுயி ரறுவகைத் தாகு
மக்களுந் தேவரும பிரமரு நரகரு
தொக்க விலங்கும பேயு மென்றே
நல்வினை தீவினை யென்றிரு வகையாற்
சொல்லப் பட்ட கருவிற் சார்தலுங்
கருவிற் பட்ட பொழுதினுட் டோற்றி
வினைப்பயன் விளையுங் காலையுயிர் கட்கு
மனப்பே ரின்பமுங் கவலையுங் காட்டுந்
தீவினை யென்பது யாதென வினவி
னாய்தொடி நல்லா யாங்கது கேளாய்
கொலையே களவே காமத் தீவிழை
வுலையா வுடம்பிற் றோன்றுவ மூன்றும்
பொய்யே குறளை கடுஞ்சொற் பயனில
சொல்லெனச் சொல்லிற் றோன்றுவ நான்கும்
வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சியென
றுள்ளந் தன்னி லுருப்பன மூன்றுமெனப்
பத்து வகையாற் பயன்றெரி புலவ
ரித்திறம் படரார் படர்குவ ராயின்
விலங்கும் பேயு நரகரு மாகிக்
கலங்கிய வுள்ளக் கவலையிற் றோன்றுவர்
நல்வினை யென்பது யாதென வினவிற்

---

மயக்கொள்வா, னிவ்வுலகுங் கீழுலகு மிசையுலகு மிருணீங்க, வெவ்வுலகுந் தொழுதேத்த வெழுந்தசெழுஞ் சுடரன்ன, விலங்குகதி ரோரிரண்டும் விலங்கி வலங் கொண்டுலவ, வலங்குசினைப் போதியின்கீ ழறமமர்ந்த பெரியோய்நீ" (இது வீரசோழியம், யாப்புப்படலம், கக-ம் கலித்துறையுதாரணம்) என்பதில் இப்படியே உலகங்கள் மூன்றாகக் கூறப்பட்டிருத்தல் காண்க. உயிராமுலகம் - சேதனப்பிரபஞ்சம்.

௫௬. அலகில - அளவில்லாதன.

௫௬ - ௫௮. மக்களும் தேவரும் பிரமரும் நரகரும் விலங்கும் பேயுமென்று பல்லுயிர் அறுவகைத்தாகும், இவ்வறுவகைப்பிறப்பும் ஷட்கதி யெனப்படும். செய்கை கூறுதற்கு அங்கமாக ஈண்டு அறுவகையுயிர்களுங் கூறப்பட்டன.

௬௰. சொல்லப்பட்ட கரு - மேற்கூறியமக்கட்கரு முதலிய ஆறும். கரு-பீஜம்; பதிகம், ௨௮.

௬௨. "விளைவின்கண், வீயா விழுமந் தரும்" என்பது திருக்குறள், ௨௮௪.

௬௰ - ௬௩. (செய்கை) சாதலையும் இன்பத்தையும் கவலையையுங் காட்டும்.

௬௬. காமத்தீவிழைவு - இருபெயரொட்டு.

௬௮. குறளை - கோள். கடுஞ்சொல் - கோபச்சொல்.

௬௮ - ௬௯. பயனில்சொல் - அறம் பொருளின்பங்களுள் ஒன்றும் பயவாத சொல்.

௭௰. பொல்லாக்காட்சி - மயக்கம் அஃதாவது உண்மையையறியாமை.

௭௧. உருப்பன - தோன்றுவன.

௬௪ - ௭௨. தீவினையென்பது மூன்றும் நான்கும் மூன்றுமெனப் பத்துவகைப்படும். இப்பத்தனையும் தச ஸம்யோஜனையென்பது பௌத்தநூல்வழக்கு.

௭௩. இத்திறம் - கொலை முதலிய இப்பாவவழிகளில். படரார் - செல்லார்.

சொல்லிய பத்தின் றொகுதியி னீங்கிச்
சீலந் தாங்கித் தானந் தலைநின்று
மேலென வகுத்த வொருமூன்று திறத்துத்
தேவரு மக்களும் பிரமரு மாகி
மேவிய மகிழ்ச்சி வினைப்பய னுண்குவ
ருணர்வெனப் படுவ துறங்குவோ ருணர்விற்
புரிவின் றாகிப் புலன்கொளா ததுவே
யருவுரு வென்ப தவ்வுணர்வு சார்ந்த
வுயிரு முடம்பு மாகு மென்ப
வாயி லாறு மாயுங் காலை
யுள்ள முறுவிக்க வுறுமிட னாகும்

௩௭. சொல்லியபத்து - கொலை, களவு, காமம், பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல், வெஃகல், வெகுளல், பொல்லாக்காட்சி யென்பன "மருட்டரு மனம்வாய் மெய்யிற் கொலைமுதல் வினை பத் தாமே" என்பது சித்தாந்தத்தொகை. நீங்கலாவது இப்பத்தினின்றும் நீங்கிக் கொல்லாமைமுதலிய பத்தினை யும் பெறுதல். 'பள்ளிவலம் புரிதல், தவஞ்செய்தல், தானஞ்செய்தல் என்னும் காயத்தின்குண மூன்றும், மெய்யுரை, நல்வார்த்தை, இனியனகூறல், பயன் படுசொற்கூறல் என்னும் வாக்கின் குணம் நான்கும், அருணினைவு, ஆசை யறுத்தல், தவப்பற்று என்னும் மனத்தின் குண மூன்றும் ஆகிய நற்குணம் பத்து' என்று கூறுவாருமுளர் இது, சிவஞானசித்தியார், சௌத்திராந்திகன் மதம், ௩௦ - ம் பாட்டுரையிற்கண்டது.

௩௮.—௩௦ - ம் காதை, க. சீலத்தின் வகைகளை இந்நூல் ௨௧-ம் காதை, ௫௭-ம் அடிக்குறிப்பிற் காண்க.

௪௧. மகிழ்ச்சிவினைப்பயன் - இன்பம், மகிழ்ச்சிவினை - புண்ணியம்.

௩௯ - ௪௧. இவ்வடிகளிற் கூறியது போலவே "விலங்கு நரகரும் பேய்களு மாக்குங், கலங்கஞர்த் தீவினை கடிமின் கடிந்தாற், றேவரு மக்களும்பிரமரு மாகுதி, ராகலி னல்வினை யயரா தோம்புமின்" (௨௫ - ம் காதை, ௪௧-௪௪) என்று முன் புவந்திருத்தல் காண்க.

௩௯-௪௧:—௨௪-ம்காதை, ௧௦௫-௧௩௦.

௪௨. உணர்வு-விஞ்ஞானம் ; இதுபஞ்சஸ்கந்தத்துள் ஒன்றாகவுங் கூறப்படும் பின்னர்க்காண்க. உறங்குவோருணர்வின் - தூங்குவோருடைய உள்ளம் கர்த்ருத்வமும் போக்தருத்வமுமின்றிச் சாக்ஷிமாத்திரையாக நிற்றல்போல.

௪௩ புரிவு இன்றாகி - செய்யுந்தொழில் யாதொன்று மின்றி ; புலன்கொளாதது - விஷயங்களை அனுபவியாது சாக்ஷி மாத்திரையாயிருத்தலையுடையது.

௪௨ - ௪௩. உணர்வு, உள்ளம், விஞ்ஞானமென்பன ஒருபொருட்சொற்கள், இதனைப் பின்னர்க்காண்க, இதுவே கருமத்தொகுதியோடு கூடிய வியவகார தசையில் உயிரென்றுவழங்கப்படுமென்பதும், முடிவில் ஆன்மாவென்று ஒன்று இல்லையென்பதும் பௌத்தர்கொள்கை; ஆன்மா இல்லையென்பதனால் இவர்கள் அநான்மவாதிகளென்று கூறப்படுவர், இந்த இரண்டடிகளாலும் உணர்வினிலக்கணம் கூறப்பட்டது.

௪௪ - ௪௫. அருவுரு-நாமரூபம், "அருவுருத்தன்மை, யாக்கை" என்பர் பின்னும், ௧௦௨ - ௧௦௩ இவ்விரண்டடிகளாலும் அருவுருவினிலக்கணம் கூறப்பட்டது.

௪௬. வாயிலாறு - ஷடாயதனம் ; வாயில், துவாரம், வழி, ஆயதனம், இடமென்பன ஒருபொருட் சொற்கள்.

௪௭. உள்ளமுறுவிக்க - விஞ்ஞானத்தில் விஷயங்களையடைவித்தற்கு உறும் இடனாகும் - உற்ற இடங்களாகும் இடங்களாவன— மெய் வாய் கண் மூக்குச் செவியென்னும் இந்திரியமைந்தும் மனமொன்றும்.

௪௬ - ௪௭. இவ்விரண்டடிகளாலும் வாயிலினிலக்கணம் கூறப்பட்டது.

ஊறென வுரைப்ப துள்ளமும் வாயிலும்
வேறு புலன்களை மேவுத லென்ப
நுகர்வே யுணர்வு புலன்களை நுகர்தல்
வேட்கை விரும்பி நுகர்ச்சியா ராமை
பற்றெனப் படுவது பசைஇய வறிவே
பவமெனப் படுவது கரும வீட்டந்
தருமுறை யிதுவெனத் தாந்தாஞ் சார்தல்
பிறப்பெனப் படுவதக் கருமப் பெற்றியி
னுறப்புண ருள்ளஞ் சார்பொடு கதிகளிற்
காரண காரிய வுருக்களிற் றோன்றல்
பிணியெனப் படுவது சார்பிற் பிறிதா
யியற்கையிற் றிரிந்துடம் பிடும்பை புரிதல்
மூப்பென மொழிவ தந்தத் தளவுந்
தாக்குநிலை யாமையிற் றாந்தளர்ந் திடுதல்
சாக்கா டென்ப தருவுருத் தன்மை
யாக்கை வீழ்கதி ரெனமறைந் திடுதல

அஅ. ஊறு - ஸ்பரிசம், உள்ளமும் வாயிலும் - விஞ்ஞானமும் ஷடாயதனமும்.

அகூ. புலன்களை - விஷயங்களை.

அஅ - அகூ. ஷடாயதனங்கள் விஷயங்களைஸ்பரிசித்தல் ஊறெனப்படுமென்பர்; இவ்விரண்டடிகளாலும் ஊற்றினிலக்கணம் கூறப்பட்டது.

கூ0. உணர்வு - விஞ்ஞானம்; இதனால் நுகர்வினிலக்கணம் கூறப்பட்டது.

கூக. வேட்கை-தருஷ்ணை; ஆராமை-நிரம்பாமை; "ஆரா இயற்கை யவா" (**திருக்குறள்**, ஙஎ0) என்றார் திருவள்ளுவரும்; நிரம்பாமையாவது - தாமேயன்றித் தம்பயனும் நிலையாமையின், வேண்டாதனவாகிய பொருள்களை வேண்டி மேன்மேல்வளர்தல்; இதனால் வேட்கையிலக்கணம் கூறப்பட்டது.

கூஉ. பசைஇய - ஒட்டிக்கொண்ட; இதனாற் பற்றினிலக்கணம் கூறப்பட்டது.

கூங. ஈட்டம் - கூட்டம், ஈண்டுக்கூறியதுபோலப் பவத்தைக் கருமத்தொகுதியென்று பின்னுங்கூறுவர், ககங, கசஉ - ம் அடிகளிற் காண்க.

கூங - கூச. இந்த இரண்டடிகளாலும் பவத்தினிலக்கணம் கூறப்பட்டது.

கூரு. கருமப்பெற்றியின் - கருமங்களினியல்போடு.

கூசா. உறப்புணருள்ளம் - மிகப்புணர்ந்த விஞ்ஞானம், சார்பொடுகதிகளில் - சம்பந்தத்தோடு கூடிய பிறப்புவகைகளில்.

கூஎ. இங்கே 'காரண காரிய வுருக்களிற் றோன்றல்' என்றதற்கேற்ப, "அன்புடை யாருயி ராசற் கருளிய, வென்புடை யாக்கை" என்று முன்னுங் கூறியிருத்தல்காண்க, உரு - ம் காதை, கஎ0 - கஎக.

கூசா - கூஎ. உள்ளம் தோன்றலென்க.

கூரு - கூஎ. இவ்வடிகளால் தோற்றத்தினிலக்கணம் கூறப்பட்டது.

கூஅ. பிணி - வியாதி. பிறிதாய் - வேறாகி.

கூகூ. இயற்கை-ஸ்வபாவம். திரிந்து-வேறுபட்டு. இடும்பை - துன்பம்.

கூஅ - கூகூ. இவ்வடிகளாற் பிணியினிலக்கணம் கூறப்பட்டது.

க00 - க0க. அந்தம் - மரணம். இவ்வடிகளால் மூப்பினிலக்கணங்கூறப்பட்டது.

க0உ - க0ங. சாக்காடு-மரணம். அருவுருத்தன்மையினையுடையவுடம்பு அஸ்தமிக்குஞ் சூரியனைப்போலே மறைந்து

பேதைமை சார்வாச் செய்கை யாகுஞ்
செய்கை சார்வா வுணர்ச்சி யாகு
முணர்ச்சி சார்வா வருவுரு வாகு
மருவுருச் சார்வா வாயி லாகும
வாயில சார்வா வூறா கும்மே
யூறு சார்ந்து நுகர்ச்சி யாகு
நுகர்ச்சி சார்ந்து வேட்கை யாகும
வேட்கை சார்ந்து பற்றா கும்மே
பற்றிற் றோன்றுங் கருமத் தொகுதி
கருமத் தொகுதி காரண மாக
வருமே யேனை வழிமுறைத் தோற்றந்
தோற்றஞ் சார்பின் மூப்புப்பிணி சாக்கா
டவல மாற்றுக் கவலைகை யாறெனத்
தவலி றுன்பந் தலைவரு மென்ப
வூழின்மண் டிலமாச் சூழுமிந் நுகர்ச்சி
பேதைமை மீளச் செய்கை மீளுஞ்
செய்கை மீள வுணர்ச்சி மீளு
முணர்ச்சி மீள வருவுரு மீளு
மருவுரு மீள வாயில் மீளும
வாயில் மீள வூறு மீளு
மூறு மீள நுகர்ச்சி மீளு
நுகர்ச்சி மீள வேட்கை மீளும
வேட்கை மீளப் பற்று மீளும
பற்று மீளக் கருமத் தொகுதி
மீளுங் கருமத் தொகுதி மீளத்
தோற்ற மீளுந் தோற்ற மீளப்

---

போதல், "செய்தவ யாக்கையின், மே வினை ஞயினும் வீழ்கதிர் போன்றேன்" (௨௪ - ம் காதை, ௧௦௧ - ௧௦௨) என்று இந்தவுவமையே இந்நூலில் முன்பு கூறப்பட்டிருத்தல் காண்க. இவ்வடிகளாற் சாக்காட்டினிலக்கணம் கூறப்பட்டது.

௯௮ - ௧௦௩. இவ்வடிகளாற் பிணிமூப்புச் சாக்காடென்னும் வினைப்பயன்களுக்கு இலக்கணங் கூறினார்.

௧௧௪. தோற்றம் - ஜனனம்.

௧௧௫. அவலமுதலியவற்றினிலக்கணங்களை இப்புத்தகத்தின் ௪௨ - ம் பக்கத்திற் பார்க்க.

௧௧௫ - ௧௧௭. மூப்புமுதலியன துக்கமெனவுங் கூறப்படுமாதலின், அவைகள் 'தவலி றுன்பம்' எனப்பட்டன.

௧௧௮. ஊழ் இல் மண்டிலமா - முடிவில்லாத வட்டமாக, ஊழ் - முடிவு; "ஊழ்பாடின்றி" (௩௦ - ம் காதை, ௩௭.) என்றார் முன்னும், இந்நுகர்ச்சி சூழுமெனக.

௧௦௪ - ௧௧௮. இவ்வடிகளால் துக்கமும் துக்கோத்பத்தியுமாகிய வாய்மைகளிரண்டும் கூறப்பட்டனவென்பார்.

௧௧௯. மீள - நீங்க, இல்லையாகவென்றுமாம்.

பிறப்பு மீளும் பிறப்புப் பிணிமூப்புச்
சாக்கா டவல மரற்றுக் கவலை
கையா றென்றிக் கடையி றுன்ப
மெல்லா மீளுமிவ் வகையான் மீட்சி
யாதிக் கண்ட மாகு மென்ப
பேதைமை செய்கை யென்றிவை யிரண்டுங்
காரண வகைய வாத லானே
யிரண்டாங் கண்ட மாகு மென்ப
வுணர்ச்சி யருவுரு வாயி லூறே
நுகர்ச்சி யென்று நோக்கப் படுவன
முன்னவற் றியல்பாற் றுன்னிய வாதலின்
மூன்றாங் கண்டம் வேட்கை பற்றுக
கருமவீட் டமெனக் கட்டு மைப்பவை
மற்றப் பெற்றி நுகர்ச்சி யொழுக்கினுட்
குற்றமும் வினையு மாக லானே
நான்காங் கண்டம் பிறப்பே பிணியே
மூப்பே சாவென மொழிந்திடுந் துன்ப
மெனவிவை பிறப்பி லுழக்குப் பயனாதலிற்
பிறப்பின் முதலுணர் வாதிச் சந்தி
நுகர்ச்சி யொழுக்கொடு விழைவின் கூட்டம்
புகர்ச்சியின் றறிவ திரண்டாஞ் சந்தி

---

கஙO. பிறப்பு-எண்டுப் புனர்ஜனனம், இப்படியே பின்னும்வரும்.

கஙங. மீட்சி இவ்வகையினையுடைத்து.

கககூ - கஙங. இவ்வடிகளால் துக்க நிவாரணமாகிய மூன்றாவது வாய்மை கூறப்பட்டதென்பர்.

இனி, நான்குகண்டங்களும் முறையே கூறப்படும்.

**முதற்கண்டம்:—**

கஙரு - கஙசா. பேதைமையுஞ் செய்கையுமாகிய இரண்டும் காரணங்களாகவுள்ளனவாதலின், அவை முதற்கண்டமென்று கூறப்படும்.

**இரண்டாங்கண்டம்:—**

கஙஎ - கசO. உணர்ச்சி முதலிய ஐந்தும், பேதைமை செய்கையென்னுமிரண்டாலும் வந்தனவாதலின், அவை இரண்டாங்கண்டமென்று கூறப்படும்.

**மூன்றாங்கண்டம்:—**

கசக - கசச. வேட்கைமுதலிய மூன்றும் மேற்கூறிய நுகர்ச்சியொழுக்கத்தின்கணுண்டாகிய குற்றமும் அதனாலுளதாகும் வினையுமாக இருத்தலின், மூன்றாங்கண்டமென்று கூறப்படும். வேட்கைமுதலிய மூன்றனுள் வேட்கையும் பற்றும் குற்றமெனவும் பவம் வினையெனவுங்கொள்க.

**நான்காங்கண்டம்:—**

கசஎ. 'ஊழ்க்குப்பயனாதலின்' என்றும் பாடம்.

கசரு - கசஎ. பிறப்பும் பிணிமுதலிய கன்மபலனுமாகிய இவைகள் முற்கூறிய வினைப்பயனாக இருத்தலின், அவை நான்காங்கண்டமென்று கூறப்படும்.

**சந்தி மூன்று:—**

கசஅ. பிறப்பின் முதல் - செய்கை. செய்கையும் உணர்வுஞ் சேர்தல் முதற்சந்தியாகும்.

கசகூ - கூட்டம் - சேருதல்.

கசகூ - கருO. நுகர்ச்சியும் வேட்கையுங்கூடுதல் இரண்டாஞ் சந்தியாகும்.

கன்மக் கூட்டத் தொடுவரு பிறப்பிடை
முன்னிச் செலவது மூன்றாஞ் சந்தி
மூன்றுவகைப் பிறப்பு மொழியுங் காலை
யானாப் பிறமார்க்கத் தாய வுணர்வே
தோன்றல் வீடெனத் துணிந்து தோன்றியு
முணர்வுள் ளடங்க வுருவாய்த் தோன்றியு
முணர்வு முருவு முடங்கத் தோன்றிப்
புணர்தரு மக்க டெய்வம் விலங் காகையுங்
கால மூன்றுங் கருதுங் காலை
யிறந்த கால மென்னல் வேண்டு
மறந்த பேதைமை செய்கையா மவற்றை
நிகழ்ந்த காலமென நேரப் படுமே
யுணர்வே யருவுரு வாயி லூறே
நுகர்வே வேட்கை பற்றே பவமே
தோற்ற மென்றிவை சொல்லுங் காலை
யெதிர்கா லமென விசைக்கப் படுமே
பிறப்பே பிணியே மூப்பே சாவே
யவல மரற்றுக் கவலைகை யாறெனக்
குலவிய குற்றமெனக் கூறப் படுமே
யவாவே பற்றே பேதைமை யென்றிவை
புனையுமடை பவமும் வினைசெய லாகு
முணர்ச்சி யருவுரு வாயி லூறே
நுகர்ச்சி பிறப்பு மூப்புப்பிணி சாவிவை
நிகழ்ச்சிப்பய னுங்கே நேருங் காலைக்
குற்றமும் வினையும் பயனுந் துன்பம்
பெற்ற தோற்றப் பெற்றிக ணிலையா
வெப்பொரு ளுக்கு மான்மா வில்லென
விப்படி யுணரு மிவைவீ டியல்பா

---

கருக - கருஉ. பவமும் தோற்றமுஞ் சேர்தல் மூன்றாஞ் சந்தியாகும்.

**மூவகைப் பிறப்பு:—**

கருங - கருஅ. (?)

**மூன்று காலம்:—**

கருகூ - கசுஅ. பேதைமையும் செய்கையுமாகிய இரண்டும் இறந்தகாலத்தன வென்றும், உணர்வுமுதலிய வொன்பதும் நிகழ்காலத்தனவென்றும், புனர்ஜனன முதற் கையாறிறுதியாகவுள்ள வினைப்பயன்களொன்பதும் எதிர்காலத்தனவென்றுங் கூறப்படும்.

**குற்றம்:—**

கசுகூ - கஎ0. அவாவும் பற்றும் பேதைமையுமாகிய இம்மூன்றும் குற்றமென்று கூறப்படும்.

**வினை:—**

கஎக. பவமும் செய்கையும் வினையாகும்.

**பயன்:—**

கஎஉ-கஎச. உணர்ச்சி முதலியவாறும் மூப்புப் பிணி சாக்காடென்னும் வினைப் பயனென்றும் ஆகிய வேழும் பயனெனக் கூறப்படும்.

கஎசு. தோன்றிய இயல்பையுடைய பொருள்கள் நிலையா.

கஎரு - கஎஅ. இவ்வடிகள், முன்பு, "நிலையில வறிய துன்பமென நோக்க,

முணர்வே யருவுரு வாயி லூறே
நுகர்வே பிறப்பே பிணிமூப்புச் சாவே
யவல மரற்றுக் கவலைகை யாறெனை
நுவலப் படுவன நோயா குமமே
யந்நோய் தனக்குப்
பேதைமை செய்கை யவாவே பற்றுக்
கருமவீட டம்மிவை காரண மாகுந
துன்பந் தோற்றம பறறே காரண
மின்பம வீடே பற்றிலி காரண
மொன்றிய வுரையே வாய்மைநான் காவ
துருவு நுகர்ச்சி குறியே பாவனை
யுள்ள வறிவிவை யைங்கந்த மாவன

வுலையா வீட்டிற் குறுதி யாகி" (௩௦-ம் காதை, ௩௦-௩௧) என்றதனை விளக்கி நின்றன.

**வாய்மை நான்கு:—**

௧௪௧-௧௪௮. உணர்வுமுதல் வினைப்பயனீறாகவுள்ளவேழும் துக்கமென்று கூறப்படும், அதற்குப் பேதைமைமுதலிய ஐந்தும் காரணமாகும்; ஆதலால் தோன்றுதல் துன்பம்; அதற்குக்காரணம் பற்று, வீடு இன்பம், அதற்குக்காரணம் பற்றின்மையே, என்கிற நான்குரைகளும் நான்கு வாய்மைகளாகும். "பிறந்தோருறுவது பெருகிய துன்பம், பிறவா ருறுவது பெரும்பே ரின்பம், பற்றின் வருவது முன்னது பின்ன, தற்றோ ருறுவது" (௨-ம் காதை, ௬௪-௬௭) என்று இப்படியேமுன்பும் வந்திருத்தல்காண்க. துன்பமுதலிய நான்கினையும முறையே துக்கம், துக்கோதபத்தி, துக்கநிவாரணம், துக்கநிவாரணமார்க்கமென்று வடநூலார் கூறுவர். இவற்றை ஸத்தியசதுஷ்டயமென்பர் **நீலகேசி** யுரையாசிரியர்; இந்நான்கினுள் துக்கநிவாரணமார்க்கம் எட்டுவகைப்படும்; அஃது அஷ்டாங்க மார்க்கமென்றும் விசுததிமார்க்கமென்றும் பழுதிலாவாழ்க்கையென்றுங் கூறப்படும். அவ்வெட்டுமாவன:— நற்காட்சி, நல்லூற்றம், நல்வாய்மை, நற்செய்கை, நல்வாழ்க்கை, நன்முயற்சி, நற்கடைப்பிடி, நல்லுளத்தோர்தலைப்பாடு என்பன, "பழித்திடாப் பழுதில்வாழ்க்கை யெட்டையும்பாரித்து" என்பது **சிவஞானசித்தியார்**, சௌததிராநதிகன்மதம், ௩௧, "நற்காட்சி நல்லொழுக்க நல்வாய்மை நல்வாழ்க்கை, நற்செய்கை யோடைந்து நாடு" எனவும், "நன்முயற்சி நன்காப கடைப்பிடிநல லோர்தமபாற், செல்கையுடனெட்டனைத்துந் தேறு" எனவும் வருவன **பரமதத்திமிரபானு**. இவ்வெட்டும் ஸம்மியக் திருஷ்டி, ஸமமியக் ஸங்கற்பம், ஸமமியக் வாக்கு, ஸம்மியக கருமம், ஸம்மிய காஜீவம், ஸம்மியக் வியாயாமம், ஸமமியக ஸ்மிருதி, ஸம்மியக் ஸமாதியென்று பெயர்பெறுமென்றும், இவைகளே ஜனனமரணதுக்கததைமாறுதற்குரிய வழியென்றும் **அசுவகோஷ போதிஸத்துவரால்** வடமொழியிற்செய்யப்பட்டுள்ள புத்தசரிததிரததின் ௧௬-ம் வர்க்கத்தால் தெரிகின்றன.

**பஞ்சஸ்கந்தம்:—**

௧௪௯. நுகர்ச்சி - வேதனை.

௧௫௦. உள்ளவறிவு - விஞ்ஞானம்.

௧௪௯-௧௫௦. உருவம, வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானமென்னும் இவ்வைந்தும் பஞ்சஸ்கந்தமெனப்படும். அவற்றுள் உருவக்கந்தம், பூதவுரு உபாதாயவுருவென விருவகைப்படும். பூதவுரு - பிருதுவி, அப்பு, தேயு, வாயு, என்னும் நான்குமாம். உபாதாயவுரு - வலி, கந்தம், இரதம், வன்னமென்னு நான்குமாம். வேதனை - குசலவேதனை (=சுகவறிவு), அகுசலவேதனை (=துக்கவறிவு), குசலாகுசலவேதனை (=சுகதுக்கவறிவு) என்னு மூன்றுமாம். குறிப்பு - மெய்

வறுவகை வழக்கு மறுவின்று இளப்பிற்
றொகையே தொடர்ச்சி தன்மை மிகுத்துரை
யியைந்துரை யென்ற நான்கினு மியைந்த
வுண்மை வழக்கு மின்மை வழக்கு
௩௧௫ முள்ளது சார்ந்த வுண்மை வழக்கு
மிலலது சார்ந்த வின்மை வழக்கு
முள்ளது சார்ந்த வின்மை வழக்கு
மில்லது சார்ந்த வுண்மை வழக்குமெனச்
சொல்லிய தொகைத்திற முடம்புநீர் நாடு

---

வாய கண் மூக்குச் செவியென்னு மைந்தும மனமொனறும் ஆகிய ஆறுமாம. பாவனையாவது மனோவாக்குக்காயங்களினுலுண்டாகும் நல்வினைபததும தீவினை பததும ஆகிய இருபதுமாம். இவை முனபு கூறப்பட்டன. விஞ்ஞானததினிலக்கணம் முன்பு கூறப்பட்டுள்ளது. "எட்டிவை யுருவ மூன்று வேதனை யாறுஞான, மொட்டிய குறிப்போ ராறு செயகையு மிருப தாகக், கட்டிய பஞ்ச கந்தங் கணததினிற் டங்க மாகுந, தொட்டநாற பதது மூன்றுஞ் சுகதநூற் றுணிவு தானே" [சுகதநூல - பௌத்தநூல] என்று வருதலகாண்க, இன்னும் இவற்றினிலக்கணங்களை, "ஒங்குருவம் வேதனை யுள கருறிப்புப் பாவனைமெய், தாஙகுணா வென றைந்தாஙகந் தம" எனவும், "உருவமுடல பூத முபாதாய மென்னு, மிருவி தததி னுலுமெழு மென்" எனவும், "வேதனை துன்பின் பிவற்றின் விரவலுமென, ரோதவொரு மூனறுமென் றோா" எ-ம், "பொறிவிதமோ ரைநதும பொறியைப் பொருநதி, யறியுமன முங்குறிப்பென் றுய" எ-ம, "வாககுமன மாககையிவை பாவனையென் றேமதியா, யாககுமிவை தாமறம்பா வம" எ-ம், "இந்நால வகையினுமேய்ந தையமற வெண்ணுமெணம, விஞ்ஞான மென்றே விளஙகு" எ-ம், "இந்தவித மைநதுஞசந் தானத் தெழுந் தழிகை, பநதமென வேசீதான் பாா" எ-ம், "அறக்கெடுத லேபரம முத்தி யிவை யைந்து, மறக்கெடுமா றுஙகூறுவாம்" எ-ம் வரும் **பரமதததிமிரபானு** வென்னுந்திருவாக்காலு மறிந்துகொள்க. இந்தப் பஞ்சஸ்கந்தக்கூட்டமே உயிரெனபர்; அது, "கவையொப் பனகை விரலைந் துகளு, மிவையிப் படிகைப் பிடியென் றதுபோ, லவையப் படிகந் தங்களைந் துகளு, நவையைப் படுநல் லுயிராமெனவும்" (**நீலகேசித்திரட்டு**, புத்தவாதச்சருக்கச்செய்யுள்) என்னும் பாடலால் நன்குணர்த்தப்படுகின்றது. இவ்வைந்தினுளளே குறிப்பினைக் குறியென்றும், இது வடமொழியில் ஸம்ஜ்ஞாஸ்கந்தமென்று பெயாபெறுமென்றுங் கூறுவாரும், இரண்டொன்றிற்கு வேறு இலக்கணங் கூறுவாருமுளா, அவற்றை வல்லாவாயகேட்டுணாக.

**ஆறுவழக்கு:—**

௩௧௩ - ௩௧௪ அறுவகைவழக்காவன:- தொகை, தொடாசசி, தன்மை மிகுத்துரை, இயைநதுரையென்ற நான்கொடுஞ் சோநத உணமைவழக்கு முதலிய ஆறுமாம. இயைநதுரையைத் தொகையிலடக்கி மூன்றென்பாருமுளா.

௩௧௫. தொகைததிறமாவது உடம்பும் நீருமநாடுமென்க, என்றது - பலதாதுக்களின்கூட்டம் உடம்பென்றும் பலதுளிகளின்கூட்டம் நீரென்றும பலவூர்களின்கூட்டம நாடெனறும வழங்கப்படுமாறுபோலப் பஞ்சஸ்கநதங்களின் கூட்டமே ஆன்மாவென்று வழஙகப்படுவது தொகையென்றவாறு, இனி இத்தொகையினை உண்மைவழக்கு இன்மைவழக்கு என்பவற்றோடுசேர்தது 'சுவரும்மாமும் ஆக்கையும கற்றையுங்கூடின சமுதாயததை வீடென்று வழஙகுமாறுபோலவும் பலவூருங்கூடின சமுதாயததை நாடென்று பற்றென்று வழஙகுமாறுபோலவும் பஞ்சஸ்கந்தக்கூட்டத்தை ஆன்மாவென்று வழங்குமது கற்பனுநாமமெனக

தொடர்ச்சி வித்து முளைதா ளென்றிந்
நிகழ்ச்சியி லவற்றை நெல்லென வழங்குத
லியல்பு மிகுத்துரை யீறுடைத் தென்றுந்
தோன்றிற் றென்று மூத்த தென்று
மூன்றி னொன்றி னியல்புமிகுத் துரைத்த
லியைந்துரை யென்ப தெழுத்துப் பல்கூடச்
சொல்லெனத் தோற்றும் பலநாட் கூடிய
வெல்லையைத் திங்க ளென்று வழங்குத
லுள்வழக் குணர்வில வழக்கு முயற்கோ
டுள்ளது சார்ந்த வுள்வழக் காகுஞ்
சித்தத் துடனே யொத்த நுகர்ச்சி
யுள்ளது சார்ந்த வில்வழக் காகுஞ்

---

கொள்க' என்றும், ' மரம் கற்றைமுதலிய வற்றைப்பிரித்தால் வீடில்லையானாற்போலவும் ஊர்களைப்பிரித்தாற் பற்றும நாடு மில்லையானாற்போலவும் ஐந்துஸ்கந்தங்களையும் பிரித்துணருங்கால ஆன்மா இல்லையாமெனக்கொள்க' என்றும் விளங்க அவற்றிற்குஉதாரணங்காட்டினருமுளார், (**சிவஞானசித்தியார்**, பரபக்கவுரையாசிரியர்). "ஒருவனென் றோதப் பட்டா னுருவாதி யைந்துங் கூடி, வருபவ னென்று ரைத்த வொருகையுண்மை வழக்க தாகு, முருவமங் காதி யாய வைந்தையு மொருவ னின்று, தருவது தொகையி னின்மை வழக்கதாஞ் சாற்றுங் காலே." என்பது **சிவஞானசித்தியார்**, சௌத்திராந்திகன்மதம், எ.

௨00 - ௨0௧. தொடர்ச்சியாவது-வித்திலிருந்து முளையும முளையிலிருந்து தாளுந்தோன்றி நிகழ்ந்து நெல்லென்று வழங்குமாறுபோல எல்லாம் காரணகாரிய சம்பந்தமாகவுள்ளதென்பது , " காரண காரியத்தின் றொடர்ச்சியாய்க் கால மூன்றின், சோர்வறத் தோன்றுங் கெட்டு வழியென்கை தொடர்ச்சி யுண்மை, யோர்தரி னொருவ னேயெக் காலத்து முள்ளா னென்று, தேர்வது தொடர்ச்சி யின்மை வழக்கதாஞ் செப்புங் காலே." **சிவஞானசித்தியார்**, சௌத்திராந்திகன் மதம், அ.) என்று இத்தொடர்ச்சியை உண்மைவழக்கு இன்மைவழக்கென்பவற்றோடுசேர்த்தி அவற்றிற்கு இலக்கணங் கூறியிருத்தல் காண்க.

௨0௨. இயல்பு மிகுத்துரை - தன்மை மிகுத்துரை,

௨0௨ - ௨0௪. தன்மைமிகுத்துரையாவது - ஒருபொருளினுடைய இறப்புப் பிறப்பு மூப்பு என்பவற்றுள் ஒன்றனியல்பைமிகுத்துச்சொல்லுதல். இதனை உண்மைவழக்கு இன்மைவழக்கென்பனவற்றோடுசேர்த்தி "தோற்றிய பொருள்க ளெல்லா நாசமா மென்று சொல்லு, மாற்றமுன் னுரைத்தன் மற்றை மிகுத்துரை வழக்கி னுண்மை, போற்றிய பொருள கண் கட்குப் போனது போன்மு திர்ந்து, வேற்றுமைப் பட்ட தென்கை மிகுத்துரை யில்வ ழக்கே" (**சிவஞானசித்தியார்**, சௌத்திராந்திகன்மதம், கூ) என்றுமுறையே அவற்றிற்கு இலக்கணங்கூறியிருத்தல் காண்க.

௨0எ. திங்கள் - மாதம்.

௨0௫ - ௨0எ. தொகைக்கும் இயைந்துரைக்கும் வேற்றுமையாதோவெனின் பலபொருள்களின் வரையறைப்படாத தொகுதி தொகையாமென்றும், பலபொருள்களின் வரையறைப்பட்டதொகுதி இயைந்துரையாமென்றுங் கூறுவர்.

௧௯௯ - ௨0எ. இவ்வடிகளால் தொகை முதலிய நான்கினிலக்கணங்களும் கூறப்பட்டன.

௨0அ - ௨௧௫. இவ்வடிகளால் உண்மைவழக்கு, இன்மைவழக்கு, உள்ளதுசார்ந்தவுண்மைவழக்கு, உள்ளதுசார்ந்தவின்மைவழக்கு, இல்லதுசார்ந்தவுண்மைவழக்கு இல்லதுசார்ந்த வின்மைவழக்கு

சித்தமுற் பவித்தது மின்போ லென்கை
யில்லது சார்ந்த வுண்மைவழக் காகுங்
காரண மின்றிக் காரிய நேர்த
லில்லது சார்ந்த வில்வழக் காகு
முயற்கோ டுண்மையிற் றோற்றமு மிலலென
னான்கு நயமெனத் தோன்றப் படுவன
வொற்றுமை வேற்றுமை புரிவின்மை யியல்பென்க
காரண காரிய மாகிய பொருள்களை
யொன்றா வுணர்த லொற்றுமை நயமாம்
வேற்றுவேற் றாக வேதனை கொள்வது
வேற்றுமை நயமென வேண்டல் வேண்டும்
பொன்றக் கெடாஅப் பொருள்வழிப் பொருள்களுக்
கொன்றிய காரண முதவுகா ரியத்தைத்
தருதற் குள்ளந் தானிலை யென்றல்
புரிவின்மை நயமெனப் புகறல் வேண்டு
நெல்வித் தகத்து ணெல்முளை தோற்றுமெ
னல்ல வியல்புநய மிவற்றினுங் கொள்பயன்

என்னும் ஆறினிலக்கணங்களும் முறையே கூறப்பட்டன, "அறுவகை வழக்கு நெறிபட வுணர்ந்து" என்பது பௌத்த நூல் (இஃது இன்ன நூலிலுள்ளதென்று விளங்கவில்லை) இவ்வறுவகைவழக்கின் பெயரும் அவற்றி னிலக்கணங்களும் ஈண்டுக்கூறப்பட்டிருத்தல்போலப் பின் வரும் திருவிருத்தங்களிலுங் கூறப்பட்டிருத்தல் காண்க அவை வருமாறு — "உள்வழக் கில்வழக்குள் ளதுசார்ந்த வுள்வழக்கோ, டுள்ளது சார்ந்த வின்மை வழக்குட னின்மை சார்ந்த, வுள்வழக் கின்மை சார்ந்த வில்வழக் கென்றோ ராறு, முள்வழக் குளதுண் டென்கை முயற்கோடின் றில்வ ழக்கே", "உணர்வுசார்ந் துணர்வு திக்கை யுள்ளது சார்ந்த வுண்மை, யுணர்வுபி னின்றா மென்கை யுள்ளது சார்ந்த வின்மை, யுணர்வுமுன் பின்றித் தோன்ற லில்லது சார்ந்த வுண்மை, யுணரினல் லதுசா ரின்மை யுள்ளங் கை யுரோமந் தானே". **சிவஞானசித்தியார்**, சௌத்திராந்திகன்மதம், ௧௦, ௧௧.

**நயங்கள் நான்கு:—**

௨௧௭-௨௧௮. ஒற்றுமைநயம் வேற்றுமைநயம் புரிவின்மைநயம் இயல்புநயமென நயங்கள் நான்கு வகைப்படும்

௨௧௯-௨௨௦. இந்த இரண்டடிகளாலும் ஒற்றுமைநயத்தினிலக்கணங் கூறப்பட்டது.

௨௨௧. வேறுவேறாக அறிதல்.

௨௨௧-௨௨௨. இந்த இரண்டடிகளாலும் வேற்றுமைநயத்தினிலக்கணங்கூறப்பட்டது.

௨௨௩. பொன்றக்கெடாப்பொருள் - முற்றக்கெடாதபொருள். வழிப்பொருள் காரியப்பொருள், வழி - பின்.

௨௨௫. உள்ளம் - விஞ்ஞானம்.

௨௨௬. புரிவின்மை - செய்தலில்லாமை,

௨௨௫-௨௨௬. "உணர்வெனப் படுவதுறங்குவோ ருணர்விற், புரிவின் றாகிப் புலன்கொளா ததுவே" என்றார் முன்னும், ௩௦-ம் காதை, ௪௨-௪௩. விஞ்ஞானத்திலடங்கியிருக்கும் கன்மபீஜமே மறுபிறப்பிற்குக் காரணமென்பர்.

௨௨௩-௨௨௬. இந்த நான்கடிகளாலும் புரிவின்மை நயத்தினிலக்கணம் கூறப்பட்டது

௨௨௭-௨௨௮. இவ்வடிகளால் இயல்புநயத்தினிலக்கணம் கூறப்பட்டது.

௨௨௯. இவற்றின் நாம கொள்பயன் - இந்த ஒற்றுமைநயமுதலிய நயங்களால் நான்

றொக்க பொருளல தொன்றில்லை யென்று
மப்பொரு ளிடைப்பற் றுகா தென்றுஞ்
செய்வா னொடுகோட் பாடிலை யென்று
மெய்துகா ரணத்தாங் காரிய மென்று
மதுவு மன்றத லாதது மன்றென்றும
விதிமுறை தொகையினால் விரிந்த நான்கும
வினாவிடை நான்குள
துணிந்து சொல்லல் கூறிட்டு மொழிதல
வினாவின் விடுத்தல் வாய்வா ளாமையெனத
தோன்றியது கெடுமோ கெடாதோ வென்றாற்
கேடுண் டெனற றுணிந்துசொல லாகுஞ்
செத்தான் பிறப்பா னோபிற வானோ
வென்று செப்பிற்
பற்றிறந் தானோ வன்மந னோவெனன
மிகக்கூ றிட்டு மொழிதலென விளம்புவா

---

காலும் நாம் கொள்ளும்பயன யாவையெனின்,—

**பயன்கள்:—**

௨௨௯. தொக்கபொருளலது - சோந்த பொருள்களையல்லாமல். ஒன்று - வேறாகிய ஒன்று. இவ்வடியாற் கூறப்பட்டது ஒற்றுமைநயத்தாற்போந்த பயனென்க.

௨௩௦. இவ்வடியாற் கூறப்பட்டது வேற்றுமைநயத்தாற்போந்த பயனென்க

௨௩௧. செய்வான் - கருத்தா. இவ்வடியாற்கூறப்பட்டது புரிவின்மைநயததாற் போந்த பயனென்க.

௨௩௨ - ௨௩௩. இவ்வடிகளாற் கூறப்பட்டஇரண்டும் இயல்புநயததாற்போந்த பயன்களெனக்கொள்க, இங்ஙனங் கொள்ளாமல் இந்த இரண்டுபயனையும் பிரித்து முன்னதை முன்னதனோடுகூட்டினும் பொருந்தும்.

௨௩௪. விரிந்த - முற்று. நான்கும் விரிந்தனவென்க. நான்கும் - நான்குபயன்களும்.

**வினாவிடை நான்கு:—**

௨௩௫. வினாக்களுக்குரிய விடைகளென்க.

௨௩௬. கூறிட்டுமொழிதல் - பகுத்துச் சொல்லல்.

௨௩௭. வாய்வாளாமை - பேசாதிருத்தல் ஆசிரியா நச்சினார்க்கினியர், தொல்காப்பியப் புறத்திணையியலில் "அறுவகைப் பட்ட பாாப்பனப் பக்கமும்" எனனுஞ் சூத்திரத்தில், 'நாலிரு வழக்கிற் றாபதப் பக்கமும்' என்பதனுரையில், தவஞ்செய்வோர்க்கு உரியனவாக எடுத்துக் காட்டிய 'ஊணசையின்மை, நீர்நசையின்மை, வெப்பம்பொறுத்தல், தட்பம் பொறுத்தல், இடம்வரையறுத்தல், ஆசனம்வரையறுத்தல், இடையிட்டுமொழிதல், வாய்வாளாமை' என்னும் எட்டினுள் இம்மொழிவந்திருத்தல் காண்க.

௨௩௬ - ௨௩௭. துணிந்துசொல்லல், கூறிட்டுமொழிதல், வினாவின்விடுத்தல், வாய்வாளாமையென நான்குவிடைகளுள்ளன

௨௩௮ - ௨௩௯. தோன்றியது - உண்டான பொருள். தோன்றியபொருள் கெடுமென்பது ஒருதலையாதலின், ஈண்டுக் கேடுண்டெனறல் துணிந்துசொல்லலாயிற்று: இந்த இரண்டடிகளாலும் துணிந்துசொல்லலென்னும் விடையினியல்பு கூறப்பட்டது.

௨௪௦ - ௨௪௩. இந்தவடிகளாற் கூறிட்டுமொழிதலென்னும் விடையினியல்பு கூறப்பட்டது.

விஞவின் விடுத்தன் முட்டைமுந் திற்றோ
பனைமுந் திறரோ வெனக்கட் டுரைசெ
யென்ற லெமமுட்டைக் கெப்பனை யென்றல
வாய்வா ளாமை யாகா யப்பூப
பழைதோ புதிதோ வென்று புகலவா
னுககு மாற்ற முரையா திருததல
கட்டும வீடு மதனகா ரணத்த
தொட்டித் தருதற் குரியோ ரிலலை
யாமே லுரைத்த பொருள்கட் கெலலாங்
காமம வெகுளி மயககங காரண.

௨௪௪ - ௨௪௬. இந்தவடிகளால் விஞவினவிடுத்தலென்னும விடையினியல்பு கூறப்பட்டது.

௨௪௮. பழைது - பழையது.

௨௪௭ - ௨௪௯. இநதவடிகளால் வாய்வாளாமையென்னும் விடையினதியல்பு கூறப்பட்டது.

௨௫0. கட்டு - பந்தம். ‘அதன் காரணத்தது’ என்பதனைககட்டினேடும வீட்டினேடும தனிததனியே கூட்டுக.

௨௫௨. ‘பொருள்க ளெல்லாம’ என்றும பாடம.

௨௫௩. காமமுதலிய மூன்றும முககுற்றமெனப்படும.

௨௫௨ - ௨௫௩. மேற்கூறிய பொருள்களெலலாவற்றிற்கும காமம வெகுளி மயக்கமென்னும் இம்மூனறுங காரணமாகும், “காமம வெகுளி மயகக மிவை மூனற - னாமங கெடககெடு நோய்” எனறு வநதிருததலகாண்க, திருக்குறள், ௩௬0.

இனி, எல்லாவற்றிற்குமகாரணமாகிய காமவெகுளி மயக்கங்களை முறையேநீககுதற்குரிய பாவனைகள் கூறுவாா.

**பாவனை ஐந்து:—**

மைததிரீபாவனை கருணுபாவனை முதிதபாவனை அசுபபாவனை உபேக்ஷாபாவனையெனப் பாவனை ஐந்துவகைபபடும. அவற்றுள்,—

க. **மைத்திரீபாவனை:—** அஃதாவது ஒருதுறவி வசதியான ஓரிடததையடைநது தக்க ஆஸனத்திலிருந்தபினபு பின்வருமாறு தியானித்தலாம், ‘உத்தமமான பிறப்பினையுடைய பிராணிகளெல்லாம களிப்புற்றுவாழ்வனவாகுக, அவையெல்லாம் துககம வியாதி துராசையென்னும இவைகளினின்றும விடுபட்டனவாகுக, எலலாமனிதர்களும் எல்லாததேவர்களும் நரகவாதையினுற பீடிக்கப்படுகிற யாவரும ஸநதோஷமுடையவாகளாக ஆகுக, அவாகள துககம வியாதி துராசையெனனும் இவற்றினின்றும விடுபட்டவாகளாக ஆகுக.’ மைதரம ஸநேகம அன்பு எனபன ஒருபொருட்சொற்கள், மைததிரமெனபது குரோததிறகுமாறுனது அவவிரணடும ஓரிடததுநிகழா. மைததிரமெனபது தருஷ்ணையெனனு மாசையனறு. அவிதசை அலலது மோகஙகாரணமாக தருஷ்ணைபிறககும, அதனுல் துராசைபிறககும மைததிரமெனனும் ஸநேகததிலிருநது துராசை யுணடாகாது. ஒருவனுக்குத தனதுணைவன்விஷயமாக வுண்டாகுமன்புதானமைததிரமென்பது

௨. **கருணுபாவனை:—** அஃதாவது ‘வறியவாகள வறுமைநீஙகிச செல்வமுடையவர்களாக ஆகுக’ என்றுபாவிததல. கருணையாவது இரக்கமுள்ள எண்ணம அஃது, ஒருபிராணிதுன்பமுறுவதைககாணின, மனக்கலககததையும அததுன்பததை நிவாததிபண்ணவேண்டுமெனபதையும ஒருவருககு உணடாககும

௩. **முதிதபாவனை.—** அஃதாவது ‘ஆக்கமுடையவாகளுடைய நலல அதிாஷடமானது எப்பொழுதும நீஙகாதிருத்தல வேணடும ஒவ்வொருவரும தததமககு அமைநதுள்ள நல்வினைப்பயனை அடைக’ எனறு பாவிததல. முதிதையெனபதற்குச சநதோஷமென்பது பொருள,

மனிதத்தந் துக்க மநான்மா வசுசியெனத
தனித்துப் பார்த்துப் பற்றறுத் திடுதென

ஆனால்அஃது உலகப்பொருள்களையுடைமையால் உண்டாகுங் களிப்பன்று; இது மைத்திரீ, கருணையென்னும் இரண்டுபாவனைகளுக்கும் சம்பந்தமானது. முற்கூறிய மூன்றுவகைப்பாவனைகளுள் ஏதாவதொன்றை அப்பியசிக்குந்துறவி, தான் கருதியபாவனையை முதலில் சிலஜனங்களிடத்தும் அப்பால் ஒருதெருவில்வாழ்பவர்களிடத்தும் அப்பால் ஒரூராரிடத்தும் அப்பால் ஒரு தேயத்தாரிடத்தும் முறையேசெலுத்திப் பயிலுதல்நலம.

௪. **அசுபபாவனை:**—அசுபமென்பதற்குப்பொருள் அமங்கலம், நல்லஅதிர்ஷ்டமென்பதன் எதிர்மொழியாயிருப்பதோடு மகிழ்ச்சியின்மை வெறுப்பு என்பனவற்றையுண்டாக்குவதாகவுமுள்ளது. இதைப்பயிலும ஒருதுறவி, சரீரமானது முப்பத்திரண்டு குற்றத்தாலாக்கப்பட்டதென்றும் சாணியின்குவியலில் தோன்றிவளரும் புழுக்கள்போலக் கருப்பப்பையில் உண்டாகின்றதென்றும் மலங்கழிக்குமிடத்தைப்போல அசுத்தத்தின் கொளகலனுயிருப்பதென்றும் அருவருப்பானகசிவு அதிலுள்ள நவத்துவாரங்களின்வழியே ஓயாமற் பெருகுகின்றதென்றும் ஜலதாரையைப்போல் வெறுத்தற்குரியநாற்றத்தை அது வெளிப்படுத்துகினறதென்றும் பாவிக்கவேண்டும். ‘சரீரத்தின் காலவளவை ஒரு நிமிஷமே மின்னலையும்நுரையையும் நீரிற்போகட்ட உப்பையும் காய்ந்த புல்லிற்பற்றிய நெருப்பையும் கடலின் அலையையும் ஆகாயத்திற் சஞ்சரிக்கிறஜ்வாலையையும புன்னுனியிற்பட்ட பனித்துளியையும்போலப் பிறந்தபோதே அதுநாசமாம்’ என்று சரீரத்தின்நிலையின்மையைப்பாவித்தலும் அசுபபாவனையின்பாற்படும்.

௫. **உபேக்ஷாபாவனை:**— அஃதாவது எல்லாவுயிர்களையும் சமமாகப்பாவித்தலும் விருப்புவெறுப்பின்றி யிருத்தலுமாம். இது, மற்ற நான்குபாவனைகளைக்காட்டிலும் மிகவுயர்ந்தது. அருகத்துக்களால் அனுட்டிக்கப்படுவது, இது சமசித்தத்துவமென்றுங் கூறப்படும். உபேக்ஷை-உதாசீனம்.

மைத்திரீ, கருணை, முதிதை, உபேக்ஷையெனனும் நான்கு பாவனைகளும உயர்வுபற்றிப் பிரஹ்மவிகாரபாவனையென்று கூறப்படும், இவை மஹாப்பிரஹ்மாக்களால் அனுஷ்டிக்கப்படுவன.

ஈண்டு எழுதப்பட்டுள்ள மைத்திரீபாவனைமுதலிய ஐந்தினிலக்கணங்களும, இங்கிலிஷ்பாஷையிலுள்ள இலங்கைபௌத்தமதநூற்புத்தகமொன்றிலிருந்து பெயாத்து எழுதப்பட்டன.

உ௫௫. பார்த்து - அசுபபாவனைபண்ணி. பற்று - காமம்.

உ௫௪ - உ௫௫. அசுபபாவனையாற் காமத்தையொழிக்க வென்றவாறு. உடம்பினை அநித்தியம் துக்கம் அநான்மா அசுசியென்று பாவித்தல் அசுபபாவனையெனப்படுவதன்றி ஸ்ரீலக்ஷணபாவனையெனறுங் கூறப்படும். இதனைச் **சிவஞானசித்தியார்**, சௌத்திராந்திகன்மதம் உ-ம் திருவிருத்தத்துரையிற்காண்க; இவ்வசுபபாவனை, “நன்கென நாறுமி தென்றிவ் வுடம்புந யக்கின்ற தாயி, னொன்பது வாயில்க டோறு முண்ணின்ற ழுக்குச சொரியத், தின்பதோர் நாயு மிழுபத் திசைதொறுஞ் சீப்பில்கு போழ்தி, னின்பநன் ஞற்றமி தன்க ணெவ்வகை யாற்கொள லாமே.” எ-ம், “உறுப்புக்க டாமுடன் கூடி யொன்ரு யியைந்த பெரும்பை, மறைப்பில் விழைவிற்குச சார்வாய் மக்குவ தேலிவ் வுறுப்புக, குறைத்தன போல வழுகிக குறைந்து குறைந்து சொரிய, வெறுப்பிற் கிடந்த பொழுதின் வேண்டப் படுவது முண்டோ.” எ - ம், “எனதெனச் சிந்தித்த லான்மற் றிவ்வுடம் பின்பத்துக் காமேற, றினைபெய்த புன்கத்தைப் போலச் சிறியவு மூத்தவு மாகி, வினையப் புழுக்குந்த மாவி காணவும வாழவும் பட்ட, வினையவுடம்பினைப் பாவி யானென தென்னலு மாமோ.” [புன்கம் - சோறு] எ - ம் வருங் குண்டலகேசிச் செய்யுட்களாலுமுணரத் தப்பட்டது; “வினையின் வந்தது வினைக்குவிளை வாயது, புனைவன நீங்கிற் புலால்புறத் திடுவது, மூத்துவிளி வுடையது தீப்பிணி யிருக்கை, பற்றின் பற்றிடங்

மைத்திரி கருணா முதிதையென் றறிந்து
திருந்துநல் லுணர்வாற் செற்றமற் றிடுக
சுருதி சிந்தனா பாவனா தரிசனை
கருதி யுய்த்து மயக்கங் கடிக
இந்நால் வகையான் மனத்திரு ணீங்கென்று
முன்பின் மலையா மங்கல மொழியின்
ஞான தீப நன்கனங் காட்டத்
தவத்திறம் பூண்டு தருமங் கேட்டுப்
பவத்திற மறுகெனப் பாவைநோற் றனளென்.

பவத்திறமறுகெனப்பாவைநோற்றகாதை முற்றிற்று.

---

குற்றக் கொள்கலம், புற்றடங் கரவிற் செற்றச் சேக்கை, யவலக் கவலை கையா றழுங்க, றவலா வுள்ளந் தன்பா லுடையது, மக்கள் யாக்கை யிதுவென வுணர்ந்து, மிக்கோ யிதனைப் புறமறிப் பாராய்" (௨0 - ம் காதை, ௧௧௩ - ௧௨௧) எனவும், "என்புந் தடியு முதிரமு மியாக்கை யென், றன்புறு மாக்கட் கறியச் சாற்றி, வழுவொடு கிடந்த புழுவூன் பிண்டத், தலைத்தக மூட்டிய வடிநரி வாய்க்கொண், டிலைப்பி லின்பமோ டுளைக்கு மோதையுங், கலைப்புற வல்குல் கழுகுகுடைந் துண்டு, நிலைத்தலை நெடுவிளி யிசைக்கு மோதையுங், கடகஞ் செறித்த கையைத் தீநா, யுடையக் கவ்வி யொடுங்கா வோதையுஞ், சாந்தந் தோய்ந்த வேந்திள வனமுலை, காய்ந்தபசி யெருவை கவர்ந்தூ ணோதையும்" (௬ - ம் காதை, ௧௦௭ - ௧௧௭) எனவும் இந்நூலுள்ளே வந்தனவும் அசுபபாவனையின்பாற்படும்.

௨௪௭. 'திருந்துநல்லருளால்' என்றும் பாடம். செற்றம் - கோபம்.

௨௪௫ - ௨௪௭. மைத்திரீபாவனைமுதலிய மூன்றாலும் கோபத்தைப்போக்குக.

௨௪௮. சுருதி - ஞானநூற்பொருளைக் கேட்டல். சிந்தனா=சிந்தனை - சிந்தித்தல். பாவனா=பாவனை - பாவித்தல் இது தெளிதலென்றுங் கூறப்படும். தரிசனை - அறிதல், மேற்கூறியபாவனையைந்தனுள் ஈண்டுக்கூறிய சுருதிமுதலியன உபேக்ஷாபாவனையின்பாற்படும்.

௨௪௯. உய்த்து - ஆராய்ந்து.

௨௪௮ - ௨௪௯. உபேக்ஷாபாவனையால் மயக்கத்தைப் போக்குகவென்றவாறு.

௨௫0. இந்நால்வகையென்றது மேற்கூறிய சுருதிமுதலிய நான்கினையும். மனத்திருள் - மயக்கம், 'இந்நால்வகையான் மனத்திருணீங்கு' என்றது அனுவாதம்.

௨௫௧. முன்பின்மலையா - பூர்வோத்தரவிரோதமில்லாத, ௨௮ - ம் காதை, ௧௦0, ௩0 - ம் காதை, ௬.

௨௫௧ - ௨௫௨. மொழியினாற் காட்டவென்க.

௨௫௪. பவத்திறம் - பிறப்பின்வகைகள். பாவை - மணிமேகலை.

௧ - ௨௫௪. உணர்ந்தோள் வணங்கிச் சென்று அடைந்தபின் மொழிவோன் காட்டப் பாவைகேட்டுப்பூண்டு நோற்றனளென்க.

---

மணிமேகலை முற்றுப்பெற்றது.

### மணிமேகலைப்பாட்டு

# முதற்குறிப்பு அகராதி.

# அரும்பதவகராதி.

